# தற்கால
# அரசியல் அமைப்புகள்
## MODERN POLITICAL CONSTITUTIONS

ஸி. எஃப். ஸ்ட்ராங்

தமிழாக்கம் :

மோ. ஸிளாரன்ஸ்


தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை—62

# தற்கால அரசியல் அமைப்புகள்

(அவற்றின் வரலாறு, தற்கால அமைப்பு ஆகியவற்றின் ஒப்பீட்டு ஆராய்ச்சிக்கு ஓர் அறிமுகம்)

ஆசிரியர் :

சி. எஃப். ஸ்ட்ராங், O.B.E., M.A., Ph.D.

தமிழாக்கம் :

மோ. வள்ளுவன் கிளாரன்சு,

எம்.ஏ. (பொருளாதாரம்), எம்.ஏ. (அரசியல்), எம்.ஏ. (வரலாறு),

விரிவுரையாளர், இலயோலாக் கல்லூரி, சென்னை.




தமிழ் வெளியீட்டுக் கழகம்

தமிழ்நாடு - அரசாங்கம்

First Edition—February, 1965.

B.T.P. No. 62

# MODERN POLITICAL CONSTITUTIONS

C. F. Strong

Translation
M. Valluvan Clarance



"ஒவ்வொரு புதிய அரசாங்க
முறை தோன்றும் போதும் மனித
இனத்தின் அரசியல் வளங்கள்
சிறப்புறச் செழித்து வளர்கின்றன.
அவை கடந்த காலத்தில் அரசிய
லமைப்பை நிறுவுவதில் மனிதன்
பெற்ற அனுபவத்தின் மதிப்பீடாக
வும்ஆராய்ச்சியாகவும்விளங்குகின்
றன. அந்தச் செயலாய்வின் விளை
வாகவருங்காலத்திற்குப்பயன்படும்
கருத்துகள் கிடைக்கின்றன."

—லார்டு பிரைஸ்

Price Rs. 8-50

This translation of 'Modern Political Constitutions by C. F. Strong—Sixth (Revised and Enlarged) Edition, 1963—is published by arrangement with Sidgwick & Jackson Ltd., Tavistock Chambers, Bloomsbury Way, London, W. C. I.

Printed by
The Premier Art Press,
Purasawalkam, Madras-7.

# அணிந்துரை

( திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர் )

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழி ஆக்கி ஐந்து ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றார்கள். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம் ' தமிழிலேயே கற்பிப்போம் ' என முன்வந்துள்ள ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன் வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவை காரணமாக இத் திட்டம் நம்மிடையே திருப்திகரமாக நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்களை எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள் மொழி பெயர்ப்பு நூல்கள் என்னும் இரு வகையிலும் தமிழ் வெளியீட்டுக்கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றாகத் தற்கால அரசியல் அமைப்புகள் என்ற இந்நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 62ஆம் வெளியீடாகும்; கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களும் உட்பட இது வரை 97 நூல்கள் வெளி வந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ்வன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், முயன்று வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பல வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

எம். பக்தவத்ஸலம்

# முகவுரை

அரசியலமைப்பைப்பற்றி ஆராய விழையும் மாணவர்கள் அதை வரலாற்றின் சிறப்புப் பகுதியாக முதன்முதலில் படிக்கும்போது அவர்களுக்குப் பயன்படும்வண்ணம் இப்பாடநூல் எழுதப்பட்டது. அரசியல் நூலை முதலில் பயிலும் மாணவர்கள், அதைத் தடுமாற்றமின்றிக் கற்கத் துணை செய்வதையே யான் எனது அலுவலாகவும் இன்பமாகவும் பல ஆண்டுகளாகக் கருதி வந்துள்ளேன். அவர்களுடன் பழகியதன் பயனின் ஒரு பகுதிதான் இம்முயற்சி. இந்நூலை யாருக்காவது அர்ப்பணிக்க வேண்டுமானால், வகுப்புகளில் என் விரிவுரைகளை இடையறுது பற்றுடன் கேட்டு வந்த மாணவர்களுக்கே அர்ப்பணிப்பேன். ஏனெனில், நான் அவர்களுக்குக் கடினமான—ஆனால், கவர்ச்சி மிக்க—இப்பொருளைக் கற்றுக்கொடுக்கும் போது அவர்கள் இதில் இன்புற்று ஈடுபட்டமையால், எனது அலுவல் மிக எளிதாகத் தோன்றியது.

டைஸி, மெயிட்லாண்டு, ஸிட்ஜ்விக், லவல், பிரைஸ் போன்ற அரசியல் அறிஞர்களுக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன். அவர்கள் எழுதிய சிறந்த நூல்களைப் படித்தவர்களுக்கு இது விளங்கும். ஆயினும், எனது நூல் அவர்களுடைய நூல்களின் பிழிவு அன்று. எல்லாரும் அறியவேண்டிய இப்பொருளை எளிதான முறையில் எழுதி ஒரு முதல் நூலாக வெளியிட வேண்டுமென நான் செய்த முயற்சியின் விளைவுதான் இந்நூல். ஆசிரியர்களுக்கு மட்டுமன்றி, தனியாகப் பயிலும் மாணவர்களுக்கும் பொது வாசகர்களுக்கும் பயன்படும் வகையில் இதை எழுதியிருக்கின்றேன். ஒவ்வோர் இயலின் இறுதியிலும் கொடுக்கப்பட்டுள்ள துணைநூற்பட்டியலும், கட்டுரைக்கேற்ற பொருள்களும் இப்பொருளைப் பற்றி இன்னும் ஆழ்ந்து படிப்பதற்கும், படிப்பவர்களின் சிந்தனையைத் தூண்டுவதற்கும் பயன்படுமென எண்ணுகிறேன்.

இந்நூல் வெளி வந்து இப்போது முப்பதாண்டுகளுக்கு மேலாகி விட்டன. அதற்குள் அரசியல் முறைமைக்குட்பட்ட அரசுகளின்

உள் அமைப்புகளிலும் அவற்றினிடையே தொடர்புகளை ஏற்படுத்தும் நிறுவனங்களின் அமைப்புகளிலும் பல மாறுதல்கள் நிகழ்ந்துள்ளன. இம்மாற்றங்கள் காரணமாக, இந்நூலைக் காலத்திற்கேற்பத் திருத்தி எழுதி வெளியிடுவது எளிதில் நடைபெறக் கூடியதன்று. கடந்த காலத்தில் பலர் இந்நூலைப் படித்துப் பயன் பெற்றுள்ளனர் என்ற எண்ணமும், வருங்காலத்தில் மற்றும் பலர் இதைப் படிப்பர் என்ற நம்பிக்கையுமே இதைத் திருத்தி எழுதிப் பல பதிப்புகளாக வெளியிடுமாறு ஊக்குவித்தன. நூலின் இந்த ஆருவது பதிப்பில் பழைய பதிப்பின் பெரும்பகுதியைத் திருத்தி எழுதியதுடன், பல புதிய பொருள்களையும் இணைத்திருக்கின்றேன். இவை பெரும்பாலும் இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு விரைந்து பரவத் தொடங்கிய அரசியலமைப்பைச் சார்ந்த இயக்கங்களைப் பற்றியவையாகும். மேலும், இப்பதிப்பில் படிக்கத்தக்க நூல்களெனக் குறிக்கப்பட்ட நூல்களின் பட்டியலைச் சுருக்கி, அண்மையில் வெளியான நூல்களின் பெயர்கள் பலவற்றையும் சேர்த்திருக்கிறேன்.

இந்நூலில் குறைபாடுகள் காணப்படுமானல், அவை முற்றிலும் என்னையே சாரும். ஆயினும், இந்நூலின் பல பதிப்புகளை எழுதுவதில் எனக்குத் துணை செய்த என் நண்பர்களுக்கு நான் நன்றி கூருமல் இருக்க இயலாது. சிறப்பாக, காலஞ்சென்ற பேராசிரியர் F. C. J. ஹேர்ன்ஷா (Hearnshaw), பிலிப் குவெடல்லா (Philip Guedalla), பேராசிரியர் H. J. லாஸ்கி (Laski) ஆகியோரின் இணையற்ற அறிவும் அனுபவமும் நான் இந்நூலை எழுதுவதற்குப் பெரிதும் பயன்பட்டன. பேராசிரியர் ஹெர்மன் ஃபைனர் (Herman Finer) இரண்டாம் பதிப்பின் முகவுரையைப் பார்வையிட்டு, அதன் குறைகளை நீக்கினர். மேற்கு ஆஸ்திரேலியப் பல்கலைக் கழகத்தின் சட்டத் துறைத் தலைவரான பேராசிரியர் பீஸ்லி (F. R. Beasley) ஆஸ்திரேலிய அரசியலமைப்புச் செயலாற்றும் முறையை எனக்கு நன்கு விளக்கினர். திரு. ஹேம்ப்டன் ஜாக்ஸன் (J. Hampden Jackson) பின்லாந்தைப்பற்றி அரிய குறிப்புகளை நல்கினர். நியூயார்க்குப் பல்கலைக் கழகச் சட்டப் பள்ளியின் ஒப்பீட்டுச் சட்ட விரிவுரையாளரான திரு. ஜான் ஜி. லெக்ஸா (John G. Lexa) பல அரசியலமைப்புகளின் வாசகங்களைப் பற்றி விரிவாக விளக்கங்கள் வழங்கினர். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செய்தித்துறை அலுவலாளர்களும், பொதுநலக்கூட்டு நாடுகளின் உயர் ஆணையாளர்களும், இலண்டனிலுள்ள அயல் நாட்டுக் கலைத் தூதுக்குழுக்களின் உறுப்பினர்களும் பிற வகையில் பெற இயலாத ஆவணங்களைத் தந்துதவினர்கள். டாட்டன்ஹாமிலுள்ள பொது நூல் நிலையங்களின் இயக்குநர் திரு. மக்லெல்லனும் (A. W. Maclellan), கென்ஸிங்டன் நூலகத் தலைவர் திரு. ஹாலிடே (S. S. Holliday)யும் அவர்களுடன் அலுவ

லாற்றுபவர்களும் ஏராளமான நூல்களைத் தாராளமாகத் தந்தார்கள். இவர்கள் எல்லோருக்கும் நான் நன்றி கூறுகிறேன். மேலும், பண்புடன் என்னை ஊக்குவித்து இந்நூலை வெளியிட்ட பதிப்பாளர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இறுதியாக, தனது நுண்ணறிவினாலும் திறனாய்வினாலும் எனக்குத் துணை செய்த என் மனைவிக்கும் எனது நன்றி உரித்தாகும்.

இலண்டன்,
மார்ச்சு, *1963.*

C. F. ஸ்ட்ராங்

# பொருளடக்கம்

## முதற்பகுதி

## வரலாற்று முறைப்படி நூலைப் பயிலுதல்



## இரண்டாம் பகுதி

## அரசியலமைப்புகளின் ஒப்புமை

## மூன்றும் பகுதி

## நாட்டுணர்ச்சியும் பன்னாட்டு ஒற்றுமை உணர்ச்சியும்

**பிழை திருத்தம் :**

பக்கம் 273 முதல் 285 வரை ஒன்று விட்ட பக்கத் தலைப்புகளை (3) சட்டமன்றம் : நேர்முக ஜனநாயகத் தடைகள் — எனத் திருத்திக்கொள்க.

# 1. அரசியல் முறைமைக்குட்படுவது என்பது என்ன?

## 1. முன்னுரை

அரசியலமைப்புகளைப்பற்றி ஆராய்வது அரசியல் நூலின் ஒரு பகுதியாகும். அரசியல் நூல் என்பது, அரசியல் சமூகங்களின் அமைப்பையும், அவற்றின் அரசாங்கத்தையும் பற்றிக் கூறும் நூல். ஆகையால், அது சமூகத்தை ஒரு தனிக் கோணத்திலிருந்து பார்க்கும் ஒரு நூலாகும். ஆகவே, அதற்கும் பிற சமூக நூல்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. அந்த நூல்களைக் கீழ்க்காணுமாறு வகைப்படுத்தலாம் :

1. நாகரிகம் அடைந்ததும் அடையாததுமான எல்லா வித மனித சமூகங்களையும் பற்றிய சமூக வாழ்க்கை நூல் (Sociology)

2. மனிதனது பொருளாதார நலத்தைப்பற்றிக் கூறும் பொருளியல்

3. 'மனிதனது ஒழுக்கம் எவ்வாறு இருக்க வேண்டும்? ஏன் அவ்வாறு இருக்க வேண்டும்?' என்பதை விளக்கும் அறநூல் (Ethics)

4. மனிதன் சமூகத்துடன் தொடர்பு கொள்ளும் போது தோன்றும் நடத்தையைப்பற்றிக் கூறும் சமூக உளவியல் (Social Psychology)

அரசியல் நூல் இவற்றுள் ஒவ்வொன்றையும் ஓரளவு சார்ந்துள்ளது. ஏனெனில், அது மனிதனின் குறிப்பிட்ட ஒரு சமூக உறவைப்பற்றி மட்டும் விளக்குகிறது. ஆகவே, அது ஓரளவு சமூக

வாழ்க்கை நூலைச் சார்ந்ததெனக் கூறலாம். மேலும், அது அரசின் உறுப்பினர்களின் பொருளாதார நலத்தைப்பற்றிக் கூறுவதால் ஓரளவு பொருளியலைச் சார்ந்ததாகவும், அரச நடவடிக்கையின் காரணத்தை யும் விளைவையும் நன்னெறி முறைப்படி விளக்குவதால் ஓரளவு அற நூலைச் சார்ந்ததாகவும், ஆள்வோர், ஆளப்படுவோர் ஆகிய இரு வகையினரிலும் தனி மனிதரின் உளப்பாங்கை அறிவிப்பதால் ஓரளவு உளவியற்சார்புடையதாகவும் இருக்கிறது.

எனினும், அரசியல் நூலானது தனக்கே இயல்பான பொருள் களையும் விவரங்களையும் கொண்ட ஒரு தனிப்பட்ட நூலாய் விளங்கு கிறது. இவற்றை அரசுகளின் வரலாற்றிலும் அவற்றின் இக்கால அமைப்புகளிலும் காணலாம். அரசின் தோற்றம், வளர்ச்சி, இயற்கை அமைப்பு, நோக்கம், அலுவல்கள், அரசின் கோட்பாடு, அதன் பல வகை வடிவங்கள் ஆகியவற்றை அரசியல் வல்லுநன் ஆராய் கின்றான். அரசியலமைப்புகளைப்பற்றிப் படிக்கும் மாணவன் அரசியல் நூலின் இவ்வித எல்லாக் கூறுகளையும் ஓரளவு படிக்கின்றான். அர சானது தனது அமைதிக்கும் முன்னேற்றத்திற்கும் அடிகோலும் வகை யில் எழுப்பும் நிறுவனங்களைப்பற்றி அவன் சிறப்பாகக் கற்கின்றான். எவ்வாறு அரசின்றிச் சமூகம் நிலைத்திராதோ, அவ்வாறே இந்நிறு வனங்களின்றி அரசும் நிலைத்து நிற்க இயலாது. அரசியல் நூல் முழு வதையும் நான்கு பகுதிகளாக மேலே பிரித்துக் காட்டினோம். அதைப்போல நமது பாடப்பகுதியையும் நான்கு பிரிவுகளாக வகுக்க லாம். அவற்றை வரலாறு, விரித்துரைத்தல், செயற்படுத்துதல், கோட்பாட்டியல் எனச் சுருக்கமாகக் கூறலாம்.

இக்கால அரசுகளில் முதிர்ச்சி பெற்ற சிலவற்றைத் தேர்ந் தெடுத்து, அவற்றின் நிறுவனங்களை ஆய்ந்து பார்த்தலே இந்நூலின் நோக்கமாகும். அந்நிறுவனங்களின் தொகுப்பையே நாம் 'அரசிய லமைப்பு' எனக் கூறுகிறோம். நமது ஆய்வு முறையைப் பொதுவாக ஒப்பு நோக்கும் முறை எனக் கூறலாம். அதாவது, நாம் ஆராயும் அரசியல் அமைப்புகளை, அவற்றின் வரலாறு, இக்கால வடிவம் ஆகியவற்றில் காணப்படும் ஒற்றுமை வேற்றுமைகளுக்கேற்ப வகைப் படுத்தலாம். இதைச் செய்வதற்கு முன், முதலில் நாம் இங்குப் பயன்படுத்தும் சிறப்புச் சொற்களின் பொருளை வரையறுக்கவேண்டும். இரண்டாவது, அரசியல் முறைமைக்குட்படுகையின் பொதுவான வரலாற்றைச் சுருக்கமாகக் கூறவேண்டும்.

## 2. சமூகம்

அரசின் எந்த இயல்பைப்பற்றி ஆராயும்போதும் முதலில் சமூகம் என்பதன் பொருளை வரையறுக்க வேண்டும். ஏனெனில், அரசென் பது அரசியல் முறைப்படி அமைக்கப்பெற்ற ஒரு சமூகமாகும்.

மக்கள் சேர்ந்து வாழும் எந்தக் கூட்டத்தையும் சமூகம் எனலாம். எடுத்துக்காட்டாக, பிரிட்டிஷ், பிரெஞ்சு மக்கள் போன்றவர்களிடையே பரந்து விரிந்த உறவு முறையினைக் காண்கிறோம். இந்த உறவுகள் அவர்களைச் சமூக முறையிலே பல பிரிவுகளாகப் பிரிக்கின்றன. ஆயினும், இச்சமூகப் பிரிவுகளுக்கும், அவர்களிடையே காணப்படும் அரசியற்பிரிவுகளுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. இப்பிரிவானது பொதுவாக அரசைவிட மிகச் சிறிதாகவே இருக்கின்றது. ஆனால், இது அடிக்கடி அரசியல் எல்லைக் கோட்டைக் கடந்து செல்வதைக் காணலாம். இதைச் சிறப்பாக வாணிகத் தொடர்புகளிலே காண்கின்றோம்.

அரசியல் முறைப்படியல்லாமல் சமூக முறைப்படி பார்த்தால், மக்கள் சேர்ந்து வாழும் ஒரு சமூகத்தில் மூன்று அடிப்படை அலகுகள் உள்ளன. முதலாவது, மனிதன் பிறக்கும் கூட்டமாகிய குடும்பம். இரண்டாவது, பொருளாதார நலத்திற்காக அல்லது சமூகச் சூழ்நிலை நெருக்கடிக்கேற்ப அவன் கட்டாயமாகச் சேரவேண்டிய சங்கங்கள். இவற்றிற்கு எடுத்துக்காட்டாகத் தொழிற்சங்கங்கள் அல்லது ஒரே துறை அலுவலாளர்களின் சங்கங்களைக் (Professional Societies) குறிப்பிடலாம். மூன்றாவது, தான் விரும்பிச் சேர்கின்ற கழகம் அல்லது (இக்காலச் சூழ்நிலையில்) மதச்சபை. பொதுவாக, அரசானது இத்தகைய சங்கங்களில் தலையிட்டுத் தனது வல்லந்த முறைகளைப் பயன்படுத்தாவிடினும், சில வேளை சமூக நலத்திற்காகவும், அரசியல் சூழ்நிலை நெருக்கடி காரணமாவும் அவ்வாறு செய்யக் கூடும்; செய்யவேண்டிய தேவையும் ஏற்படுகின்றது. நாம் மேலே குறிப்பிட்ட சங்கங்கள் அரசின் நடவடிக்கைகளுக்குக் காரணமாய் இருந்த போதிலும், அவற்றுள் பல, அரசினால் மட்டும் ஏற்படுத்தப் படக்கூடிய கட்டுப்பாடுகளின்றி நெடுநாள் வாழ இயலாது. இக்கட்டுப்பாடுகளுக்கு எடுத்துக்காட்டாகத் திருமணச் சட்டங்கள், சொத்துரிமை, ஒப்பந்தச் சட்டங்கள் (Laws of Contract) போன்றவற்றைக் கூறலாம்.

## 3. அரசு

ஆயினும், அரசென்பது குடும்பங்களின் கூட்டமோ, அல்லது தொழில் நிறுவனங்களின் தொகுதியோ அன்று. அரசின் இணக்கம் பெற்று வாழும் சங்கங்களிடையே பிணக்கம் ஏற்படும்போது அதைத் தீர்த்துவைக்கும் நடுவுநிலை நிறுவனமாகவும் அரசைக் கருத இயலாது. ஒழுங்கு முறைப்படி அமைந்த அரசியல் சமூகத்தில் அரசு சமூகத்திற்கெனவே வாழ்கின்றது; சமூகம் அரசிற்கென வாழ்வதில்லை.

ஆயினும், ஒரு நாடு எவ்வளவு வளர்ச்சி பெற்றிருந்தாலும், குடும்பங்கள், கழகங்கள், மதச்சபைகள், தொழிற்சங்கங்கள் போன்றவற்ருலமைந்த அதன் சமூகம், வன்முறையிஞல் நடுத்தீர்ப்புச் செய்யக் கூடிய ஆற்றலின்றித் தன்னைத்தானே காத்துக்கொள்ள இயலாது.

எல்லாச்சங்கங்களும் தங்கள் நடைமுறைக்கென ஒழுங்குகளையும் விதிகளையும் வகுக்கின்றன. மக்கள் சேர்ந்து வாழும் அரசியற் சமூகத்தில் இவ்விதிகளும் ஒழுங்குகளும் சட்டங்களென வழங்கப்படுகின்றன. இச்சட்டங்களை இயற்றுவது அரசின் தனிச் சிறப்புரிமையாகும். வேறு எந்தச் சங்கமும் இவற்றை இயற்ற இயலாது. மக் ஐவர் (R. M. Mac Iver) கூறுவது போல, 'அரசானது சமூக அமைப்பைப் பேணி வளர்ப்பதற்காக ஏற்பட்டுள்ள ஓர் அடிப்படைச் சங்கமாகும். ஆகவேதான் சமூகத்தின் ஒன்றுபட்ட ஆற்றல் அரசின் நடு நிறுவனத்திடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது.' ஆஞல், இந்த விளக்கம் ஒரு நாட்டுப்புற அல்லது நாடோடிச் சமூகத்திற்கும் பொருந்தும். அத்தகைய சமூகத்தில் குலத்தலைவர் அல்லது குடும்பத் தலைவர் ஒருவித அரசியல் அதிகாரம் செலுத்தி வந்தாராகலின், அங்கு ஒற்றுமை காணப்பட்டது. ஆஞல், அது போன்ற சமூகத்தில் அரசின் இன்றியமையாத இயல்புகளில் ஒன்ருகிய நிலப்பரப்பு இல்லை. இதனை வலியுறுத்தியே ஹெதரிங்டன் (H. J. W. Hetherington) பின் வருமாறு கூறுகின்ருர் : 'வாழ்க்கையின் அடிப்படையான சில பொது நோக்கங்களையும், நிலைமைகளையும் அடைவதற்காக, தெளிவாகக் குறிக்கப்பட்ட ஒரு நிலப்பரப்பிலே வாழும் மக்களை ஒரு தனி அதிகாரத்தின் கீழ் ஒன்று சேர்க்கும் நிறுவனம் அல்லது நிறுவனத்தொகுதிதான் அரசு.' ஆஞல், முதலிற்கூறிய விளக்கத்தில் குறிப்பிட்டுள்ள 'சமூகத்தின் ஒன்றுபட்ட ஆற்றல்' என்பதற்கும் இரண்டாவது கூறிய 'தனி அதிகாரம்' என்பதற்கும் பொருள் என்ன ? அதுதான் சட்டமியற்றும் ஆற்றல் அல்லது அதிகாரம் எனப்படும். ஆகவே, உட்ரோ வில்சன் கூறியபடி, 'குறிப்பிட்ட ஒரு நிலப்பகுதியில் சட்டங்கள் இயற்றுவதற்கெனச் சேர்ந்து வாழும் மக்களினமே அரசெனப்படும்.'

## 4. சட்டமும் வழக்கமும்

அரசின் உறுப்பினர்கள் சட்டத்திற்குப் பணிவதுதான் அரசைப் பிற சங்கங்களிலிருந்து பிரித்துக் காட்டும் இன்றியமையாத பண்பாடு. அரசென்பது ஆள்வோர் ஆளப்படுவோரென இரு பகுதிகளாகப் பகுக்கப்பட்ட ஒரு நிலஞ்சார்ந்த சமூகம். எனவே, சட்டத்திற்கு, 'ஓர் அரசியல் சமூகத்தின் உறுப்பினர்களுக்கு அதன் ஆணையாளர்களால் வழங்கப்படும் ஒழுங்குகளின் தொகுதி' என்றும், 'அவற்றிற்கு அவர்கள் பொதுவாகப் பணிகின்ருர்கள்' என்றும்

இலக்கணம் வரையப்படுகின்றது. சட்டம் என்பதற்கு வேறொரு விளக்கமும் தரப்படுகிறது. அதாவது, 'சட்டம் என்பது, குறிப்பிட்ட ஒரு வகையான செயல்களைச் செய்ய வேண்டும் அல்லது செய்யக் கூடாது என உறுதியான ஓர் ஆள் அல்லது குழுக் கூட்டாக வெளியிடும் ஆணை. இவ்வாணையை மீறும் எவரும் தண்டனைக்குள்ளாவாரென்பது வெளிப்படையாகவோ அல்லது மறைமுகமாகவோ அறிவிக்கப்படுகின்றது. தண்டனையை அறிவிக்கும் ஆள் அல்லது குழுவிற்கு அதை விதிக்கும் ஆற்றலும் எண்ணமும் உண்டு என்பதை ஏற்றுக் கொள்ள வேண்டும்.'

சட்டத்தை இயக்கும் ஆற்றல் எப்போதும் ஒரு சமூக ஆற்றலாகவே இருந்துள்ளது. ஆனால், இந்தச் சமூக ஆற்றல் தன்னளவில் வழக்கமாக (custom) மட்டும் இருக்கிறது. சமூகங்கள் இருக்கும் இடங்களிலெல்லாம் சமூகத்தின் செயல்களைச் செய்வதற்கென வழக்கமான வழிகளைக் கையாளுகின்றனர். இதை வளர்ச்சியடையாத சமூகங்களிலும் காணலாம். ஆகவே, ஒரு சில வழக்கங்கள் தோன்றி வளர்கின்றன. இவையே எழுதப்படாத சட்டத் தொகுப்பாக உருப்பெறுகின்றன. இவை பெற்றோர் அல்லது மத அதிகாரிகளாலும், அச்சமூகத்தின் பொதுவிருப்பத்தினாலும் நிறைவேற்றப்படுகின்றன. இவ்வழக்கங்களுட்சில, பொது நலத்திற்கெனப் பயன்பட்டமையால், அவற்றிற்கு எல்லோரையும் பணிய வைப்பதற்குச் சமூக அதிகாரிகளையும் பொது விருப்பத்தையும் தவிர வேறொரு மேலான அதிகாரம் தேவையாய் இருக்கிறது. அப்போது இந்த வழக்கங்கள் சமூக வழக்கங்கள் என்னும் நிலை நீங்கி, அமைக்கப்பட்ட அரசாங்கம் நிறைவேற்றும் அரசியல் வழக்கங்களாக மாறுகின்றன. உண்மையில் இவை சட்டங்களாகின்றன.

எம்முறையில் நிறுவப்பட்ட போதிலும், இதுவே சட்டமாகின்றது. இதைத்தான் அரசினல் முறையாக அமைக்கப்பட்ட நீதி மன்றங்கள் நிறைவேற்றுகின்றன. இதன் பிறப்பிடம் மூன்று வகைப்படும்; முதலாவது, வழக்கம் ; அதாவது, நீண்ட காலம் வழங்கியிருப்பதால் நிறைவேற்றப்படும் எழுதப்படாத சட்டம். இரண்டாவது, முன்பு நீதிபதிகள் எழுதி வைத்த தீர்ப்பு. இதுதான் சில வேளை தீர்ப்பு வழிச் சட்டம் (case law), அல்லது நீதிபதிகள் ஆக்கிய சட்டம் (Judge made law), அல்லது பொது நீதி (Common law) எனப்படுகிறது. மூன்ருவது, அரசின் சட்ட மன்றம் அல்லது பாராளுமன்றம் இயற்றும் சட்டம்.

## 5. இறைமை

சட்டங்களை இயற்றி அவற்றை எல்லாவித வன்முறைகளாலும் நிறைவேற்றிவைக்கும் அதிகாரமே அரசைப் பிற சங்கங்களிலிருந்து

வேறுபடுத்தும் தனி இயல்பென மேலே கூறினோம். இவ்வதிகாரத்தை நாம் 'இறைமை' என்கிறோம். இச்சொல்லுக்கு மாறுபட்ட பல பொருள்கள் உண்டு. அவற்றைப்பற்றிப் பிறகு விரிவாகப் பார்ப்போம். இப்போது அதன் உட்புற, வெளிப்புற இயல்புகளை மட்டும் விளக்குதல் போதும். அரசின் ஆட்சி எல்லைக்குள்ளே வாழும் தனி மனிதர்களின் மேல் அல்லது அவர்களுடைய சங்கங்களின்மேல் ஓர் ஆள் அல்லது ஒரு குழுச் செலுத்திவரும் மேலாண்மையே உட்புற இறைமையாகும். ஓர் அரசு வேறு அரசொன்றையும் சார்ந்திராமல், முழுவதும் தன்னுரிமையுடன் நிகழ்வதை 'வெளிப்புற இறைமை' என்கிறோம். சொல்லிலக்கணப்படி 'இறைமை' என்னும் சொல் சிறப்பு அல்லது உயர்வைத்தான் குறிக்கிறது. ஆனால், அந்த அரசுடன் இணைக்கும் போது அது ஒரு தனிச் சிறப்பைக் குறிப்பிடுகிறது; அதாவது, சட்டமியற்றும் அதிகாரத்தைக் காட்டுகிறது. ஓர் அரசில் இறைமை அதிகாரம் எங்கிருக்கிறதென நாம் அறிய முயலும்போது, அச்சொல்லானது மாறுபட்ட மூன்று வகைகளில் எவ்வாறு பயன்படுகிறதென்பதை அறிதல் வேண்டும். முதலாவதாக, அச்சொல் பிரிட்டிஷ் அரசியாரைப் போன்று பெயரளவுக்கு அரசின் தலைவர்களாய் இருப்பவர்களைக் குறிக்கிறது. இரண்டாவது, அது சட்டப்படியான இறைமையைக் (Legal sovereignty) குறிப்பிடலாம்; அதாவது, நாட்டின் நீதி முறையின்படி சட்டமியற்றி ஆட்சி செய்யும் ஆளை அல்லது குழுவைக் குறிக்கும். இதற்கு எடுத்துக்காட்டாக அரசியார் பெயரால் ஆளும் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தைக் கூறலாம். மூன்றாவதாக, அரசியல் இறைமை அல்லது அரசியலமைக்குட்பட்ட இறைமையாகும். இது இறைமை முடிவாக நிலைபெற்றிருக்கும் குழுவைக் குறிக்கின்றது. இது சில வேளை கூட்டு இறைமை (Collective Severeign) எனப்படும். இதனை அரசியல் முறைமைக்குட்பட்ட இக்கால அரசியல் தேர்தல் தொகுதியில் காணலாம். மூன்றாவது கூறப்பட்ட இந்த வகையானது, இக்கால அரசியலிலே மிகவும் சிறப்பான இடம் பெற்றுள்ளதென்பதை நாம் பிறகு விளக்குவோம். இப்போது இரண்டாவது வகை இறைமையைப் பற்றிப் பார்ப்போம்:

ஓர் அரசியல் இறைமை எங்குள்ளதெனக் கண்டு பிடிக்கும் முறையை விளக்க லார்டு பிரைஸ் (Lord Bryce) என்பார், ஆங்கிலேயன் ஒருவனை எடுத்துக்காட்டாகக் கூறுகிறார்.

'ஒரு நகராட்சியிலே ஒரு வீட்டுக்காரர்மீது வரி விதிக்கப்படுகிறது. அவர் தாம் அவ்வரியை ஏன் செலுத்த வேண்டுமெனக் கேட்க, அதற்கு நகரவை அதை விதிக்கிறதென்பது அவருக்கு அறிவிக்கப்படுகிறது. அவர் அவ்வரியை விதிக்க நகரவைக்கு

என்ன அதிகாரம் இருக்கிறதெனக் கேட்கிறுர். அதற்குப் பாராளு மன்றச் சட்டத்தின் ஒரு பிரிவு அந்த அதிகாரத்தை நகரவைக்கு வழங்குகிறதெனப் பதிலளிக்கப்படுகிறது. அவ்வதிகாரத்தை வழங்கப் பாராளுமன்றத்திற்கு என்ன உரிமை இருக்கின்றதென அவர் மேலும் கேட்பாராஞல், அதற்கு, இங்கிலாந்தில் பாராளுமன்றமே சட்டம் இயற்றுகிறதென்றும், சட்டப்படி பாராளுமன்றத்தின் வெளிப்படையான விருப்பத்தை மீறவோ அல்லது குறுக்கிடவோ எவருக்கும் அதிகாரமில்லை என்றும் வரி வாங்குபவர் விடையளிப்பார். பாராளுமன்றமானது மற்ற எல்லா அதிகாரிகளையும்விட அதிக அதிகாரமுடையது. அதாவது, பாராளுமன்றத்திற்கு இறைமை அதிகாரம் இருக்கின்றது.'

நாம் இப்போது பார்த்தது போல இறைமை அதிகாரம் எங்குள்ளதென எளிதாக எப்போதும் கண்டுபிடிக்க இயலாதென்பதைப் பிறகு விளக்குவோம். ஆயினும், ஓர் அரசில் மக்கள் வழக்கமாகப் பணிந்துவரும் ஓர் ஆள் அல்லது ஒரு குழுவிடம் இறைமை அதிகாரம் இருக்கிறதென நினைவில் வைத்துக்கொண்டால், அடுத்த பகுதியில் கூறப்படும் கருத்துகள் நன்கு விளங்கும். இறைமை அதிகாரத்தில் நாட்டின் படைகளைக் கட்டுப்படுத்தும் அதிகாரமும் அடங்கியுள்ளது என்பதையும் மறத்தலாகாது.

## 6. அரசாங்கம்

சட்டங்களை இயற்றி அவற்றை நிறைவேற்ற வேண்டுமாஞல், அரசில் மேலான அதிகாரமுடைய ஒரு நிறுவனம் (Supreme authority) இருக்க வேண்டும். இதைத்தான் '**அரசாங்கம்**' என்கிறோம். அரசாங்கமென்பது அரசின் ஒரு கருவி. அதுவின்றி அரசு உயிர் வாழ இயலாது. ஏனெனில், 'நுணுகி ஆராய்ந்து பார்க்கும்போது அரசாங்கம் ஒழுங்கமைக்கப்பெற்ற ஓர்ஆற்றல்,' என்பது தெரிகிறது. எனவே, அரசாங்கம் 'இறைமை அதிகாரங்களைச் செலுத்தும் உரிமை பெற்றுள்ள ஒரு நிறுவனம். பொதுவாக நாம் நம் நாட்டின் அமைச்சரவையைப் பற்றிக் குறிப்பிடும்போது அதை 'இன்றைய அரசாங்கம்' எனப் பேச்சு வழக்கிலே கூறுகிறோம். ஆஞல், அரசாங்கமென்பது, அதன் விரிந்த பொருளிலே பார்க்கும் போது, அமைச்சர் குழுவிலும் பெரியது. அதன்படி, நாட்டின் உள்ளும் புறமும் அமைதியையும் பாதுகாப்பையும் நிலைநாட்டுவது அரசாங்கத்தின் கடமையாகும். ஆகவே, முதலில் அதற்குப் படைத்துறை அதிகாரம் அல்லது போர்ப் படைகளைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் வேண்டும். இரண்டாவது, சட்ட ஆக்க அதிகாரம் அல்லது சட்டங்கள் இயற்றும் ஆற்றல் தேவை. மூன்ருவது, நிதி பற்றிய அதிகாரம்—அதாவது, அரசினைக் காத்து, அரசின் சார்பாகத் தான்

இயற்றும் சட்டங்களை நிறைவேற்றுவதற்குத் தேவையான பொருளைப் பொதுமக்களிடமிருந்து பெறக்கூடிய திறமை—வேண்டும். சுருங்கக் கூறினல், அரசாங்கத்தின் மூன்று துறைகளென நாம் சொல்லும் சட்டமியற்றும் அதிகாரம், நிருவாகத் துறை அதிகாரம், நீதித்துறை அதிகாரம் ஆகிய இம்மூன்றும் அரசாங்கத்திடம் இருக்கவேண்டும் எனலாம்.

## 7. சட்ட மன்றம்

மேலே கூறிய அரசாங்கத்தின் மூன்று துறைகளும் இக்கால அரசில் இறைமை அதிகாரத்தைச் செலுத்தப் பெரிதும் பயன்படுகின்றன. அவற்றுள் ஒவ்வொன்றும் நெருங்கிய தொடர்புடையது. சில அரசுகளில் இத்தொடர்பு மிகவும் நெருங்கியிருக்கிறது. ஆயினும், எல்லா இடங்களிலும் அவற்றுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தனித் துறையாய் இயங்குகின்றது. சட்ட முறை ஆற்றலானது (Statutory force) சட்டத்திற்குத் தேவையாய் இருப்பதால், அதற்கேற்பச் சட்டங்களை இயற்றும் அரசாங்கத்துறையைச் 'சட்ட மன்றம்' என வழங்குகிறோம். தர்க்க முறைப்படி பார்த்தால், சட்டமானது இயற்றப்பட்ட பிறகே செயற்படுத்தப்படுவதால், சட்டத்தைச் செயற் படுத்தும் நிருவாகத் துறையினும் அல்லது அதை மீறுபவர்களைத் தண்டிக்கும் நீதித் துறையினும் சட்ட மன்றமே முக்கியமானதாக முதலில் தெரிகிறது. ஆனல், இது எப்போதும் உண்மையன்று. ஏனெனில், நாம் பிறகு பார்க்கவிருப்பது போல, சட்ட மன்றம் மற்ற இரு துறைகளையும் கட்டுப்படுத்தும்போது அதன் அதிகாரங்கள் வேறுபடுகின்றன. ஆயினும், 'சட்டமியற்றும் அலுவல் என்பது உரிமை பெற்ற ஒவ்வோர் அரசாங்கத்திலும் காணப்படும் பெரிய மேலாண்மை,' என அமெரிக்க அறிஞர் ஒருவர் விளக்குகிறர். அதை நாம் ஏற்றுக்கொள்ளலாம்.

அரசியல் முறைமைக்குட்பட்ட இக்கால அரசுகளிலே சட்டமியற்றும் அதிகாரம் பாராளுமன்றத்திடம் இருக்கிறது. பொதுவாகப் பாராளுமன்றத்தில் இரண்டு அவைகள் உண்டு. அவற்றுள் ஒன்று அல்லது இரண்டுமே மக்களால் தேர்ந்தெடுக்கப்படலாம். ஆகவே, இக்கால அரசில் சட்ட மன்ற அமைப்பிற்கும் வாக்காளர் தொகுதியின் தன்மைக்கும் நெருங்கிய தொடர்புண்டு. வாக்காளர்களிடம் அரசியல் இறைமை இருக்கின்றதென்பதை ஏற்கெனவே கூறிவிட்டோம். இக் காலச் சமூகத்தில் மலிந்து காணப்படும் சிக்கல்களினலும், அவற்றின் விளைவாகச் சமுக நலனுக்காகச் சட்டம் இயற்ற வேண்டிய தேவை ஏற்படுவதாலும், சட்ட மன்றத்தின் அலுவல்கள் விரிந்துகொண்டே போகின்றன. சமூகத்தில் ஏற்படும் மாற்றமே எல்லா அரசுகளின் சட்ட மன்றங்களையும் சமூக நலத்திற்காகச் சட்டங்களை இயற்றுமாறு

வற்புறுத்துகிறது. சில அரசுகளில் ஆற்றல் மிகு தேர்தல் முறையினுல் இதைச் செய்கின்றனர். ஏனைய அரசுகளில் சட்டத்தைத் தொடங்கு வதற்கும் (Initiative), பாராளுமன்றம் இயற்றிய சட்டத்தை ஏற்ப தற்கும் அல்லது மறுப்பதற்கும் அரசியலமைப்பு மக்களுக்கு வழங்கு கின்ற அதிகாரத்தினுல் இதைச் செய்கிருர்கள். இக்கால அரசுகளில் காணப்படும் வேறுபாடுகளே இப்போதுள்ள அரசுகளை வகைப்படுத்த முக்கிய ஆதாரமாய் உள்ளன என்பதை வேருேர் இயலில் பார்ப்போம்.

## 8. நிருவாகத் துறை (The Executive)

'நிருவாகத் துறை' என்ற சொல்தொடரைப் பொதுவாகப் பலர் சரியான பொருளில் பயன்படுத்துவதில்லை. சில வேளை இது முதல் அமைச்சரை (ஐக்கிய அமெரிக்க நாடுகளில் அந்நாட்டுத் தலைவரை) அல்லது பொதுத் துறை, படைத்துறை சார்ந்த அரசாங்க அலுவலர் அனைவரையும் குறிப்பிடுவதற்குப் பயன்படுகிறது. பொதுத் துறை அலுவலர்களைக் குறிப்பிடுவதற்கு 'ஆட்சித் துறை' என்ற சொல் தொடர் சிறந்ததாகும். இங்கு நாம் 'நிருவாகத் துறை' என்னும் சொல் தொடரைப் பயன்படுத்தும் போது அரசாங்கத்தின் தலைவரை யும், பொதுவாக அமைச்சரவை என வழங்கப்படும் அவர் அமைச்சர் களையும் குறிப்பிடுகிருேம். சட்ட மன்றம் இயற்றும் சட்டத்தைச் செயற்படுத்த அரசிலுள்ள எந்தக் குழுவிற்கு அரசியலமைப்பு அதி காரம் அளிக்கின்றதோ, அதுவே நிருவாகத் துறையாகும். முறைப் படி சட்ட மன்றமே கொள்கைகளைத் தொடங்கி வைத்தபோதிலும், இக்கால நடைமுறையில் நிருவாகத் துறையே பெரும்பாலும் கொள்கையை உருவாக்கி, பிறகு அதைச் சட்ட மன்றத்தின் இசைவு பெற அதன் முன் சமர்ப்பிக்கிறது.

அத்தகைய துறை எந்த அரசிலும்—சிறப்பாக இக்கால அரசில்—இருக்க வேண்டிய தேவை ஏற்படுகிறது. ஏனெனில், இக்கால அர சானது பெரிய ஒரு தேசீயச் சமூகமாய் இருப்பதால், அதன் முக்கிய அமைச்சர்களுக்கு மிகுதியான அதிகாரங்கள் வழங்கப்படவேண்டும். உறுப்பினர்களின் எண்ணிக்கைதான் சட்ட மன்றத்திற்கும் நிருவாகத் துறைக்கும் அமைப்பு முறையில் உள்ள பெரிய வேறுபாடாகும். சட்ட மன்றம் பெரியது. ஆனுல், நிருவாகத்துறை (இங்கே கூறிய பொருளில்) சிறியது. சட்டமன்றம் பொதுக்காரியங்களைப்பற்றி வாதித்து ஆராய்ந்து தீர்மானிக்கும் பேரவையானதால், அது பெரியதாகவும், நிருவாகத் துறை உடனுக்குடன் முடிவு செய்து செயலாற்ற வேண்டிய துறைத் தலைவர்களான அமைச்சர்களைக் கொண்ட குழுவாகையால், சிறிய தாகவும் இருக்கவேண்டும். சில இடங்களில் சட்ட மன்றம் நிருவாகத்

துறையைக் கட்டுப்படுத்துவதையும், வேறு சில இடங்களில் அது சட்ட மன்றத்தினின்று தனித்து நிற்பதையும் பிறகு விளக்குவோம். இந்த வேறுபாடுதான் அரசுகளை வகைப்படுத்துவதற்குச் சிறந்த ஓர் ஆதாரமாய் இருக்கின்றது.

## 9. நீதித் துறை

சட்டத்தை மீறுபவர்களைத் தண்டிக்கும் துறை நீதித்துறையாகும். சட்டம் என்பது, சட்ட மன்றத்தினுல் இயற்றப்பட்ட சட்டம் அல்லது அனுமதிக்கப்பட்ட சட்டம் என்று பொருள்படும். அறிஞர் ஒருவர் கூறுவது போல, 'தனி மனிதர்களைப் பொறுத்த வரையில் இப்போதுள்ள சட்டம் எவ்வாறு நிறைவேற்றப்படுகிறது என்பதைத் தீர்மானிப்பது நீதித்துறையின் அலுவல். அத்தகைய நீதித்துறை அதிகாரம் அரசாங்கத்திற்கு இன்றியமையாதது. அது வன்முறையைப் பயன் படுத்தும் இயல்புடையது. நாட்டின் நடுப்பகுதியில் அல்லது புற எல்லையையடுத்துள்ள பகுதிகளில் தனியாகவோ அல்லது குழு வாகவோ பணியாற்றும் நீதிபதிகள் நீதித்துறையில் எப்போதும் இருப் பார்கள். நீதித்துறையின் அதிகாரங்கள் அரசுகளுக்கேற்ப வேறு பட்டிருக்கும். பிரிட்டனில் நடைபெறுவதுபோல, சில நாடுகளில் சட்ட மன்றம் இயற்றிய சட்டங்கள் எல்லாவற்றையும் நீதிபதிகள் நிறை வேற்ற வேண்டும். அச்சட்டங்கள் முன்னர் நீதி மன்றங்கள் வழங்கிய தீர்ப்புகளுக்கு முரணுய் இருந்த போதிலும் (உண்மையில் அவ்வாறு இருப்பதாலேதான்) நீதிபதிகள் அவற்றை நிறைவேற்ற வேண்டும். வேறு சில நாடுகளில், ஐக்கிய அமெரிக்க நாடுகளில் நிகழ்வது போல, சட்டமன்றங்கள் இயற்றிய சட்டங்களை நீதிமன்றம் தள்ளிவிட இயலும். அச்சட்டங்களை இயற்றும் அதிகாரத்தைச் சட்டமன்றத் திற்கு அரசியலமைப்பு வழங்கவில்லை என்ற காரணத்தினுல் அவற்றை நிறைவேற்றத் தலைமை நீதி மன்றம் (Supreme Court) மறுக்கிறது.

பல நாடுகளில்—சிறப்பாக ஆங்கிலோ ஸாக்ஸானிய நாடுகளில்—அரசாங்கத்தின் நீதித்துறையானது பணியாற்றி வருங்காலத்தில், இக்காலச் சமூகங்களில் நிலவிவரும் சட்டத்தொகுதியின் ஒரு முக்கிய இயல்பினை உருவாக்கி வருகின்றது, சட்டம் எங்கும் வல்லுநர்களின் துறையைச் சார்ந்தது. இதற்காகவே நீதிபதிகளுக்குப் பதவிக்காலப் பாதுகாப்பு (Security of tenure) அளிக்கப்படுவதுடன் அரசாங்கத் தின் இரு துறைகளும் நீதித்துறையில் தலையிடாதவாறு தடுக்கப்படு கின்றன. இது நீதிபதிகளின் முக்கிய உரிமைகளுள் ஒன்ருய் இருப்ப துடன், பொது மக்களின் நலனுக்கும் இன்றியமையாததாகும். ஆயினும், மன்னிப்பளித்தல், பொதுத்துறை படைத்துறை அலுவல்

களின் ஒழுங்கு முறைகளைக் கட்டுப்படுத்துதல் ஆகிய வேலைகளைச் செய்யும்போது நிருவாகத்துறை சில நீதித்துறை அதிகாரங்களைச் செலுத்துகிறது. ஆனால், இச்செயல்கள் பொதுவாகச் சட்ட மன்றத்தின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டவை. ஏனெனில். இந்த அலுவல்களுக்காகப் பணத்தை வழங்கவோ அல்லது மறுக்கவோ சட்ட மன்றத்திற்கு அதிகாரமுண்டு.

## 10. அரசியலமைப்பு

அரசாங்கத்தின் மூன்று துறைகளின் அமைப்பிலும் தொடர்புகளிலும் காணப்படும் வேறுபாடுகளே அரசுகளை வேறுபடுத்துகின்றன. இனி நாம் ஆராயப்போகும் அரசியல் முறைமைக்குட்பட்ட இக்கால அரசு, அரசாங்கத்தின் இம்மூன்று துறைகளும் செயலாற்றுவதற்கான ஒழுங்குகளையும் விதிகளையும் வகுத்துள்ளது. அரசியலமைப்பு என்பது, 'சட்டத்தினால், சட்டம் வழியாக நிறுவப்பட்ட ஓர் அரசியல் சமூகத்தின் அமைப்பு ; அதாவது, தெரிந்த அலுவல்களையும் தெளிவான உரிமைகளையுமுடைய நிலையான நிறுவனங்களைச் சட்டம் நிறுவியுள்ள ஓர் அரசியல் சமூக அமைப்பு,' என ஜேம்ஸ் பிரைஸ் (James Bryce) என்பவர் விளக்குகிறார். மேலும், அரசாங்கத்தின் அதிகாரங்களையும், ஆளப்படுவோரின் உரிமைகளையும், இரண்டின் தொடர்புகளையும் ஒழுங்குபடுத்துகின்ற கொள்கைகளின் தொகுப்பே அரசியலமைப்பு எனக் கூறலாம். அரசியலமைப்பு ஆராய்ந்து எழுதப்பட்ட படைப்பாய் இருக்கலாம் ; அல்லது காலத்திற்கும் வளர்ச்சிக்கும் ஏற்றவாறு மாற்றி அமைக்கப்படும் ஓர் ஆவணமாயும் இருக்கலாம், அரசியல் அமைப்பின் சட்டங்களென்பதற்காகச் சிறப்பான அதிகாரம் வழங்கப்பட்ட தனிச்சட்டங்களின் தொகுப்பாயும் இருக்கலாம் ; அல்லது, அரசியலமைப்பு, இரண்டோர் அடிப்படைச் சட்டங்களை ஆதாரமாகக்கொண்டு, ஏனைய அதிகாரங்களை வழக்கத்திலிருந்தும் பெறலாம்.

ஐவர் ஜென்னிங்ஸ் (Ivor Jennings) 'Cabinet Government' என்னும் தமது நூலில் கூறுவது போல, சட்டங்களுக்கும் வழக்காறுகளுக்கும் இடையேயுள்ள வேறுபாடு உண்மையில் அடிப்படையான முக்கியத்துவம் பெறவில்லை என்பது உண்மைதான். ஏனெனில், ஓர் அரசியலமைப்பு எவ்வளவுதான் முழுமையாக எழுதப்பட்டிருந்த போதிலும், அதைத் திருத்த எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளைத் தவிர, வழக்கங்களினாலும் வழக்காறுகளினாலும் நாளடைவில் வேறு சில மாறுதல்களையும் அடையும், மேலும், ஜென்னிங்ஸ் குறிப்பிடுவது போல, ஓர் அரசியல் அமைப்பு மக்களின் உடன்பாடெனும் அடிப்படையில் அமைந்துள்ளது. அந்த உடன்பாடு குடியொப்பம்

(Referendum), மறைமுகமான ஆதரவு, சிலவேளை வன்முறை ஆகிய வற்ருல் தெரிவிக்கப்படலாம். அந்த அரசியலமைப்புக் கெடுதலான தெனப் பொது மக்கள் கருத்து (Public opinion) வெளிப்படையாகத் தெரிவிக்குமாஞல், அது விரைவில் வீழ்ச்சியடையும். நூலாசிரியர் மேலும் கூறுவதுபோல, ஒரு லூயி நெப்போலியன், ஒரு முசோலினி, ஒரு ஹிட்லர் தாம் விரும்பும் மாற்றத்தை ஏற்றுக்கொள்ளுமாறு மக்களைத் தூண்டவோ அல்லது கட்டாயப்படுத்தவோ இயலுமென்று எண்ணிஞல், அவர் அரசியலமைப்பை அழிப்பதற்குத் தயங்க மாட்டார். ஏனெனில், அது சட்டமாக இயற்றப்பட்டுள்ளது. ஆஞல், உண்மையான ஓர் அரசியலமைப்பின் வடிவம் எவ்வாறு இருந்த போதிலும், அதைப் பற்றிய கீழ்க்காணும் உண்மைகள் அதில் மிகத் தெளிவாகக் குறிக்கப்பட்டிருக்கும். அவற்றுள் முதலாவது, அதன் செயற்கருவிகள் எவ்வாறு அமைக்கப்பட்டுள்ளன என்பது; இரண்டாவது, அச்செயற்கருவிகளுக்கு அளிக்கப்பட்டிருக்கும் அதிகாரம் என்ன என்பது; மூன்ருவது, அந்த அதிகாரம் எவ்வாறு செலுத்தப் படவேண்டும் என்பதாகும். மனித உடலென்பது உறுப்புகளைக் கொண்ட ஓர் அமைப்பு. உடல் நலமாய் இருக்கும் போது எல்லா உறுப்புகளும் ஒழுங்காக இயங்குகின்றன. ஆஞல், நோயுற்ற போது அவை ஒழுங்கின்றி வேலை செய்கின்றன. அதைப்போல, அரசின் உறுப்புகளும் அவற்றின் அலுவல்களும் ஒழுங்காய் அமைந்து, அவை ஒரு கொடுங்கோலனின் விருப்பத்திற்கு அடங்கியிரா திருந்தால், அரசுக்கும் ஓர் அமைப்பு உண்டு எனக் கூறலாம். சுருங்கக் கூற வேண்டுமாஞல், அரசாங்கத்தின் எதேச்சையான செயல்களைக் கட்டுப்படுத்துவதும், ஆளப்படுவோரின் உரிமைகளைக் காப்பதும், இறைமை அதிகாரத்தின் செயல்களை வரையறுப்பதும் அரசியலமைப்பின் நோக்கங்களாகும்.

## 11. தேசீய ஜனநாயக அரசு

அரசியல் முறைமைக்குட்பட்ட அரசென்பது என்ன என்பதை அறிவதற்கு மேலே கூறிய கருத்துகள் பயன்படும். அரசியல் முறைமைக்குட்படுகையின் தொடக்கம் மேல் நாடுகளின் வரலாற்றிலே புதைந்து கிடக்கின்றது. அரசின் உருமலர்ச்சியிலே, நமக்குத் தெரிந்த அளவில், தேசீய உணர்ச்சி ஒற்றுமையுணர்ச்சியை உண்டாக்கு வதற்கு நெடுங்காலத்திற்கு முன்பு, அல்லது மக்களாட்சி போராடும் அரசியல் திட்டமாக வெளிப்படுவதற்கு முன்பு, சில இடங்களில் அரசியல் அமைப்புக் கொள்கைகள் தோன்றலாயின. எனினும், அரசியல் முறைமைக்குட்பட்ட இக்கால அரசு வரலாற்றைப் பொறுத்த வரையில் தேசீய அரசாயும், முன்னேற்றத்தைப் பொறுத்த வரையில் மக்களாட்சியாயும் விளங்குகிறது. அரசியல் பதங்களிலே

'நாட்டினம்' (Nationality) என்பது வரையறுப்பதற்கரிய சொல்லாகும். அதன் இக்கால வடிவில் அது ஒற்றுமையுணர்ச்சியைக் குறிக்கிறது. அதாவது, இறந்த காலத்தில் ஒற்றுமையுணர்ச்சியுடன் வாழ்ந்து, எதிர்காலத்தில் ஒன்றுபட்டே செயலாற்ற விரும்பும் ஒரு சமூகம் தனக்கென ஓர் அரசியல் முறையை அமைக்க விரும்புமாயின், அதை நாட்டினம் எனலாம். இந்தத் தேசீய ஒற்றுமையுணர்ச்சி தனி மனிதர்களின் உரிமைகளைவிட, கூட்டத்தின் சுதந்தரத்தையே பெற விழைகிறது. ஆனால், இறுதியில் இது பொது மக்களின் உரிமைகளைப் பெறத்தக்க ஆற்றலை உண்டு பண்ணுகிறது.

'மக்களாட்சி' என்னும் சொல் தொடர் பல வகைகளிலே பயன்படுத்தப்படுகிறது. அது அரசாங்கத்தின் வடிவத்தையும் சில வேளை சமூகத்தின் நிலைமையையும் குறிப்பிடுகின்றது. ஆனால், இக்கால உலகில் தேசீய உணர்ச்சி மக்களாட்சியின் அடிப்படையாய் அமைந்திருப்பது போல, ஜனநாயக அமைப்பும் சமூக நலனை வளர்க்கும் ஒரு சாதனமாய் விளங்குகிறது. இங்கு நாம் அரசியல் ஜனநாயகத்தைப் பற்றி மட்டும் குறிப்பிடுகிறோம். ஆளப்படுவோரின் இணக்கமே அரசாங்கத்தின் அடிப்படை என்பதை அது குறிக்கின்றது. அதாவது மக்களின் இணக்கமும் எதிர்ப்பும் தேர்தல், பொதுக்கூட்டங்கள், செய்தித்தாள்கள் வாயிலாக வெளிப்பட வேண்டும். இக்கருத்தின்படி மக்களாட்சி என்பது, ஓர் அரசியல் சமூகத்தின் வயது வந்த உறுப்பினர்களுள் பெரும்பான்மையோர் பிரதிநிதித்துவ முறைப்படி ஆட்சியில் பங்குபெறும் ஓர் அரசாங்க அமைப்பாகும். இம்முறைப்படி அரசாங்கம் இறுதியில் பெரும்பான்மையோருக்குப் பொறுப்புள்ளதாய் இருக்கின்றது. இம்முறை மக்களின் இறைமையைக் காக்க வல்லது.

ஆனால், இவ்விளக்கம், அண்மையில் தோன்றிய பாஸிஸம் பொதுவுடைமை போன்ற கொள்கைகளின் அடிப்படையில் பிறந்த அதிகாரத்துவ (Authoritarian) அல்லது சர்வாதிகார (Totalitarian) அரசுகளுக்கு எவ்வாறு பொருந்தும் என்பதைத் திட்டமாகக் கூற இயலாது. ஆயினும், அத்தகைய அரசு ஒவ்வொன்றும் இக்கால உலகில் தேசீய உணர்ச்சியின் அடிப்படையில் மலர்ந்தது என்று மட்டும் உறுதியாகக் கூறலாம். ஆனால், பொதுவுடைமை வாதிகளைப் பொறுத்த வரையில், அவர்களது அரசியல் நிறுவன அமைப்பிற்கு உயிரூட்டும் மார்க்ஸீயக் கொள்கை பன்னாட்டு நோக்குடையது எனக் குறிப்பிட வேண்டும். மேலும், அத்தகைய அரசுகள் ஆவணமுறை அரசியலமைப்புகளைப் பெற்றுள்ளன. அவ்வரசியல் அமைப்புகளின்படி அங்கு அரசியல் நிறுவனங்கள் நடைமுறையில் இயங்குகின்றனவா என்பது ஐயப்பாட்டுக்குரியது. பொதுவுடைமை அரசியலமைப்புகள் தங்கள் ஆட்சி முறையை விளக்குவதற்கு 'மக்கள் ஜனநாயகம்',

'மக்கள் குடியரசு', 'ஜனநாயகக் குடியரசு' என்னும் பல சொல் தொடர்களைப் பயன்படுத்துகின்றன. அவை இச்சொல் தொடர்களைத் தவருகப் பயன்படுத்துகின்றன என முற்போக்கு வாதிகள் கருதக் கூடும். ஆயினும், இன்றைய உலகச் சூழ்நிலையில் ஒப்பிட்டு அரசியலை உண்மையாகப் பயிலுபவர்கள் இந்த அரசியலமைப்புகளைத் தள்ளிவிட இயலாது. ஏனெனில், இவற்றின் ஆதாரமான கொள்கைகளைப் பற்றிக் கருத்து முரண்பாடு நிலவிய போதிலும், இவை மேல் நாடுகளின் பழைய பரம்பரையில் தோன்றிய அரசியல் முறைமைக்குட்படுகையின் கருத்துகளை இன்று எதிர்த்து அழிக்க முனைந்து நிற்கின்றன என்பதை மறத்தலாகாது. இப்போது, மேற்கு நாடுகளில் தோன்றி வளர்ந்த அரசியல் முறைமைக்குட்படுகைக் கொள்கையின் வரலாற்றைச் சுருக்கமாக வரைவோம்.

## படிக்க வேண்டிய நூல்கள் :

1. டைஸி (Dicey) : Law and Public Opinion, முதல் விரிவுரை.

2. ஃபைனர் (Finer) : Modern Government, இயல் 1.

3. லாஸ்கி (Laski) : Grammar of Politics, இயல் 1.

4. மக் ஐவர் (Mac Iver) : Web of Government. இயல் --4

5. ஸிட்ஜ்விக் (Sidgwick): Elements of Politics, இயல் 1,2,19.

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள் :

1. மக் ஐவர் (Mac Iver) : Elements of Social Science.

2. மில்லர் (Miller) : Nature of Politics.

## கட்டுரைக்கேற்ற பொருள்கள் :

1. சமூக நூலின் பகுதிகளைக் கூறி, அவற்றுள் ஒவ்வொன்றின் துறையையும் விளக்குக.

2. சமூகத்திற்கும் அரசுக்கும் உள்ள வேறுபாடு யாது ?

3. 'அரசு' என்னும் சொல்லிற்கு இலக்கணம் வரைக. அதன் பழங்கால, இக்காலப் பொருள்களை விளக்குக.

4. சட்டத்தின் பல வகைகளையும் விளக்கி, அவை இக்கால அரசில் எவ்வாறு வளர்ச்சியடைந்துள்ளன என்பதைக் காட்டுக.

5. 'இறைமை' என்பதன் பொருளையும் முக்கியத்தையும் விளக்குக.

6. அரசாங்கத்தை அரசின் பொறியமைப்பு எனக் கூறுவது எவ்வாறு பொருந்தும்?

7. 'அரசாங்கம் என்பது ஒழுங்கமைக்கப்பெற்ற ஆற்றல்.' இதை இக்கால அரசுடன் ஒப்பிட்டு விளக்குக.

8. அரசாங்கத்தின் மூன்று பெரிய துறைகளைக் கூறி, அவற்றுள் ஒவ்வொன்றிற்குமுரிய அலுவலையும் விளக்குக.

9. 'அரசியலமைப்பு' என்பது என்ன? அரசியல் சமுதாயத்தின் நலத்திற்கு அது இன்றியமையாததா?

10. இக்கால அரசியல் முறைமைக்குட்படுகை தேசீய அரசின் வரலாற்றையும் ஜனநாயகப் போக்கையும் சார்ந்ததெனக் கூற இயலுமா?

# 2. அரசியல் அமைப்புக்குட்பட்ட அரசின் தோற்றமும் வளர்ச்சியும்

## 1. முன்னுரை

அரசியல் அமைப்புக்குட்பட்ட அரசின் பிறப்பு, வரலாற்றைச் சார்ந்தது. அதைப் பயிலும் மாணவன் அதைப்பற்றிய முக்கிய விவரங்களை வரலாற்றிலே காண்கிருன். இந்த விவரங்களை நிறுவனங்களின் வரலாற்றில் மட்டும் காணுது அந்நிறுவனங்கள் வளரத் துணை செய்த அரசியல் கருத்துகளின் வரலாற்றிலும், நிறுவனங்களின் வளர்ச்சியால் தோன்றிய அரசியல் கொள்கைகளின் வரலாற்றிலும் காண வேண்டும். இருக்கவேண்டுமென்று கருதியதை ஆராய்வதைப் போல, ஏற்கெனவே இருந்ததை ஆராய்வதும் முக்கியமாகும். இது நாம் இப்போது பார்க்கும் நிறுவனங்களைப் பொறுத்தவரையில் மிகவும் முக்கியமானதாகும். ஏனெனில், நாம் வாழும் இக்காலத்தில் அவை புதிய புதிய உருவங்களை அடைந்து வருகின்றன. கடந்த காலத்தில் மட்டுமல்லாமல், நிகழ்காலத்திலும், இப்போதுள்ள ஆட்சியை எவ்வாறு சீர்திருத்தலாமென்றும், இக்கால அமைப்பை எவ்வாறு வரையறுக்கலாமென்றும் ஆராய்ச்சி செய்து வருகின்றனர். இது பெரும்பாலும் அரசியல் தத்துவத்தின் அடிப்படையாய் இருக்கின்றது.

அரசியலமைப்பு என்பது சட்டம் வழியாக, சட்டத்திஞல் நிறுவப்பட்ட ஓர் அரசியற்சமூகத்தின் அமைப்பென்றும், அதில் சட்டம் குறிப்பிட்ட அலுவல்களையும் உரிமைகளையுமுடைய நிலையான நிறுவனங்களை நிறுவியுள்ளதென்றும் முன்னர்க் கூறினோம். அரசியல் அமைப்புக்குட்பட்ட அரசில் அரசாங்கத்தின் அதிகாரங்களும், ஆளப்படுவோரின் உரிமைகளும், இவ்விரண்டிற்கும் இடையேயுள்ள

தொடர்புகளும் ஒழுங்குபடுத்தப்படுகின்றன என்பதையும் விளக்கினேம். இத்தகைய அரசில் பழமையும் புதுமையும் ஒருங்கே இணைந்திருப்பதைக் காணலாம். இதில் கிரேக்க நாட்டின் தொன்மையும் இருபதாம் நூற்ருண்டின் புதுமையும் பிணைந்துள்ளன. பண்டைய கிரேக்க, ரோமானிய உலகிலேதான் ஏட்டுச் சான்றுகள் காட்டும் மிகப் பழமையான அரசைப் பார்க்கிரேம். ஆனல், அது இக்கால அரசுகளிலிருந்து பெரிதும் வேறுபட்டிருக்கிறது. மேலே கூறியபடி, இக்கால அரசியல் முறைமைக்குட்படுகை தேசீய உணர்ச்சி, பிரதிநிதித்துவ மக்களாட்சி ஆகிய இரு வகையான அடிப்படைகளிலே தோன்றி வளர்ந்தது. ஆனல், தேசீய உணர்ச்சி பிற்காலத்தில் பிறந்தது. அரசியல் அமைப்புக்குட்பட்ட தேசீய அரசு பழங்கால உலகெனும் விளை நிலத்திலே வளர்ந்திருக்க இயலாது. ஐரோப்பாவில் 15-ஆம் நூற்ருண்டில் உருவான அரசின் அமைப்பினுள்ளேதான் தேசீயம் ஒரு நடைமுறை அரசியல் திட்டமாக உருப்பெற்றது. ஏனெனில், நாம் ‘ மறுமலர்ச்சி ’ (Renaissance) என்று வழங்கும் அப் பெரிய மாற்றம் நிகழ்ந்த ஊழியிலே ஐரோப்பாவில் இக்கால அரசு முறை பிறந்தது. இலக்கியம், கலை, அறிவியல், கடல் கடந்த வாணிகம், அரசியல் ஆகிய துறைகளில் நடைபெற்ற தொடர்ச்சியான புரட்சிகளின் சிறப்பை நாம் உணரவேண்டுமானல், அதே காலத்தில் அரசில் என்ன மாற்றங்கள் நிகழ்ந்தன என்பதை அறியவேண்டும். ‘ மறுமலர்ச்சி ’ என்னும் சொல்லின் இலக்கணம் நமக்கு இங்கு அதிகமாகப் பயன்படுவதில்லை. ஏனெனில், அக்காலத்தில் கல்வித் துறையில் பழங்காலக் கருத்துகள் புத்துயிர் பெற்ற போதிலும், அரசியல் துறையில் அத்தகைய மாற்றம் அதிகமாகக் காணப்படவில்லை. பழையன கழிந்து புதியன புகுந்தன என்று ஒருவாறு கூறலாம். உண்மையில் அக்காலத்தில் வெளிப்புற இறைமைக்கொள்கைதான் உருவானது. அதனல், கடந்த கால இணைப்புகள் எல்லாம் துணிக்கப் பெற்றன. இம்மாபேரரசியல் மாற்றங்களைப்பற்றி இப்போது பார்ப்போம்.

## 2. கிரேக்க நாட்டில் அரசியல் முறைமைக்குட்படுகை

அரசியல் பிரிவுணர்ச்சிப்பாதை கிரேக்கர்களின் வாழ்க்கையின் முக்கிய இயல்பாய் இருந்தது. தம் ஆட்சி (Autonomy) அல்லது தம் கூட்டத்தின் சுதந்தரம் ஆகியவற்றில் கிரேக்கர்களுக்கிருந்த மதப்பற்றுப் போன்ற ஒருவித ஈடுபாடே இறுதியில் அவர்களை அழித்துவிட்டது. அவர்களுக்குத் தெரிந்ததெல்லாம் நகர அரசு (City State) ஒன்றுதான். அதன் பரப்பு ஆங்கில நாட்டு மாவட்டத்தின் (County) பரப்பை ஒத்தது ; அதன் மக்கள் தொகை பெரிய ஆங்கில நகரத்தின்

மக்கள் தொகையினும் குறைந்தது, கிரேக்கர்களின் அரசியல் நோக்கு முழுவதும் நகர அரசையே சார்ந்திருந்தது. அதனல், கிரேக்க நாட்டில் தோன்றிய அரசியல் தத்துவ வல்லுநர்களும் அரசை ஒரு குறுகிய நோக்குடனேதான் பார்க்க முடிந்தது. அரிஸ்டாட்டில் என்பார், அரசின் எல்லையளவைக் குறிப்பிடும்போது, அது பொருளாதாரக் காரியங்களில் வெளி உதவியை நாடாத அளவிற்குப் பெரிதாய் இருக்கவேண்டுமென்றும், எல்லாக் குடிகளும் ஓரிடத்தில் ஒன்ருகக் கூடுவதற்கேற்பச் சிறிதாய் இருக்கவேண்டுமென்றும் கூறுகிருர்.

'குடி' என்னும் பதத்திற்குக் கிரேக்கர்கள் வழங்கிய இவ்விளக்கத்திலிருந்து, அவர்கள் இக்கால அரசியல் முறைமைக்குட்படுகையின் இரண்டாவது கொள்கையாகிய மக்களாட்சியை எவ்வாறு கருதினுர்கள் என்பது தெரிகிறது. இக்காலத் தேசீய அரசு (Nation-State) மக்களாட்சியை உருவாக்கும்போது பிரதிநிதித்துவக் கொள்கையைப் புகுத்தவேண்டிய தேவை ஏற்படுகிறது. ஆனல், கிரேக்கர்கள் அத்தகைய கொள்கையை அறிந்ததே இல்லை. கிரேக்கக் குடி மகனெருவன் போர் வீரனுயும், நீதிபதியாயும், ஆட்சி அவையின் உறுப்பினனுயும் விளங்கினுன். கிரேக்க நகர அரசில் எல்லைப் பரப்பும், மக்கள் தொகையும் குறைந்த அளவில் இல்லையென்ருல், குடி மகன் அலுவல்களைத் தானே செய்திருக்க இயலாது. அவன் தானே நேரில் அலுவல்களை ஆற்றவேண்டியிருந்ததால், அதற்குத் துணையாக இன்னெரு நிறுவனம் தேவையாய் இருந்தது. அதுதான் இக்காலப் பண்பாடு பகைத்து வெறுக்கும் அடிமைத்தனம். உயிர் வாழ்வதற்குத் தேவையான பொருள்களைக் குடிமையுரிமை பெருத அடிமைகள் உற்பத்தி செய்து வந்ததால், பழங்காலக் கிரேக்கக் குடிமகன் தன் அரசியல் அலுவல்கள் அனைத்தையும் செய்ய முடிந்தது.

கிரேக்கர்களின் உறவு முறைகளெல்லாம் அரசிலே அடங்கியிருந்தன. அவர்கள் உடல் நல, ஆன்மிகத் தேவைகள் அனைத்தும் நகரத்திலே நிறைவெய்தின. ஆகவே, அரிஸ்டாட்டில் என்பவர் 'அரசு' என்ற சொல்லைப் பயன்படுத்திய போது, நாம் அரசு, சமூகம், பொருளாதார நிறுவனங்கள், மதம் என்று கூறும் அனைத்தும் அரசில் அடங்கியிருப்பதாகக் கருதினுர். அவர் எண்ணப்படி அரசென்பது அரசாங்க அமைப்பு மட்டுமன்று. அது ஓர் ஆன்மிகப் பிணைப்பு. மக்கள் உயிர் வாழ்வதற்காக மட்டுமல்லாமல், அவர்களுடைய வாழ்க்கையை வளம்பெறச்செய்யவும் அரசு வாழ்கிறது என அரிஸ்டாட்டில் கூறினுர். பிளேட்டோ, அரிஸ்டாட்டில் போன்ற கிரேக்கத்தத்துவ வல்லுநர்களின் கருத்துப்படி தனி மனிதனுக்கும் அரசுக்கும் இடையே யாதொரு முரண்பாடும் இருக்கவே இயலாது.

அதற்கு மாருக, தனி மனிதன் தலைசிறந்த தன் நோக்கங்களை அரசு வாயிலாகவே நிறைவேற்ற இயலும். மேலும், ஒருவன் நல்ல குடிமகனுய் இருந்தாலன்றி, நல்ல மனிதனுய் இருக்க இயலாது.

சட்டங்களுக்குப் பணிவதே—அதாவது அரசியல் அமைப்பின் படி நடப்பதே—நல்ல குடிமகனுக்கு அடையாளமென அந்த அறிஞர்கள் எண்ணினுர்கள். தனி மனிதனின் உணர்ச்சிப் போக்கைக் கட்டுப்படுத்தி, பொது நன்மையை வளர்ப்பது சட்டத்தின் அலுவல். பிளேட்டோவும், அரிஸ்டாட்டிலும் தாம் விரும்பிய அரசியல் அமைப்புகளை விளக்கும்போது அரசியற்கல்வியின் சிறப்பை வலியுறுத்துகின்றனர். ஏனெனில், கல்வியறிவுடைய குடிகள் வழியாகத்தான் அரசியல் குழப்பங்களைத் தவிர்க்க இயலும். ஏதன்ஸில் மக்களாட்சி கட்டுப்பாடின்றி வளர்ந்தது காரணமாக, அங்கு ஆட்சி குலைந்த நிலை ஏற்பட்டதெனப் பிளேட்டோவும் அரிஸ்டாட்டிலும் கருதினர். ஏதன்ஸின் சீர்குலைந்த் சுதந்தரத்தில் குற்றங்காணும்போதுதான் அரசியல் தத்துவத்திலே தலைசிறந்த படைப்புகளாகிய பிளேட்டோவின் ‘ குடியரசு ’ (Republic), அரிஸ்டாட்டிலின் ‘ **அரசியல்** ’ (Politics) என்னும் நூல்கள் பிறந்தன. அரசியல் அறிவு நிரம்பிய உயர்குடியாட்சியை நிறுவுவதே குறையைக் களையும் வழி எனப் பிளேட்டோ தமது நூலில் கூறுகிருர். கடுமையான பயிற்சியினுல் ஆளத் தகுதி பெற்ற இந்தக் ‘ காவலர் ’ (Guardians) குழாம் அவர் விரும்பிய உயர்நோக்குடைய அரசை உருவாக்க வழிகோலும். பாமரக் கும்பலின் வல்லாட்சியினின்று விடுதலை பெற அரிஸ்டாட்டில் ‘ **பாலிட்டி** ’ (Polity) என்ற ஓர் நடுத்தர வகுப்பாரின் அரசாங்கத்தை அமைக்க விரும்பினுர்.

ஆனுல், அவர்கள் கூறிய இருவழிகளும் செயற்படுத்தப்படாமையினுல், அவற்ருல் கிரேக்க நகர அரசை அழிவினின்று காக்க இயலுமா என்பது எண்பிக்க இயலாமல் போயிற்று. கிரேக்க நாட்டின் முழுச் சுதந்தரத்தை என்றும் நிலைநாட்டக்கூடிய ஒரே வழியைக் கிரேக்க நூலாசிரியர்கள் கண்டுபிடிக்கவில்லை. ஆயினும், அவர்கள் அதை நிலைநாட்ட நடைமுறையில் ஒரு முயற்சி செய்தனர்; அதாவது, பரந்த ஓர் அரசியற்கூட்டமைப்பை ஏற்படுத்த முயன்றனர். இதற்காக முதலில் ஏதன்ஸ் சம அரசுகளின் கூட்டமைப்பொன்றை நிறுவியது. இது ‘ **டிலாஸ் கூட்டமைப்பு** ’ (Confederacy of Delos) என வழங்கப்பட்டது. ஆனுல், ஏதன்ஸ் இதைத் தனது பேரரசாக மாற்றி, பிற அரசுகளின்மேல் தனது தலைமை அதிகாரத்தைத் திணிக்க முயன்றபோது, பல அரசுகள் ஸ்பார்ட்டாவின் தலைமையில் ஒன்று சேர்ந்து அதை எதிர்த்தன. ஏனெனில், ஏதன்ஸ், கிரேக்கர்கள் சுதந்தர அரசின் அடிப்படையெனவும், உண்மையான இன்பத்தின் ஒரே

ஆதாரமெனவும் கருதியவற்றையெல்லாம் அழிக்க முயன்றது. அதன் பிறகு நிகழ்ந்த பிலப்பொனீசியப் போர் (கி. மு. 431—434) என்ற உள் நாட்டுப் போரில் அவர்கள் தாங்களே தங்களுக்கு இழைத்துக் கொண்ட இன்னல்களிலிருந்து ஒரு போதும் மீளவில்லை. பிறகு அவர்கள் 2-ஆம் பிலிப்பு, மகா அலெக்ஸாண்டர் ஆகியோரின் ஆட்சியில் படையெடுத்து வந்த மாசிடோனிய வீரரின் முன் விரைவில் வீழ்ச்சியுற்றூர்கள்.

கிரேக்க அரசியல் முறைமைக்குட்படுகையில் இருந்த குறைபாடு என்னவென்ருல், அந்த அரசாங்க அமைப்பு நிலைத்து நிற்கத் தேவையான தன்மை அதில் காணப்படவில்லை. அதாவது, காலப்போக்கிற்கேற்ப மாறி, புதிதாகத் தோன்றும் தேவைகளுக்கெல்லாம் வழி காணும் திறமை அதற்கு ஏற்படவில்லை. ஆனுல், கிரேக்கர்களின் அரசியல் முறைமைக்குட்படுகை இவ்வாறு மறைந்துபோனபோதிலும் அவர்களது அரசியல் இலட்சிய வாதம் (Political Idealism) நிலை பெற்று நின்றது. இந்தப் பண்டைய முயற்சியின் தூண்டுதலின்றி நமது இக்கால அரசியல் நிறுவனம் இன்றிருக்கும் நிலையை எவ்வாறு அடைந்திருக்க இயலும் என்று பார்ப்பது அரிது.

## 3. ரோமானிய அரசியலமைப்பு

மாசிடோனிய வெற்றிக்குப் பிறகு மாற்றியமைக்கப்பட்ட கிரேக்க நாடும், அலெக்ஸாண்டர் நிறுவிய பேரரசின் பெரும்பகுதியும், விரிந்துகொண்டே சென்ற ரோமானியப் பேரரசின் ஆட்சி எல்லைக்குள் நாளடைவில் அடங்கிவிட்டன. ஆகவே, அரசியல் முறைமைக்குட்படுகையின் வரலாற்றை வரையும் போது நாம் அடுத்தபடியாக ரோமானிய நாட்டைப் பார்க்கவேண்டும். தொடக்கத்தில் ரோமானிய அரசும் ஒரு நகர அரசாகவே இருந்தது. ஆனுல், தொடக்கக் காலத்திலிருந்தே அதைப் பகை அரசுகள் அச்சுறுத்தி வந்தமையால், அது தனது ஆட்சியைப் பரப்ப வேண்டிய தேவை ஏற்பட்டது. ரோமானியப் பேரரசு நாகரிகமடைந்த நாடுகளிலெல்லாம் பரவும் வரை இப்போக்கு நிற்கவில்லை. அரசியல் முறைமைக்குட்படுகையின் வரலாற்றில் ரோம் எவ்வளவு சிறப்பான இடம் பெறுகின்றதென்ருல், இக்கால உலகில் பிரிட்டிஷ் அரசியலமைப்பு எத்தகைய உயரிய இடம் வகிக்கின்றதோ, அத்தகைய இடத்தையே ரோமானிய அரசியலமைப்பும் பண்டைய உலகிலே பெற்றிருந்தது. லார்டு பிரைஸ் என்பார், 'டைபர் நதிக்கரையில் அமைந்த குடியரசு, ஸரே (Surrey) அல்லது ரோட் (Rhode) தீவு இவற்றின் அளவேயுள்ள நாட்டுப்புற நிலப்பகுதி சூழ்ந்த ஒரு நகரம்; இதிலிருந்தே ஓர் உலகப் பேரரசு வளர்ந்தோங்கியது. அதன் வீழ்ச்சி வரையில் அப்

பேரரசின் அமைப்பில் அச்சிறு குடியரசு தோன்றுவதற்குக் காரண மான நிறுவனங்களின் அடையாளங்கள் அழியாமல் இருந்தன.... இங்கிலாந்தில், முதலில் குல முறைப்படியும் பிறகு நிலமானிய முறைப்படியும் தோன்றிய முடியரசு சிறிது சிறிதாக வளர்ந்து, பிறகு வேருெரு வகையான இரண்டாவது உலகப் பேரரசாய்ப் பரவியது. அதே காலத்தில் பல போராட்டங்கள் முயற்சிகள் ஆகியவை காரணமாகவும், தெளிவற்ற சில நோக்கங் களினுல் உந்தப்பட்டும் பழைய அரசாங்க முறையானது படிப்படியாக மாறிப் பெயரளவில் குடியரசு முறையைப் பெற்றது,' என்கிருர். ஆனுல், அவர் குறிப்பிடுவது போல ஓரளவு உயர்குடியாட்சியும், (Aristocracy) ஓரளவு மக்களாட்சியும் (Democracy) கலந்த குடி யரசிலிருந்து ரோம் ஒரு வல்லரசாய் மாறியது. பிரிட்டனின் வளர்ச்சி அதற்கு நேர் மாருனது. அது வலிமை பொருந்திய ஒரு முடியரசிலிருந்து, உண்மையில் ஓரளவு மக்களாட்சியும் ஓரளவு செல்வராட்சியும் (Plutocracy) கலந்த ஒரு குடியரசாய் மாறியுள்ளது.

முதலில் ரோமானிய அரசியலமைப்புத் திட்டமாக வரையறுக்கப் பட்ட ஓர் அரசாங்க முறையாய் விளங்கியது. ஆயினும், அவ்வா றிருந்ததாக எங்கும் எழுதப்படவில்லே. இங்கிலாந்தின் அரசிய லமைப்பைப் போலவே ரோமானிய அரசியலமைப்பும் இருந்தது. அதில் 'மக்கள் தங்கள் நினைவில் வைத்திருந்த அல்லது ஏடுகளில் எழுதி வைத்திருந்த முன் நிகழ்ச்சிகளும், வழக்கறிஞர், அரசியல் வல்லுநர் ஆகியோர் மொழிந்த ஆழ்ந்த கருத்துகளும், பழக்கங் களும், அரசாங்க முறை பற்றிய கருத்துகளும் நம்பிக்கைகளும், ஒரு சில சட்டங்களும்' அடங்கியிருந்தன. முதலில் ரோம் ஒரு முடி யரசாய் (Monarchy) இருந்தது. பிறகு அதன் அரசர்கள் வெளி யேற்றப்பட்டார்கள். ஏறக்குறையக் கி. மு. 500இல் குடியரசு தோன்றியது. அதன் பிறகு **பெட்ரீஷியர்** (Patricians), **பிளெபியர்** (Plebeians) என்ற இரு வகுப்பினரிடையே நீண்ட போராட்டம் நிகழ்ந்தது. ஏறக்குறையக் கி. மு. 300இல் அப்போர் முடிவடைந்தது. அதன் விளைவாகப் பிளெபியர்களுக்குச் சம உரிமை வழங்கப்பட்டது. அதை மேற்பார்வையிட **டிரிப்யூன்கள்** (Tribunes) என்ற அலுவலர் கள்தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இந்தக் குடியரசு அரசியலமைப்பிலே அரசாங்கத்தின் மூன்று இயல்புகள் இருந்தன. அவற்றுள் ஒவ்வொன் றும் ஒன்றையொன்று கட்டுப்படுத்திச் சமநிலை ஏற்படுத்துவதற்கென அமைந்திருந்தது. பழைய அரசர்களிடமிருந்து பெற்ற முடியரசின் இயல்பானது கான்சல்களின் (Consuls) பதவியில் காணப்பட்டது. கான்சல்கள் இருவர் ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்களுள் ஒருவரின் செயலைத் தடுக்க மற்றவருக்கு உரிமையிருந் தது. இரண்டாவது, உயர்குடியாட்சியின் இயல்பு செனட்டில்

(Senate) காணப்பட்டது. ஒரு காலத்தில் செனட்டு, பெருஞ்சட்ட ஆக்க (legislative) அதிகாரங்களைப் பெற்றிருந்தது. மூன்ருவது, மக்களாட்சியின் இயல்பானது மக்களின் கூட்டங்களிலே காணப் பட்டது. அக்கூட்டங்கள் நிலம் பிரிவு அல்லது மக்கள் தொகுதி ('கியூரியா', நூற்றுவர், குலம்) என்ற பிரிவிற்கேற்ப மூன்று வகை யான மன்றங்களாய்க் கூடின. இம்மூன்று வகை அதிகாரப் பிரிவுக் கொள்கை, பேரரசின் வீழ்ச்சி வரை நிலை பெற்றிருந்தது. ஆனல், ரோம் விரிவடைந்த போது இது மறையத் தொடங்கியது.

ரோமானிய அரசு இருபத்திரண்டு நூற்ருண்டுகளாக (அதாவது அந்நகரம் நிறுவப்பெற்றதாகக் கூறப்படும் கி. மு. 753 முதல் கி. பி. 1453இல் கான்ஸ்டான்டிநோப்பிள் வீழ்ச்சியடைந்தது வரையில்) நிலைத்திருந்ததென ஒரு வகையில் கூறலாம். அக் காலத்தில் அதன் அரசியலமைப்பில் பல மாற்றங்கள் ஏற்பட்டன. ரோமானிய அரசியல் அமைப்பு ஒரு நகர அரசின் அரசியல் அமைப்பென்பதை மறத்தலாகாது. நகர அரசென்ற நிலை மாறி, (அக்கால நாகரிக எல்லைக்குட்பட்ட) ஓர் உலக அரசாய் வளர்ச்சி யடைந்ததும், அதன் குடியரசு அமைப்புப் பயனற்றுப் போயிற்று. இங்கேயும், கிரேக்க நாட்டைப்போல, இக்கால அரசி யல் முறைமைக்குட்படுகையின் இன்றியமையாத இயல்புகளாகிய பிரதிநிதித்துவ ஜனநாயகமும் (Representative democracy) தேசிய உணர்ச்சியும் காணப்படவில்லை. கிரேக்க நகர அரசுகளில் இருந்தது போலவே, ரோமிலும் மக்களாட்சி நேர் முகமான மக்களாட்சி (direct democracy) யாய் இருந்தது. பிரதிநிதித்துவக் கொள்கை இரு நாடுகளிலும் தோன்றவில்லை. ஆகவே, குடியுரிமையை இந்த நேர்முகமான பொருளில் பயன்படுத்த இயலாததும் தவிர, காலப் போக்கிலே ரோமானியப் பேரரசில் சேர்க்கப்பட்ட மக்களுக்கும் அதை வழங்க இயலாது போய்விட்டது. மேலும், ரோமானிய அரசில் பல வகையான மக்கள் வாழ்ந்ததால் அங்கு ஒரு நாட்டினம் உருவாக இயலவில்லை. ஒவ்வோர் இனமும் தன் நிலப்பிரிவின்மேல் கொண் டிருந்த முதிராத பற்றை அழித்துப் 'பிரித்து ஆள்வதே' ரோமானிய முறையாய் இருந்தது. அது நாட்டினங்கள் தோன்றுவதைத் தடுத்தது. ஏனெனில், பிரதிநிதித்துவ முறையைப் புகுத்தாமல் ரோம் தனது ஆட்சிக்குட்பட்ட மக்களுக்கு அரசாங்கத்தில் பங்கு பெறும் உரிமையை வழங்க இயலவில்லை. இது ரோமில் ஒரு போதும் நிகழ்ந்ததுமில்லை.

இவ்வாறு பழைய குடியரசு அரசியலமைப்பு வழக்கொழிந்து போனது. கி. மு. இரண்டாவது நூற்ருண்டில் ரோம் கிழக்கு நோக் கிப் பரவத் தொடங்கியதும், அதன் அரசியலமைப்பு முடியரசு, உயர் குடியாட்சி, மக்களாட்சி ஆகிய மூன்றையும் சமநிலைப்படுத்த

வேண்டும் என்ற கருத்து மறைந்துவிட்டது. ஆனல், அந்நூற்றுண்டின் நடுப்பகுதியிற்கூட ரோமில் பிணையாக வைக்கப்பட்ட 'பொலிபியஸ்' (Polybius) என்ற கிரேக்கன் இச்சமநிலை காரணமாகவே அரசாங்கம் நிலைபெற்றிருந்ததெனக் கூறினன். இதுதான் பிற்காலத்தில் எழுந்த அரசியற்கொள்கையையும் நிறுவனங்களேயும் ஓரளவு பாதித்தது. ஆனல், அந்நாளிலிருந்து ரோமானியக் குடியரசென்பது உண்மையில் செனட்டின் ஆட்சியாகவே இருந்தது. ஆயினும், எல்லா அதிகாரங்களும் இறுதியில் மக்களிடமிருந்தே பிறக்கின்றன என்னும் கொள்கை என்றுமே நிலவி வந்தது. நெருக்கடிக் காலங்களில் தாற்காலிகமாகச் சர்வாதிகார ஆட்சியை ஏற்படுத்துவதற்கு வழி வகுக்கப்பட்டிருந்தது. கிறித்துப் பிறப்பதற்கு முன் இறுதி நூற்றுண்டில் இத்தாலியில் உள் நாட்டுக்குழப்பம் பரவியிருந்த போது, **மேரியஸ்** (Marius), **ஸல்லா** (Sulla) போன்ற வெற்றி வீரர்களான போர்ப்படைத் தலைவர் சிலரின் சர்வாதிகாரச் செயல்களை அரசியலமைப்பென்னும் போர்வையால் மறைப்பதற்கு இம்முறை கையாளப்பட்டது. இறுதியில் **ஜூலியஸ் ஸீஸர்** கி. மு. 48இல் **பாம்பேயை** (Pompey) முரியடித்த போது, செனட்டுத் தனது வலுவின்மை காரணமாக அவரை ஆயுள் முழுவதற்கும் சர்வாதிகாரியாக நியமித்தது. அப்போது '**இம்பீரியம்**' என்ற அரசனது வரையிறந்த அதிகாரம், பெயரில் இல்லையெனினும், உண்மையில் பிறந்ததெனக் கூறலாம்.

ரோமானியப் பேரரசின் அதிகாரக் கோட்பாட்டைப் பேரரசன் ஜஸ்டீனியனின் '**இன்ஸ்டிடியூட்டு**'(Institute) '**டைஜஸ்ட்**' (Digest) என்ற சட்டவியல் தொகுப்புகளில் காண்கிறோம். ரோமானியச் சட்டத்தைத் தொகுத்த இப்பேரரசர், தமது ஆட்சிக் காலத்தின் பெரும்பகுதியில் கான்ஸ்டான்டிநோப்பிளைத் தலைமையாகக் கொண்ட கிழக்கு ரோமானியப் பேரரசையே ஆண்டுவந்த போதிலும், தம்மை உலக அரசரெனக் கூறி வந்தார். இந்தச் சட்டத் தொகுப்பின்படி, சட்டமியற்றும் அதிகாரம் ரோமானிய மக்களிடமே இருந்தது. (ஆனல், அவர்கள் அதை ஐந்து நூற்றுண்டுகளுக்கு மேலாகப் பயன்படுத்தியதில்லை.) பேரரசர் தாம் செலுத்தி வந்த உரிமைகளை மக்களிடமிருந்தே பெற்றுர். மக்கள் தங்கள் உரிமைகளை வழங்கிய போது, அவற்றைக் கால வரம்பிற்குட்பட்டனவாகவே வழங்குகிருர்கள். புதிய அரசர் ஒருவர் பதவிக்கு வரும்போதெல்லாம் அது புதுப்பிக்கப்பட்டதென எண்ணினுர்கள். பேரரசின் வரலாற்றில் மக்களின் அதிகாரங்கள் ஒருபோதும் முறைப்படி அழிக்கப்படவில்லை. ஆனல், அவை காலப்போக்கிலே மறைந்தொழிந்தன. மக்கள் தங்கள் உரிமைகளைப் பேரரசருக்கு வழங்கினுர்கள் என்ற இந்தக் கற்பனைக்கு ரோமானிய அரசியலமைப்பின் நெகிழுந்தன்மையே (Flexibility

காரணமாகும். இக்கற்பனையின்படி பேரரசர்கள் முதலிலிருந்தே (கி. மு. 31 முதல் கி. பி. 14 வரை ஆண்ட **அகஸ்டஸ்** கால முதல்) பழைய குடியரசின் பல வகை உரிமைகளையும் பெற்ற அதிகாரிகளாக மட்டும் இருந்தார்கள். இது இங்குக் குறிப்பிடத்தக்கது. ஏனெனில், குடியரசுக் காலத்தில் **கான்சல், பிரீட்டர்** (Praetor) போன்ற அதிகாரிகளுக்கு அரசியலமைப்பு அதிக அதிகாரம் வழங்கியிருந்தது. அவர்கள் அதிகாரங்கள் எல்லாம் ஒருவருக்கே அளிக்கப்பட்டிருந் தனவென்றும், அவரது பதவிக்காலத்திற்கு ஒரு வரம்பில்லையென்றும் கருதப்பட்டதால், பேரரசரின் பதவியானது பழைய குடியரசிலுள்ள அதிகாரிகளின் பதவிகளின் தொகுப்பாகவும், அதற்கு ரோமானிய மக்களாட்சியின் உரிமைகளெல்லாம் வழங்கப்பட்டிருந்ததாகவும் தோன்றியது. மேலும், செனட்டுத் தொடர்ந்து கூடி வந்ததால் குடியர சின் அமைப்புகள் நிலைபெற்றிருந்தன என்பது புலப்பட்டது. ஆனால், பேரரசின் பிற்காலத்தில் செனட்டுத் தனது ஆற்றல் முழுவதையும் இழந்து, பேரரசரின் விருப்பத்தைப் பதிவு செய்யும் அலுவலகமாய் மாறியது.

இவ்வாறு ரோமானிய அரசியலமைப்பு முடியரசு, உயர்குடியாட்சி, மக்களாட்சி ஆகிய மூன்றின் இயல்புகளும் ஒருங்கே இயைந்த ஒரு கலப்பு அமைப்பாய்த் தொடங்கி, இறுதியில் பொறுப்பற்ற தன்னரசாய் (autocracy) முடிவடைந்தது. ஆயினும், இது பேரரசின் வளர்ச்சியில் நிகழ்ந்த தடுக்க இயலாத ஒரு நிகழ்ச்சியாகும். ஏனெனில், விரிந்த நிலப்பரப்பும், பல வகையான நாட்டினங்களும், வெவ்வேறான தனி நலங்கருதும் கூட்டங்களுமுள்ள பேரரசில் விரைவாகவும் திறமையாக வும் செயலாற்ற வல்ல ஒரு நிறுவனம் தேவையாய் இருந்தது. இதைச் செய்ய முழு இறைமை அதிகாரம் பெற்ற ஒருவராலேதான் இயலும். நாம் முன்னே கூறியது போல, இதைத் தவிர வேறு எவ்வகையான முறையும் ரோமானிய உலகை மிகு விரைவில் சீர் குலைத்து, நாம் இன்று காணும் பல்வகையான அரசுகளைப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னே தோற்றுவித்திருக்கும்.

இக்காலச் சர்வாதிகாரிகளாகிய ரஷ்ய மன்னர் **ஜார்**, பிரஷ்ய அரசர்கள் போன்றவர்களின் அதிகாரங்கள் கட்டுப்படுத்தப்பட்டிருந் தது போல, ரோமானியப் பேரரசரின் வரம்பற்ற அதிகாரம் வரையறுக் கப்படவில்லை. ஏனெனில், பின்வந்த அரசர்கள் ஆண்ட மக்களிடையே ஒரு வகையான ஒற்றுமை நிலவியது. ஆயினும், ரோமானியப் பேரரசில் நாட்டுணர்ச்சி அறவே இருந்ததில்லை. ரோமானியக் குடியரசின் மக்கள் என்றுமே நகர அரசியலமைப்பாய் இருந்த தங்கள் அரசியலமைப்பிற்கேற்பப் பல உரிமைகளை அனுபவித்து வந்தார்கள்.

ஆனால், அவற்றைப் பற்றிப் பேரரசின் ஆட்சிக்குட்பட்டிருந்த மக்களுக்கு ஒன்றும் தெரியாது. ஆகவே, தன்னரசு தோன்றுவது எளிதாய் இருந்தது. பேரரசில் குடியரசின் அமைப்பு நிலவியதாகக் கற்பனை செய்யப்பட்டதால், அகஸ்டஸுக்கும் முற்காலப் பேரரசர் பிறர்க்கும் பெரிதும் நன்மை விளைந்தது. அதனால், அவர்கள் ஜூலியஸ் ஸீஸருக்கு நிகழ்ந்த பெருங்கேடு தங்களுக்கும் நிகழாதபடி தடுத்துக்கொண்டார்கள். ஆயினும், பேரரசரின் பதவி அரசியலமைப்பின் அடிப்படையில் நிறுவப்படாததால், பிற்காலத்தில் பலர் அரியணைக்காகப் போட்டியிடுவதற்கு வழி ஏற்பட்டது. ரோம் குடியரசிலிருந்து பேரரசாய் மாறிய காலத்தில் உண்மையில் இறைமை அதிகாரத்திற்கு இருப்பிடமாய்த் திகழ்ந்த பேரரசர், இறுதியில் அந்த அதிகாரத்தை உரிமை வாயிலாகவே பெற்றார் எனக் கருதப்பட்டது. 'அரசனுக்கு எது விருப்பமோ, அதுவே சட்டமாகும்,' என்று ஜஸ்டீனியன் கூறியது அவரது காலத்திற்கு முழுவதும் பொருந்தும். ஆயினும், அச்சட்டத்தின் எல்லை கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் பேரரசு சீர்குலைவதற்கு முன்பிருந்ததைவிடக் குறுகியிருந்தது.

ரோமானிய அரசியல் முறைமைக்குட்படுகையின் நிலையான பயன்கள் என்ன? முதலாவது, ரோமானியச் சட்டம் ஐரோப்பாக் கண்டத்தின் சட்டத்துறை வரலாற்றில் பெரியதொரு மாற்றத்தை உண்டு பண்ணியது. பேரரசின் மேற்குப் பகுதியின்மேல் படையெடுத்து வந்த டியூட்டானியரின் வழக்கங்களும் சட்டங்களும் ரோமானியச் சட்டத்தொகுதியுடன் கலந்து ஒன்றாயின. இக்கலப்பின் விளைவாகப் பிறந்த சட்ட முறைகளே இன்னும் மேற்கு ஐரோப்பாக் கண்டத்தில் நிலைத்து நிற்கின்றன. இரண்டாவது, ரோமானியர்களுக்கு ஒழுங்கு, ஒற்றுமை ஆகியவற்றின்மேல் எவ்வளவு ஆழ்ந்த பற்றிருந்த தென்றால், அதன் விளைவாக இடைக்காலத்தில் (Middle Ages) வாழ்ந்த மக்கள் பிரிவினைப் போக்குகளுக்கிடையிலும் ஒற்றுமை உணர்ச்சிகளினால் உந்தப்பட்டு வந்தார்கள். ரோமானியர் ஒற்றுமையை ஆர்வத்துடன் விரும்பியதாலும், இடைக்காலத்தில் அது மக்களின் குறிக்கோளாகத் தொடர்ந்து துலங்கியதாலும், இக்காலத்தில் போரைத் தடுப்பதற்கென ஒரு பன்னாட்டு நிறுவனத்தை அல்லது எல்லா நாடுகளுக்கும் மேலானதொரு நிறுவனத்தை நிறுவவேண்டுமென முற்போக்கு வாதிகள் விழைகின்றார்கள் எனக் கூறலாம். மூன்றாவதாக, பேரரசனின் சட்டமுறை இறைமை (legal sovereignty) என்ற கருத்து, ஒரு புறம் பேரரசனின் விருப்பமே சட்டமென்றும், மறு புறம் அவனுடைய அதிகாரங்கள் வழங்கப்பட்டவை என்றும் கூறியது. இக்கருத்து, பல நூற்றாண்டுகள் வரை நிலைத்து நின்றது. அது காரணமாகவே அரசாங்கத்திற்கும் ஆளப்படுவோருக்கும் இடையேயுள்ள தொடர்பு பற்றி இடைக்காலத்தில் இரு வேறு கருத்து

கள் தோன்றின. இடைக்காலத்தின் தொடக்கத்தில் மக்கள் குருட்டுத் தனமாக அதிகாரத்திற்குப் பணிந்ததற்கும் அதுவே காரணமாகும். அதன் விளைவாகவே அக்காலத்தின் இறுதியில் மற்றொரு கொள்கை தோன்றியது. அதாவது, மக்கள் முதலில் இறைமை அதிகாரத்தைப் பேரரசர்களுக்கு வழங்கியதால், பிறகு அதை அவர்களிடமிருந்து உரிமையுடன் பெற்றுக்கொள்ள இயலும். இக்கருத்துதான் இக் காலத்தின் தொடக்கத்தில் தோன்றிய மக்களாட்சியின் தத்துவ முறையான ஆதாரமாய் விளங்கியது.

## 4. இடைக்காலத்தில் அரசியல் முறைமைக்குட்படுகை

நான்காம் ஐந்தாம் நூற்றுண்டுகளில் ரோமானிப் பேரரசின் மேற்குப் பகுதியின்மேல் மிலேச்சர்கள் படையெடுத்து வந்ததன் விளைவாக ரோமானிய அரசியல் நிறுவனங்கள் தகர்ந்தன. ஆயினும், கான்ஸ்டான்டிநோப்பிளைச் சுற்றிக் குறுகிக்கொண்டே சென்ற கிழக்குப் பகுதியில் பேரரசர்களின் உறுதி குலைந்த ஆட்சி நிலவிய காலத்தில், ரோமானிய அரசியல் நிறுவனங்கள் தொடர்ந்து செயலாற்றி வந்தன. இந்தப் பிற்கால ரோமானிய (அல்லது பைசன்டைன்) பேரரசு காலம் போகப்போக ஒருங்கே நெருங்கித் தனித்து நின்ற அரசாய் மாறியது. இந்நிலையில் இது மேற்கு ஐரோப்பாவுடன் கொண்டிருந்த எல்லாத் தொடர்புகளையும் இழந்து, இறுதியில் 1453-ஆம் ஆண்டு துருக்கியர் இதன் தலைநகரைக் கைப்பற்றியதும் அவர்களுக்கு இரையானது. மேற்கில் மிலேச்சர்கள் ரோமானியச் சட்டத்தின் பொது நோக்கைக் குலைத்த பிறகு அங்கு ஒற்றுமைக்கு வழியேற்படவில்லை. ஆயினும், உலகப் பேரரசெனும் சட்டமுறையான ஒரு கொள்கை நிலவி வந்தது. இக்கொள்கையிலிருந்துதான் புனித ரோமானியப் பேரரசு தோன்றியது.

இப்பேரரசைக் கி. பி. *800*இல் **மகா சார்லஸ்** மன்னர் நிறுவினர். ஆனல், இதன் நிறுவனம் பழைய ரோமானியப் பேரரசிலிருந்து பெரிதும் வேறுபட்டிருந்தது. இது ரோமானியப் பேரரசினின்று எல்லைப் பரப்பிலும், இனவழியிலும், சமூக நிலையிலும், அரசியல் முறையிலும், ஆன்மிகத் துறையிலும் எவ்வளவு வேறுபட்டிருந்ததென்றல், பழைய ரோமானிய அரசியல் அமைப்பு முறை இதில் முற்றிலும் மறைந்துவிட்டது எனலாம். டியூட்டானியப் பண்புகள் ரோமானிய முறையைப் பக்குவப்படுத்தும் ஆற்றல் பெற்றிருந்தன. மேலும், மேற்கு ரோமானியப் பேரரசின் பிற்காலத்தில் வளர்ச்சி பெற்ற கத்தோலிக்கத் திருச்சபை (Catholic Church) அதை ஆதரித்தது. பழைய ரோமானிய அதிகாரக் குவிப்பு முறை

(Centralism) தளர்ந்துகொண்டிருந்த அக்காலத்தில், திருச்சபை எங்கும் பரவிய அதிகாரம் பெற விழைந்தது. அதனுல், அரசின் அதிகாரத்திற்கே இடையூறு விளையும் போலத் தோன்றியது. மகா சார்லஸின் பேரரசு தனக்கென்று தக்க அரசியலமைப்பொன்றை உருவாக்கிக்கொள்வதற்கு முன் அவருக்குப் பின் அரியணை ஏறியவர்கள் தங்கள் ஃபிராங்கு மரபுரிமைக்கேற்ப இதைத் தங்களுக்குள் கூறு போட்டுக்கொண்டார்கள். பிறகு ஒன்பதாம், பத்தாம் நூற்றுண்டுகளில் நார்ஸ் (Norse) படையெடுப்புகள் நிகழ்ந்த போது இது சீர்குலைந்து சிதறியது. இதன் பிறகு புனித ரோமானியப் பேரரசு **சார்லமேன்** காலத்தில் பெற்றிருந்த பொலிவெல்லாம் இழந்து ஜெர்மனியின் எல்லைக்குள்ளே அடைபட்டுக் கிடந்தது. அப்போது இது இத்தாலியின்மேல் செலுத்தி வந்த அதிகாரம் தளரத் தொடங்கியது.

அக்காலத்தில் ஐரோப்பா முழுவதும் நிலமானிய முறை (Feudalism) விரைவாகப் பரவியது. இதை ஒரு வகையான இடைக் கால அரசியல் முறையெனக் கூறலாம். ஏனெனில், இது அக்காலத்தில் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்ட சமூக, அரசியல் முறையாக ஓரளவு ஒழுங்குபடுத்தப்பட்டிருந்தது. நிலத்தைப் பல பகுதிகளாகப் பிரித்துக்கொடுத்தல் இதன் சிறப்பியல்பாகும். ‘ஒவ்வொருவனும் ஒரு நிலப்பிரபுவின் கீழிருக்க வேண்டும்,’ என்பது இதன் பொதுவான கொள்கை. இது இடைக்காலப் பேரரசின் தெளிவற்ற உரிமைகளை அதிகரிக்கச் செய்த போதிலும், அவற்றை உண்மையில் நிலை நாட்டவில்லை. ஏனெனில், அப்போது ஐரோப்பிய சமூகம் ஒரு படிமரபாகக் கருதப்பட்டது. ஆயினும், அக்கருத்தை உண்மையெனச் சான்றுகள் மூலம் எண்பிக்க இயலவில்லை. அந்த அமைப்பின் உச்சியில் ‘கடவுளின் கீழாள்’ (God’s Vassal) என எண்ணப்பட்ட பேரரசர் அமர்ந்திருந்தார். பெருநிலப் பிரபுகளுக்கு அளவிறந்த அதிகாரம் வழங்கியது, நிலமானிய முறையினுல் விளைந்த தீங்காகும். மேலும், அதனுல் ஒன்றுபட்ட அரசு உருவாதல் அவர்களின் எண்ணிக்கைக்கேற்பத் தடைபட்டது. ஆகவே, இடைக் காலத்தில் வலிமை மிக்க அரசர்கள் எல்லா அதிகாரங்களையும் தாங்களே பெற்று, அதனுல் நிலப்பிரபுகளின் மேலாண்மையை நசுக்குவதற்கு நல அரசாங்கத்தின் ஆற்றலை வளர்க்க முயன்றுர்கள்.

இவ்வாறு நிலமானிய முறையானது இடைக்காலத்தின் குழப்ப நிலைக்கும் இக்கால அரசின் ஒழுங்கான அமைப்பிற்கும் இடையேயுள்ள பிளவை இணைக்கும் தவிர்க்க முடியாததொரு மாற்றமாகக் காணப்படுகிறது. இத்தகைய அதிகாரக் குவிப்பின் தொடக்கங்கள் முதலில் ஐரோப்பாவின் மேற்கு எல்லையிலே தோன்றின. குறிப்பாக

இங்கிலாந்திலும், பிரான்ஸிலும், ஓரளவிற்கு ஸ்பெயினிலும் 11-ஆம் நூற்றுண்டிலிருந்து அரசர்கள் எல்லா அதிகாரத்தையும் தாங்களே பெற்று, நிலமானியப் பகுதிகளைக் கட்டுப்படுத்தி, இறுதியில் அவற்றை அழிக்க முயன்று வந்தார்கள். இக்கால அரசியல் முறைமைக்குட் படுகையின் வளர்ச்சிக்குத் தேவையானவையென நாம் மேலே குறிப் பிட்ட தேசீயம், பிரதிநிதித்துவ மக்களாட்சி என்ற இரு கொள்கை களும் இந்த இரு நாடுகளிலும் முதலில் மங்கலாய்த் தோன்றின. இங்கி லாந்து புனித ரோமானியப் பேரரசின் (Holy Roman Empire) ஆட்சிக்குள் என்றுமே இருந்ததில்லை. பிரான்ஸ், சார்லமேனின் அரசு சிதைந்த பிறகு அதன் எல்லைக்குள் இருக்கவில்லை. போப்பாண்ட வரின் அதிகாரத்தைப் பொறுத்த வரையில் இரு நாடுகளும் சுதந்தரத் துடன் வாழ்ந்தன. அச்சுதந்தரம் ஒரு தேசீய மதச்சபையை ஏற்படுத்த வல்ல ஆற்றல் பெற்றிருந்தது. பொதுவாகப் போப்பாண் டவர் இவ்விரண்டு அரசுகளின்மேலும் உண்மையான அதிகாரம் செலுத்தியதில்லை. இந்த இரு நாடுகளிலேதான் முதன்முதலில் பிரபு களுக்குக் கீழான வகுப்புகளின் பிரதிநிதிகளடங்கிய அவைகள் தோன்றின. இங்கிலாந்தில் ஷயரிலுள்ள வீரர்களும் (Knights) நகரின் பிரதிநிதிகளும் அடங்கிய முதற்பாராளுமன்றம் 1265இல் கூட்டப்பட்டது. பிரான்ஸில் அத்தகைய அவை, போப்பாண்டவர் மதக் குருக்களுக்கு வரி செலுத்தும் அதிகாரத்திலிருந்து விதிவிலக்கு அளிக்கவேண்டுமெனக் கேட்டதன் விளைவாக 1302 இல் தோன்றியது. இவ்வரசுகளில் நூருண்டுப்போரின் (1337—1453) பயனுகத் தேசீய உணர்ச்சி மேலும் வளர்ந்தது. அப்போர் இரு நாட்டு மக்களின் நல ஒற்றுமையை வற்புறுத்தியது. 'பிரான்ஸ் பிரெஞ்சு மக்களுக்கே!' என்ற போர்க்குரலை **ஜோன் ஆப் ஆர்க்கு** எழுப்பியதில் வியப்பொன்று மில்லை. ஆங்கில மக்கள் தங்கள் நாட்டில் போரினுல் விளைந்த சீர் குலைவுகளைச் சீர்படுத்தும் வேலையில் ஒரு மனத்தோடு ஈடு பட்டார்கள்.

ஸ்பெயினில் வேறு விதச் சூழ்நிலைகள் காரணமாகத் தேசீய உணர்ச்சி உருவானது. இங்கு எட்டாம் நூற்றுண்டில் முகமதிய **மூர்கள்** (Moors) நாட்டின் பெரும்பகுதியைக் கைப்பற்றினுர்கள். வடபகுதியில் வாழ்ந்த சிறுசிறு கிறித்தவச் சமூகங்கள் ஒன்று சேர்ந்து, இப்புறச் சமயத்தாரை வெளியேற்றின. 14-ஆம் நூற்றுண்டில், மேற்கிலுள்ள போர்த்துகலையும் தென்கிழக்கு மூலையில் எஞ்சியிருந்த மூர்களின் ஆட்சி நிலத்தையும் (கிரானடா) தவிர, அந்தத் தீபகற்பத்தில் இரு முக்கிய அரசுகளே இருந்தன. அவை அரகான் (Aragon) காஸ்டீல் (Castile) என்பவை. ஒவ்வொன்றிலும் பிரபுகளையும் மதக்குருக்களையும் தவிர நாட்டுப் புறங்களிலிருந்தும் நகரங்களிலிருந்தும் வந்த பிரதிநிதிகளைக்கொண்ட அவைகள்

(கார்டெஸ்—Cortes) இருந்தன. 15-ஆம் நூற்றுண்டின் இறுதியில் இரண்டு அரசுகளும் திருமண உறவினுல் இணைக்கப்பட்டு, ஸ்பெயின் முடியரசாய் மலர்ந்தன.

அதற்கு மாருக, ஜெர்மனியிலும் இத்தாலியிலும் புனித ரோமானியப் பேரரசின் கோட்பாடுகளைப் பெரும்பாலும் மக்கள் ஏற்றுக் கொண்டதால், அங்கு மூன்று மேற்கு நாடுகளிலும் இருந்ததைவிட நிலமானியக் குழப்பங்கள் நெடுநாள் நிலவின. மேலும், அரசனுக்கும் போப்பாண்டவருக்குமிடையே தோன்றிய இடைவிடாத பூசல்களினுல் இந்தக் குழப்பங்களில் இன்னும் அதிகமான சிக்கல் ஏற்பட்டது. இவை 11-ஆம் நூற்றுண்டின் நடுப்பகுதியிலிருந்து அதிகரித்துக் கொண்டே சென்றன. பதவிச் சின்னப் போட்டியினுல் (Investiture Contest—1056-1125) விளைந்த இடர்களாலும், அரசர்—எதிர் அரசர், போப்பு—எதிர் போப்பு இவர்களின் எதிர்ப்பு உரிமைக் கிளர்ச்சிகளின் பயனுகத் தோன்றிய சமயப்பிளவுகளினுலும் இடைக்காலத்தின் இரு பெருநிறுவனங்களும் எவ்வளவு வலுவிழந்தன என்ருல், 13-ஆம் நூற்றுண்டின் இறுதியில் அவை தமது முந்திய அதிகாரத்தைப் பெற வியலாது போயிற்று. உட்பகை மலிந்த இந்த நீண்ட காலத்தில் நிகழ்ந்த ஒரே அரசியலமைப்புச் சார்ந்த நிகழ்ச்சி, **'சங்க இயக்கம்'** (Conciliar Movement) என்று பொதுவாக வழங்கப்படும் ஆய்வு முயற்சியாகும். இது பெருஞ்சமயப் பிளவினுல் (The Great Schism—(1378—1417) விளைந்த கேடு காரணமாக ஏற்பட்டது. இப்பிளவு இரு வேறு போப்பாண்டவர்களின்மீது கொண்ட மதப் பற்றின் அடிப் படையில் மேற்கு ஐரோப்பாவை இரு பிரிவுகளாகப் பிரித்தது. இந்தச் சீர் கேடான பூசலை வன்முறையினுல் நிறுத்தக்கூடிய மற்ருெரு சார்லமேன் தோன்ருமையினுல், திருச்சபையின் அரசாங்க நிறுவன மாகிய பொதுச்சங்கம் (General Council) என்ற முற்கால அமைப்பைப் புதுப்பித்துக் குழப்பங்களைத் தவிர்க்க முயற்சி செய்யப் பட்டது. இச்சங்கத்திற்குப் போப்பாண்டவரைப் பணிய வைக்கவும் வழி வகுக்கப்பட்டது. பைசாச் சங்கத்திற்கும் (1409), பிறகு கூடிய கான்ஸ்டன்ஸ் சங்கத்திற்கும் (1414—1418) திருச்சபையின் பிரதி நிதிகளாக மதக்குருக்களும், இல்லறத்தாரும் சென்ருர்கள். இவை நிலையான சங்கக் கட்டுப்பாட்டிற்குப் போப்பாண்டவரை உட்படுத்தத் திட்டம் வகுத்தன. ஆனுல், அதன் விளைவாகத் தீட்டப்பட்ட அரசியலமைப்பு, அடுத்த சங்கமாகிய பேஸல் சங்கத்தில் (Council of Basel, 1431-1449) செயல் முறைக்குக் கொண்டுவரப்படவில்லை. அந்நாளிலிருந்து திருச்சபையின் அரசாங்க முறைக்கென ஏற்பட்ட சங்கமுறை மறைந்தது.

சங்க இயக்கமானது தோல்வியடைந்த போதிலும், அரசியல் முறைமைக்குட்படுகையின் வரலாற்றில் இரு வகையில் குறிப்பிடத்

தக்க சிறப்புப் பெற்றுள்ளது. முதலாவது, சங்கங்களின் அமைப்பும் நடவடிக்கைகளும் அப்போது ஐரோப்பாவில் தோன்றிக்கொண்டிருந்த தேசியப் பிரிவுகளை ஒப்புக்கொண்டன. உண்மையில், கான்ஸ்டன்ஸில் கூடிய சங்கத்தில் நாட்டினப் பிரிவின்படி வாக்கெடுப்பு நடைபெற்றது. அதற்கேற்ப, இத்தாலி, பிரான்ஸ், ஜெர்மனி, இங்கிலாந்து, ஸ்பெயின் என்ற நாட்டின் அடிப்படையில் ஐந்து தொகுதிகள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. இதைப் போன்ற திருச்சபைச் சங்கமொன்றைக் கூட்டுவதற்குத் தேவையான இடைக்கால ஒற்றுமையுணர்ச்சி அப்போது நிலவி வந்த போதிலும், சங்கம் தேசீயப் பிரிவுகளை ஒப்புக்கொண்டதன் மூலம் அவ்வொற்றுமையை அழித்து வந்த ஆற்றலை வற்புறுத்தியது. இரண்டாவது, சங்க இயக்கத்தின் விளைவாக, பொதுச் சங்கத்தில் மதக் குருக்களின் கருத்துகளைத் தவிர, கத்தோலிக்க மக்கள் அனைவரின் கருத்துகளையும் தெரிவிக்கும் முறைகளைப்பற்றிச் சில ஐயப்பாடுகள் தோன்றின. இவ்வாறு திருச்சபையின் அரசாங்க அமைப்பில் உறுதியுள்ள நிறுவனமொன்றை ஏற்படுத்த மேற்கொண்ட முயற்சிகளின் விளைவாக 15-ஆம் நூற்றாண்டில் பல அரசியல் தத்துவங்கள் முளைத்தன. இவற்றிற்கு எடுத்துக்காட்டாகப் **பதுவா மார்சிலியோ** (Marsiglio of Padua), **ஒக்காம் வில்லியம்** (William of Ockham), **ஜான் கெர்சன்** (John Gerson), **கியூஸ் நிக்கொலாஸ்** (Nicholas of Cues) ஆகியோரின் நூல்களைக் கூறலாம். அவை இறைமை, தேசீயம் (nationalism), பிரதிநிதித்துவம், அரசனின் அதிகாரத்தைக் குறைத்தல் போன்ற பற்பல அரசியற்சிக்கல்களையெல்லாம் ஆராய்ந்தன. இவ்வாறு அவை இக்காலத்தில் நிகழும் அரசிலமைப்பு மாற்றங்களை முன்னறிவித்தன.

கத்தோலிக்கத் திருச்சபையில் காணப்பட்ட குறைகள் காரணமாக இடைக்காலத்தின் இறுதியில் மேற்கு ஐரோப்பா முழுவதிலும் அரசியற்கோட்பாட்டாராய்ச்சியில் ஒரு வகை ஆர்வம் பிறந்தது. அதன் நோக்கம், திருச்சபைக்கு ஒரு புதிய அரசியலமைப்பை வழங்குவதாகும். அப்போது அது தெளிவற்ற கொள்கையாயும், வெற்றி பெறாத ஆய்வு முறையாயும் இருந்த போதிலும், இங்கிலாந்து, பிரான்ஸ், ஸ்பெயின் ஆகிய இம்மூன்று மேற்கு நாடுகளின் உள்நாட்டு அரசியலில் அதே காலத்தில் இக்கால அரசியலமைக்குட்பட்ட அரசின் கருத் தோன்றியது என்னலாம். ஏனெனில், இந்நாடுகளில் சட்டமுறைக் கொள்கையைவிடச் செயல் முறை அரசியலே முக்கியமாகக் கருதப்பட்டது. இங்குப் புனித ரோமானியப் பேரரசின் ஆவியானது மீள இயலாதவாறு புதைக்கப்பட்டுவிட்டது. ஆனால், ஜெர்மனியிலும் இத்தாலியிலும் அது பல ஆண்டுகளாக நடமாடியது.

## 5. மறுமலர்ச்சி அரசு

15-ஆம் நூற்றுண்டில் பழங்காலப் பண்பாடு புத்துயிர் பெற்று எழுந்தது. இதனுல், நாம் மேலே விளக்கிய இடைக்கால நிறுவளங்கள் விரைவில் சீர் குலைந்தன. அதன் விளைவுகள் காரணமாக நாம் அதனை 'மறுமலர்ச்சி' எனப் பொதுவாக வழங்குகிறோம், அக்காலத்து அறிஞர்கள் கிரேக்க நூல்களிலே கண்ட அரசியல் உண்மைகளும் கருத்துகளும் இடைக்காலக் கொள்கைகளுக்கு முரணுய் இருந்தன. இதன் விளைவாகச் சிதைவும் ஒருமைப்பாடும் ஒருங்கே நிகழ்ந்தன. அவை இடைக்கால உலகைச் சிதைத்துத் தனி நாடுகளை ஒருமைப்படுத்தின. அதன் பயனுக இங்கிலாந்து, பிரான்ஸ், ஸ்பெயின் ஆகிய நாடுகளில் தேசீய முறையில் ஒருமைப்பட்ட அரசு உருவானது. ஜெர்மனியிலும் இத்தாலியிலும் ஒருமைப்பாடு காணப்பட்டபோதிலும், அது குறுகிய சில எல்லைப் பகுதிகளுக்குள்ளே நிகழ்ந்தது. அதனுல், அந்நாடுகளில் பல சிறிய அரசுகள் தோன்றின. ஆனுல், மறுமலர்ச்சி மூன்று மேற்கு நாடுகளிலும் நிகழ்ந்து வந்த நற்செயல்களைப் பல வகைகளில் பாழ்படுத்தியது.

மறுமலர்ச்சி அரசு உண்மையில் அரசியல் அமைப்புக்குட்பட்ட அல்லது ஜனநாயக அரசாய் இருந்ததில்லை. நாம் மேலே கூறியபடி, வெளிப்புற இறைமையே அதன் இன்றியமையாத பண்பாய் இருந்தது. அதன்படி, அரசைச் சுற்றுப்புற நாடுகளிலிருந்து காப்பதற்காக வலிமை மிக்க நடு அரசாங்கம் தேவையாய் இருந்தது. அது தனது ஆற்றலை எவ்வகையிலும் நிலை நாட்டக்கூடியதாக இருக்கவேண்டும். பண்டைக்கால அரசியல் தத்துவத்தின் ஒரு சில கருத்துகளையே மறுமலர்ச்சிக்கால அரசியல் வல்லுநர்கள் புரிந்துகொண்டார்கள். ஏனெனில், கிரேக்கச் சுய ஆட்சியானது தனி மனிதனுக்கு நல்வாழ் வளிக்கும் ஒரே வழியாகக் கருதப்பட்டபோதிலும், மறுமலர்ச்சிக்கால இறைமை தனி மனிதனின் உரிமைகளைப் பொருட்படுத்தவேயில்லை. சுருங்கக் கூறினுல், மறுமலர்ச்சி அரசர்கள் அரசியலில் கவனம் செலுத்தினுர்களே தவிர, அறநெறியில் அக்கறை கொள்ளவில்லை. ஆனுல், அவை இரண்டும் பண்டைய உலகின் தத்துவத்தில் ஒன்ருய் இணைந்திருந்தன. இந்த உண்மை, மறுமலர்ச்சிக்காலத்தில் தோன்றிய குறிப்பிடத்தக்க ஒரே அரசியல் தத்துவ அறிஞரான **மக்கியவல்லி**யின் நூலில் தெற்றென விளங்குகிறது. மக்கியவல்லி மறுமலர்ச்சியின் பயனுக உருவான ஓர் அறிஞர். அவரது நாடாகிய இத்தாலி அக்காலத்தில் ஒரு மறுமலர்ச்சி இறைமை நாடாய் மாருத காரணத்தினுலேதான், பிற மேற்கு நாடுகளில் நிகழ்ந்ததைத் தமது நாட்டிலும் நிகழ்த்துமாறு யாருக்காவது வேண்டுகோள் விடுக்க அவர் விரும்பினுர். இதுவே 1513இல் வெளியான அவரது

'இளவரசன்' (The Prince) என்னும் நூலின் முக்கியக் கருத்து. இக்கருத்திற்கேற்பத் தமது நாட்டிற்கு நற்கதி அளிக்க வல்ல ஒரு மீட்பரை மக்கியவல்லி தேடினர். அந்நூலின் சிறப்பு என்னவென்ருல், அது 'அறநெறிச் சார்பின்மை' (Unmorality) என்ற கொள்கையை நிலைநிறுத்தி, அதை ஒரு புதிய அரசியல் தத்துவமாக மாற்றியதன் மூலம் அந்த ஊழியைப் பிற ஊழிகளினின்று பிரித்துக் காட்டுகிறது. அக்கொள்கையின்படி அறநெறிக் கருத்துகள் அரசியலைக் கட்டுப்படுத்தக்கூடாது. ஏனெனில், இறைமையை எல்லாவற்றிற்கும் மேலாக எண்ணும் உலகிலே அக்கருத்துகள் அரசின் இறைமை அதிகாரத்தைக்குறைக்கும். மக்கியவல்லி இத்தாலியின் மீட்பரைக் காணவில்லை. ஆனல், இறுதியாக 19-ஆம் நூற்ருண்டின் நடுவில் அந்த மீட்பரான கவூர் என்பார் தோன்றியபோது, இத்தாலிய ஒற்றுமை இயக்கத்தின் நெருக்கடியான நிலையில் தமது செயலைப்பற்றி அவர் கூறியது குறிப்பிடத்தக்கது. 'நமது நாட்டிற்காக நாம் செய்துகொண்டிருப்பதை நமக்காகவே செய்வோமானல், நாம் கொடுங்கயவர்களாவோம்,' என அவர் கூறினர்.

16-ஆம் நூற்ருண்டில் நிகழ்ந்த மதச் சீர்திருத்தத்தின் (Reformation) விளைவாக மறுமலர்ச்சி அரசு ஒரு தெய்விக உரிமைபெற்றது. 1517-ஆம் ஆண்டு முதலில் அறிவிக்கப்பட்ட லூத்தர் என்பாரின் மறையியற்கொள்கை, சமயக் கருத்துகளில் மக்கள் பொறுமை காட்ட வேண்டுமெனக் கூறியது. இது படைக்கலம் தாங்கிய கத்தோலிக்க நாடுகளில் நடைபெற இயலவில்லை. லூத்தர் தம்மைக் காப்பதற்காக அவற்றிற்கு எதிராக ஓர் அரசரின் துணையை நாடினர். இவ்வாறே ஸாக்ஸனிச் சிற்றரசர் (Elector of Saxony) ஒரு தேசீய மதச் சபையை நிறுவினர். அத்தகைய மதச்சபை அதற்கு முன்னிருந்த சபையைப்போலச் சகிப்புத் தன்மையற்றுத் தனித்து நிற்பதாகவே இருந்தது. ஆகவே, லூத்தர் போப்பாட்சியைக் கொள்கை முறையில் தாக்கியதன் விளைவாக உலகானது இன்னும் அதிகமாகச் சிதைவுற்றதுடன், மறுமலர்ச்சிக்கால மன்னனின் தனியுரிமைகளோடு குடிகளின் மத வழிபாட்டு முறைகளைக் கட்டுப்படுத்தும் அதிகாரமும் சேர்க்கப்பட்டது. இப்போக்கு இங்கிலாந்தில் தெளிவாகத் தெரிகிறது. அங்கு எட்டாம் ஹென்றியும், எலிசபெத்தும் தம்மைச் சமயத் தலைவர்களாக்கிக்கொண்டனர். முதலாம் ஜேம்ஸ் காலத்தில் மதச்சபை அரசுக்குப் பணிய வேண்டுமென்ற கொள்கை நிலவியது.

எனவே, மறுமலர்ச்சி இறைமை செழித்தோங்கி வளர்ந்ததுமல்லாமல், இடைக்காலத்தின் இறுதியில் மேற்கு ஐரோப்பாவில் விதைக்கப்பட்ட அரசியல் முறைமை என்ற விதையின் விளைச்சலை வலிமையுடன் தடுத்தது. அது ஐரோப்பாவில் 1660 முதல் 1789 வரை நிலைத்த

தாகக் கருதப்படும் '**புது நோக்கம் கொண்ட வல்லாட்சி**' (Enlightened Despotism) என்ற முடியாட்சி முறையை ஏற்படுத்தியது. பிரான்ஸ், பிரஷ்யா, ஆஸ்திரியாப்போன்ற நாடுகளில் வல்லாட்சி முழுமை பெற்றது. பிரான்ஸில் ஸ்டேட்ஸ்-ஜெனரல் மறுமலர்ச்சிக்குப் பிறகு குறைவாகவே கூடியது. 1614-ஆம் ஆண்டுக்குப் பிறகு 1789இல் புரட்சி தொடங்கும் வரை அது கூட்டப்பெறவேயில்லை. ஊதியம் பெறும் படையும், பொதுவாக நடுத்தர வகுப்பினரிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட அதிகார வர்க்கமும் இத்தகைய வல்லாட்சியின் இரு பேரியல்புகளாய் இருந்தன. இவ்வாறு நிலமானிய முறை சிதைவுற்ற காலத்தில், அரசன் மட்டும் எல்லாவற்றையும் ஒன்றுபடுத்தும் ஆற்றலாய் விளங்கினான். அவன் எந்தப் பிரதிநிதித்துவ நிறுவனத்தின் துணையையும் நாடவில்லை. ஆகவே, ஒழுங்கு முறைப்படி அமைக்கப்பட்ட அரசின் உறுப்புகள் செயலாற்றுவதனால் வளர்ச்சியடைவதற்குப் பதிலாக, பயன்படாமையினால் நலிவுற்றன. அது காரணமாகவே ஐரோப்பாவில் 19-ஆம் நூற்றாண்டு வரையில் அரசியல் முறைமைக்குட்படுகையின் முழு வளர்ச்சி தடைபட்டதுடன் அது இறுதியாகத் தோன்றியதும் முழுவளர்ச்சி பெறப் பல புரட்சிகள் நடைபெறவேண்டியிருந்தன. இங்கிலாந்தில் மட்டும் மறுமலர்ச்சி முடியாட்சி வரம்பில்லா ஒரு வல்லாட்சியாய் வளர்வது தடைபட்டது. ஆகவே, நாம் அரசியல் முறைமைக்குட்படுகையின் தடைபடாத வளர்ச்சியைப்பற்றிப் படிக்கும்போது ஆங்கில நாட்டின் வரலாற்றை நோக்க வேண்டும்.

## 6. இங்கிலாந்தில் அரசியல் முறைமைக்குட்படுகை

மறுமலர்ச்சிக் காலத்தில் இங்கிலாந்திலும் வல்லாட்சி தோன்றியது. ஆனால், அங்குத் தனிப்பட்ட சூழ்நிலைகள் காரணமாக அது ஐரோப்பாவிலிருந்ததைப்போல வலுப்பெற்று நிலைக்க இயலவில்லை. நாம் மறுமலர்ச்சி அரசென வழங்கும் அரசு முறை இங்கிலாந்திலும் தாற்காலிகமாக நிறுவப்பட்டது. இங்கிலாந்து அதைத் தடுக்க இயலவில்லை. ஏனெனில், எங்கும் காணப்பட்ட இடைக்காலச் சிதைவைத் தவிர, தனக்கே இயல்பான இடையூறுகளும் இங்கிலாந்திற்கு இருந்தன. பிரான்ஸுடன் செய்த நீண்ட போரினால் அதன் வளம் குன்றியது. அதன் பிறகு நிகழ்ந்த உள் நாட்டுப் போரின் (ரோஜாப்போர்கள்) விளைவாக முழுச் சிதைவு ஏற்பட்டது. நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல, மாவட்டங்களிலிருந்தும் (Counties) நகரங்களிலிருந்தும் சென்ற பிரதிநிதிகளடங்கிய முதல் பாராளுமன்றம் 1265இல் கூடியது. 1295இலிருந்து அதாவது **முதலாம் எட்வர்டு** கூட்டிய 'மாதிரிப் பாராளுமன்றத்தின்' (Model Parliament) ஆண்டிலிருந்து பாராளுமன்றங்கள் கால ஒழுங்கின்றிக் கூடிவந்தன; முக்கியமாக அவை

அரசருக்கு நிதி வழங்குவதற்காகக் கூடின. ஆனால், 14ஆம் நூற்றாண்டின் இறுதியில் அது கூடுவதற்கு ஒரு புதிய காரணம் தோன்றியது. ஏனெனில், 1399இல் இரண்டாம் ரிச்சர்டு பதவியிலிருந்து நீக்கப்பட்டார். அப்போது மூன்றும் எட்வர்டின் குடும்பத்தின் இளங்கிளையாகிய லங்காஸ்டிரியர்கள் (Lancastrians) அரியணையைக்கவர்ந்தார்கள். இரத்த உறவு உரிமை இல்லாத காரணத்தால் நான்காம் ஹென்றியும் அவருக்குப் பின் பட்டத்திற்கு வந்தவர்களும் தங்கள் ஆட்சியை நிலை நாட்டப் பாராளுமன்றத்தையே நம்பியிருந்தார்கள். பிரான்ஸிடம் அடைந்த தோல்வியினாலும், ஆறும் ஹென்றியின் திறமையின்மையினாலும் அவர்கள் மேலும் வலுவிழந்தார்கள். ரோஜாப் போர்களின் பயனாக ஆறும் ஹென்றி பதவி துறந்தார். அப்போது அரசரான நான்காம் எட்வர்டு போரைத் தொடர்ந்து நடத்தினர். இறுதியில் அவர் சகோதரரான மூன்றும் ரிச்சர்டை ஹென்றி டியூடர் (Tudor) என்பார் 'பாஸ்வொர்த்து' (Bosworth) எனும் போரில் 1485-ஆம் ஆண்டு தோற்கடித்ததுடன் போர் முடிவடைந்தது. டியூடர் வல்லாட்சி யென அடிக்கடி கூறப்படும் முடியரசு நிறுவப்படுவதற்கு இதுவே காரணமாகும்.

'டியூடர் வல்லாட்சி' என்ற சொல் தொடருக்குப் பல விளக்கங்கள் கூறவேண்டும். டியூடர் வல்லாட்சியில் மூன்று அரசாங்க உறுப்புகள் இருந்தன. அவற்றுள் ஒன்றைத்தான் ஐரோப்பாவில் எழுந்த வல்லாட்சியின் தனி இயல்பான பயிற்சிபெற்ற அதிகார வர்க்கத்துடன் ஒப்பிடலாம். அது நிருவாகத்துறையில் அரசரது கைக்கருவியாய் இருந்த அவை (Council) ஆகும். அதன் வரையிறந்த அதிகாரத்தைப் பாராளுமன்றம், அமைதி காவலர் (Justices of Peace) என்ற மற்ற இரண்டு உறுப்புகளும் கட்டுப்படுத்தின. பொதுவாக அரசன் தனது அவையின் உதவியினால் தீட்டிய திட்டங்களைப் பாராளுமன்றம் தடையின்றி ஏற்றுக்கொள்வது வழக்கம். ஆனால், சட்டமியற்றல், வரி விதித்தல் சார்ந்த தீர்மானங்களை நிறைவேற்றுவதற்காகப் பாராளுமன்றம் தொடர்ந்து கூடிவந்தது இங்குக் குறிப்பிடத்தக்கது. உண்மையில் டியூடர் பாராளுமன்றங்கள் மன்னனுக்குப் பணிந்திருந்தன. ஏனெனில், டியூடர் மன்னர் ஐவருள் மூவர் நாட்டு மக்களின் கருத்தை எதிரொலித்தனர். அரசரின் கருத்து மக்களின் விருப்பத்திற்கு முரணாய் இருந்த போது, பாராளுமன்றம் தனது முழு ஆற்றலையும் பயன்படுத்தி அவருக்கெதிராய் எழுந்தது. மத்திய அரசாங்கத்தின் கொள்கையைச் செயற்படுத்தும் வட்டார ஆட்சியாளர்களாகிய அமைதி காவலர்கள், ஐரோப்பாவிலிருந்த வட்டார ஆட்சியாளர்களைப்போல மத்திய அரசாங்கத்தினிடமிருந்து ஊதியம் பெறும் அலுவர்களாய் இல்லாமல், நிலக்கிழாரின் வகுப்பிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட ஊதியம் பெறாத பணியாளர்களாய் இருந்தார்கள்.

இங்கிலாந்து தனித்து நின்ற தீவாய் இருந்ததால், வெளி நாட்டுத் தாக்குதலிலிருந்து தன்னை இடையுறுது காக்க வேண்டிய தேவையில்லாதிருந்தது. இது காரணமாக ஐரோப்பாவில் தன்னரசை வளர்த்த ஆற்றல்கள் இங்கிலாந்தில் தோன்றவில்லை. இதன் விளைவாக ஆங்கில நாட்டில் அரசரின் வல்லாட்சியும், வட்டார மத்திய அரசாங்கங்களின் சுய ஆட்சிக் கொள்கையும் ஒருங்கே இணைந்திருந்தன. பிற நாடுகளிலிருந்து தனித்து நின்ற காரணத்தினால் அங்குத் தேசிய உணர்ச்சி வலுப்பெற்று வளர்ந்தது. இது டியூடர் காலத்தில் நிகழ்ந்த இரு பெருநிகழ்ச்சிகளினால் அதிகரித்தது. முதலாவது, திருச்சபையின் தலைமை அதிகாரத்தைப் போப்பாண்டவரிடமிருந்து ஆங்கில அரசருக்கு மாற்றிய மதச் சீர்திருத்தம் (Reformation) ஆகும். இது இங்கிலாந்தில் போப்பாண்டவர் தலையிடுவதை முழுவதும் தடுத்தது. இரண்டாவது, ஸ்பானிய **ஆர்மெடாவின்** தோல்வி. ஆங்கிலேயர் பெற்ற இந்த வெற்றி, 16-ஆம் நூற்றுண்டின் தொடக்கத்தில் கிளம்பிய ஸ்பானிய வல்லரசைப்பற்றி அவர்கள் கொண்டிருந்த அச்சத்தை அறவே அகற்றியது. ஆர்மெடாத் தோல்வியின் விளைவாக, பாராளு மன்றம் முக்கியக் கொள்கைகளை வாதிக்கக் கூடாதென்றிருந்த கட்டுப்பாடு உடனே நீங்கியது. ஆகவே, 1603-ஆம் ஆண்டு ஸ்டூவர்ட்டு மரபைச் சார்ந்த **முதலாம் ஜேம்ஸ்** அரியணையேறியதும் நீண்ட போராட்டம் தொடங்கியது. அப்போராட்டம் பாராளுமன்றம் இறுதியில் அரசனது அதிகாரத்தை அழிக்கும் வரையில் நடந்துகொண்டிருந்தது.

**முதலாம் ஜேம்ஸ்** காலத்தில் சச்சரவாய்த் தொடங்கிய பிணக்கம், அவர் மைந்தர் காலத்தில் படைக்கலம் தாங்கிய போராட்டமாய் மாறியது. அப்போது நிகழ்ந்த உள் நாட்டுப்போர் (1642-49), ஐரோப்பாவில் விரைவாய் வளர்ந்து வந்த புது நோக்கம் கொண்ட வல்லாட்சி முறை ஆங்கில நாட்டிலும் பரவுவதற்குரிய வாய்ப்புகளை முற்றிலும் அழித்தது. குடியரசுக் காலத்திற்கும், முடியரசு மீட்சிக்கும் (Restoration) பிறகு இரண்டாம் சார்லஸும், இரண்டாம் ஜேம்ஸும் ஸ்டூவர்ட்டுத் தன்னரசை மீண்டும் நிலை நாட்ட முயன்றபோதிலும், 1688-89 இல் நிகழ்ந்த புரட்சி அதை விசையுடன் வீழ்த்தியது. அதன் பயனுக, வருங்காலத்தில் அரசரின் அதிகாரம் மீண்டும் தலை தூக்க இயலாமற்போனது. இம்மாற்றத்தின் முழு விவரங்களையும் பின்னுேர் இயலில் பார்ப்போம். 1688-ஆம் ஆண்டின் புரட்சியைப் பற்றிய இரு முக்கிய உண்மைகளை மட்டும் இங்குக் கூற வேண்டும். முதலாவது, அரசாங்கச் செயல்களைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் மன்னனிடமிருந்த பாராளுமன்றத்திற்கு முழுவதும் மாற்றப்பட்டது. இரண்டாவது, இம்மாற்றம் சட்ட முறையில் செய்யப்பட்டது. இதற்கு முன் சட்ட முறையான அரசியல் அமைப்புச்

சட்டம் இருந்ததில்லை; வழக்கங்களும், வழக்காறுகளுமே இருந்தன. மகாசாசனத்தை (Magna Carta) ஒரு சட்டமெனக் கூற இயலாது. அதன் பல பகுதிகள் அதை உண்டாக்கிய நிலமானிய முறையின் காலம் மறைந்ததும், வழக்கொழிந்தன. மக்கள் சபை மட்டும் அதை முன் நிகழ்ச்சியாக அடிக்கடி எடுத்துக்காட்டி மகிழ்ச்சியுற்றது. 1628-ஆம் ஆண்டு இயற்றப்பட்ட உரிமை விண்ணப்பம் (The Petition of Right) அரசரது இசைவு பெற்றதால், சட்டமானது. ஆனால், அதன் கருத்துகள் நடைமுறையில் செயற்படுத்தப்பட வில்லை. அரசரது அதிகாரத்திற்கு வரம்பிடும் எண்ணம் பியூரிட் டானியப் (Puritan) புரட்சி என்ற உலையிலே திரும்ப உருக்கி வார்க்கப்பட்டது. பொது நல ஆட்சியிலும் (Commonwealth), காப்பாளர் ஆட்சியிலும் (Protectorate) முழுவதும் எழுதப்பட்ட அரசியலமைப்புகள் தோன்றின. ஆனால், அவை முடியரசு மீட்சி யுடன் மறைந்தொழிந்தன. முடியரசு மீட்சியுடன் தொடர்புடைய சில நிதி சார்ந்த பகுதிகள் சட்டமுறை ஆற்றல் பெற்றிருந்தன. ஆயினும், அவை பொதுவாகப் புரட்சித் திட்டத்துடன் சேர்க்கப்பட்டன.

1688-89இல் நடைபெற்ற புரட்சிக் காலத்தில் இயற்றப்பட்ட பல சட்டங்கள் பிரிட்டிஷ் அரசின் இறைமையைத் திரும்பப் பெறவியலாத வாறு பாராளுமன்றத்திடம் ஒப்புவித்தன. உரிமைகளின் மசோதாவும் (Bill of Rights) படைக்கலகச் சட்டமும் (Mutiny Act) போர்ப்படை யைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தைப் பாராளுமன்றத்திற்கு அளித்த துடன் அதற்குத் தேவையான நிதியை ஆண்டுதோறும் வழங்கும் முறையைப் பின் பற்றியதால், கொடுங்கோலாட்சி தோன்றுதவாறும் தடுத்தன. ஆயினும், இது சட்டமன்றத்தின் பொதுவான ஒரு மேற் பார்வையாகவே இருந்தது. பாராளுமன்றம் நிருவாகத்துறை அதி காரத்தை அரசரிடமும் அவர்தம் அமைச்சர்களிடமுமே விட்டு வைத் திருந்தது. எனினும், 18-ஆம் நூற்றுண்டில் கட்சி அடிப்படையில் உருவான அமைச்சரவை வழக்காறுகளின் விளைவாகவே வளர்ந்தது. அந்நூற்றுண்டின் இறுதியில் அது எவ்வளவு ஆழ வேரூன்றி இருந்த தென்றுல், நிருவாகத்துறையைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தையும் பாராளுமன்றமே செலுத்தி வந்தது.

இதற்கிடையில் சட்டநீதி (Rule of Law) என்ற கொள்கை அரசின் சட்டவரலாற்றில் இடம் பெற்றுவிட்டது. எத்தரத்தைச் சேர்ந்த வர்களாயினும், சட்டத்தின் முன் எல்லாக் குடிகளும் சரிநிகரானவர் கள் என்பது அதன் பொருள். ஆளுரிமைக் காப்பு (Habeas Corpus, 1679) போன்ற சட்டங்கள், ஒரு புறம் குடிமகன் தவருகச் சிறைப் படுவதைத் தடுத்து, மற்றெரு புறம் நீதிபதியை அரசரின் தலையீட்டி லிருந்து காத்தன. மேலும், ஜான் வில்க்ஸ் (John wilkes) வழக்குப்

போன்றவற்றில் நீதிபதிகள் அளித்த தீர்ப்புகள் குடிமகன் தவருகச் சிறையிலடைக்கப்படுவதைத் தடுத்து, அதே காலத்தில் அரசரின் அமைச்சர்களையும் பொதுவான சட்டத்திற்குப் பணியச் செய்தன. இந்தச் சட்ட நீதி பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள் அனைத்துக்கும் பரவியது. எனவே, இது சுய ஆட்சி பெற்ற பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள் அனைத்திலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் இன்றும் சட்ட முறையின் அடிப்படையாய் இருந்து வருகிறது.

இவ்வாறு 18-ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியில் பிரிட்டன் மக்களாட்சியாக மாருவிட்டாலும், அரசியல் முறைமைக்குட்பட்ட அரசாய் விளங்கியது. வழக்காறுகளின் விளைவாகவும், பல சட்டங்களின் பயனுகவும் சட்ட மன்றம், நிருவாகத்துறை, நீதித்துறை ஆகிய அரசாங்கத்தின் மூன்று உறுப்புகளும் ஒழுங்காக அமைக்கப்பெற்று, கொடுங்கோன்மை எழாதவாறு ஒன்ருேடொன்று தொடர்பு கொண்டிருந்தன. இம்முறையில் பிரதிநிதித்துவக் கொள்கை ஆழமாய் வேரூன்றி நின்றது. ஆயினும், வாக்குரிமையை விரிவாக்குதல் நடைமுறை அரசியலில் இன்னும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. இந்நிலையை அடைய, பிரெஞ்சுப் புரட்சியும் தொழிற்புரட்சியும் ஒன்று சேர்ந்து உண்டுபண்ணிய விளைவுகளுக்காக நாடு காத்திருக்க வேண்டியிருந்தது. இப்புரட்சிகளைப்பற்றி நாம் பிறகு பார்ப்போம். 18-ஆம் நூற்ருண்டின் நடுவில் பிரிட்டன் மட்டுந்தான் உலகிலேயிருந்த ஓரேயோர் அரசியல் முறைமைக்குட்பட்ட அரசாய்த்திகழ்ந்தது. ஆகவேதான் நாம் இங்கு வரையும் வரலாற்றுச் சுருக்கத்தில் பிரிட்டனைப்பற்றி விரிவாகக் கூறுகிருேம். அறிஞர் ஒருவர் சொல்வது போல, 'அமெரிக்க, பிரெஞ்சுப் புரட்சிகள் தொடங்குவதற்கு முன்னுல் பிரிட்டிஷ் முறையின் வரலாருனது, தாய் நாட்டிலும் குடியேற்ற நாடுகளிலும் உண்மையில் உலகிலே, சுய ஆட்சியின் வரலாருய் இருக்கிறது.' ஆகையால், பிற்காலத்தில் பிற அரசுகளில் அரசியலமைப்பு வளர்வதற்கு இம்முறை ஓர் எடுத்துக்காட்டாய் இருந்தது.

பிரிட்டிஷ் அரசியலமைப்பு, நாம் பிறகு பார்க்கும் ஏனைய அரசியலமைப்புகளைப் போல ஒரு கொள்கையின் அடிப்படையில் ஆழ்ந்தாராய்ந்து நிறுவப்படாமல், மெதுவாக, வழக்காறுகளின் விளைவாகவளர்ந்த அரசியலமைப்பாகும். ஆயினும், அது ஒருகொள்கை அல்லது பல கொள்கைகளின் பயனுகத் தோன்ருவிடினும், 17-அம், 18-ஆம் நூற்ருண்டுகளின் சிறப்பான அரசியற்கோட்பாட்டாராய்ச்சியின் பிறப்பிடமாய் இருந்தது. பிரிட்டன் மட்டும் அரசியல் முறைமைக்குட்பட்ட ஓர் அரசாய் இருந்தது, ஐரோப்பாவில் நிலவிய வல்லாட்சியைத் தவிர்க்க அப்போது மக்கள் வழி தேடியிருப்பார்களாலுல், அவர்கள் தங்கள் காலத்திலிருந்த இந்தத் தனிச்சிறப்பு வாய்ந்த

முறையை நுணுகி ஆய்ந்திருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. ஆனால், அம்முறை ஏற்கெனவே உரு மலர்ச்சியடைந்து வளர்ந்துவிட்டது. மாற்றத்தை உண்டுபண்ணக் கூடிய புரட்சிகரமான சூழ்நிலைகளுக் கேற்ப அதை எவ்வாறு செயற்படுத்துவது என்பதுதான் கேள்வியாய் இருந்தது. இக்கேள்வியின் விடை பிரிட்டிஷ் அரசியலமைப்பிற்கும் அதைப் பின்பற்றிய பிற அரசியலமைப்புகளுக்கும் உள்ள இன்றியமை யாத வேறுபாட்டை விளக்குகிறது. நாம் இப்போது ஆராய வேண்டிய புதிய அரசியலமைப்புக்குட்படுகை அப்போது ஆவண வடிவில் இருந்தது. அது பல நூற்றாண்டுகளாகத் தனது அரசியலமைப்பை வளர்த்து வந்த அரசின் அனுபவங்களின் பயனை ஒரே வீச்சில் சுருக்கமாகக் கூற விழைந்தது. இதன்படி, மேற்கு நாடுகளில் தோன்றிய பல வகையான அரசியல் அமைப்புகள் ஒன்றோடொன்று கலந்து ஒன்றாயின. பழையவை புதியவற்றை மாற்றியும், புதிய வற்றால் மாற்றப்பட்டும் வந்தன. ஆனால், பிரிட்டிஷ் அரசியல் அமைப்பு அவ்வளவு வளர்ச்சி பெற்றது காரணமாகவே அது புதிய சூழ்நிலைகளுக்கேற்பத் தன்னை மாற்றிக்கொள்ள முடிந்தது. மேலும், அது, ஆவண வடிவான அரசியலமைப்புகளின் புதிய பண்புகளை ஏற்கெனவே இருந்த அரசியலமைப்புடன், அதைப் பெரிதும் மாற்றாமல், இணைக்க முடிந்தது.

## 7. அமெரிக்க, பிரெஞ்சுப் புரட்சிகளின் அரசியல் முறை விளைவு

மறுமலர்ச்சியின் பயனாகத் தோன்றிய அரசியல் கொடுங் கோன்மையும், மதச் சீர்திருத்தத்தினால் தணிக்க இயலாத சமயப் பொறுமையின்மையும் அரசு தோன்றியதற்கு ஒரு வித விளக்கம் தந்தன. இக்கருத்து 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரை நிலவி வந்தது. இதுதான் பொதுவாகச் சமுதாய ஒப்பந்தக் கொள்கை (Social Contract Theory) என்று வழங்கப்படுகின்றது. இக்கால உலகில் முதலில் பிரான்ஸிலுள்ள ஹூக்னோக்களும் (Huguenots); பிறகு ஸ்பானிய ஆட்சிக்கு அடங்கியிருந்த நெதர் லாந்து மக்களும் அதை ஆதரித்தார்கள். அவர்களே மேற்கூறிய இரு நிகழ்ச்சிகள் காரணமாகப் பெரிதும் துன்புற்றார்கள். இக் கொள்கை புதிய கொள்கையன்று. பிளேட்டோ தமது 'குடியரசு' (Republic) என்ற நூலில் இதை ஆதரிக்கிறார். பிறகு இடைக்காலத் தில் போப்பாண்டவர்களுக்கும் அரசர்களுக்கும் இடையே நிகழ்ந்த நெருக்கடியான போராட்டத்தின் போது இது மீண்டும் கிளம்பியது. ஒப்பந்தக் கொள்கையை (Contract Theory) சுருக்கமாகக் கூற வேண்டுமானால், பொறுக்க இயலாத ஓர் இயற்கை நிலையை (State of Nature) ஒழிக்கும் நோக்குடன் மக்கள் ஒன்று சேர்ந்து தங்களுக்

குள் ஓர் ஒப்பந்தத்தை ஏற்படுத்திக்கொள்ளும்போது அரசு தோன்றுகிறது என்று சொல்லலாம். ஒப்பந்தப்படி மக்கள் தங்கள் இயற்கை உரிமைகளில் சிலவற்றைக் கைவிடுகின்றனர்கள். ஆனால், அவர்கள் சமூகத்தின் பொது வாழ்வுக்குத் தேவையான உரிமைகளை மட்டும் துறக்கின்றனர்கள். ஆகையால், குடிகள் தாங்கள் துறக்காத உரிமைகளைத் தொடர்ந்து அனுபவிப்பதற்கு உறுதியளிப்பது அரசியல் சமூகத்தின் நோக்கமாகும். ஒப்பந்தத்தின் விளைவாக அரசாங்கம் நிறுவப்பட்டுள்ளதென்றால், அது கொடுங்கோன்மையாக மாறும் போது ஒப்பந்தத்தை மீறுகிறது. ஆகவே, அந்த அரசாங்கத்தை வீழ்த்துவதற்கு அரசின் உறுப்பினர்களுக்கு உரிமை உண்டு. வல்லாட்சியை அழித்து, உரிமையுடன் புரட்சி செய்ய விரும்பிய ஹூக்னேக்கள், நெதர்லாந்தார் போன்றவர்களுக்கு இக்கோட்பாடு பெருந்துணையாய் இருந்தது.

இக்கொள்கையை ஆதரித்தவர்களுள் பலர் இதற்குப் பல வகை உருவங்கள் கொடுத்தனர். இதற்கு விளக்கம் தந்தவர்களில் முதல்வரில் ஒருவரும், புகழ் பெற்றவருமாகிய தாமஸ் ஹாப்ஸ் (Thomas Hobbes) என்ற ஆங்கிலேயர் தாம் எழுதிய 'Leviathan' (1651) என்ற நூலில் அரசின் வரம்பற்ற அதிகாரத்தை ஆதரிக்க அதைப் பயன்படுத்துகின்றார். அவரது கருத்துப்படி இவ்வாறு அமைக்கப்பெற்ற அரசாங்கம் ஒப்பந்தத்தில் யாதொரு பங்கும் பெருமையால், அதை மீற இயலாது. அக்கொள்கையை ஆதரித்தவர் பலர் அரசரைத் தூக்கிலிடுவதற்கு அதை ஒரு காரணமாகக் காட்டினர். ஆனால், ஆங்கில உள் நாட்டுப் போரினால் (1642—49) விளைந்த குழப்பங்களுக்குப் பிறகு அந்நூலை எழுதிய ஹாப்ஸ் குழப்பங்களிலிருந்து மீள ஒரு தத்துவ முறையைத் தேடினார். 18-ஆம் நூற்றாண்டில் ஐரோப்பியக் கோட்பாட்டைப் பெரிதும் மாற்றிய '**ஜான் லாக்**' (John Locke) என்ற மற்றோர் ஆங்கிலேயர், 1688—89இல் நடந்த ஆங்கிலப் புரட்சியை ஆதரிப்பதற்காகத் தமது 'Treatises of Civil Government' என்ற நூலில் (1690) இக்கொள்கையைப் பயன்படுத்தினார். இந்நூலை '**விக்**' (Whig) கட்சியின் கொள்கை அறிக்கை எனலாம். இது இரண்டாம் ஜேம்ஸ் மன்னரை அரியணையிலிருந்து அகற்றி உரிமைகளின் மசோதாவை இயற்றிய அக்கட்சியை ஆதரித்தது. லாக்கின் கருத்துப்படி, ஒரு பொது நிறுவனத்தை ஏற்படுத்துவதற்காக மன்னரும் மக்களும் தங்களுக்கிடையே ஓர் ஒப்பந்தத்தை ஏற்படுத்தினார்கள். அரசியல் நிலை ஏற்படுவதற்குமுன் மக்களின் உரிமைகள் எவ்வாறு இருந்தனவோ, அவ்வாறு அவற்றை விளக்கிச் செயற்படுத்துவதே அப்பொது நிறுவனத்தின் வேலையாகும். 'லாக்' இப்பொதுவான கொள்கையை 1688-ஆம் ஆண்டின் சூழ்நிலைக்கேற்றவாறு பயன்

படுத்தினர். ஆனல், அது 1689இல் இரண்டாம் ஜேம்ஸைப் பதவியிலிருந்து நீக்கிய பாராளுமன்றத்தின் தீர்மானத்தில் ஏற்கெனவே சேர்க்கப்பட்டிருந்தது. அரசர் 'முதலில் அரசருக்கும் மக்களுக்குமிடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தை மீறி, அதனுல் அரசியலமைப்பைச் சீர்குலைக்க முயன்று, ஆட்சியைத் துறந்துவிட்டார். அதனுல், அரியணையில் ஆளில்லை என அத்தீர்மானம் கூறியது. இவ்வாறு இரண்டாம் ஜேம்ஸ் மூன்ருண்டுக் காலக் கொடுங்கோலாட்சிக்குப் பின் பதவியிலிருந்து நீக்கப்பட்ட பிறகு, ஆங்கில அரியணையில் **ஆரஞ்சு வில்லியத்தையும் மேரியையும்** அமர்த்துவதற்காக ஒரு புதிய ஒப்பந்தம் ஏற்பட்டது போலும்! ஸ்டுவர்ட்டுகளின் கொள்கையாகிய அரசர்களின் தெய்விக உரிமை' என்ற கோட்பாட்டிற்கு விக்குகள் கொடுத்த விடை இதுதான்.

ஹாப்ஸ் உரிமையையும் அதிகாரத்தையும் ஒன்ருகப் பொருத்துவதற்காக, அவற்றுள் ஒன்றை வசதியாக—ஆனல் வாதத்திற்குப் பொருந்தாத வகையில்—அழிக்கின்ருர்; அதாவது, வரம்பின்மைக் கொள்கையை ஆதரிப்பதற்காக மற்ற எல்லாவற்றையும் கைவிடுகின்ருர். ஆனல், லாக் 'இறைமை' எனும் சிக்கலினின்று தப்பித்துக் கொள்வதற்காக அதைக் கவனியாது தள்ளிவிடுகிருர். புரட்சி செய்வது நியாயமானதாக இருக்குமாஞல், அதைச் செயற்படுத்துவதற்குக் காலம் அணுகிவிட்டதென யார் அல்லது எந்த அதிகாரம் முடிவு செய்யவேண்டும்? 'லாக்' இம்முக்கியக் கேள்விக்கு விடையளிக்கவே இல்லை; 'மக்களோடு மேலான அதிகாரத்திற்கு இருப்பிடம்' எனத் தெளிவற்றதொரு விளக்கம் தருகிருர். ஆனல், இரண்டாம் ஜேம்ஸைப் பதவியிலிருந்து நீக்கி, அவரது இடத்தில் வில்லியத்தையும் மேரியையும் அமர்த்திய புரட்சியை மக்களே நடத்திஞர்கள் என்று எண்ணுவது பலனற்றது. அதை நடத்தியது உண்மையில் இரண்டாம் ஜேம்ஸை எதிர்த்த விக் தலைவர்களைக் கொண்ட ஒரு சிறு குழுவாகும். அக்குழுவினர் கொண்டு வந்த உரிமைகள் மசோதாவை முற்றிலும் பிரதிநிதித்துவமற்ற ஒரு பாராளுமன்றம் ஏற்றுக் கொண்டது. அப்பாராளுமன்றத்தின் அடிப்படை அரசியலமைப்பு 1295இல் அது நிறுவப்பட்ட போது இருந்த நிலையினின்று மாறுபடவில்லை. பிரெஞ்சு நாட்டவரான **ஜீன் ஜேக்விஸ் ரூஸோ** என்பவர் இறைமையையும் மக்களாட்சியையும் பொருத்தும் பெருஞ்சிக்கலான முயற்சியில் முதலில் ஈடுபட்டார். அவர் தமது 'Social Contract' என்ற நூலில் மக்களாட்சியை வாதத்திற்குப் பொருத்தமான, மறுக்க இயலாத வகையில் ஆதரிக்கப் பெருமுயற்சி செய்தார். இதற்காக அவர் ஹாப்ஸின் முறைகொண்டு லாக்கின் கோட்பாட்டை விரிவாக விளக்கினர். ரூஸோவின் கருத்துப்படி, சுதந்தர வாழ்வுக்கென மனிதன் பிறந்தும் எங்கும் அடிமைத்தளையினல் கட்டப்பட்டிருக்கின்

ருன், அந்த அடிமைத்தனத்தை நியாயமானதென எண்பிக்க ஒரே வழி, இறைமை அதிகாரத்தை மக்களின் கையில் கொடுப்பதுதான். அதனால் அவர்கள் செய்த ஒப்பந்தம் தனி மனிதர்களின் கும்பலை ஒரு சமூகமாக மாற்றியது. அவ்வொப்பந்தம் சமத்துவத்தை நிலை நாட்டியது. ஏனெனில், ஒவ்வொருவனும் தன்னை எல்லோருக்கும் அர்ப்பணிக்கும்போது ஒருவருக்கும் தன்னை அர்ப்பணிப்பதில்லை. ரூஸோவின் இந்த மக்கள் இறைமைக் (Popular Sovereignty) கொள்கையானது ஐரோப்பாவில் பழைய ஆட்சியை (Old Regime) வீழ்த்த இருந்த பேராற்றல்களுக்கு ஒரு சங்கநாதம் போன்றிருந்தது. ஏனெனில், ரூஸோவின் கருத்துப் பொதுவாக ஏற்கப்பட்டிருக்குமாயின், புது நோக்கம் கொண்ட வல்லாட்சி இறுதியில் அதை எதிர்த்து நிற்க இயலாமல் போயிருக்கும்.

ரூஸோவின் 'சமுதாய ஒப்பந்தம்' என்பது, வரலாற்றிலே ஒரு திருப்பத்தை உண்டுபண்ணிய நூலெனலாம். அது தன்னிலே பெருஞ் சிறப்புடையதன்று எனினும், அதன் பிறகு தோன்றிய அரசியல் அமைப்புகளிலே அதனால் ஏற்பட்ட விளைவுகள், அதன் சிறப்பை எடுத்துக்காட்டுகின்றன. ரூஸோ பொதுநல விருப்பம் (General will) என்ற தமது கோட்பாட்டின் அடிப்படையில் அமையக்கூடிய மக்கள் ஆட்சிக்கு ஒரு தத்துவ முறையான ஆதாரம் கொடுக்கப் பெரிதும் முயன்றார். ஆனால், அம்முயற்சியில் அவர் சன்னல் பின்னலான ஒரு கருத்துச் சிக்கலில் அகப்பட்டுக்கொண்டார். அரசின்கொள்கை என்ற முறையில்சமுதாயஒப்பந்தக்கொள்கையானது ரூஸோவிற்குப்பின்ஜெர்மனியில் தோன்றிய கான்ட் (Kant) ஃபிஷ்டே (Fichte), ஹெகல் (Hegel) போன்றவர்களின் இலட்சியவாதத் தத்துவமெனும் பனிப் படலத்தில் இறுதியில் மங்கி மறைந்துவிட்டது. 'பிரதிநிதித்துவ மக்களாட்சி என்பது கருத்துப் பொருத்தமற்ற ஒரு சொற்றொடர்,' என ரூஸோவே இகழ்ந்துரைத்தார். அவர் தம் அரசாங்க இலட்சியங்கள், நேர்முக அல்லது தொடக்க நிலையிலுள்ள மக்களாட்சி என்ற பண்டைய கருத்தின் அடிப்படையில் பிறந்தவையாதலால், அவற்றை அவர் வாழ்ந்த காலத்தில் நடைமுறையில் செயற்படுத்த இயலவில்லை. ஆனால், அவரது கொள்கையைப் பின்பற்றியவர்கள் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை உள்ளவர்களாய் இருந்தார்கள். அவரது காலத்திற்குப் பிறகு வளர்ச்சி பெற்ற பிரதிநிதித்துவ நிறுவனங்கள், தெரிந்தோ, தெரியாமலோ, ரூஸோவின் கோட்பாட்டைச் செயல் முறைப்படுத்த முயன்றன.

18-ஆம் நூற்றாண்டின் இறுதியில் அமெரிக்காவிலும், பிரான்ஸிலும் நிகழ்ந்த இரு பெரும்புரட்சிகளுக்கு ரூஸோவின் 'சமுதாய ஒப்பந்தம்' உண்மையில் ஓர் இலக்கிய முன்னோடியாய் இருந்தது.

அமெரிக்கப் புரட்சி சுதந்தரப் போருடன் (1775—1783) முடிய வில்லை. பதின்மூன்று குடியேற்ற நாடுகளுள் ஒவ்வொன்றிலும் ஏற்பட்ட தொடர்ச்சியான ஜனநாயக மாற்றங்களிலும், 1781இல் தொகுத்து வெளியிடப்பட்ட மாநில அரசியலமைப்புகளிலும் அதன் விளைவைக் காணலாம். அத்தொகுப்புப் பிரெஞ்சு மொழியில் மொழி பெயர்க்கப்பட்டதால், பிரான்ஸில் புரட்சிக் காலத்தில் தோன்றிய அரசியலமைப்புகளை மிகவும் பாதித்தது. அமெரிக்கச் சுதந்தரப் போரின் பயனும், இக்கால அரசியல் முறைமைக்குட்படுகையின் வரலாற்றில் அதனால் ஏற்பட்ட விளைவுகளும் அதிகமாகக் குறிப்பிடத் தக்கவை. அப்போர் அமெரிக்கக் குடியேற்ற நாட்டு மக்கள் கொடுமையானதெனக் கருதிய பொருளாதார ஆட்சியின் விளைவாகத் தோன்றியது. 'பிரதிநிதித்துவம் இல்லையெனில் வரி இல்லை,' என்று அவர்கள் எழுப்பிய போர்க்குரல் இறுதியில் தாம் தாய் நாட்டிற்கெதி ராகப் புரட்சி தொடங்கப் போவதாகக் காட்டியது. ஏனெனில், பெரும்பாலும் குடியேற்ற நாடுகளைப் பிரான்ஸிடமிருந்து காப்பதற்காக நடந்த ஏழாண்டுப் போரின் (1756—1763) செலவுகளுக்காகச் சில வரிகள் விதிக்க வேண்டிய தேவை ஏற்பட்ட போதிலும், வெஸ்ட் மின்ஸ்டரிலிருந்த பாராளுமன்றத்தில் அமெரிக்கக் குடியேற்ற நாடு களுக்குப் பிரதிநிதித்துவம் வழங்குவது அக்காலத்தில் நிகழக்கூடாத காரியமாகும். எனவே, அமெரிக்கச் சுதந்தரப் போர் தொடங்கியது. அதன் முடிவில் அரசியலமைப்பின் அடிப்படையில் நிலைநாட்டப்பெற்ற ஓர் அரசியல் சமூகம் 'ஐக்கிய அமெரிக்க நாடுகள்' என்ற பெயரில் நிறுவப்பட்டது. அந்த அரசியலமைப்பு 1787இல் அறிக்கையிடப் பட்டு, 1789 இல் செயல் முறைக்குக் கொண்டுவரப்பட்டது.

சுதந்தர அறிக்கையில் (1776) காணப்படும் கொள்கைகள் இந்த அரசியலமைப்பில் அடங்கியுள்ளன. அது, 'எல்லா மனிதரும் சமமாகவே படைக்கப்பட்டனர். பிறரால் மாற்ற இயலாத சில உரிமைகளை இறைவர் அவர்களுக்கு வழங்கியிருக்கின்றார். இந்த உரிமைகளைப் பாதுகாக்கவே மக்களிடையே அரசாங்கங்கள் நிறுவப் பட்டுள்ளன. அரசாங்கங்களின் நியாயமான அதிகாரங்கள் ஆளப் படுவோரின் இணக்கம் எனும் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளன. இந்நோக்கங்களை அழிக்க எம்முறையான அரசாங்கமும் முற்படு மானால், அதை மாற்றி அல்லது அழித்து, புதிய அரசாங்கத்தை நிறுவ மக்களுக்கு உரிமையுண்டு. எம்முறை தமக்குப் பாதுகாப்பையும் இன்பத்தையும் கொடுக்குமென அவர்கள் எண்ணுகிறார்களோ, அதற் கேற்ற கொள்கைகளில் அரசாங்கத்தின் அடித்தளத்தை அமைத்து, அம்முறையில் அதன் அதிகாரங்களை நிறுவலாம்,' என உறுதியாகக் கூறுகின்றது.

இக்காலத்தில் ஆவண முறைப்படி அரசியல் அமைப்புக் குட்படுவது என்று நாம் எதை வழங்குகின்ருேமோ, அதன் உண்மை யான தொடக்கம் என இதைக் கூறலாம். வரலாற்று முறையின் (Historical Method) ஆய்வின்படி, அரசின் பிறப்பை விளக்கும் சமுதாய ஒப்பந்தக் கொள்கையானது ஆதாரமற்றதெனத் தெரிந்தால், அமெரிக்கர்கள் 1789இல் ஒரு புதிய அரசியல் சமுதாயத்தை உருவாக்கினுர்கள் என்பதையும், இன்று வரை அந்நாட்டின் மேலான அதிகாரமாய் இருக்கும் ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு என்ற ஆவணத்தில் அவர்கள் தங்கள் உரிமைகளை நிறுவியுள்ளார்கள் என்பதையும் எவ்வித ஆராய்ச்சியினுலும் வாதத்தினுலும் மறுக்க இயலாது. மேலும், புதிய அரசின் உறுப்புகளாகிய பல பிரிவுகளின் விருப்பங்களையும் நிறைவேற்றத்தக்க ஓர் அரசியல் அமைப்பை அமெரிக்கர்கள் உண்டு பண்ணும் போது, பழைய அரசியல் முறை யாகிய கூட்டாட்சி முறையைப் புதுப்பித்தார்கள். அது பிற்கால அரசியலில் மாபெருமாற்றங்களைச் செய்ய இருந்தது. இதைப்பற்றி இன்னேர் இயலில் விரிவாகப் பார்ப்போம்.

அமெரிக்கர்கள் ரூஸோவின் கருத்துகளில் அதிகமாக ஈடுபட்டார் கள் என்று உறுதியாகக் கூற இயலாது. ரூஸோவின் அரசியல் தத்து வத்தை ஊக்குவித்த அதே ஆர்வந்தான் அமெரிக்க அரசியலமைப்பை எழுதியவர்களுக்கும் உணர்ச்சி அளித்திருக்குமென ஓரளவு கூறலாம். ஆனுல், ரூஸோ பிரெஞ்சுப் புரட்சியின் முதல் இயக்கங்களைத் தொடங் கியவர்களை உந்தித் தள்ளினுர். இப்பெரு நிகழ்ச்சிகளைப் பற்றி நாம் சுருக்கமாகக் கூறலாம். பிரெஞ்சு அரசாங்கம், 1614 முதல் கூட்டப் படாத ஸ்டேட்ஸ் ஜெனரலைப் பண நெருக்கடி காரணமாக 1789 இல் கூட்ட முற்பட்ட போது, ரூஸோவின் இலட்சியக் கோட்பாடுகளையும், அவரைப் பின் பற்றியவர்களின் கொள்கைகளையும் பொது மன்றத் திற்குக் கொண்டு வந்தது. அது இவ்வாறு அவற்றையும் அரசியல் அமைப்பை அறிக்கையிடுவதையும் செயல் முறையில் ஒன்ருக இணைத்தது. 1789இல் கூடிய தேசீய அவை, அதன் முக்கிய அலுவலாகிய அரசியல் அமைப்பைத் தீட்டுவதற்கு முன், 'மனிதன், குடிமகன் இவர்களின் உரிமைகளின் அறிக்கை'யை வரைந்தது. இந்த ஆவணம் ஒப்பந்த முறையான அரசின் பிறப்பு, மக்கள் இறைமை, தனிமனிதரின் உரிமைகள் ஆகிய கொள்கைகளில் தோய்ந் திருந்தது. இதைக் கீழ்க்காணும் பகுதிகளிற் காணலாம் :

மனிதர்கள் சுதந்தரத்துடன் பிறந்து சம உரிமையுடன் வாழ்கின்றுர்கள்......

மனிதனின் வரையறுக்க இயலாத நடைமுறை உரிமைகளைப் பாதுகாப்பது ஒவ்வோர் அரசியற் கூட்டத்திற்குமுரியநோக்கமாகும்.

இவை சுதந்தரம், சொத்து, பாதுகாப்பு, கொடுங்கோன்மைக்கு எதிர்ப்பு ஆகிய உரிமைகளாகும்.........

பிறரை வருத்தாத எதையும் செய்யும் அதிகாரமே சுதந்தரம்; அதன்படி சமூகத்தில் வாழும் உறுப்பினர் பிறரும் தாம் பெற்றுள்ள அதே உரிமைகளைப் பெற்றுள்ளனர் என்ற உண்மைதான் ஒவ்வொரு மனிதனின் இயற்கை உரிமைகளையும் வரையறுக்கும் கட்டுப்பாடாய் இருக்கின்றது. சட்டம் இக்கட்டுப்பாடுகளை வரையறுக்கலாம்........

பொது நல விருப்பம் வெளியிடும் கருத்துதான் சட்டம்......

இறைமை, நாட்டு மக்களிடமே இருக்கிறது......

அரசியலமைப்பை மாற்றக்கூடிய வரையறுக்க இயலாத உரிமை நாட்டு மக்களிடம் இருக்கிறது.

இந்த அறிக்கையை முன்னுரையாகக் கொண்டு 1791இல் வெளியான அரசியலமைப்பு அதிக காலம் நிலைத்திருக்கவில்லை. ஏனெனில், அது ஏற்படுத்திய சட்டமன்றம் பிரான்ஸின் உள்ளே நடந்த குழப்பத்தையும், வெளியே நிகழ்ந்த போரையும் தடுத்து நிறுத்த இயலவில்லை. ஆயினும், இக்கால ஆவண அரசியலமைப்பின் வளர்ச்சியில் அமெரிக்கப் புரட்சி எவ்வாறு முதற்படியிலிருக்கின்றதோ, அவ்வாறே இது இரண்டாவது படியில் இருக்கின்றது. பிரெஞ்சுப் புரட்சியின் தொடக்கக் காலத்தில் ஏற்பட்ட அரசியல் முறைமைக்குட்படுகை, முதலில் பயங்கர ஆட்சியின் (Reign of Terror) குழப்பத்தினாலும் பிறகு அதன் அழிவினின்று தோன்றிய நெப்போலியனது வல்லாட்சியினாலும் வீழ்ச்சியுற்ற போதிலும், புரட்சி என்றுமே நிரந்தரமாக அணைக்க முடியாத அரசியல் சுதந்தரம் என்ற தீயை மூட்டிவிட்டது. வல்லுநர் ஒருவர் கூறுவது போல, பிரான்ஸின், 'சுய ஆட்சிக் குறிக்கோள், மக்களின் இறைமையை ஏற்றுச் செயற்படுத்தாத நிறுவப்பட்ட அரசாங்கம் ஒவ்வொன்றையும் எதிர்த்து நின்றது. இது பிரிட்டனிலும், அமெரிக்காவிலுங்கூட ஒரு போதும் நிகழ்ந்ததில்லை.'

## 8. நாட்டுணர்ச்சியும் முற்போக்குச் சீர்திருத்தமும்

நெப்போலியனது ஆட்சியும் அதனால் ஐரோப்பாவில் ஏற்பட்ட விளைவுகளும் எஞ்சியிருந்ததைச் செய்து முடித்தன. ஏனெனில், அப்போது ஐரோப்பாவில் மக்களாட்சிக் கொள்கைகள் ஓரளவு பரவியிருந்ததனால் (நெப்போலியன் போர் வெறி கொண்டிருந்த போதிலும், புரட்சிக் கருத்துகளைப் பரப்பி வந்ததனால்) அரசியல் முறைமைக்கு

உட்படுகையைப் பரப்புவதற்கு ஒன்று தேவையாய் இருந்தது. அதாவது, கொடுங்கோன்மைக்குட்பட்ட பல சமூகங்களில் தோன்ற வேண்டிய உயிருள்ள ஒரு நாட்டுணர்ச்சி. நெப்போலியன் தன் விருப்பப்படி நாட்டெல்லைகளை மாற்றியமைத்தமையால், குறிப்பாக இத்தாலியிலும் ஜெர்மனியிலும் அவ்வாறு செய்ததால், அவர் கருவாய் இருந்த நாட்டுணர்ச்சியை நசுக்கினர். அது பிறகு தூண்டப் பட்ட போதுதான் அத்தகைய உணர்ச்சி ஏற்கெனவே உருவாகி யிருந்ததென மக்கள் அறிந்துகொண்டார்கள். நெப்போலியன் ஐக்கிய ஐரோப்பிய நாடுகளை உருவாக்க முயன்றபோது உண்மையில் அவை பிணக்கமுற்றுப் பிரிந்தன. அது அவரது அழிவுக்கும் அடி கோலியது. மறுமலர்ச்சியைப் பற்றி விளக்கும்போது நாம் குறிப்பிட்ட தேசீய உணர்ச்சி தெளிவற்றதாயும், பெரும்பாலும் மறைமுகமாக வளர்ச்சி பெற்றதாயும் இருந்தது. நெப்போலியனது தோல்விக்குப் பிறகு உருவான தேசீய உணர்ச்சி முதலில் கொழுந்து விட்டெரியும் பெருந்தீயாய்த் தோன்றி, பிறகு தணலாய்த் தணிந்தது. ஆயினும், பழைய ஆட்சியின் (Old Regime) அமைப்பில் எஞ்சியிருந்த துண்டுகள் அனைத்தையும் சாம்பலாக்கும் வரையில் அது இடை யிடையே சுவாலை விட்டு எரிந்துகொண்டே இருந்தது. லீப்ஸிக் (Leipzig) போரை ‘ நாடுகளின் போர் ’ என வழங்குவது முற்றிலும் பொருந்தும். எனினும், 1814-15இல் ஏற்பட்ட உடன்படிக்கையைச் செய்தவர்கள், அரச குடும்பத்தையும் உயர்குடியையும் சேர்ந்தவர் களாய் இருந்தமையால், போனப்பார்ட்டின் ஆதிக்க வெறியை அமிழ்த் திய இயக்கத்தின் உண்மைப் பொருளை அவர்களால் கண்டுணர இயல வில்லை.

அந்த உடன்படிக்கைகள், புரட்சி வீழ்த்த விழைந்த பழைய வல்லாட்சிகளைப் பல நாடுகளில் மீண்டும் நிலை நாட்டின. மேலும், அவை போருக்கு முன்னிருந்த பழைய எல்லைகளில் பலவற்றை மீண்டும் நிலைநாட்டின. இதைச் செய்ய இயலாத இடங்களில் அவை நிலப்பரப்புகளையும் மக்களையும் பழைய ஆட்சிப் பகுதிகளிலிருந்து துணித்து, புரட்சி பரப்பிய கருத்துகளுக்கு முரணான முறையில் புதிய பகுதிகளோடு இணைத்தன; இதை வெற்றி பெற்றவர்கள் ஆற்றலுக்கும் கொள்கைக்கும் உரிமைகளுக்கும் ஏற்பச் செய்தன. இதன் விளைவு என்னவென்றால், அரசியல் முறைமைக்குட்பட்ட தேசீய அரசு எங்கும் தோன்றுவது தடைபட்டது. ஆயினும், அதை முற்றிலும் தடுத்து விட இயலவில்லை. இதனால் ஏற்பட்ட இன்னொரு விளைவு, சீர்திருத்த வாதிகளின் ஆர்வம் மறைமுகமாய் வளர்ந்து இடையிடையே புரட்சி வடிவில் வெளிப்பட்டது. இது, ஒருங்கே இணைந்து நிற்க வேண்டிய நாட்டுணர்ச்சியையும் முற்போக்குச் சீர்திருத்தத்தையும் ஒன்றோ டொன்றைக் குழப்பிவிட்டது. ஐரோப்பாவில் அமைதியை நிலைநாட்ட

வேண்டிய பொறுப்புடைய அரசியல் வாதிகள், இப்புரட்சி ஆர்வத்தைத் தோன்றும் இடமெல்லாம் நசுக்கிவந்தார்கள். ஆனால், நாளடைவில் அவர்களது அதிகாரம் தளர்ந்தது. 1830-ஆம் ஆண்டில் பல ஐரோப்பிய நாடுகளில் பெரும்புரட்சி நிகழ்ந்தது. வழக்கம் போல அது பிரான்ஸில் தொடங்கியது. அப்போது அங்கு மீண்டும் நிறுவப்பட்ட பூர்போன் மரபு வீழ்த்தப்பட்டு, லூயி பிலிப்பின் (Louis Philippe) கீழ் இன்னும் குறைந்த அதிகாரமுள்ள முடியரசு ஏற்படுத்தப்பட்டது. இது மட்டுந்தான் அப்போது வெற்றி பெற்ற இயக்கமாகும். ஆனால், பெல்ஜியத்திலும் அரசியல் முற்றமைக்குட்பட்ட முடியரசின்கீழ் ஒரு புதிய சுதந்தர அரசு நிறுவப்பட்டது. 1830இல் நடந்ததைவிட மிகப் பெரிய புரட்சிகள் 1848இல் நடைபெற்றன. அவை தேசீய ஒற்றுமையின் அடிப்படையில் தோன்றாத முற்போக்கு இயக்கத்தின் வலுவின்மையை மறுபடியும் எடுத்துக்காட்டின. அப்போது அறிக்கையிடப்பட்ட அரசியலமைப்புகளில் பிரான்ஸ், ஸார்டீனியா, நெதர்லாந்து, சுவிட்ஸர்லாந்து ஆகியவற்றின் அரசியலமைப்புகளே பிற்போக்கு அடக்கு முறையினின்று பிழைத்தன. இவற்றுள் முதலாவது கூறியது 1852இல் லூயி நெப்போலியனின்கீழ் நிறுவப்பட்ட இரண்டாவது பேரரசில் அமிழ்ந்து மறைந்து போயிற்று. இரண்டாவது கூறியது, இத்தாலியின் ஒற்றுமை இயக்கத்துடன் இணைக்கப்படும் வரையில் வலுவின்றி நிலைத்து நின்றது.

எனவே, 1848இன் தோல்விகளுக்குப் பிறகு முற்போக்குச் சீர்திருத்தவாதிகளின் ஆர்வம் ஒரு புதிய திருப்பத்தை அடைந்தது. அப்போது புரட்சி முறை தோற்றுவிட்டதென்பது தெளிவாய்த் தெரிந்ததோடல்லாமல், அரசியற்சிக்கல்களை அமைதியான முறையில் தீர்ப்பதற்கு முக்கியமான புதிய ஆற்றல் ஒன்றும் முயன்று வந்தது. இது நாம் தொழிற்புரட்சி (Industrial Revolution) என்று வழங்கும் நீண்ட பெருமாற்றங்களின் விளைவாகும். அப்புரட்சி இங்கிலாந்தில் 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தொடங்கியது. அப்போது புதிய புதிய பொறிகள் கண்டுபிடிக்கப்பட்டன. அதன் விளைவாகத் தொழில் உற்பத்தியில் இயந்திரச்சத்தி பயன்படுத்தப்பட்டது. அதிலிருந்து தொழிற்சாலை முறையும், இக்கால முதலாளித்துவ முறையும் தோன்றின. இறுதியில் சமூக ஆற்றல்கள் முற்றிலும் மாற்றியமைக்கப்பட்டன. அரசியற்சமநிலையிலும் அடிப்படையான மாற்றம் நிகழ்ந்தது. இப்பொருளாதாரப் புரட்சி இங்கிலாந்தில் நடைபெற்ற போது இதனால் அரசியல் நிலையில் தவிர்க்க முடியாத ஒரு மாற்றம் ஏற்பட்டது. அது சமூகத்தில் வேளாண்மை வகுப்பினரின் பெருஞ்செல்வாக்கை அழித்து, முதலாளிகள் என்ற புதிய நடுத்தர வகுப்பை உண்டுபண்ணியது. அவர்கள் காலம் போகப்போகத் தமக்கும் அரசியல் உரிமைகள் வழங்கப்பட வேண்டுமென வற்புறுத்தினார்கள்.

1832-ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட சீர்திருத்தச் சட்டம் இவ்வகுப்பாருக்கு உரிமை அளித்தது. இச்சட்டம் பல நூற்றுண்டுகளாய்க் குவிந்துவந்த குறைகளை அறவே அகற்றி, முந்திய அரசியல் சிறப்பை இழந்துவிட்ட பகுதிகளுக்குப் பிரதிநிதித்துவம் வழங்குவதை அழிக்கும்வகையில் பாராளுமன்ற இடங்களைப் பகிர்ந்து கொடுத்தது. மேலும், அது தொழில் மாற்றங்களால் முன்னேற்றமடைந்த புதியநகரப் பகுதிகளுக்குப் பாராளுமன்றம் பிரதிநிதித்துவம் வழங்கியது. இவ்வாறு செய்ததால் அது முதலாளிகளுக்கு வாக்குரிமை அளித்தது. அது முற்றிலும் மக்களாட்சி முறையை அமைக்காவிடினும், அதற்கு முதற்படியாய் இருந்தது. அப்போதிருந்த அரசாங்க முறைகளைப் புரட்சிகரமாக மாற்ருமல் இச்சீர்திருத்தத்தைச் செய்ய முடியுமெனக் கண்டதால், அச்சட்டம் புரட்சி முறையிலல்லாமல் அரசியலமைப்பு முறையிலே அதைச் செய்தது. நடுத்தர வகுப்பிற்கு வாக்குரிமை வழங்கப்பட்டதால், 18-ஆம் நூற்ருண்டில் ஏற்கெனவே உறுதியாய் நிலைபெற்ற அமைச்சரவை முறை, அதாவது நிருவாகத் துறையைப் பாராளுமன்றம் கட்டுப்படுத்தும் முறை, வலுப்பெற்றது. இதைச் செய்வதற்கு அரசியல் ஈர்ப்பின் மையத்தைப் பிரபுகள் சபையிலிருந்து பொதுமக்கள் சபைக்கு மாற்றி, அமைச்சரவை முறை நிலைபெறுவதற்கேற்ற புதிய கட்சிப் பிரிவுகளை உண்டுபண்ண வேண்டியிருந்தது.

தொழிற்புரட்சியிலிருந்து புறப்பட்ட இப்பேரியக்கம் ஐரோப்பவிற்குப் பரவியது. அவ்வாறு பரவும்போது அதனுல் ஏற்பட்ட விளைவுகள் அரசியல் அமைப்பு முறையில் மாற்றங்கள் ஏற்படுவதை ஆதரித்தன. ஏனெனில், அது அப்போதிருந்த அரசாங்கங்களுக்கும், புதிய முதலாளிகளுக்குமிடையே ஓர் உறவை உண்டுபண்ணியது. இப்புதிய முதலாளிகள் எல்லாவற்றிற்கும் மேலாக ஒழுங்கையும் அமைதியையும் நாடினுர்கள். மேலும், அவ்வியக்கம் பொருளாதாரப் பாதுகாப்பு எனும் கொள்கையைத் தூண்டி, ஏற்கெனவே இருந்து வந்த தேசீய உணர்ச்சியைப் படிப்படியாக உறுதிப்படுத்தியது. ஏனெனில், தொழில் வளர்ச்சி பெருத நாடு தொழில் மாற்றங்கள் காரணமாகப் பொருள்களை மிக மலிவாக விற்கக்கூடிய பிற நாடுகளுடன் போட்டியிட ஒரே வழி, அந்நாடுகளின் இறக்குமதிப் பொருள்களின்மீது வரி விதித்து தம் வளத்திஞல் உற்பத்தியை வளர்க்கவல்ல தொழில்களைப் பேணுவதாகும்.

ஆனுல், இம்மாற்றங்களின் பயனுக நகரங்களில் கூலியாள்கள் பெருங்கூட்டமாய் வாழத் தொடங்கினுர்கள். அவர்களும் அரசியல் உரிமைகள் பெற விழைந்தார்கள். இங்கிலாந்தில் முதலில் இது சாசன இயக்கமென்ற தொழிலாளர் இயக்கத்தைத் தோற்றுவித்தது. இதன் நோக்கம் அரசாங்கத்தை வற்புறுத்திப் பிற சீர்திருத்தங்களோடு

வாக்குரிமைச் சீர்திருத்தத்தையும் வழங்கச்செய்வது. இதன் வெற்றிக்குப் பிறகு 1867 இலும் 1884-85 இலும் இரு சீர்திருத்தச் சட்டங்கள் இயற்றப்பட்டன. அவற்றின் விளைவாக வீட்டில் வாடகைக்குத் தங்கியிருப்பவர்களுக்கும், பயிர்த்தொழிளாளர்களுக்கும் வாக்குரிமை அளிக்கப்பட்டது. ஆனால், பல நாடுகளில் அத்தகைய உரிமைகளை வழங்குவதற்கேற்ப அரசாங்க அமைப்பைத் திருத்துவதற்கு முன், இருக்கும் அரசாங்கத்தைக் கவிழ்த்துப் புதிய சமூக முறையை நிறுவ முயன்ற புரட்சிக் கொள்கைகள் உலவின. இக்கொள்கைகளில் தலையாயது கார்ல் மார்க்ஸின் சமதர்மக்கொள்கை (Socialism) ஆகும். மார்க்ஸ் தமது 'பொது உடைமை அறிக்கை'யிலும் (Communist Manifesto-1848) பிந்திய நூல்களிலும் பாராளுமன்ற நிறுவனங்களின் அரசியல் முறைமைக்குட்பட்ட வளர்ச்சியையும்; நாட்டினம் என்ற கருத்து முழுவதையும் தாக்கினர். தேசீய அரசியல் முறைமைக்குட்படுகை இந்தப் புரட்சிக்கொள்கையை எதிர்த்து உறுதியுடன் நிற்க இயலுமா என்பதே அப்போது எழுந்த கேள்வி. 19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியின் வரலாறு இக்கேள்விக்கு ஓரளவு விடையளித்தது.

## 9. பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் தேசீய அரசியல் முறைமைக்குட்படுகை

19-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியை ஆவண அரசியலமைப்புகளின் பொற்காலம் எனலாம். பிரிட்டிஷ், அமெரிக்க அரசியலமைப்புகளைத் தவிர, இப்போதுள்ள வேறு எந்த அரசியலமைப்பும் 19-ஆம் நூற்றுண்டுக்கு முற்பட்டதன்று. அந்நூற்றுண்டின் முற்பகுதியிலிருந்த அரசியலமைப்புகளில் பெரும்பாலானவை முற்றிலும் மறைந்து அவற்றுக்குப் பதிலாகப் புதியவை தோன்றின. அல்லது அவற்றின் அடிப்படைக் கொள்கைகளே திருத்தி மாற்றியமைக்கப்பட்டதால், அவை உண்மையில் புதியனவாய்க் காணப்பட்டன.

அரசியல் முறைமைக்குட்படுகை என்ற இப்பெரிய எழுச்சி இத்தாலி, ஜெர்மனி ஆகிய நாடுகளின் ஒற்றுமை இயக்கங்களில் தோன்றியது. இவை பிரான்ஸில் 1870-ஆம் ஆண்டுப்போரின் பிறகு அறிக்கையிடப்பெற்ற குடியரசு அரசியலமைப்பிற்குப் பெரும்பாலும் காரணமாயிருந்தன. இத்தாலியில் 1848-ஆம் ஆண்டில் நிகழ்ந்த பெருங்கேட்டிற்குப் பிறகு உயிர் பிழைத்த மூன்று அரசியலமைப்புகளில் ஸார்டீனியாவின் அரசியலமைப்பு ஒன்றென்பதைப் பார்த்தோம். இத்தாலி இன்னும் ஏழு அரசுகளாய்ப் பிரிக்கப்பட்டிருந்தது. ஆனால், அந்நிலை நெடுங்காலம் நீடிக்கவில்லை. 1859இலிருந்து 1870க்குள்ளாகப் பல புரட்சிகளினாலும் போர்களினாலும் பல அரசுகள் ஸார்

டீனியாவுடன் இணைக்கப்பெற்றன. அவற்றுள் ஒவ்வொன்றும் இணைக்கப்பட்ட போது ஸார்டீனியாவின் அரசியலமைப்பை ஏற்றுக் கொண்டன. இவ்வாறு இறுதியில் இத்தாலிய முடியரசு உருவானது. ஜெர்மனியில் 1848இன் தோல்விக்குப் பிறகு முன்னிருந்த முறை புதுப்பிக்கப்பட்டது. ஆனால், 1864 முதல் 1871 வரை பிஸ்மார்க்கின் முயற்சியினால் மூண்ட மூன்று போர்களின் விளைவாக டென்மார்க்குத் தோல்வியுற்று ஷ்லெஸ்விக், ஹோல்ஸ்டீன் எனும் பகுதிகளை இழந்தது. ஜெர்மானியக் கூட்டமைப்பிலிருந்து ஆஸ்திரியா வெளியேற்றப்பட்டது; பிரான்ஸில் இரண்டாவது பேரரசு சரிந்தது. இவ்வாறு நான்கு புதிய அரசியல் முறைக்குட்பட்ட அரசுகள் தோன்றின. 1864இல் டென்மார்க்கில் முடியரசின்மேல் பாராளுமன்ற முறை திணிக்கப்பட்டது. ஆஸ்திரியாவிலும், ஹங்கேரியிலும் 1869இல் இணைந்த இரு முடியரசுகளின்கீழ், புது அரசியலமைப்புகள் தோன்றின; ஜெர்மனியில் 1871இல் ஜெர்மானியப் பேரரசு நிறுவப்பட்டது. பிரான்ஸில் 1875இல் மூன்றுவது குடியரசு உருவானது.

இந்த அரசியலமைப்புகளுள் ஒவ்வொன்றும் பாராளுமன்ற நிறுவனங்களை ஏற்றுக்கொண்டன. இவை ஒரு சில மாற்றங்களைத் தவிரப் பெரும்பாலும் பிரிட்டிஷ் அமைப்பைப் போன்றிருந்தன. ஒவ்வொன்றிலும் மக்களாட்சியின் இயல்புகள் காணப்பட்டன. ஆனால், முற்போக்குச் சீர்திருத்தத்தின் கோரிக்கைகள் அனைத்தையும் ஏற்கும் அளவிற்குப் பாராளுமன்றம் அதிகாரம் பெறவில்லை. மேலும், நாட்டுணர்ச்சி ஓரளவுதான் வெற்றி பெற்றிருந்தது. இத்தாலி நாட்டின் எல்லைகளுக்கு வெளியில் ட்ரீஸ்ட் (Trieste), ட்ரென்டினோ (Trentino) எனும் இடங்களில் இத்தாலியர்கள் இன்னும் ஆஸ்திரியாவின் இறைமை அதிகாரத்துக்குட்பட்டு வாழ்ந்தார்கள். ஆஸ்திரியா-ஹங்கேரியைப் பல நாடுகள் சார்ந்திருந்தமையால், அதை ஒரு தேசீய அரசெனக் கூற இயலாது. ஜெர்மனி ஆஸ்திரியா - ஹங்கேரியைவிட அதிக நாட்டுணர்ச்சி பெற்றிருந்த போதிலும், அதன் எல்லைக்குள் போலந்து மக்களுள் பலர் வாழ்ந்தனர். மேலும், அது 1871இல் பெற்ற வெற்றியின் பரிசாக, பிரான்ஸிடமிருந்து அல்ஸேஸ், லொரெய்ன் என்னும் இரு மாநிலங்களைப் பறித்துக்கொண்டது.

இந்நிகழ்ச்சிகளுக்குப் பிந்திய காலத்தில், தேசீயம் துருக்கியின் காலால் இன்னும் சவட்டப்பட்டுவந்த பால்கன் (Balkan) மக்களின் போர்க் குரலாய் மாறியது. 1878இல் ரஷ்யாவிற்கும் துருக்கிக்கும் இடையே நிகழ்ந்த போரின் விளைவாகவும், பெர்லின் மாநாட்டில் வல்லரசுகள் இச்சிக்கலில் காட்டிய ஆர்வத்தின் பயனாகவும் மூன்று புதிய அரசுகள் நிறுவப்பட்டன. அவை ஸெர்பியா, மான்டிநீகிரோ, ருமேனியா என்பவை. 1832இல் கிரீஸ் சுதந்தரமடைந்தது. அங்கு

1864இல் வெளியிட்டப்பட்ட அரசியலமைப்பின்படி ஆட்சி நடந்தது. பெர்லின் உடன்படிக்கையின்படி ஓரளவு விடுதலை பெற்ற புல்கேரியாவும், துருக்கியும் மட்டும் எஞ்சியிருந்தன. 1876இல் இரண்டாம் அப்துல் ஹமீது ஆட்டோமன் பேரரசு முழுவதற்கும் ஓர் அரசியல் அமைப்பை அறிவித்தார். ஆனால், அது இரண்டு ஆண்டுகளில் மறைந்தது, 1908இல் இளந்துருக்கியர் கட்சி இந்த அரசியல் அமைப்பைப் புதுப்பித்து, அப்துல் ஹமீதைப் பதவியிலிருந்து விலக்கி, துருக்கியை அரசியல் முறைமைக்குட்பட்ட முடியரசாக மாற்றியது. துருக்கியில் நிகழ்ந்த இக்குழப்பங்களைப் பயன்படுத்திக்கொண்டு புல்கேரியா அதே ஆண்டில் தான் முழுத்தேசீயச் சுதந்தரம் பெற்றுவிட்டதாக அறிவித்தது.

இவ்வாறு மேல் நாட்டு முற்போக்குக் கொள்கையின் பயனாக, நெடுநாளாகத் துருக்கியரின் கீழ்நாட்டு வல்லாட்சியினால் நசுக்கப் பட்டுவந்த ஐரோப்பாவின் தென்கிழக்கு மூலைப்பகுதி, இருபதாம் நூற்ருண்டின் முதற்பத்தாண்டுகளில் அரசியல் முறைமைக்குட்படுகையின் வடிவத்தையாவது பெற்றது. அங்கு ஒவ்வொரு பகுதியிலும் தேசீயத்தின் அடிப்படையில் ஒரு புதிய அரசு நிறுவப்பட்டது. விடுதலை பெறும் நோக்குடனே மக்கள் தேசீயக் கொள்கையை ஏற்றுக்கொண்டார்கள். ஆயினும், ஒரு பகுதியிலும் தேசீய ஆர்வம் முழு நிறைவெய்தவில்லை. இதன் விளைவாக 1912, 1913இல் பால்கன் போர்கள் நிகழ்ந்தன. ஆயினும், முற்போக்கான அரசியலமைப்புக்குட்பட்ட அரசை அமைக்கத் தேசீய ஜனநாயகம் ஒரு சிறந்த அடிப்படையாய் விளங்குமென்ற நம்பிக்கை எவ்வளவு பரவியிருந்ததென்பதை பால்கன் தீபகற்பத்தின் வரலாற்றில் 19-ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியும், 20-ஆம் நூற்ருண்டின் தொடக்க ஆண்டுகளும் காட்டுகின்றன.

## 10. அரசியல் முறைமைக்குட்படுகையும் முதல் உலகப் போரும்

1914இல் முதல் உலகப் போருக்கு முன், ரஷ்யாவைத் தவிரப் பிற எல்லா ஐரோப்பிய அரசுகளும் தேசீய அரசியலமைப்புக்குட்படுகையை ஏதாவதொரு வகையில் செயல் முறையில் ஆய்ந்து வந்தன. ரஷ்யாவில் ஓரளவு தேர்ந்தெடுக்கப்பட்ட அவையை (Duma) நிறுவுவதுடன் அரசியல் முறைமைக்குட்படுகையின் முயற்சிகள் முடிவடைந்தன. 1906இல் அந்த அவை தொடங்கியது முதல் வளர்வதற்குப் பதிலாக வலுவிழந்துகொண்டே வந்தது. அரசியல் முறைமைக்குட்படுகை ஐரோப்பா, அமெரிக்க ஐக்கிய நாடுகள், சுய ஆட்சி பெற்ற பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள் இவற்றினுள் அடைபட்டுக் கிடக்கவில்லை. அது தொலைவிலுள்ள தென்

னமெரிக்கா, ஜப்பான், சீனுவைப்போன்ற உலகின் புறஎல்லைகளிலுள்ள பல நாடுகளில் பரவியது. இக்கால ஏகாதிபத்தியக் கொள்கையினுலும் தொழிற்புரட்சியின் பொருளாதார விளைவுகளாலும் உலகம் ஐரோப்பிய மயமானது. இதன் பயனுகப் பழைய உலகின் அரசியற்கோட்பாடு களும், அதன் அரசியற்பழக்கங்களும் பலவிடங்களில் பரவி நிலை பெற்றன. இந்த அரசியல் முறைமைக்குட்படுகை எப்போதும் பிரிட்டிஷ் மாதிரியை அல்லது அமெரிக்க ஐக்கிய நாடுகளில் காணப் படும் அதன் மாற்றுருவைப் பின் பற்றி வந்தது. அதாவது, அது பிரதிநிதித்துவ நிறுவனங்களை நிலை நாட்டி, நாட்டினத்தை அரசின் அடிப்படை ஆக்கியது. சீனுவில் காணப்படுவதைப்போல நாட்டின உணர்ச்சி இல்லாத பகுதிகளில் அரசியல் முறைமை தேசீய உணர்ச் சியை வளர்த்து அதை ஓர் அரசியல் அரங்காகப் பயன்படுத்தியது.

அரசியல் முறைமைக்குட்படுகை ஐரோப்பாவில் அதிக வளர்ச்சி பெற்றிருந்தபோதிலும், பிரதிநிதித்துவ ஜனநாயகத்தையும் தேசீயத் தையும் பொறுத்த வரையில் இன்னும் அதிகமாக வளரவேண்டி யிருந்தது. பிரான்ஸ் தானிழந்த மாநிலங்களையும், இத்தாலி தனது 'மீட்கப்படாத இத்தாலி'யையும் (Italia Irredeata) திரும்பப்பெற வேண்டியிருந்தது. ஜெர்மனியில் ஜெர்மானிய இனத்தைச் சேராத டேனர்கள் வடபகுதியிலும், போலந்தியர்கள் கிழக்குப் பகுதியிலும் வாழ்ந்து வந்தார்கள். ஆஸ்திரியா–ஹங்கேரியில் ஜெர்மானியர், மேகியர், (Magyars). தென் ஸ்லாவ்கள் (South Slavs), பொஹீமியர் (Bohemians), போலந்தியர், ருமேனியர் ஆகியோர் வாழ்ந்ததால், அது 'சரிந்த பேரரசு' என மிகப் பொருத்தமான பெயரில் வழங்கப் பட்ட ரஷ்யாவின் மேற்கு எல்லையில் ஃபின்கள் (Finns), எஸ் டோனியர் (Estonians), லெட்டுகள் (Letts), லித்துவேனியர் (Lithuanians), போலந்தியர், ருமேனியர் ஆகியோர் கலந்துறைந்த னர். துருக்கியின் ஒரு பகுதி இன்னும் ஐரோப்பாவிலிருப்பதை, பால்கன் மக்கள் தங்கள் நாட்டினத்திற்கே ஓர் அவமதிப்பாகக் கருதினுர்கள். அரசியலமைப்பு வழங்கும் உரிமைகளுக்குத் தேசீய உணர்ச்சி மட்டும் ஒரே உறுதியான அடிப்படையாய் இருந்ததென வரலாறு சான்று பகர்வது போலத் தெரிந்தது. அது உண்மையெனில் தேசீய ஒற்றுமையின் குறிக்கோள்களை அமைதியான முறையில் அடைய முடியுமா, அல்லது அதைப்பெற ஒரு பெருங்குழப்பம் தேவைப்படுமா என்னும் ஒரு முக்கியக் கேள்வி பிறந்தது. குழப்பம் தேவையெனினும், இல்லையெனினும், 1914இல் முதல் உலகப் போர் தொடங்கியதும் பெருங்குழப்பமும் தோன்றியது. மேலும், சில அரசு களில் அரசியலமைப்பு இருந்தபோதிலும், அங்கு அரசியல் நிறுவனம் ஜனநாயக வடிவைப் பெறவில்லை. இதன் முக்கியக் காரணம் அங்கு நிருவாகத் துறையைப் பொதுமக்கள் கட்டுப்படுத்தாமையே. இது குறிப்பாக ஜெர்மனியில் காணப்பட்டது.

ஆகவே, உட்ரோ வில்சன் கூறியது போல, உலகை மக்களாட்சிக்கெனக் காப்பதற்காக நிகழ்ந்த போரின் முக்கிய விளைவாக அரசியலமைப்புக்குட்படுகை செழித்துத் தழைத்தது என்பதில் வியப்பொன்றுமில்லை. மக்களின் சுய ஆட்சி என்ற அடிப்படையிலேதான் நிலையான அமைதியை நிறுவ இயலுமெனப் போரில் வெற்றி பெற்ற நாடுகள் வலியுறுத்தின. அதன்படி நசுக்கப்பட்ட நாட்டினங்கள் கூடுமான வரை தேசீய அடிப்படையில் உரிமை பெற்ற அரசியல் சமூகங்களாக நிலைநாட்டப்பெற வேண்டும். இக்கொள்கைக்கேற்ப நான்கு பெரும் பேரரசுகளான ஜெர்மனி, ஆஸ்திரியா, ரஷ்யா, துருக்கி ஆகியவற்றை ஓரளவு அல்லது முற்றிலும் கூறுபோடவேண்டியிருந்தது. போர் இதை ஏற்கெனவே பெரும்பாலும் செய்துவிட்டது. புதிய சீரமைப்பின்படி, இது வரை மூன்று அரசுகள் மட்டுமிருந்த மத்திய, கிழக்கு மத்திய ஐரோப்பாவில் இப்போது பல சிறு அரசுகள் தோன்றின. சமாதான உடன்படிக்கைகள் பின்லாந்து (Finland) எஸ்தோனியா (Estonia), லாட்வியா, லித்துவேனியா, போலந்து, ஸெக்கோஸ்லவாக்கியாப் போன்ற இறைமை பெற்ற புதிய அரசுகளை உருவாக்கி, ஜெர்மனி, ஆஸ்திரியாப் போன்ற பிறவற்றைத் தனித் தனியாகப் பிரித்தன. அவை (பிரிந்த பிறகு யூகோஸ்லாவியா என்று வழங்கப்பட்ட) ஸெர்பியாவையும், ருமேனியாவையும் பெரியவையாக்கின.

இம்மாற்றங்களினுல் ஒவ்வோர் அரசிலும் ஒவ்வோர் ஆவண அரசியலமைப்பு ஏற்பட்டது. ஏனெனில், புதிய அரசுகளில் இறைமை அதிகாரம் பெற்ற அரசாங்க முறை நிலவவில்லை. பழைய அரசுகளில் போருக்கு முன்னிருந்த ஆட்சியை வீழ்த்திய புரட்சி நடைபெற்றது. இந்த எல்லா அரசுகளிலும் ஆளுரிமை (Personal liberty), மக்கள் இறைமை, நாட்டுணர்ச்சி ஆகியவை அரசியலமைப்புகளின் இயல்புகளாய் விளங்கின. இவை எல்லாம், பிரிட்டனில் நடப்பது போல, பாராளுமன்றம் நிருவாகத்தைக் கட்டுப்படுத்தும் முறையைச் சில மாற்றங்களுடன் ஏற்றுக்கொண்டன. பல நாடுகள், எல்லோருக்கும் வாக்குரிமையளிப்பதில் பிரிட்டிஷ் முறையையும் விஞ்சின. சாசனங்களைப் பொறுத்தவரையில் மக்களாட்சி உண்மையாக வெற்றி பெற்றதெனக் கூறலாம். போர்த்திறமை, பொருளாதார உறுதி நிலை இவற்றைப் பொறுத்த வரையில் தேசீயம் வெற்றி பெற்றதெனக் கருதலாம். முன்னிருந்தது போல நாட்டினத்தைச் சேராத சிறுபான்மையோர் இருந்தனர் என்பது உண்மைதான். குறிப்பாக இத்தாலியில் ஆஸ்திரேலிய ஜெர்மானியரும், விரிந்த ருமேனியாவில் மேகியரும் இருந்தனர். ஆனால், இவர்கள் முன்னிருந்த அளவில் இருக்கவில்லை.

முதல் உலகப் போரின் விளைவாக அரசியல் முறைமைக்குட்படுகை இன்னும் அதிகமாக வளர்ச்சியடைந்தது. அதைச் சர்வதேச

சங்கத்தின் பிறப்பில் காணலாம். அதை அடைந்தவர்கள் சங்கத்தின் ஒப்பந்தத்தில் கையொப்பமிடுவதையும் சமாதான உடன்படிக்கையில் கையெழுத்திடுவதையும் ஒரே செயலாகக் கருதினார்கள். பல அரசுகள் ஒன்று சேர்ந்து ஒரு குறிப்பிட்ட ஒழுங்குத் திட்டத்தின் கீழ்ப் பல உறுப்புகளையுடைய நிறுவனத்தை அமைத்தது இதுதான் வரலாற்றில் முதல் முறையாகும். சங்கம் செயலறிவினாலும் செயலாய்வினாலும் தோன்றியது. அதன் அரசியலமைப்பு முறை அதை அமைத்த நாடுகளின் முறையை ஒத்திருந்தது. அதன் அமைப்புச் செயலறிவுக்கும் சூழ்நிலைகளுக்கும் ஏற்றவாறு அதை விரிவாக்கவும் திருத்தியமைக்கவும் இடம் கொடுத்தது. அது இறைமை அதிகாரங்களையுடைய உரிமை பெற்ற ஒரு நிறுவனமாய் இருந்ததென்பதற்காக நாம் அதை அரசியல் முறைமைக்குட்பட்ட செயலாய்வு என வழங்குவதில்லை. (ஏனெனில், அது அவ்வாறு இருந்ததில்லை.) அதை ஏன் அவ்வாறு வழங்குகிறோம் என்றால், அது, தன் உறுப்புகளாகிய இறைமை அதிகாரமுடைய அரசுகளுக்கிடையில் ஏற்படும் பிணக்கங்களைத் தடுக்க அல்லது அவற்றை அமைதியான முறையில் தீர்த்து வைக்க முயன்றது. ஆகவே, அது, இது வரை பல மேற்கு நாடுகள் அடைந்த அரசியல் அமைப்பின் முன்னேற்றத்தை ஒத்திருந்தது.

## 11. இரு போர்களுக்கிடையில் அரசியலமைப்புக்கு உட்பட்ட அரசாங்கத்திற்கு எதிராக எழுந்த எதிர்ப்பு

போர் முடிந்த உடன், மனித உரிமைகளையும் சட்ட நீதியையும் நிலை நாட்டுவதில் தேசீயமும் பிரதிநிதித்துவ மக்களாட்சியும் ஒன்று சேர்ந்து ஏறக்குறைய முழு வெற்றி பெற்றது போலத் தோன்றியது. அப்போது அரசியல் முறைமைக்குட்படுகையில் கண்டறிந்த உண்மைகள், உலக அமைதி பற்றிய சிக்கலைத் தீர்ப்பதற்கு இறுதியில் வெற்றிகரமாகப் பயன்பெறுமென்பது தெரிந்தது. ஆனால், அரசியல் சாசனங்களினால் மட்டும் பயனேற்படாது என்பதும், அவை யாருடைய நலனுக்காகத் தீட்டப்படுகின்றனவோ அம்மக்களிடையே அவற்றைச் செயற்படுத்த வேண்டுமென்ற விருப்பாற்றல் இல்லையெனில் அரசியலமைப்புக்கு முரணான செயல்கள் தோன்றி அவற்றைப் பயனற்றதாக்கிவிடும் என்பதும் தெளிவாய்த் தெரிந்தன. ஆகவே முதல் உலகப் போருக்குப் பின் ஏற்பட்ட உடன்படிக்கைக்குப் பிறகு ஐரோப்பாவின் பல அரசுகளில் ஜனநாயக அரசியலமைப்புகளுக்கு எதிராக அதிகாரத்துவ (authoritarian) முறை முளைத்தது.

ரஷ்யர்களே முதன்முதலில், நாம் இங்கு விளக்கிய அரசியல் முறைமைக்குட்படுகையைக் கைவிட்டார்கள். 1917–ஆம் ஆண்டில் நிகழ்ந்த ரஷ்யப் புரட்சியை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதலது மார்ச்சுத் திங்களில் நிகழ்ந்த அரசியல் அல்லது முற்போக்குப்புரட்சி. அது ஜாரின் தன்னரசைத் தகர்த்து, ஓரளவு பிரெஞ்சு முறையில் அமைக்கப்பட்ட பாராளுமன்றத்தையும் (Duma), அமைச்சரவை யையும் கொண்ட ஒரு குடியரசு அரசியலமைப்பை நிறுவியது. இரண்டாவது, நவம்பர்த் திங்களில் நடைபெற்ற சமூக அல்லது போல்ஷவிக்குப் புரட்சி. இது 'டூமா' என்ற பாராளுமன்றத்தை அழித்துத் தொழிலாளரின் குடியரசை நிறுவியது. இடைப்பட்ட எட்டு மாத காலத்தில் தொழிலாளர்களின் சபைகளான சோவியத்துகளும் டூமாவும் இணைந்து நின்றன. ஆனால், புதிய பாராளுமன்ற முறையி னால் பயன் விளையுமா எனப் பார்ப்பதற்கு முன்னே லெனின் தலைமை யின்கீழ்ப் பணியாற்றிய போல்ஷவிக்குகள் ரஷ்யாவைச் சோவியத்து களின் குடியரசென அறிக்கை விட்டார்கள். முதலில் இக்குடியரசு ரஷ்யாவிற்குள் மட்டும் அடைபட்டுக் கிடந்தது. ஆனால், பிறகு இது போன்ற புரட்சிகள் ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் பரவிப் பழைய ரஷ்யப் பேரரசின் பிற பகுதிகளிலும் தோன்றின. 1923இல் பல புதிய அரசுகள் ஒன்றாய் இணைந்து சோவியத்து சோஷலிஸ்டுக் குடியரசு களின் ஐக்கியம் ((U. S. S. R.) என்ற கூட்டரசை அமைத்தன.

1918இல் லெனின் ஓர் அரசியலமைப்பை ஏற்படுத்தினார். 'தொழிலாளர், சுரண்டப்பட்டவர் ஆகியோரின் உரிமைகளின் அறிக்கை' அதன் முன்னுரையாக அமைந்தது. இச்சொற்றொடர், மேல் நாடுகளின் அரசியல் முறைமைக்குட்படுகையினின்று ரஷ்யமுறை எவ்வளவு மாறுபட்டிருந்ததென்பதைத் தெளிவாகக் காட்டுகிறது. மார்க்ஸின் கொள்கையைச் செயற்படுத்தும் வகையில் ரஷ்யாவின் புதிய ஆட்சி முறை, பெரும்பான்மையோரின் அரசியல் முறைமைக் குட்பட்ட ஆட்சியை நிறுவுவதற்குப் பதிலாக, தொழிலாளரின் வல்லாட்சியை நிறுவ முற்பட்டது. லெனினின் மூலக் கொள்கையை விளக்கும்போது ஸ்டாலின் இதை 'உண்மையில் தொழிலாளரை வழி நடத்தும் ஆற்றலாகிய பொதுவுடைமைக் கட்சியின் வல்லாட்சி'[7] எனக் கூறுகிறார். ஆயினும், 1936இல் ஸ்டாலின் வெளியிட இருந்த புதிய அரசியலமைப்பு, சில மேல் நாட்டுக் கருத்துகளை ஏற்றுக்கொண்டது. மேலும், புரட்சியின் விளைவாக ஒரு புதிய சமூக அமைப்புத் தோன்றியது. அதில் முந்திய முதலாளித்துவ வகுப்பு களிடமிருந்து சொத்துகள் பறிக்கப்பட்டு எல்லா வகைச் செல்வங் களும் பொதுவுடைமையாக்கப்பட்டன. இவ்வாறு 1971 க்குப் பிறகு தோன்றிய சோவியத்து முறையில், அதை அரசியல் முறைமைக்குட்

பட்ட அரசிலிருந்து வேறுபடுத்திய இரண்டு இயல்புகள் காணப் பட்டன. முதலாவது, ஒரு கட்சி பிற எல்லாக் கட்சிகளையும் அழித்து அரசியல் வல்லாட்சியை நிறுவுதல், இரண்டாவது, ஒரு சர்வாதிகார முறை வாழ்க்கையின் பொருளாதார, சமூக, மதக் கூறுகளைக் கட்டுப்படுத்தி வழி நடத்த அரசாங்கத்தைப் பயன்படுத்துதல்.

வல்லாட்சி, சர்வாதிகார ஆட்சி இவற்றின் இவ்வியல்புகள் ரஷ்யப்புரட்சிக்குப் பின் இத்தாலியில் ஏற்பட்ட முசோலினியின் ஆட்சியிலும், ஜெர்மனியில் நிறுவப்பட்ட ஹிட்லரின் மூன்ருவது ரைக்கிலும் (Reich) காணப்பட்டன. ஆனால், ரஷ்யப் புரட்சிக்கு முன்னிருந்த நிலைமைகளும் அதனால் ஏற்பட்ட விளைவுகளும், பாஸிஸப் புரட்சி, நாஜி எழுச்சி இவற்றின் நிலைமைகளிலும், விளைவுகளிலுமிருந்து வேறுபட்டிருந்தன. லெனினும் போல்ஷவிக்குகளும் வரம்பற்ற தன்னரசைத் தகர்த்து, அதன் அழிவின்மேல் ஒரு புதிய சமூக, அரசியல் அமைப்பை எழுப்பி, அதனால் அறியாமையிலும் அடிமைத் தனத்திலும் முன்னர் அமிழ்ந்திருந்த ஏராளமான மக்களுக்கு வாக்குரிமை அளித்தனரென்பதை நாம் மறத்தலாகாது. ஆனால், பாஸிஸ்டுகளும் நாஜிகளும் ஏற்கெனவே இருந்த பாராளுமன்ற முறையைத் தாக்கி அழித்து, அதற்குப் பதிலாகத் தங்கள் நாட்டின் ஆயிரக்கணக்கான மக்கள் அனுபவித்து வந்த உரிமைகளை அழித்த ஒரு பயங்கரக் கொடுங்கோன்மையை நிறுவினர்கள்.

1922, அக்டோபர்த் திங்களில் பாஸிஸப் படை ரோமின்மேல் அணிவகுத்துச் சென்றபோது, அரசர் உள்நாட்டுப் போரைத் தவிர்க்கும் நோக்கத்துடன் முசோலினியை அழைத்து அமைச்சரவையை அமைக்குமாறு வேண்டினர். அமைச்சரவை அமைக்கப்பட்டதும் பிரதிநிதிகளின் அவை (Chamber of Deputies) உடனே கலைக்கப் படுவதினின்று தன்னைக் காத்துக்கொள்வதற்காக, முசோலினிக்குத் தனிச்சிறப்பு அதிகாரங்களை வழங்கியது. அன்றிலிருந்து முசோலினி தலைவர் (Duce) என்ற மாபெரும்பெயரைத் தமக்குச் சூட்டிக்கொண்டார். அவர் அரை நூற்ருண்டுக்கு மேலாக இத்தாலியில் இருந்த அரசியல் அமைப்பைப் படிப்படியாக அரித்து வந்தார்; பாராளுமன்றத்தில் பாஸிஸ்டு கட்சிக்குச் செயற்கையான பெரும்பான்மை கிட்டுவதற்காக வாக்குரிமைச் சட்டத்தை மாற்றியமைத்தார்; விரைவில் பிற கட்சிகள் எல்லாவற்றையும் கலைத்தார்; தலைவரின் விருப்பத்தை எதிரொலித்த பாஸிஸ்டு பெருஞ்சபையை (Fascist Grand Council) மட்டும் அரசாங்கத்தின் ஒரே உறுப்பாக ஏற்றுக்கொண்டார். அதே காலத்தில் பாஸிஸக் கோட்பாட்டையும், அதன் செயல்முறையையும் ஏற்காத எல்லாச் சமூக, அரசியல், பண்பாட்டுச் சங்கங்களும் கலைக்கப்பட்டன. இவ்வாறு முசோலினி மக்களாட்சி அமைப்பு

முறையை முற்றிலும் அழித்துவிட்டார். அதற்குப் பதிலாக அவர் நாம் பிறகு பார்க்கவிருக்கும் பல முறைகளைப் பயன்படுத்திக் கூட்டுக் கழக அரசை (Corporate State) நிறுவினர். இது தேசீயத் தொழிலாளர் குழுவாட்சி (National Syndicalism) என்ற அடிப்படையில் அமைக்கப்பட்டது. 1939இல் ஏற்கெனவே வலுவிழந்திருந்த பிரதிநிதிகளின் அவை இறுதியில் மறைந்தது. அதற்குப் பதிலாகப் பாஸிஸ்டுகள், கூட்டுக்கழகங்களின் அவை (Chamber of Fascios and Corporations) நிறுவப்பட்டது. அப்போது, 1848-ஆம் ஆண்டின் ஸார்டீனியச் சட்டத்திலிருந்து ஏறக்குறைய ஒரு நூற்றாண்டளவாக வளர்ந்து வந்த இத்தாலிய அரசியலமைப்பில் வேந்தரைத்தவிர வேறு எல்லா இயல்புகளும் மறைந்துவிட்டன. மாண்பையும் மதிப்பையும் இழந்த மன்னர் அரசாளும் உரிமை பெற்றிருந்தார். ஏனெனில், அவர் பாஸிஸ ஆட்சிக்குப் பணிந்து பணியாற்ற இசைந்தார்.

ஜெர்மனியில் 1933 ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் ஹிட்லரும் தேசீய சமதர்மவாதிகளும் ஆட்சியைக் கைப்பற்றினர்கள். இங்கும் பாராளுமன்ற முறையைக் கவிழ்க்கும் சதி அரசியல் முறைமை எனும் போர்வைக்குள் ஒளிந்துகொண்டிருந்தது. அது வரை ஜெர்மனியில், 1919இல் நிறுவப்பட்ட வெய்மார் குடியரசின் (Weimar Republic) அரசியலமைப்பின்படி ஆட்சி நடைபெற்று வந்தது. ஹிட்லர் குடியரசின் தலைவரிடமிருந்து சான்ஸலர் (Chancellor) என்ற முதல் அமைச்சரின் பதவியைப் பெற்றார். அவர் அந்த அரசியலமைப்பை ஒரு போதும் பழித்துப் பேசியதில்லை. ஆனல், தமக்கு ரைக்ஸ்டாக் (Reichstag) அளித்தனவும், நாட்டின் தலைவரால் அனுமதிக்கப்பட்டனவுமான முழு அதிகாரங்களையும் பயன்படுத்தி அரசியல் முறைமைக்குட்பட்ட அரசின் அடிப்படைகளை அதி விரைவில் அழித்தார். தேசீய சமதர்மவாதிகளைத் தவிர எல்லாக் கட்சிகளையும் பலவந்தமாகக் கலைத்தார். முழுவதும் நாஜிகளையே கொண்ட ரைக்ஸ்டாக் அவை தலைவரின் (Fuhrer) சொல் வன்மையை இடையிடையே வெளிப்படுத்தும் மன்றமாக மாற்றப்பட்டது. 1934-ஆம் ஆண்டு, ஜனவரித் திங்களில் ஹிட்லர் நூற்றுக்குக் குறைந்த சொற்களடங்கிய ஒரு கட்டளையை வெளியிட்டார். அதற்கேற்ப ஆயிரம் ஆண்டளவாக ரைக்கின் (Reich) சிறப்பியல்பாகத் தொடங்கிய கூட்டாட்சி முறையை ஒரே அடியில் அழித்தார். இவ்வாறு கூட்டாட்சி ஜனநாயகமானது, 'ஃபியூரரி'ன் நேர்க்கட்டுப்பாட்டிற்கு அடங்கிய அதிகாரம் குவிந்த தன்னரசாக வன்முறையில் மாற்றப்பட்டது. அதே ஆண்டு ஆகஷ்டு திங்களில் நாட்டின் தலைவர் **ஹிண்டன்பர்கு** இறக்கவே, அத்தலைமைப் பதவியையும், சான்ஸலர் பதவியையும் 'ஃபியூரர்' என்ற முறையில் தாமே ஏற்றுக்கொள்வதாக ஹிட்லர் அறிவித்தார். அந்நிகழ்ச்சிக்குப் பிறகு நடந்த மக்கள் வாக்கெடுப்பில் (Plebiscite) அவர் பொதுமக்களின்

பேராதரவைப் பெற்ருர். ஆகவே, வெய்மார் குடியரசு வழங்கிய அரசியலமைப்பு உரிமைகளெல்லாம் படிப்படியாகக் கிழித்தெறியப் பட்டன. இறுதியில் வல்லாட்சியாளரின் விருப்பம் ஒரே அரசியல் அதிகாரமாய் விளங்கியது.

ஹிட்லரின் வல்லாட்சியில் அரசியல் உரிமைகள் அழிந்தவாறே, தனி மனிதனின் உரிமைகளும், சமூக உரிமைகளும் அழிந்தொழிந்தன. ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையிலும், அவனது குடும்பக் காரியங்களிலும் இரகசியக் காவற்படையினர் (Gestapo) தலையிட்டு வந்தனர். இளைஞர் எல்லோரும் நாஜி இளைஞர் இயக்கத்தில் (Hitler Jugend) வலுக்கட்டாயமாகச் சேர்க்கப்பட்டனர். நாஜி நிறுவனங்களைத் தவிர வேறு எந்தச் சங்கத்தையும் ஹிட்லர் அனுமதிக்கவில்லை. முதலாளிகளின் பல சங்கங்களையும், தொழிற்சங்கங்களையும் கலைத்து, அவற்றிற்குப் பதிலாகத் தொழில் முன்னணி என்ற அமைப்பை ஏற்படுத்திஞர்; தமது கொள்கைக்கு முரணுன கருத்துகளை எல்லாம் அவித்து அடக்கிஞர். செய்தித்தாள்கள் எல்லாம் நாஜிக் கட்சியின் கைக்கருவியாய் மாறின. அவ்வாட்சிக்கு ஆதரவு கொடுப்பதற்காக பொய்யான ஓர் அரசியற்கோட்பாடு உருவானது. அது ஹிட்லரின் ஆளுகையின்கீழிருந்த ஜெர்மானிய அமைப்பு முழுவதற்கும் ஆதாரமாய் இருந்தது. அதன்படி நாஜிக் கட்சியும் ஜெர்மானிய நாட்டினமும் ஒன்றுதான்; மேல் நாடுகளில் நிலவிய மக்களாட்சி காலத்திற்குப் பொருந்தாத பழங்கொள்கையாகும். ஆனல், உண்மையில், ஹிட்லரைப் பின்பற்றிப் பிறகு அவரது கொள்கையைக் கைவிட்ட ஒருவர் கூறுவதுபோல, நாஜிக் கொள்கை என்பது, 'ஒரு கோட்பாடில்லாத சூனியக் கொள்கை' (Doctrineless nihilism).[1] அதன் வரம்பு கடந்த செயல்களை ஏற்றுக்கொண்டதால் ஜெர்மனியும், உலகமும் பெருந்துயருக்குள்ளாயின.

இத்தாலியிலும் ஜெர்மனியிலும் வல்லாட்சிகள் வெற்றி பெற்றமையால் அண்டை நாடுகளில் அரசியல் முறைமைக்குட்படுகைக்குப் பெருங்கேடு விளைந்தது. குறிப்பாக, ஸ்பெயினில் இதன் விளைவைக் காணலாம். 1932இல், அதாவது ஹிட்லர் ஆட்சியேற்பதற்கு ஓர் ஆண்டுக்கு முன், புதிய அரசியலமைப்பு அறிவிக்கப்பட்டது. 1924 வரை ஸ்பெயினில் 1876-ஆம் ஆண்டின் அரசியலமைப்பின்படி ஆட்சி நடைபெற்று வந்தது. 1924இல் அரசியலமைப்பு நிறுத்தி வைக்கப்பட்ட பிறகு ஏழாண்டுகளாக 13-ஆம் அல்போன்சோ அரசர் இயக்குநர் குழுவின் (Directory) துணை கொண்டு ஸ்பெயினை ஆண்டு

1. Hermann Rauschning: Germany's Revolution of Destruction.

வந்தார். அக்குழுவிற்கு முதலில் தளபதி **பிரிமோ டி ரிவேரா** (General Primo de Rivera) என்ற எஸ்டெல்லாக் கோமகனும் (Marques de Estella), பிறகு தளபதி பெரங்கர் (General Berenguer) என்பாரும் தலைமை தாங்கினர். ஆயினும், 1931இல் நகராண்மைக் கழகத் தேர்தல்கள் நடைபெற்றன. அவற்றில் குடியரசுக்கட்சி பெரும்பான்மை வாக்குகளைப் பெறவே, தாற்காலிகக் குடியரசு அரசாங்கம் அமைக்கப்பட்டது. உடனே அரசர் நாட்டை விட்டு வெளியேறினர். பிறகு அரசியற்புனைசபையொன்றை (Constituent Assembly) அமைப்பதற்காகத் தேர்தல் நடைபெற்றது. அச்சபை 1932–ஆம் ஆண்டில் குடியரசு அரசியலமைப்பைத் தீட்டியது. இந்த அரசியலமைப்பை எதிர்த்து 1936இல் **தளபதி பிராங்கோ** (General Franco) புரட்சி தொடங்கினர். மூன்றுண்டுகளாக ஸ்பெயின் உள் நாட்டுப் போரினால் அல்லலுற்றது. ஹிட்லர், முசோலினி ஆகிய இருவரிடமிருந்து பிராங்கோ மறைவாக உதவி பெற்று, 1939–ஆம் ஆண்டு இளவேனிற்காலத்தில் குடியரசுவாதிகளை இறுதியாகத் தோற்கடித்து, தமது வல்லாட்சியை நிறுவினர்.

நாஜிக் கொள்கைகளைப் பரப்புவதற்கென ஏறக்குறைய எல்லா ஐரோப்பிய நாடுகளிலும் குழாங்கள் தோன்றின. நிலையற்ற அமைதி நிலவிய அந்தக் குறுகிய காலத்தில் பெல்ஜியம், நெதர்லாந்து, டென்மார்க்கு, செக்கோஸ்லவாக்கியாப் போன்ற நாடுகள் தங்கள் பாராளுமன்ற நிறுவனங்களைக் காக்க அரும்பாடு பட்டன. மற்றும் பல நாடுகள் ஹிட்லரின் வன்முறைக்கோ இன்மொழிக்கோ பணிந்ததனால் அங்கெல்லாம் அரசியலமைப்புப் பாதுகாப்புகள் விரைவில் விலகி, வல்லாட்சிக்கு வழி வகுத்தன. பிற்கு ஹிட்லர் வெளிப்படையாகத் தமது வன்முறைத் தாக்குதல்களைத் தொடங்கவே, 1939இல் மேல் நாட்டு ஜனநாயக நாடுகள் ஒன்று சேர்ந்து அவரை எதிர்த்துப் போர் தொடங்கின. அப்போது இரண்டாம் உலகப் போர் மூண்டது.

## 12. இரண்டாம் உலகப் போரின் விளைவுகள்

முதல் உலகப் போரைவிட இரண்டாம் உலகப் போரின் விளைவாக அரசியல் உலகில் சிக்கல்களும் சிதைவுகளும் மலிந்து தோன்றின. இங்கு நாம் இரு போர்களின் விளைவுகளையும் ஒன்று சேர்த்துப் பார்ப்பது சிறந்தது. அவற்றின் விளைவாக உலக அதிகார மையங்கள் இடம் பெயர்ந்து முற்றிலும் வேறு இடங்களுக்கு மாறிச் சென்றுவிட்டதைக் காண்கின்றோம். 'Democracy in America' என்னும் நூலின் ஆசிரியரான **அலெக்ஸிஸ் டாக்வில்** (Alexis de Toqueville) என்பார் ஏறக்குறைய ஒரு நூற்றுண்டுக்கு முன் முன்னறிவித்ததுபோல அதிகாரம் மேற்கு, மத்திய ஐரோப்போவிலிருந்து நழுவிப் பெரு

வல்லரசுகளாகிய அமெரிக்க ஐக்கிய நாடுகள், ரஷ்யா ஆகிய இரு நாடுகளுக்கும் சென்றுவிட்டது. இப்புதிய சூழ்நிலையில் மாபேரரசியலமைப்பு மாற்றங்கள் பல ஏற்கெனவே நிகழ்ந்துவிட்டன; இன்றும் நிகழ்ந்துகொண்டே இருக்கின்றன.

ஜெர்மனியும் இத்தாலியும் தோல்வியடைந்த போதிலும், அங்குத் தோன்றிய கொள்கைகள் முற்றிலும் மறைந்துவிடவில்லை. மேலும், அவற்றின் வீழ்ச்சியினுல் ஸ்பெயினிலும் போர்த்துகலிலும் நிலவிய அதிகாரத்துவ முறைகளில் மாற்றம் எதுவும் ஏற்படவில்லை. ஆயினும், ஜெர்மனியும் இத்தாலியும் தோல்வியுற்றமையினுல், நாஜி, பாஸிஸ ஆட்சிகள் அறவே அழிந்தன. மேற்கிலும் கிழக்கிலுமிருந்து எழுந்து வந்த படைகள் நாஜிகள் கைப்பற்றியிருந்த நாடுகளை விடுவித்ததனுல், ஐரோப்பாவின் பல்வேறு பகுதிகளில் பல் வகையான விளைவுகள் ஏற்பட்டன. மேற்கு, வடக்கு, தெற்கு ஆகிய பகுதிகளில் பாராளுமன்ற முறை மக்களாட்சி மீண்டும் நிலைநாட்டப்பட்டது. பிரான்ஸில் முதலில் நான்காவது குடியரசும் பிறகு சீரமைக்கப்பட்ட ஐந்தாவது குடியரசும் தோன்றின. இத்தாலியில் முடியரசுக்குப் பதிலாகக் குடியரசு இடம்பெற்றது. நெதர்லாந்து, பெல்ஜியம், நார்வே, டென்மார்க்கு ஆகிய நாடுகளில் அரச குடும்பங்கள் மீண்டும் அரியணை ஏறின. மத்திய ஐரோப்பாவில், ஜெர்மனி நான்கு பகுதிகளாக வகுக்கப்பட்டது. அதைக் கைப்பற்றிய வல்லரசுகளுள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் பகுதியைக் கட்டுப்படுத்திற்று. அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் ஆகிய மூன்றும் மேற்குப் பகுதிகளையும், சோவியத்து ரஷ்யா கிழக்குப் பகுதியையும் தமது அதிகாரத்தின்கீழ்க் கொண்டுவந்தன. பிறகு 1949-ஆம் ஆண்டில் மூன்று வல்லரசுகளும் தாம் ஆக்கிரமித்த பகுதிகளிலிருந்து வெளியேறி, அங்குப் பாராளுமன்ற முறை அரசியலமைப்பையுடைய ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசு அமைக்கப்படுவதற்கு இணங்கின. அதே சமயத்தில் ரஷ்யா தனது பகுதியில் ஜெர்மானிய ஜனநாயகக் குடியரசை நிறுவியது. ஆயினும், அங்கு ரஷ்யாவின் ஆதிக்கம் இன்னும் நிலைத்து நின்றது.

கிழக்கு ஜெர்மனியைப்போல வேறு சில கிழக்கு ஐரோப்பிய நாடுகளும் போரின் விளைவாக ரஷ்யாவின் ஆதிக்கத்தின்கீழ் வந்தன. கால இடச் சூழ்நிலைகள் காரணமாக ஹிட்லரின் ஆட்சிக்குட்பட்ட ஐரோப்பிய நாடுகளை இரு புறமிருந்து தாக்கிய ரஷ்யா, தனது மேற்கு எல்லையிலிருந்து நாடுகளை விடுவிக்கும் வாய்ப்பைப் பெற்றது. அந்நாடுகள் போலந்து, செக்கோஸ்லாவாக்கியா, ஹங்கேரி, ருமேனியா, பல்கேரியா ஆகியவை ஆகும். அங்கெல்லாம் பொதுவுடைமைக் கொள்கையைப் பரப்புவதற்கு ரஷ்யாவுக்கு ஓர் அரிய வாய்ப்புக்

கிட்டியது. ஆகவே, அது அந்நாடுகளுள் ஒவ்வொன்றிலுமிருந்த சிறுபான்மையினரான பொதுவுடைமை வாதிவளுக்குப் படைக்கலம் கொடுத்து உதவியது. இவ்வாறு அந்நாடுகளில் எல்லாம் பொதுவுடைமை ஆட்சி திணிக்கப்பட்டது. அவற்றின் அரசியலமைப்புகள் பெரும்பாலும் சோவியத்து அமைப்பை ஒத்திருந்தன. இவ்வாறு தோன்றிய பொதுவுடைமை நாடுகள் மேற்கு நாடுகளின் தொடர்புகளிலிருந்து முற்றிலும் துணிக்கப்பட்டன. அவற்றைச் சுற்றி நுழைய இயலாத படைப் பாதுகாப்பு அமைக்கப்பட்டது. அதனால், அதற்கு ‘இரும்புத் திரை’ எனப் பெயர் ஏற்பட்டது. யூகோஸ்லாவியாவும் அல்பேனியாவும், பொதுவுடைமை நாடுகளாயின. ஆனால், யூகோஸ்லாவியா ரஷ்யாவிற்கு அடிபணிய என்றுமே மறுத்து வந்துள்ளது. அதேபோல, அல்பேனியாவும் ரஷ்யாவை முற்றிலும் சார்ந்திருப்பதாக ஒருபோதும் காட்டிக்கொண்டதில்லை. நான்கு வல்லரசுகளும் முதலில் ஆக்கிரமித்த ஆஸ்திரியா 1955இல் தனது இறைமை உரிமையைப் பெற்றது. அதன் விளைவாக, 1929இல் திருத்தப்பட்ட 1920-ஆம் ஆண்டின் முற்போக்கு அரசியலமைப்பை மீண்டும் பெற்றது. அந்த அரசியலமைப்புதான் ஆஸ்திரியக் கூட்டாட்சிக் குடியரசென்னும் ஜனநாயக அரசை நிலை நாட்டியது.

இவ்வாறு ரஷ்யா தனது புதிய ஆற்றலைப் பயன்படுத்திக் கிழக்கு ஐரோப்பாவில் பொதுவுடைமை ஆதிக்கத்தை நிறுவி வந்த போது, அமெரிக்கா போரினால் தாக்குண்ட மேற்கு ஐரோப்பிய ஜனநாயக அரசுகளுக்கு மார்ஷல் திட்டம் வாயிலாகப் பொருளாதார உதவி செய்து வந்தது. மார்ஷல் உதவியின் முதல் தவணை 1948இல் வழங்கப்பட்டது. மறு ஆண்டு வட அட்லான்டிக்கு உடன்படிக்கை நிறுவனம் (N. A. T. D.) உருவானது. இவற்றின் பயனாக ஐரோப்பிய ஜனநாயக அரசுகள் பற்பல பன்னாட்டு நிறுவனங்களில் ஒருங்கியைந்து ஈடுபட்டன. இவற்றுள் ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயம் (European Economic Community) அல்லது பொதுச் சந்தை (Common Market) என்பது மிகச் சிறப்பு வாய்ந்தது எனலாம். ஏனெனில், அதனால் அரசியல், அரசியலமைப்பு மாற்றங்கள் சில ஏற்பட்டன. இதைப்பற்றிப் பிறகு ஆராய்வோம்.

உலகில் உருவான புதிய சூழ்நிலையினால் ஏற்பட்ட இன்னொரு முக்கிய மாற்றம் என்னவென்றால், வெளி நாடுகளில் பேரரசுகளை நிறுவியிருந்த மேற்கு ஐரோப்பிய அரசுகள் இரு போர்கள் காரணமாகத் தங்கள் வலிமையை இழந்தமையால், குடியேற்ற நாடுகளின் மீது அவை முன்பு கொண்டிருந்த பிடி தளர்ந்துவிட்டது; இன்றும் தளர்ந்துகொண்டே செல்கிறது. பிரிட்டன், பிரான்ஸ், ஹாலந்து, பெல்ஜியம் ஆகிய நாடுகள் ஆசியாவிலிருந்தும் ஆப்பிரிக்காவிலிருந்

தும் வெளியேறின. இதன் விளைவாகச் சொந்த அரசியலமைப்புகளையுடைய புதிய சுதந்தர அரசுகள் அவ்விரு கண்டங்களிலும் கரிபியன் பகுதிகளிலும்தோன்றியிருக்கின்றன; சில இன்னும் விரைவில் தோன்றும். இந்த இயக்கங்களும் மத்தியக் கிழக்கு நாடுகளில் தோன்றியுள்ள போரார்வமுள்ள நாட்டுணர்ச்சியால் உந்தப்பட்ட இயக்கங்களும் ஒன்று சேர்ந்து, விரைவாக மாறி வரும் உலகிலே மாபெரிய அரசியலமைப்புச் சிக்கல்களை உருவாக்கி வருகின்றன.

தூரக் கிழக்கு நாடுகளிலும் அவ்வாறே நடைபெறுகின்றது. ஜப்பானின் வீழ்ச்சியினால் இருமாபெரு விளைவுகள் தோன்றியுள்ளன. முதலாவது, ஜப்பானில் அமெரிக்காவின் செல்வாக்கு வளர்ந்தோங்கியது. அங்கு 1947-ஆம் ஆண்டில் அமெரிக்காவின் ஆதரவில் ஒரு புதிய ஜனநாயக அரசியலமைப்பு வெளியிடப்பெற்றது. இரண்டாவது, சீனாவில் பொதுவுடைமைப் புரட்சி வெற்றி கண்டது. அங்கு 1949-ஆம் ஆண்டில் சீனத் தலைவரான **மா சே துங்** புதிய அரசியலமைப்பொன்றை வெளியிட்டார். அது பெரும்பாலும் ரஷ்யாவின் அரசியலமைப்பை ஒத்திருந்தது. புதிய அரசுக்குச் 'சீன மக்கள் குடியரசு' எனப் பெயர் வழங்கப்பட்டது.

முதல் உலகப் போருக்குப் பிறகு பன்னாட்டுத் தொடர்புகளை ஒழுங்குபடுத்த அரசியலமைப்பு முறைகளைப் பயன்படுத்த முயன்றனர். ஆனால், அம்முயற்சியினால் இரண்டாவது பெரும்போரைத் தடுக்க முடியாமற்போய்விட்டது. இரண்டாவது உலகப் போர் முடிந்ததும் நிரந்தரமாக நிலைநாட்டப்பட்ட ஒரு பன்னாட்டு நிறுவனம் வாயிலாக உலக அமைதியையும் பாதுகாப்பையும் நிலைநாட்டப் போரில் வெற்றி பெற்றவர்களுக்கு இன்னொரு புதிய வாய்ப்பு அரும்பியது. இங்கும் நாம் இரு போர்களின் விளைவுகளையும் ஒன்றாகச் சேர்த்துப் பார்ப்பதே சிறந்தது. ஐக்கிய நாடுகளின் சங்க சாசனத்தில் காணப்படும் கருத்துகள் பல, சர்வ தேச சங்க உடன்படிக்கையிலிருந்து எடுத்தாளப்பட்டவை. ஆயினும், ஐக்கிய நாடுகளின் சங்கத்தை நிறுவியவர்கள், இப்புதிய அமைப்பைப் பலப்படுத்துவதன் மூலம் சர்வதேச சங்கத்தின் வெளிப்படையான குறைகளை நீக்க விரும்பினார்கள். ஐக்கியநாடுகளின் சங்கத்தின் வாழ்க்கை மாறுபாடுகள் மலிந்தது. தொடக்கத்திலிருந்த அதன் உறுப்பினர்களின் தொகை இப்போது ஏறக்குறைய இரு மடங்காய்ப் பெருகியுள்ளது. அது பன்னாட்டுச் செயல்களில் சர்வதேச சங்கத்தைவிட அதிகமாக ஈடுபட்டிருக்கின்றது. அதைப்பற்றி உறுதியாக ஒன்று கூறலாம். அதாவது, சர்வதேச சங்கத்தின் தோல்வியினால் பெருந்தீங்கு விளைந்தது; ஐக்கிய நாடுகளின் சங்கம் தோல்வியுறுமானால், அதன் விளைவாகப் பேரழிவு ஏற்படும். ஏனெனில், நாம் வாழும் இந்த

அணு யுகத்தில் மூன்றுவது உலகப்போர் மூளுமாயின், அது நாகரிக மடைந்துள்ள நமது சமூகத்தைச் சிதைத்து அழித்தேவிடும்.

## 13. சுருக்கம்

இந்த வரலாற்றுச் சுருக்கத்திலிருந்து நாம் அறிந்துகொள்வதென்ன? முதலாவது, அரசியலமைப்பு முறையின் அரசியலை அதன் வரலாற்றுக் குறிப்புகளின்றி அறிந்துகொள்ள இயலாது, நாம் பார்த்த ஒவ்வோர் ஊழியும் அரசியல் முறைமைக்குட்படுகையின் வளர்ச்சிக்குத் துணை செய்துள்ளது. கிரேக்க அரசியல் முறைமைக்குட்படுகை அரசியல் தத்துவத்திற்கு ஊக்கமளித்ததுடன், 15-ஆம் நூற்றுண்டின் கல்வி மறுமலர்ச்சியின் போது அரசியல் நிறுவனத்தின் நுட்பமான நோக்கங்களை மக்கள் நன்கறியத் துணையும் செய்தது. ரோமானிய அரசியல் முறைமைக்குட்படுகை மேல் நாடுகளுக்குச் சட்டத்தின் மெய்ம்மையையும், ஒற்றுமை பெறும் உயர் குறிக்கோளையும் எடுத்துக் காட்டியது. நிலமானிய முறை மேற்கு ரோமானியப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பிறகு ஏற்பட்ட குழப்பங்களுக்கும், இக்கால அரசின் பிறப்பிற்கும் இடையிலுள்ள பிளவை இணைக்கும் பிணைப்பாய் விளங்கியது, இங்கிலாந்து, பிரான்ஸ், ஸ்பெயின் ஆகிய நாடுகளில் இடைக்காலத்தில் முடியரசு வாயிலாக நிகழ்ந்த அதிகாரக்குவிப்பு, நிலமானிய முறையின் தீமைகளை அழிப்பதற்கும், தேசீயக் கொள்கையின் அடிப்படையை அமைப்பதற்கும் தேவையாய் இருந்தது. அந்நாடுகளில் அரைகுறையாக வளர்ச்சியடைந்த பிரதிநிதித்துவ நிறுவனங்கள், மேற்கு ஐரோப்பாவில் ஜனநாயக அரசு கருவாக உருப்பெறுவதை எடுத்துக் காட்டின. அதே காலத்தில் 15.ஆம் நூற்றுண்டின் சங்க இயக்கம் ஐரோப்பாவில் தோன்றிக் கொண்டிருந்த இளந்தேசீயப் பிரிவுகளை வலியுறுத்தி, அரசாங்கத்தின் பிரதிநிதித்துவ முறைகளைப்பற்றிய ஒரு பேராய்வைத் தொடங்கி வைத்தது.

மறுமலர்ச்சியின் விளைவாக ஐரோப்பாவின் மேற்குப் பகுதியில் அதிகாரக் குவிப்பு வளர்ந்துகொண்டே சென்றதுமல்லாமல், அங்கு நாட்டுணர்ச்சியும் ஆழமாக வேரூன்றத் தொடங்கியது. மதச் சீர்திருத்தம், சமயப் பொறுமை என்ற உயர்குறிக்கோளை உருவாக்கி, தேசீய மதச்சபையை வளர்ப்பதன் மூலம் அரசரின் அதிகாரங்களைப் பெருக்கியது. இவ்வாறு அது, அரசியல் நிறுவனம் வழியாகவே மத உரிமைகளைப் பெற இயலும் என்ற கருத்தை மக்களிடையே பரப்பி, மதப்பிணக்கத்தை அரசியற்புரட்சியாக மாற்றியது. பல நூற்றுண்டுகளாக ஆங்கில அரசியல் முறைமைக்குட்படுகை முற்போக்கு நிறுவனங்களுக்கு நிலையான வாழ்வை அளித்தது.

அந்நிறுவனங்கள் அப்போது பல நாடுகளில் இறந்துவிட்டன ; சில நாடுகளில் தோன்றவே இல்லை. ஆங்கில அரசியல் முறைமைக்குட்படுகையானது, இங்கிலாந்தைத் தாய் நாடாகக் கொண்ட உலகின் பல பகுதிகளிலுமுள்ள சமூகங்களில் தன் நிறுவனங்கள் வளர்ச்சியடைவதை ஆதரித்து, புதிதாக விடுதலை பெற்ற சமூகத்திற்கு ஓர் அரசியலமைப்புத் தேவைப்பட்டபோது அதற்கேற்ற மாதிரியொன்றை வழங்கியது. 18-ஆம் நூற்றுண்டில் பழைய பழக்க வழக்கங்களை எதிர்க்கும் கொள்கைகள் தோன்றி, ஜனநாயகத்தின் இக்காலக் கொள்கைகளுக்கு அடி கோலின. அமெரிக்க, பிரெஞ்சுப் புரட்சிகள் ஆவண அரசியலமைப்பிற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளை இக்கால உலகிற்கு வழங்கின. இவ்வாறு அவை உரிமையையும் அதிகாரத்தையும், மனிதனின் உரிமைகளையும் நிறுவிய அரசாங்கத்தையும் இணைத்தன. மேலும், அமெரிக்கா, வட்டார உணர்ச்சிகளைப் புண் படுத்தாமல், அரசியல் ஒற்றுமையை உண்டுபண்ணும் முறையைக் கூட்டாட்சி வாயிலாக உலகுக்குக் கற்பித்தது. பிரெஞ்சுப் புரட்சியானது இறுதியில் அடக்கப்பட்ட போதிலும், 19-ஆம் நூற்றுண்டின் ஐரோப்பாவிற்குச் சுதந்தரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற உயர்குறிக்கோள்களை அளித்துவிட்டுப் போனது. அவற்றை முதலில் ஆதரித்தவர்கள் எண்ணியதைவிட அதிக உறுதியான அடிப்படையில் அவை நிறுவப்பட்டன. நெப்போலியனின் வெற்றிகள் பிரெஞ்சுப் புரட்சியின் குறிக்கோளைப் பரப்பி, அவர் வென்ற மக்களிடையே உறங்கிக்கொண்டிருந்த தேசீய உணர்ச்சிகளை உலுக்கி எழுப்பின.

19-ஆம் நூற்றுண்டில் முற்போக்குச் சீர்திருத்தம், தேசீயம் ஆகிய இரண்டு இலட்சியங்களும் தம்மை மக்கள் ஏற்கவேண்டுமென ஏங்கி நின்றன. அரசியல் வகைகளில் அவை ஓரளவு வெற்றியும் பெற்றன. தொழிற்புரட்சி நடுத்தர வகுப்பாருக்கு வாக்குரிமை அளித்ததுடன், மேன்மேலும் அரசியல் உரிமைகள் பெற விழைந்த புதிய தொழிலாளரின் வகுப்பை உண்டு பண்ணித் தற்கால மக்களாட்சியெனும் மதிலையும் எழுப்பியது. மேலும், அது நாட்டுணர்ச்சியையும் அரசியல் அமைப்புச் சீர்திருத்தத்தையும் வலுப்படுத்தியது. இதற்குக் காரணம், முதலில் அது பொருளாதாரப் பாதுகாப்புக் கொள்கையை வளர்த்து, பிறகு வாக்குரிமையைப் பரவலாக வழங்கி, தேசீயக் கட்சிகளை அமைத்ததேயாகும். அரசியல் முறைமைக்குட்படுகை வளர்வதற்கு முதல் உலகப் போர் பெருந்துணை செய்தது. ஏனெனில், போரின் விளைவாகப் பிற்போக்கு அரசாங்கங்கள் அழிந்தன ; இது வரை நசுக்கப்பட்ட நாட்டினங்கள் புதிய அரசுகளாக மாற்றி அமைக்கப்பட்டன ; இதன் பயனுகத் தேசீயம், ஜனநாயகம் என்ற அடிப்படைகளில் அரசியலமைப்புகள் நிறுவப்பட்டன. இறுதியாக,

சர்வதேச சங்கத்தை அமைப்பதன் மூலம் அரசியல் அமைப்பு முறையில் உலக அமைதியை நாடவேண்டும் என்ற விருப்பம் ஏற்பட்டது. ஆனால், அதற்குப் பிறகு அரசியல் முறைமைக்குட்படுகைக்குக் கடுமையான எதிர்ப்புத் தோன்றியது. 1917இல் மூண்ட ரஷ்யப் புரட்சிக்குப் பிறகு இத்தாலியில் பாஸிஸக் கிளர்ச்சியும், ஜெர்மனியில் நாஜி எழுச்சியும் தோன்றின. ஸ்பெயினில் பிராங்கோ, குடியரசுவாதிகளைத் தோற்கடித்தார். நாஜி, பாஸிஸக் கொள்கைகளின் விளைவாகக் கிழக்கு ஐரோப்பிய நாடுகளில், அவை அண்மையில் பெற்ற அரசியல் அமைப்புப் பாதுகாப்புகளை விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை ஏற்பட்டது. இவ்வாறு நிறுவப்பட்ட வல்லாட்சிகளும் சர்வாதிகார ஆட்சிகளும் விரைவில் வெளி நாடுகளைத் தாக்கத் தொடங்கின.

இதுவே இறுதியில் 1939இல் இரண்டாம் உலகப் போராய் முடிந்தது. போரின் விளைவாகச் சிக்கலான ஒரு நிலை ஏற்பட்டது. அது மேல் நாட்டின் தேசீய ஜனநாயக அரசியலமைப்பு முறையை அழித்துவிடும் போலத் தோன்றியது. அந்த ஜனநாயக முறை பொதுவுடைமையின் போர்க்குரலையும், மீண்டெழும் பாஸிஸப் பேராபத்தையும், பொங்கியெழும் ஆப்பிரிக்க ஆசிய நாட்டுணர்ச்சியின் எண்ணற்ற விளைவுகளையும் இப்போது எதிர்த்து நிற்கவேண்டியிருக்கிறது. ஆயினும், ஐக்கிய நாடுகளின் சங்கம், அரசியலமைப்பு முறைகளைப் பன்னாட்டுத் தொடர்புகளில் பயன்படுத்தும் வாய்ப்பை எல்லா நாடுகளுக்கும் இன்னொருமுறை அளித்துள்ளது. இதை அவை ஏற்றுக்கொள்ளுமானால் ஐக்கிய நாடுகளின் சங்கம் மூலமாக உலக அமைதியை இந்த அணு யுகத்தில் நிலை நாட்ட இயலும்.

இந்தச் சுருக்கத்திலிருந்து நாம் அறிந்துகொள்ளும் இரண்டாவது உண்மை என்னவென்றால், தேசீய ஜனநாயக அரசியலமைப்பு முறை பண்டைக்காலத்தில் தொடங்கிய போதிலும், இன்னும் செயலாய்வு நிலையிலேதான் இருக்கின்றது. மேலும், அதைவிடப் புரட்சிகரமான அரசாங்க முறைகளோடு அது போட்டியிட்டு நிலைக்க வேண்டுமானால் இக்காலச் சமூகத்தின் இடைவிடா மாற்றங்களுக்கேற்ப அதை மாற்றியமைக்க நாம் முன் வரவேண்டும். எங்கிருந்தாலும் அரசியலமைப்பின் அடிப்படை நோக்கம் ஒன்றுதான். அதாவது, சமூக அமைதியையும் முன்னேற்றத்தையும் பேணுதல், தனிமனிதனின் உரிமைகளைக் காத்தல், நாட்டின் நலத்தை வளர்த்தல். அந்நோக்கத்தை அடையும் பல வழிகளைப்பற்றி நாம் இங்குப்படிக்கப் போகின்றோம். இதற்காக நாம் இக்கால அரசியலமைப்புகளை ஒப்பு நோக்கி, அவற்றின் ஒற்றுமை வேற்றுமைகளை ஆய்ந்து பார்க்க வேண்டும். இதை இப்போது தொடங்குவோம்.

## படிக்க வேண்டிய நூல்கள் :

1. அலெக்ஸாண்டர் (Aelxander) : World Political Patterns, இயல் 1-2.

2. டைஸி (Dicey) : Law and Public Opinion, முகவுரையும் 12-ஆம் விரிவுரையும்

3. டிக்கின்சன் (Dickinson) : Greek view of Life, இயல் 2, 3.

4. எம்டன் (Emden) : The People and the Constitution, இயல் 3.

5. ஃபைனர் (Finer) : Modern Government, இயல் 2-4.

6. ஃபிரீட்மேன் (Friedman) : Introduction to World Politics. இயல் 2–4.

7. லாஸ்கி (Laski) : Grammar of Politics, இயல் 6.

8. மக் ஐவர் (Mac Iver) : Web of Government, இயல் 9.

9. சேபைன் (Sabine) : History of Political Thought, இயல் 3-6, 17, 23, 26-8, 31-5.

10. ஷ்வார்ட்ஸ் (Schwartz) : American Constitutional Law, இயல் 1.

11. தாம்சன் (Thomson) : Europe since Napoleon, இயல் 3-4 ; 8–11, 14-17, 27-8, 30.

12. வேர் (Wheare) : Federal Government, இயல் 1, 2.

13. ஸிங்க் (Zink) : Government and Politics in the United States, இயல் 1, 2.

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள் :

1. கிராஸ்மன் (Crossman) : Plato Today
2. டுவர்ஜர் (Duverger) : Political Parties
3. ஃ பௌலர் (Fowler) : City States of Greeks and Romans
4. குளோவர் (Glover) : Ancient World
5. ஹாகுட் (Hawgood) : Modern Corstitutions since 1787
6. ஹன்ட் (Hunt) : Bolshevism
7. கேர் (Keir) : Constitutional History of Britain
8. லாஸ்கி (Laski) : Rise of European Liberalism
9. மூர் (Moore) : The Roman Commonwealth
10. ஷிரர் (Shirer) : The Third Reich
11. வேர் (Wheare) : Modern Constitutions.
12. ஸிம்மர்ன் (Zimmern) : The Greek Commonwealth

## கட்டுரைக்குரிய பொருள்கள் :

1. கிரேக்கர்களுக்கு நகர அரசுக் கொள்கையின்மேல் பற்று இருந்ததற்குக் காரணமென்ன ?
2. ரோமானியப் பேரரசு ஓர் உலக அரசாய்த் திகழ்ந்தது என்பது எவ்வாறு பொருந்தும் ?
3. 'நிலமானிய முறை' என்பது மேற்கு ரோமானியப் பேரரசின் வீழ்ச்சிக்கும் இக்கால அரசின் எழுச்சிக்கும் இடையே நிலவிய ஏற்பாடு என்பதை ஆராய்க,

4. மேற்கு ஐரோப்பாவில் மறுமலர்ச்சிக்கு முன் ஏற்பட்ட அரசியலமைப்பு முன்னேற்றம் யாது? மறுமலர்ச்சியின் அரசியற்கூறுகளை விளக்குக.

5. மதச்சீர்திருத்தத்தின் அரசியல் விளைவுகள் யாவை?

6. சமுதாய ஒப்பந்தக் கொள்கை எவ்வாறு அரசின் பிறப்பை விளக்குகிறதென்பதை ஆராய்க.

7. அமெரிக்கச் சுதந்தரப் போரும் பிரெஞ்சுப் புரட்சியும் அரசியல் முறைமைக்குட்படுகையின் வரலாற்றில் எவ்வாறு முக்கியமானவை என்பதை விளக்குக.

8. தொழிற்புரட்சியின் அரசியற்கூறுகளை ஆராய்க.

9. முதல் உலகப் போரினால் ஐரோப்பாவில் அரசியலமைப்பு வளர்ச்சியில் ஏற்பட்ட விளைவு என்ன?

10. இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு ஐரோப்பாவில் நிலவிய அரசியலமைப்பு நிலையை விளக்குக.

## இரண்டாம் பகுதி

# அரசியலமைப்புகளின் ஒப்புமை

## 3. அரசியலமைப்புகளின் பாகுபாடு

### 1. அரிஸ்டாட்டிலும், மற்றவர்களும் செய்த வழக்கொழிந்த பாகுபாடுகள்

அரசியலமைப்புகளை அல்லது அரசுகளை வகைப்படுத்துவதற்குக் கடந்த காலத்தில் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஆனால், அவை இக்கால முறைக்கு ஏற்றனவாய் இல்லை. அத்தகைய பாகுபாட்டைச்செய்ய மிகு பழங்காலத்தில் மேற்கொள்ளப் பட்ட முயற்சிகளுள் அரிஸ்டாட்டிலின் முயற்சியைக் குறிப்பிடலாம். அவர் இச்செயலில் தம் ஆசிரியர் பிளேட்டோவைவிட அதிகமாக ஆழ்ந்து ஈடுபட்டார். பிளோட்டோவின் ஆராய்ச்சியில் தெளிவு இல்லை. ஏனெனில், அவர் தமது ' The Republic ' என்னும் நூலில் ஒரு வகையான பாகுபாட்டையும், 'Politics' அல்லது ' The States-man ' என்ற மற்றொரு நூலில் வேறொரு வகைப் பாகுபாட்டையும் குறிப்பிடுகிறார். அரிஸ்டாட்டில் முதலில் அரசியலமைப்புகளை நல்லவை தீயவை என்றும், உண்மையானவை தவறானவை என்றும் சில பெரும்பிரிவுகளாகத் தொகுக்கின்றார். இங்கு அவர் அரசாங்கத்தை உந்தும் ஊக்கத்தை அளவு கோலாகப் பயன்படுத்துகிறார். இவ்விரு பெரும்பிரிவுகளுள் ஒவ்வொன்றிலும் ஒருவர், சிலர், பலர் கட்டுப்படுத்தும் அரசாங்கங்கள் என மூன்று வகைகளைக் குறிப்பிடுகின்றார்.

அரிஸ்டாட்டில், தமது பாகுபாட்டினுள் எல்லா வகைகளும் அடங்கியுள்ளன என்றும், அது ஒரு தனிப் பாகுபாடு என்றும் எண்ணினார். ஏனெனில், அவர் காலத்துக் கிரேக்க, பிற நாட்டு அரசியலமைப்புகளில் 158 அமைப்புகளை அலசி ஆய்ந்து பார்த்ததன்

விளைவாக எல்லா அரசுகளிலும் புரட்சிகளின் சுழற்சி ஏற்பட்டதென்ற முடிவிற்கு வந்தார். (இவ்வாராய்ச்சியின் விவரங்கள் அடங்கிய நூல் இப்போது நமக்குக் கிட்டவில்லை.) இவ்வாறு அரசு, மிகச் சிறந்த முறை அரசாங்கதுடன் தொடங்கியது. அம்முறையே ஒரு மனிதனின் ஆட்சி ஆகும். அரசியல் அதிகாரம் என்ற கோணத்தி லிருந்து பார்த்தால், அவன் நல்லொழுக்கத்தில் தலை சிறந்தவனாய் இருந்தான். இதுதான் 'முடியரசு' அல்லது 'முடியாட்சி' எனப் படும். ஆனால், சில காலத்திற்குப் பிறகு அத்தகைய நற்குணமுள்ள மனிதனைக் காண்பது அரிதாகிவிட்டது. ஆயினும், ஒரு மனிதன் ஆட்சி நிலவியது. அவனது அதிகாரம் வன்முறையில் நிலை நாட்டப் பட்டிருந்தது. இத்தகைய அரசாங்கத்தை அரிஸ்டாட்டில் கொடுங் கோன்மை (Tyranny) அல்லது வல்லாட்சி (Despotism) என்று வழங்குகின்றார். ஆனால், ஒரு நாள் நேர்மையானவர் பலர் சேர்ந்து அக்கொடுங்கோலனை எதிர்த்து வீழ்த்தி, தமது ஆட்சியை நிறுவுவர். இதுதான் உயர்குடியாட்சி (Aristocracy). நாளடைவில் உயர்குடி யாட்சி நலிந்து சீர்கெடத் தொடங்கும். சிலரின் ஆட்சி தொடர்ந்து நடைபெற்ற போதிலும், அது அரசியல் நன்னெறியில் நிலை நில்லாது, வன்முறைகளாலும் ஊழல்களாலும் நிலை நிற்க முயலும். இந்த இழிந்த வகை உயர்குடியாட்சியை அரிஸ்டாட்டில் 'சிறு குழுவாட்சி' (Oligarchy) என்கின்றார். இறுதியில் வெறுக்கத்தக்க இவ்வாட்சிக் கெதிராகப் பொதுமக்கள் வெகுண்டெழுந்து, சிறு குழுவாட்சியை அழித்து, பலராட்சி அல்லது மக்களாட்சியை (Democracy) நிறுவு கின்றார்கள். மக்களாட்சியில் வரம்பற்ற சுதந்தரமும் குழப்பங்களும் எவ்வளவு விரைவில் இடம் பெறுகின்றனவென்றால், அவர் பிளேட் டோவைப்போல, அதை இயற்கையிலே சீர்கேடானது எனக் கருது கின்றார். பலராட்சி பாமரக் கும்பலாட்சியாக (அல்லது அவர் கூறி யது போல, ஏழைகளின் ஆட்சியாக) மாறிவிடும். அது ஆட்சி என் பதற்கே முற்றிலும் முரணானது. இந்த இருள் மறைந்து மீண்டும் நல்லொழுக்கத்தில் சிறந்த ஒருவன் தோன்றுகிறான். அவனே ஒழுங் கையும் பகுத்தறிவையும் நிலை நாட்ட வல்ல அரசன். இவ்வாறு, ஒரு சுழற்சி முடிந்து மறு சுழற்சி தொடங்குகிறது.

இந்தச்சுழற்சியை நிறுத்தக்கூடிய ஓர் அரசாங்க முறையை அரிஸ்டாட்டில் ஆய்ந்து கண்டுபிடித்தார். அதுதான் நடுத்தர வகுப் பாரின் அரசாங்கம் என அவர் நினைத்தார். அவர் அதைப் 'பாலிட்டி' (Polity) என வழங்கினார். அதுவே பெறுதற்கும் பேணுதற்குமரிய முடியாட்சி, உயர்குடியாட்சி என்ற உயர்குறிக்கோள்களுக்கும், கொடுங்கோன்மை, சிறு குழுவாட்சி, மக்களாட்சி போன்ற தீயமுறை களுக்கும் இடையே நிற்கும் 'பொன்னான இடை நிலை' (Golden mean) ஆகும். அரசாங்கத்தின் உறுதி நிலைக்கு நடுத்தர வகுப்பாரின்

ஆட்சி எவ்வளவு இன்றியமையாததென அரிஸ்டாட்டில் கருதினரென்ருல், அதை விளக்க அவர் பயன்படுத்திய 'பாலிட்டி' என்ற சொல்லை நாம் இப்போது பொதுவாகப் பயன்படுத்துகிறேம்.

அரிஸ்டாட்டிலின் அரசியலமைப்புப் பாகுபாட்டைக் கீழ்க்காணுமாறு அட்டவணையில் சுருக்கமாக வரையலாம் :

| அரசியலமைப்பு வகை | நல்ல அல்லது உண்மையான முறை | தீய அல்லது தவருன முறை |
|---|---|---|
| ஒருவராட்சி | முடியரசு அல்லது முடியாட்சி | கொடுங்கோன்மை அல்லது வல்லாட்சி |
| சிலராட்சி | உயர்குடியாட்சி | சிறு குழுவாட்சி |
| பலராட்சி | 'பாலிட்டி' | மக்களாட்சி |

அரிஸ்டாட்டில் கற்பிக்கும் இப்பகுதியிலிருந்து நாம் கற்கவேண்டுவது அதிகம் என்பதை மறுக்க இயலாது. எடுத்துக்காட்டாக, அரசின் பாதுகாப்பே எல்லாக் குடிகளின் நோக்கமாய் இருக்கவேண்டுமாதலால், பாதுகாப்பின் அடிப்படையாகிய அரசியலமைப்பைக் காக்க அவர்கள் எல்லாவற்றையும் துறக்கத் தயாராய் இருக்கவேண்டும் என்றும், எக்குடியும் அரசியலமைப்பிற்குப் புறம்பாகச் செய்யப்படும் எச்செயலுக்கும் (அரசியலமைப்புக்குப் புறம்பான அச்செயலை அன்றைய அரசாங்கம் செய்தாலும், அல்லது அரசியற்சங்கங்களல்லாத பிற கூட்டங்கள், நாம் 'நேரடி நடவடிக்கை' எனக்கூறும் முயற்சியில் ஈடுபட்டபோதிலும்) ஒரு போதும் இடமளிக்கக் கூடாதென்றும் அவர் வலியுறுத்துகிருர். இக்கருத்து அரிஸ்டாட்டிலின் பண்டைய ஆட்சி முறையிலிருந்ததைவிட இக்கால மக்களாட்சியில் அதிகமாய்ப் பயன்படுகிறது. மேலும் அரிஸ்டாட்டிலின் காலத்திலிருந்து அவரது பகுப்பாராய்ச்சிக்கேற்பச் சீர்கேடுகளும் புரட்சிகளும் சுழற்சி போல நிகழ்ந்து வந்துள்ளன என்பதற்கு உலக வரலாற்றில் பல சான்றுகள் உள்ளன என்பதையும் மறுக்க இயலாது.

ஆயினும், அரிஸ்டாட்டிலின் அரசியலமைப்புப் பாகுபாடு நாம் ஏற்கக்கூடியதன்று. ஏனெனில், அது இப்போதுள்ள அரசியல் நிலைமைகளுக்குப் பொருந்தாது. எடுத்துக்காட்டாக, இக்கால அரசை விளக்குவதற்கு 'முடியாட்சி' என்ற சொற்ருெடர் பயன்படாது. ஏனெனில், அது தனிப்பட்ட பொருளைத் தருவதில்லை.

மேலும், 'மக்களாட்சி' என்ற சொற்றொடர் இக்கால அரசுகளில் பலவற்றிற்குப் பொருந்துமாதலால், அவற்றைப் பிரித்துப் பாகுபாடு செய்ய இயலவில்லை. அரிஸ்டாட்டிலுக்குப் பின் வந்த அரசியல் தத்துவ வல்லுநர்களின் பாகுபாடுகளும் இக்கால நிலைமைகளுக்கு ஏற்றனவாய் இல்லை. சான்றாக, 18-ஆம் நூற்றாண்டின் இடையில் மான்டெஸ்க்யூ (Montesquieu) என்பார் அரசாங்கங்களைக் குடியரசு, முடியரசு, வல்லாட்சி என மூன்று வகைகளாகப் பிரித்தார். சில ஆண்டுகளுக்குப் பிறகு ரூஸோ என்பார் அரசாங்கங்களைத் தன்னரசு, உயர்குடியாட்சி, மக்களாட்சி என மூன்று பகுதிகளாக வகைப் படுத்தினர். ஆனால், குடியரசென்ற ஒரே வகையான அரசுதான் உண்டென அவர் கூறினர். அதற்குப் பிறகு **'கான்ட்'** (Kant) என்பார் ரூஸோவின் மூவகை அரசாங்கங்களுக்கு இணையாக மூவகை அரசுகளைக் குறிப்பிட்டார். ஆனால், அவர் குடியரசு, வல்லாட்சி என்ற இரு வகை அரசாங்கங்களையே காட்டினர். ஆனால், இக்கால உலகில் முடியாட்சி என்ற சொற்றொடரைப்போலக் குடியரசு என்ற சொற்றொடரும் நாம் குறிப்பிடும் அரசின் அமைப்பை விளக்குவதில்லை. உதாரணமாக, இக்காலத்திலுள்ள ஐக்கிய அமெரிக்க நாடுகள், சுவிட்ஸர்லாந்து, பிரான்ஸ் ஆகிய மூன்று குடியரசுகளையும், கிரேட் பிரிட்டன், நார்வே, நெதர்லாந்து ஆகிய மூன்று குடியரசுகளையும் எடுத்துக்கொள்வோம். இதைப் பாகுபாட்டின் அடிப்படையாக வைத்து, ஐக்கிய அமெரிக்க நாடுகள், சுவிட்ஸர்லாந்து, பிரான்ஸ் ஆகிய இம்மூன்றும் ஒரு வகையான அரசுகளென்றும்; பிரிட்டன், நார்வே, நெதர்லாந்து ஆகியவை வேறொரு வகையான அரசுகளென்றும் கூறுவது தவறாகும். அவ்வாறு கூறுவது நாம் சொல்வழக்குகளைக் குருட்டுத்தனமாக ஏற்றுக்கொள்வது போலாகும். நமது காலத்தில் இக்கால ஜெர்மானிய நூலாசிரியரான **பிளன்ட்ஷ்லி** (Bluntschli) என்பார் அரிஸ்டாட்டிலின் மூவகைப் பாகுபாட்டை விரித்து, கொள்கை ஆட்சி (Ideacracy) அல்லது சமயச் சார்பு ஆட்சி (Theocracy) என்ற நாலாவது வகை அரசையும் சேர்த்துள்ளார். இதில் கடவுள் அல்லது மனித இயல்புக்கு மேலான ஓருயிர் அல்லது கொள்கை மேலான ஆட்சி செலுத்துவதாகக் கருதப்படுகிறது. எடுத்துக்காட்டாக, தொடக்கத்திலிருந்த யூத அரசையும் முகமதிய நாடுகளையும் கூறலாம். ஆனால், இப்பாகுபாடு, அரசுகளை அவற்றில் காணப்படும் உண்மையான ஒற்றுமை வேற்றுமைகளுக்கேற்ப வகைப்படுத்துவதற்கு அதிகமாகப் பயன்படாது. ஆகவே, நாம் வேறு வழிகளைத் தேடவேண்டும்.

## 2. இக்காலப் பாகுபாட்டின் ஆதாரங்கள்

உண்மையில் ஒவ்வோர் அரசையும் தனித்தனியாகப் பார்த்து, அவற்றையெல்லாம் வகைப்படுத்துவது இயலாத காரியம். ஏனெனில், எல்லா அரசுகளும், மொத்தத்தில் ஒரே வகை அதிகாரங்களைச் செலுத்துகின்றன. அதாவது, ஒவ்வோர் அரசும் திறமையுள்ள ஓர் அரசியல் சமுதாயம். ஒரு சமுதாயம் அவ்வாறில்லையெனில், அதை அரசென்று கூற இயலாது. வில்லோபி (Willoughby) என்ற அமெரிக்க நூலாசிரியர் கூறுவது போல, 'அரசுகளை அவற்றின் அரசாங்க அமைப்பின் தனித்தன்மைகளுக்கேற்பப் பகுப்பதுதான் அவற்றைப் பாகுபடுத்தும் ஓரே வழி.' நாம் முந்திய இயலில் வரைந்த இக்கால அரசியல் முறைமைக்குட்படுகையின் வரலாற்றிற்கேற்ப இதை எண்ணிப்பார்க்கும் போது, உடனே ஓர் உயிருள்ள பாகுபாடு உருவாவதைக் காண்கிறோம். எவ்வாறு ஏறக்குறைய ஒரே வகையான ஆற்றல்கள் மேல் நாட்டின் எல்லாச்சமுதாயங்களையும் பாதித்தன எனவும், ஆகையால் அவற்றில் ஒற்றுமைகள் காணப்படுவது இயற்கை எனவும் மேலே பார்த்தோம். அதற்கு மாறாகத் தேசீயம் பிரிவினைக் கொள்கையைப் பேணி வளர்த்ததால், அவற்றிடையே வேற்றுமைகளும் தெளிவாகத் தோன்றலாயின. ஆகவே, நாம் பாகுபாடு செய்யும்போது, இக்கால அரசியல் முறைமைக்குட்பட்ட எல்லா அரசுகளுக்கும் பொதுவான பண்புகளைக் கண்டுபிடித்து, அரசுகளை அவற்றின் அமைப்பின் தனித்தன்மைகளுக்கேற்பப்பிரிக்க வேண்டும். அதாவது, ஒவ்வொரு பண்பாக ஆய்ந்து, அந்தந்தப் பண்புப் பிரிவுகளுக்கேற்ப அரசுகளை வகைப்படுத்த வேண்டும்.

பொதுவான அந்தப் பண்புகள் எவையென்பதை நாம் முதல் இயலில் ஏற்கெனவே குறிப்பிட்டிருக்கிறோம். ஒவ்வோர் அரசியல் முறைமைக்குமுட்பட்ட அரசின் அரசாங்கத்திலும் சட்ட மன்றம், நிருவாகத்துறை, நீதித்துறை என்ற மூன்று தனிப்பகுதிகள் உள்ளன என்பதைப் பார்த்தோம். ஆகவே, பின்காணும் ஐந்து பிரிவுகளின் படி நமது பாகுபாடு அமையவேண்டும் : (1) அரசியலமைப்பைப் பயன்படுத்தும் அரசின் தன்மை, (2) அரசியலமைப்பின் தன்மை, (3) சட்ட மன்றத்தின் தன்மை, (4) நிருவாகத்துறையின் தன்மை, (5) நீதித்துறையின் தன்மை.

இப்பாகுபாட்டின் குறை என்னவென்றால், ஒவ்வோர் அரசையும் பல முறை திரும்பப் பார்க்கவேண்டியிருப்பது ; அதாவது, ஒவ்வொரு தடவையும் அதன் ஒரு பண்பை மட்டும் பார்க்கிறோம். ஏனெனில், முதற்பண்பைப் பொறுத்த வரையில் 'அ' என்ற அரசு 'ஆ' என்ற

அரசை ஒத்திருப்பதால், இரண்டாவது பண்பிலும் அதை ஒத்திருக்கிற தென்று சொல்ல இயலாது. அல்லது, 'இ' என்ற அரசு மூன்றுவது பண்பில் 'ஈ' என்றஅரசிலிருந்து வேறுபட்டிருப்பதால் அது நான்காவது பண்பிலும் அதினின்று வேறுபட்டிருக்கும் என்றும் கூற இயலாது. இந்த உண்மைதான் இவ்வகைப் பாகுபாட்டை இக்கால நிலைமைகளுக் கேத்றதாகச் செய்கிறது. இதனுல் விளையும் நற்பயன், இம்முறைப் பாகுபாட்டில் காணப்படும் எல்லாக் குறைகளையும் களைந்துவிடுகிறது எனலாம்.

இப்பாகுபாட்டின் விவரங்களை இப்போது ஆராய்வோம் : இது இக்கால அரசியல் நூல் ஆசிரியர் பலரின் கருத்துப்படி அமைக்கப் பட்டுள்ளது. நாம் இங்குப் பயன்படுத்தும் முறையில் அவர்கள் அவற்றை ஆராயவில்லை. நமது பாகுபாட்டில் எல்லாம் அடங்கி யுள்ளதாக நாம் கூற இயலாது.

ஏனெனில், அரசியலமைப்புகளை ஒப்பு நோக்குதல் பாகு பாட்டிற்கு அப்பாற்பட்டது. ஆனுல், அதைப் பயிலும் மாணவனுக்கு அது ஓரளவு பயன்படுகிறது. இப்பாகுபாட்டின் வரம்பிற்குப் புறம்பான முக்கியச் செய்திகளை இந்நூலின் மூன்றுவது பகுதியில் விளக்குவோம். இப்போது நமது பாகுபாட்டை ஆழ்ந்து ஆராயலாம்.

## 3. அரசியலமைப்பைப் பயன்படுத்தும் அரசின் தன்மை ஒருமுக ஆட்சியா, அல்லது கூட்டாட்சியா ?

அரசியல் அமைப்புக்குட்பட்ட இக்கால அரசு ஒவ்வொன்றும் ஒருமுக ஆட்சி (Unitary) அல்லது கூட்டாட்சி (Federal) எனும் இரு பெரும்பிரிவுகளுள் ஒன்றைச் சேரும். இது மிகவும் முக்கியமான ஒரு வேறுபாடு என்று கூறவேண்டும். தனி மத்திய அரசாங்கம் ஒன்றின் கீழ் அமைக்கப்படும் அரசு 'ஒருமுக அரசு' (Unitary State) எனப் படும். அதாவது, மத்திய அரசாங்கத்தின் முழு ஆட்சிப் பரப்பிலு முள்ள பல மாவட்டங்கள் தமக்குள்ள எல்லா அதிகாரங்களையும் மத்திய அரசாங்கத்தின் விருப்பப்படியே செலுத்தி வருகின்றன. மத்திய அரசாங்கம் முழு நாட்டின் மேலும் தலைமையான அதிகாரம் செலுத்து கிறது. நாட்டின் பகுதிகளுக்குத் தனி அதிகாரங்களை வழங்கும் எந்தச் சட்டமும் அத்தலைமையான அதிகாரத்தை வரையறுக்க இய லாது. டைஸி (Dicey) என்பவர் ஒரு முக ஆட்சி என்பதை அதன் அரசியல் கருத்தில் அழகாக விளக்கியுள்ளார். அவர் அதை 'ஒரு மத்திய அரசாங்கம் தலைமையான சட்ட ஆக்க அதிகாரத்தை வழக்க

மாகச் செலுத்துதல்' என விரித்துரைக்கின்றூர். பிரான்ஸ், பிரிட்டன், பெல்ஜியம் ஆகிய நாடுகள் ஒரு முக அரசுகளுக்கு எடுத்துக்காட்டுகளாகும். இவற்றுள் ஒவ்வொன்றிலும், அரசின் சிறு பகுதிகளின் சட்டமன்றங்கள் மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்தைக் குறைப்பதே இல்லை. பிரிட்டனில் இருப்பது போல வட்டார அரசாங்கம் வலிமையுடையதாய் இருக்கும் நாடுகளிலுங்கூட மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் கட்டுப்படுத்தப்படுவதில்லை. அது வட்டார அதிகாரங்களை மீறக்கூடும். ஏனெனில், இக்காலத்தில் வட்டார ஆட்சி நிறுவனங்கள் செலுத்திவரும் அதிகாரங்களையும் மத்திய அரசாங்கம் வழங்குவதால், அது அவற்றை மாற்றவோ அல்லது அழிக்கவோ இயலும். பிரிட்டனிலுள்ள வட்டார ஆட்சி நிறுவனங்கள் உண்மையில் சட்டமியற்றும் நிறுவனங்களல்ல. அவை துணைச் சட்டங்களையே (by-laws) இயற்றுகின்றன.

ஒரே இனத்தைச் சேர்ந்த சில அரசுகள் குறிப்பிட்ட சில பொதுக் காரியங்களுக்காக ஒன்று சேர்ந்திருக்கும் அரசைக் 'கூட்டாட்சி அரசு' (Federal State) என்கிறோம். டைஸி கூறுவது போல, 'நாட்டின் ஒற்றுமையையும் அதிகாரத்தையும் மாநில உரிமைகளோடு இணைக்கும் ஓர் அரசியல் ஏற்பாடே கூட்டாட்சி அரசாகும்.' ஒரு முக அரசிலுள்ள வட்டார அரசாங்கத்திற்கும் கூட்டாட்சி மாநில அரசாங்கத்திற்குமுள்ள வேறுபாட்டை நாம் நன்கு கண்டறிய வேண்டும். கூட்டாட்சி அரசில் மத்திய அல்லது கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரங்கள் குறைக்கப்பட்டிருக்கின்றன. சில அதிகாரங்கள் பொதுக்காரியங்களுக்காக ஒன்று சேர்ந்திருக்கும் உறுப்புகளுக்கு வழங்கப்பட்டுள்ளன. ஆகவே, கூட்டாட்சி அரசில், கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் கூட்டாட்சியிலுள்ள உறுப்புகளின் அரசாங்கங்களுக்கும் இடையே அதிகாரப் பிரிவு இருப்பதைக் காண்கிறோம். இவ்வாறு இருப்பதனால், இந்த அதிகாரப் பங்கீட்டைத் தீர்மானிப்பதற்கு ஒரு மேலாண்மை தேவை. அத்தகைய மேலாண்மைதான் அரசியலமைப்பு. கூட்டாட்சி அரசியலமைப்பின் தன்மை உடன்படிக்கையின் தன்மையை ஒத்தது. அது, சில உண்மைகளை விட்டுக் கொடுக்க விரும்பாத அரசியல் சமுதாயங்கள் தமக்கிடையே செய்துகொள்ளும் ஏற்பாடாகும். இவ்வாறு கூட்டாட்சியின் உறுப்புகள் வைத்துக்கொள்ள விரும்பும் அதிகாரங்களை அல்லது கூட்டாட்சி அரசாங்கம் எடுத்துக்கொள்ளும் அதிகாரங்களை அரசியலமைப்பு விளக்கமாக எடுத்துக் கூறுகிறது. கூட்டாட்சியில் அரசியலமைப்பை மாற்றுவதற்குத் தனி மாநிலங்களின் சட்ட மன்றங்களுக்கும் கூட்டாட்சியின் சட்ட மன்றத்திற்கும் அதிகாரம் இருக்க இயலாது. அவ்வாறு மாற்ற வேண்டுமானால், மாநிலங்களின் கருத்துகளைக் கண்டறியத் தனி முறைகளைப் பயன்படுத்த வேண்டும். உண்மையான

கூட்டாட்சி அரசில் இத்தனி முறைகள் அரசியலமைப்பில் தெளி வாகக் குறிப்பிடப்பட்டிருக்கும். மேலும், கூட்டாட்சி அரசாங்கத் திற்கும் மாநில அரசாங்கத்திற்கும் முரண்பாடு ஏற்படும் போது அதைத் தீர்த்து வைக்க ஒரு வகை அதிகாரம் தேவையாய் இருக் கிறது. இதைத் தலைமை நீதி மன்றம் (Supreme Court) செலுத்தி வரு கிறது.

இவ்வாறு முழு வளர்ச்சி பெற்ற கூட்டாட்சியில் மூன்று சிறப் பியல்புகள் காணப்படுகின்றன. முதலாவது அரசியலமைப்பின் மேம்பாடு (Supremacy of the Constitution) ஆகும். இது வழியாகவே கூட்டாட்சி நிறுவப்படுகின்றது. இரண்டாவது, கூட்டாட்சி அரசுக் கும் அதன் உறுப்பு அரசுகளுக்குமிடையேயுள்ள அதிகாரம் பங்கீடு (Distribution ol powers) ஆகும். மூன்ருவது, கூட்டாட்சி அரசாங் கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்கும் இடையே ஏற்படும் பிணக் கங்களைத் தீர்த்து வைக்கும் மேலாண்மையுள்ள நிறுவனம். நாம் கூட்டாட்சி அரசுகளெனக் கூறும் எல்லா அரசுகளும் முற்றிலும் இவ்வாறு இருப்பதில்லை. உண்மையில் கூட்டாட்சி முறையில், முழுமையையும் நுட்பத்தையும் பொறுத்த வரையில் பல வகை வேறுபாடுகள் உள்ளன. முழுவதும் கூட்டாட்சி முறையில் அமைக்கப்பட்ட அரசினை ஓரளவு ஒத்திருக்கும் அரசுகளை அரைக் கூட்டாட்சி (Quasi Federal) அரசுகள் எனலாம். இவ்வேறுபாடுகளைப் பற்றிப் பின்ஞேர் இயலில் விரிவாக ஆராய்வோம். இங்கு, இப்போ துள்ள கூட்டாட்சி அரசுகளில் அமெரிக்க ஐக்கிய நாடுகள், சுவிட் ஸர்லாந்து, ஆஸ்திரேலியா, கனடா, ரஷ்யா ஆகியவற்றைப் பார்ப் போம். இக்கூட்டாட்சிகள் நுணுக்கங்களில் அதிகமாக வேறுபட் டிருந்தபோதிலும், கூட்டாட்சி அரசின் அடிப்படை விதியை இவை ஏற்றுக்கொள்கின்றன. அவ்விதியின்படி, ஒவ்வொரு கூட்டாட்சி அரசும் பல சிறு அரசுகளால் அமைக்கப்பட்டுள்ளது; அச்சிறு அரசுகள் ஒற்றுமையை விரும்பிய போதிலும் ஒரே தன்மை பெற விழைவதில்லை.

நாம் கூட்டாட்சி அரசைப்பற்றிக் கூறிய போதிலும், கூட்டாட் சியை அமைக்கும் உறுப்புகளையும் அரசுகள் என்றே குறிப்பிடுவதைக் கவனித்திருக்கலாம்.[1] இதற்கு மொழியின் குறைபாடே காரணம். அரசுகள் ஒன்று சேர்ந்து கூட்டரசை அமைத்தவுடன் அவை கூட் டாட்சி அரசின் உறுப்புகளாக மாறி, அதன் விளைவாக முழு

---

1. இம்மொழிபெயர்ப்பு நூலில் கூட்டாட்சியின் உறுப்புகளை (States) பெரும்பாலும் '**மாநிலங்கள்**' என்னும் சொல்லால் குறிப் பிட்டிருக்கிறேம்.

அரசின் தன்மையை இழந்துவிடுகின்றன. ஏனெனில், அரசின் இன்றியமையாத இயல்பென நாம் மேலே வலியுறுத்திய இறைமையின் ஒரு பகுதியை அவை விட்டுக்கொடுக்கின்றன. ஆகவே, இப்போது அமெரிக்க ஐக்கியத்திலுள்ள 50 அரசுகளும்[1] உண்மையில் அரசுகளல்ல. முழு ஐக்கியந்தான் உண்மையான அரசு. ஆயினும், அவ்வரசுகள் மிகுதியான சட்ட ஆக்க அதிகாரம் பெற்றுள்ளன. அவற்றின் சட்ட மன்றங்களைப் பாதி இறைமையுள்ள சட்ட ஆக்க நிறுவனங்களெனக் கூறலாம். மேலும், ஆஸ்திரேலியப் பொதுநலக் கூட்டிலுள்ள ஆறு அரசுகளில் எதுவும் உண்மையான அரசன்று. ஆனல், பொதுநலக் கூட்டு ஓர் அரசாகும். அது கூட்டாட்சியின் இயல்பே இல்லாத அமைப்பையுடைய பிரிட்டிஷ் நாடுகளின் பொதுநலக் கூட்டில் (British Commonwealth of Nations) ஒரு பகுதியாய் இருந்த போதிலும், அது ஓர் உண்மையான அரசாகும். இதை மற்ருேர் இயலில் விளக்குவோம்.

நாம் மேலே கூறியவற்றிலிருந்து, இக்கால அரசியல் அமைக்குட்பட்ட அரசுகளைப் பாகுபாடு செய்ய நமக்கு நல்லதோர் அடிப்படை உள்ளதென்பது தெளிவாகத் தெரிகின்றது. ஏனெனில், பல வகை ஒருமுக அரசுகளும், கூட்டாட்சி அரசுகளும் இருந்த போதிலும், இன்றிருக்கும் அரசியல் அமைப்புக்குட்பட்ட எந்த அரசும் இவ்விரு வகைகளுக்குப் புறம்பாக இருக்க இயலாது. இதைப் பிறகு விரிவாக விளக்குவோம்.

இதே வகைப் பாகுபாட்டிற்கு நாம் இன்னெரு துணை அடிப்படையையும் இங்குச் சேர்த்திருக்கலாம். அது என்னவெனில், மத்திய அரசாங்கத்திற்கு அதிக அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறதா, அல்லது வட்டாரங்களுக்கு அதிக அதிகாரம் வழங்கப்பட்டுள்ளதா என்ற அடிப்படையில் எழும் பாகுபாடு ; அதாவது, அரசில் வட்டார அரசாங்கம் வலிமை பெற்றிருக்கின்றதா, இல்லையா என்ற வேறுபாடு. எடுத்துக்காட்டாக, கிரேட் பிரிட்டனில் வட்டார நிறுவனங்களுக்கு வலிமை அதிகம். ஏனெனில், சமுதாயத்தின் அரசியல் வாழ்வில் வட்டார அரசாங்கம் பெரும்பங்கு பெறுகிறது. அதற்கு மாருக, பிரான்ஸில் வட்டார நிறுவனங்களுக்கு மிகவும் குறைந்த பொறுப்புக் கொடுக்கப்பட்டுள்ளது. அவ்வாறு கொடுக்கப்பட்டிருந்தும் அதை மாநிலத் தலைவர் (Prefect) என்ற மத்திய அரசாங்க அதிகாரி மேற்பார்வையிட்டுக் கட்டுப்படுத்துகிருர். இப்பொருள் பல வகைகளில் முக்கியமானதாய் இருந்த போதிலும், இதைப்பற்றி நீண்ட

1. 1959இல் அலாஸ்காவும் ஹவாயும் சேர்ந்ததிலிருந்து இப்போது 50 அரசுகள் உள்ளன.

விளக்கம் தருவது முறையன்று. ஏனெனில், அது நமது முக்கியப் பொருளுக்குப் புறம்பானது. அதை நாம் இங்குக் குறிப்பிடுவதன் நோக்கம், வட்டார அரசாங்கத்திற்கும், (கூட்டாட்சியிலுள்ள) மாநில அரசாங்கத்திற்கும் உள்ள வேறுபாட்டை வலியுறுத்துவதுதான். இவ்வேறுபாட்டை விளக்க ஒரு சான்று கூறலாம். அதாவது, ஒரு முக அரசான பிரான்ஸில் வட்டார அரசாங்கம் வலுக்குறைந்திருக் கிறது. ஆனால், கூட்டாட்சி அரசான அமெரிக்க ஐக்கிய நாடுகளில் ஒவ்வொரு மாநிலத்திலும் வட்டார அரசாங்கம் அதிக அலுவல்களை ஆற்றி வருகின்றது. மாநில அரசாங்கம் இதைப்பற்றிப் பெரிதும் பெருமைப்படுவதுடன் இதைக் கவனமாகக் காத்தும் வருகின்றது.

## 4. அரசியலமைப்பின் தன்மை

### (அ) எழுதப்படாததா அல்லது எழுதப்பட்டதா என்பது ஒரு தவறான பாகுபாடு

அரசியலமைப்புகளை, எழுதப்படாதவை எழுதப்பட்டவையென அடிக்கடி பாகுபாடு செய்கிறோம். ஆனால், உண்மையில் இது தவறான பாகுபாடாகும். ஏனெனில், முற்றிலும் எழுதப்படாத அல்லது முழு வதும் எழுதப்பட்ட அரசியலமைப்பை நாம் எங்கும் காண இயலாது. தனிப் புனிதத் தன்மையுடைய ஓர் ஆவண உருவிலுள்ள அரசிய லமைப்பைப் பொதுவாக எழுதப்பட்ட அரசியலமைப்பு என்கிறோம். எழுதப்பட்ட சட்டத்தைவிட வழக்கங்கள் வாயிலாகவே வளர்ந்த அரசியலமைப்பைப் பொதுவாக எழுதப்படாத அரசியலமைப்பு என்கிறோம். சில வேளை, எழுதப்பட்டதாகக் கூறப்படும் அரசிய லமைப்பு முற்றிலும் முழுமை பெற்ற அமைப்பாய் இருக்கின்றது. அந்த அரசியலமைப்பைத் தீட்டியவர்கள் நடைமுறையில் நிகழக்கூடிய எதிர் பாராத எல்லா நிகழ்ச்சிகளுக்கும் ஏற்ப அதில் ஏற்பாடுகள் செய்ய முயன்றிருக்கின்றனர். இன்னும் சில வேளைகளில், எழுதப் பட்ட அரசியமைப்பில் சில அடிப்படைச் சட்டங்கள் கொடுக்கப்பட் டுள்ளன. அரசியலமைப்பை வரைந்தவர்கள் இவற்றைப் புதியனவாக உருவாக்கியபோது அல்லது ஏற்கெனவே இருந்த இவற்றை அரசிய லமைப்பில் இணைத்தபோது, அவர்களுக்கிருந்த நோக்கம் என்னவென் றால், சாதாரணச் சட்ட ஆக்க முறை வளர்வதற்கு வாய்ப்பளித்து, அரசியலமைப்பானது வரையப்பட்ட திட்டத்திற்குள்ளே வளர்ச்சி யடைய வழி வகுக்க வேண்டும் என்பதுதான்.

நாம் கிரேட் பிரிட்டனின் அரசியலமைப்பை எழுதப்படாததெனக் கருதுகின்றோம். ஆனால். எழுதப்பட்ட சில சட்டங்கள் அந்த அரசிய லமைப்பைக் குறிப்பிடத்தக்க வகையில் மாற்றி அமைத்திருக்கின்றன. எடுத்துக்காட்டாக, உரிமைகளின் மசோதா (Bill of Rights, 1689)

19-ஆம், 20-ஆம் நூற்றாண்டுகளில் இயற்றப்பட்ட பல்வேறு வாக்குரிமைச் சட்டங்கள், சிறப்பாக மக்கள் சபை (House of Commons) நிறைவேற்றிய மசோதாக்களை மாற்றவோ அல்லது தள்ளவோ பிரபுகள் சபைக்கிருந்த அதிகாரத்தைக் குறைத்த 1911-ஆம், 1949-ஆம் ஆண்டுப்பாராளுமன்றச் சட்டங்கள் போன்றவை அரசியலமைப்பின் சட்டங்களாகும். அதற்கு மாறாக, அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு எல்லா அரசியலமைப்புகளைவிட முற்றிலும் எழுதப்பட்ட அரசியலமைப்பாய் இருந்த போதிலும், அதை எழுதியவர்களின் எண்ணத்திற்கு எதிராக எழுதப்படாத சில வழக்காறுகள் அல்லது வழக்கங்கள் அரசியலமைப்பில் யாதொரு சொல் திருத்தத்தையும் உண்டுபண்ணாமல் வளர்ந்துவிட்டன. எடுத்துக்காட்டாக, அரசியலமைப்பின் இரண்டாவது விதியின் முதலாவது பிரிவின்படி (12-ஆம் திருத்தத்தின்படியும்) நாட்டின் தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்காக மக்கள் தேர்வாளர்களைத் தெரிந்தெடுக்கின்றார்கள். அவர்கள் கூடித் தாங்கள் விரும்பிய ஒருவரைப் பெரும்பான்மை வாக்குகளால் தேர்ந்தெடுக்க வேண்டும். ஆனால், நடைமுறையில் இவ்வாறு நிகழ்வதே இல்லை. இதைப்பற்றிப் பின்னர் விளக்குவோம்.

ஆகவே, அரசியலமைப்புகளை எழுதப்பட்டவை எனப்பகுப்பது தவறானது என்பதை மீண்டும் கூறவேண்டும். எழுதப்பட்டவை எழுதப்படாதவை என்று சொல்லப்படும் அரசியலமைப்புகளைப் பிரித்துக்காட்டச் சில வேளை இப்பாகுபாடு தேவைப்படுகின்றது. அவ்வாறு தேவைப்படும்போது முந்தியதைஆவணமுறை (documentary) அரசியலமைப்பென்றும், பிந்தியதை ஆவண முறையல்லாத (non-documentary) அரசியலமைப்பென்றும் குறிப்பிடலாம்.

## (ஆ) நெகிழும் அல்லது நெகிழா அரசியலமைப்பு

அரசியலமைப்பு நெகிழும் தன்மையதா அல்லது நெகிழாத் தன்மையதா என்ற பாகுபாடு அரசியலமைப்பின் இயற்கையோடு இயைந்த உண்மையான பாகுபாடாகும். இப்பாகுபாடும், ஆவண முறை என்ற பாகுபாடும் ஒன்றே என்ற தவறான கருத்து, பொதுவாக நிலவி வருகிறது. ஆவண முறையல்லாத அரசியலமைப்பு நெகிழும் தன்மையுடையதாக மட்டும் இருக்க இயலும் என்பது உண்மையெனினும், ஆவண முறை அரசியலமைப்பும் நெகிழும் தன்மையதாயிருக்க இயலும். ஆகவே, ஓர் அரசியலமைப்பை நெகிழும் தன்மையதாக அல்லது நெகிழாத் தன்மையதாகச் செய்வது எது? அரசியலமைப்புச் சட்ட ஆக்க முறை (Process of Constitutional law-making) சாதாரணச் சட்ட ஆக்க முறையை ஒத்திருக்கின்றதா இல்லையா என்பது

தான் இவ்வேறுபாட்டின் அடிப்படை. தனி முறை எதுவுமின்றி மாற்றக்கூடிய அல்லது திருத்தக்கூடிய அரசியலமைப்பு நெகிழும் (Flexible) அரசியல் அமைப்பு. அரசியலமைப்பை மாற்றுவதற்கு அல்லது திருத்துவதற்குத் தனி முறை தேவைப்பட்டால், அது நெகிழா (Rigid) அரசியலமைப்பு.

எடுத்துக்காட்டாக, கிரேட் பிரிட்டனில் விளையாட்டு விலங்குகளுக்குப் பயிற்சியளிப்போரின் முறைகளைக் கட்டுப்படுத்தும் மசோதாவையும், பிரபுகள் சபையின் அதிகாரத்தைப் பெரிதும் மாற்றும் மசோதாவையும் நிறைவேற்ற ஒரே வகையான சட்ட ஆக்க முறையே பயன்படுகின்றது. ஐக்கிய அரசியல் (The united Kingdom) உண்மையில் தனிப்பட்ட அரசியலமைப்புச் சட்டம் என்பது இல்லை. ஆகவே, ஐக்கிய அரசின் அரசியலமைப்பு நெகிழும் தன்மையுடையது. முன்னுள் இத்தாலிய முடியரசும் அதே தன்மையுடையது. முடியாட்சியின் கீழிருந்த இத்தாலியில் ஆவண முறை அரசியலமைப்பு இருந்த போதிலும், அவ்வரசியல் அமைப்பை மாற்றுவதற்கெனத் தனி முறை அதில் குறிக்கப்படவில்லை. உண்மையில் அவ்வரசியல் அமைப்பு விரிந்துகொண்டு சென்ற அரசினுடைய தேவைகளையும் அதிக முற்போக்குள்ள அரசியல் சமூகத்தினுடைய தேவைகளையும் நிறைவேற்றுவதற்காகச் சாதாரணச் சட்ட ஆக்க முறைப்படி மாற்றியமைக்கப்பெற்ற 1848-ஆம் ஆண்டு ஸார்டீனிய அரசியலமைப்பின் மற்றொரு தோற்றந்தான். அது எவ்வளவு நெகிழும் தன்மை பெற்றிருந்ததென்றால், முசோலினி தமது வல்லாட்சியின் தொடக்கக் காலத்தில் அரசியலமைப்பின் உட்கருத்தை வெளிப்படையாக எதிர்க்காமல் அதை மீற முடிந்தது. அது இப்போது இத்தாலியில் மாறிவிட்டது. ஏனெனில், 1947-ஆம் ஆண்டுக் குடியரசின் அரசியலமைப்பு நெகிழாத் தன்மை உடையது. அதைத் திருத்தக்கூடிய வழிகள் அதில் மிக விரிவாகக் குறிக்கப்பட்டுள்ளன. இதைப்பற்றிப் பிறகு விரிவாக ஆராய்வோம்.

இங்கு ஒரு புதுமையான முரண்பாட்டைக் காண்கிறோம். ஓர் அரசியலமைப்பு அதிகமாக எழுதப்பட்டிருந்த போதிலும், அதாவது, அது பல தனித்தனி சட்டங்களின் பெருந்தொகுதியாய் இருந்த போதிலும், அது நெகிழும் இயல்புடையதாய் இருக்கலாம். உண்மையில் அது பல்வேறு காலங்களில் நிறைவேற்றப்பட்ட சட்டங்களின் தொகுதியாய் இருப்பதால், நெகிழும் தன்மையுடையதாய் இருக்கின்றது. ஏனெனில், அரசியலமைப்புத் திருத்தத்திற்கென்று தனி முறை பயன்படுத்தப்பட்டால், அவ்வளவு அதிகமான திருத்தங்கள் ஏற்பட வழியில்லை. மூன்றுவது, பிரெஞ்சுக் குடியரசின் அரசியலமைப்பு மிகக்குறைவாகவே எழுதப்பட்டிருந்த போதிலும், நெகிழாததாய் இருந்ததற்குக் காரணம், அதன் அடிப்படைச் சட்டங்களை

மாற்றுவதற்குத் தனி முறை தேவைப்பட்டதுதான் என்பது முரண்பாட்டை இன்னும் தெளிவாகக் காட்டுகிறது. 1946 இல் அறிக்கையிடப்பட்ட நான்காவது பிரெஞ்சுக் குடியரசின் அரசியலமைப்பு, மூன்றுவது குடியரசின் அரசியலமைப்பினின்று வடிவத்தில் வேறுபட்டிருந்த போதிலும், அதைப்போல, சில வேளை அதைவிட அதிகமாக, நெகிழாத தன்மை பெற்றிருந்தது. ஏனெனில், அது முழுமையான—எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிய—ஓர் ஆவணம்.

ஐந்தாவது குடியரசின் அரசியலமைப்பும் நெகிழாத் தன்மையுடையது. ஆயினும், அது திருத்த முறைகளில் குடியரசுத் தலைவருக்குச் சில அதிகாரங்களை வழங்கியிருக்கின்றது.

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு நெகிழாதது. ஏனெனில், அதற்கெனத் தனி முறையைப் பயன்படுத்தாமல் அதைத் திருத்த இயலாது. ஏனெனில் கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரங்கள் எவையென்பதை அரசியலமைப்புத் தெளிவாகக் கூறுகின்றது. கூட்டாட்சி அரசாங்கம் அவற்றைவிட அதிக அதிகாரங்களைச் செலுத்த முயலுமானுல், அரசியலமைப்பை வளைப்பதற்குப் பதிலாக முரித்துவிடும். சுருங்கக் கூறின், வளைக்கும் போது முரிந்துவிடும் தன்மையுடைய அரசியலமைப்பை நெகிழாத அரசியலமைப்பு எனலாம்.

## 5. சட்டமன்றத்தின் தன்மை

அரசியலமைப்புக்குட்பட்ட இக்கால அரசின் மிகச்சிறப்பான நிறுவனம் சட்டமன்றம் அல்லது சட்ட ஆக்க நிறுவனம். இதன் அடிப்படையில் அரசுகளைப் பாகுபாடு செய்யும் பல முறைகள் உள்ளன. ஆனுல், அவற்றுள் பல பயன் தாரா. எடுத்துக்காட்டாக, இக்காலச் சட்டமன்றங்களை ஒரு சபையுள்ள மன்றங்களென்றும், இரு சபைகளுள்ள மன்றங்களென்றும் பிரிப்பது உண்மையான பாகுபாடு அன்று. ஏனெனில், அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஆஸ்திரேலியா, மேற்கு ஜெர்மனி போன்ற நாடுகள் கூட்டாட்சி அரசுகளாய் இருப்பதால், அவற்றிற்கு இரு சபைகளுள்ள சட்ட மன்றங்கள் தேவையெனினும், நியூஜீலந்து, டென்மார்க்கு, பின்லாந்து போன்ற ஒரு முக அரசுகள் ஒரு சபையுள்ள மன்றத்திறைல் தமது சட்ட சபை அலுவல்களை முற்றிலும் ஆற்ற இயலும். மேலும், சட்டமன்றங்களைப் பாராளுமன்ற முறைகளுக்கேற்பப் பகுப்பது நமது ஆய்வுக்கு அதிகத் துணை செய்யாது. அதைவிட அதிக முக்கியமானது என்னவென்ருல், சட்டமன்றங்களும், அவற்றுள் முக்கியமானவற்றின் கீழ், மேல் சபைகளும் எவ்வாறு முதலில் அமைக்கப்பெறுகின்றன என்பதை நோக்குவது. ஏனெனில், இங்குதான் சட்டமன்றத்திற்கும் குடிகளுக்குமுள்ள

தொடர்பு தோன்றுகிறது. இதன்படி, இக்காலச் சட்டமன்றங்களை இரு நிறுவன முறைகளுக்கேற்ப, இரண்டு வகையாகப் பிரிக்கலாம். முதலாவது, கீழ்ச்சபை உறுப்பினர்கள் தெரிந்தெடுக்கப்படும் தேர்தல் முறையின் தன்மைக்கேற்ப அவற்றைப் பகுக்கலாம். இத்தலைப்பின் கீழ் வாக்குரிமை, தேர்தல் தொகுதி என இரு பிரிவுகள் உள்ளன. இரண்டாவது, இரண்டாம் சபை அல்லது மேல் சபையின் இயல்பு என்ற அடிப்படையில் அவற்றைப் பிரிக்கலாம்.

## (அ) தேர்தல் முறை

(i) **வாக்குரிமை வகை :** முதலாவது, தேர்தல் முறைப்படி அரசியல் அமைப்புக்குட்பட்ட அரசுகளை, வயது வந்தோர் வாக்குரிமை (Adult Suffrage) அளிக்கும் அரசுகள் என்றும், வயது வந்தோருக்கு வரம்புக்குட்ட வாக்குரிமை (Qualified adult suffrage) அளிக்கும் அரசுகள் என்றும் இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். வயது வந்தோர் வாக்குரிமை என்பது குறிப்பிட்ட வயதுக்கு மேற்பட்ட எல்லா ஆடவர்களுக்கும் பெண்டிருக்கும் சமமாக வரம்பில்லா வாக்குரிமை அளித்தல் என்பது பொருள். ஆனால், வழக்கமாகக் குற்றவாளிகள், பைத்தியக்காரர்கள் போன்றவர்களுக்கு வாக்குரிமை இல்லை. பொதுவாக வயது வந்தோர் வாக்குரிமை சட்டமன்ற உறுப்பினராகத் தேர்தலில் போட்டியிடும் உரிமையையும் வழங்குகிறது. ஆயினும், சிலவேளை வேட்பாளரின் வயது, வாக்காளரின் வயதைவிட ஓரளவு அதிகமாய் இருக்கும்.

சில அரசுகளில் வயது வந்தோர் வாக்குரிமை மெதுவாகப் படிப்படியாக வழங்கப்பெற்றது, எடுத்துக்காட்டாக, பிரிட்டனில் இதற்கு ஏறக்குறைய ஒரு நூற்றாண்டாயிற்று. அங்கு 1832-ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டம் நிறைவேறியதிலிருந்து 1928-ஆம் ஆண்டின் மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் நிறைவேறும் வரை இம்முயற்சி தொடர்ந்து நடைபெற்று வந்தது. முதலில் ஆடவர் அனைவரும் வாக்குரிமை பெறுவதற்கும், பிறகு இப்போது இருப்பதுபோல ஆடவரோடு பெண்டிரும் சரிநிகர் சமமாக வாக்குரிமை பெறுவதற்கும் பல நிலைகளைக் கடக்க வேண்டியிருந்தது. வேறு சில அரசுகளில் அவற்றின் முதல் அரசியலமைப்புகளே வயது வந்தோர் அனைவருக்கும் உடனடியாக வாக்குரிமை அளித்தன. இவற்றிற்கு எடுத்துக்காட்டாக, முதல் உலகப் போருக்குப் பிறகு உருவான அரசுகள் பலவற்றைக் கூறலாம். இன்னும் பிற அரசுகளில் போரின் போது நிகழ்ந்த எதிர் பாராத நிகழ்ச்சிகள் காரணமாக வரம்புக்குட்பட்ட ஆடவர் வாக்குரிமைக்குப் பதிலாக வயது வந்தோர் வாக்குரிமை வழங்கப்பெற்றது. இரண்டாம் உலகப்போரின் விளைவாக ஜப்பானில் இவ்வாறு நடைபெற்றது.

அங்குப் போருக்கு முன்னிருந்த அரசியலமைப்பின்படி வாக்காளருக்கு எழுதப்படிக்கத் தெரியவேண்டும். அவ்வாறு தெரியும் என்பதை அறிவிக்க அவர் வேட்பாளரின் பெயரை வாக்குச் சீட்டில் எழுத வேண்டும். 1947-ஆம் ஆண்டின் அரசியலமைப்பின்படி இருபது வயதுக்கு மேற்பட்ட எல்லா ஜப்பானிய ஆடவரும் பெண்டிரும் முழு வாக்குரிமை பெற்றுள்ளனர்.

பெரும்பான்மையான அரசுகளில் இப்போது ஆடவரும் பெண்டிரும் சமமான வாக்குரிமை பெற்றிருக்கின்றனர். சுவிட்ஸர்லாந்து இதற்கு விதி விலக்கு என்பது குறிப்பிடத்தக்கது. அங்குப் பெண்களுக்கு வாக்குரிமை அளிப்பது பற்றி இன்னும் வாக்கு வாதம் நடைபெற்று வருகின்றது. சில கோட்டங்கள் (Cantons) பெண்களுக்குக் கோட்ட நிகழ்ச்சிகளில் மட்டும் வாக்குரிமை அளித்திருக்கின்றன. ஆனால், கூட்டாட்சிச் செய்திகளிலும் அவர்களுக்கு அதே சம உரிமை வழங்குவதற்கு எதிர்ப்பு இருக்கின்றது. சில அரசுகள் வயது வந்தோருக்கு வாக்குரிமை வழங்கிய போதிலும், அவ்வுரிமையைக் கட்டுப்படுத்தச் சில விதிகளை ஏற்படுத்தியுள்ளன. எடுத்துக்காட்டாக, பிரேஸிலில் 18 வயதுக்கு மேற்பட்டவர்களில் எழுதத் தெரிந்தவர்களுக்கு மட்டுமே வாக்குரிமையுண்டு. போர்த்துகலில் 21 வயதுக்கு மேற்பட்டவர்கள் வாக்குரிமை பெற்றுள்ளார்கள். ஆனால், ஆடவர்களாகிய வாக்காளர்களுக்கு எழுதப்படிக்கத் தெரிய வேண்டும். பெண்டிராகிய வாக்காளர்களுக்குக் கல்வியறிவு தேவை. ஆடவனுக்கு எழுதப்படிக்கத் தெரியவில்லையெனினும், அவன் குறிப்பிட்ட ஓர் அளவுக்கு அதிகமாக வரி செலுத்தினல், வாக்குரிமை பெறலாம். பெண்ணுக்கு எழுத்தறிவில்லையெனினும், அவள் குறிப்பிட்ட அளவுக்கு அதிகமாக வரி செலுத்தும் குடும்பத் தலைவியாய் இருந்தால் வாக்குரிமை பெற இயலும். இவை பற்றிய விவரங்களை இன்னேர் இயலில் பார்ப்போம்.

(ii) **தேர்தல் தொகுதி வகை :** தேர்தல் முறை என்னும் கோணத்தினின்று நோக்கினல், இப்போதுள்ள அரசியலமைப்புக்குட்பட்ட அரசுகளைத் தேர்தல் தொகுதியின் தன்மைக்கேற்ப மற்றொரு முறையில் பாகுபாடு செய்யலாம். தேர்தல் தொகுதியிலிருந்து ஒருவர் (அல்லது அதிகமானல் இருவர்) தேர்ந்தெடுக்கப்படும் அரசுகள் என்றும், பலர் தேர்ந்தெடுக்கப்படும் அரசுகள் என்றும் இரு வகைகளாகப் பிரிக்கலாம். பிந்தியதற்கும் விகிதப் பிரதிநிதித்துவம் (Proportional Representation) என்று கூறப்படும் புதியஜனநாயக முறைக்கும் பொதுவாகத் தொடர்புண்டு. சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பது இம்முறையின் நோக்கம். இது

இல்லையெனில், தேர்ந்தெடுக்கப்பட்ட அவையில் சிறுபான்மையினரின் குரல் கேளாது போய்விடும். ஆனால், பலர் தேர்ந்தெடுக்கப்படும் தொகுதியில் விகிதப் பிரதிநிதித்துவக் கொள்கையைப் பின்பற்றத் தேவையில்லை. எடுத்துக்காட்டாக, பிரான்ஸில் 1919க்கும்1927க்கும் இடையில், அடுத்துள்ளதும் முன்னர்ப் பிரிந்திருந்ததுமான தொகுதி களின் கூட்டந்தான் தேர்தல் தொகுதியாய் இருந்தது. ஆனால், 1919க்கு முன் பிரெஞ்சு நாட்டினர், 'அராண்டிஸ்மான்' (Arrondisements) என்ற ஆட்சி உட்பிரிவுகளுக்கேற்பவும், அதன் பிறகு எட்டு ஆண்டுகளாக 'டிபார்ட்மென்ட்ஸ்' (Departments) என்ற ஆட்சிப் பிரிவுகளின் அடிப்படையிலும் வாக்களித்து வந்தனர். மூன்ருவது. குடியரசை நிறுவியதிலிருந்து உண்மையில் பிரான்ஸ் இரு முறை களையும் மாறிமாறிப் பயன்படுத்திப் பார்த்தது. மூன்ருவது குடியரசின் இறுதி ஆண்டுகளில் ஒரு தொகுதியிலிருந்து ஓர் உறுப்பினரை மட்டும் தேர்ந்தெடுக்கும் முறையை மீண்டும் பின் பற்றியது. நான்காவது குடியரசு அரசியலமைப்பை வரைந்த தாற்காலிக அவையைத் தேர்ந் தெடுக்க, பிரான்ஸ் ஒரு வகைக் கூட்ட வாக்கு முறையைப் புதுப் பித்தது. 1951இல் நடைபெற்ற பொதுத் தேர்தலில் மிகச் சிக்கலான கட்சி உறவு (party alliance) முறையைப் புகுத்தியது. ஐந்தாவது குடியரசின் அரசியலமைப்பின்படி பிரான்ஸ் ஒற்றை உறுப்பினர் தொகுதி (Single member constituency) முறையை மீண்டும் நிலை நாட்டியது. ஆனல், இரண்டாவது வாக்கெடுப்பு (Second ballot) என்னும் கட்டுப்பாடு உண்டு.

இப்பொருள் பற்றிப் பின்னேர் இயலில் விரிவாகப் பார்ப்போம். இது அரசியலமைப்புக்குட்பட்ட இக்கால அரசுகளை இரு பெருவகை களாகப் பிரிப்பதற்கு நமக்குப் பயன்படுகின்றதென இங்குப் பார்த்தல் போதும். ஆயினும், சில அரசுகளில் கீழ்ச்சபைத் தேர்தல்களுக்கு ஒற்றை உறுப்பினர் தொகுதியும், மேல் சபைத் தேர்தல்களுக்கு உறுப்பினர் பலர் தொகுதியும் (multi-member constituency) பயன் படுத்தப்படுகின்றன. உதாரணமாக, ஆஸ்திரேலியப் பொதுநலக் கூட்டில் இவ்வாறு நடைபெறுகிறது. வருங்கால மக்களாட்சியில் தேர்தல் தொகுதிகளை இவ்வாறு மாற்றியமைப்பதால் விளையும் நற் பயன்களை பிரிட்டிஷ் வாக்காளர்கள் எண்ணிப் பார்க்கும் போது இன்புறுவார்கள்.

## (ஆ) மேல் சபையின் வகைகள்

மேல் சபை வகைகளுக்கேற்பச் செய்யப்படும் பாகுபாடு இக்கால அரசியல் முறைமைக்குட்படுகையைப்பற்றிய சுவையான ஒப்பு நோக்கு ஆராய்ச்சிக்கு ஆதாரமாய் விளங்குகிறது. இத்தலைப்பின் கீழ் இரு பெரும்பிரிவுகள் உள்ளன. அவற்றின்படி மேல் சபைகளைத்

தேர்ந்தெடுக்கப்பட்டவை அல்லது தேர்ந்தெடுக்கப்படாதவை எனப் பிரிக்கலாம். இரண்டிற்கும் இடையில், ஓரளவு தேர்ந்தெடுக்கப் படாமலும் இருக்கும் ஒரு சில மேல் சபைகளும் உள்ளன. இவற்றிற்கு எடுத்துக்காட்டாக, குடியரசு ஏற்படுவதற்கு முன் ஸ்பெயினிலும், போருக்கு முன் ஜப்பானிலும், முந்திய எகிப்து முடியரசிலும் இருந்த மேல் சபைகளையும் இப்போது அயரிலும் (அயர்லாந்து குடியரசிலும்) தென்னாப்பிரிக்காவிலுமுள்ள மேல் சபைகளையும் கூறலாம். தன்னாட்சி பெற்ற முந்திய தென்னாப்பிரிக்கக் குடியேற்ற உரிமை நாட்டில் (Dominion) இருந்தது போலவே புதிய குடியரசிலும் இருக்கிறது. மேலே கூறிய பாகுபாடு மேல் சபையைப்பற்றிய சிக்கல்களை ஆராய நல்லதொரு முறையாகப் பயன்படுகிறது. தேர்ந்தெடுக்கப்பட்ட மேல் சபைகளில் குறிப்பிடத்தக்கவை, அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஆஸ்திரேலியா, பிரான்ஸ், இத்தாலி ஆகிய நாடுகளின் ஸெனட்டு எனும் மேல் சபைகளும், சுவிட்ஸர்லாந்தின் மாநிலச் (கோட்டங்களின்) சபையும், ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசின் புந்தஸ்ராத்தும் (Bundesrat), ஜப்பானின் மேல் சபையும் ஆகும். ஆனால், இவற்றின் மேல் சபைகளைத் தேர்ந்தெடுக்கும் முறைகள் வேறுபட்டிருந்தன. தேர்ந்தெடுக்கப்படாத மேல் சபைகளில் குறிப்பிடத்தக்கவை கிரேட் பிரிட்டனிலுள்ள பிரபுகள் சபையும், கனடாவிலுள்ள ஸெனட்டும் ஆகும். பொதுவாகக் கூறவேண்டுமானால், மேல் சபை தேர்ந்தெடுக்கப்படும் நாடுகளில், நாம் எதிர்பார்ப்பது போல, அது தேர்ந்தெடுக்கப்படாத நாடுகளில் இருப்பதைவிட அதிக ஆற்றலுடையதாய் இருக்கின்றது எனலாம். எடுத்துக்காட்டாக, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் ஸெனட்டு, காங்கிரஸிலுள்ள இரு சபைகளிலும் அதிக செல்வாக்குடையதாய் இருக்கிறது. ஆனால், கிரேட் பிரிட்டனில் உள்ள பிரபுகள் சபை சட்டமியற்றுதலை மாற்றும் அதிகாரத்தை முற்றிலும் இழந்துவிட்டது எனலாம்.

## (இ) நேர்முக மக்களாட்சித் தடைகள் (Direct Democratic Checks)

நேர்முக மக்களாட்சித் தடைகளில் அதிகமாக வழக்கிலிருப்பது குடியொப்பம் (Referendum). அதற்கு மக்கள் வாக்கெடுப்பு (Plebiscite) என்ற மற்றொரு பெயரும் உண்டு. அது இக்காலத்தில் நீண்ட நாள் வழக்கிலிருந்த போதிலும், அண்மையில் அதிகமாகப் பயன்பட்டு வந்துள்ளது. சிறப்பாகப் புதிதாகத் தோன்றிய சில அரசியலமைப்புகள் அதைப்பயன்படுத்துகின்றன. பொதுவாகக்குடியொப்பம் என்பது அரசாங்கத்தின் திட்டம் ஒன்றைப்பற்றி வாக்காளர்களின் கருத்தை அறியும் முறை எனப்பொருள்படும். ஆனால், அரசியலமைப்பின்படி மக்களின் இணக்கத்தையோ அல்லது எதிர்ப்பையோ அறிய ஒரு

திட்டத்தை அவர்கள் முன் சமர்ப்பிப்பதற்குப் பற்பல வழிகளும் வாய்ப்புகளும் உள்ளன. சட்ட மன்றம் இயற்றும் சாதாரணச் சட்டமோ, அல்லது அரசியலமைப்பைத் திருத்தும் திட்டமோ, மக்கள் முன் சமர்ப்பிக்கப்படலாம். அவ்வாறு சமர்ப்பிக்கப்படுதல் கட்டாய மாக இருக்கலாம்; அல்லது கட்டாயமில்லாமலும் இருக்கலாம். அது சுவிட்ஸர்லாந்தில் கூட்டாட்சிச் செயல்களுக்கும் தனிக் கோட்டங்களின் செய்திகளுக்கும் பயன்படுகின்றது. ஆனால், அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தனி மாநிலங்கள் அதை அதிகமாகப் பயன்படுத்திய போதிலும், அது கூட்டாட்சி அரசிய லமைப்பில் இடம் பெறவில்லை. பிரிட்டனில் குடியொப்பம் வழக்கில் இல்லை; சிற்சில சமயங்களில் வட்டார நிகழ்ச்சிகளில் மட்டும் நடை பெறுகிறது.

இரண்டாவது முறைக்குத் 'தொடக்க உரிமை' (Initiative) என்பது பெயர். அது சட்டத்தைத் தொடங்கும் உரிமையையும் அரசி யலமைப்புத் திருத்தங்களைத் தெரிவிக்கும் உரிமையையும் வாக்காளர் களுக்கு வழங்குகிறது. அது பல அரசுகளில் பல விதமாக நடை பெறுகின்றது. சுவிட்ஸர்லாந்தில் தொடக்க உரிமை கூட்டாட்சியிலும் கோட்டங்களிலும் இடம் பெறுகின்றது. அங்கு அது சாதாரணச் சட்டங்களுக்கும் அரசியலமைப்புத் திருத்தங்களுக்கும் பயன்படு கின்றது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கூட்டாட்சி அரசியலமைப்புத் தொடக்க உரிமையை அனுமதிப்பதில்லை. ஆனால், அங்குப் பல தனி மாநிலங்களில் அது பயன்படுகின்றது ; சில மாநிலங்களில் சாதாரணச் சட்டங்களுக்கும் அரசியலமைப்புத் திருத்தங்களுக்கும் பயன்படுகின்றது.

இறுதியாக, மீட்புரிமை (Recall) என்னுமொரு முறையுமுள்ளது. இதன்படி வாக்காளர்கள் தாங்கள் விரும்பாத பிரிதிநிதிகளைப் பதவியினின்று நீக்கும் உரிமையைப் பெறுகின்றனர்கள். சில இடங் களில் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட மற்ற அதிகாரிகளையும் நீக்க உரிமை பெறுகின்றனர்கள். ஆனால், இது முன்பிருந்ததைவிடக் குறைவாகவே நடைபெறுகின்றது ; அமெரிக்க ஐக்கியத்தின் சில மாநிலங்களில் மட்டும் நடைபெறுகின்றது. இந்த மக்களாட்சித் தடைகளைப் பற்றிப் பத்தாவது இயலில் விரிவாகப் பார்ப்போம்.

## 6. நிருவாகத்துறையின் தன்மை
## பாராளுமன்றத்தைச் சார்ந்ததா அன்றா ?

நமது நான்காவது வகைப் பாகுபாடு நிருவாகத்துறையின் தன் மையைச் சார்ந்துள்ளது. நாம் முன்னர்க் கூறியது போல, கொள்

கையை உருவாக்கி, அக்கொள்கை சட்டமன்றத்தின் மூலம் சட்டத்தின் இணக்கம் பெற்றதும் அதைச் செயற்படுத்துதல் அல்லது நிருவகித்தல் நிருவாகத் துறையின் அலுவலாகும். அரசியலமைப்புக்குட்பட்ட எல்லா அரசுகளிலும் நிருவாகத்துறையின் அதிகாரத்தின்மேல் ஒரு கட்டுப்பாடு அல்லது வரையறை இருக்கின்றது. அதாவது, நிருவாகத்துறை எப்போதும் யாருக்காவது 'பொறுப்புள்ளதாய் இருக்கின்றது. இக்காலச் சூழ்நிலையில் நிருவாகத்துறை எப்போதும் பொது மக்களுக்குப் பொறுப்புள்ளதாய் இருக்கிறதென்பது உண்மையென முடிவாகக் கூறலாம். ஆனால், இது எல்லாவிடத்தும் காணப்படுதால், நமது பாகுபாட்டிற்குப் பயன்படாது. உடனடியான பொறுப்பு எங்கிருக்கிறதென்ற கேள்விக்கு இங்கு விடையளிப்பது பயன் தரும் எனக் கூறலாம். இக்கேள்வியின் விடை, அரசியல் முறைமைக்குட்பட்ட அரசுகளை இரு பெரு வகைகளாக வகுப்பதற்கு நமக்கோர் அடிப்படையாய் விளங்குகிறது. ஏனெனில், நடைமுறையில் நிருவாகத்துறை சட்ட மன்றத்தின் நம்பிக்கையை இழந்ததும் அதை நீக்கிவிட அதிகாரமுள்ள பாராளுமன்றத்திற்குப் (சட்ட மன்றத்திற்கு) பொறுப்புள்ளதாய் இருக்கிறது; அல்லது மறைமுகமான வேறொரு கட்டுப்பாட்டிற்கு உட்பட்டிருக்கிறது. இதற்கு எடுத்துக்காட்டாக, குறிப்பிட்ட காலங்களில் நடைபெறும் நாட்டுத் தலைவரின் தேர்தலைக் கூறலாம். நிருவாகத்துறை பாராளுமன்றத்திற்கு உடனடியாகப் பொறுப்புள்ளதாய் இருக்குமானால், அதற்குப் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை (Parliamentary Executive) என்பது பெயர். ஆனால், அது வேறொரு பெரிய நிறுவனத்திற்குக் குறிப்பிட்ட காலங்களில் உடனடியாகப் பொறுப்புள்ளதாய் இருந்து, பாராளுமன்ற நடவடிக்கையினால் நீக்கப்பட இயலாததாய் இருக்குமானால், அதைப் பாராளுமன்றச் சார்பற்ற (Non-Parliamentary) அல்லது உறுதியுள்ள நிருவாகத்துறை (Fixed Executive) என வழங்குகிறோம்.

இந்த வேறுபாடு இக்கால அரசியலமைப்பின் அரசியலில் மிக முக்கியமான ஒரு கருத்தைத் தெரிவிக்கிறது. இங்குதான் சிறப்பாக நாம் முடியரசு, குடியரசு என்னும் சொல் தொடர்களின் அடிப்படையில் எழுந்த பாகுபாடு வழக்கிறந்ததெனக் காண்கிறோம். கிரேட் பிரிட்டனையும் இத்தாலியையும் சான்றுகளாகக் கொள்வோமானால், முந்தியதில் அரசியாரும் பிந்தியதில் நாட்டுத் தலைவரும் நிருவாகத் துறையினராய் இருக்கின்றனர் எனத் தவறுதலாக எண்ணக்கூடும். இவை இரண்டும் உண்மையல்ல. அதற்கு மாறாக, இரண்டிலும் அமைச்சரவைதான் நிருவாகத்துறை. அரசியல் அமைப்பின்படி அரசியாரும் நாட்டுத் தலைவரும் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ள அமைச்சரவை வாயிலாகவே செயலாற்ற வேண்டும்.

ஆகவே, தேர்ந்தெடுக்கப்பட்ட அவைக்குப் பொறுப்புள்ள நிருவாகத்துறையுடைய எல்லா அரசுகளும் ஒரு தனி வகையைச் சேர்ந்தவை என்பது புலனாகிறது. இவ்வகை அரசாங்கம் அமைச்சரவை அரசாங்கம் என்றும், பொறுப்புள்ள அரசாங்கம் என்றும் வழங்கப்படுகிறது. அமைச்சரவை அரசாங்கமென்று ஏன் வழங்கப்படுகிறதென்றால், இவ்வகை அரசுகளில் எல்லாம் நிருவாகத்துறை, 18-ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் தோன்றிக்கொண்டிருந்த அமைச்சரவை உருவில் ஏறக்குறைய அமைக்கப்பட்டிருந்தது. 'பொறுப்புள்ள அரசாங்கம்' என்னும் சொல் தொடர் பிரிட்டிஷ் பொதுநலக் கூட்டிலுள்ள சுய ஆட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடுகளில் மட்டும் பயன்படுத்தப்படுகிறது. அங்கெல்லாம் அமைச்சரவை அரசாங்கம் நிறுவப்பட்டபோது, பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து ஒவ்வொரு குடியேற்ற உரிமை நாட்டிலுமுள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட அவைக்கும் அமைச்சர் பொறுப்பு (Ministerial Responsibility) மாற்றப்பட்டது. புதிய பொதுநலக்கூட்டு நாடுகளிலும், ஆப்பிரிக்கா, ஆசியா, கரிபியன் பகுதிகளிலும் அத்தகைய மாற்றம் அண்மையில் நடைபெற்றது. இந்நாடுகள் இரண்டாம் உலகப்போருக்குப் பிறகு சுதந்தரம் பெற்றவை.

பாராளுமன்றச் சார்பற்ற அல்லது உறுதியுள்ள நிருவாகத்துறையுடைய குறிப்பிடத்தக்க இன்றைய ஒரே ஜனநாயக அரசு, அமெரிக்கப் பொதுநலக் கூட்டாகும். பழைய ஜெர்மானியப் பேரரசிலும் உறுதியுள்ள நிருவாகத்துறை இருந்தது. ஆனால், அது அமெரிக்க முறையினின்று வேறுபட்டிருந்தது. ஜெர்மானியப்பேரரசில் பேரரசரே உண்மையில் நிருவாகத்துறையினராய் இருந்தார். ஏனெனில், அவர் தம் விருப்பப்படி நியமித்து விலக்க வல்ல தலைமை அமைச்சர் வாயிலாகச் செயலாற்றிவந்தார். இரண்டாம் வில்ஹெல்ம் (Wilhelm II) என்ற கெய்ஸர் 1890இல் பிஸ்மார்க்கைப்பதவியினின்று நீக்கிய புகழ் பெற்ற 'வலவனை விலக்கல்' (Dropping the Pilot) என்ற நிகழ்ச்சி இதற்கோர் எடுத்துக்காட்டாகும். ஆனால், இது நெடுங்காலமாய் ஜெர்மனியில் மறைந்துவிட்டது. வெய்மார் (Weimar) குடியரசின் அரசியலமைப்பின்படி (1919) பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை நிறுவப்பட்டது. 1918இல் ஜெர்மனியுடன் தாம் நடத்திய சமாதானப் பேச்சுகளின் போது தாம் ஒரு ஜனநாயக அரசாங்கத்துடன் பேசுவதாக உறுதி அளிக்க வேண்டுமென ஜனாதிபதி வில்சன் கேட்டதன் விளைவாகவே ஜெர்மனியில் அத்தகைய பெரிய சீர்திருத்தம் நடைபெற்றது எனக் குறிப்பிடவேண்டும். ஹிட்லரின் வல்லாட்சியில் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை இல்லையெனக் கூறத் தேவையில்லை. அவ்வாட்சி எவ்வகையிலும் அரசியலமைப்பின் அரசியலைச் சேர்ந்ததாய் இல்லை. இத்தாலியில் நிலவிய பாஸிஸ ஆட்சியும் அவ்வாறே இருந்தது. எல்லாப் பொதுவுடைமை

நாடுகளிலும் உறுதியுள்ள நிருவாகத்துறை உள்ளதெனக் கூறலாம். (அங்குள்ள நிருவாகத்துறை அரசியலமைப்புக்குட்பட்ட மேல் நாட்டு அரசுகளின் பாகுபாட்டிற்குப் புறம்பானது.) அதாவது, அது சோவியத்திற்கு அல்லது அந்நாடுகளுள் ஒவ்வொன்றிற்கும் உரிய சோவியத்துப்போன்ற பேரவைக்குப் பொறுப்புள்ளதாய் இல்லை.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நாட்டுத் தலைவரையும் அவர் அமைச்சர்களையும் சேர்த்து நிருவாகத்துறை என வழங்குகிறோம். ஆனால், அமைச்சர்கள் காங்கிரஸின் (பாராளுமன்றத்தின்) விருப்பப் படி நடப்பதற்குமாறாக, பிரதிநிதிகளின் சபையிலோ, அல்லது ஸெனட்டிலோ பேசவும் வாக்களிக்கவும் அனுமதிக்கப்படுவதில்லை. இங்கு நிருவாகத்துறைக்கும் சட்ட மன்றத்திற்கும் உள்ள ஒரே நேரான தொடர்பு, நாட்டுத் தலைவர் ஆண்டுக்கொரு முறை காங்கிரஸுக்குச் செய்தி அனுப்புவதனால் ஏற்படுகிறது. (வழக்கத்திற்கு மாறான நிகழ்ச்சிகள் காரணமாக அவர் அதைத் தனி அமர்வுக்கெனக் கூட்டினால், தமது செய்தியை இன்னும் அடிக்கடி அனுப்புவார்.) நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை நிகழும் நாட்டுத் தலைவரின் தேர்தல், இங்கு நிருவாகத்துறையைக் கட்டுப்படுத்துகிறது. ஆனால், தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டுவிட்டாரென்றால், பிறகு அவர் ஸெனட்டின் இசைவின்மேல் தம் அமைச்சர்களைத் தெரிந்தெடுக்கவோ, அல்லது பதவியினின்று விலக்கவோ இயலும். குறிப்பிட்ட அவரது காலத்தில் அவரை விலக்க இயலாது. தவறான நடத்தைக்காக மட்டும் அவரைக் குற்றம் சாட்டலாம்; அதாவது, காங்கிரஸில் குற்ற விசாரணை நடத்தலாம். அவரது பதவிக்கால முடிவில் அவர் பதவியிலிருப்பதும் விலகுவதும் தேர்தலில் மக்கள் தெரிவிக்கும் விருப்பத்தையே சார்ந்திருக்கின்றது. நாம் பாராளுமன்றச் சார்பற்ற அல்லது உறுதியுள்ள நிருவாகத்துறை எனக் கூறும் வகை அமெரிக்க நாட்டுத் தலைவரின் பதவியுடன்நெருங்கிய தொடர்புள்ளதாய் இருப்பதால், அது, அமைச்சரவை அரசாங்கத்திற்கு நேர்மாறாகத் தலைவர் முறை அரசாங்கம் (Presidential Government) என வழங்கப்படுகிறது.

## 7. நீதித்துறையின் தன்மை சட்டநீதிக்கு உட்பட்டதா, அல்லது ஆட்சித்துறைச் சட்டத்திற்கு உட்பட்டதா?

நமது பாகுபாட்டின் இறுதி அடிப்படை, அரசாங்கத்தின் முப்பெருந்துறைகளுள் மூன்றாவதாகிய நீதித்துறையாகும். அதைப் பற்றிய ஆராய்ச்சி நாம் இங்கு இது வரை பார்த்துக்கொண்டிருந்த பொருளினின்று தோன்றுகிறது. சட்ட மன்றங்களைப் போல, அரசியல் முறைமைக்குட்பட்ட அரசுகளின் நீதித்துறைகளையும் பாகுபாடு செய்வதற்குப் பல வழிகள் உள்ளன. ஆனால், அவற்றுள் பல, நாம்

ஏற்கெனவே பார்த்துவிட்ட—அல்லது இனிமேல் பார்க்கப்போகும்—பகுதிகளைச் சேர்ந்தவை. எடுத்துக்காட்டாக, அவற்றை நாம், அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இருப்பது போலச்சட்டமன்றம் இயற்றிய சட்டங்களை ஆய்ந்து அவற்றிற்கு விளக்கம் தரக்கூடியவை என்றும், ஐக்கிய அரசியலிலிருப்பது போல அச்சட்டங்களை மறுப்பின்றிச் செயற்படுத்தக் கடமைப்பட்டவை என்றும் வகுக்கலாம். ஆனால், இவ்வேறுபாட்டைப் பற்றிப் பிறகு நாம் அரசு, அரசியலமைப்பு இவற்றின் தன்மையை ஆராயும்போது விரிவாகப் பார்ப்போம். இங்கு நமக்கு மிகவும் தேவையான பாகுபாடு, நீதித்துறைக்கும் நிருவாகத் துறைக்கும் உள்ள தொடர்பைச் சார்ந்ததாகும்.

ஐரோப்பிய நாடுகளுள் பலவற்றில் அரசாங்க அலுவலர் தமது பணித்துறை சார்ந்த அலுவல்களைச் செய்யும்போது அவர்களைக் காப்பதற்கென ஒரு தனிச் சட்டமுறை இருக்கின்றது. அதே செயல்களை அலுவலரல்லாதவர்கள் செய்யும்போது அவை சட்டத்திற்கு முரணானவையெனக் கருதப்படும். பிரான்ஸில் தோன்றிய இம்முறை, அங்கு ஆட்சித்துறைச் சட்டம் (Droit Administratif) என வழங்கப்படுகிறது. மற்றக்காரியங்களில் தங்கள் நிருவாகத்துறையை பிரிட்டிஷ் முறையின்படி அமைத்துக்கொண்ட ஐரோப்பிய நாடுகள் பல ஆடசித்துறைச் சட்டத்தை ஏற்றுக்கொள்வதில் மட்டும் ஆங்கிலோ ஸாக்ஸானிய முறையை முற்றிலும் கைவிட்டுவிட்டன. பிரிட்டனிலும், அதினின்று உற்பத்தியாகிய அதன் சட்ட முறையையும் அநேகமாக அரசியலமைப்பு முறையையும் தம்முடன் எடுத்துச் சென்ற சமுதாயங்களிலும் அரசாங்க அலுவலர்களைக் காக்கும் ஆட்சித் துறைச் சட்டம் என்ற தனி முறை இல்லை. ஐக்கிய அரசு, பழைய தன்னாட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடுகள் புதிய பொது நலக்கூட்டு நாடுகள், எஞ்சியிருக்கும் குடியேற்ற நாடுகள், அமெரிக்க ஐக்கிய நாடுகள், (அமெரிக்க ஐக்கிய நாடுகளைப் பெரும்பாலும் பின்பற்றிய) இலத்தீன் அமெரிக்கக் குடியரசுகள் ஆகிய நாடுகளிலெல்லாம், அலுவலர், சட்ட முறைப்படி சாதாரணக் குடிமகனுக்கு இணையாகவே கருதப்படுகிறார். மேலும், அங்கு அரசாங்க அலுவலர்களின் செயல்கள் குடிகளின் உரிமைகளைக் குறைக்குமானால், அச்செயல்களுக்குரிய தண்டனையை அரசு குறைக்கவேண்டும் என்ற கருத்தை நீதித்துறை ஏற்றுக்கொள்வதில்லை. இவ்வாறு அலுவலருக்கு விதிவிலக்கு அளிக்கப்படாமையைச் 'சட்ட நீதி' (Rule of Law) என்கிறோம்.

இந்த வேறுபாடு, சட்ட முறைகளில் காணப்படும் வேறுபாட்டின் விளைவாகத் தோன்றுகிறது. இங்கிலாந்தில் நிலவும் பொது நீதிதான் (Common Law) சட்டநீதியின் அடிப்படையாய் விளங்குகிறது. சட்ட நீதி அரசாங்க அலுவலர்களுக்குத் தனிப் பாதுகாப்பு அளிப்பதில்லை. இங்கிலாந்தின் பொது நீதி, பிறப்பிலும் வளர்ச்சியிலும் ஐரோப்பிய அரசுகளின் சட்டத் தொகுதிகளினின்றுபெரிதும் வேறுபட்டிருக்கிறது. ஐரோப்பாவில் சட்ட முறைகள் அரசாங்க அலுவலரை ஆட்சித்துறை நீதி மன்றங்கள் (Administrative Courts) வாயிலாகக் காத்து வருகின்றன. அந்நீதி மன்றங்கள் சட்டத் தொகுப்புக்குப் புறம்பாகச் செயலாற்றுகின்றன. அவை அரசாங்க அலுவலருக்குச் சாதாரணக் குடிமகனைவிட உயர்ந்ததொரு தனிச் சிறப்புரிமையை அளிக்கிறது.

இப்பாகுபாட்டைச் சுருக்கக் கூறுமிடத்து, அரசுகளை இரு வகையாகப் பிரிக்கலாம். அவை பின் வருவன :

(1) **பொது நீதி அரசுகள்** (Common Law States) : இங்குச் சட்ட நீதி நிலவுவதால் நிருவாகத் துறை தனி முறையில் காக்கப்படுவதில்லை.

(2) **தனிச் சிறப்புரிமை அரசுகள்** (Prerogative States) : ஆட்சித்துறைச் சட்டமெனும் தனி முறை நிருவாகத்துறையைக் காக்கிறது.

## 7. சுருக்கம்

கீழ்க்காணும் அட்டவணையில் நமது பாகுபாட்டின் சுருக்கத்தைக் காணலாம்.

**இக்கால அரசியலமைப்புக்குட்பட்ட அரசுகளின் பாகுபாடு:**

| பிரிவின் அடிப்படை | முதல் வகை | இரண்டாம் வகை |
|---|---|---|
| 1. அரசியலமைப்பையுடைய அரசின் தன்மை | ஒரு முக அரசு | கூட்டாட்சி அல்லது அரைக் கூட்டாட்சி |
| 2. அரசியலமைப்பின் தன்மை | நெகிழும் தன்மையுடையது (எழுதப் படாததாய் இருக்கத் தேவையில்லை) | நெகிழாத் தன்மையுடையது. (முழுவதும்எழுதப்பட்டதாய் இருக்கத் தேவையில்லை. |
| 3. சட்டமன்றத்தின் தன்மை | (i) (அ) வயது வந்தோர் வாக்குரிமை<br>(ஆ) ஒற்றை உறுப்பினர் தொகுதி | வயது வந்தோருக்கு வரம்புக்குட்பட்ட வாக்குரிமை<br>உறுப்பினர் பலர் தொகுதி |
| | (ii) தேர்ந்தெடுக்கப் படாத மேல் சபை | முழுவதும் அல்லது ஓரளவு தேர்ந்தெடுக் கப்பட்ட மேல்சபை |
| | (iii) நேர்முக மக்களாட்சித் தடைகள் உண்டு. | அத்தடைகள் இல்லை. |
| 4. நிருவாகத் துறையின் தன்மை | பாராளுமன்றச் சார்புடையது | பாராளுமன்றச் சார் பற்றது அல்லது உறுதியுள்ளது. |
| 5. நீதித்துறையின் தன்மை | பொது நீதி அரசுகளில் சட்ட நீதிக் குட்பட்டது. | தனிச் சிறப்புரிமை அரசுகளில் ஆட்சித் துறை சட்டத்திற்கு உட்பட்டது. |

அட்டவணையை வாசகர் ஆய்ந்து பார்க்கும் போது, அவ்வாறு ஆய்வதற்காக அவர் தெரிந்தெடுக்கும் எந்த அரசும் எல்லா இயல்புகளிலும் ஒரு வகையைச் சேர்ந்ததாய் இராது என்பதை நினைவிலிருத்த வேண்டும், ஒவ்வோர் அரசையும் ஒவ்வொரு பிரிவின் அடிப்படையில் தனித்தனியாக ஆராய வேண்டும். உதாரணமாக. பிரிட்டனையும் அமெரிக்க ஐக்கிய நாடுகளையும் எடுத்துக்கொள்வோம். பிரிட்டன் முதல் அடிப்படையில் முதல் வகையையும், இரண்டாவது அடிப்படையில் முதல் வகையையும், மூன்றுவது அடிப்படையில் இரண்டாவது வகையையும், (i, அ), மூன்றுவது அடிப்படையில் முதல் வகையையும் (i, ஆ), மூன்றுவது அடிப்படையில் இரண்டாவது வகையையும் (ii) நான்காவது அடிப்படையில் முதல் வகையையும், ஐந்தாவது அடிப்படையில் முதல் வகையையும் சேர்ந்தது. சுருங்கக் கூறவேண்டுமானுல், பிரிட்டன் நெகிழும் அரசியலமைப்பு, வயது வந்தோர் வாக்குரிமை வாயிலாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட மன்றம், ஒற்றை உறுப்பினர் தொகுதி, தேர்ந்தெடுக்கப்படாத மேல் சபை, சட்ட நீதிக்குட்பட்ட பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத் துறை ஆகிய பண்புகளையுடைய ஓர் ஒருமுக அரசாகும் எனலாம். அதற்கு மாருக, அமெரிக்க ஐக்கிய நாடுகள் முதல் அடிப்படையில் இரண்டாவது வகையையும், மூன்றுவது அடிப்படையில் இரண்டாவது வகையையும் (i, அ), மூன்றுவது அடிப்படையில் முதல் வகையையும் (i, ஆ), மூன்றுவது அடிப்படையில் முதல் வகையையும் (ii), நான்காவது அடிப்படையில் இரண்டாவது வகையையும், ஐந்தாவது அடிப்படையில் முதல் வகையையும் சேர்ந்துள்ளது. அதாவது, அமெரிக்க ஐக்கிய நாடுகள் நெகிழா அரசியலமைப்பு, வயது வந்தோர் வாக்குரிமை வாயிலாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட மன்றம், ஒற்றை உறுப்பினர் தொகுதிகள், தேர்ந்தெடுக்கப்பட்ட மேல் சபை, நேர்முக மக்களாட்சித் தடைகள் இல்லாத கூட்டாட்சிச் சட்டநீதிக்குட்பட்ட பாராளுமன்றச் சார்பற்ற நிருவாகத்துறை ஆகிய இயல்புகளையுடைய ஒரு கூட்டாட்சி அரசாகும்.

அரசியல் முறைமைக்குட்பட்ட அரசுகளின் இவ்வியல்புகளுள் ஒவ்வொன்றையும் இப்போது ஆராய்வோம்.

## படிக்க வேண்டிய நூல்கள் :

1. டைஸி (Dicey) : Law of Constitution, பக்கம், 126-37
2. ஃபைனர் (Finer) : Modern Government, இயல் 2-4.
3. மக் ஐவர் (Mac Iver) : Web of Government, இயல் 7.
4. சேபைன் (Sabine): History of Political Theory, இயல் 5-6.
5. ஸிட்ஜ்விக் (Sidgwick) : Elements of Politics, இயல், 30.

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள் :

1. வேர் (Wheare) : Modern Constitution
2. ஹாகுட் (Hawgood) : Modern Constitutions since 1787

## கட்டுரைக்கான பொருள்கள் :

1. அரிஸ்டாட்டில் தமது கால அரசியலமைப்புகளை எவ்வாறு பாகுபாடு செய்தார் ? அப்பாகுபாடு வழக்கொழிந்தது என எக்காரணங்களினால் கூறலாம் ?

2. இக்கால நிலைக்கேற்ப அரசியலமைப்புகளைப் பாகுபாடு செய்ய ஒரு நல்ல முறையைக் கூறுக.

3. இக்கால அரசுகளுக்குப் பொருந்தும் வகையில் ஒரு முக அரசு, கூட்டாட்சி அரசு என்ற பதங்களை விளக்குக.

4. இக்கால அரசியலமைப்புகளை எழுதப்பட்டவை எழுதப் படாதவை எனப் பிரிப்பதனால் ஏற்படும் குறைகள் யாவை ?

5. நெகிழும் அரசியலமைப்பு, நெகிழா அரசியலமைப்பு என்பவற்றின் பொருள் என்ன ?

6. இக்கால அரசில் சட்ட மன்ற அமைப்பைப் பொறுத்த வரையில் தேர்தல் முறை எத்தகைய முக்கியத்துவம் பெற்றுள்ளது ?

7. வாக்குரிமை, தேர்தல் தொகுதி என்ற சொற்றொடர்களின் பொருளை விளக்கி, பாராளுமன்றப் பிரதிநிதிகளின் தேர்தலில் அவை எத்தகைய பங்கு பெறுகின்றன என்பதை ஆராய்க.

8. இக்கால அரசில் காணப்பெறும் மேல் சபையின் வகைகளை விரிவாகக் கூறி, ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் எடுத்துக் காட்டுத் தருக.

9. பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத் துறைக்கும்-பாராளுமன்றச்சார்பற்ற அல்லது உறுதியுள்ள நிருவாகத்துறைக்கும் உள்ள வேறுபாட்டை விளக்குக.

10. 'சட்டநீதி' என்பது என்ன ? இது நிலவும் நாடுகளின் சட்ட முறைகளுக்கும், பிற நாடுகளின் சட்ட முறைகளுக்கும் உள்ள வேறுபாடுகள் எவை ?

# 4. ஒருமுக அரசு

## 1. உட்புற, வெளிப்புற இறைமை

ஒரு மைய ஆற்றல் மேலான சட்ட ஆக்க அதிகாரத்தை வழக்க மாகச் செலுத்தி வரும் அரசை நாம் ' ஒரு முக அரசு ' என்றும், நாட்டின் ஒற்றுமையையும் அதிகாரத்தையும் மாநில உரிமைகளோடு இணைக்கும் ஓர் அரசியல் ஏற்பாட்டைக் ' கூட்டாட்சி அரசு ' என் றும் கூறினோம். சுருங்கக் கூறினால், கூட்டாட்சியில் சட்ட ஆக்க அதிகாரம் மத்திய அல்லது கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் சிறு பகுதி களுக்கும் இடையே பங்கிடப்பட்டுள்ளது எனலாம். இப்பகுதிகள் அவற்றின் அதிகார நிறைவிற்கேற்ப, சில வேளை அரசுகள் அல்லது கோட்டங்கள் என்றும், சில வேளை மாநிலங்கள் என்றும் வழங்கப்படு கின்றன. இன்னும் தெளிவாகக் கூறவேண்டுமானால், இறைமையைப் ப்ற்றி நாம் முன்னுரையில் கூறிய குறிப்புகளை விளக்கவேண்டும். இறைமை என்பது மிகச் சிக்கலான ஒரு பொருள். அதைப்பற்றிய விளக்கங்கள், அரசியல்தத்துவ வல்லுநர்களும் சட்டக்கோட்பாட்டறி ஞர்களும் எழுதிய நூல்களில் எண்ணிறந்த பக்கங்களில் மலிந்து காணப்படுகின்றன. அது நமது கால அரசியலிலும் ஒரு முக்கிய ஆய் பொருளாய் இருக்கின்றது. நாம் முன் பார்த்தது போல, இறைமைக்கு உட்புறம், வெளிப்புறம் என்ற இரு வகைக் கூறுகள் உண்டு. உட்புற இறைமை, அரசின் ஆட்சிப் பரப்பினுள்ளிருக்கும் தனி மனிதர்கள் அல்லது அவர்களின் சங்கங்களின்மேல் ஓர் ஆள் அல்லது குழுச் செலுத்திவரும் மேலாண்மை எனவும், வெளிப்புற இறைமை என்பது ஒரு நாடு பிற நாடுகள் அனைத்தையும் சாராமல் முற்றிலும் சுதந்தர மாய் நிற்பது எனவும் விளக்கினோம்.

உட்புற இறைமையைப் பொறுத்தவரையில், முழுப்பிரச்சினையும் அரசு என்ற சொல்லின் பொருளில் அடங்கியிருக்கிறது. அரசினுள் வாழும் தனி மனிதர் அனைவரும் ஒன்று சேர்ந்து அரசியல் முறையில் நிறுவியுள்ள ஒரு முழு அமைப்பே அரசு என்பதை ஏற்றுக்கொண் டால், 'இறைமையானது மக்களைச் சார்ந்தது ; பிரிக்க இயலாதது ;

பிறருக்கு மாற்ற இயலாதது,' என்று கூறிய ரூஸோவின் கருத்தாழத்தைப் பாராட்டாமல் இருக்க இயலாது. ஏனெனில், இறைமை ஆள்பவரிடம் இருப்பதாகக் கருதப்பட்டபோதிலும், இறுதியில் அது ஆளப்படுவோரின் ஆற்றலிலே அடங்கியிருக்கிறது. டேவிட் ஹியூம் (David Hume) என்பார் நெடுங்காலத்திற்கு முன் கூறியது போல இது வரை உலகில் தோன்றிய மிகக் கடுமையான வல்லாட்சியின் அதிகாரமுங்கூட, ஆளப்படுவோரிடமே எப்போதும் ஆற்றல் இருக்கின்றது என்ற உண்மையால் வரையறுக்கப்பட்டுள்ளது. ஏனெனில், கொடுமை காரணமாக மக்களின் சினம் வரம்பு கடந்துவிட்டதென்றால், அரசாங்கத்தைக் கவிழ்க்க அவர்கள் புரட்சி செய்வார்கள். வல்லாட்சிகளிலிருப்பதைவிட அரசியல் முறைமைக்குட்பட்ட அரசுகளில் இவ்வரையறை மிகத் தெளிவாகத் தெரிகின்றது. லெஸ்லி ஸ்டீபன் (Leslie Stephen) சொல்வது போல, 'நீலவண்ணக் கண்களையுடைய எல்லாக் குழந்தைகளையும் கொன்றுவிட வேண்டுமெனச் சட்டமன்றம் முடிவு செய்தால், நீல வண்ணக் கண்களையுடைய குழந்தைகளைக் காப்பாற்றுவது குற்றமாகும். ஆனால், அத்தகைய சட்டத்தை நிறைவேற்றுகிறவர்கள் பித்தர்களாயும் அதற்குப் பணியும் குடிகள் அறிவிலிகளாயும் இருக்க வேண்டும்.'

சட்டப்படியான இறைமைக்கும் (Legal Sovereign) அரசியல் இறைமைக்கும் (Political Sovereign) உள்ள வேறுபாட்டைப்பற்றி ஏற்கெனவே கூறினோம். எடுத்துக்காட்டாக, கிரேட் பிரிட்டனில் 'பாராளுமன்றத்துடன் கூடிய அரசியார்' (Queen in Parliament) சட்டப்படியான இறைமை அதிகாரத்தைச் செலுத்துகிறார் என்றும், சட்டப்படியான இறைமையைத் தம் விருப்பப்படி உருவாக்க வல்ல வாக்காளர்களிடம் அரசியல் இறைமை இருக்கிறதென்றும் விளக்கினோம். நடைமுறையில் இவ்வாறு நிகழ்வது அரிது என நீங்கள் சொல்லலாம். அவ்வாறு சொல்லும் போதும் நீங்கள் மக்களிடம் அரசியல் இறைமை இருக்கிறதென்ற உண்மையை மறுப்பதில்லை. ஆனால், மக்கள் தங்கள் விருப்பத்தைத் தெரிவிக்கும் முறையை நன்கு பயன்படுத்தவில்லை என்றுதான் குறிப்பிடுகிறீர்கள். இக்காலப் பிரதிநிதித்துவ அரசாங்கம், இதுவரை உலகம் கண்டுபிடித்த அளவிற்கு, சட்டப்படியான இறைமையையும் அரசியல் இறைமையையும் எவ்வளவு ஒன்றித்து இணைக்க இயலுமோ, அவ்வளவு செய்துள்ளதெனக் கூறலாம். இந்தப் பிரதிநிதித்துவ அரசாங்கம் வழக்கம், சட்டங்கள் இவை வாயிலாக அல்லது முற்றிலும் எழுதப்பட்ட ஆவணம் மூலமாக நிறுவப்படுகின்றது. இரண்டும் அரசியலமைப்பெனும் பெயராலேயே வழங்கப்படுகின்றன. ஒரு கோணத்திலிருந்து பார்த்தால், அரசாங்கத்திற்கும் ஆளப்படுவோருக்கும் உள்ள தொடர்பை வரையறுக்கச் செய்யப்படும் முயற்சியே அரசியலமைப்பாகத் தோன்றுகிறது.

ஆகவே, கொள்கை முறைப்படி சட்டப்படியான இறைமை அதிகாரம் வரையிறந்ததாகவும், மக்களின் இறைமை பிறருக்கு மாற்ற இயலாததாகவும் இருக்கின்றன. நடைமுறையில் ஒன்றின் இறைமை ஓரளவு வரையறுக்கப்பட்டதாகவும், மற்றொன்றின் இறைமை சமூக அமைதிக்கெனவும் அரசியல் ஒருமைப்பாட்டிற்கெனவும் பெரிதளவு வழங்கப்பட்டதாகவும் இருக்கின்றன.

அரசியலமைப்பில் வகுக்கப்பட்டுள்ள அலுவல்களைச் செய்து வரும் குறிப்பிட்ட ஓர் அரசாங்கத்தின் ஆட்சி எல்லைப்பரப்பை அரசியல் முறைமைக்குட்பட்ட அரசெனலாம். ஆகவே, அரசியலமைப்பு அரசின் உட்புற வெளிப்புற வரம்புகளை வரையறுக்கிறது. அரசின் வெளித் தொடர்புகளை நோக்கும் போது, அதன் வரையறைகள் எவ்வளவு இன்றியமையாதவை என்பது புலஞ்கின்றது. கொள்கை முறைப்படி பார்த்தால் வெளிப்புற இறைமையும் உட்புற இறைமையைப்போல வரையிறந்தது. ஆனால், நடைமுறையில் அது வரம்புக்குட்பட்டதாகவே இருக்கிறது. அதற்கு இரு காரணங்கள் உள்ளன. ஒரு சமூகம் அமைதியை அல்லது பொருளாதார நலத்தை நாடுவது ஒரு காரணம்; அச்சமூகம் தன்னை அயல் நாடுகள் நசுக்கிவிடுமென்று அஞ்சுவது மற்றொரு காரணம். இவ்விரு காரணங்களும் ஓர் அரசை அதன் நிலைக்கேற்பப் பிற அரசுகளோடு உண்மையான உறவு கொள்ளுமாறு உந்துகின்றன. அத்தகைய உறவின் மிக எளிதான முறையை உடன்படிக்கை எனலாம். அது, கூட்டுறவின் உறுப்பொன்று தாக்கப்படும் போது படைக்கலந் தாங்கித் தற்காத்துக் கொள்ளும் பாதுகாப்பு உடன்படிக்கையாகவோ, அல்லது ஓர் உறுப்புப் பிற நாட்டைத் தாக்கியபோதிலும் கூட்டுறவு முழுவதற்கும் படையுதவி அளிக்கும் தாக்குதல் உடன்படிக்கையாகவோ இருக்கலாம். இது உண்மையில் இறைமை அதிகாரத்தைக் குறைப்பதில்லை. ஏனெனில், உடன்படிக்கையின் கட்டுப்பாடுகள் அதன் காலத்தை வரையறுத்த போதிலும், கூட்டுறவின் எந்த உறுப்பும் எப்போதும் தன் விருப்பம்போல அக்கட்டுப்பாடுகளிலிருந்து வெளியேறலாம். 1914இல் போர் தொடங்கவே, இத்தாலி ஜெர்மனியுடனும் ஆஸ்திரியாவுடனும் செய்துகொண்ட முக்கூட்டு ஒப்பந்தத்திலிருந்து விலகி, மறு ஆண்டு தன் முந்திய நண்பர்களின் பகைவர்களோடு நட்புறவு செய்து கொண்டது இதற்கோர் சிறந்த எடுத்துக்காட்டாகும். இதே போல 1943இலும் இத்தாலி கட்சி மாறியது.

ஓர் அரசு பிற அரசுகளுடன் சேர்ந்துகொண்டு சில சந்தர்ப்பங்களில் குறிப்பிட்ட செயல்களைச் செய்வதாக அல்லது செய்வதில்லையென வாக்குறுதி அளிக்கலாம். எனினும், இதுவும் இறைமையை உண்மையில் கட்டுப்படுத்துவதில்லை. 1914இல் ஜெர்மனி பெல்ஜியத்தின்மேல் படையெடுத்தது இதற்கோர் எடுத்துக்காட்டு. இரண்டு

அல்லது அதற்கு மேற்பட்ட அரசுகளை ஒரே அரசர் ஆள்வது காரண மாக அவற்றிடையே தோன்றும் ஒரு தனிப்பட்ட கூட்டுறவு இதற் கடுத்த படியாகும். எடுத்துக்காட்டாக, 1714 முதல் 1837 வரை பிரிட்டனுக்கும் ஹனேவருக்கும் இடையே இத்தகைய உறவு நில வியது. ஒரே அரச மரபின் ஆட்சியிலிருப்பதால், இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட அரசுகள் ஒன்று சேர்ந்து பிறநாடுகளின் ஒரே வகையான தூதாண்மைத் தொடர்புகளை ஏற்படுத்திக்கொள்ளலாம். சான்ருக, 1867 முதல் 1918 வரை ஆஸ்திரியாவும் ஹங்கேரியும், 1815 முதல் 1905 வரை நார்வேயும் ஸ்வீடனும் இவ்வாறு செய்தன. உடன்படிக்கை செய்வதோ, ஒருவரையே பல முறை தலைவராக ஏற்றுக்கொள்வதோ, அல்லது ஒரே வகைத் தூதாண்மைத் தொடர்பு களை ஏற்படுத்துவதோ, ஏற்கெனவேயுள்ள இரண்டு அல்லது அவற் றிற்கு மேற்பட்ட அரசுகளை ஒரு புதிய அரசாக உருவாக்க இயலாது. ஏனென்னில், அரசுக்கு உட்புற, வெளிப்புற இறைமையுண்டு. அவ் விறைமையை உண்மையில் கட்டுப்படுத்தும் போதுதான் அதன் அரசுத்தன்மை பாதிக்கப்படுகிறது.

## 2. அரச ஒருமைப்பாட்டின் முறை

ஆகவே, அரசின் தன்மை அதன் இறைமையைச் சார்ந்துள்ளது. நாம் இன்று காணும் அரசுகளுள் ஒன்ருவது இப்போதுள்ள நிலையை அடைவதற்குப் படிப்படியாக ஒருமைப்பாடு அடையாமல் இருந்த தில்லை. கிரேட் பிரிட்டன், பிரான்ஸ் போன்ற பழங்கால அரசு களும், செக்கோஸ்லாவாக்கியா, யூகோஸ்லாவியாப் போன்ற இக் கால அரசியல் படைப்புகளும் இவ்வாறே வளர்ந்தன. ஒருமைப் பாட்டின் வளர்ச்சி, அது தோன்றி உருவாகிய சூழ்நிலைகளுக்கேற்ப மெதுவாக அல்லது விரைவாக நடைபெறலாம். ஒரு பகுதி மற்ருெரு பகுதியை வென்று தன்னேடு அதைச் சேர்க்கும்போது போர் காரண மாக ஒருமைப்பாடு ஏற்படுகிறது. இவ்வாறு ரோம், இங்கிலாந்து, பிரான்ஸ் ஆகிய நாடுகளின் முற்கால வரலாற்றில் நிகழ்ந்தது. அல்லது போரின் விளைவாக அண்மையிலுள்ள நாடுகள் பல ஒரே காலத்தில் விடுதலை பெறக்கூடும். அப்போது அவை தமது பொது நலத்திற்காக ஒரு வகைக் கூட்டுறவை ஏற்படுத்த வேண்டிய நெருக் கடி ஏற்படுகின்றது. இத்தகைய நெருக்கடி 1783இல் அமெரிக்கக் குடியேற்ற நாடுகளுக்கும் 1918இல் செர்பியர்கள் (The Serbs), குரோட்டுகள் (Croats), ஸ்லாவானியர்கள் (Slovenes) ஆகியோருக் கும் ஏற்பட்டது. இது வரை எதிர் பாராத ஓர் இடையூறு காரண மாகவும், தனித்து நின்ற பலபகுதிகள் ஒருமைப்பாட்டின் தேவையை உணரலாம். 19-ஆம் நூற்ருண்டின் இறுதியில் ஆஸ்திரேலியாவில் இவ்வாறு நடந்தது.

ஒருமைப்பாடு எவ்வாறு நிகழ்ந்த போதிலும், ஒருமைப்பாட்டை எதிர்நோக்கி நிற்கும் சமூகங்கள் முதன்முதலில் தாங்கள் கூட்டாட்சியின் மூலம் ஒன்றுபடுவதா அல்லது ஒன்றேடொன்று இணைந்து அரசாக ஒன்றுபடுவதா என்பதை முடிவு செய்ய வேண்டும். கூட்டாட்சி முறைப்படி ஒன்றுபட்டால், இறைமை நடை முறையிலாவது பிரிக்கப்படுகிறது. ஏனெனில், கூட்டாட்சியின் உறுப்புகள் இறைமையின் ஒரு பகுதியைத் தங்களிடம் தனியாக வைத்துக்கொண்டு ஒரு பகுதியைத் தாங்கள் நிறுவிய மத்திய நிறுவனத்திடம் ஒப்படைக்கின்றன. கூட்டாட்சியில் நடை முறையில் இறைமை பிரிக்கப்படுகிறதென்பதை நாம் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். நாம் மேலே கூறியது போல, கொள்கை முறைப்படி பார்த்தால், இறைமையைப் பகுக்க இயலாது என்பது உண்மை. ஆனால், கூட்டாட்சி முறைக்கே இயல்பான தனிப்பட்ட சிக்கலைத் தீர்ப்பதற்குப் பொருத்தமான வழி ஒன்றேதான் இருக்கிறது. அதாவது, கூட்டாட்சியை அமைக்கும் அரசுகள் முன்பு தனித்தனியாகச் செலுத்தி வந்த இறைமை அதிகாரத்தை இப்போது கூட்டாட்சி அரசாங்கமும் மாநில அரசாங்கங்களும் பங்கிட்டுக்கொள்கின்றன. இது உடன்படிக்கையினின்று வேறுபட்டது என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும். கூட்டாட்சியின் உறுப்புகள் தங்கள் வெளிப்புற இறைமை முழுவதையும் ஒரு பொது நிறுவனத்திடம் ஒப்படைக்கின்றன. ஆகவே, அவற்றிடம் இருக்கும் உட்புற இறைமை சிதைந்த வடிவிலே காணப்படுகிறது. ஏனெனில், ஒவ்வோர் உறுப்பின் அரசாங்கமும் முன்னர் அதன் குடிகளின்மேல் செலுத்தி வந்த சில குறிப்பிட்ட அதிகாரங்களை இப்போது கூட்டாட்சி அரசாங்கம் மட்டும் செலுத்த இயலும்.

உண்மையில் இறைமையைப்பிரிக்க இயலாது. அரசியலமைப்பே கூட்டாட்சியில் சட்டப்படியான இறைமையாகும். அது கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்கும் இடையே அதிகாரங்களைப் பிரித்து வைக்கின்றது. பல அரசுகள் கூட்டாட்சி வாயிலாக ஒன்று படும்போது, அவை அரசியலமைப்பில் காணப்படும் கட்டுப்பாடுகளுக்கு உட்படுவதாக ஒப்புக்கொள்கின்றன. அரசியலமைப்பு என்பது ஓர் உடன்படிக்கை—உயர்ந்த புனிதத்தன்மை வாய்ந்த உடன்படிக்கை. அதை ஏற்றுக்கொள்பவர்கள் அதில் குறிப்பிட்டுள்ள முறைப்படிதான் அதை மாற்ற இயலும். எனவே, நாம் கூட்டாட்சி முறையிலுள்ள மாநிலங்களை இறைமையதிகாரமுடைய துணை அமைப்புகள் என விளக்கலாம்.

அரசுகள் ஒன்றேடொன்று இணைந்து ஒரே அரசாய் ஒன்றுபடுவதால் ஒருமைப்பாடு ஏற்படுமானால், இணையும் அரசுகள் தங்களிடம் எவ்வகை அதிகாரத்தையும் வைத்துக்கொள்வதில்லை. இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட இறைமையதிகாரமுள்ள தனித்தனி

அரசுகள் ஒன்றுகூடி ஓர் உடன்படிக்கை செய்து, அதன்படி இரண்டறக் கலந்து, ஒரே அரசாய் உருவாகின்றன. எல்லா அதிகாரங்களையும் அவை ஒரு பொது நிறுவனத்திடம் ஒப்படைக்கின்றன. அந்த நிறுவனம் கூட்டாட்சி அரசாங்கமன்று; ஆனால், அது மத்திய அரசாங்கம் என வழங்கப்படுகிறது. அத்தகைய அரசில் உட்புற இறைமையும் வெளிப்புற இறைமையும் முற்றிலும் மத்திய அரசாங்கத்திடம் இருக்கின்றன. அது இவ்வேற்பாட்டின்படி, இறைமையதிகாரமுள்ள எந்தத் துணை அமைப்புகளையும் ஏற்றுக்கொள்வதில்லை. அதுவே 'ஒருமுக அரசு' எனப்படும்.

## 3. ஒருமுக அரசின் இன்றியமையாத இயல்பு

கூட்டாட்சி அரசில் இறைமை பிரிக்கப்பட்டுள்ளதெனக் கூறுவது பயன் தருமென்பதை ஏற்கெனவே விளக்கினோம். இறைமை பிரிக்கப்படாமலிருப்பது ஒருமுக அரசின் இன்றியமையாத இயல்பாகும். அதாவது, ஒருமுக அரசில் மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்களுக்கு வரையறை இல்லை. ஏனெனில், ஒருமுக அரசின் அரசியலமைப்பு மத்திய அரசாங்கத்தைத் தவிர வேறு எந்தச்சட்ட ஆக்க நிறுவனத்தையும் ஏற்றுக்கொள்வதில்லை. குடியேற்ற நாடுகளிலும் வட்டாரங்களிலுமுள்ள சிறு நிறுவனங்களுக்கு அதிகாரத்தை வழங்குவது பயன் தருமென மத்திய அரசாங்கம் கருதினால், தனது அதிகார நிறைவினால் அவ்வாறு செய்யுமேயன்றி, அரசியலமைப்பு அவ்வாறு செய்ய வேண்டுமென்று சொல்வதனாலாவது அல்லது அரசின் பல பகுதிகளும் ஒன்றாக இணையும் போது தமது தனித்தன்மையை ஓரளவு இழக்கவில்லை என்பது காரணமாகவாவது அவ்வாறு செய்வதில்லை என்பதை மறத்தலாகாது. அங்குச் சட்டமியற்றும் துணை நிறுவனங்கள் இல்லையென நினைப்பதும் தவறு. அவை அங்குள்ளன; ஆனால், மத்திய அரசாங்கம் அவற்றைத் தன் விருப்பம் போல அழிக்கலாம் என்பதுதான் அதன் பொருள். ஆகவே, அந்தத் துணை நிறுவனங்களுக்கு இறைமை அதிகாரமுடைய அத்துணை நிறுவனங்களெனப் பொருள் கூறவே இயலாது என்பது புலனாகிறது. இறுதியாக, மத்திய அரசாங்கம் தனது சட்ட அதிகாரத்தினால் சமாளிக்க இயலாத ஒரு முரண்பாடு மத்திய அரசாங்கத்திற்கும் வட்டார அரசாங்கங்களுக்கும் இடையே ஏற்படுவதற்கு வழியொன்றும் இல்லை என்பது தெரிகின்றது.

ஆகவே, ஒருமுக அரசின் இன்றியமையாத பண்புகள் என்று இரண்டினைக் குறிப்பிடலாம். முதலாவது, மத்திய பாராளுமன்றத்தின் மேலாண்மை. இரண்டாவது, இறைமை அதிகாரமுடைய துணை நிறுவனங்கள் இல்லாமை.

(1) எங்கெங்கு ஒருமுக அரசைக் காண்கின்றோமோ, அங்கங்கெல்லாம் மத்தியப் பாராளுமன்றத்தின் மேலாண்மையைக் காண்கிறோம். நாம் நெகிழா அரசியலமைப்பைப் பிறகு ஆராயும் போது விளக்குவது போல, ஒருமுக அரசில் அடிக்கடி அரசியலமைப்பானது சாதாரண மத்தியச் சட்டமன்றம் சில வகைச் சட்டங்களைத் தனி முறையைப் பின்பற்றாமல் நிறைவேற்றுவதைத் தடுக்கின்றது. ஆனால், கூட்டாட்சி அரசில் மத்தியப் பாராளுமன்றம் இதைவிட அதிகமாகக் கட்டுப்படுத்தப்படுகின்றது. ஏனெனில், கூட்டாட்சி அரசியலமைப்பு, அரசியலமைப்பை மாற்றுவதற்கு வழி காட்டுவதுமல்லாமல், கூட்டாட்சியின் அதிகாரங்கள் எவையென்றோ, அல்லது கூட்டாட்சி உறுப்புகளின் அதிகாரங்கள் என்னவென்றோ குறிப்பிடுகின்றது. ஆகவே, கூட்டாட்சி அரசில் கூட்டாட்சிச் சட்டமன்றம், மாநிலச் சட்டமன்றம் என்ற இரு வகை உள்ளன. ஒவ்வொன்றுக்கும் அதிகார எல்லை உண்டு. இரண்டும் எல்லாவற்றிலும் மேலானவை அல்ல. ஆனால், ஒருமுக அரசில் ஒரே வகைச் சட்ட மன்றந்தான் உண்டு. அது எப்போதும் வரம்பற்ற மேலாண்மையுடையது.

(2) ஒருமுக அரசின் இரண்டாவது அடையாளம் இறைமை அதிகாரமுடைய துணை நிறுவனங்கள் இல்லாமை. சட்டமியற்றும் துணை நிறுவனங்களுக்கும், இறைமை அதிகாரமுடைய துணை நிறுவனங்களுக்கும் இடையே நாம் குறிப்பிட்டுள்ள வேறுபாடானது, ஒருமுக அரசிலுள்ள வட்டார அரசாங்கங்களுக்கும் கூட்டாட்சி அரசிலுள்ள மாநில அரசாங்கங்களுக்கும் உள்ள வேறுபாடாகும். கூட்டாட்சியிலுள்ள மாநில அரசாங்கத்தை அரசியலமைப்புடன் தொடர்பு படுத்துவதற்குப் பதிலாகக் கூட்டாட்சி அரசாங்கத்துடன் தொடர்புபடுத்திப் பார்த்தால், இந்த வேறுபாடு தெளிவாகத் தெரிகின்றது. மாநில அரசாங்கத்திற்கு இருக்கும் உரிமைகளைக் கூட்டவோ அல்லது குறைக்கவோ கூட்டாட்சி அரசாங்கத்திற்கு அதிகாரமில்லை. அதைச் செய்யக்கூடிய ஆற்றல் அரசியலமைப்புக்கு மட்டும் உண்டு. அதுவும் அதற்கேற்றவாறு அரசியலமைப்பைத் திருத்தும் போதுதான் உண்டாகிறது. இதைச் செய்வதற்குக் கூட்டாட்சியிலுள்ள எல்லா மாநிலங்களின் விருப்பத்தையும் அறிதல் வேண்டும். இவ்வாறு, அமெரிக்க ஐக்கிய நாடுகளென வழங்கப்படும் கூட்டாட்சியில், உதாரணமாக வெர்ஜீனியா மாநிலத்திற்கு அரசியலமைப்பு வரையிறந்த சில அதிகாரங்களை வழங்கியிருக்கின்றது. அரசியலமைப்பை அதற்கெனத் திருத்தும் வரையில், கூட்டாட்சிச் சட்டமன்றம் (காங்கிரஸ்) இயற்றும் எந்தச் சட்டமும் இவற்றை வெர்ஜீனியாவிடமிருந்து பறிக்க இயலாது. (அரசியலமைப்பைத் திருத்துவதற்குக் காங்கிரஸினால் மட்டும் இயலாது.) இதனுடன் ஒருமுக அரசிலுள்ள வட்டார அரசாங்கத்திற்கும் மத்தியச் சட்ட மன்றத்

திற்குமுள்ள தொடர்பை ஒப்பிட்டுப்பாருங்கள். ஐக்கிய அரசென வழங்கப்படும் ஒருமுக அரசில் இலண்டன் மாவட்டச்சபை (London County Council) செலுத்திவரும் அதிகாரங்கள் அரசியலமைப்பினுல் வழங்கப்பட்டவை அல்ல ; ஆனுல், வெஸ்ட்மின்ஸ்டரிலுள்ள பாராளு மன்றம் இயற்றிய சட்டத்தினுல் வழங்கப்பட்டவை. இவ்வதிகாரங் களில் எவற்றையும், எல்லாவற்றையும், எந்நேரத்திலும், இலண்டன் மாவட்டச் சபையினின்று தனது சட்டத்தினுல் நீக்குவதற்கு வெஸ்ட் மின்ஸ்டரிலுள்ள பாராளுமன்றத்திற்கு அதிகாரம் உண்டு. வேறுபாடு என்னவென்ருல், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் காங்கிரஸ் வெர் ஜீனியா மாநிலத்தை ஒரு போதும் அழிக்கவே இயலாது. ஆனுல், ஐக்கிய அரசின் பாராளுமன்றம் எந்த மேலான அதிகாரத்தின் துணையு மின்றி இலண்டன் மாவட்டச் சபையை அழித்துவிடலாம்.[1]

சுருங்கக் கூறவேண்டுமானுல், மத்திய அரசாங்கத்திற்குக் கீழுள்ள மற்ற அரசாங்கங்களில் (அரசியலமைப்பில் குறிப்பிட்டுள்ள முறைகளைத் தவிர) சாதாரணச் சட்ட ஆக்க முறைப்படி தலையிட மத்திய அரசாங்கத்திற்கு அதிகாரமில்லையென்ருல், அந்த அரசாங் கம் கூட்டாட்சி அரசாங்கமெனவும், அக்குறுகிய அதிகாரத்தைச் செலுத்திவரும் அரசைக் கூட்டாட்சி அரசெனவும் கூறலாம். மத் திய அரசாங்கம் தனக்குக் கீழுள்ள அரசாங்கங்களைத் தன் விருப்பத் திற்கேற்ப உண்டாக்கவும் அழிக்கவும் கூடுமானுல், அது மேலான அதிகாரம் பெற்றுள்ளது. அது இந்த வரையிறந்த அதிகாரத்தைச் செலுத்திவரும் நிலப்பகுதியிலுள்ள அரசை ஒருமுக அரசென்கிருேம். நாம் இப்போது இக்கால உலகின் முக்கியமான சில ஒருமுக அரசு களைப்பற்றி விரிவாக ஆராய்வோம்.

## 4. ஐக்கிய அரசில் ஒருமுகத்தன்மை வளர்ந்த வரலாறு

கூட்டாட்சி முறையல்லாது, இணைந்து ஒரே அரசாக ஒன்று படும் ஒருமுக அரசின் வளர்ச்சிக்கு ஐக்கிய அரசின் உருமலர்ச்சி தலைசிறந்த ஓர் எடுத்துக்காட்டாகும். அங்கு இணைந்து ஒன்றுபடும்

1. *1960*இல் பெரிய இலண்டனில் (Greater London) வட்டார அரசாங்கத்தைப்பற்றி ஆய்வதற்காக ஏற்படுத்தப்பட்ட அரச ஆணைக்குழு (Royal Commission) அப்பகுதியில் 52 ‘ பரோ’க் களை நிறுவ வேண்டும் என்றும், இலண்டன் மாவட்ட அவையை அழிக்கவேண்டும் என்றும், பெரிய லண்டன் அவையை நிறுவவேண்டு மென்றும் கூறியது. இதைச் செயற்படுத்துவதற்கு ஒரு மசோதாவைக் கொண்டு வரப்போவதாக *1962*இல் அரசாங்கம் அறிவித்தது.

போக்கைப் பண்டைய நாளிலிருந்தே காணலாம். டியூட்டானியரின் முதற்படையெடுப்புகளுக்குப் பின் இங்கிலாந்தில் கொள்ளைக் கூட்டத்தின் எண்ணிக்கைக்கேற்பச் சிறு அரசுகளும், அவற்றின் தலைவர்களின் எண்ணிக்கைக்கேற்ப அரசர்களும் தோன்றினர்கள். படையெடுத்து வந்தவர்கள் நாட்டில் குடியேறத் தலைப்பட்டதும், தனி மனிதனின் தலைவர் பற்றுனது நிலப்பற்றாய் மாறியது. ரோமானிய–கெல்டிக்கு (Romano-Celtic) பிரிட்டன் முழுவதும் வெல்லப்படுவதற்கு முன்னே, சிறு அரசுகள் பெரிய அரசுகளோடு இணைந்து ஒன்றுபடுவதைக் காண்கிறோம். 613இல் செஸ்டர் (Chester) வீழ்ந்ததும், நாடு முழுவதும் கைப்பற்றப்பட்டுவிட்டதெனக் கருதலாம். அப்போது முதலிலிருந்த குழப்பத்திலிருந்து ஏற்கெனவே ஏழு முடியரசுகள் (ஏழரசு-Heptarchy) தோன்றியிருந்தன. (பிரிட்டானியர்களோடு நடந்த) புறச் சண்டையானது படையெடுப்பாளரது ஏழு அரசுகளுக்கிடையே நிகழ்ந்த உட்சண்டையாய் மாறியது. விரைவில் ஏழரசு மூவரசாய்ச் சுருங்கியது. இதற்கிடையில் டேனர்களின் படையெடுப்பு நிகழ்ந்தது. ஆனல், அது அரசுகள் இணைந்து ஒரே அரசாக ஒன்றுபடுவதைத் தடுக்க இயலவில்லை. டேனர்கள் குடியேறியதும் அவர்களும் பிறரைப்போல வெஸக்ஸ் (Wessex) மரபு அரசர்களின்கீழ் ஓர் ஐக்கிய அரசாய் இணைந்தார்கள்.

நார்மானியப் படையெடுப்பினுல் ஆங்கில முடியரசின் ஒருமுகத் தன்மை இன்னும் வலுப்பெற்றது. இப்போக்குதான் இறுதியில் இங்கிலாந்து, வேல்ஸ், ஸ்காட்லாந்து, அயர்லாந்து ஆகியவற்றின் ஐக்கியத்தில் முடிந்தது. வேல்ஸ் முதலாம் எட்வர்டு மன்னரால் கைப்பற்றப்பட்டு, வேல்ஸ் (1283) சட்டப்படி (Statute of wales) அதைவிடப் பெரிய அண்டை நாட்டுடன் இணைக்கப்பட்டது. 1603இல் டியூடர் (Tudor) மரபு வழி மறைந்து, ஏழாம் ஹென்றியின் வழி வந்த ஸ்டுவர்ட்டு மன்னர்கள் (Stuarts) அரியணை ஏறியதும், கிரேட் பிரிட்டன் தீவு முழுவதும் ஒரே முடியரசின்கீழ் வந்தது. ஆனல், இதனுல் ஒருமுக அரசு உருவர்கவில்லை. அது ஒரு பொது அரசனுக்குக் கீழ்ப்படிந்திருந்த ஐக்கியமாய் விளங்கியது. பிறகு 1707இல் இயற்றப்பட்ட ஐக்கியச் சட்டம் (Act of Union) இரண்டு அரசுகளையும் ஒன்ருக இணைத்தது. இரண்டு அரசுகளும் ஓர் உடன்படிக்கை செய்தன. அதன்படி அவை ஒரே அரசாய் ஒன்றுபட்டன. அவ்வேளையிலிருந்து அவை இரண்டும் இரு தனி அரசுகளாய் இருந்த நிலை மறைந்தது. இங்கிலாந்தின் (வேல்ஸ் உட்பட) பாராளுமன்றமும், ஸ்காட்லாந்தின் பாராளுமன்றமும் இணைந்தன என்பதைவிட அவை இரண்டும் அடங்கிய ஒரு புதிய பாராளுமன்றம் உருவானது என்று சொல்வது மிகவும் பொருந்தும். ஐக்கியச்சட்டம் என்பது ஓர் உடன்படிக்கையாகவும் சட்டமாகவும் விளங்கியது. இரு பாராளுமன்றங்களும்

அதை ஏற்றுக்கொண்ட உடனே அதை ஒப்புக்கொண்ட இரண்டு அரசுகளும் மறைந்தன. ஆகவே, அதை அன்றிலிருந்து உடன்படிக்கை எனக் கூற இயலாது. கிரேட் பிரிட்டன் முடியரசின் சட்டப் புத்தகத்தில் அது ஓர் உண்மையான சட்டமாய்த் திகழ்ந்தது.

1800இல் கிரேட் பிரிட்டனின் முடியரசுக்கும் அயர்லாந்துக்கும் இடையே இத்தகைய இணைப்பு ஏற்பட்டது. 12-ஆம் நூற்றாண்டில் ஆண்ட இரண்டாம் ஹென்றியின் காலத்திலிருந்து அயர்லாந்து கொள்கையளவில் ஆங்கில முடியரசின்கீழ் ஒரு மாநிலமாய் இருந்து வந்தது. 15ஆம் நூற்றாண்டின் இறுதியில் ஏழாம் ஹென்றி காலத்தில் உண்மையிலே அது அவ்வாறு மாறியது. 1782இல் அயர்லாந்து சட்டமியற்றும் உரிமை பெற்றது. ஆனால், அவ்வமைப்பு வெற்றி பெறவில்லை. 1800இல் இரண்டாவது ஐக்கியச் சட்டம் நிறைவேற்றப் பட்டது. அப்போது இரண்டு அரசுகளும் உடன்படிக்கை செய்வதற்காக ஒன்று கூடின. அதன் விளைவாக அவை ஒன்றாக இணைந்து ஒரே அரசாய் மாறின. ஆகவே, 1800 முதல் கிரேட் பிரிட்டனும் அயர்லாந்தும் அடங்கிய ஐக்கிய அரசு நிலவியது. அதன் வளர்ச்சியின் வரலாற்றில் கூட்டாட்சியின் இயல்பு ஒன்றுகூடக் காணப்படவில்லை. இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, அயர்லாந்து இவற்றில் எதுவும் குறைந்த அளவான இறைமையைக்கூட வைத்துக்கொள்ளவில்லை. ஒவ்வொன்றின் இறைமையும் மொத்தத்தில் ஒன்று கலந்தது.

ஐக்கியத்திற்கு முன்னால் ஸ்காட்லாந்திலும் அயர்லாந்திலும் நிலவிய சில சிறப்புச் சட்டங்கள் பிறகும் நிலவின என்பதும் உண்மைதான். ஆனால், அவற்றுள் ஐக்கிய ஒப்பந்தத்திற்கு உகந்தவையும், முக்கியமாக ஐக்கிய அரசின் பாராளுமன்றம் தள்ளிவிடாதவையுமே ஏற்றுக்கொள்ளப்பட்டன. மேலும், அந்நாளிலிருந்து ஐக்கியப் பாராளுமன்றம் இயற்றிய சில சட்டங்களிலிருந்து ஸ்காட்லாந்துக்கும் அயர்லாந்துக்கும் விதி விலக்கு அளிக்கப்பட்டது என்பதும், சில சட்டங்கள் அவ்விரு நாடுகளுக்கும் தனித்தனியாக இயற்றப்பட்டன என்பதும் உண்மையே. இந்த இரண்டு ஐக்கியச் சட்டங்களையும் தீட்டியவர்களுக்கு இவற்றின் கருத்துகளை எவரும் மாற்றக்கூடாதென்ற விருப்பம் இருந்திருக்கலாம். ஆனால், அதை ஆராய்ந்து பார்த்தால், அவ்விருப்பம் வெறும்பகற்கனவாகவே முடிந்ததென்பது தெரிகிறது. இச்சட்டங்களினால் வருங்காலப் பாராளுமன்றங்களைக் கட்டுப்படுத்த அவர்கள் முயற்சி செய்திருந்தால், அது தோல்வியாகவே முடிந்திருக்கும். ஏனெனில், இரண்டிலும் சிறப்பாகச் சமயம் சார்ந்த சட்டங்கள் நிரந்தரமாக நிலவவேண்டுமென்ற எண்ணத்துடன் இயற்றப்பட்ட போதிலும், அவை பிறகு தள்ளப்பட்டுவிட்டன; அல்லது திருத்தியமைக்கப்பட்டன. உண்மையில் ஐக்கியச் சட்டங்களை ஐக்கியப் பாராளுமன்றம் மாற்றுதவாறு செய்வதற்குரிய ஒரே

வழி என்னவென்றால், அவற்றைக் காக்க அல்லது மாற்ற ஒரு தனி நிறுவனம் அமைந்திருக்க வேண்டும். அப்படியானால், பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் இறைமை வரம்புக்குட்பட்டதாகிவிடும். ஏனெனில் ஐக்கிய அரசு ஒருமுக அரசின் நிலையிழந்து கூட்டாட்சி அரசாய் மாறி விடும். 1922இல் உரிமை நாடான அயர்லாந்தும் 1937இல் ஐரிஷ் முடியரசும் நிறுவப்பட்ட போது ஐக்கிய அரசின் எல்லைப்பரப்பில் சிதைவு ஏற்பட்டபோதிலும், அதன் அரசியல் தன்மையில் அடிப்படை மாற்றம் எதுவும் ஏற்படவில்லை. ஏனெனில், எஞ்சி நின்றது கிரேட் பிரிட்டனும் வட அயர்லாந்தும் அடங்கிய ஐக்கிய அரசெனும் பெயரில் ஓர் ஒருமுக அரசாய் விளங்கியது.

பிரிட்டிஷ் பேரரசு, பொதுநலக்கூட்டு ஆகியவற்றின் வளர்ச்சியிலும், அரசியல் அமைப்புகளிலும் கூட்டாட்சிக்கொள்கை காணப்படுவதில்லை. பொதுநலக் கூட்டின் அரசியலமைப்பென்று ஒன்றையும் நாம் கூற இயலாது. ஐக்கிய அரசிற்கு ஓர் அரசியலமைப்பும், பொது நலக்கூட்டு நாடுகளுள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் அரசியலமைப்பும் உள்ளன. ஐக்கிய அரசுக்குட்பட்ட மாவட்டம் அல்லது நகரங்களுக்குச் சில வட்டார அதிகாரங்கள் வழங்கப்படுவதுபோல, பாராளுமன்றச் சட்டம் வாயிலாகக் குடியேற்ற நாடுகளுக்கு ஆட்சி அளிக்கப்படுகிறது. அதுதான் அண்மைக்காலம் வரை தன்னாட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடுகளில் மரபு நிலையாய் இருந்தது. ஏனெனில், அவற்றின் பற்பல அரசியலமைப்புகள் சட்ட முறைப்படி பிரிட்டிஷ் பாராளுமன்றச் சட்டங்களினால் வழங்கப்பட்டன. ஆனால், உண்மையில் பல குடியேற்ற உரிமை நாடுகளில் எழுந்த தேசீய உணர்ச்சி காரணமாகக் குடியேற்ற உரிமை நாட்டு நிலை வழங்கப்பட்டது. ஆகவே, அந்நிலையளித்த சட்டத்தில் சட்டத்தின் இயல்பைவிட உடன்படிக்கையின் இயல்பையே அதிகமாகக் காண்கிறோம்.

இதைப் பொறுத்த வரையில் கனடா, ஆஸ்திரேலியா, தென்னாப்பிரிக்கா ஆகியவற்றில் மறைமுகமாகக் காணப்பட்டது உரிமை நாடாகிய அயர்லாந்தில் வெளிப்படையாகத் தெரிந்தது. அயர்லாந்தின் அரசியலமைப்பு, உள் நாட்டுப் போரின் இறுதியில் ஏற்பட்ட உடன்படிக்கையின் அடிப்படையில் எழுந்தது. 1922இல் அதில் கிரேட் பிரிட்டனும் (1937இன் பிந்திய அரசியலமைப்புக்குப் பிறகு அயர் அல்லது / ஐரிஷ் குடியரசு என வழங்கப்படும்) தெற்கு அயர்லாந்தும் கையெழுத்திட்ட பிறகு, அதைப் பிரிட்டிஷ் பாராளுமன்றமும், ஐரிஷ் அரசியற்புனைசபையும் ஏற்றுக்கொண்டன. ‘இந்த அரசியலமைப்பின் எப்பிரிவும், அல்லது இதன் எத்திருத்தமும், அல்லது இதன்படி இயற்றப்பட்ட எச்சட்டமும், அட்டவணையில் கண்ட உடன்படிக்கையின் எப்பிரிவுக்கும் எவ்வகையிலும் முரண்பட்டதாக இருக்குமானால்,

இது அந்த முரண்பாட்டின் அளவிற்கேற்ப, முற்றிலும் பயனிழந்து செயலிழந்து போகும்,' என அரசியல் அமைப்பின் முகப்புக் கூறுகிறது.

இந்தத் தேசீய உணர்ச்சியின் ஆவல்களை நிறைவேற்றுவதற்கு இரு வழிகள் இருந்தன. பேரரசு முழுவதையும் சமமான உறுப்புகளையுடைய ஒரு கூட்டுறவாக அமைப்பது ஒரு வழி. ஐரிஷ் அரசியலமைப்பின் தெளிவான திட்டம், 178?இல் அமெரிக்கக் குடியேற்ற நாடுகளின் இழப்பினால் தோன்றிய கருத்து முரண்பாடு உச்சநிலையை அடைந்துவிட்டது எனக் காட்டியது. பழைய பேரரசின் சிதைவினால் ஏற்பட்ட அதிர்ச்சியின் விளைவாக, 'பழுத்த பழக்கொள்கை' (Ripe Fruit Theory) என்ற ஒரு வகைத்தோல்வி மனப்பான்மை தோன்றியது. இதன்படி, தாய்நாட்டிற்கும் குடியேற்ற நாடுகளுக்கும் இடையிலுள்ள தொடர்பை மரத்திற்கும் கனிகளுக்குமுள்ள இணைப்புக்கு ஒப்பிடலாம். அவை பழுத்ததும், இயற்கையில் நிகழ்வது போல, கீழே விழவேண்டும். பேரரசில் ஏற்பட்ட ஒவ்வொரு நெருக்கடியின் போதும் சில அரசியல் வல்லுநர்களும் சிந்தனையாளர்களும் இக்கொள்கையைத் திரும்பத் திரும்ப வலியுறுத்தி வந்தார்கள். 1870-ஆம் ஆண்டிற்குள் இக்கொள்கை உச்சநிலையை அடைந்தது. பிறகு இது ஒரு பெரிய கூட்டாட்சி இயக்கமாய் மாறி, அந்நூற்றாண்டின் இறுதி வரை வேறுவேறு வடிவங்களில் தோன்றியது. இரண்டாவது வழி, ஏற்கெனவே நிறைவெய்தியதை மீண்டும் நிறைவேற்றுவதாகும். அது பொதுநலக்கூட்டின் பகுதிகளை எல்லாம் நெருங்கிய உறவினால் பிணைத்தது. அவற்றிடையே நிலவிய பொதுவான அரசியல் மரபுகளில் பிறந்த பொதுக் குறிக்கோள்களும் நல விருப்பங்களும் அவ்வுறவை வளர்த்தன. அவை எல்லாம் ஒரே முடியரசின் மேலுரிமையை ஏற்றமையால், அவ்வுறவு மேலும் வலிமை பெற்றது. இடையிடையே கூடிய பேரரசு மாநாடுகளும், அண்மையில் காலந்தவறாது நிகழ்ந்துவரும் பொதுநலக்கூட்டுத் தலைமை அமைச்சர்களின் கூட்டங்களும் அந்த உறவுக்குப் புத்துயிர் அளித்து வருகின்றன. ஆனால், இந்த உறவு பொது நலக்கூட்டு நாடுகள் அனைத்திற்கும் ஒரு பொதுவான தூதாண்மைக் கொள்கையை உருவாக்குவதில்லை. ஏனெனில், அவற்றுள் ஒவ்வொன்றும் அயல் நாட்டுக் கொள்கையிலும் பாதுகாப்பு முறையிலும் தன் விருப்பம் போல நடக்கின்றது. அவற்றுள் ஒவ்வொன்றிற்கும் பிற நாடுகளில் தனிப் பிரதிநிதிகள் இருக்கின்றார்கள். ஐக்கிய நாடுகளின் சங்கத்திலும் அவற்றிற்கெனத் தனி உறுப்பினர்கள் உள்ளார்கள்.

ஐரிஷ் உடன்படிக்கைக்குப் பிறகு விரைவாக நிகழ்ந்த நிகழ்ச்சிகள் குடியேற்ற உரிமை நாட்டு நிலை என்பதன் பொருளை நன்கு விளக்கின. 1926இல் நடைபெற்ற பேரரசு மாநாட்டில் குடியேற்ற

உரிமை நாடுகளின் உரிமைகள் ஐயந்திரிபற விளக்கப்படன. அதன்படி அவை (குடியேற்ற உரிமை நாடுகள்) 'பிரிட்டிஷ் பேரரசினுள் இருக்கும் சம நிலையிலுள்ள சுய ஆட்சி பெற்ற சமுதாயங்களாகும். அவை முடியரசின்மீது பொதுவான பற்றுக் கொண்டிருந்த போதிலும், தமது உள் நாட்டு வெளிநாட்டுச் செய்திகளில் ஒன்றிற்கொன்று கீழ்ப்பட்டவையல்ல. அவை பிரிட்டிஷ் நாடுகளின் பொது நலக் கூட்டின் உறுப்புகளாய் இணைந்து நிற்க இணங்கியுள்ளன.' மேலும், 1926இல் கூடிய பேரரசு மாநாட்டின் விளைவாகக்குடியேற்ற உரிமை நாட்டில் கவர்னர் ஜெனரல், (அமைச்சரவை எனக்கருதப்படும்) பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பிரதிநிதியாகக் கருதப்படவில்லை. அதனால், ஒரு ஹைகமிஷனரை உறவு அதிகாரியாக அமர்த்த வேண்டிய தேவை ஏற்பட்டது. தன்னாட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடுகள் இவ்வாறு முழுச்சுதந்தரம் அடைந்ததை வெஸ்ட்மின்ஸ்டர் சட்டம் 1931இல் சட்டமுறையாக ஒப்புக்கொண்டது.

அச்சட்டம், 1926, 1930இல் நடைபெற்ற பேரரசு மாநாடுகள் நிறைவேற்றிய சில தீர்மானங்களைச் செயற்படுத்துவதற்காகப் 'பேரரசுப் பாராளுமன்றம் இயற்றிய சட்டம்' என வழங்கப்படுகிறது. அச்சட்டத்தின் முகப்பில் குடியேற்ற உரிமை நாடுகளின் பெயர்கள் தரப்பட்டுள்ளன. அவை கனடாக்குடியேற்ற உரிமை நாடு, ஆஸ்திரேலியப் பொதுநலக்கூட்டு, நியூஜீலந்து குடியேற்ற உரிமை நாடு [1] ஆகியவை. 'பிரிட்டிஷ் நாடுகளின் பொதுநலக் கூட்டு உறுப்புகள் இணங்கி இணைந்து நிற்கும் சேர்க்கையின் அடையாளமே முடியரசு என்றும், அவை 'முடியரசின்மேல் பொதுவான பற்றுக்கொண்டிருப்பதால் ஒன்றுபட்டுள்ளன' என்றும், 'குடியேற்ற உரிமை நாடு விரும்பிக் கேட்டு அதன் இணக்கத்தின்மேல் இயற்றப்பட்டாலன்றி, ஐக்கிய அரசின் பாராளுமன்றம் இனிமேல் இயற்றும் எந்தச் சட்டமும் குறிப்பிட்ட எந்தக் குடியேற்ற உரிமை நாட்டையும் கட்டுப்படுத்தாது என்ற அரசியலமைப்புக் கொள்கையுடன் அது இயைந்துள்ளது' என்றும், இன்னும் பலவற்றைப் பற்றியும் முகப்புக் கூறுகிறது.

சட்டத்தின் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது பகுதிகள் மிக முக்கியமானவை ; அவை மிகத் தெளிவாக எழுதப்பட்டுள்ளன. அவற்றை அப்படியே இங்குக் கொடுத்திருக்கிறோம்.

---

1. தென்னாப்பிரிக்க ஐக்கியமும் உரிமைநாடான அயர்லாந்தும் அப்போது அவற்றுடன் சேர்க்கப்பட்டிருந்தன. ஆனால், அவை பிறகு குடியரசுகளாகிப் பொது நலக்கூட்டை விட்டு விலகின, நியூபௌண்ட் லாந்தும் 1949இல் கனடாக்குடியேற்ற உரிமை நாட்டின் பத்தாவது மாநிலமானது.

(1) இச்சட்டம் தொடங்கிய பிறகு குடியேற்ற உரிமை நாட்டுப் பாராளுமன்றம் இயற்றும் எந்தச் சட்டத்தையும் குடியேற்ற நாட்டுச் சட்டங்களின் செல்லுபடிச் சட்டம் (The Colonial Laws Validity Act 1865) பாதிக்காது.

(2) இந்தச் சட்டம் தொடங்கிய பிறகு குடியேற்ற உரிமை நாட்டுப் பாராளுமன்றம் இயற்றும் எந்தச் சட்டமும், சட்டத்தின் எப்பிரிவும், இங்கிலாந்தின் சட்டத்திற்கோ, இப்போதுள்ள அல்லது எதிர்காலத்தில் ஐக்கிய அரசின் பாராளுமன்றம் இயற்றக் கூடிய சட்டத்தின் பிரிவுகளுக்கோ, அல்லது அச்சட்டத்தின்கீழ் விதிக்கப் படும் கட்டளை, ஒழுங்கு அல்லது விதி ஆகியவற்றுள் எதற்கோ இருக் கிறதென்ற காரணத்தினுல் செயற்படாது போகாது. அத்தகைய சட்டம், கட்டளை, விதி அல்லது ஒழுங்கு ஆகியவை குடியேற்ற உரிமை நாட்டின் சட்டத்தின் ஒரு பகுதியாய் இருக்குமானுல், அவற் றைத் தள்ளவோ அல்லது திருத்தவோ குடியேற்ற உரிமை நாட்டுப் பாராளுமன்றத்திற்கு அதிகாரமுண்டு.

(3) குடியேற்ற உரிமை நாட்டுக்கு, தனது எல்லைக்குப் புறம்பாகச் செயற்படக் கூடிய சட்டங்களை இயற்றுவதற்கு முழு அதிகாரம் உண்டு என இது அறிக்கையிடுவதுடன் அதைச் சட்டமாகவும் இயற்றுகிறது.

(4) குடியேற்ற உரிமை நாடு ஒரு சட்டத்தை விரும்பிக் கேட்டு, அதற்கு இணங்கியதாக அதில் தெளிவாக அறிக்கையிட்டாலன்றி, இச்சட்டம் தொடங்கிய பிறகு ஐக்கிய அரசின் பாராளுமன்றம் இயற்றும் எந்தச்சட்டமும் குடியேற்ற உரிமை நாட்டின் சட்டத்தின் ஒரு பகுதியாய் இருக்க இயலாது; இருப்பதாகக் கருதவும் இயலாது.

‘ஈற்றயலான பிரிவு குடியேற்ற உரிமை நாட்டிற்கும் குடியேற்ற நாட்டிற்குமுள்ள வேறுபாட்டைத் தெளிவாகத் தீட்டுகிறது. அதன் படி இச்சட்டம் தொடங்கிய பிறகு ஐக்கிய அரசுப் பாராளுமன்றம் இயற்றும் எந்தச்சட்டத்திலும் ‘குடியேற்ற நாடு’ என்ற சொற்ருெடர் குடியேற்ற உரிமை நாட்டையோ, அல்லது அதன் ஒரு பகுதியாகிய மாநிலத்தையோ, அல்லது அரசையோ குறிக்காது.’

இதிலிருந்து, முடியரசே ஒன்றுபடுத்தும் ஆற்றலாகத் துலங்கு கிறதென்பதும், குடியேற்ற உரிமை நாட்டின் கவர்னர் ஜெனரல் அரசியாரின் நேர்ப்பிரதிநிதியாய் இருக்கிருரென்பதும், அவருக்கும் குடியேற்ற உரிமை நாட்டின் பாராளுமன்றத்திற்குமுள்ள தொடர்பு அரசியாருக்கும் ஐக்கிய அரசின் பாராளுமன்றத்திற்குமுள்ள தொடர்பை ஒத்ததென்பதும் தெளிவாகத் தெரிகின்றன. ஆகவே,

தான் ஐக்கிய அரசிலுள்ள அரசியாரின் அரசாங்கம், 'கனடாக்குடியேற்ற உரிமை நாட்டிலுள்ள அரசியாரின் அரசாங்கம்' போன்ற சொற்ருெடர்கள் சட்ட முறைப்படி வழக்கிலுள்ளன. ஆகவே, பொது நலக் கூட்டிலுள்ள ஒவ்வொரு நாட்டிற்கும் ஐக்கிய அரசிற்கு இருப்பது போல ஓர் அரசியலமைப்பு உண்டு. வெள்ளையர் வாழும் தன்னுட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடுகளில் எஞ்சியிருக்கும் மூன்றுள் நியூஜீலந்து ஒருமுக அரசாயும், ஆஸ்திரேலியாவும் கனடாவும் கூட்டாட்சி அரசுகளாயும் இருக்கின்றன. (இவற்றைப் பற்றிப் பிறகு விரிவாகப் பார்ப்போம்.) முதலில் இங்கு நியூஜீலந்தைப்பற்றிப் பார்ப்போம். பிறகு, ஐரோப்பாவின் இரு முக்கிய ஒருமுக அரசுகளைப்பற்றிப் பார்ப்பதற்கு முன் அயர், தென்னுப்பிரிக்கா ஆகிய இரண்டையும் பற்றி ஆராய்வோம். அவை இரண்டும் இப்போது பிரிட்டிஷ் பொதுநலக் கூட்டில் இல்லை.

## 5. நியூஜீலந்தில் ஒருமுக அரசு

பிரிட்டிஷ் குடியேற்ற நாடென்ற முறையில் நியூஜீலந்தின் வரலாறு 1840இல் தொடங்குகிறது. அப்போது அது கிரேட் பிரிட்டனின் ஆட்சியில் முறைப்படி சேர்க்கப்பட்டது. மாவ்ரிகளுடன் (Maoris) செய்யப்பட்ட உடன்படிக்கை அவர்களுக்கு நில உரிமை அளித்தது. நில உரிமை காரணமாகத் தொடர்ச்சியாய் நிகழ்ந்த மாவ்ரிப் போர்கள் 1870இல் முடிவடைந்தன. அது முதல் மாவ்ரி மக்கள் வெள்ளையர்களுடன் ஒற்றுமையாய் வாழ்ந்து வருகிருர்கள். அவர்கள் இப்போது வெள்ளையர்களின் சிறப்புரிமைகளை அனுபவித்து வருகின்றுர்கள். மாவ்ரிகள் தங்களுக்குள் நால்வரைப் பிரதிநிதிகளின் சபைக்குத் தேர்ந்தெடுக்கிருர்கள். அமைச்சரவையில் ஒரு மாவ்ரியாவது உறுப்பினராய் இருப்பது அண்மையிலிருந்து வழக்கமாகிவிட்டது. பேரரசுப் பாராளுமன்றத்தின் இரு சட்டங்கள் முதலில் தேர்ந்தெடுக்கப்படும் சட்ட மன்றத்தையும் (1853), பிறகு அதற்குப் பொறுப்புள்ள அமைச்சரவையையும் (1856) ஏற்படுத்தின. இச்சட்டங்கள் சில ஆண்டுகளாக வளர்ந்து வந்த பழக்கத்தைச் சட்டப்படி கலைத்துவிடவில்லை. அப்பழக்கத்தின்படி மாநில அவைகள் அரசாங்கத்தின் அலுவல்களில் பலவற்றைச் செய்து வந்தன. ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒவ்வோர் அவை இருந்தது. மாநிலங்கள் முதலில் ஆறும் பிறகு ஒன்பதும் இருந்தன அரசியலமைப்பைத்திருத்தும் அதிகாரம் (பேரரசுப் பாராளுமன்றத்திற்கு ஒதுக்கப்பட்ட அதிகாரங்களைத் தவிர) முழுவதும் சட்ட மன்றத்திடம் இருந்ததால், மாநில முறையை வைத்துக்கொண்டு, கூட்டாட்சி அரசாக மாறுவதா எனத்தீர்மானிக்கக் குடியேற்ற உரிமை நாட்டிற்கு அதிகாரம் இருந்தது.

1853-ஆம் ஆண்டின் சட்டப்படி நிறுவப்பட்ட பாராளுமன்றம் மூன்றுண்டுகளுக்குப் பிறகு இயற்றப்பட்ட இரண்டாவது சட்டத்தினுல் வலுப்பெற்றது. அது எவ்வளவு பெரிய ஒரு முகப்படுத்தும் ஆற்றலாய் விளங்கியதென்ருல், 1876க்குள் மாநில முறை முற்றிலும் மறைந்து, நியூஜிலந்து உண்மையான ஒருமுக அரசாய் மாறியது. அதன் மத்திய அரசாங்கம் இறைமையதிகாரமுடைய வேறு எந்த நிறுவனங்களையும் ஏற்றுக்கொள்ளவில்லை. நியூஜிலந்தின் எதிர்காலம் வேறு வகையாகவும் மாறியிருக்கலாம். ஏனெனில், முதலில் வெளியான மசோதா, அது ஆஸ்திரேலியப் பொதுநலக்கூட்டை அமைப்பதாகக் குறிப்பிட்டது. 'மாநிலங்கள்' என்ற சொல்லுக்கு இப்போது பொதுநலக்கூட்டின் பகுதிகளாய் இருக்கும் குடியேற்ற நாடுகளென விளக்கம் தரும்போது, மசோதாவின் ஆருவது பிரிவு நியூஜிலந்தை 'அது எப்போதாவது பொதுநலக் கூட்டின் பகுதியாக இருக்க வேண்டுமானுல், அல்லது மாறுமானுல்' என்று குறிப்பிடுகிறது. ஆனுல், இத்திட்டம் நிறைவேறவில்லை. நியூஜிலந்து ஒருமுக அரசாய்த் தனித்து நின்றது.

## 6. அயர்

ஒருமுக அரசுக்கு **அயர்** ஓர் அரிய எடுத்துக்காட்டு. ஏனெனில், அயர் ஓர் அரசியற்பகுதியாய் இருந்த போதிலும், 'அயர்லாந்து' என வழங்கப்படும் நிலப்பகுதியின் பரப்பளவு அதற்கில்லை. அயர்லாந்து பல நூற்றுண்டுகளாகக் கிரேட் பிரிட்டனுடன் தொடர்பு கொண்டிருந்த போது (ஐரிஷ் மக்கள் கருத்துப்படி அடிமைத்தனத்திலிருந்த போது), அது தனிப்பட்ட நாடாகவே எப்போதும் கருதப்பட்டு வந்தது. அதைப்பற்றிய பாராளுமன்ற மசோதாக்களும் சட்டங்களும் அதை அவ்வாறே கருதின. ஐரிஷ் பிரச்சினை தீர்க்கப்படாமலிருந்ததற்கு இது ஒரு காரணம் என்பதில் ஐயமில்லை. ஏனெனில், அங்கு வலிமையான வரலாற்றுச் சத்திகள் பிளவுகளை உண்டு பண்ணியிருந்தன. வட அயர்லாந்துக்கும் (அல்லது அல்ஸ்டருக்கும்) ஏனைய பகுதிக்கும் இடையே இனம், சமயம், குறிக்கோள்கள் ஆகியவற்றினுல் எழுந்த அடிப்படை வேறுபாடுகளின் விளைவாக, இப்பிளவு ஏற்பட்டது. பிரிட்டிஷ் தீவுகளின் உள் நாட்டு அமைதியைக் குலைத்து வந்த இந்த நிலையான இடையூற்றை அழிக்க மேற்கொண்ட ஒவ்வொரு முயற்சியும் அச்சிறு தீவின் இரு பகுதிகளின் எதிர்ப்பினுல் தோல்வியடைந்தது. **கிளாட்ஸ்டன்** (Gladstone) ஆட்சியில் கொண்டுவரப்பட்ட முந்திய சுய ஆட்சி மசோதாக்கள் சட்டப்புத்தகத்தில் இடம் பெறவில்லை. இறுதியாக ஒரு சட்டம் (1912-ஆம் ஆண்டின் சட்டம், பாராளுமன்றச் சட்டத்தினுல் பிரபுகள் சபை வலுவிழந்த காரணத்தினுல்) 1914இல் சட்டப் புத்தகத்தில் இடம் பெற்ற

போது, முதலில் அல்ஸ்டரின் எதிர்ப்பினுலும், இரண்டாவது, இடையில் முதல் உலகப்போர் இடையூருக மூண்டதாலும் அது செயற்படாத சட்டமாகவே இருந்தது.

போர் முடியும் வரை அயர்லாந்தை இரு பிரிவுகளாகக் கருத வேண்டிய தேவையைப் பிரிட்டன் உணரவில்லை. ஆனால், அதற்குள் காலம் கடந்துவிட்டது. ஏனெனில், போர்க்காலத்திலும் பிறகும் தெற்கு அயர்லாந்தில் தோன்றிய குழப்பங்கள், புரட்சிகள் ஆகியவை காரணமாகப் பழமையான சுய ஆட்சிக்கொள்கை வழக்கொழிந்து போயிற்று. மேலும், மக்கள் அதை ஏற்கவும் மறுத்தார்கள். ஆயினும், 1920இல் ஒரு சட்டம் நிறைவேற்றப்பட்டது. அது அயர்லாந்தை முதல் முறையாக இரு பிரிவுகளாகப் பிரித்தது. வட அயர்லாந்து மட்டும் இச்சட்டத்தை ஏற்றது. இதன் ஷரத்துகளின்படி இப்போதும் அப்பகுதி ஆளப்பட்டு வருகிறது. உள் நாட்டுப் போருக்குப் பிறகு தெற்கு அயர்லாந்து குடியேற்ற உரிமை நாட்டுச் சுய ஆட்சியை மட்டும் ஏற்க விரும்புவதாகக் கூறியது. 1922-ஆம் ஆண்டு சட்டம் இதை அதற்கு வழங்கியது. போர் முடிந்ததும் செய்யப்பட்ட உடன்படிக்கை உரிமை நாடான அயர்லாந்தை நிறுவியது. அதை நிறுவிய உடன்படிக்கை உரிமை நாடான அயர்லாந்தில் சேர மறுப்பதற்கும், 1920இன் சட்டத்தின்படி ஆளப்படுவதற்கும் வட அயர்லாந்திற்கு உரிமை அளித்தது. வட அயர்லாந்தும் அவ்வாறு செய்தது. இவ்வாறு அயர்லாந்து இரு பிரிவுகளாய்ப் பிரிந்து நூதனமாய்க் காட்சியளித்தது. அதில் ஒரு பகுதி கனடா அல்லது ஆஸ்திரேலியாவைப் போலச் சுதந்தரமாய் இருந்தது. மற்றொன்று, வட்டாரச் சுய ஆட்சியை மட்டும் தெரிந்துகொண்டு வெஸ்ட்மின்ஸ்டரிலுள்ள பேரரசுப் பாராளுமன்றத்திற்கு இன்னும் உறுப்பினர்களை அனுப்பிக் கொண்டிருக்கிறது.

அயர் எனப் பெயரிடப்பட்ட உரிமை நாடான அயர்லாந்தின் புதிய அரயசிலமைப்பு, 1937-ஆம் ஆண்டு, டிசம்பர்த் திங்கள், 29-ஆம் நாள் செயல் முறைக்கு வந்தது. அதற்கு முந்திய ஜூலைத் திங்களில் நிகழ்ந்த குடியொப்பம் அதை ஏற்றுக்கொண்டது. புதிய அரசியலமைப்பு, கவர்னர் ஜெனரலின் பதவியை அழித்து, அதற்குப் பதிலாக அயர்லாந்து (அயர்) நாட்டின் தலைவர் பதவியை ஏற்படுத்தியது. ஆனால், 'குடியேற்ற உரிமை நாடுகள் தங்கள் கூட்டுறவின் சின்னமாக அரசரை ஏற்றுக்கொள்ளும் வரை' அயர்லாந்து அவரை அரசராக முறைப்படி ஏற்றுக்கொண்டது. அதைப் பொறுத்த வரை அயர்லாந்து பிரிட்டிஷ் பொதுநலக் கூட்டு நாடுகளுடன் தொடர்பு வைத்துக்கொண்டிருந்ததாகக் கருதலாம். ஆனால், இரண்டாம் உலகப் போரின்போது அது முற்றிலும் நடுவு நிலை வகித்தது. பழைய வெறுப்புக் காரணமாக அவ்வாறு செய்ததெனவும் கூறலாம்.

1937-ஆம் ஆண்டின் அரசியலமைப்பில் காணப்படும் சொற்கள் அது சுதந்தரமடைந்த ஒரு குடியரசென்பதைக் காட்டுகின்றன என்பது உண்மைதான். ஏனெனில், திரு. டி வேலரா அதைப்பற்றித் தமது சொற்போரின் போது கூறியது போல, அயர்லாந்துக் குடியரசை அறிக்கையிட வேண்டுமானால், அதிலுள்ள 'ஒரு காற்புள்ளியைக் கூட' மாற்ற இயலாது. அவர் கூறியது உண்மையாய் நிகழ்ந்து விட்டது. 1948-ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்களில் அயர் முதல் அமைச்சர் வெளி நாட்டுத் தொடர்புகளின் சட்டத்தை (External Relations Act) உடைத்தெறிந்து, அது வாயிலாகப் பிரிட்டிஷ் பொதுநலக்கூட்டுடன் கொண்டுள்ள இறுதி இணைப்பையும் தமது அரசாங்கம் அகற்றிவிடுமென அறிவித்தார். இதன் விளைவாக, 1948இல் சுதந்தர அயர்க்குடியரசு நிறுவப்பட்டது. மேலும், இறுதியில் நாடு முழுவதும் ஒன்றாக இணைந்துவிடும் என்று எதிர்பார்ப்பதனால், அரசியலமைப்பு அயர்லாந்து முழுவதையும் ஓர் ஒருமுக அரசெனக் குறிப்பிடுகிறது.

## 7. தென்னாப்பிரிக்கா

ஒரு முக அரசுக்குத் தென்னாப்பிரிக்கா ஒரு வகை நூதனமான எடுத்துக்காட்டாய் விளங்குகிறது. அது சில விதங்களில் கூட்டாட்சி அரசியல் அமைப்பின் தோற்றத்தைப் பெற்றுள்ளது. ஆனால், உண்மையில் அதில் கூட்டாட்சி முறை எவ்வளவு குறைந்த அளவில் அமைந்திருக்கிறதென்றால், அதை அரைக்கூட்டாட்சி அரசென வழங்குவதுங்கூட முற்றிலும் தவறாகும். தென்னாப்பிரிக்காவில் தோன்றிய இயக்கங்களும் தர்க்கங்களும் இறுதியில் 1910இல் ஓர் ஐக்கியத்தை நிறுவின. இவற்றைப் பார்த்தவர் எவரும் கனடா அல்லது ஆஸ்திரேலியாவின் மாதிரியைப்போன்ற ஒரு கூட்டாட்சி முறை அமைக்கப் படுமென எண்ணியிருப்பர். அக்காலத்தில் ஆப்பிரிக்க அரசியல் வல்லுநர் சிலர், உண்மையில் அத்தகைய கூட்டாட்சி முறையை நிறுவ எண்ணினர். ஆனால், அங்குள்ள நாட்டினங்களுக்கும் இனங்களுக்குமிடையே நிகழ்ந்த பூசல்களினால் மூண்ட அரசாங்கப் பிரச்சினைகள் காரணமாக, அரசியலமைப்பை எழுதிய சபை கூடுமான வரை மத்திய அரசாங்கத்தை வலுப்படுத்தும் நோக்குடனே அதை எழுதியது. கூட்டாட்சி முறையிலிருப்பதைவிட ஒருமுக முறையில் மத்திய அரசாங்கம் மிகுந்த அதிகாரம் பெற்றிருக்கும். இது இதற்குள்ளாகத் தெளிவாய் விளங்கியிருக்கும் அல்லவா ?

எனவே, சிறிது காலம் படைக்கலந்தாக்கிப் போரிட்ட நான்கு தனிப் பகுதிகளாலான தென்னாப்பிரிக்க ஐக்கியம் உண்மையில் தனக்குக் கீழ்ப்பட்ட எந்த நிறுவனத்தினாலும் கட்டுப்படாத மத்திய அரசாங்கத்தையுடைய ஒரு முக அரசாய் மாறியது. நான்கு பழைய

குடியேற்ற நாடுகளும் ஐக்கியச் சட்டத்தின் பயனுக நன்னம்பிக்கை முனை (Cape of Good Hope), நேட்டால் (Natal), டிரான்ஸ்வால் (The Transvaal), ஆரஞ்சு உரிமை அரசு (Orange Free State) என வழங்கப்பட்டன. இவற்றுள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு மாநில அவை உண்டு. அதன் அதிகாரங்கள் அரசியலமைப்பில் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளன. ஆனால், அரசியலமைப்பு அவற்றின் கீழ், 'மாநிலச்சபை விதிக்கும் எந்தக் கட்டளையும், (ஐக்கியப்) பாராளு மன்றத்தின் எந்தச் சட்டத்திற்கும் முரணாய் இல்லாத வரைக்குமே மாநிலத்தில், மாநிலத்திற்காகச் செயற்படுத்தப்படும்,' எனக் குறிப்பிடு கின்றது.

இவ்வாறு தென்னாப்பிரிக்கர்கள் கனேடியர் அல்லது ஆஸ்திரேலி யரின் முன் மாதிரியைப் பின் பற்றாமல், 1707இல் ஆங்கிலேயரும் ஸ்காட்டுகளும் காட்டிய வழியில் சென்றார்கள். அங்குக் கூட்டாட்சி முறையின் தோற்றத்தை ஓரளவு செனட்டில் காணலாம். அதில் (நியமிக்கப்பட்டவர்களைத் தவிர) ஒவ்வொரு மாநிலத்திலிருந்தும் எட்டு உறுப்பினர் இருக்கின்றனர். ஆனால், அவர்கள், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செனட்டு உறுப்பினர்களைப்போல, மாநிலத்தின் உண்மையான பிரதிநிதிகளல்லர். உண்மையில் தென்னாப்பிரிக்காவின் மாநிலங்கள் வெறுந்தொகுதிகளே.

ஒருமுக அரசு என்ற முறையில் தென்னாப்பிரிக்காவில், ஐரோப் பிய நாடுகளில் காண இயலாத பல சிக்கல்களைக் காணலாம். நாம் வெள்ளையரின் தன்னாட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடுகளென வழங்கக் கூடிய கனடா, ஆஸ்திரேலியா, நியூஜீலந்து ஆகிய நாடு களிலும் இக்சிக்கல்களைக் காண்பதரிது. இனப் பிரச்சினைகள் காரண மாகவும், பிரிட்டிஷ் முடியரசின்கீழுள்ள ஐக்கியத்தின் உட்புறமும் வடபகுதியிலும் உள்ள நிலப்பகுதிகளின் நிலையைப்பற்றிய ஐயப்பாடு காரணமாகவும் இச்சிக்கல்கள் தோன்றுகின்றன. ஐக்கியத்தின் உட்புறத்தில் சுவாசிலாந்து காப்பரசும் (Protectorate of Swaziland), பாசுட்டோலாந்து (Basutoland) பகுதியும் உள்ளன. வடக்கில் பெக்குவானலாந்து (Bechuanaland) காப்பரசு இருக்கின்றது. வெஸ்ட் மின்ஸ்டர் இவற்றை ஒரு ஹைகமிஷனர் வாயிலாகக் கட்டுப்படுத்திவரு கின்றது. அவர் குடியரசில் பிரிட்டிஷ் அரசியல் தூதுவராயும் பணி யாற்றுகிறார். மேலும், முந்திய ஜெர்மானியக் குடியேற்ற நாடாகிய தென்மேற்கு ஆப்பிரிக்கப் பிரச்சினையையும் தீர்க்க வேண்டியிருந்தது. பழைய சர்வதேச சங்கத்தின் (League of Nations) ஆட்சி உரிமைக் கட்டளைப்படி ஐக்கியம் அப்பொறுப்பை ஏற்றுக்கொண்டது. இரண்டா வது உலகப் போருக்குப் பிறகு ஆட்சியுரிமை பெற்ற பகுதியை ஐக்கி யத்துடன் இணைப்பது ஐக்கிய அரசாங்கத்தின் கொள்கையாய் இருந் தது. ஆயினும், இது ஐக்கிய நாடுகளின் சங்கத்தின் பொறுப்பாண்

மைத் (Trusteeship) திட்டத்திற்கு முரணாய் இருந்தது. இக்கொள்கையைப் பின்பற்றி ஐக்கிய அரசாங்கம் தனது வழக்கை ஹேகிலுள்ள சர்வதேச நீதி மன்றத்தின் முன் 1946இல் சமர்ப்பித்தது. ஆனால், அத்திட்டத்திற்கு நீதி மன்றத்தின் முழு ஆதரவும் கிட்டவில்லை. இத் தீர்ப்புக்கு மாறாக, அது தென்மேற்கு ஆப்பிரிக்காவை ஒழுங்கு முறைப்படி இணைக்காமல், அதை ஐக்கியத்தின் பாராளுமன்ற முறையினுள் கொண்டு வந்து, அதற்குச் சட்ட சபையிலும் (House of Assembly) செனட்டிலும் இடங்கள் வழங்கியது. 1950இல் இரு சபைகளுக்கும் புதிய உறுப்பினர்கள் முறைப்படி தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். தென்மேற்கு ஆப்பிரிக்காவின் இறுதி நிலை பற்றிய பிரச்சினை தீர்க்கப்படாமலே இருந்தது. 1962இன் இறுதியிலுங்கூடத் தென்னாப்பிரிக்கா அதைக் குடியரசுடன் இணைப்பதற்கு உரிமை கொண்டாடியது.

ஐக்கிய அரசாங்கம் இரு ரொடீஷியாக்களின் (Rhodesias) எதிர்காலத்தைப்பற்றிய பிரச்சினையிலும் ஈடுபட்டது. 1924இல் தன்னாட்சி பெற்ற குடியேற்ற நாடாகிய தென்ரோடீஷியா, ஐக்கியத்துடன் சேர்ந்துவிடும் போலத் தோன்றியது. ஆனால், உண்மையில் அது வடரோடீஷியா, நியாஸாலாந்து (Nyasaland) ஆகியவற்றுடன் சேர்ந்து கூட்டரசை அமைக்கும் முயற்சியில் ஈடுபட்டது. அக் கூட்டரசு 1953இல் உருவானது. அதைப்பற்றி 14-ஆம் இயலில் பார்ப்போம்.

ஐக்கிய அரசாங்கம் தீவிரமாகப் பின்பற்றிவரும் இனப் பிரிவினைக் (Apartheid) கொள்கை காரணமாக மிகச் சிக்கலான பிரச்சினைகள் தோன்றலாயின. ஆப்பிரிக்காவில் இப்போது தேசீய உணர்ச்சி எங்கும் பொங்கி எழுந்து வருவதாலும், ஆப்பிரிக்க நாடுகள் பல உரிமை பெற்று வருவதாலும், இத்தகைய கொள்கை உலக மக்களின் உள்ளத்தைப் புண்படுத்துவதுடன், குறிப்பாகப் பிரிட்டிஷ் பொது நலக்கூட்டு முழுவதற்குமே ஒரு பெரிய அரசியல் பிரச்சினையை உண்டுபண்ணுகிறது. அது தவிர, இப்போதெல்லாம் பொது நலக் கூட்டுத் தலைமை அமைச்சர்கள் கூடும் கூட்டங்களில் எல்லாம் ஆப்பிரிக்க நாடுகளின் பிரதமர்களும் கலந்துகொள்கின்றனர்கள்.[1] எனவே, இதனால் பெருஞ்சிக்கலான நிலை ஏற்பட்டது. பொதுநலக் கூட்டிலிருந்து விலகுவதே சிக்கலைத் தீர்க்கும் ஒரே வழியென ஐக்கிய அரசாங்கம்

1. 1962-ஆம் ஆண்டு, செப்டெம்பர்த் திங்களில் இலண்டனில் கூடிய பொதுநலக் கூட்டுத் தலைமை அமைச்சர்களின் மாநாட்டில் கலந்துகொண்ட 15 பொது நலக்கூட்டு நாடுகளில் கனடா, ஆஸ்திரேலியா, நியூஜீலந்து ஆகிய மூன்றுமே வெள்ளையரின் குடியேற்ற உரிமை நாடுகளாய் இருந்தன.

முடிவு செய்தது. அது 1960இல் வெள்ளை வாக்காளர்களின் குடியொப்பத்திற்கு விடப்பட்டது. அதில் குறுகிய பெரும்பான்மை எண்ணிக்கையுள்ள (52 சதவிகிதம்) வாக்காளர்கள், குடியரசை நிறுவவேண்டுமென்பதை ஆதரித்தார்கள். இதன் விளைவாக 1961இல் தென்னுப்பிரிக்கா பொதுநலக் கூட்டிலிருந்து விலகியது. இவ்வாறு அது சுதந்தரக் குடியரசாய் இன்று இருக்கின்றது. இப்போது அது பொதுநலக் கூட்டின் உறுப்பாய் இல்லை.

1961இல் இயற்றப்பட்ட 'தென்னுப்பிரிக்கக் குடியரசை அமைக்கும் சட்டம்' இம்மாற்றத்தைச் சட்ட முறையில் நிறைவேற்றியது. அதன்படி முடியரசுக்கும் கவர்னர் ஜெனரலுக்கும் பதிலாகத் தலைவர் ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். தென்னுப்பிரிக்காவிற்கு 'ஐக்கியம்' என்ற பெயருக்குப் பதிலாகக் 'குடியரசு' என்ற பெயர் வழங்கப்பட்டது. எனினும், புதிய சட்டம் அரசின் உள் அமைப்பை மாற்றியமைக்கவில்லை. அது ஒருமுக அரசாய் அமைந்துள்ளது. அதன் இக்காலப் போக்கைப் பார்த்தால், வருங்காலத்தில் மத்திய அரசாங்கம் இன்னும் அதிகமான அதிகாரங்களைப் பெறும் என்பது தெரிகின்றது.

## 8. பிரான்ஸில் ஒருமுக அரசு

ஒருமுக அரசென்பது பிரெஞ்சு மக்களின் வரலாற்றிலும் உணர்ச்சியிலும் வேரூன்றியிருக்கும் ஒரு வகை அரசியலமைப்பாகும். பிரெஞ்சு முடியரசின் தொடக்கக் காலத்திலிருந்தே அரசர் நிலப் பகுதிகளின்மேல் செலுத்தி வந்த அதிகாரம் அவருக்குக் கீழுள்ள நிலமானியப் பிரபுகளின் அதிகாரத்தைவிடக் குறைவாய் இருந்ததால், அவர் தமக்குச் சொந்தமல்லாத நிலப்பகுதிகளை எல்லாம் வென்று தம் பகுதிகளுடன் சேர்த்துக்கொண்டு வந்தார்; அதாவது, உண்மையில் நிலமானிய முறையைச் சீர் குலைத்து வந்தார். பிரபுகள் தங்கள் அரசியல் அதிகாரத்தை முழுவதும் இழக்கும் வரை இது நிகழ்ந்துகொண்டே வந்தது. இறுதியில் 14-ஆம் லூயி 'நாமே அரசு' எனக் கூறிய போது அது உயர்வு நவிற்சியாகத் தெரியவில்லை. எல்லா அரசியல் அதிகாரமும் அரசரிடமே குவிந்திருந்ததால், புரட்சி அதை அழித்ததும் அதனுல் என்ன விளைவுகள் ஏற்பட்டிருக்கும் என்பதை ஒருவாறு ஊகிக்கலாம். புதிய அரசை அமைப்பதற்கு ஆதாரமாக வலிமை மிக்க வட்டார நிறுவனங்கள் அங்கு அப்போது இல்லை. நாடுதான் கூட்டவையாய் (Corporation) இருந்தது. புரட்சியின் விளைவாக அதிகாரக் குவிப்பின் மரபும், தனி மனிதனின் உரிமைகளையும் மக்கள் இறைமையையும் வலியுறுத்தும் தத்துவமுமே நிலவின. இம்மரபும் தத்துவமும் ஒரு போதும் மறையவில்லை. பிரெஞ்சு

நூலாசிரியர் ஒருவர் கூறுவது போல, இவை நிலவியது காரணமாகவே, 'எல்லாப் பிரெஞ்சு அரசியல் முறைகளும் ஒற்றுமையையும் ஒரே வகை அதிகாரங்களையும் நோக்கி எப்போதும் தாமாகவே விரைந்து செல்கின்றன.'

இக்கொள்கைகள் எல்லாம் 1875 முதல் 1940 வரை நிலைத்திருந்த மூன்றாவது குடியரசின் அமைப்பில் அடங்கியிருந்தன. பாராளுமன்றத்தை வலியுறுத்திய அந்தக் குடியரசு, ஓரளவுக்கு மக்கள் இறைமையை மறைத்து, (புரட்சிக் காலத்தில் வழக்கமாக நடப்பது போல) நாட்டுத் தலைவரின் தேர்தலில் மக்கள் வாக்கெடுப்பை (அல்லது குடியொப்பத்தை) நிறுத்திய போதிலும், அது பிரெஞ்சு அரசைப் பன்முகப்படுத்த (Decentralize) இல்லை. உண்மையில் அது அரசியல் அதிகாரக் குவிப்புக்குத் தலைசிறந்த எடுத்துக்காட்டாய்த் துலங்கியது. எல்லா அரசாங்க அதிகாரங்களும் பாரிஸிலுள்ள சட்டமன்ற, நிருவாகத்துறை உறுப்புகளிடம் இருந்தன. இறைமை அதிகாரமுடைய துணை நிறுவனங்கள் அங்கு இல்லை. பிரான்ஸ், டிபார்ட்மென்டுகள் (Departments), கம்யூன்கள் (Communes), அராண்டிஸ்மான்கள் (Arrondissements), கோட்டங்கள் (Cantons) எனப் பிரிக்கப்பட்டிருந்தது. (இறுதியில் கூறிய இரண்டும் தேர்தல் பரப்புகளே.) ஆயினும், அவற்றின் வகையும் அளவும் பாராளுமன்றச் சட்டத்தையே சார்ந்திருந்தன. மத்திய அரசாங்கம் தன் விருப்பப்படி அழிக்க இயலாத வட்டார அரசாங்கமோ, அல்லது நிலப்பிரிவோ அங்கு இல்லை. வட்டார அதிகாரிகளின் அதிகாரங்கள் எல்லாம் நாட்டின் சட்டத்தினால் வரையறுக்கப்பட்டிருந்தன. அவர்களின் செயல்களை மேற்பார்வையிட மாநிலத் தலைவர் (Prefect) என்ற மத்திய அரசாங்கத் தூதுவர் ஒருவர் பணியாற்றி வந்தார்.

இரண்டு உலகப்போர்களுக்கும் இடையே பிரான்ஸில் குடியரசின் அரசியல் நிறுவனங்களின் வேலைகளைப்பற்றி ஐயப்பாடும் அமைதியின்மையும் நிலவின. அவ்வுணர்ச்சிகளின் நடுவே அரசின் அதிகமான அதிகாரக் குவிப்பின் கொடுமையினால், ஒரு கொந்தளிப்பு ஏற்பட்டது. அதன் விளைவாகச் சீர்திருத்தத் திட்டங்கள் பலவற்றுள் மண்டலக் கொள்கை (Regionalism) எனும் இயக்கமும் தோன்றியது. பல அலுவல்களைச் செய்வதிலிருந்து மத்திய அரசாங்கத்தை விடுவிப்பதற்காகப் பிரான்ஸைப் பல வட்டாரப் பகுதிகளாகப் பிரித்து, அவற்றிற்கு உண்மையான வட்டாரச் சுய ஆட்சி வழங்குவதே அதன் நோக்கமாகும். முதல் உலகப் போருக்குப் பிறகு பிரெஞ்சு அரசாங்கத்தை நெருங்கிய பல குழப்பமான பிரச்சினைகளுக்கு இடையில் இவ்வியக்கம் சட்டமுறையான முன்னேற்றம் பெற இயலவில்லை. இரண்டாவது உலகப்போருக்குப் பிறகும் இது புதுப்பிக்கப்பட்டதாகத் தெரியவில்லை. 1946 அக்டோபரில் குடியொப்பத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட நான்

காம் குடியரசின் அரசியலமைப்பானது, மூன்றும் குடியரசில் இருந்ததைவிட வட்டாரங்களுக்கு அதிக அதிகாரங்களைப் பகிர்ந்து கொடுக்கவேண்டுமென எழுந்த வேண்டுகோளையும் பெரும்பாலும் ஏற்றுக்கொண்டது. ஏனெனில், நான்காவது குடியரசின் அரசியலமைப்பின் பத்தாவது இயலின்படி, குடியரசு பிரிக்க முடியாதவாறு ஒன்றாய் இருந்தபோதிலும் அது கம்யூன்களையும் டிபார்ட்மென்டுகளையும், ஏற்றுக்கொண்டு, அவை முன்னால் அனுபவித்து வந்த உரிமைகளைச் சட்டமுறைப்படி அவற்றிற்கு வழங்கியது. ஆனால், இது உண்மையில் பிரெஞ்சு வட்டார அரசாங்கத்திற்கு உயிரளித்து, அரசின் துறைகளுக்கும் வட்டார ஆட்சி நிறுவனங்களுக்கும் இடையே நெருங்கிய கூட்டுறவை ஏற்படுத்தும் நோக்கத்தைத் தெரிவித்தது. பிரெஞ்சு ஐக்கியம் (L'union Francaise) என்றதொரு புதிய நிறுவன அமைப்பு வாயிலாகக் கடல் கடந்த நிலப்பகுதிகளுக்கும் (des collectivites territoriales) பிரான்சுக்கும் தொடர்பு ஏற்படுத்துவதற்காக அரசியலமைப்பு வழி வகுத்தது. ஆயினும், இது பிரெஞ்சு அரசின் ஒருமுகத் தன்மையைக் குறைக்கவில்லை.

ஐந்தாவது குடியரசு தோன்றிய போதும் அதன் ஒருமுக இயல்பு பாதிக்கப்படவில்லை. 1958 செப்டெம்பரில் நிகழ்ந்த குடியொப்பத்தில் மக்கள் ஐந்தாவது குடியரசை மிகப் பெரும்பான்மையான வாக்குகளினால் ஆதரித்தார்கள். இப்புதிய அரசியலமைப்பு, பெரும்பாலும் நிருவாகத்துறையில் முக்கிய அரசாங்க முறை மாற்றங்களைச் செய்தது. மேலும், இது பிரெஞ்சு சமுதாயம் (French Community) என்ற பெயரில் பிரெஞ்சு ஐக்கியத்தைத் திருத்தி அமைத்தது. இதைப்பற்றிப் பிறகு 9,11ஆம் இயல்களில் பார்ப்போம். பிரான்ஸ் ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயத்தில் (European Economic Community) சேர்வதால் கூட்டாட்சிக் கூறுகள் இறுதியில் தோன்றக்கூடுமெனத்[1] தெரிந்தபோதிலும், தலைவர் டி **கால்** பிரான்ஸின் தேசிய ஒற்றுமையை வலியுறுத்தினார்.

## 9. இத்தாலிய முடியரசும் குடியரசும்

ஒன்றுபட்ட சுதந்தர இத்தாலியை உண்டுபண்ண நிகழ்ந்த போராட்டம் ஒரு வகையில் **ஆஸ்ட்ரகாத் தியோடோரிக்** (Theodoric the Ostrogoth) என்பவரின் ஆட்சியைப்போல அவ்வளவு பழமையானதும் மற்றொரு வகையில் இரண்டாவது உலகப்போரைப் போல அவ்வளவு புதுமையானதுமாய் இருக்கின்றது. மேற்கில் ரோமானியப் பேரரசு சரிந்ததன் பிறகு இத்தாலியை ஒன்றுபடுத்த முதன்முதலில் முயற்சி செய்தவர் தியோடோரிக்கே எனலாம்.

1. 15-ஆம் இயலைப் பார்க்க.

19-ஆம் நூற்றுண்டின் நடுப்பகுதியில் வாழ்ந்த **கவூர்** (Cavour) என்பவரின் காலம்வரை வேறு எவரும் தியோடோரிக்கைப்போலத் தமது கொள்கையை ஏறக்குறைய வெற்றி பெறும் அளவிற்குச் செயலாற்றவில்லை. தியோடோரிக்குக்குப் பிறகு 14 நூற்றுண்டுகள் கழித்து அப்போராட்டம் தொடர்ந்து நடைபெற்றது. அப்போது இத்தாலிய மக்கள் பாஸிஸ வல்லாட்சியின் இருளிலிருந்தும், நாஜி ஆக்கிரமிப்பெனும் பிடியிலிருந்தும் விடுதலை பெறுதற்காகப் பெரும்போராட்டம் நிகழ்த்தினுர்கள். மேற்கில் ரோமானியப் பேரரசின் வீழ்ச்சிக்கும், 19-ஆம் நூற்றுண்டில் மஜினி, கவூர், கரிபால்டி, விக்டர் எமானுவேல் மன்னர் ஆகிய இத்தாலியத் தேச பத்தர்களின் எழுச்சிக்கும் இடையே இத்தாலி தனது சுதந்தரத்தையோ, அல்லது ஒற்றுமையையோ பெறவில்லை. 1815இல் நிகழ்ந்த நெப்போலியன் வீழ்ச்சியினுல், அதற்கு யாதொரு பயனும் ஏற்படவில்லை. அதன் பிறகு சில ஆண்டுகளாக, இத்தாலியை நசுக்கி வந்த மெட்டார்நிக்கு அதை ஒரு ‘புவியியல் விளக்கம்’ (geographical expression) எனக் கூறிவந்தார். 1848இல் இத்தாலியின் எட்டு அரசுகளுள் ஏழு அரசுகளின் தலைவர்கள் தங்கள் நாட்டு மக்களுக்கு அரசியலமைப்புகளை வழங்க வேண்டிய நெருக்கடி ஏற்பட்டது. ஆனுல், புரட்சியின் பிறகு தோன்றிய கடுமையான அடக்கு முறையில் ஸார்டீனியா மட்டும் தனது அரசியலமைப்பை மிக வருந்திக் காக்க முடிந்தது. மற்றவை எல்லாம் மீண்டும் வலுப்பெற்று எழுந்த ஆஸ்திரியாவின் காலினடியில் மிதிபட்டு உருவழிந்தன.

1848-ஆம் ஆண்டின் ஸார்டீனிய அரசியலமைப்பு (The Statuto) அழியாமல் பிழைத்தது. அதனுல், நாட்டின் மறு உயிரெழுச்சியின் போது (Il Risorgimento) நூற்றுண்டின் நடுவில் நிகழ்ந்த தோல்விகளின் பிறகு தோன்றிய அரசியல் ஒருமைப்பாட்டின் காலத்திலும் பெரும்பயன் ஏற்பட்டது. 1859இல் ஸார்டீனியர்கள் பிரான்ஸுடன் சேர்ந்துகொண்டு, ஆஸ்திரியர்களை லம்பார்டியிலிருந்து வெளியே விரட்டினுர்கள். அப்போது லம்பார்டி ஸார்டீனியாவுடன் இணைந்திருந்தது. அடுத்த ஆண்டு டஸ்கனியும், மத்திய இத்தாலியிலிருந்த கோமானுட்சிப் பகுதிகளும் (Duchies) வடக்கு இத்தாலியுடன் இணைய இணங்கியதும் அவை இணைக்கப்பட்டன. இதற்கிடையில் கரிபால்டி சிசிலியையும் நேப்பிள்ஸையும் பூர்போன் மரபின் கொடுங்கோன்மையிலிருந்து விடுவித்துக்கொண்டிருந்தார். 1861இல் தெற்கு, வடக்குடன் இணைந்தது; முதல் இத்தாலியப் பாராளுமன்றம் கூடியது. ஒன்றுபட்ட அரசுக்கு வெளியில் வெனிஸும் போப்பாண்டவரின் அரசுகளும் இருந்தன. 1866இல் நடைபெற்ற ஆஸ்திரிய பிரஷ்யப் போரின் விளைவாக வெனிஸும் 1870இல் நிகழ்ந்த பிராங்கோ பிரஷ்யப் போரில் பிரெஞ்சுப்படைகள் ரோமிலிருந்து வெளியேறியதன் பயனுகப் போப்பாண்டவரின் அரசுகளும் சேர்க்கப்பட்டன.

'டிரீஸ்ட்'டும் (Trieste) அதைச் சுற்றியுள்ள பகுதிகளும், டிரென்டினோவும் (Trentino) ஆகிய இரு பரப்புகளைத்தவிர மற்றெல்லாப் பகுதிகளும் முற்றிலும் ஒற்றுமை அடைந்துவிட்டன. மீட்கப்படாத இத்தாலி (Italia Irredenta) என்று இத்தாலியர்கள் வழங்கிய இப்பகுதிகள் முதல் உலகப் போரின் முடிவுவரை ஆஸ்திரியரின் கையில் இருந்தன. போருக்குப் பிறகுதான் இவை இத்தாலிய முடியரசுடன் இணைக்கப்பட்டன.

படிப்படியாக ஒற்றுமை அடைந்ததனால், இத்தாலி ஒரு கூட்டாட்சியாய் மாறியிருக்கலாம். ஒவ்வொரு பகுதியும் சில உரிமைகளைத் தன்னிடம் வைத்துக்கொண்டு பிறவற்றைப் பொது நலனுக்காக ஒரு கூட்டாட்சி அரசாங்கத்திடம் ஒப்படைத்திருக்கலாம். உண்மையில் கவூர் உட்பட, இத்தாலியர் பலர் கூட்டாட்சியை நிறுவ வேண்டுமென ஒரு காலத்தில் நினைத்தனர். இத்தாலியின் பல பகுதிகளின் பல திறப்பட்ட வரலாறு, நிலைமைகள் இவை காரணமாக, அது ஒன்றுபட்ட நாளிலிருந்து, இப்போது காணப்படுவது போல அவ்வளவு மாற்றங்கள் அங்குத் தோன்ற மாட்டாவென நூலாசிரியர் சிலர் அன்று முதல் கருதி வந்துள்ளனர். அதற்குப் பதிலாக, ஸார்டீனிய முடியரசு இத்தாலிய முடியரசாய் விரிவடைந்த போது, அதன் அரசியலமைப்பும் புதிய நிலப்பகுதிகளில் செயற்படுத்தப்பட்டது. அமெரிக்க ஐக்கிய நாடுகளும் கனடாவும் மேற்கு நோக்கிப் பரவிய போது செய்ததுபோல இத்தாலியர்களும் தமது நாட்டின் வளர்ச்சிக்கேற்பப் புதிய அரசுகளைக் கூட்டாட்சியில் சேர்த்திருக்கலாம். அதற்குப் பதிலாக, அவர்கள் பிரிட்டனின் ஐக்கியச் சட்டங்களைப் (Acts of Union) பின் பற்றி, பல பகுதிகளைக் கூட்டாட்சியாக அமையாது, ஒரே அரசினுள் இணைத்து ஒன்றுபடுத்தினார்கள்.

அண்மைக் காலத்தில் நிகழ்ந்த புரட்சிகரமான மாற்றங்களிலுங்கூட, அரசியல் ஒருமுகத் தன்மை இத்தாலிய அரசின் இன்றியமையாத இயல்பாய் இருந்து வந்தது. முசோலினி தமது வல்லாட்சியின் வெற்றிக்கு அடிப்படையாக அதைப் பேராவலுடன் பேணி வந்தார். இறுதியாக எழுதப்பட்டுள்ள இத்தாலிய அரசியலமைப்பிலும் அது சிறிது மாறுபட்ட வடிவில் மீண்டும் தோன்றியுள்ளது. இத்தாலிய மக்கள் 1946-ஜூன் திங்களில் நடைபெற்ற குடியொப்பத்தில் ஒன்பது நூற்றாண்டுகளாக ஆண்டு வந்த ஸவாய் (Savoy) மரபை வெளியேற்றினார்கள். மறு உயிரெழுச்சியின் (Risorgimento) காலத்தில் மஜ்ஜீனி எக்கொள்கைகளுக்காக வீணாகப் போராடினாரோ, அக்குடியரசுக் கொள்கைகளையே அவர்கள் இறுதியில் ஏற்றுக்கொண்டார்கள். இவ்வாக்கெடுப்பில் வாக்காளர்களுள் 90 சதவிகிதம் பேர் வாக்களித்தனர். இதில் முதல் முறையாகப் பெண்கள் வாக்களித்தார்கள். வாக்கெடுப்பில் கிடைத்த பெரும்பான்மை மிகக் குறைந்

ததுதான். அதன் விளைவாகப் பிறந்த 1947-ஆம் ஆண்டின் குடியரசு அரசியலமைப்பு, முடியரசின் அடிப்படைகளை அழித்து, முசோலினியின் சர்வாதிகார முறையின் அடையாளங்களை எல்லாம் தகர்த்த போதிலும், இத்தாலியின் ஒருமுக அரசுத் தன்மையைக் கைவிடவில்லை. ஏனெனில், அரசியலமைப்பின் ஐந்தாவது விதி, 'இத்தாலியக் குடியரசு ஒன்று பட்டதும் பிரிக்க முடியாததும் ஆகும்,' எனத் தெளிவாகக் கூறுகிறது.

ஆயினும், புதிய அரசியல் அமைப்பு, அதிகாரத்தைப் பன்முகப் படுத்துதலை அனுமதிக்கிறது. இது பழைய அரசியலமைப்பில் இல்லை. மேலே எடுத்துக்காட்டிய ஐந்தாவது விதி, குடியரசு 'வட்டாரச்சுய ஆட்சியை ஏற்று, அதன் வளர்ச்சியை ஆதரிக்கிறது,' எனக் கூறுகிறது. பின் காணப்படும் சில விதிகள் (114–133) மண்டல நிறுவனத்தின் வடிவையும் அலுவல்களையும் எடுத்துக் கூறுகின்றன. பத்தொன்பது மண்டலங்களின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. இவற்றுள் சிசிலி, ஸார்டீனியா உட்பட ஐந்து மண்டலங்களுக்குத் தனிச் சிறப்பு நிலை அளிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு மண்டலத்திலும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சபை இருக்க வேண்டும். அது ஒரு நிருவாகக் குழுவையும் (la giunta regionale) நாட்டின் தலைவரையும் தேர்ந்தெடுக்கும். இந்த மண்டல நிறுவனங்களின் அதிகாரங்களும் அலுவல்களும் பட்டியல்களில் கூறப்பட்டுள்ளன. ஆனால், பொதுவாக அவை பிரிட்டனிலுள்ள பெரிய வட்டார அரசாங்கங்களின் (மாவட்டம், மாவட்ட நகரங்கள்) அதிகாரங்களையும் அலுவல்களையும்விட அதிகமாய் இல்லை. மேலும், இத்தாலிய மண்டலங்களின் உரிமைகள் அரசியலமைப்புச் சட்டத்தின் ஒரு பகுதியாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பினும், அவை கூட்டாட்சியின் இயல்பை அரசாங்க அமைப்பினுள் புகுத்துவதாகக் கூற இயலாது. ஆகவே, புதிய குடியரசின் அரசியலமைப்பு, மரபு வழி வந்த மன்னரை நீக்கி, அவருக்குப் பதிலாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவரைப் பெயரளவில் மட்டும் அரசின் தலைவராக்கியபோதிலும், எண்பது ஆண்டுகளாக மரபாய் நிலைபெற்ற இத்தாலிய அரசியல் ஒற்றுமையை முற்றிலும் குலைக்கவில்லை.

## படிக்க வேண்டிய நூல்கள் :

1. அலெக்ஸாண்டர் (Alexander): World Political Patterns, இயல் 13
2. டைஸி (Dicey): Law of the Constitution, இயல், 1—3 முகவுரை.
3. ஃபைனர் (Finer): Modern Government, இயல் 9,
4. ஜென்னிங்ஸ் (Jennings): Parliament, இயல் 1.

5. லாஸ்கி (Laski): Grammar of Politics, இயல் 2.

6. வில்லியம்ஸன் (Williamson): Short History of British Expansion, பக்கம்: 537—73, 617—34.

7. ஸிங்க் (Zink): Modern Governments, பகுதிகள் I, II.

8. Constitutions of All Countries: தொகுதி I. the British Empire, பக்கம் 1—4, 5—18, 113—36, 140—88, 189—221.

9. Annual Register for 1946 and 1947.

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள் :

1. பேட் (Bate): South Africa

2. புரோகன் (Brogan): French Nation

3. காரிங்டன் (Carrington): British Overseas

4. கார்டன் வாக்கர் (Gordon Walker): Commonwealth

5. கிரிண்ட்ராட் (Grindrod): Italy

6. ஜென்னிங்ஸ் (Jennings): British Commonwealth

7. கீத் (Keith): The Government of the British Empire; The Dominions as Sovereign States.

## கட்டுரைக்கான பொருள்கள் :

1. 'இறைமை' என்பது என்ன? உட்புற, வெளிப்புற இறைமை இரண்டிற்குமுள்ள வேறுபாடுகள் யாவை?

2. இக்கால அரசின் உரு மலர்ச்சியில் தோன்றிய இருவகை ஒருமைப்பாடுகளை விளக்குக.

3. 'பாராளு மன்றத்தின் மேலாண்மை' என்பது என்ன? அது ஒருமுக அரசில் எவ்வாறு இடம் பெறுகிறது?

4. கிரேட் பிரிட்டனில் ஒருமுகத்தன்மை வளர்ந்த வரலாற்றை விளக்குக.

5. பிரிட்டன் ஒரு பேரரசாய் வளர்ந்த போதிலும், அதன் ஒருமுகத்தன்மை கெடவில்லை என்பதை விளக்குக.

6. தென்னாப்பிரிக்க ஐக்கியம் அரசுக்கோர் எடுத்துக்காட்டு என்பதை ஆராய்க.

7. 1931–ஆம் ஆண்டு நிறைவேறிய வெஸ்ட்மின்ஸ்டர் சட்டத்தின் முக்கியத்தை விளக்குக.

8. பிரெஞ்சுக் குடியரசு இன்று உலகிலிருக்கும் ஒருமுக அரசுகளுக்கெல்லாம் தலை சிறந்த ஓர் எடுத்துக்காட்டு என்பதற்குக் காரணம் கூறுக.

9. இத்தாலிய ஒற்றுமையின் வரலாற்றை வரைந்து, அது ஒரு கூட்டாட்சியாக மாறியிருக்கலாம் என்பதற்கும் காரணம் கூறுக.

10. பிரான்ஸின் நான்காவது குடியரசிலும், இத்தாலியக் குடியரசிலும் அதிகாரத்தைப் பன்முகப்படுத்துவதற்காக என்ன முயற்சிகள் செய்யப்பட்டுள்ளன ?

# 5. கூட்டாட்சி அரசு

## 1. கூட்டாட்சி அரசின் இன்றியமையாத இயல்பு

அரசியல் முறைமைக்கு உட்படுகையைப் பற்றிப் பயிலும் மாணவனுக்குக் கூட்டாட்சி முறை எவ்வளவு முக்கியமானது என்பதை வலியுறுத்தத் தேவையில்லை. கூட்டாட்சி முறை பழங்காலத்திலே வேரூன்றி இருந்தது. ஏனெனில், அது பண்டைய கிரேக்க நாட்டில் நகர அரசுகளின் நடுவில் நிலவிவந்தது. மீண்டும் இடைக்காலத்தில் அதை இத்தாலியின் சில நகரங்களில் காண்கிறோம். 13-ஆம் நூற்றாண்டிலிருந்து அது தொடர்ச்சியாய் வளர்ச்சியுற்று வந்ததென்பதைச் சுவிஸ் நாட்டுக் கூட்டத்தின் (Swiss Confederation) வரலாற்றில் காண்கிறோம். 1291 இல் மூன்று காட்டுக் கோட்டங்கள் (Forest Cantons) தற்காப்புக்காக ஒன்றாய் இணைந்ததனால், நாட்டுக்கூட்டம் பிறந்தது. இன்று யூகோஸ்லாவியா, அமெரிக்க ஐக்கிய நாடுகள், மெக்ஸிக்கோ, ஆஸ்திரேலியாப் போன்று இட அமைப்பிலும், மரபிலும் பெரிதும் வேறுபட்ட பல நாடுகளின் அரசியல் அமைப்பின் அடிப்படையாய்க் கூட்டாட்சி இருக்கிறது. மேலும், இது வரை நாம் கண்டு வரும் பன்னாட்டுக் குழப்பங்களிலிருந்து எழக்கூடிய அனைத்துலக அரசெனும் அமைப்பை நோக்கி இன்று உலகம் சென்றுகொண்டிருக்கிறதென்றால், அது கூட்டாட்சி முறையிலேதான் அமைக்கப்படும் என்று உறுதியாகக் கூறலாம். கடந்த காலத்திலும், நிகழ்காலத்திலும், பெரும்பாலும் வருங்காலத்திலும் மாபெரு விளைவுகளை ஏற்படுத்தவல்ல இந்த அரசியல் ஆய்வு முறையை அறிவுடைய எந்தக்குடியும் ஆழ்ந்து ஆராய வேண்டுவது அவசியம். அப்படி ஆராய்வது நல்ல பயன் தரும்.

கூட்டாட்சி முறை, இடத்திற்கும் காலத்திற்கும் ஏற்ப மாறுபடும். மிகவும் நெகிழ்ந்த நிலையில் அதைப் பல நாடுகளின் தொகுதி எனக்

கூறலாம். அந்நாடுகள் அனைத்தும் சேர்ந்து ஓர் அரசை அமைப்ப தில்லை. இத்தகைய நெகிழ்ந்த கூட்டமைப்புகளுக்கு வரலாற்றில் ஏராளமான எடுத்துக்காட்டுகள் உள்ளன. வேறு பதம் கிட்டாமை யால், இதை நாம் பொதுவாக 'நாட்டுக்கூட்டம்' (Confederation) என வழங்குகிறோம். இக்கால வரலாற்றிலிருந்து சான்று கூறவேண்டு மானால், 1815இல் நெப்போலியன் வீழ்ச்சிக்குப் பிறகு நிறுவப்பட்ட ஜெர்மானிய நாட்டுக் கூட்டத்தை இவ்வகைக் கூட்டமைப்புக்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். 'நாட்டுக்கூட்டம்' என நாம் கூறும் அமைப்புக்கும், உண்மையான கூட்டாட்சிக்குமுள்ள வேறுபாட்டை நன்கு கண்டறிய இரு ஜெர்மானியச் சொற்கள் பயன்படுகின்றன. அவற்றைச் சேர்த்துப் பொருள் காணும்போது இவ்வேறுபாடு நன்கு விளங்குகிறது. அவை அரசெனப் பொருள்படும் 'ஸ்டாட்' (Staat) என்ற சொல்லும், கூட்டமைப்பு எனப் பொருள்படும் 'புந்த்' (Bund) என்ற சொல்லும் ஆகும். 1815 முதல் 1866 வரை நிலவிய ஜெர்மானி யக் குடியரசை ஜெர்மானியர்கள் 'புந்த்' என வழங்கினார்கள். அதன் ஒரே மத்திய நிறுவனமாகிய பிராங்க்போர்ட்டிலுள்ள (Frankfort) 'டயட்' (Diet) எனும் மன்றம், உண்மையில் கூட்டமைப்பிலிருந்த பல அரசுகளின் தூதுவர்கள் கூடும் அவையாகவே இருந்தது அத் தகைய நாடுகளின் கூட்டமைப்பை ஜெர்மானியர்கள் 'ஸ்டாட்டென் புந்த்'[1] (Staatenbund) என வழங்கினார்கள். இச்சொல் அரசுகளின் பன்மையை வலியுறுத்துகிறது. அத்தகைய அமைப்புக்கும், நெருங் கிய உறவுக்கும் அதிக வேறுபாடு இல்லை. அவ்வமைப்பில் ஒவ்வோர் அரசின் உட்புற இறைமையும் பழுதடைவதில்லை. வெளிப்புற இறைமை ஓரளவுக்கே கட்டுப்படுத்தப்படுகிறது.

பொதுவாக அரசுகளின் கூட்டாட்சியை (Staatenbund) அதன் உறுப்பினர்கள் நெடுங்காலம் விரும்பவில்லை. அவை நாளடைவில் முன்னிருந்தது போலத் தனித்துப் பிரிந்து போயின; அல்லது உண் மையான ஐக்கியமாய் நெருங்கி இணைந்தன. இதன் உண்மையான ஐக்கியத்தை ஜெர்மானியர்கள் 'புந்தஸ் ஸ்டாட்' (Bundes staat) என வழங்கினார்கள். இதில் 'ஸ்டாட்' என்ற சொல் ஒருமையில் இருப் பது குறிப்பிடத்தக்கது. அது அரசுகளின் கூட்டாட்சி (Staaten-bund) அன்று; ஆனால், கூட்டாட்சி அரசு (Bundes staat) ஆகும். அத்தகைய அமைப்பு, முதலில் கூட்டாட்சியை அமைக்கும் உறுப்பு களுக்கிடையே ஏற்படும் உடன்படிக்கையினாலும், பிறகு அவற்றின் குடிகளால் நேர்முகமாக அல்லது மறைமுகமாக ஏற்றுக்கொள்ளப் பட்ட கூட்டாட்சி அரசியலமைப்பினாலும் நிறுவப்படுகிறது. குறிப் பிட்ட நிலப்பகுதியில் வாழும் எல்லாக் குடிகளின்மேலும் உண்மை யான அதிகாரமுடைய மத்திய (அல்லது கூட்டாட்சி) நிருவாகத் துறை அதில் இருப்பதால், அது நாட்டுக் கூட்டத்தினின்று பெரிதும்

வேறுபடுகின்றது. அது (அரசெனக் கூற இயலாத) அரசுகளின் கூட்டமைப்பு அன்று. ஆனல், அது மத்திய அரசாங்கம் ஓரளவு நேரான அதிகாரத்துடன் கட்டுப்படுத்தி வரும் மக்களின் ஐக்கியமாகும். ஆகவே, உண்மையான கூட்டாட்சி அரசு உருவாவதற்கு இரு நிபந்தனைகள் தேவை எனலாம். அவற்றுள் ஒன்று இல்லாதிருந்தாலும், அத்தகைய ஐக்கியம் ஏற்படுவது தடைபடும். கூட்டாட்சியை அமைக்கும் உறுப்புகளிடையே ஒருவித நாட்டின் உணர்ச்சி ஏற்படுவது முதல் நிபந்தனை. இது எவ்வளவு உண்மையென்றுல், இக்காலக் கூட்டாட்சி அரசுகள், கூட்டாட்சியை அமைப்பதற்குமுன் ஜெர்மனியைப்போல நெகிழ்ந்த அமைப்பையுடைய நாட்டுக்கூட்டமாய் இருந்திருக்கின்றன. அல்லது, அமெரிக்க ஐக்கிய நாடுகள், சுவிட்ஸர்லாந்து, ஆஸ்திரேலியா, கனடாப்போன்று ஒரு பொது அரசரின் ஆட்சிக்குட்பட்டு இருந்திருக்கின்றன எனப் பொதுவாகக் காணலாம். (சுவிட்ஸர்லாந்தில் இரண்டு நிலைமைகளும் இருந்தன.) இரண்டாவது நிபந்தனை என்னவென்றுல், கூட்டாட்சியில் சேரும் உறுப்புகள் ஐக்கியத்தில் இணைய விரும்பிய போதிலும், ஒரே தன்மையடைய விரும்புவதில்லை. ஏனெனில், அவை ஒரே தன்மையடைய விரும்பினுல், அவை கூட்டாட்சி அரசை அமைப்பதற்குப் பதிலாக ஒருமுக அரசை நிறுவும்.

ஆகவே, கூட்டாட்சி அரசியலமைப்பு, இணைக்க இயலாதது போலத் தோன்றும் தேசீய இறைமையையும் மாநில இறைமையையும் இணைக்க முயலுகிறதென்பது தெளிவாகத் தெரிகின்றது. இந்த இணைப்பு எந்த முக்கிய வழிகளில் ஏற்படுகிறதென்பதும் தெளிவாய் இருக்கிறது, ஆயினும், நாம் பிறகு பார்ப்பது போல, அவை வெவ்வேறு கூட்டாட்சி அரசியல் அமைப்புகளுக்குத் தக்கபடி நுணுக்கங்கள் வேறுபடுகின்றன. நாடு முழுவதையும் சார்ந்த காரியங்கள், தேசீய அல்லது கூட்டாட்சி அரசாங்கத்திடம் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. தனி மாநிலங்களைச் சார்ந்தனவும் நாட்டின் பொது நலத்திற்குத் தேவையில்லாதனவுமான காரியங்கள், மாநில அரசாங்கங்களின் அதிகாரத்திற்கு உட்பட்டுள்ளன. இக்கால உலகில் காணப்படும் பற்பல கூட்டாட்சிகளில் இந்த அதிகாரப் பங்கீடு பல்வேறு வகைகளில் செயலாற்றப்பட்டிருந்த போதிலும் இது கூட்டாட்சி அரசின் இன்றியமையாத இயல்பாய் இருக்கின்றது.

## 2. கூட்டாட்சி வகையில் வேறுபாடுகள்

அரசாங்க அதிகாரங்கள் கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் கூட்டாட்சியின் உறுப்புகளுக்கும் இடையே பங்கிடப்படுவது கூட்டாட்சி அரசின் இன்றியமையாத பண்பாய் இருப்பதனுல், கூட்டாட்சி

அரசுகளின் வேறுபாடுகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம். முதலாவது, கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கத்திற்கும் இடையே அதிகாரங்கள் பங்கிடப்படும் முறை. இரண்டாவது, கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கத்திற்கும் முரண்பாடு ஏற்படுங்கால், அரசியலமைப்பின் மேம்பாட்டைக் காக்கும் அதிகாரத்தின் தன்மை; மூன்ருவது, அரசியலமைப்பில் மாற்றங்களைச் செய்ய விரும்பும் போது அதைச் செய்யும் வழி.

அதிகாரங்கள் இரு வகைகளில் பங்கிடப்படலாம். அரசியலமைப்பு, கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரங்களைக் குறிப்பிட்டு எஞ்சியவற்றை மாநிலங்களுக்கு விட்டுவிடலாம்; அல்லது கூட்டாட்சியின் உறுப்புகளின் அதிகாரங்கள் எவை என்று கூறி, எஞ்சியவற்றைக் கூட்டாட்சி அரசாங்கத்திடம் விட்டுவிடலாம். எஞ்சியிருப்பவை 'ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள்' (Reserve of Powers) எனப் பொதுவாக வழங்கப்படுகின்றன. அதிகாரங்களைக் குறிப்பிடுவதன் நோக்கம், அவற்றை வரையறுத்துக் கட்டுப்படுத்துவதாகும். ஆகவே, கனடாக் குடியேற்ற உரிமை நாட்டில் காணப்படுவது போல, கூட்டாட்சி அரசியலமைப்புக் கூட்டாட்சி உறுப்புகளின் அதிகாரங்களை வரையறுத்தால், கூட்டாட்சி அரசாங்கத்தை வலுப்படுத்திக் கூட்டாட்சியின் தனி உறுப்புகளை வலுக்குறைப்பது அதன் நோக்கம் எனக் கூறலாம். இது கனடாவைச் சார்ந்த வரையில் எவ்வளவு உண்மையென்ருல், அங்குக் கூட்டாட்சி உறுப்புகள் அரசுகளென்று வழங்கப்படுவதற்குப் பதிலாக, மாநிலங்களென்று வழங்கப்படுகின்றன. ஆகவே, 'ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள்' மாநிலங்களிடம் இருப்பதற்குப் பதிலாகக் கூட்டாட்சி அரசாங்கத்திடம் இருக்குமானுல், அந்த அரசியலமைப்பு ஒருமுக அரசின் அரசியலமைப்பை ஓரளவு ஒத்திருக்கும். அதாவது, அத்தகைய அரசில் கூட்டாட்சியின் பண்புகள் குறைந்த அளவில் உள்ளன.

அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும், ஆஸ்திரேலியப் பொதுநலக் கூட்டிலும் இருப்பது போல, கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரத்தை அரசியலமைப்பு வரையறுக்குமானுல், அதன் நோக்கம் கூட்டாட்சி உறுப்புகளுக்கு எதிராகக் கூட்டாட்சி அரசாங்கம் அதிகாரம் செலுத்தாதவாறு கட்டுப்படுத்துவதாகும். அத்தகைய கூட்டாட்சி உறுப்புகள், கூட்டாட்சியின் பாதுகாப்பிற்கேற்ப, தமக்குத் தேவையான சுதந்தரத்தைப் பெற விழைகின்றன. அவை உண்மையான அதிகாரமுடைய ஒரு கூட்டாட்சி அரசை விரும்புகின்றன. அது வழியாக அவை தமது பொதுவான நாட்டின் உணர்ச்சியை வெளிப்படுத்தலாம். ஆயினும், அதே காலத்தில் அவை தமது தனி மாநிலப் பண்பைப் பாதுகாக்க விரும்புகின்றன. அவை தமது தனித் தன்மையை எவ்வளவு அதிகமாகக் காக்கின்றனவோ, அதற்கேற்பக்

கூட்டாட்சியின் அதிகாரங்களை வரையறுத்து, மிகுதியான 'ஒதுக்கப்பட்ட அதிகாரங்களைத்' தமக்கென வைத்துக்கொள்ள விரும்புகின்றன. ஆகவே, மாநிலங்களுக்கு எவ்வளவு அதிகமான 'ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள்' இருக்கின்றனவோ, அதற்கேற்ப, அத்தகைய ஒதுக்கத்தை அனுமதிக்கும் அரசியலமைப்பையுடைய அரசில் கூட்டாட்சிப் பண்புகள் மிகுந்திருக்கும். அதாவது, கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரங்களை வரையறுக்கும் அரசியலமைப்பையுடைய கூட்டாட்சி அரசில், கூட்டாட்சி உறுப்புகளின் அதிகாரங்களை வரையறுக்கும் அரசியலமைப்பையுடைய கூட்டாட்சி அரசைவிட அதிகாரக் குவிப்புக் குறைந்த அளவில் காணப்படும்.

இந்த இரு வழிகளுள் ஏதாவதொன்றின் மூலமாகச் செய்யப்படும் அதிகாரப் பங்கீடு, கூட்டாட்சியின் சட்ட மன்றமும் கூட்டாட்சி உறுப்பு ஒவ்வொன்றின் சட்ட மன்றமும் வரையறைக்குட்பட்ட அதிகாரங்களையே செலுத்துகின்றன என்றும், இரண்டிற்கும் மேலாண்மை இல்லையென்றும் குறிப்பிடுகிறது. அவை இரண்டிற்கும் மேலாக அரசியலமைப்பு இருக்கிறது. அது ஓர் உறுதியான ஒப்பந்தம்; ஒப்பந்தம் செய்பவர்கள் தங்கள் ஐக்கியத்தின் நிபந்தனைகளை எழுத்து மூலமாகக் காட்டும் ஓர் உடன்படிக்கை. உண்மையில் கூட்டாட்சி அரசியலமைப்பானது, கூட்டாட்சி, மாநில அரசாங்கங்கள் இவற்றின் உரிமைகளையும் கடமைகளையும் விளக்கும் ஒரு சாசனம். இந்த உரிமைகளும் கடமைகளும் தக்க விகித அளவில் இருக்க வேண்டும். எந்த ஓர் அரசாங்கமும் வலியுறுத்தும் உரிமைகளும், ஓர் அரசாங்கம் மற்றொன்றிடம் எதிர்பார்க்கும் கடமைகளும் அரசியலமைப்பில் குறிப்பிட்டுள்ள அளவுக்கு மிகாமல் இருக்கவேண்டும். உண்மையான கூட்டாட்சி அரசில் இச்சமநிலையைக் காக்கும் அதிகாரம் தலைமை நீதி மன்றத்திற்கு வழங்கப்பட்டிருக்கிறது. அரசியலமைப்பானது ஒப்பந்தத்தைச் செய்யும் உறுப்புகளுக்கும், ஒப்பந்தத்தினால் அவை நிறுவும் கூட்டாட்சி அரசாங்கத்துக்குமிடையே அரசாங்க அதிகாரங்களைப் பகிர்ந்தளிப்பதனால், அரசியலமைப்பை மக்கள் மதிக்குமாறு தலைமை நீதி மன்றம் பார்த்துக்கொள்கிறது.

அத்தகைய நீதி மன்றத்திற்கு வழங்கப்பட்டிருக்கும் அதிகாரத்தின் அளவு வெவ்வேறு கூட்டாட்சிகளில் வேறுபட்டுள்ளது. கூட்டாட்சியின் இயல்புகள் அனைத்தையுமுடைய அரசில் கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்குமிடையே தோன்றும் பிணக்குகளைத் தீர்ப்பதற்கு இந்நீதி மன்றத்திற்கு வரையிறந்த அதிகாரம் இருக்கின்றது. இதற்கு அமெரிக்க ஐக்கிய நாடுகள் தலைசிறந்த எடுத்துக்காட்டாகும். பிற அரசுகளில் இக்காரியத்தில் மற்ற அதிகார நிறுவனங்களுக்கு வழங்கப்பட்டிருக்கும் உரிமைகள் நீதி

மன்றத்தின் அதிகாரங்களைக் கட்டுப்படுத்துகின்றன. ஒரு கூட்டாட்சி அரசில் தலைமை நீதி மன்றத்தின் அதிகாரங்கள் கட்டுப்பட்டிருப்பதற்குச் சுவிட்ஸர்லாந்து ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். ஏனெனில், இங்குக் கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கத்திற்கும் இடையே ஏற்படும் சச்சரவுகளில் கூட்டாட்சி நீதி மன்றத்திற்குப் பதிலாகக் கூட்டாட்சி அவையே இறுதித் தீர்ப்பளிக்கின்றது. மேலும், கூட்டாட்சி அவை இயற்றிய சட்டங்களின் அரசியல் முறைமையை (Constitutionality) கூட்டாட்சி நீதி மன்றம் எதிர்க்க இயலாது. ஆனால், நாம் மற்றோர் இயலில் பார்ப்பது போல, இங்கு அத்தகைய அதிகாரத்தைக் கூட்டாட்சி நீதி மன்றத்திற்கு வழங்கத் தேவையில்லை. ஏனெனில், இறைமையதிகாரமுடைய சுவிட்ஸர்லாந்து மக்கள் தங்கள் விருப்பாற்றலைத் தெரிவிக்க நேர்முகமான வழியைப் பயன்படுத்துகின்றார்கள்.

கூட்டாட்சிக்கும் மாநிலங்களுக்கும் இடையேயுள்ள முரண்பாடுகளைத் தீர்ப்பதில் இவ்விரு கோடிகளுக்கிடையில் பலதிறப்பட்ட வேறுபாடுகள் காணப்படுகின்றன. வரம்பின்மையில் ஆஸ்திரேலியா அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு அடுத்தாற்போல இருக்கிறது. அவற்றிற்குள்ள வேறுபாடு என்னவென்றால், ஆஸ்திரேலிய அரசியலமைப்பின் சில பிரிவுகளைப் பொதுநலக்கூட்டுப் பாராளுமன்றம் பிற நிறுவனங்களின் துணையின்றி மாற்ற இயலும். அதனால், அது மாநிலங்களின் உரிமைகளைக் கவர்வதில்லை. முந்திய ஜெர்மானிய வெய்மார் குடியரசில் மாநிலத்திற்கும் கூட்டாட்சிக்கும் ஏற்படும் பிணக்குகளில் அல்லது மாநிலங்களுக்குள்ளே நடைபெறும் பிணக்குகளில் ஒரு சிலவற்றை மட்டும் தீர்ப்பதற்குத் தலைமைக் கூட்டாட்சி நீதி மன்றத்திற்கு உரிமை இருந்தது. கனடாவில் மாநிலங்களின் அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டிருந்த போதிலும், பிணக்குகள் சில வேளைகளில் ஏற்படுகின்றன. அவற்றைக் கனடாவின் தலைமை நீதி மன்றம் தீர்க்கலாம்.[1]

இவ்வாறு எல்லாக் கூட்டாட்சி அரசுகளிலும் பல ஒருமுக அரசுகளில் காணப்படாத ஒரு வகைச் சட்ட முறை நிலவுகிறது. இதன் விளைவாக அரசியலமைப்பை எவ்வாறு மாற்றுவதென்னும் கேள்வி பிறக்கிறது. இதைப் பற்றி நாம் பிறகு விரிவாகக் கூறுவோம்.

1. முன்பு இலண்டனிலுள்ள பிரிவி கவுன்சிலின் நீதிக்குழுவின்முன் (Judicial Committee) மேல் வழக்குத் தொடரும் உரிமை இருந்ததனால், நீதி மன்றத்தின் அதிகாரம் கட்டுப்பட்டிருந்தது. ஆனால், 1951இல் இவ்வுரிமை நீக்கப்பட்டுவிட்டது. அதன்படி இவ்விரண்டு நீதி நிறுவனங்களுக்குமிடையே நிலவிய தொடர்பு துணிக்கப்பட்டது.

ஆனால், இங்குக் கூட்டாட்சி அரசியலமைப்பு ஆவண வடிவாய் இருக்க வேண்டுமென்பதைக் குறிப்பிட வேண்டும். ஏனெனில், அவ்வளவு அரிய சமநிலையில் வைக்கப்பட்டுள்ள ஆற்றல்கள், வெற்று வழக்காறுளாலும், சிற்சில சமயங்களில் இயற்றப்படும் சட்டங்களாலும் தீர்மானிக்கப்படக் கூடாது. ஆகவே, கூட்டாட்சி அரசியலமைப்பு நெகிழாத்தன்மையுடையது; அதாவது, அத்தகைய அரசியலமைப்பை மாற்றும் நிபந்தனைகள் வெளிப்படையாகவோ, அல்லது மறைமுகமாகவோ, குறிக்கப்பட்டுள்ளன. அவை வெளிப்படையாய் இருக்குமானால், அதாவது திருத்த முறைகள் திட்டமாகக் குறிக்கப்பட்டிருக்குமானால், அது நெகிழாத் தன்மையுடையது. அவ்வாறு குறிக்கப்படாதிருந்தால், அரசியலமைப்பின் நெகிழாத் தன்மை மறைமுகமானது. ஏனெனில், அரசியலமைப்புச் சட்ட முறைப்படி மாற்ற இயலாதது ; (அதாவது, அதை மாற்றினால், புரட்சி தோன்றக் கூடும்.) அல்லது முதலில் ஒப்பந்தத்தைச் செய்த எல்லா அரசுகளும் அம்மாற்றத்தை ஏற்றுக்கொள்ள இணங்க வேண்டும் ; அதுதான் அதை மாற்ற ஒரே வழி. அவ்வாறு செய்தால், அவை ஒரு புதிய உடன்படிக்கை செய்து ஒரு புதிய அரசியல் அமைப்பை அறிக்கையிட வேண்டும்.

கூட்டாட்சி அரசியலமைப்பை மாற்றும் முறைகளின் நுணுக்கங்களைப் பற்றி நாம் இன்னோர் இயலில் நெகிழா அரசியலமைப்புப் பற்றிப் படிக்கும்போது பார்ப்போம். இவ்வியலின் எஞ்சிய பகுதியில் இன்றைய உலகிலுள்ள சிறந்த கூட்டாட்சி அரசுகளை ஆராய்வோம்.

## 3. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கூட்டாட்சி முறை

உலகிலுள்ள கூட்டாட்சி அரசியலமைப்புகளில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பே முழுமை பெற்றது. அதாவது, கூட்டாட்சியின் இன்றியமையாத இயல்புகளாகிய அரசியலமைப்பின் மேம்பாடு, அதிகாரப் பங்கீடு, கூட்டாட்சி நீதிமன்றத்தின் அதிகாரம் இம்மூன்றிற்கும் அது மிகச் சிறந்த எடுத்துக்காட்டாய் விளங்குகிறது. அது முதலில் ஒன்றுபட்ட பதின்மூன்று அரசுகளும் குடியேற்ற நாடுகள் என்ற முறையில் பிரிட்டனுக்குப் பணிந்திருந்த நிலையிலிருந்து இரண்டு அடி எடுத்து வைத்து, இந்த முழுமையான நிலையை அடைந்தது. 1781இல் நாட்டுக் கூட்டத்தின் விதிகளை ஏற்றதன் மூலம் முதல் அடியைக் கடந்தது. அதன் விளைவாக உண்மையான கூட்டரசுக்குப் பதிலாக, ஒரு நாட்டுக்கூட்டம், ஒரு நெகிழ்ந்த கூட்டமைப்பு நிறுவப்பட்டது. உட்ரோ வில்சன் இவ்விதிகளை 'ஒருவரையும் பிணிக்க இயலாத மணற்கயிறு' எனக் கூறினர். 1787இல் பிலெடெல்பியாவில் கூடிய சபை இப்போதுள்ள அரசியலமைப்பை வரைந்த போது இரண்டாவது அடி எடுத்து வைக்கப்பட்டது. பதின்மூன்று அரசு

களும் அந்த அரசியலமைப்பை ஏற்றதும் 1789இல் அது செயல் முறைக்கு வந்தது. அதை உண்மையான கூட்டாட்சி எனலாம்; ஏனெனில், அது தெளிவான அதிகாரங்களையுடைய மத்திய நிருவாகத்துறையை நிறுவியது. மேலும், அது நாடு முழுவதையுமே சிறந்த கூட்டாட்சி முறையில் அமைத்தது. அதாவது, ஏறக்குறையப் பத்தாண்டுகளாக நாட்டுக்கூட்டம் பல இன்னல்களுக்குட்பட்டு அல்லலுற்ற காரணத்தினால், வலிமை மிக்க கூட்டாட்சி அரசாங்கமொன்று தேவையென உணர்ந்தபோதிலும், ஒருமுகத் தன்மையை எவ்வளவு குறைக்க இயலுமோ, அவ்வளவு குறைத்தது.

அதிகாரப் பங்கீட்டைப் பொறுத்த வரையில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு இரட்டைப் பங்கீட்டைச் செய்துள்ளது. முதலாவது, சட்டமன்றம், நிருவாகத்துறை, நீதி மன்றம் ஆகிய அரசாங்கத்தின் மூன்று துறைகளையும் பங்கிட்டு, அவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனியாகப் பிரிக்கிறது. இதைப்பற்றி நாம் பிறகு கூறுவோம். இரண்டாவது, அது கூட்டாட்சிக்கும் மாநிலங்களுக்கும் இடையே அதிகாரங்களைப் பங்கிடுகிறது; இது வாயிலாகக் கூட்டாட்சி அரசாங்கத்துக்குத் தேவையில்லாத எல்லா அதிகாரங்களையும் பொது நலங் கருதிக் கூட்டாட்சியின் உறுப்புகளுக்கு வழங்குகிறது. இவ்வாறு அமெரிக்க ஐக்கிய நாடுகள் முழுமைக்குமுரிய அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டுள்ளன. மாநிலங்களுக்குத் தனியாக விடப்பட்டுள்ள அதிகாரங்கள் வரையறுக்கப்படவில்லை. அதாவது, கூட்டாட்சி அரசாங்கம் என்ன அதிகாரங்களைச் செலுத்தலாமென்பதை அரசியலமைப்புத் தெளிவாக விளக்குவதுமல்லாமல், அமெரிக்க ஐக்கிய நாடுகள் செலுத்தக்கூடாத அதிகாரங்கள் அடங்கிய பட்டியலையும், மாநிலங்கள் செலுத்தக்கூடாத அதிகாரங்கள் அடங்கிய பட்டியலையும் சேர்த்துள்ளது. இதைத் தவருன வழியில் பயன்படுத்துவதைத் தவிர்க்க, பத்தாவது திருத்தம் செய்யப்பட்டது. (இது 1791இல் நிறைவேற்றப்பட்டது. இது அரசியலமைப்பு முதலில் வெளியிடப்பட்ட பிறகு எவ்வளவு விரைவாக நிறைவேறியதென்றால், உண்மையில் அதன் ஒரு பகுதியாகவே கருதப்படுகிறது.) இத்திருத்தத்திற்கேற்ப, 'அரசியலமைப்பினால் அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு வழங்கப்படாத அதிகாரங்களும், அதனால் மாநிலங்களுக்கு மறுக்கப்படாத அதிகாரங்களும் முறையே மாநிலங்களுக்கு அல்லது மக்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ளன.' இதன் விளைவு என்னவென்றால், அரசியலமைப்பினால் வழங்கப்படாத எந்த அதிகாரத்தையும் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கூட்டாட்சி அரசாங்கம் பெற இயலாது. ஆனால், அரசுகள், அரசியல் அமைப்பினால் நேர்முகமாக அல்லது மறைமுகமாக மறுக்கப்பட்ட அதிகாரங்களைத் தவிர,

ஓர் இறைமையதிகாரமுள்ள சுதந்தர அரசு செலுத்தக்கூடிய எந்த அதிகாரத்தையும் செலுத்தலாம்.

சட்ட ஆக்கத் துறையைப் பொறுத்த வரையில், அரசியலமைப்பு, செனட்டு, பிரதிநிதிகளின் சபை என்ற இரு சபைகளையுடைய காங்கிரஸை நிறுவியுள்ளது. மேல் சபையில் எல்லா மாநிலங்களும் சமத்துவம் பெற்றுள்ளன. இது மாற்ற இயலாத சட்டம். நிருவாகத் துறையைப் பொறுத்த வரையில், அது நான்கு ஆண்டுகள் ஆட்சி செய்யும் தலைவரின் பதவியை ஏற்படுத்தி, அவர் தேர்ந்தெடுக்கப் படும் முறையின் விவரங்களையும் குறிப்பிடுகிறது. அது தலைவரின் அதிகாரங்களை எடுத்துரைத்து, அவரது தூதாண்மை அதிகாரங் களைக் (உடன்படிக்கை செய்வது, தூதர்களை நியமிப்பது போன்ற வற்றை) கட்டுப்படுத்துகிறது. அவற்றைச் செலுத்துவதற்கு அவர் செனட்டின் இசைவு பெற வேண்டும். இதனால், மாநிலங்களுக்குச் சமப்பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டுள்ள சபை, அவை கைவிட்ட வெளிப்புற இறைமையை இன்னும் முடிவில் கட்டுப்படுத்துகின்றது. நீதித்துறையைச் சார்ந்த வரையில், அரசியலமைப்பு, கூட்டாட்சி நீதி மன்றங்களை நிறுவுகிறது. அரசியல் அமைப்பைச் சார்ந்த எல்லா வழக்குகளும் அவற்றின் அதிகாரத்திற்குட்பட்டவை. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் இரு மாநிலங்களுக்கும் இடையே ஏற்படும் வழக்குகளும், அல்லது அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கும் உலகிலுள்ள மற்றோர் அரசுக்கும் இடையே நடைபெறும் பன்னாட்டு வழக்குகளும் இவற்றின் அதிகாரத்திற்குட்பட்டவை. அரசிய லமைப்பு, தலைமை நீதி மன்றத்தையும் நிறுவியுள்ளது. அது ஏற்கெனவே கூறிய எல்லா வழக்குகளையும் விசாரிக்கும் மேல் வழக்கு நீதி மன்றமாய் விளங்குகிறது. இதனால், அது அரசியலமைப்பிற்கு இறுதி விளக்கம் தரும் நிறுவனமாய் இருப்பதுடன், கூட்டாட்சி அல்லது மாநிலச்சட்ட மன்றத்தின் அதிகாரத்திற்கு (அரசியலமைப் பின் வரம்பிற்குட்பட்ட வகையில்) அப்பாற்பட்டதாயும் இருக் கின்றது.

ஆகையால், அரசியலமைப்பு, கூட்டாட்சியை அமைத்துள்ள அரசுகளுக்கு மிகப்பரந்த அதிகாரத்தை வழங்கியிருக்கின்றது. உட்ரோ வில்சன் குறிப்பிட்டபடி 19-ஆம் நூற்றுண்டில் பிரிட்டிஷ் பாராளுமன்றம் இயற்றிய சிறப்பான பன்னிரண்டு சட்டங்களில் இரண்டே அமெரிக்காவில் கூட்டாட்சிச் சட்ட மன்றத்தின் முன் வந்திருக்கும். எடுத்துக்காட்டுகளாக அவர் கத்தோலிக்கர் விடுதலை, பாராளுமன்றச் சீர்திருத்தம், அடிமைத்தன ஒழிப்பு, இரவலர் சட்டத் திருத்தம், நகராட்சிச் சீர்திருத்தம், தானியச் சட்ட நீக்கம், யூதர் களைப் பாராளுமன்றத்தில் நுழையவிடல், ஐரிஷ் சமய நிலையக் குலைவு, அயர்லாந்து நிலச்சட்டங்களின் மாற்றம், தேசீயக் கல்வியை நிலை

நாட்டல், மறைவான வாக்கெடுப்பு, குற்றவியற்சட்டச் சீர்திருத்தம் ஆகியவற்றைக் குறிப்பிடுகிருர். அவர் கூறுகிறபடி, இவற்றுள் தானியச் சட்டங்களேயும் அடிமைத்தனத்தையும் மட்டும் கூட்டாட்சி கட்டுப்படுத்த இயலும். இவை இரண்டிலும் இரண்டாவது கூறப்பட்டது உள் நாட்டுப் போருக்குப் (1861-5) பிறகு செய்யப்பட்ட திருத்தம் வரை கூட்டாட்சி அதிகாரத்திற்குப் புறம்பாய் இருந்தது. அத்திருத்தம் அதை மாநிலங்களிடமிருந்து எடுத்துவிட்டது. ஆங்கிலேயர்களேப் போல மத்தியச் சட்ட மன்றத்தின் மேம்பாட்டைப் பார்த்துப் பழக்கமானவர்களுக்கு இவை உண்மையிலே வியப்பைத் தரும். அமெரிக்கக் கூட்டாட்சி அரசியலமைப்பை மாநிலங்களின் அரசியலமைப்புகளுடன் இணைத்துப் பார்க்கவில்லை என்ருல், அது பொருளற்றதாகிவிடுகிறது. மாநில அரசியலமைப்புகள், கூட்டாட்சி அரசியலமைப்பின் பயனுறுதியுள்ள சேர்க்கையாய் இருப்பதுமன்றி, அதை நிரப்பும் இன்றியமையாத சாதனங்களாகவும் விளங்குகின்றன.

ஆகவே, கூட்டாட்சி அரசாங்கத்தைச் சேர்ந்ததாக அரசியலமைப்புக் குறிப்பிடாத காரியங்களில் தலைமை நீதி மன்றத்தின் முன் மேல் வழக்குத் தொடர இயலாது. ஆனுல், ஐக்கியம் முழுவதற்கும் சேர்ந்தனவாக அரசியலமைப்புத் தெளிவாகக் குறிப்பிடும் காரியங்களில் தலைமை நீதி மன்றத்திற்கு வரையிறந்த அதிகாரம் உண்டு. மேலும், அதன் தீர்ப்புகளேச் செயற்படுத்துவது கூட்டாட்சி நிருவாகத் துறையின் தவிர்க்க இயலாத கடமையாகும். இக்காலத்தில் நிகழ்ந்த இரு நிகழ்ச்சிகள் இவ்வேறுபாட்டை நன்கு விளக்குகின்றன. 1925-ஆம் ஆண்டில் டெனஸீ (Tenessee) மாநிலத்தில் ஓர் ஆசிரியர் தமது பள்ளிக்கூடத்தில் உருமலர்ச்சிக் கொள்கையைக் (Theory of Evolution) கற்பித்ததற்காகக் குற்றம் சாட்டப்பட்டார். ஏனெனில், அவ்வாறு கற்பிப்பது மாநிலச் சட்டத்திற்கு முரணுனது. இவ்வழக்கில் மாநில மக்கள் மட்டுமன்றி, நாட்டு மக்கள் அனைவருமே பேரார்வம் காட்டினுர்கள். அப்போது இவ்வழக்குத் தலைமை நீதிமன்றத்தின் தீர்ப்புக்கு வருமென எல்லாரும் எதிர்பார்த்தனர். ஆனுல், உண்மையில் இவ்வழக்குக் கூட்டாட்சி நீதி மன்றத்தின் அதிகாரத்திற்கு அப்பாற்பட்டதாய் இருந்தது. ஏனெனில், அரசியலமைப்புக் கல்வியைக் குறிப்பிடவில்லை. ஆகவே, அது முற்றிலும் மாநில அதிகாரத்திற்கு ஒதுக்கப்பட்டிருந்தது. 1962இல் நிகழ்ந்த நிகழ்ச்சி இதற்கு மாருனது. அப்போது இனப்பிரிவினை, சட்டத்திற்கு முரணுனது எனத் தலைமை நீதிமன்றம் தீர்ப்பளித்திருந்தபோதிலும், மிஸிஸிப்பிப் (Mississippi) பல்கலைக் கழகம் கவர்னரின் ஆதரவுடனும், மாநிலக் காவற்படையினரின் துணைகொண்டும் நீகிரோ மாணவர் ஒருவரைச் சேர்க்க மறுத்த போது, நாட்டின் தலைவர் சட்டத்திற்கு அவர்

களைப் பணியவைப்பதற்காகக் கூட்டாட்சிப் படைகளை அனுப்பினர். படைக்கலந் தாங்கிய காவலரின் துணையால் மாணவர் சேர்க்கப் பட்டனர்.

இவ்வாறு அரசியலமைப்பு மாநிலங்களுக்குப் பாதுகாப்பளித்த போதிலும், அமெரிக்க ஐக்கிய நாடுகள் நிறுவப்பட்ட நாளிலிருந்து அரசியலமைப்புத் திருத்தத்தினால் மட்டுமன்றி, கூட்டாச்சித்தலைமை நீதி மன்றம் அரசியலமைப்பை விளக்குவதற்காக வழங்கும் தீர்ப்புகள் வாயிலாகவும் கூட்டாட்சி அரசாங்கம் மாநில அரசாங்கங்களைவிட அதிக வலிமை பெற்று வருகிறது. குறிப்பாக எந்த மாநிலமும் கூட் டாட்சியிலிருந்து விலக முடியாதென்பது தெரிந்துவிட்டது. இந்த உண்மையை யாதோர் ஐயப்பாடுமின்றி விளக்குவதற்கு மிகவும் பயங்கரமான—ஒரே நாட்டினிடையே நிகழ்ந்த — போரொன்று இக்காலத்தில் நிகழ வேண்டியிருந்தது. உள் நாட்டுப்போர், அல்லது இன்னும் குறிப்பாகக் கூறவேண்டுமானால், பிரிவினைப்போர் (1861-5), ஏழு (பிறகு பதினொன்றாகப் பெருகிய) தெற்கு மாநிலங்கள் அமெரிக்க ஐக்கியத்தினின்று விலகித் தங்களுக்கென ஒரு நாட்டுக் கூட்டத்தை அமைக்க முயன்றதன் விளைவாக மூண்டது. நாட்டின் தலைவர் லிங்கனைப் பொறுத்த வரையில், அப்போர் அடிமைத் தனத்தை ஒழிப்பதற்காக அல்லாது முக்கியமாக ஐக்கியத்தின் கோட்பாட்டை எண்பிப்பதற்காகவே நடத்தப்பட்டது. (அடிமைத் தனப் பிரச்சினை போருக்கு ஒரு காரணமாய் இருந்ததும், அதன் விளைவாக அடிமைத்தனம் ஒழிக்கப்பட்டதும் உண்மைதான்.) இதைச் செய்வதற்கென ஆபிரகாம் லிங்கன் அமெரிக்க மக்களின் நாட்டுணர்ச்சியைத் தூண்டிவிட்டார். ஒன்றுக்கொன்று நேர் மாறான சுதந்தரமும் அடிமைத்தனமும் நாட்டின் எல்லைக்குள்ளே நிலவினால் அந்நாடு நெடுநாள் நிலைக்க இயலாதென நீதிநெறிப்படி அவர் வாதாடி னார்; ஐக்கியம் என்றும் நிலைத்து நிற்பது என்று அரசியல் முறைப்படி யும் வாதாடினார்; 'எந்த முறையான அரசாங்கத்திலும் அதை அழிக்க வல்ல ஓர் ஏற்பாடு அதன் அமைப்புச் சட்டத்தில் இருப்பதே இல்லை.' எனக் கூறினார்.

உள் நாட்டுப் போரில் வடபகுதி வெற்றி பெற்றதால், ஐக்கியம் காப்பாற்றப்பட்டு, வலிமை பெற்றது. அமெரிக்க ஐக்கிய நாடுகளி லுள்ள எந்தத் தனி மாநிலமும் இன்று பிரிவினையை எண்ணிப்பார்க் கவே இயலாது. ஒன்றுபட்ட பதினொரு மாநிலங்கள் அவ்வளவு மாபெருந்தோல்வி அடைந்த பிறகு, எவ்வாறு ஒன்றுமட்டும் வெற்றி பெற இயலும்? பிரிவினைப்போர் அரசியலமைப்பின் தன்மையை, தோற்றத்தில் இல்லாவிடினும், உண்மையில் மாற்றியமைத்தது. அது ஓர் ஒருமுக அரசை உண்டுபண்ணாவிடினும், ஒருமுக அரசைப்போல அமெரிக்க ஐக்கியமும் உறுதி குலையாதிருக்குமென மெய்ப்பித்தது.

ஐம்பது அரசுகள் ஒன்று சேர்ந்து, தங்கள் அரசியல், சமூக நலன்களுக்குத் தேவையான எல்லா அதிகாரங்களையும் பெற்று, பொதுச் செயல்களினால் எல்லா நன்மைகளையும் எவ்வாறு பெறுவது என்பதை அறிந்துகொண்டது, அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தனிப்பெரு வெற்றியாகும். சுருங்கக் கூறவேண்டுமென்றால், அவை அரசியல் அமைப்பு வழியாக அமைதியை எவ்வாறு பெறுவது என்பதை அவனிக்கு எடுத்துக் காட்டிவிட்டன.

அண்மையில் குறிப்பாக பிராங்கிளின் ரூஸ்வெல்ட்டின் முதல் இரு பதவிக்காலங்களில் (1933-1941) மாநிலங்களின் அதிகாரங்களைக் குறைத்துக் கூட்டாட்சி அரசாங்கத்தின் வலிமையைப்பெருக்க வேண்டுமென்ற எண்ணம் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சில பகுதிகளில் வளர்ந்து வருகிறது. இதற்கு முக்கிய காரணம் அமெரிக்கப் பொருளாதார, சமூக வாழ்வில் பெருகி வரும் சிக்கல்களே. இதைக் கட்டுப்படுத்தி இயக்குவதற்குக் கூட்டாட்சி அரசாங்கத்திற்கு இப்போது அரசியலமைப்பில் இருப்பதைவிட அதிக ஆற்றல் தேவையாய் இருக்கிறது. எடுத்துக்காட்டாக, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் (அப்போது) நாற்பத்தெட்டு வெவ்வேறு வகையான மாநிலக் குற்றவியற்சட்டங்கள் இருந்ததனாலும், குற்றவாளி ஒரு மாநிலத்திலிருந்து மற்றொன்றுக்குத் தப்பியோடிக் காவலரிடம் அகப்படாமல் எளிதில் தப்ப முடிந்ததாலும், நாட்டில் வல்லந்தமான குற்றங்களும், பணம் பறித்தலும், கொள்ளைகளும் மிக விரைவாகப்பரவி வருவதை அதிகாரிகளால் தடுக்க இயலவில்லை. இந்த இடர் நீக்க, அமெரிக்கச் சமுதாயம் தன்னைக் காக்கும் நோக்குடன் கூட்டாட்சிச் சட்டத்தின் துணைகொண்டு மதுவிலக்கைச் செயற்படுத்துமாறு ஏற்கெனவே இருந்த கூட்டாட்சிக் காவலர் படையைப் ('G' Men) பயன்படுத்தவேண்டியதாயிற்று. ஆனால், பொருளாதார மந்தத்தின் விளைவாக எழுந்த பொருளாதார, சமூக இடையூறுகளை நீக்கத் தலைவர் ரூஸ்வெல்ட்டு, கூட்டாட்சி அதிகாரங்களைப் பயன்படுத்த முயன்ற போது, அரசியலமைப்பு முறை முழுவதும் ஒரு கடுந்தேர்வுக்குட்பட்டது.

'புதிய திட்டம்' (The New Deal) எனச் சுருக்கமாக வழங்கப்படும் ரூஸ்வெல்ட்டின் திட்டங்கள் புதியதோர் அரசியல் நிலைமையை உண்டுபண்ணின. அமெரிக்க அரசியலமைப்பு எவ்வாறு செயலாற்றுகிறதென்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாக இதைக் குறிப்பிடலாம். தனித்தனி மாநிலங்களின் துயர் துடைப்பதற்காக அமெரிக்கப் பொது நலக்கூட்டின் எல்லா வளங்களையும் பயன்படுத்தத் தலைவர் எண்ணினார். ஏனெனில், அவ்வளவு நெருக்கடியான நிலையிலிருந்து மீள மாநிலங்களால் இயலவில்லை. ஆகவே, பணத்தையும் நாணயத்தையும் மத்திய அரசாங்கம் கட்டுப்படுத்துதல், நாடு முழுவதும் பயிர்த் தொழிலை ஒழுங்குபடுத்துதல், தேசியத்தொழில் மீட்பு, கூட்டாட்சி

அவசரத் துயருதவி, பொறியியல் பணி வளர்ச்சி, கூட்டாட்சித் தொழில் வாய்ப்பகங்களைத் (Labour exchange) திறந்து வைத்தல், பொதுநலப் பாதுகாப்புகள், பொதுவான முறை நிறுவுதல், முதுமை உதவிச் சம்பளம் ஆகியவை பற்றிச் சட்டங்கள் இயற்றுமாறு அவர் காங்கிரஸைத் தூண்டினர். அந்நடவடிக்கைகளைப் பலர் வன்மையாய் எதிர்த்தனர். அவற்ருல் ஏற்படக்கூடிய பெருஞ்செலவை எதிர்த்தது மல்லாமல், அவை ஆளுரிமை, பொருளாதார உரிமை, அரசுரிமை முதலியவற்றைப் பறிப்பதாகவும் கருதினர். அதற்கு மாருக, அத்தகைய அதிகாரங்களைச் செலுத்துவதற்கு அரசியலமைப்பு அனுமதி அளிக்கிறதென நிருவாகத்துறையும் சட்டமன்றமும் கூறின. ஏனெனில், நாட்டின் நலனைக் காக்கும் பொறுப்புக் கூட்டாட்சி அரசாங்கத்தினுடையது. மேலும், அது காங்கிரஸுக்கு அளிக்கப்பட்டிருக்கும் உரிமையினுல் வரி விதிக்கவும் மாநிலங்களுக்கிடையே நடைபெறும் வாணிகத்தை ஒழுங்குபடுத்தவும் அதிகாரம் பெற்றுள்ளது.

இந்தப் பிணக்கைத் தீர்க்கத் தலைமை நீதி மன்றத்திற்கு மட்டும் உரிமை இருந்தது. புதிய திட்டச் சட்டத்தின் விளைவாக ஏற்பட்ட பல வழக்குகள் 1935இலும், 1936இலும் நீதி மன்றத்தின் முன் கொண்டுவரப்பட்டன. அத்திட்டம் அரசாங்கத்தின் நிதிக்கொள்கையை ஆதரித்த போதிலும், பயிர்த்தொழில் ஒழுங்குச் சட்டத்தை (Agricultural Adjustment Act) முழுவதும் செல்லாததெனத் தள்ளியது. அது 'கூட்டாட்சி அரசாங்கத்தின் வரி விதிக்கும் அதிகாரத்திற்குப் புறம்பானது' என்றும், 'அத்திட்டம் தனி மாநிலங்களின் உரிமைகளை மீறியது' என்றும் அறிவித்தது. அடுத்த ஆண்டு தலைமை நீதி மன்றம் தேசீயத் தொழில் மீட்புச் சட்டம் அரசியலமைப்புக்கு முரணுனது என்று அறிவித்ததும், தலைவர் 1937, பிப்பிரவரித் திங்களில் காங்கிரஸுக்கு அனுப்பிய செய்தியில், கூட்டாட்சி நீதித்துறை முழுவதையும் மாற்றியமைக்க வேண்டுமெனத் துணிவுடனும் உறுதியுடனும் வேண்டினர். அதன் முடிவுரை மிகவும் முக்கியமானதும் வரலாற்றில் குறிப்பிடத்தக்கதுமாய் இருக்கின்றது. அது அரசியல் முறைமைக்கு உட்படுகையின் பிழிவை மிகச் சுருக்கமாகத் தருகின்றது. 'காங்கிரஸ் சட்டத்தை இயற்றியதென்பதும், நிருவாகத்துறை அதில் கையொப்பமிட்டதென்பதும், ஆட்சித்துறை செயலாற்றக் காத்திருக்கிறதென்பதும் முக்கியமல்ல... நீதித்துறை ஒரு புதிய அலுவலை மேற்கொண்டு வருகிறது. அது படிப்படியாகச் சிதறிய, நெகிழ்ந்த ஓர் அமைப்பையுடைய, மெதுவாகச் செயலாற்றும் தேசீயச் சட்டமன்றத்தின் மூன்ருவது சபையாக மாறி வருகிறது,' எனத் தலைவர் அதில் குறிப்பிட்டார்.

இந்நெருக்கடியைத் தீர்க்க, தலைவர் ஒரு திட்டம் வகுத்தார். அதன்படி கூட்டாட்சி நீதிபதிக்கு எழுபது வயதானதும் ஆறு மாதத்

திற்குள் ஓய்வு பெறவில்லையானால், தலைவர் இளைய நீதிபதி ஒருவரை நியமிக்கலாம். ஆனால், இதற்காகப் பலர், 'தலைமை நீதி மன்றத்தை நிரப்ப முயல்கின்றார்,' என அவர்மீது குற்றம் சாட்டினர். அந்த மசோதா இறுதியில் செனட்டில் தோல்வியுற்றது. எனவே, காங்கிரஸ் நிறைவேற்றிய புதிய திட்டச் சட்டத்தைத் தலைமை நீதி மன்றம் பெரும் பாலும் பயனற்றதாக்கிவிட்டது. இத்தகைய அரசியலமைப்பைச் சார்ந்த நிலைமை ஒருமுக அரசில் ஏற்பட இயலாது. ரூஸ்வெல்ட்டு மூன்றாவது முறையும் நான்காவது முறையும் தொடர்ந்து பதவியிலிருந்தார். ஆனால்,இச்சிக்கலை மேலும் ஆய்வதற்கு முன் அமெரிக்க ஐக்கிய நாடுகள் இரண்டாம் உலகப் போரெனும் இன்னலில் சிக்கிக் கொண்டன. அது நாட்டின் கவனத்தையெல்லாம் கட்டாயமாகக் கவர்ந்தது. ரூஸ்வெல்ட்டு; சமூகச் சீர்திருத்தத்திற்கெனக் கூட்டாட்சி அமைப்பைப் பயன்படுத்த முயன்றதால், பொதுவுடைமையை ஒத்தது போலத் தோன்றிய எதையும் அமெரிக்கர் வெறுத்தகத் தலைப்பட்டனர் என்பதில் ஐயமில்லை. கூட்டாட்சி அதிகாரத்தைப் படிப்படியாகப் பலப்படுத்தினாலன்றி, ஜெபர்ஸன் கண்ட 'உயிர், உரிமை, இன்ப வேட்கை' என்ற 'அமெரிக்கக் கனவு' இக்காலச் சூழ்நிலையில் நிறைவேறுமா என்பது பற்றி அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இன்னும் கருத்து வேறுபாடு நிலவுகிறது.

## 4. சுவிஸ் நாட்டுக் கூட்டம்

இப்போதுள்ள கூட்டாட்சி அரசுகளில் சுவிஸ் நாட்டுக் கூட்டம் மிகப் பழமையானது. அதன் பெயர் அவ்வாறு இருந்த போதிலும், அது நாட்டுக் கூட்டமாய் இல்லாமல், உண்மையான கூட்டாட்சியாகவே இப்போது இருக்கிறது. ஏனெனில், நாம் நாட்டுக் கூட்டம் என்று சொல்லும் போது, வலிமையுள்ள மத்திய அதிகாரமில்லாத நெகிழ்ந்த ஒரு கூட்டமைப்பையே கூறுகிறோம். ஆனால், சுவிஸ் நாட்டுக் கூட்டம் எப்போதும் அவ்வாறு இருந்ததில்லை. அது 13–ஆம் நூற்றாண்டில் மூன்று மாவட்டங்கள் — காட்டுக் கோட்டங்கள் (Forest Cantons)—ஆஸ்திரியாவின் மேலாண்மைக்கெதிராகப் போரிட்டு வெற்றி பெற்றதன் விளைவாக நிறுவப்பட்டது. பிறகு அது பதின்மூன்று அரசுகளாகப் பரவியது. 1648இல் '**வெஸ்ட்பேலியா உடன்படிக்கை**' அதை இறைமையுடைய சுதந்தர நாடாக ஏற்றுக் கொண்டபோது அதில் பதின்மூன்று அரசுகள் இருந்தன. அப்போது அது வலிமையற்ற மத்திய அதிகாரமுடைய நெகிழ்ந்த ஒரு கூட்டமைப்பாய் இருந்தது. பிரெஞ்சுப் புரட்சி, நெப்போலியன் போர்கள் போன்ற பெரும்புயல்களிலும் குழப்பங்களிலும் மாறுபாடு மலிந்த அதன் வரலாற்றில் அதே போக்குத் தென்பட்டது. 1815இல் ஏற்பட்ட பொதுவான ஒப்பந்தத்தினாலும் அங்கு நிலையான ஓர் உறுதி

நிலை ஏற்படவில்லை. அது இன்னும் தளர்ந்தே காணப்பட்டது. 1847இல் 'ஸண்டர் பண்ட்' (Sonder bund) என வழங்கப்பட்ட ஏழு ரோமன் கத்தோலிக்கக் கோட்டங்கள் தொடங்கிய குறுகிய உள்நாட்டுப்போரில் இந்த நெகிழ்ந்த நிலையைக் காணலாம். 1861 இல் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தெற்கு நாட்டுக் கூட்டம் செய்த தைப்போல, இவை பொதுக் கூட்டத்திலிருந்து விலக முயன்றன. விலக விரும்பிய கோட்டங்கள் தோல்வியுறவே, அரசியலமைப்புத் திருத்தி எழுதப்பட்டது. 1848இல் தீட்டப்பட்ட அரசியலமைப்பு, பழைய நாட்டுக் கூட்டத்தை (ஸ்டாட்டன் புந்த்) கூட்டாட்சி அரசாக (புந்த்ஸ்டாட்) மாற்றியது. 1874இல் 1848-ஆம் ஆண்டு அரசிய லமைப்புப் பெரும்பாலும் மாற்றி வரையப்பட்டது. அதன் சில பிரிவு கள் பிறகு திருத்தப்பட்ட போதிலும், அதன்படியேதான் இன்னும் சுவிட்ஸர்லாந்து ஆளப்பட்டு வருகிறது.

மாநிலத்தின் தனித்தன்மையை அழிக்காமல் மாநிலங்களுக்குள் ஏற்படும் பிணக்குகளைக் கூட்டாட்சி முறை எனும் அரசியல் முறை யினால் தீர்த்து வைப்பதற்கு அமெரிக்க ஐக்கிய நாடுகளைவிடச் சுவிஸ் நாட்டுக் கூட்டம் மிகச் சிறந்த எடுத்துக்காட்டாகும். நாட்டினம் என்ற சொல்லை நாம் எவ்வாறு வரையறுத்தாலும், அது சுவிட்ஸர் லாந்துக்குப் பொருந்தாது. ஏனெனில், சுவிஸ் மக்கள் ஒரு தேசீய சமுதாயமாய் இருந்த போதிலும், ஆறு நூற்றாண்டுகளுக்கு மேலாக அதன் ஒற்றுமையைக் குலைக்க முயன்ற ஆற்றல்களை எல்லாம் எதிர்த்து வந்த போதிலும், அவர்களுக்கு ஒரு பொது மதமோ, மொழியோ எப் போதும் இப்போது கூட இல்லை. அங்குள்ள மலைகளும் இயற்கை எல்லையை அமைக்கும் வகையில் வட்டமாக அமையவில்லை. மக்களுள் மூன்றில் இரண்டு பகுதியினர் ஜெர்மானிய மொழியும், மீதியுள்ளவர் களுள் பெரும்பாலார் பிரெஞ்சு மொழியும், எஞ்சியவர் இத்தாலிய மொழியும் அல்லது 'ரொமான்ஷ்' (Romanche) என்ற திசை மொழியும் பேசுகின்றனர். இம்மொழி வேறுபாடுகளைக் கூட்டாட்சிச் சட்டமன்றம் சட்ட முறைப்படி ஏற்றுக்கொள்கின்றது. அதில் ஓர் உறுப்பினர் ஜெர்மானிய, பிரெஞ்சு, அல்லது இத்தாலிய மொழியில் பேசலாம். இதுமட்டுமல்லாமல், கோட்டங்களின் வரலாற்றில் மிகவும் முற்போக் கான மக்களாட்சியிலிருந்து மிகவும் பிற்போக்கான உயர்குடியாட்சி வரையுள்ள பல வகையான அரசியல் நிறுவனங்களைக் காணலாம். இப்போது இவ்வேறுபாடுகள் எல்லாம் நீக்கப்பட்டு, எல்லாக் கோட் டங்களும் ஏதாவதொரு வகை மக்களாட்சியை ஏற்றுக்கொண் டுள்ளன. ஆயினும், நாட்டுக் கூட்டத்திற்கு உயிரளித்து, அதன் நலத்தையும் பலத்தையும் பேணி வளர்க்கும் ஆர்வமிகு நாட்டுப்பற்று வட்டாரச்சுய ஆட்சியின்மேலுள்ள பற்றுதலை அழித்துவிடவில்லை. இப் பற்றுதல் இல்லையெனில், கூட்டாட்சி இன்றிருக்கும் நிலையில் இருக்க

இயலாது. இக்காலக் கூட்டாட்சி முறை, அரசியலமைப்புக் கோட்பாடுகளைப் பயன்படுத்தியதால், அல்லது அயல் நாட்டு எடுத்துக்காட்டுகளைப் பின் பற்றியதால், வளர்ச்சியுற்றதைவிட, கோட்டங்களின் வழக்கங்களினுலும் அனுபவத்தினுலும் அதிகமாய் வளர்ந்தது.

ஆயினும், 1848இலும் 1874இலும் வாழ்ந்த சீர்திருத்தவாதிகள் அமெரிக்க முறையை விரும்பிப் பின்பற்றியதால், இன்று நாம் சுவிஸ், அமெரிக்க முறைகளுக்கிடையே ஒரு வகை ஒற்றுமையைக் காண்கிறேம். ஆனல், அவர்கள் அமெரிக்க முறைக்கேற்ப முற்றிலும் தங்கள் நிறுவனங்களை அமைக்க விரும்பவில்லை. சுவிஸ்நாட்டுக் கூட்டம் பல வகைகளில் தனிப்பட்டதாய்த் திகழ்கிறது. எடுத்துக்காட்டாக, அமெரிக்க அரசியலமைப்பில் காணுத 'நாடு' என்ற சொல்லைச் சுவிஸ் அரசியலமைப்புப் பயன்படுத்துகிறது; ஆனல், அதே காலத்தில், ஒதுக்கப்பட்ட அதிகாரங்களைக் கோட்டங்களுக்கு அளிக்கும் வண்ணம் அதிகாரங்களைப் பங்கிடுகின்றது. ஆயினும், தேசீய மயமாக்குதல் முற்றுப் பெருமையையும், கூட்டாட்சி முதிர்ச்சி பெருமையையும் அதில் சில இடங்களில் காணலாம். ஏனெனில், அரசியலமைப்பின் மூன்ருவது விதியின்படி, 'கூட்டாட்சி அரசியலமைப்பு, கோட்டங்களின் இறைமையைக் கட்டுப்படுத்தாத வரையில் அவை இறைமை அதிகாரமுடையன. அவ்வாறு இருப்பதனல், அவை கூட்டாட்சி அதிகாரத்திற்கு வழங்கப்படாத எல்லா உரிமைகளையும் செலுத்துகின்றன.' இவ்விதி இறைமையைப் பிரிக்கும் விகிதத்தில் நாட்டின் ஒற்றுமையைக் குறைக்கிறது. அதற்கு மாருக, ஐந்தாவது ஆருவது விதிகளின்படி கோட்டங்களின் அரசியலமைப்புகள் கூட்டாட்சி அதிகாரத்தைச் சார்ந்துள்ளன. ஆகவே, அவை, அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மாநில அரசியலமைப்புகளைப்போல அவ்வளவு உறுதியாய் இல்லை. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மாநில அரசியலமைப்புகள், தலைமை நீதி மன்றம் விளக்கிப் பொருள் கூறும் அரசியலமைப்பைச் சார்ந்துள்ளன. ஆனல், சுவிஸ் கோட்டங்களின் அரசியலமைப்புகள் கூட்டாட்சி அதிகாரத்தைச் சார்ந்திருப்பதால், அரசு முழுவதிலும் கூட்டாட்சிப் பண்புகள், அமெரிக்காவிலிருப்பதை விடக் குறைவாகவே காணப்படுகின்றன.

ஆனல், சுவிஸ்ட்ஸர்லாந்தில் தேசீய, மாநில உரிமைகள் பாதுகாக்கப்படுகின்றன. இதைக் 'குடியொப்பம்' என்கிறேம். அமெரிக்க ஐக்கியநாடுகளில் கூட்டாட்சிச் செயல்களுக்கு இதைப் பயன்படுத்துவதில்லை. இதைப்பற்றிப் பிறகு விரிவாகக் கூறுவோம். சுவிஸ் அரசியலமைப்பின் ஆருவது விதியின்படி மாநில அரசியலமைப்புகளுக்குக் கூட்டாட்சி அதிகாரத்தின் ஆதரவு தேவையென்றும், மாநில மக்கள் அரசியலமைப்பை ஏற்றுக்கொள்வார்கள் என்ருல் அவ்வாதரவை மத்திய அதிகாரம் கொடுக்க வேண்டுமென்றும்

இங்குக் குறிப்பிடுவது போதும். மேலும், பெரும்பான்மையான மக்கள் விரும்பினால், திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்படவேண்டும். மாநிலங்களின் ஒற்றுமை தளர்ந்திருப்பதை நாட்டுக் கூட்டத்தின் மேல்சபையாகிய மாநிலங்களின் சபையில் (Standerat) காணலாம். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் செனட்டில் இருப்பது போல, அதில் ஒவ்வொரு மாநிலத்திலிருந்தும் உறுப்பினர் இருவர் (மொத்தம் 44 உறுப்பினர்) இருந்த போதிலும், சுவிஸ் அரசியலமைப்பு அமெரிக்க அரசியலமைப்பைப் போலல்லாமல், அவர்கள் தெரிந்தெடுக்கப்படும் முறையையும் அவர்களின் பதவிக்காலத்தைத் தீர்மானிப்பதையும் மாநிலங்களுக்கே விட்டுவிடுகிறது. ஆனால், அமெரிக்க ஐக்கிய நாடுகளில் (1913-ஆம் ஆண்டின் திருத்தத்தின்படி) மக்கள் செனட்டு உறுப்பினர்கள் ஒரே விதமாகத் தேர்ந்தெடுக்க வேண்டிய முறையை அரசியலமைப்புக் குறிப்பிடுகிறது.

சுவிட்ஸர்லாந்தின் கூட்டாட்சி நிருவாகத்துறை ஒரு தனி வகையைச் சேர்ந்தது. இதைப்பற்றிப் பின்னோர் இயலில் ஆராய்வோம். நீதித்துறையைப் பொறுத்தவரையில், தலைமை நீதிமன்ற நீதிபதிகளைச் சட்ட மன்றத்தின் இரு சபைகளும் ஒரே மன்றமாய் அமர்ந்து ஆறு ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கும். ஆனால், அவர்கள் மீண்டும் தேர்ந்தெடுக்கப்படலாம். பெரும்பாலும் அவர்கள் மீண்டும் தேர்ந்தெடுக்கப்படுகின்றார்கள். அமெரிக்க ஐக்கிய நாட்டின் தலைமை நீதி மன்றத்திற்கு இருப்பது போலச் சுவிஸ் நீதி மன்றத்திற்கு அரசியல் அமைப்புக்கு உரை விளக்கம் செய்யும் அதிகாரம் இல்லை. ஏனெனில், எந்தக் கூட்டாட்சிச் சட்டமும் அரசியலமைப்பின் பிரிவுக்கு முரணானதெனக் கூறும் அதிகாரம் சுவிஸ் நீதி மன்றத்திற்கில்லை. அந்த அதிகாரம் சட்டத்தை இயற்றும் சட்டமன்றத்திற்குத் தெளிவாக அளிக்கப்பட்டுள்ளது. ஆனால், தலைமை நீதி மன்றம் கோட்டங்களுக்கிடையில் நிகழும் பிணக்குகளைத் தீர்த்து வைக்கிறது. எல்லா வழக்குகளிலும் இறுதி மேல் வழக்கு நீதி மன்றமாகவும் அது விளங்குகிறது.

சுருங்கக் கூறினால், சுவிஸ் அரசியலமைப்பின் அதிகாரப் பங்கீட்டில் 'ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள்' கோட்டங்களிடம் உள்ளன. அரசியலமைப்பு மேலாண்மையுடையதெனினும், குடியொப்பம், மக்கள் தொடக்க உரிமை ஆகிய மக்களாட்சி முறைகள் அதை ஒவ்வொரு நிலையிலும் கட்டுப்படுத்தி வருகின்றன. இறுதியாக அரசியலமைப்புக்கு உரை விளக்கம் கொடுக்கும் அதிகாரம் கூட்டாட்சி நீதி மன்றத்திற்கு இல்லை.

# 5. ஆஸ்திரேலியப் பொதுநலக் கூட்டு

கூட்டாட்சியின் இயல்பான பண்புகள் எல்லாம் ஆஸ்திரேலிய அரசியலமைப்பில் காணப்படுகின்றன. குறைந்த, இணையதிகார முடைய நிறுவனங்களுக்கிடையே அதிகாரம் பங்கிடப்பட்டுள்ளதை யும், அரசியலமைப்பின் மேம்பாட்டையும், அரசியலமைப்பிற்கு உரை விளக்கம் தரும் நீதிமன்ற அதிகாரத்தையும் இதில் காணலாம். இந்த இன்றியமையாத இயல்புகளிலெல்லாம் ஆஸ்திரேலியப் பொது நலக் கூட்டு, கனடாக்குடியேற்ற உரிமை நாட்டைவிட அமெரிக்க ஐக்கிய நாடுகளையே அதிகமாக ஒத்திருக்கின்றது. இவ்வாறு அது ஒன்றை ஒத்திருப்பதற்கு மிக முக்கியமான வரலாற்றுக் காரணங்கள் உண்டு. ஒரு முழுக் கண்டத்திற்கென வரையப்பட்ட அரசியலமைப் பிற்கு ஆஸ்திரேலியா ஒரு தனி எடுத்துக்காட்டாகும். ஏனெனில், ஒரு கண்டத்தில் வாழும் மக்கள் ஒரே இனத்தைச் சேர்ந்திருப்பதை இங்கு மட்டுமே காண இயலும். அதன் குறுகிய வாழ்க்கையை எண்ணிப் பாருங்கள். 1799இலேதான் முதன்முதலில் பாட்டனி வளை குடாவில் (Botany Bay) குடியேற்றம் நடைபெற்றது-பிறகு எவ்வளவு விரைவாக உலகின் முற்போக்கான சமூக ஜனநாயகங்களில் ஒன்றாக வளர்ந்துவிட்டதென்பதை உன்னிப் பாருங்கள். ஐம்பதாண்டு களுக்கும் குறைந்த காலத்தில் உருவான அரசாங்க அமைப்பு வாயி லாக அது இந்நிலையை அடைந்துள்ளது.

ஒவ்வொரு குடியேற்ற நாடும் நிறுவப்பட்ட போது நிலவிய சூழ்நிலைகளும், அவற்றில் தோன்றிய தேசீய ஒருமைப்பாட்டு உணர்ச் யும் அவற்றிற்கு முதலில் தாய் நாட்டின்மேலும் பிறகு 1900இன் கூட்டாட்சி அரசியலமைப்பின் மேலும் ஒரு பொதுப்பற்றை உண்டு பண்ணின. ஆனால், இந்த அரசியலமைப்பு ஐரோப்பாவைவிடச் சிறிது குறைந்த பரப்பளவிற்குப் பயன்பட வேண்டியிருந்ததுமல்லாமல் அப்போது இலண்டனிலிருந்ததைவிடக் குறைந்த தொகையான மக்களின் அரசியல் வாழ்வுக்கு வழிவகுக்கவேண்டியதாயும் இருந்தது. குடியேற்ற நாடுகளின் பரந்த நிலப்பகுதியும், செய்திப்போக்குவரத்து வளர்ச்சி பெறாத அப்பகுதியில் அவற்றிற்கிடையே இருந்த பெருந் தொலைவும் போன்ற இயற்கை நிலைகள் காரணமாக, அவை தவிர்க்க இயலாதவாறு தனித்துப் பிரிந்ததுமல்லாமல், வட்டார உணர்ச்சியும் அங்கு வளரத்தொடங்கியது. இவ்வுணர்ச்சியை மிகவும் கவனமாகக் கையாள வேண்டியிருந்தது. இதுதான் அத்தகைய கூட்டாட்சி முறை அமைக்கப்படுவதற்குக் காரணமாய் இருந்தது. ஜப்பானியரின் ஏகாதிபத்தியப் போக்கினால் விளைந்த பொது ஆபத்தைக்கண்டு அஞ்சியது காரணமாகவே ஆறு குடியேற்ற நாடுகளும் கூட்டாட்சியை அமைத்தன. கடந்த நூற்றாண்டின் இறுதிப் பகுதி வரை இந்த

இடையூறு தோன்றவில்லை. ஆனால், இரண்டாவது உலகப் போரின் போது இது ஆஸ்திரேலியர்களுக்கு அச்சம் தரும் பேரிடராய் வரவிருந்தது. ஆகவே, இக்குடியேற்ற நாடுகள் வலிமை மிக்க மத்திய அரசாங்கத்தையுடைய அரசை நிறுவ விரும்பவில்லை. அதற்கு மாறாக, அவற்றின் நோக்கத்திற்கேற்ப, கூட்டாட்சியை அமைக்கும் நாடுகளின் அதிகாரங்களை மிகக் குறைவாகக் கவரும் ஓர் ஐக்கியத்தை அமைக்க வழி தேட விழைந்தன.

அதே காலத்தில், கூட்டாட்சிக்கு முன்னிருந்த எந்த அரசாங்கத்தையும்விட அதிக அதிகாரமுடைய ஓர் அரசாங்கம் நாட்டின் தொழில் சமூக முன்னேற்றத்திற்குத் தேவையென்றும், இலண்டனிலுள்ள பிரிவி கவுன்ஸிலுக்கு வழக்குகளை எடுத்துச் செல்வதால் ஏற்படும் தடங்கலையும் செலவையும் தவிர்ப்பதற்காக ஒரு மேலாண்மையுள்ள நீதி மன்றத்தை நிறுவவேண்டுமென்றும் மக்கள் உணர்ந்தார்கள். அதன் விளைவாக, கூட்டாட்சி, பொதுப் பாதுகாப்புக்கென அமைக்கப்படும் கூட்டமைப்பைவிட மேலானதாய் இருந்தது. மேலும், அது ஆஸ்திரேலியர்கள் ஆவலுடன் நம்பும் சமூகச்சீர்திருத்தச் சட்டங்களை ஆதரிக்கும் சிறந்த கருவியாகவும் பயன்பட்டது.

அரசியலமைப்பு, பொது நலக் கூட்டு அரசாங்கத்தின் அதிகாரங்களை விளக்கி, எஞ்சியவற்றை மாநிலங்களுக்கு விட்டுவிடுகிறது. குறிக்கப்பட்டுள்ள அதிகாரங்களின் பட்டியல் நீண்டதாய் இருந்தபோதிலும், அது, மாநிலங்களுக்கு ஏராளமான உரிமைகளை அளிக்கின்றது. அரசியலமைப்பு நிறுவியுள்ள நிருவாகத் துறை. பெயரளவில் சபையுடன் கூடிய கவர்னர் ஜெனரலாய் (Governor General in Council) இருந்த போதிலும், உண்மையில் கூட்டாட்சியின் சட்டமன்றத்திற்குப் பொறுப்புள்ளதாய் இருக்கிறது. கூட்டாட்சியின் சட்டமன்றத்தில் செனட்டு, பிரதிநிதிகளின் சபை என்னும் இரு சபைகள் உள்ளன. செனட்டில் மாநிலங்களுக்குச் சமப்பிரதிநிதித்துவம் (ஒவ்வொன்றிலிருந்தும் பத்துப் பேரைத்தேர்ந்தெடுக்கும் உரிமை) அளிக்கப்படுகிறது. கீழ்ச்சபையில் மக்கள் தொகையின் அடிப்படையில் பிரதிநிதித்துவம் வழங்கப்படுமுன்னால் பாராளுமன்றத் தேர்தலுக்கு மாநிலங்கள் விரும்பிய முறைகளைப் பயன்படுத்த அரசியலமைப்பு அனுமதி அளித்தது. ஆனால், கூட்டாட்சிச் சட்டமன்றம், இந்த ஏற்பாட்டை அரசியலமைப்பைத் திருத்தாமல் மாற்றக்கூடும். கூட்டாட்சிச் சட்டம் இப்போது ஏற்படுத்தியுள்ள முறையின்படி, பிரதிநிதிகளின் சபை உறுப்பினர்கள் பொதுநலக்கூட்டு முழுவதிலும் ஒற்றை உறுப்பினர் தொகுதிகளில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். செனட்டு உறுப்பினர் ஒவ்வொரு மாநிலத்திலும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அதற்கு மாநிலம் முழுவதும் தேர்தல் தொகுதியாகக் கருதப்படுகிறது. இரு தேர்தல்களும் விருப்பவரிசை வாக்கு முறைப் படி (Preferential

voting) நடை பெறுகின்றன. இதைப்பற்றிப் பிறகு விளக்கு வோம்.

மேலும், அரசியலமைப்புத் தலைமை நீதிமன்றமுள்ள கூட்டாட்சி நீதித்துறையை நிறுவியுள்ளது. அது, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நிகழ்வது போல, அரசியலமைப்புக்கு உரை விளக்கம் செய்யும் அதிகாரம் பெற்றிருக்கின்றது. அது மாநிலங்களுக்கிடையில்—அல்லது மாநிலத்திற்கும் கூட்டாட்சி அரசாங்கத்திற்குமிடையே—ஏற்படும் பிணக்குகள் சார்ந்த வழக்குகளைத் தீர்த்துவைக்கின்றது. ஆஸ்திரேலியாவிலுள்ள தலைமை நீதிமன்றத்திற்கும் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலுள்ள தலைமை நீதி மன்றத்திற்கும் வேறுபாடு உண்டு. அமெரிக்க ஐக்கிய நாடுகளில், முற்றிலும் மாநிலச் சட்டம் சார்ந்த வழக்குகளில் மாநிலங்களிலிருந்து தலைமை நீதிமன்றத்திற்கு மேல் வழக்குத்தொடர இயலாது ; ஆனால்; ஆஸ்திரேலியாவில் அவ்வாறு தொடர இயலும் ; அவ்வாறு நடைபெற்றும் வருகின்றது.

நாம் மேலே விளக்கியவாறு, ஆஸ்திரேலியப் பொதுநலக்கூட்டு ஓர் உண்மையான கூட்டாட்சி முறையாய் இருப்பதால், மாநிலங்கள் உண்மையில் தனித்து இயங்குகின்றன. அவை செனட்டில் சமப் பிரதிநிதித்துவம் பெற்றுள்ளன. ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு கவர்னர் இருக்கின்றார். கனடாவில் நிகழ்வது போல அவரைக் கூட்டாட்சி அரசாங்கம் நியமிப்பதில்லை ; அல்லது அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நடப்பது போல, மக்கள் அவரைத் தேர்ந்தெடுக்கவில்லை. ஆங்கில அரசியாரே அவரை நேராக நியமிக்கிறார். அதாவது, நடைமுறையில் ஆங்கில நாட்டு அரசாங்கம், மாநில அரசாங்கத்தின் இசைவின் பேரில் அவரை நியமிக்கிறது. மாநிலம் விரும்புமானால், மாநிலச் செய்திகள் பற்றிச் சட்டமியற்றுவதற்காகக் கூட்டாட்சிப் பாரராளுமன்றத்தின் துணையை நாட மாநிலத்திற்கு அரயசிலமைப்பு அனுமதி அளிக்கிறது. மேலும், 1929இல் பொது நலக்கூட்டு, எல்லா மாநிலங்களின் கடன்களையும் ஏற்று, கடன்வாங்க வல்ல ஒரே நிறுவனமாய் மாறியது. இதன் விளைவாகக் கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கத்திற்கும், அமெரிக்காவிலிருப்பதைவிட மிக நெருங்கிய தொடர்பு ஏற்பட ஏதுவுண்டாயிற்று.

இறுதியாக, அரசியலமைப்பு ஒரு கூட்டாட்சி மாவட்டத்தை அமைக்க ஏற்பாடு செய்தது. அது முடிவில் எந்த மாநிலத்தையும் சாராமல், கூட்டாட்சி அரசாங்கத்தின் தாயகமாக அமையவிருந்தது. கான்பரா (Canberra) என்ற இந்நிலப் பகுதி 900 சதுரமைல் பரப்பளவுள்ளது. நியூ ஸௌத் வேல்ஸ் (New South Wales) இதைப் பொது நலக்கூட்டிற்கு அளித்தது. இது ஸிட்னியிலிருந்தும் மெல்போர்னிலிருந்தும் சமத் தொலைவிலிருக்கின்றது. 1928இல் இங்குக்கூட்டாட்சி அரசாங்கம் நிறுவப்பட்டது.

கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரங்களையும் மாநில அரசாங்க அதிகாரங்களையும் பற்றி, அமெரிக்காவிலிருப்பது போல, ஆஸ்திரேலியாவிலும் அண்மையில் கருத்து வேறுபாடு நிலவிவருகிறது. குறிப்பாகப் பொது மக்கள் சுகாதாரம், வாணிக நிறுவனங்களின் (Trading Companies) நடவடிக்கைகள், தொழில் தகராறுகள், வேலையின்மை, பயிர்த் தொழில், மீன்பண்ணை, வான் போக்கு வரத்துக் கட்டுப்பாடு போன்ற முக்கிய காரியங்களில் கூட்டாட்சி அரசாங்கம் பொதுநலக் கூட்டு என்ற பொது அடிப்படையில் செயலாற்ற இயலவில்லை. 1938-ஆம் ஆண்டு, நவம்பர்த்திங்கள், 22-ஆம் நாளன்று, அரசாங்கம், அரசியலமைப்பைத் திருத்துவதற்கென 1939-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் ஒரு தனிக்கூட்டம் நடத்த விரும்புவதாகப் பிரதிநிதிகளின் சபையில் அறிவித்தது. சபையின் இரு பிரிவுகளும் இவ்வறிவிப்பை ஆரவாரத்துடன் வரவேற்றன. தேர்வாளர்களுள் பெரும்பான்மையினர் ஆஸ்திரேலியாவை ஆள்வதற்குப்பதிலாக உயர்நீதிமன்றத்தின் பெரும்பான்மையான நீதிபதிகள் அதை ஆண்டுவந்தார்களென் எதிர்க்கட்சித் தலைவர் ஏற்கெனவே கூறியிருந்தார். அந்த நீதிபதிகள் 'சட்டத்தைத் தகுதி காரணமாகத் தள்ளாமல், எழுதப்பட்ட அரசியலமைப்பின் அதிகாரத்திற்கு அப்பாற்பட்டதென்ற காரணத்தினால் தள்ளி வந்தார்கள்,' எனக் கூறினர். மேலும், அவர் கூறியது போல, நாட்டின் ஒவ்வொரு நெருக்கடி நிலையும் ஆஸ்திரேலியாவின் கைகளை அரசியலமைப்பெனும் விலங்கினால் பிணைத்தது. இதன் விளைவாகச் செயலின்மையும் பெருந்தடங்கலும் நேர்ந்ததுடன், பாராளுமன்ற முறையை மக்கள் இகழவும் தலைப்பட்டார்கள்.' அவர் கருத்தின்படி, சமநிலையிலுள்ள இறைமையதிகாரமுடைய ஒன்றுபட்ட ஒரு நிறுவனத்தை உண்டுபண்ண இயலாது. அவற்றில் அறுநூற்றுவருக்கு அதிகமான உறுப்பினரையும் அமைச்சர் எழுபதின்மரையும் கொண்ட பதின்மூன்று சட்டசபைகள் இருந்தன. ஒவ்வொரு மாநிலமும் வெளி நாடுகளுக்குத் தனிப்பிரதிநிதிகளை அனுப்பி வந்தது. ஒவ்வொன்றிலும் தனிப்பொதுத்துறை அலுவல்கள் இருந்தன.

மாநிலச் சட்ட மன்றங்கள் தமக்கு இருந்த அதிகாரங்களை விட்டுக் கொடுக்க விரும்பாததால்; இதைத் தீர்ப்பதற்குப் பொது மக்களின் விருப்பத்தை அறிதலே ஒரே வழி என்ற எண்ணம் எழுந்தது. ஆனால், இதைக் குடியொப்பத்திற்கு விடுவதற்கு முன்னால் இரண்டாவது உலகப்போர் மூண்டது. 1944இல் கூட்டாட்சிப் பிரதிநிதிகளும் மாநிலப் பிரதிநிதிகளும் கூடிய மாநாட்டில் இதைப் பற்றி வாதம் தொடர்ந்து நடைபெற்றது. ஆனால், மாநிலங்கள் தங்கள் அதிகாரங்களில் பெரும்பகுதியைக் கைவிட வேண்டுமென்ற அதன் திட்டம் பின் நிகழ்ந்த குடியொப்பத்தில் தோல்வியுற்றது. ஆயினும், தெளிவாகத் தீட்டப்பட்ட சில சமூக அலுவல்களைக் கூட்

டாட்சி அடிப்படையில் அமைக்கவேண்டுமென்ற திட்டமொன்றை 1947இல் மக்கள் ஆவலுடன் ஆதரித்தார்கள். ஆனல், 1951இல் பொது உடைமைக்கெதிரான சட்டங்களைத் தேவையானபோது இயற்றும் அதிகாரத்தைப் பொதுநலக் கூட்டுப் பாராளுமன்றத்திற்கு வழங்க வேண்டுமென்று அரசாங்கம் கொண்டுவந்த திட்டம் குடியொப்பத்தில் தோல்வியுற்றது. ஆகவே, தெளிவாகக் குறிக்கப்படாததும், முக்கிய அரசியற்கட்சிகளால் ஆதரிக்கப்படாததுமான எந்தத் திருத்தத்தையும் மக்கள் ஏற்கத் தயங்குகின்றார்கள் என்பது புலனுகிறது.

அண்மையில், கூட்டாட்சிக்கும் மாநிலங்களுக்குமிடையேயுள்ள அதிகாரத் தொடர்புகளை ஆய்வதற்காக, செனட்டு, பிரதிநிதிகளின் சபை ஆகிய இரு சபைகளின் கூட்டுக் குழுவொன்று நிறுவப்பட்டது. அக்குழு 1958இலும், 1959இலும் இரண்டு அறிக்கைகளைச் சமர்ப்பித்தது. ஆயினும், 1962 வரை அவற்றைப்பற்றிய நடவடிக்கை ஒன்றும் எடுக்கப்படவில்லை.[1]

## 6. கனடாக் குடியேற்ற உரிமை நாட்டின் மாற்றியமைக்கப்பட்ட கூட்டாட்சி முறை

நாம் இது வரை ஆராய்ந்த மூன்று எடுத்துக்காட்டுகளைவிடக் கனடாக்குடியேற்ற உரிமை நாட்டில் கூட்டாட்சிப் பண்புகள் குறைந்த அளவில் காணப்படுகின்றன. ஏனெனில், அமெரிக்க ஐக்கிய நாடுகள், சுவிட்ஸர்லாந்து, ஆஸ்திரேலியா ஆகியவற்றில், 'ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள்' மாநிலங்களிடம் உள்ளன; ஆனல், கனடாவில் அதற்கு மாருய் இருக்கிறது. இதற்காகத்தான் கனடாவை 'மாற்றியமைக்கப்பட்ட கூட்டாட்சி' எனக் கூறுகிறேம். கனடாக் கூட்டாட்சியின் உறுப்புகளை உண்மையான அரசுகள் எனக் கூற இயலாது. அவை இங்கிலாந்தின் வட்டார அரசாங்கங்களைவிட அதிக ஆற்றலுள்ளவையாய் இருந்த போதிலும், தென்னுப்பிரிக்க ஐக்கியத்தின் நான்கு மாநிலங்களைவிட அதிக அதிகாரம் பெற்றிருந்த போதிலும், அவற்றை மாநிலங்கள் என்றே வழங்குகிறேம். கனடாக் குடியேற்ற உரிமை நாடு முதிர்ச்சி பெற்ற கூட்டாட்சியாய் இல்லாவிடினும், கிரேட் பிரிட்டன், பிரான்ஸ், நியூஜீலந்து போன்ற ஒருமுக அரசுகளிலிருந்து பெரிதும் வேறுபட்டிருக்கிறது. ஆயினும், கனடாவின் கூட்டாட்சி முறைக்கும் இந்த இயலில் விளக்கப்படும் பிற அரசு

1. இலண்டனிலுள்ள ஆஸ்திரேலியா நிலையத்தின் நூலகத்தினர் இவ்வரிய ஆவணங்களை நூலாசிரியருக்குக் கொடுத்துதவினர். 7-ஆம் இயலில் அரசியலமைப்பின் திருத்த முறைகளை விளக்கும் போது இவற்றைப்பற்றி மீண்டும் குறிப்பிடுவோம்.

களின் கூட்டாட்சி முறைக்கும் மிக முக்கியமான வேறுபாடுகள் உண்டு.

கனடா, பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளில் மிகப் பழமையானதாய் இல்லாவிடினும் (அப்பெருமை நியூஜீலந்தைச் சாரும்), சுய ஆட்சி பெற்ற பிரிட்டிஷ் குடியேற்ற உரிமை நாடுகளுள் மிகுதொன்மை வாய்ந்தது எனக் கூறலாம். ஏனெனில், அதுதான் முதன்முதலில் குடியேற்ற உரிமை நாட்டு நிலையை—அதாவது பொறுப்புள்ள சுய ஆட்சியைப்—பெற்றது. அம்முறையை அது வெற்றிகரமாக நடத்திய தன் விளைவாகவே பிறநாடுகளும் அதைப் பிறகு பொதுவாக ஏற்றுக் கொண்டன. பொறுப்புள்ள அரசாங்கத்தைப் பற்றி நாம் பிறகு பார்ப்போம். இங்குக் கனடாவின் கூட்டாட்சி முறையைக் கவனிப் போம், அது பொறுப்புள்ள அரசாங்கத்தின் கொள்கையினின்று முற்றிலும் வேறுபட்டது. கூட்டாட்சி முறையில் கனடா ஆஸ்திரேலி யாவைவிட மிக முந்தியது. ஏனெனில், அதன் கூட்டாட்சி முறை 1867-ஆம் ஆண்டின் பிரிட்டிஷ் வடவமெரிக்கச் சட்டத்தின் பயனாக நிறுவப்பட்டது. முதலில் ஒன்டேரியோ (Ontario), கியூபெக்கு (Quebec), நோவாஸ் கோஷியா (Nova Scotia), நியூ பிரன்ஸ்விக்கு (New Brunswick) ஆகிய நான்கு மாநிலங்கள் கூட்டாட்சியில் இருந்தன. பிறகு அக்கூட்டாட்சி ஏழு மாநிலங்களைக் கொண்ட கூட்டாட்சியாய் விரிந்தது. இப்போது அதில் பத்து மாநிலங்கள் உள்ளன. கனடாக் கூட்டாட்சியின் வரலாறு ஆஸ்திரேலியக் கூட்டாட்சியின் வரலாற்றிலிருந்து வேறுபட்டது. அது வெளிப்புறத்தை விட உட்புறத்திலிருந்து அதிகமாய் உந்தப்பட்டது. ஆனால், கனடா வின் கூட்டாட்சி இப்போதுள்ள உருவத்தைப் பெறுவதற்கு உட்காரண மும் வெளிக்காரணமும் உண்டு. கனடா, ஆஸ்திரேலியாவைப் போலல்லாமல், தென்னாப்பிரிக்காவைப்போல பிரிட்டிஷ் பிரெஞ்சு ஆகிய நாட்டினங்களின் சச்சரவுகளினால் அலைக்கழிக்கப்பட்டது. இவை நீண்ட காலமாய் நிகழ்ந்துகொண்டிருந்தன.

கனடாவிற்கு வலிமை பொருந்திய மத்திய அரசாங்கம் உடனே தேவையாய் இருந்தது. ஆயினும், 1840-ஆம் ஆண்டு சட்டத்திற் குப் பிறகு ஒருமுக ஆட்சிமுறை நிறுவப்பட்டபோதிலும், அது தோல்வி யுற்றது. இன்னோர் இடர்ப்பாடு என்னவென்றால், இச்சட்டம் கியூபெக்கு, ஒன்டாரியோ இவற்றிற்கு மட்டும் பயன்பட்டது. ஆனால், இவை இரண்டுடன் இணைந்து ஒரு பொதுவான அரசாங்க முறை அமைக்க மற்ற இரண்டு அல்லது மூன்று மாநிலங்கள் விரும்பின. இம்மாநிலங்களுக்குள் ஒரு நெகிழ்ந்த கூட்டமைப்பு-நாட்டுக் கூட்டம்-மட்டும் ஏற்பட்டிருந்தால் அதனால் யாதொரு பயனும் விளைந்திராது. அது எந்தச் சிக்கலையும் தீர்க்க முடிந்திராது. அதற்கு மாறாக ஒருமுக

அரசும் ஒழுங்காய் இயங்கியிராது. மேலும், அப்போது கனடாவின் பரந்த பகுதிகளில் மக்கள் குடியேருததால், இரண்டு அமைப்புகளும் அதன் நிலைமைக்கு ஏற்றனவாய் இல்லை. நெகிழ்ந்த ஒரு நாட்டுக் கூட்டத்தை அமைத்திருந்தால், அதன் விளைவாகப் பிறகு சச்சரவுகள் பல தோன்றியிருக்கலாம். அதற்கு மாருக ஒருமுக அரசு (அப்போதுள்ள அரசியற்பகுதிகளுக்குப் பயன்படாத போதிலும்) முழு வளர்ச்சி பெற்ற அரசியற்சமுதாயங்களுக்கே பொருத்தமாய் இருந்த போதிலும், இன்னும் பிறவாத சமுதாயங்களுக்குப் பொருந்தாமல் இருந்திருக்கலாம்.

ஆகவே, கனடா ஏன் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கூட்டாட்சியைப் போன்ற ஓர் அமைப்பை நிறுவவில்லை ? இக்கேள்விக்கு விடை காணவேண்டுமானுல், கனடாவில் மக்கள் கூட்டாட்சி ஐக்கியத்தைப் பற்றி ஆழ்ந்து ஆராய்ந்துகொண்டிருந்த காலத்தைப் (1864-1867) பார்க்க வேண்டும். அமெரிக்க உள் நாட்டுப்போரின் (1861-1865) விளைவாகப் பலர், சிறப்பாக அதை அண்மையிலிருந்து பார்த்த கனடா மக்கள், கூட்டாட்சியில் நம்பிக்கையை இழந்தார்கள். ஏனெனில், அது அமெரிக்காவில் பயனிழந்து காணப்பட்டது. அங்குக் கூட்டாட்சி முறை முறிந்துவிட்டது போலத் தோன்றியது. கனடாவிலுள்ள முக்கிய அரசியல் வல்லுநர்கள் அது முறிந்துவிட்டதென நம்பியதால், மக்கள் இகழ்ந்து பேசிய உண்மையான கூட்டாட்சி முறைக்கும் கனடாவின் தேவைகளுக்குப் பொருந்தாத ஒருமுக அரசுக்கும் இடையேயுள்ள ஓர் அரசியல் முறையைக் கண்டு பிடித்தனர். இப்புதிய முறை பெரும்பிணக்குகளைக் கூடிய வரை குறைக்க வல்ல கூட்டாட்சி ஐக்கியமாய் விளங்கியது.

இவ்வாறு, கனடாவின் அமைப்பில் காணப்படும் அதிகாரப் பங்கீடு பொதுவாக அமெரிக்க ஐக்கிய நாடுகளில் காணப்படுவதற்கு எதிர் மாருய் இருக்கிறது. கனடாவில் மாநிலங்களின் அதிகாரங்கள் குறிக்கப்பட்டு, 'ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள்' கூட்டாட்சி அரசாங்கத்திடம் விடப்பட்டுள்ளன. 1867-ஆம் ஆண்டு சட்டத்தில் கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரங்கள் குறிப்பிட்டுள்ளன. அவற்றைத்தெளிவாகக் குறிப்பிடுவதற்காக அதில் குறித்துள்ளார்களே தவிர, கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரங்களைக் குறைப்பதற்காக அன்று. மாநிலங்களுக்கு மிகுதியான அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டு, (மாநிலத் தலைவரின் பதவியை அழிப்பதைத்தவிர) மாநில அரசியலமைப்பைத் திருத்துதல், மாநிலத்திற்குள் நேர்முக வரி விதித்தல், குற்றவியல் சீரியல் வழக்குகளில் நீதி வழங்குதல், மாநில எல்லைக்குள் நகராட்சி அரசாங்கத்தைக் கட்டுப்படுத்துதல் ஆகியயவை. இவற்றைச் சாதாரண வட்டார அரசாங்கங்கள் செலுத்துவதில்லை.

ஆஸ்திரேலியாவில் இருப்பது போலக் கனடாவிலும் ஒரு கவர்னர் ஜெனரல் இருக்கின்றார். பெயரளவில் ஆங்கில அரசு அவரை நியமித்தபோதிலும், உண்மையில் குடியேற்ற உரிமை நாட்டு அரசாங்கத்தின் இசைவுபெற்றே பிரிட்டிஷ் அரசாங்கம் அவரை நியமிக்கிறது. மாநிலத்தலைவராகிய லெப்டினன்டு கவர்னரை மாநில அரசாங்கம் நியமிக்கிறது. ஆஸ்திரேலியாவில் இவ்வாறு நடைபெறுவதில்லை. மாநிலங்களின் தனித்தன்மையைப் பொறுத்த வரையில் ஆஸ்திரேலியாவுக்கும் கனடாவிற்கும் உள்ள மற்றொரு வேறுபாட்டைச் செனட்டில் காண்கிறோம். கனடாவில் செனட்டு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படாமல், ஆயுள் முழுவதற்கும் பதவியில் அமர்த்தப்படுகின்றார்கள். இவர்களை மாநிலங்கள் தேர்ந்தெடுப்பதில்லை. பதவி காலியாகும் போது குடியேற்ற உரிமை நாட்டு அரசாங்கம் அதை நிரப்புகிறது. மேலும், கனடாவின் கவர்னர் ஜெனரல் குடியேற்ற உரிமை நாட்டு அரசாங்கத்தின் அறிவுரையின் பேரில், மாநிலச் சட்டங்களை மறுக்க அதிகாரம் இல்லை.

இறுதியாக நீதித்துறையைப் பார்ப்போம்: கனடாவில் ஒரு தலைமை நீதி மன்றம் இருக்கின்றது. ஆனால், அரசியலமைப்பிற்கு உரை விளக்கம் தருவதற்கு அதற்கு அதிகாரம் இல்லை எனலாம். கனடாவில் அவ்வதிகாரம் இருக்க வேண்டிய தேவையில்லை. ஏனெனில், முதலாவது 'ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள்' கூட்டாட்சி அரசாங்கத்திடம் இருக்கின்றன. இரண்டாவது, அரசியலமைப்பின்படி மாநிலச் சட்டங்களை மறுக்கக் கூட்டாட்சி அரசாங்கத்திற்கு அதிகாரம் உண்டு.

ஆஸ்திரேலியா, கனடா இவற்றின் கூட்டாட்சி முறைகளுக்கிடையேயுள்ள வேறுபாடுகளை இங்குச் சுருக்கமாகக் கூறுவோம். முதலாவது, ஆஸ்திரேலிய அரசியலமைப்புக் கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரங்களை வரையறுத்து, 'ஒதுக்கப்பட்ட அதிகாரங்களை' மாநிலங்களுக்கு வழங்குகின்றது. ஆனால், கனடாவின் அரசியலமைப்பு மாநிலங்களின் அதிகாரங்களை வரையறுத்து எஞ்சியவற்றைக் கூட்டாட்சி அரசாங்கத்திற்கு விட்டுவிடுகிறது. இரண்டாவது, ஆஸ்திரேலியாவின் மாநிலக் கவர்னர்கள் கூட்டாட்சியின் தலையீடின்றி நியமிக்கப்படுகின்றார்கள். கனடாவில் குடியேற்ற உரிமை நாட்டு அரசாங்கம் மாநிலத் தலைவர்களாகிய லெப்டினன்டு கவர்னர்களை நியமிக்கிறது. மூன்றாவது, ஆஸ்திரேலியாவில் மாநிலச் சட்டத்தில் தலையிடுவதற்குப் பொது நலக்கூட்டு அரசாங்கத்திற்கு உரிமையில்லை. கனடாவில் மாநிலச் சட்டங்களைத் தள்ளிவிடுவதற்குக் குடியேற்ற உரிமை நாட்டு அரசாங்கம் மறுப்பாணையைப் (veto) பயன்படுத்தலாம். நான்காவது, ஆஸ்திரேலியாவின் தலைமை நீதி மன்றம் அரசியலமைப்புக்கு உரை விளக்கம் தருகின்றது. கனடாவின் தலைமை

நீதிமன்றத்திற்கு அந்த அதிகாரம் குறைந்த அளவில் இருக்கின்றது. ஐந்தாவது, ஆஸ்திரேலியச்செனட்டில், ஒவ்வொரு மாநிலத்திலிருந்தும் சம எண்ணிக்கையில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் உள்ளனர். கனடாவில் குடியேற்ற உரிமை நாட்டின் அரசாங்கம் செனட்டின் உறுப்பினர்களை ஆயுட்காலம் முழுவதற்கும் பதவியில் அமர்த்துகிறது. ஆகவே ஆஸ்திரேலியப் பொதுநலக்கூட்டில் கனடாவிலிருப்பதைவிட மிகுதியான கூட்டாட்சிப் பண்புகள் இருக்கின்றன எனலாம்; அல்லது ஆஸ்திரேலியாவைவிடக் கனடா ஒருமுக அரசை அதிகமாக ஒத்திருக்கிறதெனவும் கூறலாம். இவ்வாறு, கனடா அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு அண்மையிலும் ஆஸ்திரேலியாவிருந்து நெடுந் தொலைவிலும் இருந்த போதிலும், கனடாவைவிட ஆஸ்திரேலியா அமெரிக்க ஐக்கிய நாடுகளை ஒவ்வொரு நுணுக்கத்திலும் அதிகமாய் ஒத்திருக்கின்றது.

## 7. ஜெர்மானியக் கூட்டாட்சி முறை

ஜெர்மனியில் கூட்டாட்சி முறை வளர்வதற்கு நெடுங்காலமானது. 1814இல் மகா சார்லஸ் இறந்ததும் அவரது பேரரசு சரிந்துசிதறியது. பிறகு அதன் ஜெர்மானியப் பகுதி புத்துயிர் பெற்று எழுந்த போது, முன்னுலிருந்ததைப் போல ஒருமுகப்பட்டதாய் இருக்கவில்லை. நிலமானியப் பேரரசின் வரலாறு முழுவதிலும் நாட்டின் பிரிவினையையும், அதிகாரக் குலைவையும், தேர்ந்தெடுக்கப்பட்ட அரசு என்ற திரையினுல் மறைக்க முயன்ற முயற்சிகளைக் காண்கிறோம். கூட்டாட்சிப் பேரரசு போலத் தோன்றிய அதன் எல்லைக்குள் ஆஸ்திரியா, பிரஷ்யா என்னும் இரு பெரும்போட்டி அரசுகள் முளைத்தன. நெப்போலியன் காலத்தில் மத்திய ஐரோப்பா சிறுதுண்டுகளாய்ச்சிதறியது. அவரது வீழ்ச்சிக்குப் பிறகும், இவை இரண்டும் தம் வேறுபாடுகளை விட்டுக்கொடுக்கவில்லை. அப்போது செய்யப்பட்ட ஜெர்மானிய நாட்டுக் கூட்டம் என்ற ஒப்பந்தமும் இறுதியில் அவற்றிடையே பிணக்கை உண்டுபண்ணும் கருவியாகவே முடிந்தது. 1867இல் பிஸ்மார்க்கு ஆஸ்திரியப் பிரஷ்யப் போரில் வெற்றி பெற்றதும், ஆஸ்திரியாவை வெளியேற்றி வடஜெர்மானிய நாட்டுக் கூட்டத்தை நிறுவினர். பிராங்கோ பிரஷ்யப் போரின்போது அதனுடன் தென் ஜெர்மானிய அரசுகளும் சேர்க்கப்பட்டன. போரின் முடிவில் ஜெர்மானியப் பேரரசு வெற்றிகரமாக நிலைநாட்டப்பட்டது. அது முதல் உலகப் போர் முடியும் வரை நிலைத்திருந்தது.

பிஸ்மார்க்கு நிறுவிய ஜெர்மானியப் பேரரசைப் பற்றியோ, அல்லது ஹிட்லர் வீழ்த்திய வெய்மார் குடியரசைப் பற்றியோ இங்கு நாம் விரித்துரைக்கப்போவதில்லை. ஆனுல், அவற்றின் ஒற்றுமை

வேற்றுமைகளைப் பற்றிப் பொதுவான கருத்துகளைக் குறிப்பிட வேண்டும். 1871இல் நிறுவப்பட்ட பேரரசின் கூட்டாட்சி முறை ஒரு தனி வகையைச் சேர்ந்தது. அது கூட்டாட்சியை உண்டுபண்ணிய உறுப்புகளின் உணர்ச்சியால் உந்தப்பட்ட அமைப்புப்போலத் தோன்றியது. அவற்றுள் பல பிரஷ்யாவின் தலைமையில் நிறுவப்பட்டிருந்த ஜெர்மானியச்சுங்க ஐக்கியத்தின் (Zollverin) பொருளாதாரப் பயன்களைச் சில காலம் துய்த்து வந்தன. ஆனால், உண்மையில் அவற்றின் ஆர்வத்தைவிட, பிஸ்மார்க்கின் வன்முறை ஆற்றலே அவற்றைப் பிரஷ்யாவின் மேலாண்மைக்குப் பணியச் செய்தது. பேரரசின் அரசியலமைப்பின்படி மரபு வழிவந்த ஜெர்மானியப் பேரரசர் பிரஷ்யாவின் மரபுவழி வந்த மன்னராகக் கருதப்பட்டார். இதன் விளைவாக வேறொரு மாற்றமும் ஏற்படவில்லையெனினும், பேரரசருக்கு உண்மையிலே பெரிய அதிகாரம் இருந்ததென்பது தெளிவாயிற்று. பேரரசின் சட்ட மன்றச்சபைகள் இரண்டிலும் அதற்கு அதிகமான உறுப்பினர்கள் இருந்ததனால் மட்டுமல்லாமல், உண்மையிலே பிரஷ்யா மேலாண்மையும் பெற்றிருந்தது. மேலும், மக்களின் பிரதிநிதிகளடங்கிய 'ரைக்ஸ்டாக்' (Reichstag) என்ற சபைக்கு உண்மையான அதிகாரம் இல்லை ; 'புந்தஸ்ராட்' (Bundesrat) என்ற அதிகாரம் இருந்தது. இச்சபையில் பிரஷ்யாவுக்கு மிகுந்த செல்வாக்கு இருந்தது. ஆகவே, பழைய ஜெர்மானியப் பேரரசு உண்மையில் கூட்டாட்சியாகவோ அல்லது மக்களாட்சியாகவோ இருந்ததில்லை. ஏனெனில், உண்மையான கூட்டாட்சி முறையில் ஒரு மாநிலம் மட்டும் பெருஞ்செல்வாக்குப் பெறுவதில்லை. உண்மையான மக்களாட்சியில் மக்களின் பிரதிநிதிகளைக் கொண்டிராத ஒரு சபை சட்ட ஆக்க அதிகாரம் செலுத்துவதில்லை. ஆயினும், பேரரசு ஓர் உண்மையான ஐக்கியமாய் இருந்தது. அதில் கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரம் வரையறுக்கப்பட்டிருந்தது; மாநிலங்களின் அதிகாரம் வரையறுக்கப்படவில்லை. ஆனால், கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரங்கள் மிகுதியாய் இருந்தன. 14 எதிர் வாக்குகள் இல்லாதவரை, அரசியலமைப்பைச் சாதாரணச் சட்ட ஆக்க முறைப்படி திருத்தலாம். தலைமை நீதி மன்றம், கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் மாநிலங்களுக்குமிடையே அல்லது இரு மாநிலங்களுக்குமிடையே ஏற்படும் பிணக்குகளைத் தீர்த்து வைத்தது. ஆனால், புந்த்ஸ்ராட் அல்லது மாநிலங்களின் குழுவே தலைமை நீதி மன்றமாய் இருந்தது. இதில் பிரஷ்யாவின் செல்வாக்கு மிகுந்திருந்ததாலும், பேரரசர் பிரஷ்யாவின் மன்னராய் இருந்ததனாலும், முதல் உலகப் போருக்கு முன் ஜெர்மானியப் பேரரசில் உண்மையான கூட்டாட்சி முறை எவ்வளவு குறைந்த அளவில் நிலவியது என்பதை எளிதில் அறிந்துகொள்ளலாம்.

முதல் உலகப் போர் பிரஷ்யாவின் அதிகாரத்தை மட்டுமன்றி ஜெர்மானியப் பேரரசில் இணைந்த எல்லா அரசுகளின் அரசமரபுகளை யும் அழித்துவிட்டது. ஆகவே, ஜெர்மானிய அரசின் அடிப்படை யையே மாற்றியமைக்க நல்லதொரு வாய்ப்பு ஏற்பட்டது. பிரஷ்யா வின் ஆற்றலெல்லாம் அழிந்துவிட்டதால், ஒருமுக அரசு ஒன்றை உருவாக்க வேண்டுமெனப் பலர் முனைந்தனர். பல நாள் கலந்தா ராய்ந்த பிறகு, வலிமையுள்ள கூட்டாட்சி அரசாங்கத்தையும், தேர்ந் தெடுக்கப்படும் தலைவரையுமுடைய புதிய கூட்டாட்சியை நிறுவ வேண்டுமென முடிவு செய்தனர்; எந்த ஜெர்மானியக் குடியும் தலைவரின் பதவியைப் பெற வாய்ப்புகள் அளிக்க வேண்டுமெனவும் தீர்மானித்தனர். அப்போது நிலப்பகுதிகளில் சில மாற்றங்கள் நிகழ்ந்தன. புதியமாநிலங்களுள் (Lander) ஒவ்வொன்றும் ஜனநாயக அரசியலமைப்பை வரைதல்வேண்டும் என்பது முடிவுசெய்யப்பட்டது.

வெய்மார் குடியரசின் அரசியலமைப்பில் கூட்டாட்சி அரசாங் கத்தின் அதிகாரங்களை இரு பட்டியல்களில் காண்கிறோம். முதலாவது, கூட்டாட்சி அரசாங்கத்தினிடம் மட்டும் இருந்த அதிகாரங்களின் பட்டியல் (6-ஆம் விதி). இரண்டாவது, கூட்டாட்சி அரசாங்கம் மாநிலங்களுடன் பகிர்ந்துகொண்ட அதிகாரங்களின் பட்டியல் (7-ஆம் விதி). 12-ஆம் விதியின்படி 'கூட்டாட்சி அரசாங்கம் தனது சட்ட ஆக்க அதிகாரத்தைப் பயன்படுத்தாத வரையில் அந்த அதிகாரம் மாநிலங்களைச் சேர்ந்தது'. இது கூட்டாட்சி அரசாங்கத் திற்கு மட்டும் வழங்கப்பட்டுள்ள (அதாவது 6-ஆம் விதியில் குறிப் பிட்டுள்ள) சட்ட ஆக்க அதிகாரங்களைக் குறிப்பதில்லை. கூட்டாட்சிச் சட்டம் மாநிலச் சட்டத்தை மீற இயலும். கூட்டாட்சிச் சட்டத்திற்கும் மாநிலச் சட்டத்திற்கும் முரண்பாடு ஏற்பட்டுள்ளதா என்பது பற்றிக் கருத்து வேறுபாடு தோன்றினால், கூட்டாட்சிச் சட்டத்திற்கு உரை விளக்கம் தருமாறு தலைமை நீதி மன்றத்தைக் கேட்க வேண்டும். தலைமை நீதி மன்றம் முன்னுலிருந்ததைப்போல மேல் சபையாய் இல்லாமல், ஒரு நீதி மன்றமாய் இருந்ததென்பது இங்குக் குறிப்பிடத் தக்கது.

'ரைக்ஸ்டாக்' உண்மையான சட்ட மன்றமாய் விளங்கியது. மேல்சபையில் (ரைக்ஸ்ராட் - Reichsrat) இன்னும் மாநில அரசாங் கங்களின் பிரதிநிதிகளே உறுப்பினர்களாய் இருந்தார்கள். ஆனால், அது தனது அதிகாரத்தை இழந்துவிட்டது. அது அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஆஸ்திரேலியா ஆகியவற்றின் செனட்டினின்று வேறுபட் டிருந்தது. இந்நாடுகளில் உறுப்பினர்கள் மாநிலங்களிலிருந்து சென்ற போதிலும், அவர்கள் ஜனநாயக முறைப்படி தேர்ந்தெடுக்கப்படு கின்றனர்கள். மேலும், அங்குச் செனட்டில் மாநிலங்களுக்குச் சமப்

பிரதிநிதித்துவம் வழங்கப்படுகிறது. குடியரசு ஆட்சி மற்ற மாநிலங்களைவிடப் பிரஷ்யாவுக்கிருந்த செல்வாக்கை அதிகமாகக் குறைக்கவில்லை. ஏனெனில், ஒவ்வொரு மாநிலமும் ரைக்ஸ்ராட் தேர்தலில் பத்து இலட்சம் பேருக்கு ஒரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்க வேண்டும். ஆனால், அதன் அதிகாரங்கள் தெளிவாக வரையறுக்கப் பட்டிருந்ததாலும், நிருவாகத்துறையில்பிரஷ்யா, பேரரசு ஆகியவற்றின் இனவுறுதி மறைந்துவிட்டதாலும், வெய்மார் குடியரசில் பிரஷ்யா பெற்றிருந்த ஆற்றலுக்கும் பழைய பேரரசில் அது செலுத்தி வந்த அதிகாரத்திற்கும் பெருவேறுபாடு இருந்தது, அரசியலமைப்பிற்கு ஓரளவு உரை விளக்கம் தருவதற்கென ஏற்பட்ட தலைமை நீதிமன்றம் உண்மையான கூட்டாட்சிப்பண்பைப் புகுத்தியது. மேலும், குடியொப்பம் எனும் கொள்கையும் அரசியலமைப்பில் தாராளமாக நுழைக்கப் பட்ட அரசாங்கமும் பொது மக்களும் அதைச் சாதாரணச் சட்டங் களுக்கும் அரரசியலமைப்புத் திருத்தத் திட்டங்களுக்கும் பயன் படுத்த முடிந்தது.

இவ்வாறு, ஜெர்மானிய வெய்மார் குடியரசில் கூட்டாட்சி முறையின் இன்றியமையாத இயல்புகள் மூன்றும் இருந்தன. அவை யாவன: அரசியலமைப்பின் மேம்பாடு, அதிகாரப் பங்கீடு, அதிகாரங்களைப் பகிர்ந்துகொள்ளும் அரசாங்கங்களிடையே முரண்பாடு தோன்றும்போது அரசியலமைப்பிற்கு உரை விளக்கம் தரும் நீதி மன்றம். ஆனால், ஜெர்மானியக் கூட்டாட்சி அரசில் சில தனிச் சிறப்பியல்புகள் இருந்தன. முதலாவது, கூட்டாட்சி அரசாங்கத்தின் அல்லது மாநில அரசாங்கங்களின் அதிகாரங்கள் வரையறுக்கப் படும் ஒரு முழுமையான அதிகாரப் பங்கீட்டுக்குப் பதிலாக, மூன்று வகையான அதிகாரப் பங்கீடு இருந்தது. அதன்படி கூட்டாட்சி அரசாங்கத்திற்கு மட்டும் சேர்ந்த அதிகாரங்களென்றும், அது மாநிலங்களுடன் பகிர்ந்துகொள்ளும் அதிகாரங்களென்றும், குறிக்கப்படாத அதிகாரங்களென்றும் (இதில் கூட்டாட்சிச் சட்டம் மாநிலச் சட்டத்தை மீறக்கூடும்) மூன்று வகையான அதிகாரப் பிரிவுகள் இருந்தன. இரண்டாவது, நாட்டு மக்களின் நலனைப் பிரதி பலிக்காமல் மாநிலங்களின் நலன்களையே காக்கும் மேல் சபையில் ஏனைய இக்காலக் கூட்டாட்சி அரசுகளிலே நிகழ்வதுபோல மாநிலங் களுக்குச் சமப்பிரதிநிதித்துவம் வழங்கப்படவில்லை. அதற்கு மாறாக, மக்கள் தொகையின் அடிப்படையில் பிரதிநிதித்துவம் அளிக் கப்பட்டது. அதன் விளைவாகப் பிரஷ்யாவுக்கு அதற்கடுத்த பெரிய மாநிலமாகிய பவேரியாவிற்குக் கிடைத்ததைவிட இரு மடங்குக்கு மேலாகப் பிரதிநிதித்துவம் கிடைத்தது. மூன்றாவது, மக்கள் நாட்டின் தலைவரைத் தேர்ந்தெடுத்தார்கள். (இதில் ஜெர்மானியக் குடியரசு சுவிட்ஸர்லாந்தைப் போலல்லாமல், அமெரிக்காவைப் போன்றிருந்

தது). ஆனால், அவர் சட்ட மன்றத்திற்குப் பொறுப்புள்ள அமைச்சரவையின் துணைகொண்டு செயலாற்றினார். (இதில் ஜெர்மானியக் குடியரசு, கனடா, ஆஸ்திரேலியாவைப் போலவும் அமெரிக்காவினின்று வேறுபட்டதாகவும் இருந்தது.)

நாம் இங்கு வெய்மார் குடியரசின் கூட்டாட்சிப் பண்புகளை விரிவாகப் பார்த்தோம். ஏனெனில், அதைத்தான் ஹிட்லர் அழித்தார். அதுதான் இரண்டாவது உலகப்போருக்குப் பிறகு ஜெர்மனியைக் கைப்பற்றிய நாடுகள், ஜெர்மானியர் இழந்த அரசியல் அதிகாரத்தை எவ்வாறு அவர்களுக்கு மீண்டும் படிப்படியாக வழங்கலாம் என்பதை ஆராயச் சிறந்த அடிப்படையாய் அமைந்தது. கூட்டாட்சி முறையின் எல்லா அடையாளங்களையும் அழித்த பிறகு ஹிட்லர் புகுத்திய ஒருமுக அரசு முறையை மீண்டும் நிறுவ ஜெர்மனியிலிருந்த முற்போக்கு வாதிகள் விரும்பவில்லை. ஜெர்மனியைக் கைப்பற்றிய நாடுகளும் அதற்கிணங்கவில்லை. 1947-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் மாஸ்கோவில் கூடிய அயல் நாட்டு அமைச்சர்களின் மாநாட்டில் நிகழ்ந்த வாதங்களில், நான்கு நாடுகளும் (பிரிட்டன், அமெரிக்கா, ரஷ்யா, பிரான்ஸ்) முடிவில் ஒரு கூட்டாட்சியை அமைக்க விரும்பினவென்பது தெளிவாய்த் தெரிந்தது. ஆனால், மேற்கு நாடுகள் நெகிழ்ந்த கூட்டாட்சி அமைப்பை ஆதரித்தன. ரஷ்யா வலிமையுள்ள மத்திய அரசாங்கமுள்ள கூட்டாட்சியை விரும்பியது. ஏனெனில், ஆற்றல் நிறைந்த கூட்டாட்சி அரசாங்கம் இல்லையெனில், எதிர்காலத்தில் ஒரு பிஸ்மார்க்கு அல்லது ஒரு ஹிட்லர் தோன்றித் தேசீய ஒற்றுமையெனும் போர்க்குரலை எழுப்பக் கூடும் என ரஷ்யா அஞ்சியது.

ஆனால், விரைவில் ஜெர்மானிய அரசாங்கத்தைத் திரும்ப நிறுவ வேண்டுமென மூன்று மேற்கு ஜனநாயகங்களும் விரும்பியதால், அவை, ரஷ்யாவைக் கலவாமல் செயலாற்றத்தொடங்கின. 1948-ஆம் ஆண்டு, செப்டெம்பர்த் திங்களில் வல்லுநர் குழுவொன்று தீட்டிய ஜெர்மானிய அரசுகளின் கூட்டாட்சி அரசியல் அமைப்புத் திட்டம், பான் (Bonn) நகரில் கூடிய ஜெர்மானிய அரசியற்புனை சபைமுன் சமர்ப்பிக்கப்பட்டது. ஜெர்மனி முழுவதற்கும் முடிவில் பயன் தருமாறு எழுதப்பட்ட இக்கூட்டாட்சித் திட்டம், முதலில் ஜெர்மானிய மக்கள் தொகையில் ஏறக்குறைய முக்காற்பகுதி வாழும் 11 மேற்கு அரசுகளில் (Lander) [1] மட்டும் செயலாற்றப்பட்டது. 1949-ஆம் ஆண்டு,

---

1. 1951இலும் 1955இலும் நிறைவேறிய திருத்தங்களுக்கேற்பச் சில அரசுகள் திருத்தி அமைக்கப்பட்டதுடன் ஸார்லாந்தும் (Sarland) சேர்க்கப்பட்டது. ஆகவே, அப்போது மொத்தம் பத்து அரசுகள் இருந் தன.

செப்டெம்பர்த் திங்களில் தொடங்கப்பட்ட இப்புதிய குடியரசில் இரு சபைகளுள்ள சட்டமன்றம் இருக்கின்றது. கீழ்ச் சபைக்குக் கூட்டாட்சிப் பேரவை (Bundestag) என்பதும் மேல் சபைக்குக் கூட்டாட்சி அவை (Bundesrat) என்பதும் பெயர். இரு சபைகளின் சிறப்புக் கூட்டம் நாட்டின் தலைவரைத் தேர்ந்தெடுக்கின்றது. அவர் அமைச்சரவை வாயிலாக அவற்றிற்குப் பொறுப்புள்ளவராய் இருக்கின்றார்.

இவ்வரசியலமைப்பு இன்னும் கூட்டாட்சிக் குடியரசின் அடிப்படைச் சட்டம் என வழங்கப்படுகிறது. இதில் நீண்ட பட்டியல்கள் இரண்டு உள்ளன. அவற்றில் கூட்டாட்சி அரசாங்கம் மட்டும் சட்டமியற்றக்கூடிய காரியங்களும், கூட்டாட்சி அரசாங்கமும் மாநில அரசாங்கங்களும் பொது அதிகாரம் செலுத்தக்கூடிய காரியங்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. கூட்டாட்சிப் பட்டியலைப் பொறுத்த வரையில், அடிப்படைச்சட்டம் கூட்டாட்சிக்குச் சட்டமியற்றும் அதிகாரத்தை வழங்காத காரியங்களில் மாநிலம் சட்டமியற்றலாம் என அரசியலமைப்புக் கூறுகிறது. கூட்டாட்சி அரசாங்கம் மட்டும் சட்டமியற்றக்கூடிய காரியங்களில், கூட்டாட்சிச் சட்டம் தெளிவாகக் குறிப்பிட்டால் மட்டும், அது குறிப்பிடும் அளவுக்கு மட்டும், மாநிலம் சட்டம் இயற்றலாம் என்றும் அரசியலமைப்புக் கூறுகிறது. பொதுப் பட்டியலைப் (Concurrent List) பொறுத்த வரையில், 'கூட்டாட்சி அரசாங்கம் தனது சட்ட ஆக்க அதிகாரத்தைப் பயன்படுத்தாத வரை' மாநிலம் சட்டமியற்றலாம். ஆகவே, ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள், குறைந்த அளவிலாயினும், மாநிலங்களிடம் இருக்கின்றன. அரசியலமைப்பு ஒரு கூட்டாட்சி அரசியலமைப்பு நீதி மன்றத்தையும் நிறுவியுள்ளது. அடிப்படைச் சட்டத்தின் உரை விளக்கத்தைத் தீர்மானிப்பதும், 'கூட்டாட்சி மாநிலம் இவற்றின் உரிமைகளையும் கடமைகளையும் பற்றிய கருத்து வேறுபாடுகளையும் கூட்டாட்சியின் மேற்பார்வைபற்றிய சிக்கல்களையும் தீர்ப்பதும்' அதன் அலுவலாகும். இங்குக் கூட்டாட்சியின் இயல்புகள் நிறைந்த ஓர் அரசைக் காண்கிறோம். இதில் அரசியலமைப்பின் மேம்பாட்டையும், அதிகாரப் பங்கீட்டையும், கூட்டாட்சி, மாநில அரசாங்கங்களுக்கிடையே நிகழக்கூடிய பிணக்குகளைத் தீர்க்கவல்ல ஒரு தலைமை நீதிமன்றத்தையும் காணலாம்.

## 8. சோவியத்து ரஷ்யாவிலும் யூகோஸ்லாவியாவிலும் கூட்டாட்சி முறை

கூட்டாட்சி முறையின் வரலாற்றை விளக்கிய இயலில் நாம் கூறியது போல, சோவியத்து ரஷ்யா தன் அரசியல் நிறுவனங்களை நிறு

வும்போது மேல்நாட்டு அரசியல் முறைமைக்குட்படுகையின் கொள்கைகளை மறுத்த போதிலும், அது ஒரு கூட்டாட்சியாகவே இன்று காட்சியளிக்கின்றது. 1936-ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட ஸ்டாலின் அரசியலமைப்பில் காணும் கூட்டாட்சிப் பண்புகள் நாம் இது வரை இந்த இயலில் ஆய்ந்த பண்புகளைப்போலத் தாளிலாவது காணப்படுகின்றன. சோவியத்து ரஷ்யாவின் அரசியலமைப்பைப்போன்று எழுதப்பட்டுள்ள 1946-ஆம் ஆண்டின் யூகோஸ்லாவியக் கூட்டாட்சி மக்கள் குடியரசின் (Federal People's Republic of Yugoslavia) அரசியலமைப்பிலும் அத்தகைய பண்புகளைக் காணலாம். முற்றிலும் வேறுபட்ட வரலாற்றுச் சூழ்நிலையில் தோன்றிய இப்புதிய புரட்சிகரமான கூட்டாட்சிகளைப் பழைய கூட்டாட்சிகளுடன் ஒப்பு நோக்குதல் சாலச் சிறந்தது.

1918-ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட லெனினது சோவியத்து அரசியலமைப்பு ஐரோப்பாவில் ரஷ்யா என வழங்கப்பட்ட பகுதியில் மட்டும் செயற்படுத்தப்பட்டது. அப்பகுதிக்கு அப்போது '**ரஷ்ய சோவியத்துக் கூட்டாட்சிப் பொது உடைமைக்குடியரசு**' (Russian Soviet Federated Socialist Republic - R.S.F.S.R) என்பது பெயர். 1923இல் முதலில் ரஷ்யா சோவியத்துக் கூட்டாட்சிப் பொது உடைமைக் குடியரசுடன் (R.S.F.S R.) மூன்று வேறு பகுதிகள் தாங்களாகவே இணைந்ததனால் சோவியத்துப் பொது உடைமைக் குடியரசுகளின் ஐக்கியம் (Union of Soviet Socialist Republics) தோன்றியது. இதில் சோவியத்துப் புரட்சிகளை நடத்திய யுக்ரெய்னும் (Ukraine) சேர்ந்திருந்தது. பிறகு, ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் பரவியிருந்த பழைய ரஷ்யப் பேரரசின் பல பகுதிகளிலுமுள்ள சோவியத்துக் குடியரசுகள் சேர்ந்ததனால், அது படிப்படியாகப் பரவியது. அந்த அரசியலமைப்பில் கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரங்கள் தெளிவாக வரையறுக்கப்பட்டிருந்தன. கூட்டாட்சியை அமைத்த குடியரசுகள் எஞ்சிய அதிகாரங்களைப் பெற்றன. 1936ஆம் ஆண்டு மாஸ்கோவில் கூடிய சோவியத்துகளின் அகில ஐக்கிய மாநாடு, லெனினது அரசியலமைப்பிற்குப் பதிலாக ஸ்டாலின் தீட்டிய அரசியலமைப்பை ஏற்றுக்கொண்டது.

1936-ஆம் ஆண்டு அரசியலமைப்பின் இரண்டாவது இயல் அரசின் அமைப்பை விளக்குகிறது. 13-ஆம் விதியின்படி சோவியத்துப் பொது உடைமைக் குடியரசுகளின் ஐக்கியம் என்பது பதினொரு சோவியத்துப் பொது உடைமைக் குடியரசுகள் (ரஷ்ய சோவியத்துக் கூட்டாட்சிப் பொது உடைமைக் குடியரசு, யுக்ரெய்ன், வெண் ரஷ்யா, ஜியார்ஜியா, அர்மீனியா உள்ளிட்ட) தாமாகவே ஒன்றாய் இணைந்ததனால் ஏற்பட்ட ஒரு கூட்டாட்சி அரசு. இவற்றுள் சிலவற்றில் தலைமையான அரசைத்தவிர, தன்னாட்சி பெற்ற குடியரசுகளும் (Autonomous Republics) தன்னாட்சிபெற்ற பகுதிகளும்(Autonomous

Regions) உள்ளன. 14-ஆம் விதி கூட்டாட்சி அரசாங்கத்தைச் சேர்ந்த அதிகாரங்களைத் தெளிவாக எடுத்துரைக்கிறது. 16-ஆம் விதியின்படி 'இவ்வரையறைகளுக்கு வெளியே ஒவ்வொரு ஐக்கியக் குடியரசும் தனது மாநில அதிகாரத்தைத் தானாகவே செலுத்துகிறது. மேலும், மற்ற விதிகளின்படி, 'ஒவ்வோர் ஐக்கியக் குடியரசுக்கும் அதற்கெனத் தனி அரசியலமைப்பு உண்டு. (16-ஆம் விதி); 'ஒவ்வோர் ஐக்கியக் குடியரசுக்கும் சோவியத்துக் கூட்டாட்சியி லிருந்து விலகிச் செல்ல உரிமையுண்டு.' (17-ஆம் விதி). 'ஐக்கியக் குடியரசுகளின் நிலப்பகுதியை அவற்றின் இசைவின்றி மாற்றியமைக்க இயலாது.' (18-ஆம் விதி)

இரு சபைகளுக்கும் இடையே பிணக்கம் ஏற்பட்டால், அதைத் தீர்ப்பதற்கு 47-ஆம் விதியின்படி (1947 திருத்தத்திற்கேற்ப) ஓர் இணக்க ஆணைக் குழுவை (Conciliation Commission) நியமிக்கலாம். இதன் பிறகும் இணக்கம் ஏற்படவில்லையெனில், புதிய தேர்தல்கள் நடக்கும்.

கூட்டாட்சியில் இப்போது 16 சோவியத்துக் குடியரசுகள் உள்ளன. அவற்றைத் தவிர, தன்னாட்சி பெற்ற 22 குடியரசுகளும் இருக்கின்றன. பதினாறு குடியரசுகளில், 1940இல் சேர்க்கப்பட்ட எஸ்தோனியா, லாட்வியா, லித்துவேனியா ஆகிய குடியரசுகளும் உட்பட்டுள்ளன. முதல் உலகப் போரின் முடிவில் இந்த பால்டிக்கு அரசுகள் தனித்தியங்கும் அரசுகளாய் மாறின. ஆனால், அண்மையி லுள்ள இரு பெருநாடுகளின் வலிமை காரணமாக அவற்றின் நிலை உறுதியற்றிருந்தது. 1939-ஆம் ஆண்டின் ரஷ்ய-ஜெர்மானிய சமாதான உடன்படிக்கையின்படி ஜெர்மனி அவை ரஷ்யாவின் கட்டுப் பாட்டுக்குள் இருப்பதை ஏற்றுக்கொண்டது. ஆனால், ரஷ்யாவுடன் நிகழ்த்திய போரின் தொடக்கத்தில் ஜெர்மானியர்கள் அவற்றைத் தாக்கி வீழ்த்தினார்கள். பிறகு ரஷ்யா மேற்கு நோக்கிப் பரவிய போது அவ்வ மீண்டும் ரஷ்யாவின் ஆதிக்கத்தின்கீழ் வந்தன. ஆனால், போர் முடிந்ததிலிருந்து, அவை ஐக்கியத்திலிருந்து பிரிந்து செல்வதற்கு அனுமதியளிக்க ரஷ்யா விரும்பவில்லை. சோவியத்து ஐக்கியத்தின் கூட்டாட்சி முறை வளையும் தன்மையுடையது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. அது தனது கூட்டாட்சி இயல்பு கெடா மல் எந்த அண்டை அரசையும் தன்னுள் ஈர்த்துக்கொள்ளும் தகைமை யுடையது எனலாம். இதுதான் சோவியத்துக் கூட்டாட்சியின் அரசிய லமைப்புக் கொள்கை. இக்கொள்கை அதன் அதிகாரத்துவச் செயல்களிலிருந்து வேறுபட்டுள்ளது.

போருக்குப் பிறகு யூகோஸ்லாவியா தனது சுதந்தரத்தைப் பாது காத்து வந்துள்ளது. ஆனால், அதன் புதிய அரசியலமைப்பில் சோவியத்து அரசியல் முறையின் அடையாளங்களைக் காணலாம்.

முதல் உலகப் போருக்குப் பிறகு நிறுவப்பட்ட புதிய அரசுகளில் யூகோஸ்லாவியாவும் ஒன்று. பழைய செர்பிய முடியரசுடன் சுற்றியுள்ள சில நிலப்பகுதிகளைச் சேர்த்ததன் பயனாக, அது தோன்றியது. அப்பகுதிகள் பெரும்பாலும் பழைய ஆஸ்திரிய-ஹங்கேரிப் பேரரசின் முந்திய மாநிலங்களாய் இருந்தன. அந்த முடியரசில் பல இனத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்தார்கள். அவர்களுள் செர்பியர்களும், குரோட்டுகளும், ஸ்லாவானியர்களும் பெரும்பாலார். ஆனால், அவர்களின் விகிதங்கள் பல திறப்பட்டவை. அவ்வரசில் முந்திய முடியரசுகளாகிய செர்பியாவும், மான்டி நீகிரோவும், முன்னால் ஆஸ்திரிய ஹங்கேரியைச் சேர்ந்த பாஸ்னியா, ஹெர்ஜகோவினா, குரோஷியா, டால்மேட்டியா, ஸ்லாவோனியா ஆகிய மாவட்டங்களும், போருக்கு முந்திய பல்கேரியாவின் மேற்கிலுள்ள குறுகிய நிலப்பகுதியும் இருந்தன. பல்வேறு பகுதிகளும் இனத்தவர்களும் கலந்திருந்த அந்நாட்டில் உறுதியான ஓர் ஒருமுக அரசு உருவாகும் என்று எதிர்பார்க்க இயலாது. ஆயினும், அதை அமைக்கவே அவர்கள் முயன்றார்கள். ஒரு புதிய அரசு அமைக்கப்படுவதற்கு முன் அதன் நிலை கூட்டாட்சி முறைக்கு மிகப் பொருந்தியதாய் இருக்குமானால், அதை யூகோஸ்லாவியா இருந்த நிலைக்கு ஒப்பிடலாம். ஆயினும், அங்கு ஒருமுக அமைப்பை நிறுவ முடிவு செய்தனர்.

இரண்டாம் உலகப் போரின் முடிவில், முன்னால் மக்கள் விரும்பிய கூட்டாட்சி அரசு, அங்குச் செயல் முறைக்கு வந்துவிட்டது. 1945-ஆம் ஆண்டின் இறுதியில் கூடிய அரசியற்புனை சபை முடியாட்சியை அழித்து, கூட்டாட்சி மக்கள் குடியரசு (Federal People's Republic) ஒன்றை நிறுவுவதென முடிவு செய்தது. புதிய அரசியலமைப்பு 1946-ஆம் ஆண்டு, ஜனவரித் திங்கள், 31-ஆம் நாளன்று செயல் முறைக்கு வந்தது. யூகோஸ்லாவியா ஒரு கூட்டாட்சி மக்கள் குடியரசு எனவும், கூட்டாட்சி அரசில் சேர்ந்து வாழ விரும்பும் மக்களின் சமுதாயமெனவும் அரசியலமைப்பின் முதல் விதி கூறுகின்றது.

செர்பிய மக்கள் குடியரசு, குரோஷிய மக்கள் குடியரசு, ஸ்லாவானிய மக்கள் குடியரசு, பாஸ்னியா-ஹெர்ஜகோவினா மக்கள் குடியரசு, மாசிடோனிய மக்கள் குடியரசு, மான்டி நீகிரோ மக்கள் குடியரசு ஆகியவை சேர்ந்து அமைந்தது யூகோஸ்லாவியக் கூட்டாட்சி மக்கள் குடியரசு என இரண்டாவது விதி விளக்குகிறது.

இவ்வாறு, முதல் உலகப் போருக்கு முன் செர்பியாவுடன் இணைய விரும்பிய எல்லா ஸ்லாவ் இனத்தவரும் இப்போது செர்பியருடன் சேர்ந்து ஒரு கூட்டாட்சியை அமைத்துள்ளனர். அதிலுள்ள எல்லா உறுப்புகளும் இணையானவை. 44-ஆம் விதி கூட்டாட்சி அரசாங்கத்தினுடைய அதிகாரங்களை நீண்ட பட்டியலில் தரு

கின்றது. வழக்கமாக வழங்கப்படும் அதிகாரங்களாகிய பாதுகாப்பு, தூதாண்மை போன்றவற்றைத் தவிர, தொழில், பொதுநல ஈட்டுறுதி (Social Insurance), கூட்டுறவு சங்கங்கள், கல்வி, சுகாதாரம், சமூக நலன் ஆகியவை சார்ந்த அடிப்படைச் சட்டங்களை இயற்றும் அதிகாரமும் கூட்டாட்சி அரசாங்கத்திடம் இருக்கின்றது. ஒதுக்கப்பட்ட அதிகாரங்களை மாநிலங்கள் செலுத்துகின்றன. யூகோஸ்லாவியா உண்மையில் ரஷ்யாவைப்போல ஒரு பொது உடைமை நாடு. ஆனால், எவ்வாறு இக்கால அரசியலமைப்பில் பழைய முறைகளைப் புதுச் செயல்களுக்குப் பயன்படுத்த இயலும் என்பதற்கு யூகோஸ்லாவிய அரசியலமைப்பு ஓர் அரிய எடுத்துக் காட்டாகும். இன்னும் ஒருமுக வாதிகளுக்கும் கூட்டாட்சி வாதிகளுக்குமிடையே பழைய கருத்து வேறுபாடு அங்கு நிலவியது. 1960இல் புதிய அரசியலமைப்பொன்று எழுத வேண்டுமென்பது அறிவிக்கப்பட்டது. ஆயினும், 1962 வரை வரைவு (Draft) முற்றுப் பெறவில்லை.

## 9. இலத்தீன் அமெரிக்காவில் கூட்டாட்சி அரசியலமைப்புகள்

இலத்தீன் அமெரிக்கா அண்மையிலேதான் முன்னேற்றமடைந்துள்ளது. நாம் அரசாங்கக் கலையைப்பற்றி அதன் கடந்த கால வரலாற்றிலோ அல்லது நிகழ்கால வரலாற்றிலோ கற்றுக்கொள்வதைவிட அதன் வருங்கால வரலாற்றில் அதிகமாகக் கற்கலாம். எவரும் இலத்தீன் அமெரிக்க அரசுகளை நன்மை பயக்கும மக்களாட்சிக்கோ அல்லது ஆவண முறை அரசியலமைப்பினால் விளையும் நற்பயன்களுக்கோ எடுத்துக்காட்டுகளாகக் கூறமாட்டார்கள். அதற்கு மாறாகப் பலர் அவற்றை, தன்னாட்சிக் கலையில் பயிற்சி எதுவுமின்றிப் பழங்காலப் பேராட்சியினின்று விடுதலை பெறும் நாடுகளுக்கு நிகழக் கூடியகேட்டிற்குச் சான்றாகக் காட்டுகின்றனர். இலத்தீன் அமெரிக்காவின் அரசியல் நிறுவனங்கள் உறுதியில்லாமல் இருக்கின்றமையால், அவர்களது கூற்றில் ஓரளவு உண்மை இருக்கின்றது என்பது புலனாகின்றது. ஆயினும், பிரைஸ் என்பார் கூறுவதுபோலத் தென், மத்திய அமெரிக்க நாடுகள் ஸ்பெயினின் (போர்த்துகலினுடையதும்) ஆட்சியினின்று விடுதலை பெற்ற அனுபவங்கள் ' அரசியலில் மனித இயற்கையின் சில இயல்புகளைத் ' தெளிவாக விளக்குகின்றன. இவை, மேல் நாடுகளின் அரசியல் முறைமைக்குட்படுகை, சிறப்பாக அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியல் முறைமைக்குட்படுகை, எவ்வாறு அது வளரும் சூழ்நிலையற்ற அந்நாடுகளைப் பாதித்துள்ளது என்பதைக்

காட்டுகின்றன. இது இங்குக் குறிப்பிடத்தக்கது. இலத்தீன் அமெரிக்கக் குடியேற்ற நாடுகள் சுதந்தரம் பெற்ற பிறகு தங்கள் தேவைகளுக்கேற்ற அரசாங்க அமைப்பைத் தெரிந்துகொள்ள வேண்டியிருந்தது. சில கூட்டாட்சி அமைப்பைத் தெரிந்து கொண்டன, ஆயினும், அதை நிறுவிய அரசுகளில் அத்தகைய அரசியலமைப்பு முறை வெற்றியுடன் நடைபெறுவதற்குத் தேவையான அரசியல் உறுதிநிலையைக் கூட்டாட்சி முறை நிறுவியதெனக் கூற இயலாது.

இருபது மத்திய, தென்னமெரிக்கக் குடியரசுகளில் அர்ஜென்டீன், பிரேஸில், மெக்ஸிக்கோ என்னும் இம்மூன்றும் கூட்டாட்சி அரசுகளுக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். இம்மூன்று அரசுகளும் ஸ்பெயினுக்கும் போர்த்துகலுக்கும் எதிராய் நிகழ்ந்த பெரும் புரட்சிக் காலத்தில் (1810-1830) விடுதலை பெற்றன. அர்ஜென்டீன் 1825-ஆம் ஆண்டு ஓர் அரசியலமைப்பை அறிக்கையிட்டது. அது அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பைப் போன்றிருந்தது. அர்ஜென்டீனுக்கு அப்போது வழங்கிய மற்றொரு பெயர், **'ரயோ டி லா பிளாட்டா ஐக்கிய மாநிலங்கள்'** (United Provinces of the Rio de la Plata) என்பது. மாநிலங்கள் ஒதுக்கப்பட்ட அதிகாரங்களைச் செலுத்துகின்றன. ஆனால், மத்திய அரசாங்கத்தை இயக்கி வந்த வல்லாட்சியாளர்கள் தங்கள் அரசியற்சூழ்ச்சிகளினால் அவற்றின் உரிமைகளைத் தவறான வழிகளில் பயன்படுத்தி வருகின்றார்கள். ஆயினும், அந்நாடு பல அரசியல் கிளர்ச்சிகளிடையே பொருளாதாரத் துறையில் வளர்ச்சி பெற்று வந்துள்ளது. அது இப்போது இலத்தீன் அமெரிக்க நாடுகளில் செழிப்புடன் திகழும் நாடுகளுள் ஒன்றாய் விளங்குகிறது. 1822இல் பிரஸீல் போர்த்துகலின் பேராட்சியிலிருந்து விடுதலை பெற்றது. ஆனால், 1889 வரை **2-ஆம் டோம் பெட்ரோ** (Dom Pedro II) எனும் பேரரசரின் ஆட்சியின்கீழ் இருந்து வந்தது. அவர் தாம் இறப்பதற்கு இரண்டாண்டுகளுக்குமுன் முடி துறந்ததும், பிரஸீல் ஒரு குடியரசுக் கூட்டாட்சியாய் மாறியது. அதில் மாநில அரசாங்கங்கள் ஏராளமான 'ஒதுக்கப்பட்ட' அதிகாரங்களைச் செலுத்திவந்தன ; சில காலந்தான் அவற்றைச் செலுத்தி வந்தன. ஆயினும், இந்நூற்றாண்டில் நிகழ்ந்த பல புரட்சிகளும், அரசியலமைப்பு மாற்றங்களும் காரணமாக, அங்கு ஒருமுக அரசின் போக்குகளும் அதிகாரத்துவ ஆட்சியின் அடையாளங்களும் தோன்றியுள்ளன. இதற்கிடையில் பிரஸீல் பெரும்பொருளாதார முன்னேற்றம் அடைந்துள்ளது. எதிர்ப்புகளுக்கிடையேயும் அங்குக் கூட்டாட்சி நிறுவனங்கள் பிழைத்து வருகின்றன.

வெனிசுலாவின் ஐக்கிய நாடுகள் எனச் சட்டமுறைப்படி வழங்கப்படும் வெனிசுலாவின் முதல் அரசியலமைப்பு, 1830இல் வெளி

யிடப்பட்டது. அது ஒரு கூட்டாட்சி முறை அரசாங்கத்தை நிறுவியது. அதன்படி, கூட்டாட்சியின் உறுப்புகளாகிய மாநிலங்கள் மிகுதியான அதிகாரங்களைப் பெற்றன. அந்த அரசியலமைப்பில் பல பல மாறுதல்கள் நிகழ்ந்துவிட்டன. 1947இல் நிறுவப்பட்ட புதிய அரசியலமைப்பு, மாநிலங்கள் இருப்பதை ஏற்றுக்கொண்டு, முற்போக்கான சில ஜனநாயக முறைகளைப் புகுத்தியது. ஆயினும், 1960 வரை, மக்களாட்சி முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட குடியரசுத் தலைவர் யாரும் ஓர் ஆண்டு முழுவதும் தலைவர் பதவியில் இருந்ததில்லை.

மெக்ஸிக்கோ ஒரு நூற்றாண்டிற்கு முன் கூட்டாட்சி முறை அரசாங்கத்தை நிறுவியது. அது அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசாங்க அமைப்பை ஒத்திருந்தது. 1917இல் அங்கு ஒரு புதிய அரசியலமைப்பு வெளியிடப்பட்டது. அது 1929லிருந்து அடிக்கடி திருத்தப்பட்டுள்ளது. அதன்படி மெக்ஸிக்கோ 28 மாநிலங்களையுடைய ஒரு கூட்டாட்சிக் குடியரசாய் அமைந்தது. ஒவ்வொரு மாநிலமும் தன் காரியங்களைத் தானே கவனித்துக்கொள்ளும் உரிமை பெற்றிருந்தது. மெக்ஸிக்கோவில் பல புரட்சிகள் நடைபெற்றிருந்த போதிலும், அண்மையில் **'புரட்சிகரமான நிறுவனக் கட்சி'** (Partido Revolucionario Institucional) என்றதோர் அரசியல் கூட்டத்தினரின் ஆதிக்கம் காரணமாக அரசியல் நிலைமையில் ஓர் உறுதி நிலை தோன்றியுள்ளது.

இவற்றிலிருந்து நாம் காண்பதென்னவென்றால், கூட்டாட்சியை அமைக்கவேண்டுமென்ற விருப்பம் மக்களுக்கு இருந்த போதிலும், அதைச் செயலாற்றவேண்டிய உள்ள உறுதி அவர்களிடம் இல்லையெனில், கூட்டாட்சி என்ற உயர்குறிக்கோளை அவர்கள் அடைய இயலாது. அதாவது, தேவையானால் மாநிலங்கள் சேர்ந்து அமைக்கும் பொதுப் படைப்பலத்தையும் அதற்காகப் பயன்படுத்தத் தயாராக இருக்கவேண்டும். வேறு எந்த அரசியல் அமைப்பு முறையையும் விடக் கூட்டாட்சி முறையில், பொதுமக்கள் கருத்து எனும் ஆற்றல் உடனடியாகத் தேவையாய் இருக்கிறதென்பது நன்கு விளங்குகிறது. அரசியல் அனுபவம் குறைந்த மக்களிடையே கூட்டாட்சி முறை வெற்றி பெறுதல் அரிது. இலத்தீன் அமெரிக்கரில் பெரும்பான்மையோரிடையே அறியாமை யாங்கணும் பரவியிருக்கிறது. பல இலத்தீன் அமெரிக்க நாடுகள் படைப்பலத்தைப் பயன்படுத்துகின்றன; ஆனால், அதை ஓரளவுதான் பயன்படுத்துகின்றன; மேலும், அதைத் தம் உட்பகைகளைத் தீர்ப்பதற்கும், வல்லாட்சியை நிறுவுவதற்கும் பயன்படுத்துகின்றன. இதிலிருந்து நாம் கற்க வேண்டுவது என்னவென்பது தெளிவாய்த் தெரிகிறது. பிரைஸ் என்பார் கூறுவது போல, கருவியைப் பெறுவதனால் தொழிலாளியின் கை திறமை பெறும் என்ற

தவருன நம்பிக்கையுடன், அரசியல் நிறுவனங்களை அவற்றைப் பெறத் தகுதியற்ற நாடுகளுக்கு வழங்கவேண்டா. ஆயினும், முற்போக்குள்ள ஒரு சில நாடுக்ள் உண்மையாகவே முன்னேற்றமடையத் தொடங்கியுள்ளன. அரசியல் உறுதியின்றி இலத்தீன் அமெரிக்காவின் பொருளாதார வளங்கள் பெருக இயலாததால், அங்குக் கூட்டாட்சி முறையிலே அரசியல் உறுதியை நிலைநாட்ட மக்கள் முயல்வார்கள் எனக் கருதலாம்.

## படிக்கவேண்டிய நூல்கள் :

1. அலெக்ஸாண்டர் (Alexander): World Political Patterns, இயல், 3, 4, 8, 10, 14.

2. பிரைஸ் (Bryce): American Commonwealth, தொகுதி, I, இயல் 2, 27, 30

3. டெனிஸாவ் (Denisov) : Soviet State Law, இயல், 1-2, 4-7

4. டைஸி (Dicey) : Law of the Constitution, இயல், 3.

5. ஃபைனர் (Finer) : Madern Government, இயல், 10, 11.

6. ஷ்வார்ட்ஸ் (Schwartz): American Constitutional Law, இயல், 2–6.

7. ஸிட்ஜ்விக்கு (Sidgwick) : Elements of Politics, இயல், 26.

8. வேர் (Wheare): Federal Government, இயல், 3-4.

9. வில்லியம்ஸன் (Williamson): History of British Expansion, பக்கம் 484–536

10. ஸிங்க் (Zink): (1) Government in United States, இயல், 4, 5.

(2) Modern Governments, பகுதிகள் III, V—VII.

11. Annual Register for 1936 (ஸ்டாலின் அரசியலமைப்பு)

12. Constitutions of All Countries: தொகுதி, I, British Empire, பக்கம், 19-111.

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள் :

1. கிரிஸ்ப் (Crisp) : Australia

2. ஹால்க்ரோ ஃபெர்குஸன் (Halcro Ferguson) : Latin America.

3. ஹிஸ்காக்ஸ் (Hiscocks) : Democracy in Western Germany

4. லியோனர்டு (Leonhard) : Kremlin since Stalin

5. நியூட்டன் (Newton) : Federal and Unified Constitutions

6. நிக்கொலாஸ் (Nicholas) : Australian Constitution

7. பாட்டர் (Potter) : American Government

8. ரப்பார்டு (Rappard) : Government of Switzerland

9. வேர் (Wheare) : Federal Government ; Constitutional Structure of Commonwealth

## கட்டுரைக்கான பொருள்கள் :

1. நாட்டுக் கூட்டத்திற்கும் கூட்டாட்சி அரசுக்கும் உள்ள வேறுபாட்டைக் கூறுக.

2. 'நாட்டின் ஒற்றுமையையும் அதிகாரத்தையும் மாநில உரிமைகளோடு இணைக்கும் ஓர் அரசியல் ஏற்பாடே கூட்டாட்சி அரசாகும்.'—விளக்குக.

3. உண்மையான கூட்டாட்சி அரசில் இறைமையானது அரசியலமைப்பில் இருக்கிறது என்பது உண்மையா ? எவ்வாறு ?

4. 'அதிகார ஒதுக்கம்' (Reserve of Powers) என்பதன் பொருள் என்ன ? கூட்டாட்சி அரசில், கூட்டாட்சிக்கும் மாநிலங்களுக்கும் இடையில் அதிகாரம் எவ்வகைகளில் பகிர்ந்துகொள்ளப் படுகிறது ?

5. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கூட்டாட்சி முறையை விளக்குக.

6. சுவிட்ஸர்லாந்தின் கூட்டாட்சி முறை வளர்ந்த வரலாற்றை வரைக. அம்முறையையும் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் முறையையும் ஒப்பு நோக்குக.

7. ஆஸ்திரேலியப் பொது நலக்கூட்டு, கனடாக்குடியேற்ற உரிமை நாடு இவற்றின் கூட்டாட்சி முறையில் காணப்படும் ஒற்றுமை வேற்றுமைகளை விளக்குக.

8. ஜெர்மானியக் கூட்டாட்சி முறையின் வரலாற்றை வரைக. இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு அமைக்கப்பட்ட மேற்கு ஜெர்மானியக் குடியரசில் வெய்மார் குடியரசின் கூட்டாட்சி அமைப்பு எவ்வாறு புதுப்பிக்கப் பெற்றுள்ளது ?

9. 1946இல் வெளியான யூகோஸ்லாவிய மக்கள் குடியரசு அரசியலமைப்பிலும், ரஷ்யாவின் 1936ஆம் ஆண்டு அரசியலமைப்பிலும் உள்ள கூட்டாட்சிக் கூறுகளை ஒப்பு நோக்குக.

10. இலத்தீன் அமெரிக்க அரசுகளில் கூட்டாட்சி முறை நிலவுவதற்குக் காரணமென்ன ? அது எவற்றிற்கு அரசியல் உறுதியளித்திருக்கிறது ?

# 6. நெகிழும் அரசியலமைப்பு

## 1. பொதுக்குறிப்புகள்

முதல் இயலில் நாம் அரசியலமைப்பை வரையறுக்கும் போது லார்டு பிரைஸ் தரும் விளக்கமே சிறந்த விளக்கமெனக் கூறினோம். அரசியலமைப்பு என்பது அவர் கூறுவது போல, 'சட்டம் வழியாக, சட்டத்தினால் நிறுவப்பட்ட அரசியல் சமூகத்தின் அமைப்பு; அதாவது, குறிப்பிட்ட அலுவல்களையும் உரிமைகளையுமுடைய நிலையான நிறுவனங்களைச் சட்டம் நிறுவியுள்ள அமைப்பு.' இந்நூலாசிரியரே ஆசியலமைப்புகளின் இரு பெரு வகைகளைக் குறிக்கும் 'நெகிழும்', 'நெகிழா' என்ற பதங்களை முதலில் பயன்படுத்தியவர். எழுதப்பட்ட, எழுதப்படாத அரசியலமைப்புகள், அல்லது நாம் கூறியது போல ஆவணமுறை, ஆவணமுறையல்லாத அரசியலமைப்புகள் எனச் சில வேளை நாம் பாகுபாடு செய்கின்றோம். அது உண்மையான பாகுபாடு அன்று என்பதை மீண்டும் வலியுறுத்தவேண்டும். ஏனெனில், ஓர் அரசியலமைப்பு, ஆவணமுறையில் எழுதப்படாத போதிலும், உண்மையில் அரசியலமைப்பேயாகும். இதை மறுத்தால் நாமும் அமெரிக்க ஜனநாயகத்திற்கு விளக்கம் தந்த பிரெஞ்சு ஆசிரியர் டி டாக்வில் (De Tocqueville) செய்த தவற்றையே செய்தவர்களாவோம். அவர், பிரிட்டனில் ஆவணமுறை அரசியலமைப்பு இல்லாமையால், ஆங்கில அரசியலமைப்பு என்பது ஒன்றும் இல்லை எனக் கூறினர்.

ஆவணமுறை அரசியலமைப்பு மக்களிடையே தோன்றும் முதிர்ந்த அரசியல் உணர்ச்சியைக் காட்டுகிறது. அவ்வுணர்ச்சி காரணமாக மக்கள் இப்போதுள்ள அரசாங்க முறைகளின் பற்றுக் குறைகளைக் காண்கின்றனர்கள். பிரைஸின் கருத்துகளை விளக்கிக் கூறும்போது, அத்தகைய அரசியலமைப்பை நிறுவ எழும் ஆர்வத்திற்குக் கீழ்க்காணும் நான்கு காரணங்களில் சிலவற்றைக் கூறலாம்.

(1) தங்கள் உரிமைகள் பறிபோவது போலத் தோன்றும்போது அவற்றைக் காத்து, அரசாங்கத்தைக் கட்டுப்படுத்த விழையும் குடிகளின் விருப்பம்.

(2) இது வரையில் தெளிவான வடிவமில்லாதிருந்த அரசாங்க முறைக்கு ஒரு வடிவமைத்து, அதனால் எதிர்காலத்தில் எதேச்சாதிகாரச் செயல்களைக் கட்டுப்படுத்த விரும்பும் மக்களது, அல்லது அவர்களை மகிழ்விக்க விரும்பும் அரசனது ஆசை.

(3) ஒரு புதிய அரசியற்சமுதாயத்தை உண்டுபண்ணும் மக்கள், உறுதியும் குடிகளுக்கு விளங்கக்கூடிய தெளிவும் உடைய அரசாங்க முறையை அமைக்க விரும்பும் ஆர்வம்.

(4) இதுவரையில் தனித்து நின்ற சமுதாயங்கள் ஒன்று சேர்ந்து செயலாற்ற முயலும் ஆவல். இவை அதே நேரத்தில் சில உரிமைகளையும் நலன்களையும் தமக்கெனத் தனியாக வைத்துக்கொள்ள விரும்புகின்றன.

அந்த நூலாசிரியரின் கருத்துப்படி ஆவணமுறை அரசியலமைப்புகள் கீழ்க்காணும் நான்கு வழிகளுள் ஒன்று வாயிலாகப் பிறக்கின்றன எனலாம்.

(1) ‘முந்திய தவருன வழிகளைத் தவிர்த்து, ஒழுங்காகவும் அரசியல் அமைப்புக்குட்பட்டும் ஆள்வதாகத் தாமும் தம் வழி வருவோரும் வாக்குறுதி அளிப்பதற்காக ஓர் அரசர் அவற்றைத் தம் குடிகளுக்கு வழங்கலாம்.’ 1814ஆம் ஆண்டு பிரான்ஸில் 18ஆம் லூயி மன்னரால் வெளியிடப்பட்டு, 1830இல் லூயி பிலிப்பு அரசரால் சில மாற்றங்களுடன் புதுப்பிக்கப்பட்ட பிரெஞ்சு சாசனம், 1848ஆம் ஆண்டு நிறுவப்பட்ட ஸார்டீனிய அரசியலமைப்பு, 1850-ஆம் ஆண்டு பிரஷ்ய அரசியலமைப்பு ஆகியவை இதற்கு எடுத்துக்காட்டுகளாகும்.

(2) பழைய அரசாங்க முறையைக் களைந்து புதிய முறையை நிறுவும் ஒரு நாடு அவற்றை உண்டுபண்ணலாம். 1790ஆம் ஆண்டிலிருந்து தொடர்ச்சியாகத் தோன்றிய பிரெஞ்சுக் குடியரசுகளையும், அமெரிக்க ஐக்கியத்தை முதலில் அமைத்த பதின்மூன்று அரசுகளையும் இதற்குச் சான்ருகக் கூறலாம்.

(3) இதுவரையில் தேசீய அரசாய் இராத ஒரு புதிய சமுதாயம் தன்னுட்சி பெற்ற தனி நாடாக மாறும்போது அவற்றை உருவாக்கலாம். முதல் உலகப்போருக்குப் பிறகு ஐரோப்பாவில் பிறந்த போலந்து, செக்கோஸ்லாவாக்கியாப் போன்ற அரசுகள் இதற்குச் சிறந்த உதாரணங்களாகும்.

(4) இறுதியாக, நெகிழ்ந்த கூட்டமைப்பிலுள்ள தன்னுட்சி பெற்ற சமுதாயங்கள், தங்கள் இணைப்பை இறுக்கிப் பிணைக்கும்போது இவை தோன்றலாம். இப்போக்கின் விளைவாக நாடுகளின் கூட்டமைப்பு, கூட்டாட்சியாய் மலர்கின்றது. அம்மாற்றத்தை உண்டு பண்ணும் அரசியலமைப்பு நெகிழாத்தன்மையுடையதாய் இருக்கும். 1783இல் பிரிட்டனிலிருந்து சட்டமுறைப்படி பிரிந்த வடஅமெரிக்க அரசுகளின் நெகிழ்ந்த நாட்டுக்கூட்டம் இம்முறையைப் பின்பற்றி 1789இல் இன்று காணும் கூட்டாட்சி அரசாய் மாறியது. இப்போதுள்ள சுவிஸ் கூட்டாட்சி இதற்கோர் எடுத்துக்காட்டு. அதே போல 1815இல் தோன்றிய ஜெர்மானிய நாட்டுக்கூட்டம் படிப்படியாக மாறி, 1871இல் இக்கால ஜெர்மானியப் பேரரசாய் முதிர்ச்சி பெற்றது.

பிரிட்டிஷ் அரசியலமைப்பைத் தவிர இன்றுள்ள எல்லா முக்கிய அரசியலமைப்புகளும் இவ்வகையைச் சேர்ந்தவை. ஆனால், ஒரு வகையில் சில அரசியலமைப்புகள் பிரிட்டிஷ் அரசியலமைப்பை ஒத்திருக்கின்றன. அதாவது, அரசியலமைப்பில் குறிப்பிட்டுள்ள ஒரு தனி முறையைப் பின்பற்றாமல், சாதாரணச் சட்ட ஆக்க முறைப்படி அவற்றைத் திருத்த இயலும். ஆகவே, எழுதப்பட்ட அரசியலமைப்புகள், எழுதப்படாத அரசியலமைப்புகள் எனப் பகுக்கும் பாகுபாட்டில் மூன்று தவறுகள் உள்ளன. முதலாவது, அப்பாகுபாடு வழக்கமும் முன் நிகழ்ச்சியுமே எழுதப்படாத அரசியலமைப்பின் வளர்ச்சிக்கு முக்கிய காரணம் என விளக்கும்போது, எழுதப்பட்ட அரசியலமைப்பில் எழுதப்படாத வழக்கத்திற்கு இடமே இல்லை என்றும் குறிப்பாகத் தெரிவிக்கிறது. ஆனால், நாம் மேலே சொல்லியபடி, முற்றிலும் எழுதப்பட்ட, அல்லது முற்றிலும் எழுதப்படாத அரசியலமைப்புகளே இல்லை. 'நெகிழும் அரசியலமைப்பு' என்ற சொற்றொடரை நாம் பயன்படுத்தும் போது, அரசியலமைப்பை நிலைபெறச் செய்யக் கூடிய எழுதப்பட்ட சட்டம் ஒன்றுமே இல்லாத ஓர் அரசியலமைப்பைக் குறிப்பிடுவோமானால், அத்தகைய நெகிழும் அரசியலமைப்பை இன்று உலகில் எங்குமே காண இயலாது என்பதை ஒத்துக்கொள்ள வேண்டும். எடுத்துக்காட்டாக, நாம் ஐக்கிய அரசின் எழுதப்படாத அரசியலமைப்பைப்பற்றிப் பேசும்போது, அதன் அமைப்பில் சட்ட மன்றம் இயற்றிய சட்டங்களே இல்லை என்று இமைப்பொழுதும் எண்ணுவதில்லை. ஏனெனில், பிறகு நாம் விளக்குவது போல, அதில் பல சட்டங்கள் இருக்கின்றன. இதைப் பொறுத்த வரையில் நாம் பிரிட்டிஷ் அரசியலமைப்பைப்பற்றிச் சொல்லக் கூடியதெல்லாம் அதில் பிற அரசியலமைப்புகளைவிட அதிக வழக்கங்களும் வழக்காறுகளும் நிறைந்துள்ளன என்பதுதான். ஆயினும், மற்ற அரசியலமைப்புகளிலும் வழக்கங்களும் வழக்காறுகளும் இடம் பெறுகின்றன. அவை இடம் பெறாத அரசியலமைப்பே இல்லை எனலாம்.

இரண்டாவது, அரசியலமைப்புகளை எழுதப்பட்டவை எழுதப் படாதவை எனப் பகுப்பதனுல் பிழை ஏற்படுவதற்குக் காரணம் என்னவென்ருல், அப்பாகுபாடு, அரசியலமைப்பெனும் ஆவணத்தில் தொகுக்கப்பட்டுள்ள சட்டங்களைத் தவிர வேறு அரசியலமைப்புச் சட்டங்கள் இருக்க இயலாது என்பதைக் குறிப்பாகக் காட்டுகிறது. இக்கருத்தின்படி அத்தகைய ஆவணம் இல்லையெனில், அரசியலமைப்புச் சட்டமே இல்லை. இதுதான் டிடாக்வில்லின் கருத்து. அவர் இதை 1834இல் எடுத்துரைத்தார்; ஆனுல், இருபதாம் நூற்ருண்டில் எழுதியிருந்தாலும் இக்கருத்தையே கூறியிருப்பார். ஏனெனில், இக்கருத்தை மாற்றக்கூடிய எதுவும் இடையில் நிகழ்ந்துவிடவில்லை. இன்னும் பிரிட்டிஷ் அரசியலமைப்பென்ற ஓர் ஆவணம் எதுவும் இல்லை. டிடாக்வில் காலத்திற்குப் பிறகு இந்நாட்டில் அரசியல் சட்டத்தை மாற்றியமைக்கும் பல சட்டங்களைப் பாராளுமன்றம் இயற்றியிருக்கின்றது என்பது உண்மைதான். இக்கால நூலாசிரியர் ஒருவர் கூறுவது போல, 1911-ஆம் ஆண்டுப் பாராளுமன்றச் சட்டத்திற்குப் பிறகு பிரிட்டிஷ் அரசியலமைப்பு ஓரளவுக்கு எழுதப்பட்ட அரசியலமைப்பாய் மாறிற்று என்று சொல்வது, அதற்கு முன் அரசியலமைப்பை உருவாக்கிய ஏராளமான சட்டங்களைப் புறக்கணிப்பதாகும். 1911க்குப் பிறகு அது ஓரளவு எழுதப்பட்டதாய் இருக்குமென்ருல், அதற்கு முன்னும் ஓரளவு எழுதப்பட்டதாகவே இருந்தது.

மூன்ருவதாக, இப்பாகுபாட்டின் இன்னொரு முறை, சட்டம் எப்போதும் எழுதப்பட்டதாகவே இருக்கவேண்டுமென்று நம்மை நம்பச் செய்கிறது. இது உண்மையன்று. வழக்கத்தின் அடிப்படையிலே எழுந்து வளர்ந்த அரசியலமைப்பொன்றை நாம் காட்டக் கூடுமாயினும், அதில் சட்டம் இருந்ததென உறுதியாகக் கூறலாம். ஏனெனில், வழக்கத்திற்கும் சட்டத்தின் ஆற்றல் உண்டு. மேலும், சட்டம் இயற்றல் என நாம் கூறும் முறையைப் பின்பற்ருமலும் சட்டம் எழுதப்படலாம்.

## 2. சட்டத்தின் இயற்கை

இந்நூலின் முதல் இயலில் மூன்று வகையான சட்டங்களைப் பற்றிக் கூறினேம். முதலாவது, 'வழக்கம்' என நாம் வழங்கும் சமூகப்பழக்கங்களின் தொகுதி. இது சட்டமுறையாக உருவானதன்று. அப்பழக்கங்களுள் பல பழங்காலத்திலிருந்து கிடைத்த மரபுரிமை உடைமையாகவே இக்காலத்தில் நிலவுகின்றன. ஆனுல், அவை இக்கால மேல் நாடுகள் போன்ற உயர்நாகரிகம் பெற்ற சமுதாயங்களில் ஒழுக்கம், நன்னெறி ஆகியவற்றின் விதிகளாகவே

இருக்கின்றன. இரண்டாவது, சட்ட ஆக்க முறையில் எழுதப்படாத சட்டம். முறையாக அமைக்கப்பட்ட நீதி மன்றங்கள் இதை முற்றிலும் நிறைவேற்றி வைக்கின்றன. இது முன் தீர்ப்புச் சட்டம் (Case Law) அல்லது நீதிபதி ஆக்கிய சட்டம் (judge-made law) எனப்படும். இது இங்கிலாந்தில் பொது நீதி என வழங்கப்படும் சட்டத் தொகுதியைக் குறிக்கின்றது. மூன்றாவதாக, சட்ட மன்றம் அல்லது பாராளுமன்றம் இயற்றும் சட்டங்கள் (Statutes) அல்லது எழுதப்பட்ட சட்டங்களின் தொகுதி.

இம்மூன்று வகைச் சட்டங்களுக்கும் முடிவான ஒரே சட்ட இசைவு உண்டு. அதுதான் அமைதியையும் முன்னேற்றத்தையும் பெறச் சமூகம் விரும்பும் விருப்பம். ஏனெனில், நாம் முன்பு வலியுறுத்தியது போல, அரசென்பது அரசியல் முறைப்படி அமைக்கப்பட்ட சமூகம். சமூகம் எவ்வளவு அதிகமாகத் தனது அரசியல் தன்மையை உணர்கிறதோ, அவ்வளவு அதிகமாகத் தனது அரசாங்க நிறுவனங்களைப் பயன்படுத்தித் தன் நோக்கங்களைக் காத்து முன்னேறுகிறது. மேலும், அது அந்நிறுவனங்கள் அதிகாரத்தைத் தவறான வழியில் பயன்படுத்தாதவாறு தடுக்கவும் செய்யும். சட்டத்திற்காக அமைக்கப்பட்ட சமுதாயம் ('அரசு' என்பதன் பொருள்களுள் இதுவும் ஒன்று என்பது நினைவிருக்கலாம்) முன்னேக்கிச் செல்ல வேண்டும். ஆனால், மிக விரைவாகச் செல்லக்கூடாதென்பது அதற்குத் தெரியும். ஏனெனில், சமூகத்திற்கு இரண்டு இயல்புகள் உண்டு: ஒன்று, இயங்கா நிலை அல்லது மாறா நிலை; மற்றொன்று, இயங்கு நிலை அல்லது மாறும் நிலை. இதை அகஸ்டே காம்டே (Auguste Comte) என்பார், 'ஒழுங்கின் வளர்ச்சியே முன்னேற்றம்,' என வலியுறுத்தியுள்ளார். இவ்விரு இயல்புகளில் ஒன்றைப் பேணும் போது மற்றொன்றைத் தடை செய்யாமல் இருப்பது அரசாங்கத்தின் பெரும்பிரச்சினையாகும். எடுத்துக்காட்டாக, வழக்கம் மிக விரைவாக வளர்வது போலத் தோன்றினால், நீதிபதி ஆக்கிய சட்டம் அல்லது சட்டமன்றம் இயற்றும் சட்டம் அதைத் தடுத்து நிறுத்த இயலும்; நீதித்துறையின் தீர்ப்புப் பொதுமக்களின் கருத்துக்கு முரணாய் இருந்தால், அத்தீர்ப்பை மாற்றுமாறு சட்டமன்றத்தை வேண்டலாம்; பாராளுமன்றச்சட்டம் சமுதாயத்தின் கருத்துக்கு முரணாய் இருக்குமானால், மக்கள் அச்சட்டத்தை மாற்ற அல்லது நீக்கச் சட்ட மன்றத்தைக் கட்டாயப்படுத்தலாம்; அல்லது அதற்குக் கீழ்ப்படிய மறுப்பதால் அதைப் பயன்படாத சட்டமாக்கலாம்.

இக்குறிப்புகள் அரசியலமைப்பைச் சார்ந்த சட்டத்துக்கும் பொருந்தும். இச்சட்டத்தைப்பற்றியே நாம் இங்குக் கவனிப்போம். இதைப் பொதுவாக 'அரசியலமைப்புச் சட்டம்' என வழங்கு

கிறோம். எல்லா அரசுகளிலும் இச்சட்டம் நிலவுகிறது. இதை உருவாக்குவதில் சட்ட ஆக்க முறைகள் மூன்றும்—சமுதாயத்தின் வழக்கங்கள் அல்லது வழக்காறுகள், நீதிபதிகளின் தீர்ப்புகள், பாராளுமன்றச் சட்டங்கள்—பல அளவுகளில் பயன்படுகின்றன. முதல் இரண்டையும் பொறுத்த வரையில், அரசியலமைப்புகள் அளவிலேதான் வேறுபடுகின்றன. ஏனெனில், வழக்காறுகள் இல்லாத அரசியலமைப்பு எங்கும் இல்லை. இவ்வழக்காறுகள் சட்டத்திலிருந்து தோன்ருது, வழக்கத்திலிருந்தே வளர்ந்துள்ளன. அதே போல, நீதி மன்றங்களின் தீர்ப்புகள் பாதிக்காத அரசியலமைப்பும் எங்கும் இல்லை. இவை அமெரிக்க ஐக்கிய நாடுகள், பிரான்ஸ் இவற்றின் அரசியலமைப்புகளில் சில மாற்றங்களையும் பிரிட்டிஷ் அரசியலமைப்பில் பல மாற்றங்களையும் செய்திருக்கின்றன. பாராளுமன்றச் சட்டம் என்ற மூன்ருவது விதத்தைப் பொறுத்த வரையில், அரசியலமைப்புகள் அளவில் மட்டுமல்லாமல், வகையிலும் வேறுபடுகின்றன. இங்கு நாம் ‘அரசியலமைப்புச் சட்டம்’ என்ற சொற்ருெடரின் இரு பொருள்களுக்குமுள்ள வேறுபாடுகளை உன்னிப் பார்க்க வேண்டும். பரந்த பொருளில் அது அரசியலமைப்பைப் பாதிக்கும் பாராளுமன்றச் சட்டம் அல்லது முன் தீர்ப்புச் சட்டம் எனப் பொருள்படும் குறுகிய பொருளில் அரசியலமைப்பெனும் ஆவணத்தில் காணப்படும் சட்டத்தையும், அரசியலமைப்பில் விளக்கப்பட்டுள்ள தனி முறையின்படி அதை மாற்றுவதற்காக அல்லது திருத்துவதற்காக இயற்றப்பட்ட சட்டங்களையும் மட்டும் குறிக்கும்.

பிரிட்டிஷ் அரசியலமைப்பைப்போல, ஆவண முறையல்லாத அரசியலமைப்பில் இக்குறுகிய பொருளில் அரசியல் அமைப்புச் சட்டத்தைக் காண இயலாது. திருத்தத்திற்கெனத் தனிமுறை வகுக்காத ஆவண அரசியல் அமைப்பில் இப்பொருளில் அரசியலமைப்புத் திருத்தச் சட்டம் இருக்க இயலாதென்பதும் தெளிவாகத் தெரிகிறது. எடுத்துக்காட்டாக, முசோலினி இத்தாலிய அரசியலமைப்பின் ஆற்றலை அழிப்பதற்கு முன் அது இந்நிலையில் இருந்தது. ஆகவே, அரசியலமைப்புகளைத் திருத்தும் முறைகளிலேதான் இன்றியமையாத வேறுபாடுகள் என்பது தெரிகின்றது. பிரிட்டிஷ் அரசியலமைப்பைப் போன்ற மிகப் பழமையானதோர் அரசியலமைப்பு ஆவண வடிவில் இருக்குமென்று எதிர் பார்க்க இயலாது. ஏனெனில், முற்கால அரசாங்கங்கள் நெகிழுந்தன்மை உடையனவாயும் உறுதியற்றனவாயும் இருந்திருக்க வேண்டும். அங்கு வழக்கமென்ற நீரோடை இடையிலேயே சட்டமெனும் அணைக்கட்டினுல் மறிக்கப்பட்டு வந்தது. அக்காலத்தில் தம் நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக இருளில் துழாவித் திரிந்த சமூகத்தினர் நன்கு தீட்டப்பட்ட நல்லதோர் ஆவணமுறை அரசியலமைப்பை நிறுவக்கூடும் என எதிர் பார்க்க இயலாது. அத்தகைய அமைப்பு முறை பிறகுதான்

தோன்றியது. நாம் மேலே கூறியது போல, அது முதிர்ந்த அரசியல் உணர்வின் வெளித்தோற்றம். அது கிளர்ச்சி வாயிலாகத் திடீரென்று முற்றிலும் வெளிப்படும். ஆனல், ஓர் அரசியல் சமூகத்தில் இத்தகைய உணர்வு குறிப்பிட்ட ஒரு காலத்தில் ஓர் ஆவண வடிவில் திடீரெனத் தோன்றி முற்றிலும் வெளிப்பட வேண்டிய தேவை ஏற்படவில்லையெனில், அதன் அரசாங்கம் குறைந்த அதிகாரமுடையதென்று பொருள் கொள்ளலாகாது. மேலும், சாதாரணச் சட்டங்களைப் போல நிறைவேற்றப்பட்ட அரசியல் அமைப்பு மாற்றங்கள், ஆவணத்தில் குறிக்கப்பட்டுள்ள தனி முறைப்படி நிறைவேற்றப் பட்டவை போல நிலைத்து நிற்கும் இயல்புடையன.

ஆவண வடிவிலிருந்த போதிலும், திருத்தங்களைச் செய்யத் தனி முறை வகுக்காது சாதாரணச்சட்ட ஆக்க முறையிலே அவற்றைச் செய்ய அனுமதிக்கும் அரசியலமைப்பிற்கும் இது பொருந்தும். நாம் ஏற்கெனவே விளக்கியபடி, அரசியலமைப்புச் சட்டத்தை இயற்றும் முறைக்கேற்ப அரசியலமைப்புகளைப் பாகுபாடு செய்யும் வழியை இங்குக் காண்கிருேம். இச்சட்டத்தை இயற்றச் சாதாரணச் சட்டம் ஆக்க முறையைப் பின் பற்ருமல், வேறு முறையைப் பின்பற்றவேண்டுமெனச் சில அரசியலமைப்புகள் கூறுகின்றன. இவை நெகிழா அரசியலமைப்புகள். வேறு அரசியலமைப்புகளில் இந்த வேறுபாடு இல்லை. அவற்றில் எந்தச் சட்டத்தையும் இயற்றும் பொறுப்புள்ள நிறுவனமே எல்லாச் சட்டங்களையும் இயற்ற வேண்டும். அதுதான் அரசியலமைப்புச் சட்டங்களையும் பிற சட்டங்களையும் இயற்றுகிறது. இவை நெகிழும் அரசியலமைப்புகள் ஆகும். இத்தகைய அரசியலமைப்புகள் நிறுவப்பட்டுள்ள அரசில் பாராளுமன்றத்தின் அதிகாரம் வரையிறந்தது.

## 3. நெகிழும் அரசியலமைப்பின் உண்மையான பண்புகள்

ஓர் அரசியலமைப்பின் நெகிழுந்தன்மை அதன் திருத்த முறையைப் பொறுத்துள்ளது. அரசியலமைப்புச் சட்டங்களையும், அரசியலமைப்பைச் சாராத பிற சாதாரணச் சட்டங்களையும் இயற்றுவதற்கு ஒரே வகையான முறை பயன்படுமென்ருல், அது நெகிழும் அரசியலமைப்பாகும். ஒவ்வோர் அரசியல் முறைமைக்குட்பட்ட அரசிலும், பிரிட்டிஷ் பாராளுமன்றத்தைப்போல ஒழுங்காக அமைக்கப்பட்ட சட்டமன்றம் உண்டு என்பதை ஏற்கெனவே கூறியிருக்கிருேம். 'பாராளுமன்றத்தின் வரையிறந்த அதிகாரம்' என்பதற்குப் பாராளுமன்றத்தின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்தவோ அல்லது அதன் முடிவுகளை மீறவோ வல்ல எந்த ஆற்றலும் அரசில் இல்லை என்பது

பொருள். எல்லாப் பாராளுமன்றங்களும் வரையிறந்த அதிகாரம் செலுத்துவதில்லை. கூட்டாட்சி அரசை விளக்கும்போது இதை நாம் வலியுறுத்தினேம். ஆனால், பிரதிநிதித்துவச் சட்ட மன்றத்தின் மேலுள்ள இத்தகைய கட்டுப்பாடுகள் கூட்டாட்சி அரசியலில் மட்டும் இருப்பதாகக் கருதலாகாது. பல ஒருமுக அரசுகளில் அரசியலமைப்புப் புனிதத்தன்மை வாய்ந்த ஆவணமாக மதிக்கப்படுகிறது. அங்கு அதை மாற்றுவதற்குச் சாதாரணச் சட்ட ஆக்க முறையை விட அதிகச் சிக்கலான தனி முறையைப் பயன்படுத்துகிருர்கள். அது மேலாண்மையுள்ள சட்டமாய்த் திகழ்வதால், அதை மாற்றும் போது சட்ட மன்றம் அதனல் விதிக்கப்பட்ட சில சட்டமுறையான கட்டுப்பாடுகளுக்கு அடங்கிச் செயலாற்றுகிறது.

பொதுவாக, நெகிழா அரசியலமைப்புகளையுடைய அரசுகளில் நான்கு வகையான அரசியலமைப்புத் திருத்தங்கள் நடைபெறுகின்றன. முதலாவது, சில வரையறைக்கு உட்பட்டுச் சட்டமன்றம் செய்யும் திருத்தம். இரண்டாவது, குடியொப்பம் வாயிலாக மக்கள் செய்யும் திருத்தம். மூன்ருவது, கூட்டாட்சி உறுப்புகளான மாநிலங்கள் எல்லாம், அல்லது அவற்றில் ஒரு பகுதி, திருத்தத்தை ஆதரிக்க வேண்டும். இது கூட்டாட்சி அரசுகளுக்கே உரிய இயல்பு. நான்காவது, அதற்கெனக் கூடும் தனி அவை செய்யும் திருத்தம். இவற்றைப்பற்றி விரிவாக அடுத்த இயலில் பார்ப்போம். இத்தகைய கட்டுப்பாடுகள், நெகிழும் அரசியலமைப்பையுடைய அரசில் இல்லையென்பதை இங்குக் குறிப்பிட வேண்டும். புகழ் பெற்ற அமெரிக்க நூலாசிரியராகிய A. **லாரன்ஸ் லவல்** (A. Lawrence Lowell) என்பார் தமது 'The Government of England' என்னும் நூலில், நெகிழும் அரசியலமைப்பிற்கும் நெகிழா அரசியலமைப்பிற்கும் அதிக வேறுபாடு இல்லையென்றும், நாளடைவில் இவ்வேறுபாடு மறைந்து வருகிறதென்றும் கூறுகிருர் ; 'தங்கள் அடிப்படை அரசியலமைப்புகளைச் சாதாரணச்சட்ட ஆக்க முறைப்படி மாற்றவல்ல நாடுகளுக்கும், அரசியலமைப்பு அதிகாரமும் சட்ட ஆக்க அதிகாரமும் வெவ்வேறு நிறுவனங்களில் இருக்கும் நாடுகளுக்கும் உள்ள நுட்பமான வேறுபாடுகள் எளிதில் புலனகா,' எனக் கூறுகிருர்.

அரசியலமைப்புகளை நெகிழ்பவை, நெகிழாதவை எனப் பகுப்பது உண்மையான பாகுபாடு அன்று என இதிலிருந்து அந்நூலாசிரியர் விளக்குகிருர். ஆயினும், அது உண்மையான பாகுபாடு எனக் கூறலாம். முற்றிலும் நெகிழும் தன்மையுடைய பிரிட்டிஷ் அரசியலமைப்பிலிருந்து எளிதில் நெகிழாத அமெரிக்க அரசியலமைப்பு வரை இக்கால உலகிலுள்ள எல்லா அரசியலமைப்புகளையும் ஆராயும்போது அவற்றை மாற்றுவதில் ஏற்படும் இடர்ப்பாடுகளை ஏற்ற வரிசைப்படி பார்ப்போமானல், அவற்றை இரு பிரிவுகளாகப் பிரிக்கும் பாகுபாடு

இல்லையென உறுதியாகக் கூற இயலுமா? அரசியலமைப்புச் சட்டத்தைச் சார்ந்த செய்திகளில் சட்ட மன்றம் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டுச் செயலாற்றும்போது இப்பாகுபாடு தொடங்குகிறது எனலாம். இப்பாகுபாட்டின்படி ஒரு புறத்தில் இக்கட்டுப்பாடுகள் இல்லாத பாராளுமன்றங்களையுடைய அரசுகள் உள்ளன. அவற்றின் பாராளுமன்றங்கள் ஆவணமுறை அரசியலமைப்பின் அடிப்படையில் நிறுவப்பட்டிருந்த போதிலும், கட்டுப்பாட்டிற்கு உட்பட்டிருக்கலாம். மறுபுறத்தில் கட்டுப்பாட்டிற்குட்பட்ட பாராளுமன்றங்களையுடைய அரசுகள் உள்ளன. இவற்றின் பட்டியலில் பெல்ஜியம் போன்ற அரசுகள் முதலிடம் பெறுகின்றன. அங்கு அரசியல் அமைப்பைச் சார்ந்த திட்டங்களைப்பற்றித் தீர்மானிக்கக் குறைந்த அளவு எண்ணிக்கையுள்ள உறுப்பினர்கள் இருக்க வேண்டும்; அவற்றைச் சட்டமாக நிறைவேற்றத் தனிப் பெரும்பான்மை வாக்குகள் தேவை. பட்டியலின் இறுதியில் அமெரிக்க ஐக்கிய நாடுகள் போன்ற அரசு இடம் பெறும். அங்குச் சாதாரணச் சட்ட மன்றம் தனது விருப்பம் போல அரசியலமைப்புச் சட்டங்களை நிறைவேற்றவே இயலாது.

எனவே, நெகிழும் அரசியலமைப்பின் உண்மையான இயல்பு தெளிவாகத் தெரிகின்றது. நெகிழுந்தன்மையும் நெகிழாத் தன்மையும் அரசியலமைப்புகளைப் பாகுபாடு செய்வதற்குச் சிறந்த அடிப்படைகளாய் அமைகின்றன. ஆயினும், உண்மையில் நெகிழா அரசியலமைப்புகளே பெரும்பான்மையானவை. இக்கால அரசுகளில், அரசியலமைப்பு மாற்றத்திற்குத் தனி முறையைப் பின்பற்றும் அரசுகள் இரண்டே உள்ளன. அவை கிரேட் பிரிட்டனும், நியூ ஜீலந்துமாம். ஆகவே, அவை இரண்டிலும் நெகிழும் அரசியலமைப்புகள் இருக்கின்றன. அவற்றின் பாராளுமன்றங்கள் எவ்விதச் சட்டமுறைத் தடைகளுமின்றித் தங்கள் விருப்பம் போலச் செயலாற்ற இயலும். ஆவண முறை அரசியலமைப்பு இல்லாத ஐக்கிய அரசு போன்ற நாடுகளில் பாராளுமன்றம் தான் இயற்றிய எந்தச் சட்டத்தையும்—அல்லது எல்லாச் சட்டங்களையுமே—நீக்க இயலும்; வழக்காறுகளை அழிக்கச் சட்டம் இயற்றலாம். அதற்கு விருப்பமானால், முற்றிலும் புதிய முழுமையான அரசாங்க அமைப்பையே ஏற்படுத்தலாம். இவ்விஷயங்களில் அது பெரிய மாற்றங்களைச் செய்யக் கூடாதென்பதற்குப் பல முக்கிய காரணங்கள் உண்டு. ஆயினும், அவ்வாறு செய்வதைத் தடுக்கச் சட்டமுறையான தடை ஒன்றும் இல்லை. நாம் இப்போது பார்க்கும் பிற அரசுகளிலிருப்பது போல ஆவணமுறை அரசியலமைப்பு இருக்கும் நாடுகளில், அரசியலமைப்பைத் திருத்தும் முழு அதிகாரம் நியூஜீலந்தில்

நிகழ்வது போலச்[1] சட்டமன்றத்திற்கு வழங்கப்படலாம்; அல்லது அரசியலமைப்பை மாற்றுவதற்கு என்ன செய்ய வேண்டுமென்பது அரசியலமைப்பில் குறிக்கப்படாமல் இருக்கலாம். முன்பு இத்தாலியில் இவ்வாறுதான் இருந்தது. ஆகவே, பிரிட்டனில் இருப்பது போல நியூஜீலந்திலும் இவ்விஷயத்தில் சட்டமன்றம் மேலான அதிகாரம் பெற்றுள்ளது. இப்போது நாம் பிரிட்டன், நியூஜீலந்து இவ்விரண்டின் நெகிழும் அரசியலமைப்புகளை நுணுகி ஆராய்வோம். அடுத்த இயலில் சில முக்கியமான நெகிழா அரசியலமைப்புகளைப் பற்றி விரிவாகப் படிப்போம்.

## 4. கிரேட் பிரிட்டனின் நெகிழா அரசியலமைப்பின் வளர்ச்சி

பிரிட்டிஷ் அரசியலமைப்பு மிகப் பழமையானது. ஆனால், அதன் தொன்மையைச் சில வேளைகளில் மிகைபடுத்திக் கூறுகின்றனர். எடுத்துக்காட்டாக, மகா ஆல்பிரடு (Alfred the Great) காலத்திலிருந்த அரசாங்க அமைப்பின் அடையாளங்களுள் எதையும் இப்போது பிரிட்டனில் காண இயலாது. மகா சாசனத்தை 'பிரிட்டிஷ் சுதந்தரத்தின் பாதுகாப்பு' எனக் கருதுகின்றனர். ஆனால், அதிலுள்ள கொள்கைகளில் ஒரு சிலவற்றையே இப்போது இந்நாட்டில் நிலவும் அரசாங்க முறையில் காண இயலும். பிரிட்டிஷ் அரசியலமைப்பின் தொன்மையை மட்டும் வலியுறுத்துவது தவறு. ஏனெனில், அந்த அரசியலமைப்பின் தனி ஆற்றல் அதன் பழமையிலன்று; ஆனால், அதன் நெகிழுந்தன்மையிலே அடங்கியிருக்கிறது. அத்தன்மை இல்லையெனில், அப்பண்டைய அரசியலமைப்பு, உண்மையில் இப்போது பெரும்பாலும் மறைந்துவிட்டது போல, பெயரளவிலும் நெடுங்காலத்திற்கு முன்னே மறைந்திருக்கும். ஆங்கில அரசர் முன்பு செலுத்தி வந்த தனிச்சிறப்புரிமைகள் நாளடைவில் மறைந்து போயின. இப்போது அவை சொல் வடிவிலேதான் காணப்படுகின்றன. ஆகவே, ஐக்கிய அரசு பெயரளவில் முடியரசாய் இருக்கிறது. இத்தகைய முடியரசின் அடையாளத்தை இப்போது நிறைவேற்றப்படும் சட்டங்களிலும் காணலாம். அவற்றில் காணப்படும் சொற்களை அவற்றின் பொருளுக்கேற்பப் பார்ப்போமானால், அவை முற்றிலும் அர்த்தமற்றவையாகவும் இக்கால அமைப்பு முறைக்கு ஒவ்வாதனவாகவும் தோன்றும். இவ்வாறு சொற்களுக்கும் அவற்

1. 1956இல் நிறைவேறிய தேர்தல் சட்டத்தின் விளைவாக இதில் சில மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. இவ்வியலின் இறுதியில் ஆருவது பகுதியைப் பார்க்க.

றின் உட்கருத்துகளுக்கும் மாறுபாடு இருப்பது பிரிட்டிஷ் அரசியலமைப்பின் தனிப்பட்ட இயல்பெனக் கூறலாம். ஏனெனில், அது பெரிய நெருக்கடியின்றி மாற்றங்கள் நிகழவும், வன்முறையின்றி வளர்ச்சி ஏற்படவும் வாய்ப்பளிக்கிறது. மேலும், விரைவில் மாறிக் கொண்டிருக்கும் பிரிட்டிஷ் சமூகத்தின் தேவைகளுக்கேற்ப அரசியலமைப்பு மாறுவதற்கும் வழி வகுக்கிறது. அவ்வாறு செய்யும் போது அது சமூகத்தின் மாருத்தன்மையை வெளிப்படுத்தும் பழமை வாத உணர்ச்சியையும் பழிப்பதில்லை.

பிரிட்டிஷ் அரசியலமைப்பு மாறி வரும் சூழ்நிலைகளுக்கேற்பத் தன்னை மாற்றிக்கொள்ளும் தகைமையுடையது. அதன் வளர்ச்சியின் வரலாறு முழுவதிலும் இதைக் காணலாம். இதற்கு வழக்கம், சட்டம் ஆகிய இரண்டும் இடங்கொடுக்கின்றன. இவை இரண்டும் அரசியலமைப்புச் சட்டம் என்ற தலைப்பின்கீழ் அடிக்கடி ஒன்ருக இணைக்கப்பெற்ற போதிலும், இவற்றிற்குள்ள வேறுபாட்டை நாம் நுணுகிப் பார்க்க வேண்டும். இவற்றுள் முந்தியது உண்மையில் சட்டமேயன்று. ஏனெனில், மேற்கோள்களும் நடைமுறைப் பழக்கங்களும் சேர்ந்ததுதான் வழக்கம். அது நமது அரசியலமைப்பு முறையில் ஆழ வேரூன்றியிருந்த போதிலும், நீதி மன்றங்கள் அதை ஏற்றுக்கொள்வதில்லை. இரண்டாவது கூறியது, உண்மையான சட்டத் தொகுதியைக் குறிக்கும். எழுதப்பட்டதாயினும், எழுதப்படாததாயினும், நீதி மன்றங்கள் அதை நிறைவேற்றி வைக்கும். சட்டத் தொகுதியில் மூன்று கூறுகள் உள்ளன. அவை பின் வருவன:

(1) எழுதப்படாத அல்லது பொதுச் சட்டம்

(2) பாராளுமன்றம் இயற்றும் சட்டம்

(3) உடன்படிக்கைகள்

இவ்வளர்ச்சி பற்றி நாம் இரண்டாவது இயலில் விளக்கினேம். இங்கு இந்த நெகிழும் அரசியலமைப்பின் வளர்ச்சியைச் சிறந்த அரசியலமைப்பு வரலாற்று வல்லுநராகிய 'மெயிட்லாண்ட்' (Maitland) என்பார் குறிப்பிடும் கீழ்க்காணும் ஐந்து காலப் பிரிவுகள் வாயிலாகச் சுருக்கமாகக் கூறுவோம் :

(1) பண்டைக்காலத்திலிருந்து முதலாம் எட்வர்டு இறக்கும் வரை (1307)

(2) முதலாம் எலிசபெத்து இறக்கும் வரை (1307—1603)

(3) மூன்ரும் வில்லியம் இறக்கும் வரை (1603—1702)

(4) கிளாட்ஸ்டனின் சீர்திருத்தச் சட்டங்கள் நிறைவேறும் வரை (1884-5)

(5) இந்நாள் வரை

(i) நார்மானியப் படையெடுப்புக்குப் (1066) பிறகு ஆங்கிலோ ஸாக்ஸானிய அரசாங்க முறையில் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் நிகழ்ந்தன. அதற்குக் காரணம், (அந்நிகழ்ச்சிக்கு முன்னே நில விய) நிலமானிய முறையை முதலாம் வில்லியமும் அவருக்குப் பின் பதவியேற்றவர்களும் சீரமைத்ததுதான். பழைய நிறுவனங்களில் பல நிலைபெற்றபோதிலும், அவை நார்மானிய-பிரெஞ்சு செல்வாக்கிற் கேற்பத் தம் பெயர்களை மாற்றிக்கொண்டன. அரசன் கைகளில் எல்லா அரசாங்க அதிகாரங்களும் வந்து குவிந்தன. இது அக்கா லத்தின் சிறப்பியல்பாய் இருந்தது. இதனால், பிரபுகள் நாட்டைப் பிளவுபடுத்தும் போக்குத் தடைபட்டது. 1066 தொடங்கி அரசனுக் கும் பிரபுகளுக்கும் நீண்ட போர் நிகழ்ந்துகொண்டேயிருந்தது. அக் காலத்தின் முற்பகுதியில் வலிமையற்ற அரசர்கள் ஆண்டுவந்ததால், பிரபுகளின் எதிர்ப்பினால் நாட்டில் பெருங்குழப்பம் நிலவியது. இதற்கு எடுத்துக்காட்டாக ஸ்டீபனின் ஆட்சியைக் கூறலாம். ஆனால் பிற்பகுதி யில் எதிர்ப்பு ஒழுங்கான முறையில் நடந்தது. ஜான் ஆட்சியில் சமர்ப்பிக்கப்பட்ட மகாசாசனம் என்ற ஆவணத்தில் இதைக் காண லாம். **சைமன் டி மான்ட்பர்ட்டு** (Simon de Montfort) என்பார் முப்பதாண்டுகளுக்கு முன் செய்ததைப் பின்பற்றி முதலாம் எட்வர்டு 1295இல் பாராளுமன்றத்தை நிறுவினார். இது அரசருக்கும் பிரபு களுக்கும் ஏற்பட்ட முரண்பாட்டின் ஒரு படியாய் இருந்தது. ஏனெ னில், இது அரசரின் அறிவுரை மன்றத்தில் பொது மக்களைப் புகுத்தி யது. இதன் விளைவாகப் பாராளுமன்றத்தில் ஆன்மிகப் பிரபுகள், உலகியல் துறையிலுள்ள பிரபுகள் ஆகியோரின் பெருஞ்செல்வாக்குக் குறைந்தது. ஆயினும், பொதுமக்கள் சபை நிறுவப்படுவதற்கு இது காரணமன்று, அதிக நிதி பெறுவதற்காகவே அது நிறுவப்பட்டது.

(ii) அடுத்த பகுதியின் (1307—1603) முதற்பகுதியில் பாராளுமன்றச் செயலாய்வு தோல்வியடைந்தது. லங்காஸ்டிரிய (Lancastrian) முடியரசு, மரபுரிமை இல்லாத காரணத்தினால், இந் நிறுவனத்தையே நம்பி வாழவேண்டியிருந்தது. அது ஆறும் ஹென்றி யின் காலத்தில் எழுந்த பல இன்னல்கள் காரணமாகத் தனது மதிப்பு முழுவதையும் இழந்தது. அவரது ஆட்சியில் பிரபுகள் திரும்பவும் கிளர்ச்சி செய்தார்கள். இறுதியில் ரோஜாப் போர்களின் (Wars of the Roses) போது அவர்கள் ஆட்சியைக் குலைத்து ஆர்ப்பாட்டம் செய்தார்கள். டியூடர்களின் ஆட்சியில் (1485-1603) மீண்டும் அமைதி நிலவியது. அவர்களது முடியாட்சியை வல்லாட்சி எனலாம்.

ஆனால், அது அரசியலமைப்பென்ற போர்வைக்குள் மறைந்திருந்தது. பாராளுமன்றம், ஏறக்குறைய டியூடர் ஆட்சி முழுவதும் நிலைபெற்று நின்றது, அக்காலத்தின் இன்றியமையாத அரசியலமைப்புப் பண்பாகும். அக்காலத்தில் அது என்ன செய்ததென்று கேட்கத் தேவையில்லை. ஆனால், அது நிலைபெற்றிருந்தது என்பது மட்டும் குறிப்பிடத்தக்கது. இதிலிருந்துதான் உண்மையில் இங்கிலாந்தில் பாராளுமன்ற அரசாங்கம் தொடங்கியதெனக் கூறலாம். டியூடர்கள் பாராளுமன்றத்தைப் பயன்படுத்தி வந்தமையால், தங்களுக்குப் பின் வந்த ஸ்டுவர்ட்டுகளின் காலத்தில் அரசருக்கும் பாராளுமன்றத்திற்கும் சச்சர்வு ஏற்படுவதற்குத் தங்களையும் அறியாமலே அவர்கள் வழி வகுத்தார்கள். டியூடர் காலத்தின் இறுதியில் அரசரின் வல்லாட்சி வழக்கொழிந்தது. அக்காலத்தில் பாராளுமன்றம் ஏறக்குறையத் தொடர்ச்சியாக நிலைபெற்றிருந்ததால், அதன் பிறகு பெருவிளைவுகள் ஏற்பட்டன.

(iii) ஸ்டுவர்ட்டுக்காலத்தில் அரசருக்கும் பாராளுமன்றத்திற்கும் சச்சரவுகள் மூண்டன. முதலாம் ஜேம்ஸின் ஆட்சியில் நிகழ்ந்த போர்களுக்கும், அவர் மைந்தர் காலத்தில் நடந்த உள் நாட்டுப் போருக்கும் பிறகு ஆங்கில அரசில் சிறிது காலமாக (பொதுநலக் கூட்டில் 1649-1660) புதிய ஆவண அரசியலமைப்புகள் தோன்றின. இது முன்னால் நிகழ்ந்ததுமில்லை; பிறகு நிகழவுமில்லை. முடியரசின் மீட்சிக் காலத்தில் பழைய பாராளுமன்ற முறைகள் மீண்டும் உயிர் பெற்றன. ஆனால், அப்போது பாராளுமன்றம் புதிய உரிமைகளைப் பெற விழைந்தது; அவற்றை 1688-9-ஆம் ஆண்டுப் புரட்சியின் விளைவாகப் பெற்றது. இரண்டாம் ஜேம்ஸைப் பதவியிலிருந்து நீக்கிய இப்புரட்சி, உரிமைகளின் மசோதாவை வெளியிட்டது. அது பாராளுமன்றத்தின் பெயரால் ஆட்சி செய்யும் அரசரிடம் இறைமை அதிகாரத்தை வழங்கியதுபோலத் தோன்றினாலும், உண்மையில் அரசரின்மேல் பாராளுமன்றத்தின் மேலாண்மையையே நிறுவியது. உரிமைகளின் மசோதா இப்போது அரசியலமைப்பின் எழுதப்பட்ட சட்டத்தொகுதியாய் விளங்கும் ஏராளமான சட்டங்களுள் முதன்மையானது. அன்று முதல் எந்த அரசாவது ஸ்டுவர்ட்டுகளைப்போல நடந்தால், அது வழக்காற்றின்படி அரசியலமைப்பிற்கு முரணானதாய் இருப்பதுமல்லாமல், பாராளுமன்றச் சட்டத்திற்கே மாறுபட்டதாயும் இருக்கும். உரிமைகளின் மசோதாவிற்குப் பிறகு அரசுரிமை நிருணயச் சட்டம் (Act of Settlement) இயற்றப்பட்டது (1701). அது அரசரின்மேல் பாராளுமன்றம் பெற்ற வெற்றியை வலியுறுத்தியது.

(iv) அடுத்த பகுதியில் (1702-1885) அரசியலமைப்பைச் சார்ந்த வழக்காறுகள் விரைவாக வளர்ந்து பெருகின. அப்போது அவை எழுத்து வடிவில் தோன்றவில்லை. ஆயினும், அவை இன்று

அரசாங்கத்தின் அடித்தளமாய் அமைந்துள்ளன. அப்போதுதான் அமைச்சரவை முறையும் இக்காலப் பாராளுமன்ற நடைமுறையும் நன்ருக வேரூன்றின. (அமைச்சரவையின் வளர்ச்சி பற்றிப் பின்னுேர் இயலில் விளக்குவோம்) இவற்றுள் சில அரசியலமைப்பின் வழக்காறுகளையும், சில எழுதப்படாத சட்டத்தையும், சில பாராளுமன்றச் சட்டத்தையும் சார்ந்தவை. அக்காலத்தில் அரசியலமைப்புச் சட்டத்தைத்திருத்துவதற்கெனப் பாராளுமன்றம் சிலசட்டங்களைஇயற்றியது. அவற்றுள்1716ஆம் ஆண்டின் ஏழாண்டுச் சட்டம் (Septennial Act), வாக்குரிமை, வாக்கெடுப்பு, பிரதிநிதித்துவப் பகிர்வு ஆகியவற்றை மாற்றிய பத்தொன்பதாம் நூற்ருண்டு சீர்திருத்தச் சட்டங்கள் (1832, 1867, 1872, 1884, 1885) மிகவும் முக்கியமானவை. இறுதியாக இக்காலத்தில், நாம் உடன்படிக்கையென வழங்கும் சில முக்கியச் சட்டங்கள் இயற்றப்பட்டன. எடுத்துக்காட்டாக, ஸ்காட்லாந்து, அயர்லாந்து, சில குடியேற்ற நாடுகள் இவற்றுடன் செய்த உடன்படிக்கைகளைக் கூறலாம். (குடியேற்ற நாடுகளுடன் செய்த உடன்படிக்கைகளைப்பற்றி நாம் ஏற்கெனவே 'ஒருமுக அரசு' என்ற இயலில் கூறிவிட்டோம்.)

(v) இறுதிப் பகுதி நமது காலத்தைச் சேர்ந்தது. இக்காலத்தில் இயற்றப்பட்ட முக்கியச் சட்டம் 1911ஆம் ஆண்டு பாராளுமன்றச் சட்டம். இது பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்குமிடையே ஏற்பட்ட முரண்பாடு காரணமாய் எழுந்தது. 1909இல் திரு. லாயிடு ஜார்ஜின் வரவு செலவுத் திட்டத்தைப் பிரபுகள் சபை ஏற்க மறுத்ததால், இம்முரண்பாடு தோன்றியது. இதன் விளைவாக நிறைவேறிய பாராளுமன்றச் சட்டம் நமது அரசியலமைப்பின் நெகிழும் தன்மையையும் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் வரையிறந்த அதிகாரத்தையும் தெளிவாகக் காட்டுகிறது. இச்சட்டம், பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்குமுள்ள தொடர்பைப் பெரிதும் மாற்றியமைத்தது. பிரபுகள் தங்கள் அதிகாரம் குறைக்கப்படுவதற்கு இணங்கினுர்கள். இக்குறிக்கோள்கள் சாதாரணச் சட்ட ஆக்க முறை வாயிலாக நிறைவேறின. மேலும், 'வழக்காறுகள் இறுதியில் அரசியலமைப்புச் சட்டத்தைச் சார்ந்திருக்கின்றன,' என்பதை இது காட்டுகிறது. 1909ஆம் ஆண்டுக்கு முன், பிரபுகள் பண மசோதாவைத் (Money Bill) திருத்தவும் தள்ளவும் இயலாதென்ற ஓர் அரசியலமைப்பு வழக்காறு நிலவியது. பிரபுகள் அவ்வாறு செய்ததும் அதை எதிர்த்து, வழக்காற்றுக்குச் சட்ட முறையான வடிவம் கொடுக்க வேண்டிய தேவை ஏற்பட்டது. 1949ஆம் ஆண்டு பாராளுமன்றச் சட்டமும் இக்காலத்தைச் சேர்ந்ததே. அது 1911ஆம் ஆண்டுச் சட்டத்தைத் திருத்தியது ; அவ்வாறு திருத்துவதற்கு அச்சட்டத்தில் குறிக்கப்பட்டுள்ள முறையைப் பின்பற்றியது. பெரும்பாலாரான பெண்டிருக்கு வாக்குரிமையளித்த 1918ஆம் ஆண்டு மக்களின் பிரதிநிதித்துவச்

சட்டமும், இறுதியாக ஆட்வர்களுக்களித்த அதே வாக்குரிமையைப் பெண்டிருக்கும் வழங்கிய 1928ஆம் ஆண்டுச் சட்டமும் இக்காலத்தில் இயற்றப்பட்ட பிற முக்கியமான சட்டங்களாகும். இவற்றைப் பற்றிப் பிறகு விரிவாகப் பார்ப்போம்.

## 5. பிரிட்டிஷ் அரசியலமைப்புச் செயற்படும் முறை

இந்த நீண்ட கால வளர்ச்சியின் பயனுக இன்று பிரிட்டனை ஆளும் அரசியலமைப்பு உருவானது. இன்னும் பெயரளவில் அரசியாரே மேலான அதிகாரம் செலுத்துகிருர். பெயரளவில் அவரே சட்டமியற்றுபவர், நீதிபதி, படைகளை நடத்தும் தலைமைத் தளபதி. ஆனுல், உண்மையில் முடியரசு பல கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டிருக்கிறது. ஆகவே, அது தனது அரசியல் ஆற்றலை இழந்துவிட்டது எனலாம். வழக்காறுகள், எழுதப்படாத சட்டங்கள், பாராளுமன்றச் சட்டங்கள் ஆகியவை இப்பழைய முடியரசின் ஆற்றலை எவ்வளவு குறைத்துவிட்டன என்ருல், இதை நடைமுறையில் உலகிலுள்ள தலையாய அரசியல் ஜனநாயகமாக மாற்றிவிட்டன. அரசியலமைப்பின் எல்லா வழக்காறுகளையும் ஒரு பட்டியலில் சேர்க்க இயலாது. ஏனெனில், அவை தம் இயற்கைக்கேற்ப வளர்ந்தும் தேய்ந்தும் இடைவிடாது மாறிக்கொண்டேயிருக்கின்றன. ஆனுல், அவற்றிற்கும் அரசியலமைப்பின் எழுதப்படாத சட்டங்களுக்கும் உள்ள வேறுபாட்டைக் காண இயலும். அவ்வாறு காண வேண்டுமானுல், அவற்றை மீறினுல் அதை நீதி மன்றங்கள் கவனிக்குமா எனப் பார்க்க வேண்டும். வழக்காறுகள் மேற்கோள்களே ; சட்டங்கள் அல்ல. டைஸி (Dicey) என்பார் கூறுவது போல, புதிய ஆவண முறை அரசியலமைப்புகளில் அவற்றில் சில சட்டத்தின் வடிவைப் பெறலாம் ; சில மறைந்து போகலாம்.

அரசியலமைப்பின் சில முக்கிய வழக்காறுகள் கீழே தரப்பட்டுள்ளன :

(i) ‘அரசியார் பாராளுமன்றத்தின் இரு சபைகளும் நிறைவேற்றிய எந்த மசோதாவையும் ஏற்க வேண்டும்.’

அரசியார் அவ்வாறு ஏற்க மறுத்தால் என்ன நிகழுமென எண்ணிப் பார்ப்பதில் பயனில்லை. ஏனெனில், அவர் ஒரு போதும் மறுப்பதில்லை. எந்த அரசராவது மசோதாவை ஏற்க மறுப்பாராஞல், அக்குறைபாட்டை நீக்கப் பாராளுமன்றம் ஒரு சட்டத்தை இயற்றும். அரசர் இவ்வழக்காற்றை ஒருபோதும் மீருததால், இதைச் சட்டப் புத்தகத்திலிருக்கும் சட்டத்திற்கு இணையாகக் கருதலாம்.

(ii) அமைச்சர்கள் மக்கள் சபையின் நம்பிக்கையை இழந்ததும் பதவி துறக்க வேண்டும்.

நம்பிக்கை என்பது ஒரு தனிக்கட்சியைச் சார்ந்த பெரும்பான்மையோரின் நம்பிக்கையாய் இருக்க வேண்டுவதில்லை.

1924இலும், 1929இலும் திரு. ராம்ஸே மெக்டானல்டின் (Mr. Ramsay Macdonald) தொழிற்கட்சி ஆட்சி இதை எடுத்துக் காட்டுகிறது. பெரும்பான்மையோரின் நம்பிக்கையை இழந்ததும் அமைச்சரவை பதவி துறக்கவில்லையெனில், அதைக் கட்டாயப் படுத்த யாதொரு சட்டமும் இல்லை. ஆனால், தோல்வியடைந்த அமைச்சரவை பதவி துறக்கவில்லையென்றால், பாராளுமன்றம் அதற்குப் பணம் வழங்க மறுக்கும்; ஆகவே, அரசாங்கம் செயலாற்ற இயலாது; இறுதியில் குழப்பம் ஏற்படும்.

(iii) ஒரு மசோதா நிறைவேறி, அரசியாரின் இசைவு பெறுதற்கு முன் ஒவ்வொரு சபையிலும் மூன்று முறை வாசிக்கப்பட வண்டும்.

இவ்வழக்காற்றைப் பாராளுமன்றச் சட்டம் மாற்றியிருக்கிறது. இதைக் கீழே விளக்குவோம் :

அரசியலமைப்பின் எழுதப்படாத சட்டங்கள் கீழே தரப்பட்டுள்ளன :

(i) 'அரசியார் தவறு செய்ய இயலாது.'

அரசியாரின் பெயரால் நடைபெறும் எச்செயலுக்கும் அரசியார் பொறுப்பல்லர் என்பது இதன் பொருள். முடிவில் இக்கூற்றிற்கு அப்படியே பொருள் காண வேண்டும். ஏனென்றால், அரசியார் குற்றம் செய்வாரானால், சட்ட முறைப்படி அவரைக் குற்ற விசாரணை செய்ய இயலாது. (முதல் அமைச்சரைச் சுட்டுக் கொல்லும் குற்றத்தை இதற்கு எடுத்துக்காட்டாக டைஸி கூறுகிறார்.) தவறான செயலைச் செய்துவிட்டு அரசியாரின் ஆணையின்படியே அவ்வாறு செய்ததாக எவரும் கூற இயலாது என்பதும் இக்கூற்றின் பொருள். இது சட்டம்; ஆனால், எழுதப்படாத சட்டம்.

(ii) அரசியாரின் செயல்களுள் ஒவ்வொன்றிற்கும் ஒருவர் சட்ட முறைப்படி பொறுப்புள்ளவராய் இருக்கிறார்.

அமைச்சர்களின் இப்பொறுப்பிற்குப் பல காரணங்கள் உண்டு. அரசியார் தவறு செய்ய இயலாது; அவரது செயலை நீதி மன்றம்

ஏற்றுக்கொள்ளாது. அச்செயலுக்கு முத்திரையிடும் அமைச்சர் அதற்குப் பொறுப்புள்ளவர். இவையே அக்காரணங்கள்.

பாராளுமன்றச் சட்டத்தைச் சார்ந்த சில முக்கிய விதிகள் கீழே தரப்பட்டுள்ளன:

(i) 'சட்டத்திற்குப் பணியும் கடப்பாட்டை நீக்க முடியரசிற்கு அதிகாரம் இல்லை.'

உரிமைகளின் மசோதா இதை விளக்கமாக எடுத்துக் கூறுகிறது. சட்டப் புத்தகத்தில் இருக்கும் சட்டத்தை எந்த அரசாங்கமும் ஏற்க மறுத்தால், அது சட்டத்திற்கு முரணானது என்பது நடைமுறையில் இதன் பொருள்.

(ii) ஒரு மசோதா மக்கள் சபையில் இரு தொடர்ச்சியான கூட்டக் காலங்களில் (sessions) நிறைவேற்றப்பட்டு, ஒவ்வொரு முறையும் பிரபுகள் சபையினால் தள்ளப்படுமானால், அது நேராக அரசியாரின் இசைவு பெற அனுப்பப்படுகிறது. (இதற்கிடையில் ஓராண்டு கடந்திருக்க வேண்டும். ஆயினும், இந்த இடைக்காலத்தில் பொதுத்தேர்தல் நடந்திருப்பினும், மசோதா அரசியாரிடம் அனுப்பப்படுகிறது.) ஒரு பண மசோதா மக்கள் சபையில் ஒரு முறை நிறைவேறி, பிரபுகள் சபையினால் தள்ளப்பட்டால், ஒரு திங்கள் கழித்துச் சட்டமாகிறது. (பண மசோதா என்பது என்னவென்பதை மக்கள் சபைத் தலைவர் தீர்மானிப்பார்.) 1949ஆம் ஆண்டு பாராளுமன்றச் சட்டம் தாற்காலிக மறுப்பாணைக் (Suspensive Veto) காலத்தைக் குறித்துள்ளது. நாம் ஏற்கெனவே குறிப்பிட்டபடி, இச்சட்டம் 1911 ஆம் ஆண்டுச் சட்டம், மூன்று தொடர்ச்சியான கூட்டக்காலங்களும், குறைந்தது ஈராண்டு இடைக்காலமும் தேவையென வற்புறுத்தியது. 1911ஆம் ஆண்டுச் சட்டத்தின் நடைமுறைப்படி வேல்ஸ் மதச்சபை 1920இல் நிலை குலைக்கப்பட்டது. 1949ஆம் ஆண்டுச் சட்டத்தின் முறைப்படி, பாராளுமன்றம் இரும்பு எஃகுத் தொழிலை அரசுடைமையாக்க ஒரு சட்டத்தை நிறைவேற்றியது. ஆனால், அது இரண்டாண்டுகள் கழித்து நீக்கப்பட்டது.

(iii) 1911ஆம் ஆண்டு பாராளுமன்றச் சட்டத்தில் கூறியுள்ளபடி பாராளுமன்றம் ஐந்தாண்டுக்குப் பிறகு கலைக்கப்பட வேண்டும்.

இக்குறிப்புகளிலிருந்து பிரிட்டிஷ் அரசியலமைப்பு எவ்வளவு நெகிழும் தன்மையுடையது என்பது புலனாகிறது. இவ்வழக்காறுகள், எழுதப்படாத சட்டங்கள், பாராளுமன்றமியற்றிய சட்டங்கள் ஆகிய எல்லாவற்றையும் பாராளுமன்றச் சட்டத்தினால் நீக்கவோ அல்லது

தள்ளவோ இயலும். வழக்கங்கள் இடைவிடாது வளர்ந்துகொண்டே போயினும், பாராளுமன்றமே எல்லாவற்றிற்கும் மேலானதென்பதும், அதன் திட்டங்களுக்கு மேலானதென எதையும் எந்த நீதிபதியும், எச்சட்டத் தொகுதியும் கூற இயலாதென்பதும் உண்மை. பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் மேலாண்மைக்குச் சிறந்ததொரு சான்று கூறலாம்: 1911ஆம் ஆண்டுச் சட்டப்படி முதல் முறையாகப் பாராளுமன்றம் 1915இல் கலைய வேண்டியிருந்தது. ஏனெனில், அது 1910இல் தேர்ந்தெடுக்கப்பட்டது. அது கலைவதற்குப் பதிலாகத் தனது அமர்வுக் காலத்தை நீட்டிக்க ஒரு சட்டம் இயற்றியது. 1940இலும் இதே போல நிகழ்ந்தது. இவை போர் காரணமாக நடைபெற்றன. ஆயினும், இவற்றைச் செய்வதற்குப் பாராளுமன்றம் தனி அதிகாரங்களைப் பெற முயலவில்லை; தனக்கு மேலான வேறு எந்த மன்றத்தின் துணையையும் நாடவுமில்லை. 1715இல் யாகோபியர்களின் புரட்சி தொடங்கிய பிறகு, அந்நெருக்கடி காரணமாக, பாராளுமன்றத்தின் அமர்வுக்காலம் நீடிக்கப்பட்டது. அதன் விளைவாக 1716இல் ஏழாண்டுச் சட்டம் நிறைவேறியது. அது, அப்போதுள்ள பாராளுமன்றத்தின் அமர்வுக் காலத்தை நீடிக்கச் செய்தது. அப்பாராளுமன்றம் 1694இல் நிறைவேறிய மூவாண்டுச் சட்ட (Triennial Act) முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்டது.

பிரிட்டிஷ் அரசியலமைப்பு நெகிழும் தன்மை பெற்றிருந்த போதிலும், பல நெகிழா அரசியலமைப்புகளுக்கு ஓர் அடிப்படையாய் விளங்குகிறது. பிரிட்டனில் அரசியல் நிறுவனங்கள் அனுபவம் வாயிலாக வளர்ந்தன. அவற்றின் வளர்ச்சிக்கு அனுபவமேயன்றிக் கருத்தியற்கொள்கைகள் துணை செய்யவில்லையாதலின், அவை ஒரு தனி உறுதியுடன் விளங்குகின்றன. பிரிட்டிஷ் நிறுவனங்களைப் போல அமைக்கப்பட்ட நிறுவனங்களையுடைய அரசுகளை நாம் ஆராய வேண்டும். அப்போதுதான் அனுபவம் வாயிலாக வளர்ந்த அரசாங்க முறை புதிய அரசுகளுக்குப் பயன்படுமா என்பதை அறிய இயலும். குறிப்பாக, எதிர் பாராது உரிமை பெறும் அரசுகள் முழு வளர்ச்சி பெற்ற அரசியலமைப்பைப் பெற விழையும்போது அது அவற்றிற்குப் பயன்படுமா எனக் காணலாம்.

## 6. நியூஜீலந்தின் நெகிழும் அரசியலமைப்பு

பிரிட்டிஷ் முடியரசின் கீழுள்ள தன்னாட்சி பெற்ற வெள்ளையர் வாழும் குடியேற்ற உரிமைநாடுகளில் நியூஜீலந்தில் மட்டும் நெகிழும் அரசியலமைப்பைக் காணலாம்.

தன்னாட்சி பெற்ற பிரிட்டிஷ் குடியேற்ற உரிமை நாடுகளிலெல்லாம் அண்மைக்காலம் வரை நெகிழா அரசியலமைப்புகள்

இருந்தன என ஒரு விதத்தில் கூறலாம். இவற்றின் அரசியலமைப்புகளை எல்லாம் வெஸ்ட்மின்ஸ்டரிலுள்ள பேரரசுப் பாராளுமன்றம், அதாவது ஐக்கிய அரசின் பாராளுமன்றம், சட்டத்தின் மூலமாக வழங்கியதால், அந்நிறுவனத்தின் இசைவின்றி அரசியலமைப்பை மாற்ற இயலாது. ஆனால், 1931ஆம் [1] ஆண்டுக்கு முன்னால் சிறிது காலமாக அம்மறுப்பாணை நடைமுறையில் பயன்படவில்லை. எனினும், நியூஜீலந்தைப் பொறுத்த வரையில், 1947இல் நிறைவேறிய அரசியலமைப்பு (திருத்தச்) சட்டம் அதை நீக்கியது.

நியூஜீலந்தில் இப்போதுள்ள அரசியலமைப்பு எவ்வாறு உருவானது என்பதையும், கூட்டாட்சியில் தொடங்கி, பிறகு மாநில அரசாங்கங்களை அழித்ததனால் 1876இல் ஒருமுக அரசாக மாறியதென்பதையும் ஏற்கெனவே விளக்கினோம். 1852இன் சட்டம் நியூஜீலந்தின் அரசியலமைப்பிற்குஆவண உரு அளித்தது. அச்சட்டத்திற்கு 'நியூஜீலந்துக் குடியேற்ற நாட்டிற்குப் பிரதிநிதித்துவ அரசியல்மைப்பை வழங்கும் சட்டம்' என்பது பெயர். இது சட்டத்தின் 68ஆம் விதியின்படி.

'இச்சட்டத்தின் எப்பிரிவையும் எந்தச் சட்டத்தினாலும் அல்லது சட்டங்களினாலும் இடையிடையே மாற்றுவதற்கு அப்பொது அவைக்கு (அதாவது, இச்சட்டம் நிறுவும் நியூஜீலந்துச் சட்ட மன்றத்திற்கு) அதிகாரமுண்டு.'

இதனுடன் அவ்விதி 'அரசின் விருப்பம்' என்ற காப்பு வாசகத்தையும் சேர்த்துள்ளது. ஆனால், அது ஏற்கெனவே பார்த்தது போல, நடைமுறையில் இல்லை.

முதலில் இயற்றப்பட்ட சட்டம் பல மாற்றங்களை அடைந்துவிட்டது. ஆனால், எல்லா மாற்றங்களும் சாதாரணச் சட்ட ஆக்க முறைப்படியே செய்யப்பட்டன. மாநில அரசாங்கங்களை அழித்து நியூஜீலந்தை ஒருமுக அரசாக்கிய 1876ஆம் ஆண்டுச் சட்டமும் சாதாரணச் சட்டமாகவே நிறைவேறி அரசியலமைப்பைத் திருத்தியது. 1951இல் மேல் சபையை அழித்த சட்டமும் இவ்வாறே நிறைவேறியது.

முதலில் இயற்றப்பட்ட சட்டத்தை இப்போது மக்கள் ஒரு சிறந்த முற்போக்கான சட்டமெனக் கருதுகின்றார்கள். ஏனெனில், அது திண்ணிய நாட்டுணர்ச்சியின் விழைவிற்கேற்பச் சுதந்தரம் வழங்கி

1. வெஸ்ட்மின்ஸ்டர் சட்டம் இயற்றப்பட்ட ஆண்டு. இயல் 4, பகுதி 4ஐப் பார்க்க.

யதுமல்லாமல், முற்போக்கான சமூகத்தின் தேவைகளுக்கேற்ப அரசியலமைப்புத் திருத்தத்தையும் அனுமதித்தது.

1956இல் தேர்தல் சட்டம் நிறைவேறியதும் நியூஜீலந்தின் அரசியலமைப்பில் நெகிழாத் தன்மை ஓரளவு தோன்றியது. அச்சட்டத்தின்படி அரசியலமைப்பின் ஒரு சில பகுதிகளை நீக்குவதற்குப் பிரதிநிதிகளின் சபையில் 75 சத விகிதப் பெரும்பான்மை வாக்குகள் அல்லது குடியொப்பம் தேவை. அப்பகுதிகள் பிரதிநிதித்துவ ஆணைக்குழுவின் (Representative Commission) அமைப்பு, தேர்தல் தொகுதிகளின் எண்ணிக்கை, வாக்காளர்களின் வயது, மறைவான வாக்கெடுப்பு, பாராளுமன்றத்தின் காலம் ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றன. இச்சட்டம் சாதாரணச்சட்ட ஆக்க முறைப்படிதான் நிறைவேறியது. உண்மையில் புதியனவாகச் சேர்க்கப்பட்ட இந்த 'ஒதுக்கப்பட்ட பகுதிகள்' பாராளுமன்றத்தின் சட்டமுறை அதிகாரங்களைக் குறைப்பதில்லை. ஏனெனில், நியூஜீலந்தின் Official Year Book குறிப்பிடுவது போல, 'ஒரு பாராளுமன்றம் தனக்குப் பின் வரும் பாராளுமன்றங்களைக் கட்டுப்படுத்த இயலாததால், வருங்காலத்தில் பாராளுமன்றம் இப்புதிய சட்டத்தை நீக்க இயலும். அவ்வாறு நீக்காதவாறு தடுக்க இச்சட்டத்தினால் இயலாது. ஆகவே, சட்டமுறைப்படி இப்புதிய சட்டம் அதிக ஆற்றல் பொருந்தியதன்று.' ஆயினும், (அந்நூல், மேலும் கூறுவதுபோல), புதிய சட்டம், சில பகுதிகள் அரசாங்க அமைப்பில் இன்றியமையாத இடம் பெறுகின்றன என்றும், சாதாரணப் பெரும்பான்மை வாக்குகளால் அவற்றை மாற்றக் கூடாது என்றும் பாராளுமன்றத்திலுள்ள இருகட்சிகளும் ஒரே மனமாகக் கூறின என்றும் குறிப்பிடுகிறது. ஆகவே, ஒதுக்கப்பட்ட பிரிவுகளைக் குறிக்கும் பகுதிகள், அரசியலமைப்புப் புறக்கணிக்க இயலாத ஓர் அதிகார பூர்வமான வழக்காற்றை உண்டு பண்ணுகின்றன என்று கூறலாம்.

எனினும், நியூஜீலந்தின் அரசியலமைப்பு நெகிழும் அரசியலமைப்புகளுள் எல்லாம் ஒரு தனித்தன்மை வாய்ந்தது. ஐக்கிய அரசின் அரசியலமைப்பு ஆவண முறையல்லாத அரசியலமைப்பென்றும், அதைத் தனி முறையின்றித் திருத்தவோ மாற்றவோ இயலும் என்றும் முன்பு பார்த்தோம். ஆனால், நியூஜீலந்தின் அரசியலமைப்பு அதைத் திருத்தும் வகை அதில் கூறப்பட்டுள்ளது. ஆயினும், அதில் (மேலே கூறிய விதிவிலக்குகளைத் தவிர) சட்ட மன்றத்திற்கு மேலான அதிகாரமுண்டு.

## படிக்க வேண்டிய நூல்கள் :


1. பேஜ்ஹாட் (Bagehot) : English Constitution, இயல் 9.
2. பார்க்கர் (Barker) : Essays on Government, கட்டுரை 1.
3. டைஸி (Dicey) : (1) Law of Constitution, இயல் 3, 14, 15, முன்னுரை (5).
   (2) Law and Public Opinion, விரிவுரை 2.
4. ஃபைனர் (Finer) : (1) Modern Government, இயல் 8.
   (2) Major Governments of Modern Europe, இயல் 3,4.
5. ஜென்னிங்ஸ் (Jinnings) : (1) Parliament, இயல் 1.
   (2) Cabinet Government, இயல் 1.
   (3) Law and Constitution, இயல் 1-4.
   (4) British Constitution, இயல் 5.
6. வேர் (Wheare) : Federal Government, இயல் 11.
7. ஸிங்க் (Zink) : Modern Governments, பிரிவு 1.


## மேலும் படிக்க வேண்டிய நூல்கள் :


1. அமெரி (Amery) : Thought on the Constitution
2. ஆன்சன் (Anson) : Law and Custom
3. கிரீவ்ஸ் (Greves) : British Constitution
4. இல்பர்ட்டு (Ilbert) : Parliament.
5. பொல்லார்டு (Pollard) : Evolution of Parliament
6. ராப்ஸன் (Robson) : New Jealand

## கட்டுரைக்கான பொருள்கள் :

1. 'ஆவண முறை அரசியலமைப்பு' என்பது என்ன? மக்கள் அதை உண்டுபண்ணுவதற்குக் காரணம் என்ன? அதை எவ்வாறு உண்டுபண்ணலாம்?

2. 'பிரிட்டிஷ் அரசியலமைப்பு என்பது ஒன்றும் இல்லை,' என்று டி டாக்வில் கூறியதை விளக்குக.

3. சட்டம் ஒரு சமுதாயத்தில் எவ்வாறு வளர்ச்சி பெறுகின்றது என்பதைக் காட்டி, அதன் ஆற்றலை வழக்கத்தின் ஆற்றலோடு ஒப்பிடுக.

4. 'அரசியலமைப்புச் சட்டம்' என்பதை வரையறுத்து, அது பிற வகைச் சட்டத்தினின்று எவ்வாறு வேறுபடுகின்றதென்பதைக் காட்டுக.

5. நெகிழும் அரசியலமைப்பின் இன்றியமையாத இயல்புகளைக் கூறுக. இக்கால உலகிலுள்ள ஏதாவதொரு நெகிழும் அரசியலமைப்பில் அவை எவ்வாறு காணப்படுகின்றன என்பதைக் காட்டுக.

6. பிரிட்டிஷ் அரசியலமைப்பின் வளர்ச்சியைப்பற்றி எழுதுக. அது எவ்வளவு நெகிழுந்தன்மை பெற்றுள்ளது என்பதை அதன் வரலாற்றிலிருந்து காட்டுக.

7. '1911ஆம் ஆண்டின் பாராளுமன்றச் சட்டம் நிறைவேறிய பிறகு பிரிட்டிஷ் அரசியலமைப்பு எழுதப்பட்ட அரசியலமைப்பாக மாறிற்று,' என்பதை ஆராய்க.

8. ஐக்கிய அரசின் அரசியலமைப்பில் காணப்படும் வழக்காறுகளுக்கும் சட்டங்களுக்கும் உள்ள வேறுபாடுகள் யாவை?

9. 'பிரிட்டிஷ் அரசியல் நிறுவனங்கள், கருத்தியற்கொள்கைகளினால் அன்றி, அனுபவத்தினாலேயே வளர்ச்சி பெற்று, அதனால் உறுதியுடன் இருக்கின்றன,' என்பதற்குச் சான்று தருக.

# 7. நெகிழா அரசியலமைப்பு

## 1. அரசியலமைப்புச் சட்டமியற்றும் தனி முறை

பாராளுமன்றத்தின் வரையிறந்த அதிகாரமே நெகிழும் அரசியலமைப்பின் சிறப்பியல்பாகும். அதே போலச் சட்டமன்றத்திற்குப் புறம்பான ஒன்று அதைக் கட்டுப்படுத்துவது நெகிழா அரசியலமைப்பின் முக்கியப் பண்பு. சட்டமன்றம் சில வகைச் சட்டங்களைச் சாதாரண முறைப்படி இயற்ற முடியாதென்றால், அதற்கு மேலாண்மை இல்லையென்பது தெளிவாகின்றது. அங்குச் சாதாரணச் சட்டமன்றத்தின் சட்டத்தைவிட மேலான சட்டமொன்று இருக்கிறது. அது தான் அரசியலமைப்புச் சட்டம்; அதாவது, மேலே கூறியது போல, மேலான கட்டாயச் சட்டம். இதை நெகிழும் அரசியலமைப்பில் காண இயலாது. இவ்விரு வகைச் சட்டங்களுக்கும் இடையேயுள்ள வேறுபாட்டை அறிவதற்கு எளிதான ஒரு வழி இருக்கிறது. அதாவது, நெகிழா அரசியமைப்பு. அது அரசியற்புனை சபை என்ற தனிக் குழுவின் ஆழ்ந்த ஆராய்ச்சியின் பயனாய்ப் பிறந்தது. அக்குழுவின் அலுவல் சாதாரணச் சட்டங்களை இயற்றுவதன்று: ஆனால், ஓர் அரசாங்கத் திட்டத்தை வகுப்பது அதன் வேலை; அத்திட்டத்திற்கு உடன்பட்டுச் சட்டமன்றம் செயலாற்றும்.

அரசியற்புனை சபைக்கு, தான் கலைந்துவிடுவதும், சட்ட ஆக்க அலுவலை மற்றொரு நிறுவனத்திடம் ஒப்படைத்துவிடுவதும் நன்கு தெரியும். ஆகவே, அது தான் வெளியிடும் அரசியலமைப்பில் வருங் காலத்திற்குப் பயன்படக்கூடிய பல வழிகளைக் குறிப்பிட முயல்கிறது. அரசியலமைப்பை மாற்றும் அதிகாரத்தைச் சட்டமன்றத்தினின்று நீக்கிவிட அது விரும்புமானால், ஏதாவதொரு திருத்த முறையை வகுக்க வேண்டும். ஏனெனில், எதிர்காலத்தில் என்ன நிகழலாம் என்பது அநேகமாக அதற்குத் தெரியாது. சுருங்கக் கூறவேண்டுமானால், வருங்காலத்தில் அக்காரியங்களைப்பற்றி ஆராயும்போதெல்லாம், ஓர் அரசியற்புனை சபையை அமைப்பதற்கு ஏற்பாடு செய்ய

முயல்கிறது. அச்சபை சாதாரணச் சட்டமன்றமாகவும் இருக்கலாம். ஆனல், அது சில கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டுச் செயலாற்றவேண்டும். மேலும், எந்த நிறுவனமும் அரசியலமைப்பின் சில கூறுகளை மாற்றக்கூடாதென அரசியற்புனைசபை விரும்பலாம். இக்கூறுகளுக்கும் எஞ்சியவற்றிற்கும் வேறுபாடு உண்டு. இக்கூறுகளை அடிப்படைச் சட்டம்-(Fundamental Law) என்கிறேம். எடுத்துக்காட்டாக, இப்போதுள்ள நெகிழா அரசியலமைப்புகளில் மிகப்பழைமையானதாகிய அமெரிக்க அரசியலமைப்பின்படி மாநிலத்தின் இணக்கமின்றிச் செனட்டில் அது பெற்றுள்ள சம வாக்குரிமையை நீக்க எந்தத் திருத்தமுறையினலும் இயலாது. மிகவும் அண்மையில் தோன்றிய இரு நெகிழா அரசியலமைப்புகளாகிய பிரெஞ்சு, இத்தாலியக் குடியரசுகளில், அரசாங்கத்தின் குடியரசு அமைப்பைத் திருத்த முறையினல் மாற்றக்கூடாதென ஓர் உட்பிரிவு இருக்கிறது.

நெகிழா அரசியலமைப்பு, ஆவணமுறை அரசியலமைப்பு என்ற இரு சொற்றெடர்களுக்குமுள்ள வேறுபாட்டை ஏற்கெனவே விளக்கினேம். ஓர் அரசியலமைப்பு ஆவண வடிவில் இருப்பதால் மட்டும் நெகிழா அரசியலமைப்பாகிவிடாது என்பதை மீண்டும் கூற விரும்புகிறேம். அரசியலமைப்பை வரைந்த அரசியற்புனைசபை அதை மாற்றுவதற்கு ஏதாவதொரு தனி வழி வகுத்துள்ளதா என்பதுதான் நெகிழா அரசியலமைப்பின் அளவு கருவியாகும். அரசியலமைப்பில் அத்தகைய தனி வழிகள் இல்லையாயின், அல்லது அவை முழு அதிகாரத்தையும் சட்ட மன்றத்திற்கு வழங்குமாயின், அரசியலமைப்பு நெகிழும் தன்மையுடையது. கட்டுப்பாடுகள் இருக்குமானல், அவை எவ்வளவு குறைவாய் இருந்த போதிலும், அந்த அரசியலமைப்பு நெகிழாத் தன்மையுடையது. இக்கால அரசியலமைப்புத் திருத்த முறைகளில் முக்கியமானவற்றை ஏற்கெனவே சுருக்கமாகக் கூறி விட்டோம். அவையாவன :

(1) சாதாரணச் சட்ட மன்றம் சில கட்டுப்பாடுகளுக்குட்பட்டுச் செய்யும் திருத்தம்.

(2) குடியொப்பம் வாயிலாக மக்கள் செய்யும் திருத்தம்

(3) கூட்டாட்சி அரசின் பெரும்பான்மையான மாநிலங்கள் செய்யும் திருத்தம்

(4) அதற்கெனக் கூடும் தனி அவை செய்யும் திருத்தம்.

இவற்றை விளக்குவதற்கு முன், முதலில் இவை தமது நெகிழாத் தன்மைக்கேற்ப ஏற்ற வரிசையில் கொடுக்கப்பட்டுள்ளன என்றும்,

இரண்டாவது, சிலவற்றின் திருத்த முறையில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வழிகள் கலந்துள்ளன என்றும் கூற வேண்டும்.

(1) அரசியலமைப்பைத் திருத்துவதற்குச் சாதாரணச் சட்ட ஆக்க முறையைத் தவிர, வேறு மூன்று வழிகளையும் சட்டமன்றம் பயன்படுத்தலாம். திருத்தத் திட்டத்தை ஆராயும்போது மன்றத்தில் குறிப்பிட்ட குறைந்த எண்ணிக்கையுள்ள உறுப்பினர்கள் இருக்க வேண்டுமென்பதும், அதை நிறைவேற்றத் தனிப் பெரும்பான்மை வாக்குகள் தேவை என்பதும் மிக எளிய வழியாகும். அழிந்து போன ருமேனிய அரசியலமைப்பில் இதைப்பின்பற்றினர். இரண்டாவது, அதற்கெனப் பாராளுமன்றத்தைக் கலைத்துப் பொதுத் தேர்தல் நடத்துவது, இன்னொரு வழியாகும். இதன்படி தேர்ந்தெடுக்கப் பட்ட புதிய சட்டமன்றம் அத்திட்டத்தை நிறைவேற்ற மக்களிட மிருந்து அதிகாரம் பெற்றுள்ளது. அத்திட்டத்தைப் பொறுத்த வரையில் அதை அரசியற்புனைசபை எனலாம். இக்கட்டுப்பாட்டை பெல்ஜியம், ஹாலந்து, டென்மார்க்கு, நார்வே ஆகிய நாடுகளில் காணலாம். (இந்நாடுகளில் எல்லாம் தேர்தலுக்குப் பிறகு திருத்தத்தை நிறைவேற்றப் பாராளுமன்றத்தின் மூன்றில் இரண்டு பகுதிப் பெரும்பான்மை வாக்குகளும் தேவை.) ஐக்கிய அரசிலும் இதை ஓரளவு காண இயலும். ஏனெனில், இக்கால அரசாங்கம் மக்களின் கருத்தை முன்னதாகவே அறியாமல், அரசியலமைப்பில் ஒரு பெரிய மாற்றத்தைச் செய்ய முயல்வதில்லை. எடுத்துக்காட்டாக, 1910இல் பாராளுமன்றச் சட்டம் நிறைவேறுவதற்கு முன் இருமுறை அவ்வாறு நிகழ்ந்தது. ஆனால், இம்முறையைப் பின்பற்ற வேண்டுமென்று பிரிட்டிஷ் அரசியலமைப்புச் சட்டமோ, அல்லது அரசியலமைப்பின் வழக்காறுகளோ, வற்புறுத்துவதில்லை. உதாரணமாக, 1928இல் பாராளுமன்றம் புதிய வாக்குரிமைச் சட்டத்தை நிறைவேற்றியதுமல்லாமல், பிரபுகள் சபையை எவ்வாறு சீர்திருத்துவது என்பதையும் ஆராய்ந்தது. ஆனால், அப்பாராளுமன்றம் தேர்ந்தெடுக்கப்பட்ட 1924ஆம் ஆண்டுத் தேர்தலில் இவை இரண்டையும் பற்றிக் கேள்வி எழவேயில்லை. மேலும், அண்மையில் 1948இல் பிரபுகள் சபையின் தாற்காலிக மறுப்பாணைக் காலத்தை இரண்டாண்டுகளிலிருந்து ஓராண்டிற்குக் குறைத்த மசோதாவை மக்கள் சபை நிறைவேற்றியது. அதன் நல்லியல்புகள் என்னவாயினும், அது நிறைவேறுவதற்கு மூன்றாண்டுகளுக்கு முன் நிகழ்ந்த பொதுத் தேர்தலில் அதை இயற்றுமாறு மக்கள் பாராளுமன்றத்திற்குத் தனி உரிமை வழங்கவில்லை.

அரசியலமைப்பைத் திருத்தச் சட்டமன்றம் பயன்படுத்தும் மூன்றாவது முறைப்படி, இரு சபைகளும் ஒன்றாகச் சேர்ந்து ஒரே சபையாகக்கூடும் கூட்டமர்வில் (Joint Session) பெரும்பான்மை வாக்குகள்

பெற வேண்டும். எடுத்துக்காட்டாக, இது தென்னுப்பிரிக்காவில் நடைபெறுகிறது.

(2) குடியொப்பம் (Referendum), மக்கள் வாக்கெடுப்பு (Plebiscite) இவற்றைப் பயன்படுத்தும் முறை இரண்டாவது திட்டம். பிரான்ஸில் புரட்சியின்போது இம்முறை பயன்படுத்தப்பட்டது. பிறகு லூயி நெப்போலியனும், ஜெர்மனியில் ஹிட்லரும் இதைப் பயன்படுத்தினர். கிரேட் பிரிட்டனில் இது நடைபெற்றதே இல்லை. பார்ாளுமன்ற மசோதாவைப்பற்றி இரண்டாண்டுகளாக வாதம் நிகழ்ந்த போது அந் நெருக்கடியைத் தவிர்க்க இம்முறையைப் பயன்படுத்தலாமெனப் பலர் கூறினர். ஆனுல், இறுதியில் அம்மசோதா 1911இல் சட்டமாக இயற்றப்பட்டது. இம்முறை சுவிட்ஸர்லாந்து, ஆஸ்திரேலியா, அயர், இத்தாலி, பிரான்ஸ், டென்மார்க்கு ஆகிய நாடுகளில் நிலவுகிறது. (பிரான்ஸின் ஐந்தாவது குடியரசில் தலைவருக்குச் சில அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன. டென்மார்க்கிலுள்ள பாராளுமன்றக் கட்டுப்பாட்டைப்பற்றி ஏற்கெனவே சொல்லிவிட்டோம்.)

(3) இம்முறை கூட்டாட்சிகளுக்கே உரியது. எல்லாக் கூட்டாட்சி அரசியலமைப்புகளும் பெரும்பான்மையான மாநிலங்களின் அல்லது எல்லா மாநிலங்களின் இணக்கத்தையும் எவ்வகையிலும் பெற வேண்டும். திட்டம்பற்றிய வாக்கெடுப்பு மக்கள் வாக்கெடுப்பாய் இருக்கலாம் ; அல்லது குறிப்பிட்ட மாநிலங்களின் சட்டமன்றத்தில் நிகழும் வாக்கெடுப்பாய் இருக்கலாம். சுவிட்ஸர்லாந்திலும் ஆஸ்திரேலியாவிலும் குடியொப்பம் நடைபெறுகிறது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் திருத்தத் திட்டத்தை மாநிலங்களின் முக்காற்பகுதியின் சட்டமன்றங்கள் அல்லது தனிக்கூட்டங்கள் (Conventions) ஆதரிக்க வேண்டும். இது பின் வருவது :

(4) இறுதியாக, அரசியலமைப்பைத் திருத்துவதற்கெனத் தனியாக ஒரு நிறுவனம் அமைக்கப்படுகிறது. மேலே கூறியது போல, சட்டமன்றம் சில கட்டுப்பாடுகளுக்குட்பட்டு அரசியலமைப்பைத் திருத்தும்போது, சிறப்பாக இரு சபைகளும் கூட்டமர்வாகக் கூடும் போது ஒரு வகையில் இம்முறை பின்பற்றப்படுகிறது எனலாம். ஆனுல், சில இடங்களில் தனிக்கூட்டம் வேறு எந்த நிறுவனத்தினின்றும் வேறுபட்டதாய் இருக்கிறது. எடுத்துக்காட்டாக, அமெரிக்க ஐக்கியத்தின் மாநிலங்கள் சிலவற்றில் மாநில அரசியலமைப்பைச் சார்ந்த காரியங்களில் இம்முறையைப் பயன்படுத்துகின்றனர். கூட்டாட்சிக் காங்கிரஸ் வேண்டிஞல், ஐக்கிய அரசியலமைப்பிற்கும் இதைப் பயன்படுத்தலாம். பல்கேரியாவின் பழைய அரசியலமைப்பிலும், சில இலத்தீன் அமெரிக்க அரசுகளிலும் இதைக் காணலாம்.

நெகிழா அரசியலமைப்பையுடைய அரசுகளில் பெரும்பாலும் இரு விதமான அரசியலமைப்புத் திருத்தங்கள் நடைபெறுகின்றன எனப் பொதுவாகக் கூறலாம். முதலாவது, குறிப்பிட்ட கட்டுப்பாடுகளுக்குட்பட்டுச் சட்டமன்றம் செய்யும் திருத்தம். இரண்டாவது, குடியொப்பத்தின் விளைவாக நிகழும் திருத்தம். மற்றிரு முறைகளுள் ஒன்று, கூட்டாட்சி அரசுகளுக்கே உரியது ; ஆயினும், எல்லாக் கூட்டாட்சிகளிலும் காணப்படுவதில்லை. மற்றொன்று, கட்டாயமான முறையன்று. இப்போது நாம் நெகிழா அரசியலமைப்புடைய சில முக்கிய அரசுகளில் அரசியலமைப்புத் திருத்தம் நிகழும் முறைகளை விரிவாகப் பார்ப்போம்.

## 2. பிரெஞ்சுக் குடியரசின் நெகிழா அரசியலமைப்பு

1875இல் மூன்றும் குடியரசை நிறுவுவதற்கு முன் எண்பது ஆண்டுகளாகப் பிரெஞ்சு மக்கள் அரசியலமைப்பை உருவாக்கும் செயலாய்வில் அதிகமாக ஈடுபட்டிருந்தார்கள். ஆகவே, உலகம் பிரெஞ்சு மக்களையே நடைமுறை அரசியலில் கைதேர்ந்த கலைஞர்களாகக் கருதத் தொடங்கியது. பிரெஞ்சு வல்லுநர் ஒருவர் சொல்வது போல, அவர்கள் அரசியலமைப்பை ஒரு கொள்கையிலிருந்து வடித்தெடுத்த தத்துவ முறைப் படைப்பாகவும், ஒழுங்கும் செப்பமும் உடைய கலைப்படைப்பாகவும், அறிவியல் கருவியாகவும் கருதுகின்றார்கள். அக்கருவியின் திட்டம் எவ்வளவு நுட்பமானதென்றால், அதன் அமைப்பு எவ்வளவு உயர்வும் உறுதியும் உடையதென்றால், அதில் யாதொரு சிறு சிக்கலும் ஏற்பட இயலாது. இவ்வரசியல் திறமையைப் பயன்படுத்திய பிரெஞ்சு மக்கள் ஒரு நூற்றாண்டிற்கும் குறைந்த கால அளவில் பன்னிரண்டு அரசியலமைப்புகளுக்குக் குறையாமல் உருவாக்கினார்கள். பிராங்கோ ஜெர்மானியப் போரில் பிரான்ஸ் அடைந்த பெருந்தோல்வியின் பிறகு மூன்றாவது குடியரசு நிறுவப்பட்டது. அச்சூழ்நிலை காரணமாக, பிரெஞ்சு மக்கள் முற்றிலும் ஆவண வடிவிலுள்ள அரசியலமைப்பை உருவாக்கும் மரபைக் கைவிட்டார்கள் ; அதற்குப் பதிலாக, 1875ஆம் ஆண்டு ஜூலைத் திங்களில் இயற்றப்பட்ட மூன்று தனிச்சட்டங்களின் அடிப்படையில் புதிய ஆட்சியை நிறுவினார்கள்.

அந்த அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் அது நெடுங்காலம் நிலைத்து நில்லாதென நம்பினார்கள். ஏனெனில், அவர்களுள் பெரும்பாலார் குடியரசு வாதிகளே அல்லர். அவர்கள் முடியரசு வாதிகள்.

குடியரசு 1875 வரை திட்டமாக அமைக்கப்பெருவிடினும், உண்மையில் 1870ஆம் ஆண்டு செப்டெம்பர்த் திங்களில் பிறந்தது. அதாவது, மூன்ரும் நெப்போலியனும் அவனது படையும் செடன் (Sedan) போர்க்களத்தில் கைப்பற்றப்பட்டதும் அது தோன்றியது. ஜெர்மானியரை எதிர்த்து ஐந்து மாதங்களாக நம்பிக்கையின்றிப் போரிட்ட பிறகு பாரிஸ் வீழ்ச்சியடைந்தது. அதன் பிறகு சமாதான ஒப்பந்தம் முடிவானது. 1871ஆம் ஆண்டு பிப்பிரவரித் திங்களில் ஆடவர் வாக்குரிமை முறைப்படி தேசியச் சபை தேர்ந்தெடுக்கப்பட்டது. போரை மீண்டும் தொடங்கவேண்டுமா என்று முடிவு செய்வது அதன் அலுவலாய் இருந்தது. அதனுடன் அது வேறு பல வேலைகளையும் செய்தது. அமைதியை நிலை நாட்டி, அடுத்த நான்கு ஆண்டுகளாகப் பிரான்ஸை ஆண்டு வந்தது; தான் கலைவதற்கு முன் குடியரசு அரசியலமைப்பை நிறைவேற்றியது. இந்த அவை அரசியற்புனை சபையாய் மாறியதற்குக் காரணம், இதில் குடியரசு வாதிகளைவிடப் பல திறப்பட்ட முடியரசு வாதிகள் அதிகமாய் இருந்ததே. மேலும், இன்ஞெரு தேர்தல் நடைபெற்ருல், தங்கள் அதிகாரம் குறைந்துவிடுமென முடியரசு வாதிகள் அஞ்சிஞர்கள். ஆயினும், அச்சபையில் மிக்க செல்வாக்குடையவரும், குடியரசின் முதல் தலைவராய் வர வேண்டியவருமாகிய தியர்ஸ் என்பார் கூறியது போல ஒரே அரியணையே இருந்த போதிலும், அதில் அமர மூவர் விழைந்தனர். அம் மூவரையும் (அதாவது, பூர்போன், ஆர்லியனிஸ்ட் மரபினர்களையும், மதிப்பிழந்த போனப்பார்ட் குடும்பத்தினரையும்) ஆதரித்தவர்கள் ஒன்ருக இணைய இணங்காததால் தங்களுக்குள்ள வேறுபாடுகளை விட்டுக்கொடுத்து ஓர் ஒப்பந்தம் செய்தார்கள். அதன்படி அவர்கள் ஒரு 'பழமைக்கொள்கைக் குடியரசை' (Conservative Republic) நிறுவினர்கள்; இதனல் எதிர்காலத்தில் யாதொரு தடையும் ஏற்படாதென நம்பினர்கள். முற்போக்குள்ள குடியரசு வாதிகள் இக்குடியரசை ஏற்ருர்கள். ஏனெனில், அவர்கள் இதை இன்னும் தீவிரமான முறையில் மாற்ற எண்ணினர்கள். முடியரசு வாதிகள் குடியரசுத் தலைவரின் பதவியை ஏற்றுக்கொண்டார்கள்; ஏனென்ருல், பிறகு தலைவரை நாட்டின் மன்னராக அல்லது பேரரசராக மாற்றிவிடலாமென நம்பினர்கள்.

1875ஆம் ஆண்டின் மூன்று சட்டங்களும் அரசியலமைப்பின் அடிப்படைகளாய் அமைந்தன. பொதுவில் அவற்றின் விளைவாக, செனட்டு, பிரதிநிதிகளின் அவை என்ற இரு சபைகளையுடைய சட்டமன்றம் நிறுவப்பட்டது. இரண்டு சபைகளின் கூட்டமர்வில் அரசியலமைப்புத் திருத்தம் நடைபெறலாம். இரு சபைகளும் ஒன்ருக அமரும்போது அதற்குத் தேசீயச் சபை என்பது பெயர். இரண்டில் ஒரு சபை அத்தகைய கூட்டமர்வைக் கூட்டவேண்டுமென முழுமை

யான பெரும்பான்மை (Absolute majority) வாக்குகளினுல் தீர்மானித்தால், அது கூட்டப்படும். அவ்வாறு கூடிய தேசீயச் சபைக்குத் தான் விரும்பியவாறு அரசியலமைப்பைத் திருத்த முழு அதிகாரம் இருந்தது. ஆனுல், 1884ஆம் ஆண்டுச் சட்டப்படி குடியரசை அழிப்பதற்கு அதற்கு அதிகாரம் இல்லை. உண்மையில் மூன்ருவது குடியரசின் 65 ஆண்டுக் காலத்தில் தேசீயச் சபை அரசியலமைப்பில் ஒரு சில மாற்றங்களையே செய்தது.

மூன்ருவது குடியரசு தோன்றிய சூழ்நிலைக்கும் பிரெஞ்சு மக்கள் நான்காவது குடியரசை நிறுவிய போது நிலவிய சூழ்நிலைக்கும் பெரு வேறுபாடுகள் இருந்தன. பகைவர் படையெடுத்து நாட்டைக் கைப் பற்றிய பிறகு இரண்டும் உருவாயின என்பது உண்மைதான். ஆனுல், 1870-71இல் நடந்த போரைவிட மிகப் பரவலான பாழ்படுத்தும் போரின்—உண்மையில் இரு போர்களின்—விளைவுகளினுல் 1946இல் பிரெஞ்சு மக்கள் வருந்திஞர்கள். என்ன நிகழ்ந்த போதிலும், குடியரசுதான் சிறந்த அரசாங்க அமைப்பென்பதை எல்லாரும் ஏற்றுக் கொண்டனர். நிருவாகத் துறையின் தன்மையும், தலைவரின் அதிகார வரையறையுமே பிரச்சினைகளாய் இருந்தன. 1946இல் முடியரசுவாதியர் யாரும் இல்லாததால், சிக்கலும் இல்லாதிருந்தது. ஆகவே, பிரெஞ்சு மக்கள் தங்கள் பழைய மரபு வழக்காகிய முழு ஆவண முறை அரசியலமைப்பைப் புதுப்பித்தார்கள். அதன் விளைவாகப் புதிய அரசியலமைப்பு, பழைய அமைப்பைவிட அதிகமாக நெகிழா திருந்தது. மூன்ரும் குடியரசின் நிறுவனங்களுள் பல மீண்டும் தோன்றின. ஆயினும், அவற்றிற்கு வேறு பெயர்கள் வழங்கப்பட்டன.

ஆறு விதிகள் (90-95) அடங்கிய நீண்ட இயல், திருத்த முறையை விளக்குகிறது. இதைச் சார்ந்த தொடக்க உரிமை (Initiative) தேசீய அவைக்கு உண்டு. ஆனுல், எந்தத் திருத்தத் திட்டத்தையும் நிலையான அரசியலமைப்புக் குழு ஆராய வேண்டும். இக்குழுவில் நாட்டின் தலைவரும், ஒவ்வொரு சபையின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களும் இருப்பார்கள். எந்தச் சட்டமாவது அரசியலமைப்புத் திருத்தத்தை உண்டுபண்ணக் கூடும் என்று குழுக் கருதுமானுல், அதைத் தேசீயச் சபையின் முன் மீண்டும் சமர்ப்பிக்க வேண்டும். பிறகு அது தனித்திருத்த முறைப்படி நிறைவேற்றப்படும். திருத்தத் திட்டம் தேசீயச் சபையில் இரண்டாவது வாசகத்தில் மூன்றில் இரண்டு பகுதிப் பெரும்பான்மை வாக்குகளினுல் அல்லது ஒவ்வொரு சபையிலும் ஐந்தில் மூன்று பகுதி பெரும்பான்மையினுல் நிறைவேற்றப்படுமானுல், பாராளுமன்றம் அதை நிறைவேற்றிய எட்டு நாள்களுக்குள்ளாகக் குடியரசின் தலைவர் அதைச் சட்டமாக அறிக்கையிடவேண்டும். ஆனுல், அது ஒவ்வொரு

சபையிலும் முழுமையான பெரும்பான்மை வாக்குகளினும் (அதாவது மேலே குறிப்பிட்ட விகிதத்திற்கே குறைந்த பெரும்பான்மை வாக்குகளால்) நிறைவேற்றப்பட்டால், அதைப் பொதுமக்கள் முன் சமர்ப்பிக்க வேண்டும். குடியொப்பத்தின் போது வாக்களிப்போருள் பெரும்பான்மையினர் அதை ஆதரித்தால், அது சட்டமாகும்.

1958ஆம் ஆண்டு, செப்டெம்பர்த் திங்கள், 28ஆம் நாள் நிகழ்ந்த குடியொப்பத்தில் மக்கள் பிரான்ஸின் ஐந்தாவது குடியரசின் அரசியலமைப்பை ஏற்றுக்கொண்டார்கள். அது 1958ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்கள், 4ஆம் நாளில் அறிக்கையிடப்பட்டது. அது புதிய சூழ்நிலைக்கேற்பப் பல மாற்றங்களைச் செய்தது. மேல் சபைக்குச் செனட்டு என்ற முந்திய பெயரை மீண்டும் வழங்கியபோதிலும், கீழ்ச்சபைக்கு (நான்காவது குடியரசில் இருந்தது போல) தேசீய அவை (National Assembly) என்ற பெயரையே கொடுத்தது. தேசீய அவை என்ற பெயர் மூன்றுவது குடியரசில் இரு சபைகளும் சேர்ந்து அமரும் கூட்டமர்வைக் குறித்தது. அத்தகைய கூட்டமர்வு இப்போது 'காங்கிரஸ் கூட்டம்' என வழங்கப்படுகிறது. நிருவாகத் துறையில் ஏற்பட்டுள்ள பெருமாற்றங்களைப்பற்றிப் பிறகு விரிவாக விளக்குவோம்.[1] இங்கு, அரசியலமைப்பின் 89ஆம் விதி கூறும் திருத்த முறை மாற்றத்தைப்பற்றிப் பார்ப்போம். இவ்விதியின்படி அரசியலமைப்பைத் திருத்தும் தொடக்க உரிமை குடியரசுத் தலைவருக்கும் பாராளுமன்ற உறுப்பினர்களுக்கும் கொடுக்கப்பட்டுள்ளது. தலைவர், தலைமை அமைச்சரின் அறிவுரையின்மேல் இவ்வுரிமையைப் பயன்படுத்தலாம். அரசாங்கம் அல்லது பாராளுமன்றம் கொண்டு வரும் திருத்த மசோதா, இரு சபைகளாலும் நிறைவேற்றப்பட வேண்டும். அது குடியொப்பத்தில் ஏற்கப்பட்ட பிறகே செயலாற்றப்படும். ஆயினும், குடியரசுத் தலைவர் திருத்த மசோதாவைக்காங்கிரஸ் கூட்டமாகக் கூடும் பாராளுமன்றத்தின் முன் சமர்ப்பித்தால், அதை மக்கள் முன் சமர்ப்பிக்கத் தேவையில்லை. பாராளுமன்றம் அதை ஐந்தில் மூன்று பகுதிப் பெரும்பான்மை வாக்குகளால் ஏற்றுக் கொண்டால்தான் திருத்தம் நிறைவேறும். 89ஆம் விதியின்படி, 'நாட்டின்மேல் தாக்குதல் நிகழுங்கால் எந்தத் திருத்த நடவடிக்கையும் எடுக்கக் கூடாது.' அவ்விதியின்படி, முந்திய இரண்டு அரசியலமைப்புகளிலும் இருந்தது போல, 'குடியரசு முறை அரசாங்கத்தைத் திருத்த இயலாது.'

---

1. 11ஆம் இயலைப் பார்க்க.

## 3. இத்தாலியக் குடியரசின் நெகிழா அரசியலமைப்பு

1947இல் நிறுவப்பட்ட இத்தாலியக் குடியரசின் அரசியலமைப்பு ஆவண வடிவில் இருப்பதால், முந்திய முடியரசின் அரசியலமைப்பைப்போலிருக்கிறது; ஆனால், நெகிழாத் தன்மையில் அதினின்று வேறுபட்டிருக்கிறது. 1848ஆம் ஆண்டின் ஸார்டீனிய அரசியலமைப்பை வரைந்தவர்கள், அது முடிவானதாக இருக்க வேண்டுமென விரும்பினார்கள் என்பதில் ஐயமில்லை. ஆகவே, அதில் திருத்த முறைகள் பற்றி யாதொரு குறிப்பும் இல்லை. ஆனால், நாளடைவில் இத்தாலி முழுவதும் அதை ஏற்றுக்கொண்டதாலும், பெருவளர்ச்சியும் மாற்றங்களும் மலிந்த அக்காலத்தில், அது செயலாற்ற வேண்டியிருந்ததாலும், புதியசூழ்நிலைக்களுக்கேற்ப அந்தமாற்றியமைக்கவேண்டிய தேவை ஏற்பட்டது. இதைக் கால இடச் சூழலுக்கு ஏற்ற எளிய முறையில் செய்து முடித்தனர். அதாவது, பழைய அரசியலமைப்பைத் தீட்டியவர்கள், திருத்த முறைபற்றி அதில் ஒன்றும் கூறாததால், சாதாரணச் சட்ட ஆக்க முறைப்படி திருத்தங்கள் செய்யலாம் என விளக்கம் தந்தார்கள். 19ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் இத்தாலிய அரசியல் வல்லுநர் பலர் இவ்வாறே கருதினர். எடுத்துக்காட்டாக, முற்போக்குக் கட்சி முதலமைச்சர் கிரிஸ்பி (Crispi) என்பார், 'அரசியலமைப்பின் மாறாத்தன்மை'யை ஏற்க மறுத்தார். 1881இல் அவர் இத்தாலியப் பாராளுமன்றம் எப்போதும் அரசியலமைப்பைப் புனைய வல்லது,' எனக் கூறினார். அந் நூற்றாண்டின் இறுதியில் வல்லுநர் மற்றொருவர், 'பாராளுமன்றம் எல்லாம் செய்ய வல்லது என்ற கொள்கை கிரேட் பிரிட்டனிலுள்ளது போல இன்றைய இத்தாலியிலும் ஆழமாக வேரூன்றியிருக்கிறது,' எனக் கூறினார்.

அதாவது, பிரிட்டனில் காணப்படுவது போலவே, இத்தாலியிலும் பாஸிஸ ஆட்சி தொடங்குவதற்கு முன் சாதாரணச் சட்டத்திற்கும் அரசியலமைப்புச் சட்டத்திற்கும் வேறுபாடு இருந்ததில்லை. அரசியலமைப்பின் வாசகத்தை மாற்றுவதைப்பற்றி அடிக்கடி வாதம் நிகழ்ந்தது; ஆனால், உண்மையில் மாற்றம் எதுவும் நிகழவில்லை. பாராளுமன்றங்கள் அரசியலமைப்பின் வாசகத்தை மாற்றாமலும், புதிய உட்பிரிவுகளைக்கூடச் சேர்க்காமலும் சட்டங்களை இயற்றி, அரசியலமைப்பை மாற்றிவந்தன. அத்தகைய சட்டங்களுக்கு எடுத்துக்காட்டாக நீதித்துறையைச் சீரமைத்த சட்டம், போப்பு உறுதிமொழிச் சட்டம் (Law of Papal Guarantees), வாக்கெடுப்பு, தேர்தல் தொகுதியின் தன்மை, அளவு இவற்றை அடிக்கடி மாற்றிய பல சட்டங்கள்

ஆகியவற்றைக் கூறலாம். இத்தாலியின் முந்திய அரசியலமைப்பு எவ்வளவு நெகிழ்ந்த அமைப்பாய் இருந்ததென்றால், முசோலினி தமது வல்லாட்சியின் தொடக்கக் காலத்தில் அதை உடைக்காமல் தமது விருப்பப்படி வளைத்து வந்தார் ; ஆனால், இறுதியில் 'கூட்டுக் கழக அரசை'[1] (Corporate State) அமைத்ததும் அதை அடையாளம் தெரியாதவாறு சிதைத்தார்.

அதற்கு மாறாகப் புதிய இத்தாலியக் குடியரசின் அரசியலமைப்பு, திருத்த முறைகளைத் தெளிவாக வரையறுக்கின்றது. திருத்த முறையை விளக்கும் அப்பகுதி, பிரெஞ்சுக் குடியரசின் அரசியலமைப்பில் இருப்பதைப்போல அவ்வளவு தெளிவாய் இல்லாதபோதிலும், இத்தாலிய முறைக்கும் பிரெஞ்சு முறைக்கும் பல ஒற்றுமைகள் உண்டு. அரசியலமைப்பைத் திருத்தும்போது (138ஆம் விதியின்படி) வாக்காளர்களும் பாராளுமன்றமும், அதாவது பிரதிநிதிகளின் சபையும் செனட்டும் அதில் பங்கு பெறலாம். ஒவ்வொரு சபையும் அரசியலமைப்புத் திருத்தச் சட்டத்தை இரு வாசகங்களில் நிறைவேற்ற வேண்டும். அவற்றிற்கிடையே குறைந்தது மூன்று மாதங்களாவது கடந்திருக்க வேண்டும். இரண்டாவது வாசகத்தில் அது ஒவ்வொரு சபையிலும் முழுமையான பெரும்பான்மை வாக்குகளைப் பெறவேண்டும். அச்சட்டம் அறிக்கையிடப்பட்ட மூன்று மாதங்களுக்குள் ஒரு சபையின் ஐந்தில் ஒரு பகுதி உறுப்பினர்கள், அல்லது 5,00000 வாக்காளர்கள், அல்லது ஐந்து மண்டல அவைகள் (Regional Councils) விரும்பினால், அச்சட்டம் குடியொப்பத்திற்குச் சமர்ப்பிக்கப்படவேண்டும். ஆனால், இரண்டாவது வாசகத்தில் அச்சட்டம் ஒவ்வொரு சபையிலும் உறுப்பினர்களுள் மூன்றில் இரண்டு பகுதியினரின் பெரும்பான்மை வாக்குகளைப் பெற்றால், இது தேவையில்லை.

## 4. அயரிலும் தென்னாப்பிரிக்காவிலும் அரசியலமைப்புத் திருத்தம்

அடுத்தபடியாக அயர்லாந்து (அயர்), தென்னாப்பிரிக்கா ஆகிய இரு குடியரசுகளிலும் அரசியலமைப்புத் திருத்தம் எவ்வாறு நடைபெறுகின்றதெனப் பார்ப்போம். அவை இரண்டும் பிரான்ஸையும் இத்தாலியையும் போல நெகிழா அரசியலமைப்பையுடைய ஒருமுக அரசுகள். அவை முன்பு தன்னாட்சிபெற்ற பிரிட்டிஷ் குடியேற்ற உரிமை நாடுகளாய் இருந்து, குடியரசானதும் பொதுநலக் கூட்டிலிருந்து வெளியேறியதால், அவை இரண்டையும் ஒன்றாகச் சேர்த்துப் பார்ப்பது எளிதாய் இருக்கும்.

1. 15ஆம் இயலைப் பார்க்க.

(i) அயர் (அயர்லாந்து குடியரசு): 1937 முதல் தெற்கு அயர்லாந்து 'அயர்' என வழங்கப்படுகிறது. கிரேட் பிரிட்டனுக்கும் அயர்லாந்தின் அப்பகுதிக்கும் 1922இல் ஏற்பட்ட உடன்படிக்கையின் விளைவாக அது உரிமை நாடான அயர்லாந்து (Irish Free State) என்ற பெயருடன் நிறுவப்பட்டது. அடக்கு முறையினாலும் உள் நாட்டுப் போரினாலும் அழிவு ஏற்பட்ட பிறகுதான் இவ்வுடன்படிக்கை நிறைவேறியது. இது தன்னாட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாட்டு நிலையைத் தெற்கு அயர்லாந்திற்கு வழங்கியது. அதன் விளைவாக இரண்டு அவைகளையுடைய (அயர் அவை - Dail Eireann—செனட்டு) ஒரு சட்ட மன்றம் நிறுவப்பட்டது. நிருவாகத்துறை அதற்குப் பொறுப்புள்ளது. முடியரசு நியமிக்கும் கவர்னர் ஜெனரல் பெயரளவில் நிருவாகத் துறையின் தலைவராவார். முன்பு கூறியது போல, 1937ஆம் ஆண்டின் அரசியலமைப்பு, கவர்னர் ஜெனரலின் பதவியை அழித்தது. பிறகு இயற்றப்பட்ட 1948ஆம் ஆண்டுச் சட்டம், அயரைச் சுதந்தரக் குடியரசாக்கியது. முதல் அரசியலமைப்பின் 50ஆம் விதி, திருத்த முறையைத் தெளிவாக விளக்கியது. ஆனால், அதில் குறிக்கப்பட்டுள்ள முறைகள் அரசிலமைப்பு வெளியான பிறகு எட்டு ஆண்டுகள் கழித்தே செயற்படும் எனக் கூறியது. அதில் குறிப்பிடப்பட்ட திருத்தமுறை, 1937ஆம் ஆண்டின் அரசியலமைப்பில் உள்ளது போன்றிருக்கின்றது. இப்போதும் அம்முறைதான் செயற்படுகிறது. புதிய அரசியலமைப்பின் 46 (2)ஆம் விதியின்படி, 'அரசியலமைப்பின் ஒவ்வொரு திருத்தத் திட்டமும் அயர் அவையின் முன் கொண்டுவரப்பட வேண்டும். அதைப் பாராளுமன்றத்தின் (Direachtas) இரண்டு அவைகளும் நிறைவேற்றினால், அல்லது நிறைவேற்றியதாகக் கருதினால், அப்போது நிலவும் சட்டப்படி அது குடியொப்பத்திற்குச் சமர்ப்பிக்கப்படவேண்டும்.' 47 (1)ஆம் விதியின்படி, குடியொப்பத்தின் போது அளிக்கப்பட்ட வாக்குகளுள் பெரும்பான்மையானவை அத்திட்டத்தை ஆதரித்தால், அதை மக்கள் ஏற்றுக்கொண்டதாகக் கருதப்படும்.

(ii) **தென்னாப்பிரிக்கா**: 19ஆம் நூற்றாண்டில் ஆங்கிலேயருக்கும் டச்சு மக்களுக்கும் இடையே வளர்ந்த பகைமை இறுதியில் 1899-1902 ஆண்டுப் போராய் முடிந்தது. அப்பிரச்சினைக்கு முடிவு காணும் நோக்குடன், 1909இல் நிறைவேறிய தென்னாப்பிரிக்கச் சட்டம் நான்கு மாநிலங்களையுடைய ஓர் ஐக்கியத்தை 1910ஆம் ஆண்டில் நிறுவியது.

முன்பு விளக்கியது போல, இது வெளித் தோற்றத்தில் மட்டும் கூட்டாட்சியாய் இருந்த போதிலும், உண்மையில் கூட்டாட்சி அன்று. ஏனெனில், மாநில அதிகாரங்கள் தெளிவாக விளக்கப்பட்டிருந்த

போதிலும், அவற்றிற்கும் வட்டார அரசாங்கங்களின் அதிகாரங்களுக்கும் அதிக வேறுபாடில்லை. மேலும், மாநிலங்கள் இந்த அதிகாரங்களைத் தமக்களிக்கப்பட்ட உரிமைகளெனச் செலுத்தியதில்லை; ஐக்கியப் பாராளுமன்றத்தின் விருப்பத்திற்குப் பணிந்தே இவற்றைச் செலுத்தின. மாநில அவையில் சட்டம் பாராளுமன்றச் சட்டத்திற்கு முரணாய் இருக்குமானால், அதைத் தள்ளிவிட ஐக்கியப் பாராளுமன்றத்திற்கு அதிகாரமிருந்தது.

தென்னாப்பிரிக்கச் சட்டத்தின் 152ஆம் பிரிவில் திருத்த முறை தெளிவாகக் குறிக்கப்பட்டிருந்தது. ஐக்கியப் பாராளுமன்றம் கீழ்க் காண்பவற்றைத் தவிர, எல்லாப் பிரிவுகளையும் நீக்கவோ அல்லது திருத்தவோ இயலும். அது திருத்த முடியாதவை: (அ) ஐக்கியத்தினுள் வாழும் சுதேசிகளின் உரிமைகள், (ஆ) டச்சு, ஆங்கில மொழிகளுக்கு வழங்கப்படும் சமத்துவம், (இ) சுதேச நிலப்பகுதிகளின் (பாசுட்டோலாந்து, பெக்குவானாலாந்து, சுவாஜிலாந்து) ஆட்சிமுறை. இதை மேலே கூறிய பிரிவுடன் இணைக்கப்பட்ட அட்டவணையில் காணலாம். இந்நிலப்பகுதிகள் அரசியலாரால் நியமிக்கப்பட்ட ஹைகமிஷனரின் ஆட்சியின்கீழ் இருந்தன. (அ), (ஆ) இரண்டையும் மாற்ற வேண்டுமானால், ஐக்கியப் பாராளுமன்றத்தின் இரண்டு அவைகளும் ஒன்றுயமர்ந்து ஒரு மசோதாவை நிறைவேற்ற வேண்டும். அப்போது மூன்றாவது வாசகத்தில் இரண்டு அவைகளின் உறுப்பினரின் மொத்த எண்ணிக்கையில் மூன்றில் இரண்டு பகுதியினருக்குக் குறையாமல் அதை ஆதரிக்கவேண்டும். ஆனால், (இ) ஐக்கிய அரசாங்கம் இவ்வாறு மாற்ற இயலாது. தென்னாப்பிரிக்க ஐக்கியத்தின் அரசியலமைப்பு அவ்வளவு நெகிழாத் தன்மையுடையது.

முன்னால் விளக்கியது போல, 1961ஆம் ஆண்டு சட்டம் குடியரசை நிறுவியது. அதன் 118ஆம் பிரிவு திருத்த முறையைக் குறிப்பிடுகிறது. அம்முறை முன்னாலிருந்தது போலவே இருக்கிறது. சில தனிச் சட்டங்கள் கறுப்பு நிற மக்களின் உரிமைகளைக் கட்டுப்படுத்திய போதிலும், 118-ஆம் பிரிவு, முன் போலவே குடியரசுப் பாராளுமன்றம், 'இச்சட்டத்தின் எப்பிரிவையும் சட்டத்தின் மூலமாக (அதாவது சாதாரணச் சட்ட ஆக்க முறைப்படி) நீக்கலாம் அல்லது திருத்தலாம்,' எனக் கூறுகிறது. ஆனால், டச்சு, ஆங்கில மொழிகளுக்குச் சம உரிமை வழங்குவதை மட்டும் இவ்வாறு மாற்ற இயலாது. 118ஆம் பிரிவை நீக்கவேண்டுமானால், இரு சபைகளும் கூட்டமர்வில் மூன்றில் இரண்டு பெரும்பான்மை வாக்குகளை அளிக்க வேண்டும். இதைப் பொறுத்த வரையில் தென்னாப்பிரிக்கக் குடியரசின் அரசியலமைப்பு நெகிழாத் தன்மையுடையது. பிறவற்றில் அது நெகிழும் தன்மையுடையது.

# 5. கனடாவிலும் ஆஸ்திரேலியாவிலும் நெகிழா அரசியலமைப்புகள்

முன்பு தன்னாட்சி பெற்ற பிரிட்டிஷ் குடியேற்ற உரிமை நாடுகளாய் இருந்த இரண்டு அரசுகளின் நெகிழா அரசியலமைப்புகளை இங்குப் பார்ப்போம். அவை வெவ்வேறு வகையைச் சேர்ந்தவையாயினும், இரண்டும் கூட்டாட்சி அரசுகளாகும். கனடா அரசியலமைப்பின் நெகிழாத் தன்மை பெரும்பாலும் அதன் கூட்டாட்சி இயல்பையே சார்ந்துள்ளது. ஆனால், ஆஸ்திரேலிய அரசியலமைப்பில் திருத்த முறைக்கு வேறு சில கட்டுப்பாடுகள் உள்ளன. மேலும், அதன் கூட்டாட்சி முறைக்கேற்பப் பிற வரையறைகளும் இருக்கின்றன.

(i) **கனடாக் குடியேற்ற உரிமை நாடு:** நாம் ஏற்கெனவே பார்த்தது போல, 1867 இல் நிறைவேறிய பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டம், கனடாக் குடியேற்ற உரிமை நாட்டை நிறுவியது. முதலில் அக்கூட்டாட்சியில் நான்கு மாநிலங்களே இருந்தன. இப்போது அவை பத்தாய்ப் பெருகிவிட்டன. பல திருத்தங்கள் செய்யப்பட்டுள்ள இச்சட்டத்தையே பொதுவாக மக்கள் கனடாவின் அரசியலமைப்பென வழங்குகின்றார்கள். ஆனால், அந்த அரசியலமைப்பில், பிரிட்டிஷ் பாராளுமன்றமும் கனடாவின் பாராளுமன்றமும் நிறைவேற்றிய அரசியலமைப்பைச் சார்ந்த சட்டங்களும், காலப்போக்கிலே வளர்ந்த வழக்கங்களும் வழக்காறுகளும் இடம் பெறுகின்றன. 1867 இன் பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டம், சட்ட ஆக்க அதிகாரத்தையும் நிருவாகத்துறை அதிகாரத்தையும் கூட்டாட்சி அரசாங்கத்திற்கும் பல மாநில அரசாங்கங்களுக்கும் இடையே பகிர்ந்தளித்தது. அது மாநிலங்களுக்கு மட்டும் வழங்கப்பட்ட அதிகாரங்களை விளக்கமாக எடுத்துரைத்தது ; ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள் கூட்டாட்சி அரசாங்கத்திடம் இருந்தன. ஆகவே, கனடாவில் சாதாரணச் சட்டத்திற்கும் அரசியலமைப்புச் சட்டத்திற்கும் ஒரேயொரு வேறுபாடு இருக்கின்றது. அதாவது, மாநிலச் சட்டத்திற்கு உட்பட்டவை என்று தனியாகக் குறிக்கப்படாத செய்திகள் எல்லாம் சாதாரணச் சட்டத்தைச் சார்ந்தவை ; அதிகாரப் பங்கீட்டில் ஏற்படும் அடிப்படை மாற்றங்கள் அரசியலமைப்புச் சட்டத்தைச் சார்ந்தவை.

பிரிட்டிஷ் வடவமெரிக்கச் சட்டத்தைத் திருத்தும் அதிகாரம் கனடாவிலுள்ள எந்தச் சட்ட மன்றத்திற்கும் வழங்கப்படவில்லை. குடியேற்ற உரிமை நாட்டுப் பாராளுமன்றத்தின் இரு சபைகளும் வேண்டினால், வெஸ்ட்மின்ஸ்டரிலுள்ள பாராளுமன்றம் அச்சட்டத்தைத் திருத்தலாம். ஆனால், 1931 இல் வெஸ்ட் மின்ஸ்டர் சட்டம் நிறை

வேறியதும் இக்கட்டுப்பாடு நடைமுறையில் நீங்கியது. 1949இல் பிரிட்டிஷ் வடவமெரிக்கச் சட்டத்தில் செய்யப்பட்ட திருத்தம், அரசியலமைப்பைத்திருத்தும் அதிகாரத்தைக் கனடாவின் பாராளுமன்றத்திற்கு அளித்தது. 'மாநிலங்களின் சட்ட ஆக்க அதிகாரத்தையும் மாநிலச் சட்டமன்றங்களின் உரிமைகளையும் சிறப்புரிமைகளையும்' பற்றிய செய்திகளில் மட்டும் அரசியலமைப்பைத் திருத்தும் அதிகாரம் கனடாவின் பாராளு மன்றத்திற்கு இல்லை. ஆகவே, அரசியலமைப்பைத் திருத்துவதில் கூட்டாட்சிப் பாராளுமன்றத்தின்மேல் ஒரேயொரு கட்டுப்பாடு தான் இருந்தது. அதாவது, அரசியலமைப்பு மாநிலங்களுக்கு வழங்கியுள்ள அதிகாரங்களை மாநிலங்களின் இசைவின்றி மாற்றுவதற்குக் கூட்டாட்சிப் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் இல்லை.

மத்திய அரசாங்கத்திற்கும் மாநிலச் சட்டமன்றங்களுக்கும் இடையேயுள்ள தொடர்புகளைப்பற்றி அண்மையில் கனடாவில் ஆய்வுகள் நடைபெற்று வருகின்றன. இதற்காக அரசியலமைப்பை எவ்வாறு திருத்தலாம் என்பதை நுணுகிப் பார்ப்பதற்கென 1950இல் ஒரு கூட்டு மாநாடு கூடியது. அது இச்சிக்கலைப்பற்றித் தெளிவாக ஆய்ந்த போதிலும், எல்லா அரசாங்கங்களும் ஏற்கக்கூடிய ஒரு திட்டத்தை வகுக்க அதனுல் இயலவில்லை. இதைப்பற்றி ஆராய மற்ருெரு முயற்சி செய்யப்பட்டது. 1960இல் இப்பிரச்சினையை முற்றிலும் அலசிப் பார்க்க இன்னெரு மாநாடு கூடியது. ஆயினும், அது 1962ஆம் ஆண்டின் இறுதி வரை யாதொரு முடிவுக்கும் வரவில்லை. இதில் குறிப்பிடத்தக்கது என்னவென்ருல், மாநிலங்கள் தங்களுக்கும் மத்திய அரசாங்கத்திற்கும் இடையேயுள்ள தொடர்புகளை மாற்றுவதற்கு இணங்கினுல், கனடாவின் பாராளுமன்றம் அம் மாற்றத்தைச் சாதாரணச் சட்ட ஆக்க முறைப்படி செய்ய இயலும். ஆகவே, கனடாவின் அரசியலமைப்புக் கூட்டாட்சித் தன்மை பெற்றிருப்பதால், அதை நெகிழும் அரசியலமைப்பு எனக் கருத இயலாதெனினும், அது இக்காலக் கூட்டாட்சி அரசுகள் எல்லாவற்றையும்விட மிகக் குறைந்த அளவில் நெகிழாத் தன்மையுடையது எனக் கூறலாம்.

(ii) **ஆஸ்திரேலியப் பொதுநலக்கூட்டு**: நாம் ஏற்கெனவே பார்த்தது போல, ஆஸ்திரேலியப் பொதுநலக்கூட்டின் அரசியலமைப்பு முழு வளர்ச்சி பெற்ற ஒரு கூட்டாட்சியின் அரசியலமைப்பாகும். 1900இல் நிறைவேற்றப்பட்ட பாராளுமன்றச் சட்டம் அதை நிறுவியது. 1901இல் அது நடைமுறைக்கு வந்தது. பொதுநலக்கூட்டில் ஆறு மாநிலங்கள் (ஆஸ்திரேலியத் தீவின் ஐந்து பிரிவுகளும் டாஸ்மேனியாவும்) உள்ளன. அவற்றுள் ஒவ்வொன்றும் நன்ருகத் தனித்தியங்குகின்றது. அவற்றின் உரிமைகள் உறுதியுடன் பாதுகாக்கப்

பட்டுள்ளன. ஏனெனில், அரசியலமைப்புக் கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரங்களை வரையறுக்கிறது. கூட்டாட்சிப் பாராளுமன்றத்தில் இரண்டு அவைகள் உள்ளன். நிருவாகத் துறை பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையது. நிருவாகத்துறை பெயரளவில் கவர்னர்-ஜெனரலின்கீழ் இருக்கிறது. அவரை அரசர் நியமிப்பார். அரசியலமைப்பு எஞ்சிய அதிகாரங்களை மாநிலங்களுக்கு விட்டு விடுகிறது. மாநிலம் ஒவ்வொன்றும் பெயரளவில் ஒரு கவர்னரின்கீழ் இருக்கிறது. கவர்னரை அரசர் நியமிக்கிறார்; கூட்டாட்சி அரசாங்கம் நியமிப்பதில்லை.

அரசியலமைப்பின் இறுதி இயலில் (8ஆம் இயலில்) திருத்த முறைகள் கூறப்பட்டுள்ளன. திருத்தச் சட்டம் எதுவும் இரு சபைகளிலும் நிறைவேறியபின் ஒவ்வொரு மாநிலத்திலும் பிரதிநிதிகளின் சபைத் தேர்வாளர்களின் முன் சமர்ப்பிக்கப்பட வேண்டும். அல்லது, அச்சட்டத்தை ஒரு சபை நிறைவேற்றி, மற்றொன்று மறுத்து, அதை நிறைவேற்றிய சபை மீண்டும் அதை மூன்று மாதங்கள் கழித்து அல்லது அடுத்த கூட்டக் காலத்தில் நிறைவேற்றினால், கவர்னர் ஜெனரல், அதை மறுத்த சபையின் திருத்தத்துடன் அல்லது அத் திருத்தமின்றிக் குடியொப்பத்திற்கு விடலாம். அதைப் பெரும்பான்மையான மாநிலங்களிலுள்ள பெரும்பான்மைத் தேர்வாளர்களும் வாக்களிக்கும் எல்லாத் தேர்வாளர்களுள் பெரும்பான்மையோரும் ஆதரித்தால், அது சட்டமாகும். ஆனால், அத்திருத்தம் ஒரு மாநிலத்தின் அதிகார வரையறையை அல்லது ஒவ்வொரு சபையிலும் அதன் உறுப்பினர்களின் விகிதத்தை மாற்றவோ அல்லது அதற்கு அரசியலமைப்பு வழங்கும் தனி உரிமைகளில் எவ்விதமான மாற்றங்கள் செய்யவோ முயன்றால், மேலே கூறிய நிபந்தனைகளை நிறைவேற்றுவதுடன், குறிப்பிட்ட அந்த மாநிலத்தில் வாக்களிக்கும் தேர்வாளர்களுள் பெரும்பான்மையோரும் அத்திருத்தத் திட்டத்தை ஆதரிக்க வேண்டும்.

1900முதல் இதுவரை இருபத்து நான்கு அரசியலமைப்புத் திருத்தத் திட்டங்களே குடியொப்பத்திற்கென வாக்காளர் முன் சமர்ப்பிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் நான்கு திட்டங்களுக்கே போதிய பெரும்பான்மை வாக்குகள் கிட்டின. 1937க்கும் 1946க்கும் இடையே மூன்று முறை திருத்தத் திட்டங்கள் பொதுநலக்கூட்டுக் குடியொப்பத்தில் மொத்தத்தில் பெரும்பான்மை வாக்குகள் பெற்ற போதிலும், ஆறு மாநிலங்களுள் மூன்றில் மட்டும் அவை போதிய பெரும்பான்மை வாக்குகளைப் பெற்றன. ஆகவே, அரசியலமைப்பை ஆராய்வதற்காக அமைக்கப்பட்ட கூட்டுக் குழு [1] தனது 1958ஆம் ஆண்டு அறிக்கை

1. 5-ஆம் இயலில் 5-ஆம் பகுதியில் இதைப்பற்றிக் குறிப்பிட்டோம்.

யில், வருங்காலத்தில் ஒரு திருத்தத் திட்டம் குடியொப்பத்தில் மொத்தத்தில் பெரும்பான்மை வாக்குகளைப் பெறுமானால், அது ஆறு மாநிலங்களில் மூன்றில் மட்டும் (பெரும்பான்மை மாநிலங்களில் அல்ல) பெரும்பான்மை வாக்குகளைப் பெறுதல் போதும் எனக் கூறியது. (அக்குழு இதே கருத்தை 1959ஆம் ஆண்டு அறிக்கையிலும் வலியுறுத்தியது.) ஆயினும், முன்பு கூறியது போல, 1962இன் பிற்பகுதிவரை கூட்டுக் குழுவின் அறிக்கைகளைப்பற்றி யாதொரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. ஆஸ்திரேலிய அரசியலமைப்பு இச்சீர்திருத்தத்தை ஏற்றுக்கொண்டாலுங்கூட, இன்று உலகிலுள்ள மிகுந்த நெகிழாத்தன்மையுடைய அரசியலமைப்புகளுள் அது ஒன்றாய் இருக்கும் என்பதில் ஐயமில்லை. ஏனெனில், அது கூட்டாட்சி அரசின் வரையறைகளுக்கு உட்பட்டிருப்பதுமல்லாமல், குடியொப்பம் வாயிலாகவே அரசியலமைப்புத் திருத்தம் நடைபெறுகிறது.

## 6. சுவிஸ் அரசியலமைப்பின் நெகிழாத் தன்மை

நாம் ஏற்கெனவே கூறியபடி, சுவிட்ஸர்லாந்தில் இப்போதுள்ள அரசியலமைப்பு 1874இல் தோன்றியது. அதன் கூட்டாட்சிஇயல்பை நாம் முன்பு விளக்கிவிட்டோம். இங்கு அதைத் திருத்தும் முறையை மட்டும் பார்ப்போம். சுவிஸ் நாட்டுக் கூட்டத்தில் 22 கோட்டங்கள் (மாநிலங்கள்) இருக்கின்றன. அவற்றுள் மூன்று கோட்டங்கள் அரசியல் காரணங்களுக்காக ஒவ்வொன்றும் இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஆகவே, மொத்தம் 25 இருக்கின்றன. ‘கூட்டாட்சி அவை’ என வழங்கப்படும் கூட்டாட்சி மன்றத்தில் தேசியச் சபை, மாநிலங்களின் சபை என இரு சபைகள் உண்டு. அரசியலமைப்பு,கூட்டாட்சிஅரசாங்கத்தின் அதிகாரங்களை விளக்கி,எஞ்சிய அதிகாரங்களைக் கோட்டங்களிடம் விட்டுவிடுகின்றது. அரசியலமைப்பின் மூன்றாவது இயல்,திருத்த முறைகளைத் தெளிவாக விளக்குகிறது. அவை குடியொப்பத்தை மட்டுமன்றி மக்கள் தொடக்க உரிமையையும் (Popular Initiative) பயன்படுத்துகின்றன. அதன்படி மக்களே திருத்தத் திட்டங்களைத் தொடங்கி வைக்கலாம். (அ) ஒரு சபை விரும்பும் முழுத் திருத்தத் திட்டத்தை மற்றச்சபை ஏற்க மறுக்குமானால், அதை மக்கள் முன் சமர்ப்பிக்க வேண்டும். அதை வாக்களிக்கும் மக்களுள் பெரும்பான்மையோரும், கோட்டங்களில் பெரும்பான்மையும் ஏற்றுக்கொண்டால், தேர்தல்கள் நிகழும். குறிப்பிட்ட(ஆ) திருத்தம் தேவையென 50,000 குடிகள் தீர்மானித்தால், அதைத் தெளிவாகத் தீட்டிய திருத்தமாக அவைக்கு அனுப்பலாம்; அல்லது அதை எழுதுமாறு அவர்கள் அவையைக் கேட்கலாம். அவை அதற்கு இணங்கினால், திருத்தத்தை வரைந்து குடியொப்பத்

திற்குச் சமர்ப்பிக்கும். இணங்கவில்லையெனில், அதற்குப் பதிலாக வேறொரு திட்டத்தை வெளியிடலாம்; அல்லது அதைத் தள்ளிவிடுமாறு மக்களைக் கேட்கலாம். ஆனால், மக்கள் முழுத்திருத்தத்தை விரும்பிய போதிலும், அவை அதற்கு இணங்கவில்லையென்றால், முதலில் அத் திருத்தத்தைத் தீட்டவேண்டுமா என்னும் கேள்வியை அவை மக்கள் முன் சமர்ப்பிக்க வேண்டும். அதைத் தீட்ட வேண்டுமென்று மக்கள் (மேற்கூறிய இருவிதப் பெரும்பான்மைகளினால்) அறிவித்தால், அவை அத்திருத்தத்தை வரைந்து மீண்டும் அதை மக்களின் இறுதித் தீர்ப்புக்காக அவர்கள் முன் சமர்ப்பிக்க வேண்டும்.

இவ்வாறு சுவிஸ் அரசியலமைப்பில் திருத்தத்திற்கெனச் சட்ட ஆக்க முறையும், மக்களின் வாக்கெடுப்பு முறையும் பயன்படுகின்றன. ஆனால், திருத்தத் திட்டத்தை ஏற்பதற்கும், அதை அரசியலமைப்பில் சேர்ப்பதற்கும் மக்களின் இறுதி இசைவு இன்றியமையாததாய் இருக்கின்றது.

## 7. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் நெகிழா அரசியலமைப்பு

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு, உலகிலே நெகிழாத் தன்மை மிக்க அரசியலமைப்பாகும். அதன் கூட்டாட்சி இயல்பு காரணமாகவே அது நெகிழாத் தன்மை பெற்றுள்ளது. இதைப் பற்றி ஏற்கெனவே ஐந்தாவது இயலில் விளக்கினோம். இங்கு அரசியலமைப்பை மாற்றும் வகையை மட்டும் குறிப்பிடுவோம். அரசியலமைப்பைத் திருத்துவது கடினம் என்பதை அதன் வரலாற்றின் தொடக்கத்திலிருந்தே காணலாம். அரசியலமைப்பு 1789இல் முதன் முதலில் செயல் முறைக்கு வந்தது. 1791இல் முதற்பத்துத் திருத்தங்கள் செய்யப்பட்டன. 1798இல் பதினொன்றாவது திருத்தமும் 1804இல் பன்னிரண்டாவது திருத்தமும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. அதன் பிறகு 61 ஆண்டுகள் கழித்து நீகிரோ விடுதலைக்கென மூன்று திருத்தங்கள் 1865, 1868, 1870இல் செய்யப்பட்டுள்ளன. முதல் திருத்தம் 1913இலும் இறுதித் திருத்தம் 1961இலும் நிறைவேறின. (இறுதித் திருத்தத்தை 23ஆம் விதியில் காணலாம். அது, 1964 முதல் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் தேர்தலில் வாக்களிக்கும் உரிமையைக் கொலம்பியா மாவட்ட மக்களுக்கு அளித்தது.) இவ்வாறு 170 ஆண்டுகளில் 22 அரசியலமைப்புத் திருத்தங்களே நிறைவேறியுள்ளன. இவற்றுள் ஒன்று (1933-ஆம் ஆண்டின் 21ஆம் திருத்தம்) மது விலக்கை நிறுவிய முந்திய திருத்தமொன்றை (1918ஆம் ஆண்டின் 18ஆம் திருத்தத்தை) நீக்கியது. இப்

போதுள்ள ஆவண முறை அரசியலமைப்புகளில் மிகவும் பழமை வாய்ந்ததாகிய இது, நெகிழா அமைப்பாய் இருந்த போதிலும், வளையும் தன்மையுடையது என்பதை இவை காட்டுகின்றன. இதற்கு முக்கியமான காரணம், அரசியலமைப்புக்கு உரை விளக்கம் தரும் தலைமை நீதி மன்றத்தின் தீர்ப்புகளேயாகும். மேலும், அவ்வளவு நீண்ட காலத்தில் வழக்காறுகளின் வளர்ச்சி காரணமாக நடைமுறையில் சில மாற்றங்கள் தோன்றலாயின. அரசியலமைப்பின் கருத்துகளுக்கு முரணுக இல்லாத வரையில் அவை ஏற்றுக்கொள்ளப் பட்டன. அரசியலமைப்பைத் தாஞகவே திருத்துவதற்கு அமெரிக்க ஐக்கிய நாட்டின் சட்ட மன்றத்திற்கு (காங்கிரஸுக்கு) அதிகாரமில்லை என்பதை இங்கே வலியுறுத்த விரும்புகிரூேம். ஆனுல், அது அரசியல் அமைப்பில் குறிப்பிட்டுள்ளபடி திருத்த வேலையைத் தொடங்குவதற்காகத் திருத்தத் திட்டங்களைக் கொண்டு வரலாம்.

அரசியலமைப்பு இவ்வாறு நெகிழா அமைப்பாய் இருப்பதன் காரணத்தை அறியவேண்டுமானுல், அது எவ்வாறு நிறுவப்பட்டதென்ற வரலாற்றைப் பார்க்கவேண்டும். இப்போது நாம் அமெரிக்க ஐக்கிய நாடுகள் என வழங்கும் நிலப்பரப்பின் கிழக்குக் கடற்பகுதியில் 1775ஆம் ஆண்டு வரை பல தனித்தனி பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள் இருந்தன. அவற்றுள் மிகப் பழமையான நாடுகூட 170 ஆண்டுகளுக்குமேல் இருந்ததில்லை. அவற்றின் அரசியல் நிறுவனங்கள் எல்லாம் பொதுவாகத் தாய்நாட்டிலிருந்து விடுதலை பெற விழைந்தன. இறுதியில் அவை தம்மைத் தாய்நாடு பொருளாதாரத் தளையினுல் பிணித்து வைத்திருந்ததாகக் கருதின. அப்பதின்மூன்று குடியேற்ற நாடுகளுக்கும் பொதுவான அரசியல் குறிக்கோள் ஒன்றும் இல்லை. அவை தமக்குள் ஒரு பொருளாதார ஐக்கியத்தை அமைக்கச் சில வேளை முயன்ற போதிலும், தம் நிறுவனங்களைத் தனித்து நின்றே வளர்த்து வந்தன. ஆகவே, அவை ஒன்று சேர்ந்து பிரிட்டனை எதிர்த்த போது, அவற்றிடையே உறுதியான ஒற்றுமையுணர்ச்சி தோன்றவில்லை ; அதற்கு மாருக, வெளி நாட்டு ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறவேண்டுமென்ற ஆர்வந்தான் அவற்றை இணைத்தது. போர் தொடங்கிய மறு ஆண்டு வெளியான சுதந்தர அறிக்கையில் இதைத் தெளிவாகக் காண்கிரூேம். ‘இந்த ஐக்கியக் குடியேற்ற நாடுகள் உரிமை பெற்ற சுதந்தர அரசுகளாய் இருக்கின்றன ; இருக்க வேண்டும்,’ என அவ்வறிக்கை கூறுகிறது. இதில் ஒரு பொதுவான அரசாங்க அமைப்பைப்பற்றி ஒரு சொல்லும் காணப்படவில்லை. 1781இல் போர் அநேகமாக முடிந்ததும், ஐக்கியத்தின் அரசியலமைப்பு எவ்வடிவில் இருக்க வேண்டுமென்பது பற்றி அவற்றிற்குள்ளே முரண்பாடு தோன்றியது. 1783ஆம் ஆண்டின் சமாதான உடன்படிக்கை அமெரிக்கர்களுக்கு உரிமையும் இறைமையும் வழங்கிய பிறகும் அம்முரண்பாடு தொடர்ந்து நிலவியது.

அடுத்த எட்டு ஆண்டுகளாக ஐக்கிய நாடுகள் 1781ஆம் ஆண்டின் நாட்டுக்கூட்ட விதிகளின்படி ஆட்சி நடத்தின. அவை உண்மையில் 'ஒரு பன்னாட்டு உடன்படிக்கையின் விதிகள்' போன்றிருந்தன. அவற்றின்படி மத்திய அரசாங்கத்திற்கு உறுதியான விருப்பாற்றல் இல்லை. அரசுகளுள் ஒவ்வொன்றும் தனது தனிச் சுதந்தரத்தின்மேல் எவ்வளவு பற்று வைத்திருந்தது என்றால், அது மத்திய அரசாங்கத்திற்கு நிருவாக அதிகாரத்தை அளிக்க அஞ்சிற்று; ஏனெனில், அது முடிவில் தனது உரிமையைப் பறித்துவிடுமெனக் கருதிற்று. இறுதியாக 1787ஆம் ஆண்டு மேத்திங்களில் பிலடெல்பியா நகரில் ஒரு மாநாடு கூடியது. அது வரைந்த அரசியலமைப்பு 'ஒரு தேர்வாய் இருந்ததேயன்றி, புதிய படைப்பன்று'. இதை அதன் முகப்பில் காணலாம்.

'ஐக்கிய நாடுகளின் மக்களாகிய நாம் முழுமையான ஓர் ஐக்கியத்தை அமைக்க, நீதியை நிறுவ, உள் நாட்டு அமைதியைக் காக்க, பொதுப்பாதுகாப்பிற்கு வழி வகுக்க, பொதுநலம் பேண, நாமும் நமது வழி மரபினரும் உரிமையின் நற்பேறு பெற அமெரிக்க ஐக்கிய நாடுகளின் இந்த அரசியலமைப்பை ஆணையிட்டு நிறுவுகிறோம்'.

மாநிலங்களின் உரிமைகளைக் காப்பதுடன் ஒன்று சேர்ந்து செயலாற்றுவதன் நற்பயனைப் பெறுவதும் அரசியலமைப்பின் முதல் நோக்கம். அது 1789இல் செயல் முறைக்கு வந்தது. அது பொது அமைப்பாகிய கூட்டாட்சி அரசாங்கத்தின் அதிகாரங்களை விளக்கி, அதில் கூறப்படாத எஞ்சியவற்றை மாநிலங்களிடம் ஒப்படைத்தது; அரசாங்கத்தின் மூன்று பெரிய உறுப்புகளாகிய நிருவாகத்துறை, சட்டமன்றம், நீதித்துறை ஆகியவற்றையும் நிறுவியது.

(1) **நிருவாகத்துறை:** தெளிவாக வரையறுக்கப்பட்ட விதிகளின்படி நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை தேர்ந்தெடுக்கப்படும் தலைவர்.

(2) **சட்டமன்றம்:** செனட்டு, பிரதி நிதிகளின் சபை என்ற இரண்டு அவைகளையுடைய காங்கிரஸ்.

(3) **நீதித்துறை:** அரசாங்க அமைப்பிற்கு உரை விளக்கம் தரும் அதிகாரமுள்ள தலைமை நீதி மன்றம்.

அவ்வுடன்படிக்கையை எல்லா அரசுகளும் ஏற்றுக்கொண்டன. ஏனெனில், அது, அவற்றின் அளவும் மக்கள் தொகையும் எவ்வாறிருப்பினும், எல்லாவற்றிற்கும் செனட்டில் சமப் பிரதிநிதித்துவம் வழங்கியது. அதாவது, ஒவ்வொன்றிற்கும் இருவர் பிரதிநிதிகள்

உள்ளனர். பிரதிநிதிகளின் சபை, உறுப்பினர், பல மாநிலங்களிலிருந்து அவற்றின் மக்கள் தொகைக்கேற்பத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். போர் தொடுப்பது, சமாதானம் செய்வது ஆகிய முக்கிய அதிகாரங்களை மாநிலங்கள் விட்டுக்கொடுத்தன. இவற்றைத் தூதராண்மை அதிகாரங்கள் எனச் சுருக்கமாகக் கூறலாம். போர்தொடுப்பதற்குக் காங்கிரஸ் முழுவதும் இணங்க வேண்டும். ஆனால், உடன்படிக்கைகள் செய்வதற்குச் செனட்டின் இசைவு வேண்டும். அதாவது, எல்லா மாநிலங்களும் சமப்பிரதிநிதித்துவம் பெறும் சபையின் இசைவு தேவை. காங்கிரஸின் அதிகாரங்கள் என்னவென்பதை அரசியலமைப்புத் தெளிவாகக் கூறிய போதிலும், அவற்றைப் பற்றிய விவரங்களை விளக்குவதில்லை. அவை என்ன செய்யலாம் என்பதைக் கூறிய போதிலும், அவற்றை எவ்வாறு செய்யவேண்டுமெனக் கூறுவதில்லை. அம்முறையின் முக்கிய அடிப்படைகளைமட்டும் அரசியலமைப்புக் குறிப்பிடுகிறது ; ஆயினும், அவற்றைப்பற்றிய எல்லா விவரங்களையும் தெளிவாக விளக்குகிறது ; அரசியலமைப்பைத் திருத்தும் முறைகளை விரிவாக விளக்குகிறது.

திருத்தத் திட்டங்கள் இரு வகைகளில் கொண்டுவரப்படலாம் : (அ) காங்கிரஸின் ஒவ்வோர் அவையிலும் மொத்த உறுப்பினர்களுள் (அவையில் அமர்ந்து வாக்களிப்பவர்களுள் மட்டுமல்ல) மூன்றில் இரண்டு பகுதியினர் குறிப்பிட்ட சில திருத்தங்கள் தேவையென விரும்பலாம். (ஆ) மாநிலங்களில் மூன்றில் இரண்டு பகுதியின் சட்டமன்றங்கள் விரும்பிக் கேட்டால், காங்கிரஸ் திருத்தங்களை ஆராய ஒரு தனி அவையைக் கூட்டவேண்டும். இந்த நிபந்தனைகள் திருத்தத் திட்டங்களுக்கு மட்டும் தேவை என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது. இவ்வாறு திருத்தத் திட்டங்கள் கொண்டுவரப்பட்டால், மாநிலங்களில் நான்கில் மூன்று பகுதி அவற்றை ஏற்கவேண்டும். இவ்வாறு ஏற்றுக்கொள்ளப்பட்டால், அத்திருத்தம் அரசியலமைப்பில் இடம் பெறும்.

ஆகவே, அமெரிக்க ஐக்கியத்தில் பாராளுமன்றச் சட்டத்திற்கும் அரசியலமைப்புச் சட்டத்திற்கும் இடையே தெளிவான வேறுபாடுகளைக் காண்கிறோம். அரசியலமைப்புச் சட்டத்தின் இத்தனி முறை மிகவும் சிக்கலானது. இதை இயக்குவது எளிதன்று. இதை வெற்றிகரமாக முடிப்பது மிகக் கடினம். மாநிலங்களின் எண்ணிக்கை பதின்மூன்றிலிருந்து இப்போது ஐம்பதாய் வளர்ந்துவிட்டது. ஆகவே, காலப்போக்கிலும் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் வியப்புக்குரிய வளர்ச்சி காரணமாக அரசியலமைப்புத் திருத்தம் இப்போது எளிதில் நடைபெறுவதில்லை. ஏனெனில், இப்போது 38 மாநிலங்களின் இசையின்றி எந்தத் திருத்தத்தையும் நிறைவேற்ற இயலாது. நாம் ஏற்

கெனவே பார்த்தது போல, ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒவ்வோர் அரசியலமைப்பு உண்டு. அமெரிக்கர்கள் அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபட, கூட்டாட்சி அரசியலமைப்பில் குறிக்கப்பட்டவை தவிர, தனி மாநிலங்களிலும் பல வாய்ப்புகள் உள்ளன.

# 8. ஜெர்மானிய அரசியலமைப்புகளின் நெகிழாத்தன்மை

1949இல் மேற்கு ஜெர்மனியில் அரசியலமைப்புக்கு உட்பட்ட அரசாங்கம் மீண்டும் நிறுவப்பட்டதால் இவ்வியலை முடிக்கும்போது முந்திய அரசியலமைப்புகளின் நெகிழாத் தன்மையைக் குறிப்பிடுதல் நலம். மேலே கூறியபடி, வெய்மார் குடியரசின் அரசியலமைப்பு, 1919இல் அறிக்கையிடப்பட்டது. குடியரசின் அரசியலமைப்பு ஜெர்மனி முடியாட்சியை அழித்ததுடன், முதல் உலகப் போரில் வீழ்ச்சியுற்ற ஜெர்மானியப் பேரரசிலிருந்து பல வகைகளில் வேறுபட்டிருந்தது. 1871ஆம் ஆண்டு பிராங்கோ-பிரஷ்யப் போரின் இறுதியில் நிறுவப்பட்ட ஜெர்மானியப் பேரரசு ஓர் அரைக்கூட்டாட்சியாய் இருந்தது என்பதை அதன் மேல் சபை (Bundesrat) காட்டியது. நாம் கூறியதுபோல, மேல் சபையில் பல மாநிலங்களிலிருந்து வந்த தூதர்கள் இருந்தார்கள். அச்சபையில்மாநிலங்களுக்குச் சமப் பிரதிநிதித்துவம் வழங்கப்படவில்லை. பதினேழு சிறு மாநிலங்களுள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் உறுப்பினரை அனுப்பியது. எந்த அரசியலமைப்புத் திருத்தத் திட்டத்தையும் 'புந்தஸ்ராத்'தில் 14 வாக்குகளால் தோற்கடிக்க இயலும். இவ்வாறு சிறிய மாநிலங்களின் பிரதிநிதிகள் (அல்லது தூதர்கள்) ஒன்று சேர்ந்து, பேரரசில் தங்கள் நிலைமையைப் பாதிக்கக்கூடிய எந்த மாற்றத்தையும் தடுக்க இயலும். அல்லது பதினேழு இடங்களைப் பெற்றிருந்த பிரஷ்யா அத்தகைய மாற்றம் எதையும் தடுக்கலாம்.

முதல் உலகப் போருக்குப்பின் ஜெர்மனியின் நிலைமை மாறிவிட்டது. ஏனெனில், 'ரைக்ஸ்டாக்' (Reichstag), அதாவது கீழ்ச் சபை, முன்பு இருந்ததைவிட அதிக ஆற்றல் பெற்றிருந்தது. ஏனெனில், பழைய பேரரசின் அரசியலமைப்பின்படி எந்த அரசியலமைப்புத் திருத்தத்தையும் வாதிக்க முதலாய் 'ரைக்ஸ்டாக்'கிற்கு அதிகாரம் இல்லை. கீழ்க்காணும் திருத்த முறை (வெய்மார் அரசியலமைப்பின் 76ஆம் விதியின்படி) பயன்படுத்தப்பட்டது. அதன்படி அரசியலமைப்பைச் சட்ட ஆக்க முறையில் மாற்றலாம். ஆனால், 'ரைக்ஸ்டாக்' கூட்டத்தின் குறைவெண் வரம்பில் (Quorum) மூன்றில்

இரண்டு பகுதி பெரும்பான்மையோரும், 'ரைக்ஸ்ராத்' (முந்திய புந்தஸ்ராத்) தில் மூன்றில் இரண்டு பகுதி பெரும்பான்மை வாக்குகளும் அத்திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும். மேலும், வாக்குரிமை பெற்ற மக்களுள் பத்தில் ஒரு பகுதியினர் ஒரு திருத்தத்தை மக்கள் முன் சமர்ப்பிக்க வேண்டுமென விரும்பினுல், அதை அவ்வாறே சமர்ப்பிக்க வேண்டும். பதிவேட்டிலுள்ள வாக்காளர்களுள் பெரும் பான்மையோர் அதை எதிர்த்து அல்லது ஆதரித்து முடிவு செய்ய லாம். 'ரைக்ஸ்ராத்' தில் தேவையான பெரும்பான்மை கிட்டவில்லை என்ருல், இரு வாரங்களில் அத்திருத்தத்தை மக்கள் முன் சமர்ப் பிக்குமாறு அது கேட்கலாம். அப்போது மேலே கூறிய முறைப்படி அதைக் குடியொப்பத்திற்குச் சமர்ப்பிக்க வேண்டும்.

இவ்வாறு வெய்மார் அரசியலமைப்பின்கீழிருந்த ஜெர்மனியில் அரசியசியலமைப்புத் திருத்தத்தைக் குடியொப்பமின்றிச் சாதாரணச் சட்ட ஆக்க முறைகள் வாயிலாக நிறைவேற்றலாம். இதற்குச் சட்ட சபைகளில் பெரும்பான்மை வாக்குகளைப் பெறுதல் போன்ற சில கட்டுப்பாடுகள் இருந்தன. ஆனுல், அரசியலமைப்பைத் திருத்து வதற்கு மேல் சபை அல்லது மக்கள் குடியொப்பத்தைப் பயன்படுத்த லாம். அதற்கு முறையே காலம், எண்ணிக்கை என்ற கட்டுப்பாடுகள் உண்டு.

மேற்கு ஜெர்மனியில் அடிப்படைச் சட்டம் என வழங்கப்படும் கூட்டாட்சிக் குடியரசின் அரசியலமைப்பு 1949முதல் செயலாற்றி வருகிறது. பாராளுமன்ற முறைப்படி பார்த்தால், அது நெகிழாத் தன்மை உடையது. ஏனெனில், அதன் திருத்தத்திற்கு இரு சபை களிலும் மூன்றில் இரண்டு பகுதிப் பெரும்பான்மை தேவையாய் இருக்கிறது. ஆயினும், சாதாரணத் திருத்த முறைக்குக் குடியொப் பம் தேவை என்பது பற்றி அதில் ஒரு குறிப்பும் இல்லை. அடிப்படைச் சட்டத்தின் வாசகத்தை மாற்றும் அல்லது அதனுடன் புதிய ஒன்றைச் சேர்க்கும் சட்டத்தினுல் மட்டும் அரசியலமைப்பை மாற்ற இயலும். ஆனுல்; மாநில அடிப்படையில் அமைக்கப்பட்ட கூட்டாட்சி, சட்ட ஆக்கத்தில் மாநிலங்களின் ஒத்துழைப்பு, மனித உரிமைகள் பற்றி அரசியலமைப்புக் கூறும் அடிப்படைக் கொள்கைகள், குடியரசின் ஜனநாயக, சமூக, கூட்டாட்சி இயல்புகள் ஆகியவற்றை மாற்ற இயலாது. ஆயினும், ஆக்கிரமிப்புச் சட்டத்தின் (Occupation Statute) 5ஆம் விதி இன்னெரு கட்டுப்பாட்டை விதித்தது. அதன் படி, ஆக்கிரமித்த நாடுகளின் இசைவின்றி அடிப்படைச்சட்டத்தைத் திருத்த இயலாது. ஆனுல், 1955இல் மேற்கு ஜெர்மனி முழு இறைமை அதிகாரங்களைப் பெற்றதும், இக்கட்டுப்பாடு தானுகவே நீங்கியது.

## படிக்க வேண்டிய நூல்கள் :

1. பிரைஸ் (Bryce): American Commonwealth, தொகுதி I இயல் 3-4; 31-5

2. டைஸி (Dicey): Law of Constitution, இயல் 3

3. ஃபைனர் (Finer): (1) Modern Government, இயல் 8,9
(2) Major Governments of Modern Europe, இயல் 12, 21,2

4. வேர் (Wheare): Federal Government, இயல் 11

5. ஸிங்க் (Zink): (1) Government in the United States, இயல் 3
(2) Modern Governments, பகுதி 2, 3, 6

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள் :

1. கிரிஸ்ப் (Crisp): Parliamentary Government of Australia

2. டாஸன் (Dawson): Government of Canada

3. கிரிண்ட்ராட் (Grindrod): Rebuilding of Italy

4. ஹிஸ்காக்ஸ் (Hiscocks): Democracy in Western Germany

5. நிக்கொலாஸ் (Nicholas): Australian Constitution

6. பிக்கிள்ஸ் (Pickles): France: Fourth Republic; Fifth French Republic

7. பாட்டர் (Potter): American Government

8. ரப்பார்டு (Rappard): Government of Switzerland

9. வேர் (Wheare): Constitutional Structure of Commonwealth

## கட்டுரைக்கேற்ற பொருள்கள் :

1. ‘அரசியலமைப்புத் திருத்தம்’ என்பதன் பொருள் என்ன ?

2. நெகிழா அரசியலமைப்பின் அடையாளங்கள் எவை ? அதற்கும் நெகிழும் அரசியலமைப்பிற்கும் உள்ள வேறுபாடுகள் யாவை ?

3. நெகிழா அரசியலமைப்பைத் திருத்த இப்போது பயன்படும் வகைகளை விளக்குக.

4. பிரான்ஸின் நான்காவது, ஐந்தாவது அரசியலமைப்புகள் தோன்றிய வரலாற்றை வரைந்து, அவை எவ்வளவு நெகிழாத்தன்மை பெற்றுள்ளன என்பதை விளக்குக.

5. கனடாக் குடியேற்ற உரிமை நாடு, ஆஸ்திரேலியப் பொது நலக் கூட்டு ஆகியவற்றின் அரசியலமைப்புகளை நெகிழாதவை யெனக் கூறுவதற்குக் காரணம் என்ன ?

6. தென்னுப்பிரிக்காவிலும், அயரிலும் அரசியலமைப்பைத் திருத்தப் பயன்படுத்தும் முறைகளை ஒப்பிடுக.

7. சுவிஸ் நாட்டுக் கூட்ட அரசியலமைப்பைத் திருத்தக் கையாளப்படும் நூதன முறைகள் யாவை ?

8. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அரசியலமைப்புத் திருத்தத்தைக் கொண்டுவரும் முறைக்கும், அதை நிறைவேற்றும் முறைக்கும் உள்ள வேறுபாடு யாது ?

9. ஆஸ்திரேலியப் பொதுநலக்கூட்டின் அரசியலமைப்பைவிட அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பு எவ்வாறு அதிக நெகிழாத் தன்மையைப் பெற்றிருக்கிறது ?

10. முந்திய வெய்மார் குடியரசின் அரசியலமைப்பிலும் ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசின் அரசியலமைப்பிலும் கூறப்பட்டுள்ள அரசியலமைப்புத் திருத்த முறைகளை விளக்கி அவற்றை ஒப்பிடுக.

# 8. சட்ட மன்றம்

## 1, வாக்குரிமையும் தேர்தல் தொகுதிகளும்

### முன்னுரை

அரசாங்கத்தின் அலுவல்களைச் சட்ட ஆக்கம், நிருவாகத்துறை, நீதித்துறை என்ற மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாமென்பதை முதல் இயலில் பார்த்தோம். அதாவது, முறையே சட்டங்களை இயற்றுதல், இயற்றப்பட்ட சட்டங்களைச் செயற்படுத்துதல், அவற்றை நிறை வேற்றுதல் ஆகிய அலுவல்களைச் செய்யும் துறைகளாகப் பகுக்க லாம். இக்கால அரசாங்கத்தில் பொங்கியெழும் ஜனநாயகப் பெருக் கிற்கேற்ப, சட்ட மன்றத்தின் சிறப்பு வளர்ந்துவிட்டது. இப்போது நாம் ‘ சட்ட ஆக்கம் ’ என்று கூறுவது, அண்மையில் தோன்றிய ஒரு போக்குதான். முற்கால அரசியல் சமூகத்தில் சட்ட ஆக்க அலுவலுக்கும் நிருவாகத்துறை அலுவலுக்கும் வேறுபாடு இல்லை. அரசாங்கம், என்னென்ன சட்டங்கள் தேவையென்பதை அறிவித்து, அவற்றைச் செயற்படுத்தியது. எடுத்துக்காட்டாக, ஆங்கிலப் பாராளுமன்றத்தின் தொடக்கக் காலத்தில் தேர்ந் தெடுக்கப்பட்ட அதன் பகுதியாகிய மக்கள் சபை சட்டமியற்றும் அலுவலைத் தவிர்க்க முயன்றது; அதை அரசரது சபைக்கு விட்டு விட விரும்பியது. உண்மையில் அந்நிறுவனந்தான் எப்போதும் அதைச் செய்து வந்தது. நாம் முன்னர் விளக்கியது போல, முற்காலத் தில் மக்கள் சபை சட்டங்கள் இயற்றுவதில்லை; பணந்தான் வழங்கி வந்தது. சட்ட ஆக்கமெனும் இக்காலக் கருத்து, பொது மக்களின் வளரும் அரசியல் உணர்விலிருந்து பிறக்கின்றது. ஏனெனில், அவர் களின் கூட்டு நலத்திற்காகவே பல சட்டங்கள் இயற்றப்படுகின்றன. இக்கருத்து, சட்ட மன்றத்திற்கு முற்றிலும் புதியதொரு சிறப்பைக் கொடுத்திருக்கிறது. ஆனால், அதே நேரத்தில், இது ‘சட்டமன்றம் குடி மக்களின் இணக்கத்தைப் பெற்று எவ்வாறு சிறந்த முறையில் தனது அலுவலை ஆற்ற இயலும்?’ என்னும் கேள்வியையும் எழுப்புகின்றது.

ஆகவே, இக்காலச் சட்டமன்றங்களை ஆராயும் போது, அவற்றைத் தேர்ந்தெடுக்கும் முறைகளையும், மேல் சபைகளின் தன்மையையும் அதிகாரங்களையும், சில அரசுகளில் பயன்படும் நேர்முக மக்களாட்சித் தடைகளையும் நன்கு நோக்க வேண்டும். இந்த இயலில் இக்காலத் தேர்தல் முறைகளை மட்டும் இரு கோணங்களிலிருந்து பகுத்தாராய் வோம்; அவற்றை முதலில் வாக்குரிமை எனும் கோணத்திலிருந்தும், அடுத்துத் தேர்தல் பரப்பு அல்லது தொகுதி எனும் கோணத்திலிருந் தும் ஆராய்வோம்.

## 2. அரசியல் ஜனநாயகத்தின் வளர்ச்சி

அரசை ஆளும் அதிகாரம் ஒரு குறிப்பிட்ட வகுப்பு அல்லது வகுப்புகளிலல்லாமல், சமுதாயத்தின் உறுப்பினர் அனைவரிடமும் சட்ட முறையாய் இருக்கின்ற ஒரு வகை அரசாங்கத்தை 'ஜனநாய கம்' என்கிறோம். தேர்தல் பிரச்சினைகளைப்பற்றி ஆயும்போது முதலிலே இதை வலியுறுத்துவது இன்றியமையாதது. ஏனெனில், ஜனநாயகம் என்பது 'வகுப்புகளின்' ஆட்சிக்கு முரணான 'கும்ப லின்' ஆட்சி எனச் சிலவேளை மக்கள் கருதுகிறார்கள். அது 'டிமாஸ்' (Demos) என்ற கிரேக்கச் சொல்லிலிருந்து பிறந்தது என்பது உண்மைதான். 'பலர்' என்பதைக் குறிப்பதற்காகக் கிரேக்கர்கள் அச்சொல்லைப் பயன்படுத்தினார்கள். 'சிலர்' என்ற பதத்தினின்று அதை வேறுபடுத்திக் காட்டுவதற்காக அச்சொல்லைப் பயன்படுத்தினார்களே தவிர, மக்கள் அனைவரையும் குறிக்கும் சொல் லாகப் பயன்படுத்தவில்லை. முன்னர் நாம் கூறியதுபோல, அரிஸ் டாட்டில் ஜனநாயகத்தை 'ஏழைகளின் ஆட்சி' என விளக்கினார். ஏனெனில், எப்போதும் சமூகத்தில் அவர்களின் எண்ணிக்கை மிகுதி யாகவே இருந்தது. ஆனால், நாம் 'ஜனநாயகம்' என்ற சொல்லை இங்குப் பயன்படுத்தும் போது முழுச் சமுதாயத்தின் பெரும்பான்மை யோரின் ஆட்சி என்ற பொருளில் பயன்படுத்துகிறோம். அதில் 'வகுப்புகளையும், கும்பலையும்' சேர்த்துக்கொள்கிறோம். ஏனெனில், அரசியல் சமுதாயத்தின் விருப்பம் எதுவாய் இருக்கலாம் என்பதைத் தீர்மானிக்க இது வரை கண்டுபிடிக்கப்பட்ட ஒரே வழி இதுதான். அவ்விருப்பம் ஒரே மனமான விருப்பமாய் இராது. அது பிரதிநிதி களின் தேர்தல் வாயிலாக வெளிப்படுகிறது. இக்காலத்தில் இந்த ஜனநாயக முறையின் உருமலர்ச்சி தேசீய அரசின் வரையறைகளுக் குட்பட்டிருக்கிறது. தேசீய அரசுக்குப் பிரதிநிதித்துவ முறை தேவைப்படுகிறது, அதாவது, வாக்குரிமையை அதிக விரிவாக வழங்குவதாலும், தொகுதிகளின் அளவு, அமைப்பு, பங்கீடு ஆகிய வற்றை மாற்றும் ஆய்வு முறைகளாலும் ஜனநாயகம் வளர்கிறது. வாக்காளர்களின் கருத்துகளை மிகுதியாக எதிரொலிக்கும் சட்ட மன்றங்களை அமைப்பதற்காக இம்மாற்றங்களைச் செய்கின்றனர்.

இவ்வுணர்ச்சி முற்றிலும் புதுமையானது. பண்டைய உலகில் சிறப்பாகக் கிரீஸிலும் ஓரளவு ரோமானியக்குடியரசிலும் மக்களாட்சி நிலவிய போதிலும், இக்கால ஜனநாயகப் போக்கை உருவாக்கிய ஆற்றல்கள் அக்காலத்தில் இல்லை. அவ்வாற்றல்களைச் சமயக் கருத்துகள், கருத்தியற்கொள்கைகள், சமத்துவம் வளர்வதற்கேற்ற சமூக அரசியற்சூழ்நிலைகள், கொடுங்கோலாட்சியின்மேல் மக்களுக்கு ஏற்பட்ட வெறுப்பு எனச் சுருக்கமாகக் கூறலாம். அந்த ஆற்றல்களுள் சில, பழங்கால உலகில் இருந்திருக்குமென்றால், அவை அப்போது தோன்றிய காரணங்களுக்கும் இக்காலத்தில் காணப்படும் காரணங்களுக்கும் வேறுபாடு உண்டு. இதைப் பொறுத்த வகையில் இடைக்காலத்தை ஜனநாயக அரசியலில் முற்றிலும் பற்றற்ற ஒரு நீண்ட காலம் எனலாம். மறுமலர்ச்சியின் விளைவாக இக்காலம் தொடங்கும் வரை, இத்தாலியின் சில இடைக்கால நகரங்களில் மட்டும் சமத்துவத்தை நிலை நாட்டுவதற்குச் சில சாதாரண முயற்சிகள் நடைபெற்றன. அப்போது குடியரசின்மேல் மக்களுக்கேற்பட்ட ஆர்வத்தை நாம் ஜனநாயகத்துடன் இணைக்கக்கூடாது. இத்தகைய ஆர்வம், சுவிஸ் நாட்டுக்கூடத்தின் தொடக்கக் காலத்திலும் 14, 15ஆம் நூற்றாண்டுகளில் இங்கிலாந்தில் அரசருக்கு நிதிவழங்குவதற்காகப் பாராளுமன்றத்தில் மக்களின் பிரதிநிதிகளைச் சேர்க்கும் போதும் காணப்பட்டது. ஆனால், அது போன்ற ஆர்வம் சிறுகுழுவாட்சியிலும், வல்லாட்சியிலுங்கூடத் தோன்றலாம்.

மதச் சீர்திருத்தத்திற்குப் (Reformation) பிறகுதான் சமயக் கருத்துகள் அரசியல் உரிமைகளை வற்புறுக்கத் தொடங்கின. அரசியல் உரிமைகள் வாயிலாக மட்டுமே மதச் சுதந்தரத்தை அடைய இயலும் என்று மக்கள் எண்ணினார்கள். இங்கிலாந்தில் ஸ்டூவர்ட்டுகளின் ஆட்சியில் அரசருடன் ஏற்பட்ட சச்சரவுகள் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். மதவுரிமைகளைப் பெற விரும்பியது காரணமாகவே புதிய இங்கிலாந்துக் குடியேற்ற நாடுகள் நிறுவப்பட்டன. முதலாம் சார்லஸின் காலத்தில் நிகழ்ந்த உள்நாட்டுப் போர், அரசியல் கொள்கைகளுக்காக மட்டுமன்றிச் சமயக் கோட்பாடுகளுக்காகவும் நடந்தது. 18ஆம் நூற்றாண்டின் வரலாற்றில் கருத்தியற்கோட்பாடுகளே பெரும்பங்கெடுத்தன. அமெரிக்க, பிரெஞ்சுப் புரட்சிகளின் ஆவணங்களின் மூலம் இதை எண்பிக்கலாம். சுதந்தர அறிக்கையையும் மனித உரிமைகளின் அறிக்கையையும் எழுதிய ஆசிரியர்கள், 'மனிதர்கள் பிறக்கும்போது சுதந்தரமாகவும் சமமாகவும் இருக்கின்றார்கள்,' என வலியுறுத்திய போது, நடைமுறை அரசியல் எனும் அமைப்பின் அடிப்படையை நிறுவ முயன்றார்கள். அவர்கள் முற்காலக் கிறித்தவ மறைப்பெரியார்களைப்போல, இறைவன் முன் எல்லாரும் சமம் என வற்புறுத்திக் கூற

வில்லை. சமத்துவக் கொள்கையினால் வாக்குரிமையில் பெருமாற்றங்கள் ஏற்பட்டன. ஏனெனில், அது 'ஓர் ஆள், ஒரு வாக்கு' என்ற கொள்கையை நிலைநாட்டுவதற்காகவே பெரிதும் பயன்பட்டது.

19ஆம் நூற்றாண்டில் பொருளாதார முன்னேற்றத்தினாலும், பொதுமக்களின் கல்வி வளர்ச்சியினாலும் வாக்குரிமையைப் பரவலாக வழங்குவதற்கேற்ற வாய்ப்புகள் ஏற்பட்டன. 'தேர்தலின் போது வேறுபடுத்த இயலாதவாறு கொள்கையளவில் குறைபாடில்லாத குடிகள் இருந்தார்கள்,' என்று மேல் நாட்டு முற்போக்குக் கொள்கை கருதியது. மேலும், பாராளுமன்ற முறையும் வாக்காளர்களின் எண்ணிக்கையைப் பெருக்க வழி வகுத்தது. ஏனெனில், அரசியல் வாதிகளும் தங்களை ஏராளமான மக்கள் ஆதரிக்க வேண்டுமென விரும்பினார்கள். எடுத்துக்காட்டாக, 1867ஆம் ஆண்டு நிறைவேறிய டிஸ்ரேலியின் சீர்திருத்த மசோதாப் போன்ற சட்டங்கள் வேண்டுமென மக்கள் கிளர்ச்சி செய்யவில்லை. அவர் கட்சியினரே அதை 'ஆழந்தெரியாமல் காலை விடுதல்' எனக்கூறினர். ஆனால், அரசியல் நிலைமையும், சமூகச் சூழ்நிலையும் 'குடியிருப்போர் வாக்குரிமை' (lodger vote) அளிப்பதற்கு வாய்ப்பளித்தன. இறுதியாக, முறை தவறிய ஆட்சியின் மேல் மக்களுக்கேற்பட்ட வெறுப்பும் வாக்குரிமை விரிவுக்கு ஒரு சிறந்த காரணமாய் இருந்தது. ஆனால், அதை அடைந்த போதிலும், அதன் ஆதரவாளர்களின் விருப்பம் முற்றிலும் நிறைவேறவில்லை. ஆயினும், பாராளுமன்றம் தங்கள் குறைகளை வெளியிடும் பொது மன்றமாய் இருந்ததால், அரசியல் சீர்திருத்தவாதிகள் (புரட்சி வாதிகளல்ல), தாங்கள் வாழ்ந்த சமூகத்தின் நிலையைச் சீர்படுத்துவதற்குத் தேர்தல் சீர்திருத்தத்தையே கருவியாகப் பயன்படுத்த விழைந்தார்கள். 1837 முதல் 1848 வரை இங்கிலாந்தில் சாசன இயக்கத்தினரும் (Chartists), தேசிய ஒற்றுமைக்கு முன்னர் இத்தாலியரும், ஜார் ஆட்சியிலிருந்த ரஷ்யாவில் முற்போக்கு வாதிகளும், முதல் உலகப்போருக்கு முன்னர் ஆஸ்திரிய – ஹங்கேரிப் பேரரசில் அல்லலுற்ற சிறுபான்மையினரும் இதையே செய்தனர்.

ஆகவே, இப்போதுள்ள அரசியல் முறைமைக்குட்பட்ட எல்லா அரசுகளிலும் மிகப் பரவலான வாக்குரிமையைக் காணலாம். பழைய அரசுகள் வயது வந்தோர் வாக்குரிமை அல்லது ஆடவர் வாக்குரிமையை வழங்கும் தேர்தல் முறைச் சீர்திருத்தங்களைச் செய்துள்ளன. புதியனவாக நிறுவப்பட்ட அரசுகளில் அநேகமாக எல்லாம் பால் வேறுபாடின்றி அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கும் விதியொன்றைத் தமது அரசியலமைப்பில் சேர்த்திருக்கின்றன. முதல் உலகப் போருக்குப் பிறகு தோன்றிய இம்முன்னேற்றத்தினால், தேர்தல் தொகுதிகளைச்

சார்ந்த பல சிக்கல்கள் முளைத்தன. தொழில் முன்னேற்றம் காரணமாகவும், இதுவரையில் பிரதிநிதிகளை அனுப்பாத பகுதிகளில் வாழ்ந்த மக்களுக்குப் பிரதிநிதித்துவம் அளித்ததன் விளைவாகவும், பாராளுமன்றத்தில் அமரும் உரிமையைப் புதிதாகப் பகுத்து அளிக்க வேண்டிய சிக்கல் ஏற்பட்டது. மேலும், இம்மாற்றங்களின் விளைவாகத் தோன்றிய புதிய சிறுபான்மைக் கூட்டங்கள், புதிய சிக்கலை உண்டு பண்ணின; தேர்ந்தெடுக்கப்பட்ட அவை அல்லது அவைகளில் தமக்கும் பிரதிநிதித்துவம் வேண்டுமெனக் கிளர்ச்சி செய்தன. அவ்வாறு அமைக்கப்படாத அரசின் தேர்தல் முடிவுரைகளைப் பார்த்தால், இச்சிக்கலின் தன்மை தெரியும். அம்முடிவுகள் வாக்குகளின் எண்ணிக்கையைப் பாராளுமன்ற இருக்கைகளின் (Seats) எண்ணிக்கையுடன் ஒப்பிட்டுக் காட்டுகின்றன. இச்சிக்கலை உடனே தவிர்க்கப் பல அரசுகள் தொகுதிச் சீர்த்திருத்தத்தைச் செய்தன. மற்ற அரசுகள் பிரதிநிதித்துவ முறையின் இக்குறையை நீக்க வழி தேடின.

## 3. வாக்குரிமையும் அதைச் சார்ந்த சிக்கல்களும்

வாக்குரிமை என்ற கோணத்திலிருந்து பார்த்தால், அரசுகளை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை வயது வந்தோருக்கு வரம்புக்குட்பட்ட வாக்குரிமை அளிக்கும் அரசுகள், பால் வேறுபாடின்றி வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை வழங்கும் அரசுகள் என்பவை. ஆயினும், இப்பிரிவுகளிலும் சில கட்டுப்பாடுகள் உண்டு. சில அரசுகளில் அண்மைக் காலம் வரை ஆண் வாக்காளர்களுக்குச் சில தகுதிகள் தேவையாய் இருந்தன. ஆடவர்களுக்கு வரையிறந்த வாக்குரிமை அளித்த வேறு சில அரசுகள் சில தகுதிகளையுடைய பெண்டிருக்கு மட்டும் வாக்குரிமை அளித்தன. வேறு சிலவற்றில் பெண்டிர் நகராட்சித் தேர்தலில் வாக்களித்தாலும், நாட்டுத் தேர்தலில் வாக்களிக்க இயலாது. அண்மைக்காலம் வரை ஆடவர் வாக்குரிமை இலத்தீன் ஐரோப்பாவின் சிறப்பியல்பாய் இருந்ததெனப் பொதுவாகக் கூறலாம். ஏனெனில், அங்குப் பெண்டிருக்கு அரசியல் உரிமை அளிக்கக்கூடாதென்ற சமயச் சார்புள்ள ஒரு தப்பெண்ணம் இன்னும் நிலவியது. ஆகவே, இரண்டாம் உலகப்போர் முடியும் வரை பிரான்ஸிலும் இத்தாலியிலும் பெண்களுக்குவாக்குரிமை இல்லை. ஆனால் இவ்விரு நாடுகளிலும் நிறுவப்பட்ட புதிய குடியரசு அரசியலமைப்புகள் அவர்களுக்கு வாக்குரிமை வழங்கின. ஸ்பெயினில் 1932ஆம் ஆண்டுக் குடியரசின் அரசியலமைப்பு நிறுவப்படுவதற்கு முன் பெண்டிருக்கு வாக்குரிமை இல்லை. பிராங்கோவின் வல்லாட்சி அந்த அரசியலமைப்பை அழித்துவிட்டது. அதற்கு மாறாக, முதல் உலகப் போருக்குப் பிறகு புதியனவாக உருவான அரசுகளில், யூகோஸ்லா

ஷியாவில் மட்டும் பெண்டிருக்கு வாக்குரிமை இல்லை. ஆனால், அங்கு 1946இல் கூட்டாட்சி மக்கள் குடியரசு நிறுவப்பட்டதும் அந்நிலை மாறியது. 1934இல் துருக்கியில் கூடப் பெண்டிர் வாக்குரிமை பெற்றனர். மறு ஆண்டு பெருந்தேசீய அவைக்குப் பதினேழு பேர் பெண்டிர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஜப்பானில் 1947இல் அமெரிக்கப் பாதுகாப்பில் நிகழ்ந்த தேர்தலில் முதன்முறையாகப் பெண்டிர் வாக்களித்தனர். இன்று பெண்டிர் வாக்குரிமை பெறாத ஒரே ஐரோப்பிய ஜனநாயக அரசு சுவிட்ஸர்லாந்துதான். அங்கு 1959இல் பெண்டிருக்குக் கூட்டாட்சித் தேர்தல்களில் வாக்குரிமை அளிக்கும் பொருள் பற்றிக் குடியொப்பம் நிகழ்ந்தது. அதை ஆதரித்து ஏறக்குறைய 6,55,000 வாக்குகளும், எதிர்த்து 3,23,000 வாக்குகளும் அளிக்கப்பட்டன. 1962இலும் இப்பிரச்சினை இதே நிலையிலேதான் இருந்தது. கோட்டங்களின் அரசியலமைப்புகளைப் பொறுத்த வரையில் இக்கட்டுப்பாடு இல்லை. பிரெஞ்சுக் கோட்டங்களாகிய வாட், நியூஷாட்டல், ஜெனீவா ஆகிய மூன்றிலும் கோட்டத் தேர்தல்களில் வாக்களிப்பதற்கும், கோட்டச் சட்ட மன்றங்களில் அமர்வதற்கும் பெண்டிர் உரிமை பெற்றுள்ளனர்.

ஐரோப்பாவில் அரசியல் வாக்குரிமை வளர்ந்த வரலாற்றை வரையும் போது, அதில் பிரான்ஸினால் ஏற்பட்ட விளைவைப் பார்த்து வியக்காமல் இருக்க இயலாது. அரசியல் சமத்துவம் என்ற கருத்தியற்கோட்பாட்டிற்குப் பிரான்ஸ் தாயகமாய்த் துலங்கியது. பிரெஞ்சுப் புரட்சியின் விளைவாகப் பிறந்த அரசியலமைப்புகள் பெரும்பாலும் பிரிட்டிஷ் அரசியலமைப்பின் வடிவில் அமைக்கப்பட்டன. அவற்றைப் போலவே பல ஐரோப்பிய அரசுகளில் அரசியலமைப்புகள் தீட்டப்பட்டன. பிரான்ஸின் அரசியலமைப்பைப் பின்பற்றிய பல அரசுகள் பெண்டிருக்கு வாக்குரிமை அளித்த போதிலும், பிரான்ஸ் அவ்வாறு செய்யவில்லை. மேற்கூறிய நாடுகளில் வாக்குரிமை வேண்டுமெனப் பெண்டிர் கிளர்ச்சி செய்யவில்லை. ஆனால், இந்நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில் வேறு சில நாடுகளில்—சிறப்பாக பிரிட்டனிலும் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும்—அத்தகைய கிளர்ச்சிகள் நிகழ்ந்தன. பெண்டிர்க்கு வாக்குரிமை வழங்கக்கூடாதென்பதற்குத் தக்க காரணம் இல்லை. வயது வந்த எல்லா ஆடவருக்கும் அவ்வுரிமையை வழங்கினால், பெண்டிர்க்கு அதை வழங்க வேண்டுமல்லவா? உண்மையில் பெண்டிர் வாக்குரிமை, ஜனநாயகத்திற்கு இன்றியமையாதது. இதைப் பிரெஞ்சு மக்கள் தங்கள் நான்காவது, ஐந்தாவது குடியரசுகளின் அரசியலமைப்பில் ஏற்றுக்கொண்டுள்ளார்கள். சுருங்கக் கூறவேண்டுமானால், 'மனித உரிமைகளுக்கும்' மனித இனத்தின் உரிமைகளுக்கும் வேறுபாடு காண்பது அரிது. ஐரோப்பாவிற்கு வெளியிலுள்ள அரசுகளில், வயது வந்தோருக்கு

வாக்குரிமை வழங்குபவற்றைவிட ஆடவருக்கு மட்டும் அவ்வுரிமை அளிக்கும் அரசுகள் மிகக் குறைவாகவே இருக்கின்றன. தன்னுட்சி பெற்ற பிரிட்டிஷ் குடியேற்ற உரிமை நாடுகள் எல்லாவற்றிலும் பெண்டிர் வாக்குரிமை பெற்றுள்ளனர்.

வாக்களிக்கும் வயது அரசுகளுக்கேற்ப வேறுபடுகின்றது. பல அரசுகளில் அது 21 வயதாய் இருக்கின்றது. இதற்கு எடுத்துக் காட்டாக, பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடுகள், பிரான்ஸ், இத்தாலி, டென்மார்க்கு, நார்வே ஆகிய அரசுகளைக் கூறலாம். தென்னுப்பிரிக்கா (1960 முதல்), சோவியத்து ரஷ்யா, யூகோஸ்லா வியா ஆகிய நாடுகளில் பதினெட்டும், சுவிட்ஸர்லாந்திலும் ஜப்பானி லும் இருபதும் வாக்களிக்கும் வயதாய் இருக்கின்றன. சில அரசுகள் கட்டாய வாக்களிப்பை நடை முறைக்குக் கொண்டு வந்துள்ளன; அல்லது கொண்டு வர முயல்கின்றன. ஆனால், இது பல நாடுகளில் நடை பெறுவதில்லை. மறைவான வாக்கெடுப்பைப் (Secret Voting) பொறுத்த வரையில், அரசியலமைப்புக்குட்பட்ட எல்லா அரசுகளும் அதைக் கொள்கையளவிலாவது ஏற்றுக்கொண்டுள்ளன. கிரேட் பிரிட்டனில் 1948இல் பல்கலைக்கழகப் பிரதிநிதித்துவத்தை நீக்கும் வரையில், வாக்களிக்கும் பல்கலைக் கழகப் பட்டதாரியும் ஒரு சாட்சியும் வாக்கெடுப்பின் போது கையொப்பமிட வேண்டும். இது இங்குக் குறிப்பிடத்தக்க வரலாற்றுக் குறிப்பாகும்.

வயது வந்தோர் வாக்குரிமை அளிக்கும் அரசுகளில் பிரிட்டன், 1918க்கும் 1928க்கும் இடையில் நடுவு நிலையில் நின்றது. 1832, 1867, 1884-5ஆம் ஆண்டுகளில் தொடர்ச்சியாக நிறைவேறிய தேர்தல் முறைச் சீர்திருத்தங்களின் விளைவாக ஆடவர் வாக்குரிமை வழங்கப்பட்டது. ஆனால், வாக்குரிமை பெறப் பல வகையான தகுதிகள் தேவையாய் இருந்தன. 1918இல் நிறைவேறிய மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம், இவற்றை நீக்கியது. இச்சட்டம் சட்ட முறைத் தகுதி பெற்ற, 21 வயதான எல்லா ஆடவருக்கும் பாராளு மன்ற வாக்குரிமை வழங்கியது. ஆனால், அவர்கள் ஆறு மாதங்கள் ஒரு தொகுதியில் தங்கியிருக்கவேண்டும்; அல்லது ஆண்டுக்குப் பத் துப் பவுன் வருமான மதிப்புள்ள நிலத்திலோ, மனையிலோ தங்கி யிருக்க வேண்டும். இச்சட்டத்தின் விளைவாக நாடு பெண்டிர் வாக் குரிமையைப் பெரும்பாலும் ஏற்றுக்கொண்டது. ஆயினும், அதை முற்றிலும் ஏற்றுக்கொள்ளவில்லை. முப்பது வயதான பெண்டிர் பாராளுமன்ற வாக்குரிமை பெற்றனர். ஆனால், அவர்கள் ஆண்டுக்கு ஐந்து பவுன் வருமான மதிப்புள்ள இடத்தில் தங்கியிருக்கும் வட்டார அரசாங்க வாக்காளர்களாகவோ, அல்லது வாக்காளர்களின் மனைவி யராகவோ இருக்க வேண்டும். அதாவது, அவர்களைப் பொறுத்த

வரையில் இச்சட்டம் 'குடியிருப்போர் வாக்குரிமை' எனும் கொள்கையை ஏற்றுக்கொண்டது. ஆனால், தொகுதியில் வாழ்ந்து வந்த முப்பது வயதுக்கு மேற்பட்ட பெண்களுக்கு வாக்குரிமை வழங்கவில்லை.

1918ஆம் ஆண்டுச் சட்டம் பன்மை வாக்கை நீக்கியது. ஆனால், தொகுதியில் வாழ்வதைத் தவிர, ஆண்டுக்குப் பத்துப் பவுன் வருமான மதிப்புள்ள நிலத்திலோ அல்லது மனையிலோ அதன் உடைமையாளராக அல்லது அதில் வாடகைக்குக் குடியிருப்பவராக வாழும் ஆடவருக்கும், பல்கலைக்கழக மாணவர்களுக்கும் (ஆடவர்களுக்கும் பெண்டிருக்கும்) பன்மை வாக்களிக்கும் உரிமை இருந்தது. இவ்விரு வகுப்பார்களுக்கும் இரண்டாவது முறை வாக்களிக்கும் உரிமை இருந்தது. ஆனால், இரண்டிற்கு மேற்பட்ட வாக்கு யாருக்கும் இல்லை. இச்சட்டத்தின் விளைவாக ஆடவர்களாகிய வாக்காளர்களின் எண்ணிக்கை 8,357,000 இலிருந்து 10,449,820 ஆக அதிகரித்ததுமல்லாமல், 7,831,583 பெண்டிரும் வாக்குரிமை பெற்றனர். ஆடவர்களுக்கும் பெண்டிருக்கும் இணையான வாக்குரிமை வழங்கப்படுமானால், வாக்காளர்களில் பெண்டிரின் தொகை ஆடவர்களின் எண்ணிக்கையைவிட அதிகமாய் இருக்கும் எனப் பலர் கருதினர். சமவுரிமை அளிக்க வேண்டுமென நீண்டகாலமாகக் கிளர்ச்சி நடந்த போதிலும், அதை வழங்காததற்குக் காரணம் இதுதான் எனக் கூறலாம். முதல் உலகப்போருக்கு முன் பெண்டிர் வாக்குரிமைக் கிளர்ச்சி உச்ச நிலையை அடைந்த போது, அச்சீர்திருத்தத்தின் விளைவாகப் பாராளுமன்ற முறையில் புரட்சிகரமான மாற்றம் ஏற்பட்டுவிடும் எனப் பலர் அஞ்சினர். ஆனால், இப்போது அவ்வாறு அஞ்ச வேண்டிய தேவை ஏற்படவில்லை. ஏனெனில், பெண்டிர் பெற்ற அரைகுறை வாக்குரிமை அரசியல் ஆற்றல்களின் சமநிலையைக் குலைத்துவிட்டதென அனுபவ வாயிலாக எவரும் கூற இயலவில்லை. இவ்வேண்டுகோள் விடாது எழவே, இதற்கு விடையளிக்க வகையறியாத பிரிட்டிஷ் அரசாங்கம், 1927ஆம் ஆண்டில், 1918ஆம் ஆண்டுச் சட்டத்தைத் திருத்துவதற்கான வழிகளை வகுக்கத் தொடங்கியது. ஆடவர்களுக்கும் பெண்டிருக்கும் ஒரே வகையான தேர்தல் தகுதியைத் தெரிந்தெடுத்து, இருபாலாருக்கும் வாக்களிக்கும் வயதிலிருந்த வேறுபாட்டை அகற்றப் பொதுவான ஒரு வயதை—உதாரணமாக 25 வயதைக்—குறிப்பிடுவார்கள் என்ற கருத்து நிலவியது. ஆனால், 1923இல், ஆடவர்களுக்கிருந்த அதே வாக்குரிமையைப் பெண்டிர்க்கும் அளிக்கும் ஒரு மசோதா கொண்டு வரப்பட்டது. அது சட்டமாகி, 1929இல் நடந்த பொதுத் தேர்தலில் நடைமுறைக்கு வந்தது. அம்மசோதாவைப்பற்றி வாதம் நிகழ்ந்த போது, எல்லா வாக்காளர்களுக்கும் வாக்களிக்கும் வயது இருபத்

தைந்தாக இருக்க வேண்டுமென்று கொண்டுவரப்பட்ட திருத்தம் தோல்வியுற்றது. இச்சட்டத்தின் பயனுக, ஐக்கிய அரசின் மொத்த வாக்காளர்களின் தொகை 26,750,000 ஆய் இருந்தது. அதாவது, 12,250,000 ஆடவர்கள், 14,500,000 பெண்டிர்கள்.

முதற்சீர்திருத்த முயற்சியிலிருந்து இறுதி முயற்சி வரை பிரிட்டனில் நிகழ்ந்த வாக்குரிமை விரிவின் வளர்ச்சியை ஆராயும்போது, 1832ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டத்திற்கு முன்னுல் வாக்காளர்களின் எண்ணிக்கை 435,391 ஆய் இருந்ததென்பதையும், அச்சட்டத்தின் விளைவாக 217,386 புதிய வாக்காளர்களின் பெயர்கள் பதிவு செய்யப்பட்டன என்பதையும் காண்கிறோம். 1867இன் சட்டப்படி 938,427 வாக்காளர்கள் புதியவர்களாகச் சேர்க்கப்பட்டார்கள். அதற்குமுன் ஏற்கெனவே இருந்த வாக்காளர்கள், 1,056,659பேர். 1884இன் சட்டம் 1,762,087 பெயர்களையும்; 1918இன் சட்டம் 13,000,000 பெயர்களையும் புதிதாகப் பதிவு செய்தன. 1928ஆம் ஆண்டின் சட்டம் 5,240,000 பெண்டிருக்கு வாக்குரிமை அளித்தது. மரபு முறையான தேர்தல் சீர்திருத்தங்களுக்குப் பதிலாக, இங்கிலாந்தில் வாக்குரிமை விரிவு மட்டும் நடைபெற்றது. ஆயினும், இது எவ்வளவு மிகுதியாக நடைபெற இயலுமோ அவ்வளவு மிகுதியாக நிகழ்ந்திருக்கிறது. ஜனநாயக முறை சீர்திருத்தங்களைச் செய்ய இன்னும் வேறு வழிகளும் உண்டு. அவற்றைப் பிறகு பார்ப்போம்.

பிரிட்டனில் நடந்தது போலவே, அமெரிக்காவிலும் நீண்ட நாள் கிளர்ச்சிக்குப் பிறகு பெண்கள் வாக்குரிமை பெற்ருர்கள். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் பிரதிநிதிகள் சபை உறுப்பினர், செனட்டு உறுப்பினர், நாட்டின் தலைவர் ஆகிய மூவர் முக்கியப் பதவிகளுக்கும் கூட்டாட்சி வாக்குரிமை முக்கியமானதாய் இருக்கிறது. தொடக்கத்திலிருந்த அரசியலமைப்பில் இத்தேர்தல்களைப்பற்றிய தெளிவான விதிகள் இல்லை. பிரதிநிதிகளை 'இரண்டு ஆண்டுகளுக்கொருமுறை மாநிலங்களின் மக்கள் தேர்ந்தெடுக்கவேண்டும். ஒவ்வொரு மாநிலத்திலுமுள்ள வாக்காளர்களுக்கும், மாநிலச் சட்ட மன்றத்தின் அதிக உறுப்பினர்களுடைய அவையின் அங்கத்தினருக்குத் தேவையான தகுதிகள் இருக்க வேண்டும்.' செனட்டில் 'ஒவ்வொரு மாநிலத்திலிருந்தும் அதன் சட்ட மன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் இருவர் இருப்பர்'. நாட்டின் தலைவரைத் தேர்ந்தெடுக்க, ஒவ்வொரு மாநிலமும் 'அதன் சட்ட மன்றம் குறிப்பிடும் முறையில் தேவையான வாக்காளர்களை நியமிக்கும். இவற்றுள் ஒவ்வொன்றிலும் வாக்காளர்களைத் தெரிந்தெடுக்கும் முறையின் நுணுக்கங்களை மாநிலங்கள் தனித்தனியாகத் தீர்மானிக்க வேண்டும். ஆனுல், முதலில் அரசியலமைப்பு வெளியானதிலிருந்து வாக்களிப்பு முறையில் பல பெரு

மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. முதலில், தலைவர் தேர்தலில் வாக்கெடுப்பு மிகவும் முக்கியமான இடம் பெற்றது. இதற்குக் காரணம், தேர்வாளர்களைத் தேர்ந்தெடுப்பதில் ஒரு புதிய வழக்கம்தோன்றியது. அதன்படி தேர்வாளர்களைத் தேர்ந்தெடுத்தவர்கள், அவர்கள் அப்பதவிக்குத் தகுதி உள்ளவர்களா எனக் கருதாது, குறிப்பிட்ட ஒரு வேட்பாளரை ஆதரிப்பதனாலேயே அவர்களைத் தேர்ந்தெடுத்தார்கள். அதாவது, தலைவரின் தேர்தல் உண்மையில் பொது மக்களின் நிகழ்ச்சியாய் மாறியது. இரண்டாவது, ஏழாவது அரசியலமைப்புத் திருத்தப்படி (1913) எல்லா மாநிலங்களிலும் மக்கள் செனட்டு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்பது தீர்மானிக்கப்பட்டது. 'ஒவ்வொரு மாநிலத்திலுமுள்ள வாக்காளர்களுக்கும், மாநிலச் சட்டமன்றத்தின் அதிக உறுப்பினர்களையுடைய அவையின் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கும் வாக்காளர்களுக்குத் தேவையான தகுதிகள் இருக்க வேண்டும்,' என்றும் திருத்தம் கூறியது.

ஆகவே, அமெரிக்காவில் 1913ஆம் ஆண்டின் இறுதியில் மாநிலங்களின் கீழ்ச்சபைத் தேர்தலில் வாக்களிக்க உரிமை பெற்றவர் அனைவருக்கும் காங்கிரஸின் இரு சபைகளின் உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கவும், நாட்டின் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் தேர்வாளர்களைத் தேர்ந்தெடுக்கவும் உரிமை இருந்தது. மேலும், இதைப்பற்றிய விவரங்களை அரசியலமைப்பு விளக்காததால், மாநிலங்கள் தங்கள் சட்ட மன்றங்களின் அவைகளில் ஒன்று அல்லது இரண்டின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் தேர்தல்களில் வாக்களிக்கும் உரிமையைப் பெண்டிருக்கு வழங்க முடிந்தது. ஆனால், பெண்டிர் மாநிலக் கீழ்ச்சபைக்கு (அதாவது மாநிலச் சட்டமன்றத்தின் அதிக உறுப்பினர்களையுடைய சபைக்கு) வாக்களிக்கும் உரிமை பெற்றிருந்தால், அரசியலமைப்பின்படி, கூட்டாட்சிப் பிரதிநிதிகளின் சபைக்கும், 1913இலிருந்து கூட்டாட்சிச் செனட்டு அவைக்கும், பழக்கத்திற்கேற்பத் தலைவரின் தேர்வாளர்களைத் தேர்ந்தெடுப்பதற்கும் அவர்களுக்கு உரிமை உண்டு. முதல் உலகப்போரின்போது நாடு முழுவதும் பெண்களுக்கு வாக்குரிமை வழங்க அரசியலமைப்பைத் திருத்த வேண்டுமெனக் கிளர்ச்சி தோன்றியது. அப்போது ஏற்கெனவே இருபத்தொன்பது மாநிலங்களில் பெண்டிர் வாக்குரிமை பெற்றிருந்தனர். செனட்டில் நிகழ்ந்த பெரும்போராட்டத்திற்குப் பிறகு, 1919இல் காங்கிரஸ் அத்திட்டத்தை ஏற்றுக்கொண்டது; பிறகு மாநிலங்களின் இசைவிற்காக அதை அவற்றின் முன் சமர்ப்பித்தது. அது நிறைவேற வேண்டுமென்றால் நாற்பத்தெட்டு மாநிலங்களில் முப்பத்தாறு மாநிலங்கள் இணக்கம் தெரிவிக்க வேண்டும். 1919ஆம்ஆண்டின் இறுதியில் இருபத்திரண்டு மாநிலங்களே திருத்தத்தை ஏற்றுக்கொண்டன. ஆனால், தேசீயப்பெண்டிர் வாக்குரிமைச் சங்கம் நிகழ்த்திய போராட்டத்தின்

விளைவாக, 1920ஆம் ஆண்டில் நிகழவிருந்த தலைவர் தேர்தலுக்கு முன் முப்பத்தாறு மாநிலங்களின் இணக்கம் கிடைத்துவிட்டது.

(1) '19ஆம் திருத்தத்தின்படி அமெரிக்காவில், ஐக்கிய நாடுகளும் அல்லது எந்த மாநிலமும் ஐக்கிய நாடுகளின் குடிகளின் வாக்குரிமையைப் பாலினம் காரணமாக மறுக்கவோ அல்லது குறைக்கவோ கூடாது.'

(2) 'இவ்விதியின் வாசகத்தை நிறைவேற்றுவதற்காகத் தக்க சட்டமியற்றக் காங்கிரஸுக்கு அதிகாரம் உண்டு.'

இதிலிருந்து அமெரிக்கப் பொதுநலக்கூட்டு முழுவதிலும் நடைமுறையில் வயது வந்தோர் அனைவரும் வரையிறந்த வாக்குரிமை பெற்றுள்ளனர் என்பது தெரிகிறது.

## 4. ஒற்றை உறுப்பினர் தொகுதி

தேர்தல் சிக்கல்களை நோக்குங்கால், அரசுகளை அவற்றின் தேர்தல் பரப்பு அல்லது தொகுதியின் வகைக்கேற்ப இரு பகுதிகளாகப் பிரிக்கலாம். அரசியல் முறைமைக்குட்பட்ட இக்கால அரசுகளில் தேர்தல் தொகுதிகளை ஒருவர் அல்லது பலரை உறுப்பினராக அனுப்புவதற்கேற்ற முறையில் அமைத்திருக்கின்றனர். பொதுவாகக் கூற வேண்டுமானால், பிரதிநிதித்துவ ஜனநாயகம் குழந்தைப் பருவத்திலிருக்கும்போது, நாட்டைப் பல நகரப் பகுதிகளாகவும் நாட்டுப்புறப் பகுதிகளாகவும் பிரித்து, அவற்றைத் தேர்தல் தொகுதிகளாக்குவது வழக்கம். ஒவ்வொரு தொகுதியும் ஒவ்வோர் உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கும். ஆனால், இவ்வாறு நிலப்பகுதியின் அடிப்படையில் பிரிப்பது வசதிக்காக மட்டும் நடைபெற்றது. மாவட்டங்களின் மக்கள் தொகையில் அடிக்கடி மாற்றங்கள் ஏற்படவே, பாராளுமன்ற இடங்களைப் பகிர்வு திருத்தம் செய்ய வேண்டிய தேவை ஏற்பட்டது. ஆயினும், தொழில் வளர்ச்சி பெருகிக்கொண்டிருக்கும் காலத்தில், இடைவிடாது பெருகி மாறிவரும் மக்கள் தொகைக்கேற்பத் திருத்தங்களைச் செய்து வருவது இயலாது. நாட்டை ஒற்றை உறுப்பினர் தொகுதிகளாக நிலப்பகுதியின் அடிப்படையில் பிரிக்கும் இந்தச் சாதாரண முறையில் வேறொரு குறையும் உண்டு. அது வாக்களிக்கும் முறையைச் சார்ந்த பெருங்குறை. அதாவது, தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்ட சபை வாக்காளர்களின் பொதுவான கருத்தை எதிரொலிக்க வேண்டும். அதைச் செய்யவல்ல வாக்களிப்பு முறையைப் பெறுவதுதான் பிரச்சினை.

பிரிட்டன், அமெரிக்கா, நியூஜீலந்து, கனடா ஆகிய சில முக்கிய நாடுகளில் இப்போது ஒற்றை உறுப்பினர் தொகுதி முறை நடைமுறையில் இருந்து வருகிறது. கிரேட் பிரிட்டனில் இரண்டொன்றைத் தவிர மற்றெல்லாத் தொகுதிகளும் ஒரே உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கின்றன. எந்தத் தொகுதியும் இரண்டிற்கு மேற்பட்டவர்களைத் தேர்ந்தெடுப்பதில்லை. எல்லாப் பகிர்வு திருத்தச் சட்டங்களும் இம்முறையை நிலைநிறுத்திவிட்டன. எடுத்துக்காட்டாக, 1910இல் நடந்த பொது மக்கள் சபைத் தேர்தல், 643 தொகுதிகளில் நடைபெற்றது. அவற்றுள் இருபத்தேழு மட்டும் (மூன்று பல்கலைக் கழகத்தொகுதிகள் உட்பட) உறுப்பினர் இருவரைத் தேர்ந்தெடுத்தன. 1918,1928,1944 ஆம் ஆண்டுகளின் மக்கள் பிரதிநிதித்துவச் சட்டங்கள் இந்நிலையில் அடிப்படை மாற்றம் ஒன்றையும் செய்யவில்லை. ஆயினும், பாராளுமன்ற இடங்களின் எண்ணிக்கை அடிக்கடி மாறியது. 1948ஆம் ஆண்டின் மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் பல்கலைக்கழகப் பிரதிநிதித்துவத்தையும், மீதியிருந்த பன்மை வாக்கின் அடையாளங்களையும் அழித்துவிட்டது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் செனட்டு, பிரதிநிதிகளின் சபை இவற்றின் தொகுதிகள் எல்லாம் ஒற்றை உறுப்பினர் தொகுதிகள். ஆகவே, இவ்விரு நாடுகளிலும் மக்கள் தொகுதிச் சீர்திருத்தத்தை உடனடியாகப் பெற விழைந்தார்கள். ஏனெனில் இரண்டிலும் தேர்தல் முறையின் பயனாகச் சட்ட மன்றத்தில் வாக்காளர்களின் கருத்துகள் போதிய அளவில் எதிரொலித்தன என்று கூற இயலாது.

அதற்கு மாறாக, இம்முறையினால் மாபெரு முரண்பாடுகள் தோன்றின. இது குறிப்பாக பிரிட்டனில் நிகழ்ந்தது. இம்முறையினால் நாட்டிலுள்ள பெரும்பான்மைக் கட்சி மக்கள் சபையில் பெரும்பான்மையான இடங்களைப் பெறும் என்று உறுதியாகக் கூற இயலாது. மேலும், பெரிய சிறுபான்மைக் கட்சியும் அங்குப் போதிய அளவு பிரதிநிதித்துவம் பெறாமல் இருக்கலாம். எடுத்துக்காட்டாக, 1922 இல் நடந்த பொதுத் தேர்தலில் பழமை விவாதக் (Conservative) கட்சியினர் 296 இடங்களையும் 5,381,433 வாக்குகளையும்; தொழிற் கட்சியினர் 138 இடங்களையும் 4,237,490 வாக்குகளையும்; முற்போக்கு வாதிகள் (The Liberals) 53 இடங்களையும் 2,621,168 வாக்குகளையும் பெற்றார்கள். இதன்படி, பழமை வாதக் கட்சியினர் ஓர் இடத்திற்கு 18,180 வாக்குகளும், தொழிற்கட்சியினர் ஓர் இடத்திற்கு 30,706 வாக்குகளும், முற்போக்கு வாதிகள் ஓர் இடத்திற்கு 48,540 வாக்குகளும் பெற்றார்கள். மேலும், 1924இல் நடந்த பொதுத் தேர்தலில் ஒற்றுமை வாதிகள் (The Unionists) 382 இடங்களும் 7,450,990 வாக்குகளும் பெற்றார்கள். அதாவது, ஓர் இடத்திற்கு 19,505 வாக்குகள் பெற்றார்கள். தொழிற்கட்சியினர்

142 இடங்களும் 5,483,088 வாக்குகளும் அதாவது ஓர் இடத்திற்கு 38,613 வாக்குகள் பெற்றூர்கள். முற்போக்கு வாதிகள் 34 இடங்களும் 3,008,097 வாக்குகளும்; அதாவது ஓர் இடத்திற்கு 88,473 வாக்குகளும் பெற்றூர்கள். அதே தேர்தலில் தெற்கு இங்கிலாந்திலுள்ள ஏழு மாவட்டங்களில் (Counties) ஒற்றுமை வாதிகள் 84 இடங்களும் 1,456,702 வாக்குகளும்; முற்போக்கு வாதிகள் ஓர் இடமும் 445,726 வாக்குகளும்; தொழிற்கட்சியினர் ஓர் இடமும் பெருத போதிலும் முற்போக்கு வாதிகளைவிட அதிகமான வாக்குகளும்—அதாவது 483,873 வாக்குகளும்—பெற்றூர்கள். இத்தேர்தலில் ஸ்காட்லாந்தில் ஒற்றுமை வாதிகள் (36 இடங்கள்) தொழிற்கட்சியினரைவிடப் (26 இடங்கள்) பத்து இடங்கள் அதிகமாகவும், தொழிற்கட்சியினரைவிட 8,755 வாக்குகள் குறைவாகவும் பெற்றூர்கள். (ஒற்றுமை வாதிகள் 688,298, தொழிற்கட்சி 697,053). அம்முறையினுல் தேர்தல் வாய்ப்புகளில் ஏற்படும் குழப்பங்களுக்கு இன்னும் சான்று கூறலாம். ஒற்றுமை வாதிகள் 1923இல் நடந்த தேர்தலில் மான்செஸ்டரில் ஓர் இடமும் 104,027 வாக்குகளும், 1924இல் நடந்த தேர்தலில் ஆறு இடங்களும், 136,195 வாக்குகளும் பெற்றூர்கள். முற்போக்கு வாதிகள் 1923இல் ஐந்து இடங்களும் 71,141 வாக்குகளும் பெற்றூர்கள். ஆனுல், 1924இல் அவர்கள் ஓரிடமும் பெருமல், 50,350 வாக்குகள் பெற்றூர்கள்.

ஐக்கிய அரசில் 1935இல் நிகழ்ந்த பொதுத்தேர்தலில் அரசாங்கத்தை ஆதரித்தவர்கள் 11,570,179 வாக்குகளையும், எதிர்க்கட்சிகளை ஆதரித்தவர்கள் 9,930,460 வாக்குகளையும் பெற்றூர்கள். ஆயினும், அரசாங்கம் 428 இடங்களையும் எதிர்க்கட்சி 184 இடங்களையுமே பெற்றன. அதாவது, எதிர்கட்சி, அரசாங்கம் பெற்ற வாக்குகளில் 80 சதவிகிதத்திற்கு மேல் பெற்ற போதிலும், 30 சதவிகித இடங்களையே பெற்றது. தேர்தலின் விளைவாக அரசாங்கம் அதற்கென வழங்கப்பட்ட 27,000 வாக்குகளுக்கு ஓர் உறுப்பினரையும், தொழிற்கட்சி 53,000 வாக்குகளுக்கு ஓர் உறுப்பினரையும், முற்போக்குக் கட்சி 85,000 வாக்குகளுக்கு ஓர் உறுப்பினரையும் பெற்றன. 1945இல் நடைபெற்ற தேர்தலில் முற்போக்கு வாதிகள் 11 இடங்களும் $2\frac{1}{4}$ மில்லியன் வாக்குகளும், முற்போக்குத் தேசியவாதிகள் 13 இடங்களும் 750,000 வாக்குகளும் பெற்றூர்கள். தொழிற்கட்சியினர் 392 இடங்களும் 12 மில்லியன் வாக்குகளும், பழமை வாதக்கட்சியினர் 189 இடங்களும் $8\frac{1}{2}$ மில்லியன் வாக்குகளும் பெற்றனர். அதாவது, தொழிற்கட்சியினர் பெற்றதைவிட மூன்றில் இரண்டு பகுதி வாக்குகளைப் பழமை வாதக் கட்சியினர் பெற்ற போதிலும், தொழிற்கட்சியினர் பெற்ற இடங்களில் பாதிக்குக் குறைவாகவே அவர்கள் பெற்றூர்கள்.

பிறகு நடைபெற்ற தேர்தல்களிலும் இக்குறையையே காண்கிரோம். எடுத்துக்காட்டாக, 1959இல் நடந்த தேர்தலில் அரசாங்கக் கட்சி (பழமை வாதிகள்) 1955இல் பெற்றதைவிட அதிக வாக்குகள் பெற்ற போதிலும், அதிகரித்த மொத்தத்தில் குறைந்த பங்கு தான் பெற்றது (1955இல் 49.4 சதவிகிதம்). 1959இல் நடந்த தேர்தலில் ஆளும் கட்சியினர் மொத்த வாக்குகளில் பாதிக்குக் குறைவாகவே பெற்ற போதிலும், மக்கள் சபையில் அவர்களுடைய பெரும்பான்மை, 60 இடங்களிலிருந்து (1955இல்),100 இடங்களாய் (1959இல்) உயர்ந்தது. மேலும், 1959ஆம் ஆண்டுத் தேர்தலில் பாராளுமன்ற உறுப்பினர் 80 பேர் (47 பேர் பழமை வாதிகள், 31 பேர் தொழிற்கட்சியினர், இருவர் முற்போக்கு வாதிகள்) தம்மை எதிர்த்த இருவர் அல்லது இருவர்க்கு மேற்பட்ட வேட்பாளர்கள் பெற்ற வாக்குகளைவிடக் குறைந்த வாக்குகளைப் பெற்ற போதிலும், தேர்ந்தெடுக்கப்பட்டனர். அதாவது, அத்தேர்தலின் விளைவாக, அந்த 80 தொகுதிகளில் வாக்களித்த சிறுபான்மையினருக்கே பிரதிநிதித்துவம் கிடைத்தது. இறுதியாக, மொத்த வாக்குகளாகிய 28,000,000 வாக்குகளில், தோல்வியடைந்த வேட்பாளர்கள் 12,000,000 வாக்குகளைப் பெற்றுர்கள். அந்த 12,000,000 வாக்காளர்களும் மக்கள் சபையினை அமைப்பதில் யாதொரு பங்கும் பெறவில்லை.[1]

கனடாவிலும், நியூஜீலந்திலும் இதைப் போலவே நடைபெற்றுள்ளது. எடுத்துக்காட்டாகக் கனடாவில் 1949இல் நடந்த பொதுத் தேர்தலில் முற்போக்கு வாதிகள் மொத்த வாக்குகளில் 50 சதவிகிதம் பெற்ற போதிலும், 73·5 சதவிகித இடங்களைப் பெற்றுர்கள். பழமை வாதிகள் 30 சதவிகித வாக்குகள் பெற்ற போதிலும், 15·5 சதவிகித இடங்களையே பெற்றுர்கள். 1958இல் நிலைமை மாறியது. பழமை வாதிகள் 54 சதவிகித வாக்குகளையும் 79 சதவிகித இடங்களையும், முற்போக்கு வாதிகள் 34 சதவிகித வாக்குகளையும் 18 சதவிகித இடங்களையும் பெற்றுர்கள். நியூஜீலந்தில் இரண்டாவது உலகப் போருக்குப்பிறகு நிகழ்ந்த பொதுத்தேர்தலில் 99 சதவிகித வாக்குகளை இரு பெரிய கட்சிகள் பெற்றன. அவற்றுள் ஒன்றுகிய தேசீய வாதக்கட்சி, 54 சதவிகித வாக்குகளையே பெற்ற போதிலும், 63 சதவிகித இடங்களைப் பெற்றது.[2]

---

1. இலண்டனிலுள்ள தேர்தல் சீர்திருத்தச் சங்க வெளியீட்டிலிருந்து மேற்கண்ட குறிப்புகளை எடுத்திருக்கின்றோம்.

2. லேக்மனும் லாம்பர்ட்டும் (Lakeman and Lambert) எழுதிய 'Voting in Democracies' என்னும் நூலில் மேற்கண்ட குறிப்புகளைக் காணலாம்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இரண்டு ஆண்டுக்கு ஒரு முறை நிகழும் காங்கிரஸ் தேர்தல்களில், வாக்குகளுக்கும் இடங்களுக்கும் இடையே காணப்பெறும் முரண்பாடுகள், பிரிட்டனில் அதே முறைப்படி நடக்கும் மக்கள் சபைத் தேர்தல்களில் காணப்படுவது போல அவ்வளவு அதிகமாக இருப்பதில்லை. ஆயினும், இரு நாடுகளிலும் நடைபெறும் தேர்தல்களில் பொதுவானதோர் இயல்பைக் காணலாம். அதாவது, சில பகுதிகளிலுள்ள தொகுதிகளில் ஒரு போதும் கட்சிப் பற்று மாருத பெரும்பான்மை வாக்காளர் இருக்கின்றனர். அந்த வாக்காளர் ஒவ்வொரு பாராளுமன்றம் அல்லது காங்கிரஸ் தேர்தலிலும் வெற்றி பெறுகின்றனர். இவ்வாறு அவர்கள் பெருநிலப்பகுதிகளில் மற்ற வாக்காளர்கள் சட்ட மன்றத்தில் பிரதிநிதித்துவம் பெறுவதை இடைவிடாது தடுத்து வருகின்ருர்கள். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தேர்தல் முறையின் இவ்விளைவை நன்கு காணலாம். அங்குத் 'திண்மையான தெற்குப் பகுதி' ஜனநாயகக் கட்சியின் அரணாய் அமைந்துள்ளது. அதே போல வடக்குப் பகுதியிலும் குடியரசுக் கட்சிக்குப் பேராதரவு அளிக்கும் பெரும்பகுதிகள் இருக்கின்றன.

இரு நாடுகளிலுமுள்ள எல்லாக் கட்சிகளுக்கும் இம்முறையின் தீமைகள் நன்கு தெரியும். ஆனல், இவற்றை எப்படி நீக்குவது என்பதுதான் பெரும்பிரச்சினையாய் இருக்கிறது. இதை ஆராய 1909-10இல் இங்கிலாந்தில் ஒரு தேர்தல் சீர்திருத்த அரச ஆணைக் குழு (Royal Commission on Electoral Reform) அமைக்கப்பட்டது. ஆனல், அது அறிவுறுத்திய ஒரே நல்ல கருத்தும் நிறைவேறவில்லை. பிறகு 1916-17இல் மக்கள் சபைத் தலைவர் மாநாடு நடைபெற்றது. ஆனல், அதன் கருத்துகள் ஒதுக்கி வைக்கப்பட்டன. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் பெரிய செல்வாக்குள்ள சங்கம் ஒன்று, இம் முரண்பாடுகளை நீக்க முயற்சி செய்துள்ளது. ஆனல், அரசாங்கம் அதன் முயற்சிகளை ஆதரிக்கவோ அல்லது ஏற்கவோ இல்லை. வழக்கமாக விகிதப் பிரதிநிதித்துவம் (Proportional Representation) என்று வழங்கப்படும் முறையையே எல்லாரும் சிறந்த சீர்திருத்த முறை எனப் பொதுவாகக் கூறுகின்றனர். ஆகவே, இதைப்பற்றி விரிவாகப் பார்க்க வேண்டும்.

## 5. உறுப்பினர் பலர் தொகுதி

விகிதப் பிரதிநிதித்துவம் என வழங்கும் தேர்தல் முறையைப் பல அரசுகள் இப்போதுள்ள தமது அரசியல் முறைகளில் இணைத்து விட்டன; அல்லது புதிய அரசியலமைப்பின் முக்கியப் பகுதியாக்கி விட்டன. ஆனல், இச்சொல்லிலிருந்து நாம் அதிகமாக ஒன்றும்

தெரிந்துகொள்வதில்லை. ஏனெனில், அதில் பல்வேறு வகைகள் உள்ளன. எத்தனை அரசுகள் அதை ஏற்றுக்கொண்டனவோ, அத்தனை வேறுபாடுகள் அதில் இருக்கின்றன. கொள்கை முறைப் படி பார்த்தால், இன்னும் அதிக வேறுபாடுகளைக் காணலாம். பல திறப்பட்ட இவற்றிலெல்லாம் ஒரு பொதுவான தன்மை உண்டு. அது வாக்களிக்கும் இம்முறைக்கு இன்றியமையாத இயல்பாகும். அதாவது, ஒற்றை உறுப்பினர் தொகுதியின் அடிப்படையில் விகிதப் பிரதிநிதித்துவத்தின் எம்முறையும் செயலாற்ற இயலாது. விகிதப் பிரதிநிதித்துவ [1] முறையைப் பின் பற்றும் எந்தத் தொகுதியிலும் பொதுவாக மக்கள் நினைப்பது போலப் பெரும்பான்மை வாக்குகளைப் பெறுவது வேட்பாளரின் நோக்கமன்று. ஆனால், அவர் ஒரு வீதப் பங்கைப் (Quota) பெற வேண்டும். அதாவது, அளிக்கப்பட்ட மொத்த வாக்குகளின் எண்ணிக்கையை நிரப்ப வேண்டிய இடங் களின் எண்ணிக்கையால் வகுத்தால், வரும் ஈவுக்கு இணையான எண்ணிக்கையுள்ள வாக்குகளைப் பெற வேண்டும்.

இதன் மிக எளிதான முறையைப் பிரெஞ்சு நாட்டவர் 'பொதுச் சீட்டு' (Scrutin de Liste) என்பர். [அமெரிக்காவில் ஒற்றை உறுப் பினர் தொகுதிகளில் 'சீட்டு முறைப்படி வாக்களித்தல்' (Voting by Ticket) நடைபெறுகிறதென்பதை ஏற்கெனவே பார்த்தோம். அதற் கும் 'பொதுச்சீட்டு'க்கும் வேறுபாடுண்டு என்பதை மறத்தலாகாது]. 1919-ஆம் ஆண்டு பிரான்ஸில் புதிய தேர்தல் சட்டம் நிறைவேறியது. அதன்படி 'டிபார்ட்மென்டு' என்ற ஆட்சிப் பிரிவுத் தேர்தல் தொகுதி யானது, அதற்கு முன்னால் 'அராண்டீஸ்மான்' என்ற ஆட்சி உட் பிரிவுத் தேர்தல் தொகுதியாய் இருந்தது, அது ஒற்றை உறுப்பினர் தொகுதி, புதிய சட்டத்தின்படி 'டிபார்ட்மென்டி'லிருந்த எல்லா வாக்காளர்களும் அதிலிருந்த இடங்களின் எண்ணிக்கைக்கேற்பப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தார்கள். (இந்த எண்ணிக்கை 'அராண் டீஸ்மானி'லிருந்த எண்ணிக்கைக்குச் சமமானது). வேட்பாளர்கள் தனியாகவும் போட்டியிடலாம்; அல்லது மொத்த இடங்களின் எண்ணிக்கைக்குச் சமமான எண்ணிக்கை வரை ஒன்று சேர்ந்து தங்கள் பெயர்களை ஒரு பட்டியலில் அல்லது சீட்டில் பதிவு செய்து போட்டியிடலாம். பெரும்பாலும் அத்தகைய பட்டியல் வாயிலாகவே வேட்பாளர்கள் போட்டியிட்டார்கள். பெரும்பான்மை வாக்குகளைப் பெற்ற எந்த வேட்பாளரும் வெற்றி பெறுவார். சாதாரண வாக்கா ளர், பட்டியல் முழுவதற்கும் மொத்தமாக வாக்களிப்பது வழக்கமாய்

---

1. ஆங்கிலத்தில் விகிதப் பிரதிநிதித்துவத்தை P.R. எனச் சுருக்கமாகக் குறிப்பிடுவது வழக்கம். அம்முறையையே நூலாசிரி யரும் பின்பற்றியிருக்கிறார். [ஆனால், தமிழாக்கத்தில் விகிதப் பிரதி நிதித்துவம் என்ற முழுத்தொடரையும் பயன்படுத்தியிருக்கிறோம்].

இருந்ததால், பொதுவாக வலிமை மிக்க கட்சி 'டிபார்ட்மென்டு' முழுவதிலும் வெற்றி பெற்று வந்தது. அதுவரை பிரெஞ்சு முறை சிறுபான்மையினரின் பிரதிநிதித்துவத்திற்காக ஒன்றும் செய்யவில்லை.

ஆனால், 1919ஆம் ஆண்டின் சட்டப்படி, முழுமையான பெரும்பான்மை கிட்டவில்லையென்றால், வீதப் பங்கைப் பெற்ற வேட்பாளர்களுக்கு இடங்களைப் பகிர்ந்து கொடுத்தனர். (வீதப் பங்கென்பது வாக்குகளின் எண்ணிக்கையால் வகுத்த ஈவு.) ('சராசரி'யில் வீதப் பங்கு எத்தனை தடவை அடங்கியிருக்கிறதோ, அதற்கேற்ப ஒவ்வொரு பட்டியலும் பங்கு பெறும். 'சராசரி' என்பது பட்டியலிலுள்ள எல்லா வேட்பாளர்களும் பெற்ற மொத்த வாக்குகளின் எண்ணிக்கையால் வகுத்த ஈவு.) எடுத்துக்காட்டாக, ஒரு 'டிபார்ட்மென்டி'ல் 450,000 பேர் வாழ்கின்றனர் என்றும், அவருள் 100,000 பேர் வாக்காளர்களென்றும் வைத்துக்கொள்வோம். அவர்களுள் 78,000 பேர் வாக்களித்திருக்கின்றனர். தொகுதியில் உறுப்பினர் அறுவர் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அப்படியானால், வீதப்பங்கைக்காண 78,000ஐ ஆறால் வகுக்க வேண்டும். அதாவது, 13,000: ஒவ்வொரு கட்சியும் ஈவுக்குத்தக்க இடங்களைப் பெறுகின்றது. உதாரணமாக, 40,000 வாக்குகளைப் பெறும் கட்சி மூன்று இடங்களையும், 30,000 பெறும் கட்சி இரண்டு இடங்களையும் பெறும். மீதி இருக்கும் இடங்களை மிக அதிகச் சராசரி பெற்ற கட்சி பெறும்.

1919ஆம் ஆண்டின் முறை வெற்றி பெறவில்லை. ஆகவே, 1927 ஜூலைத் திங்களில் பிரான்ஸ் ஒற்றை உறுப்பினர் தொகுதி முறையை (Scrutin de Arrondissement) திரும்பக் கொண்டு வந்தது. ஆயினும், 1946இல் குடியொப்பத்திற்குச் சமர்ப்பிக்கப்பட்ட அரசியலமைப்பைத் தீட்டிய சபைக்குத் தேர்தல் நடந்த போது, ஒருவகைப் பட்டியல் முறை (Scrutin de Liste) புதுப்பிக்கப்பட்டது. அதன்படி மூன்று முக்கியக் கட்சிகளுக்கும் (சமதர்ம வாதிகள், பொதுவுடைமை வாதிகள், கிறிஸ்தவ ஜனநாயக வாதிகள்) விகிதப் பிரதிநிதித்துவம் வழங்குவதற்காக, மக்கள் தங்கள் வேட்பாளருக்குப் பிரிவு பிரிவாக வாக்களிக்கும் முறை புகுத்தப்பட்டது.

1951ஆம் ஆண்டு ஜூன் திங்களில் நடைபெற்ற பொதுத்தேர்தலில் இதைவிடச் சிக்கலான முறையைப் பயன்படுத்தினர். தீவிர இடசாரிக் கட்சியும், தீவிர வலசாரிக் கட்சியும் அதிகாரத்தைக் கைப்பற்றுதவாறு தடுப்பதற்காக அம்முறை வகுக்கப்பட்டது. பாரிஸ் பகுதியில் மட்டும் நேரான விகிதப் பிரதிநிதித்துவ முறை நிலவியது. மற்ற இடங்களில் எல்லாம் புதிய சட்டம் கட்சிகள் ஒன்று சேர்வதை அனுமதித்தது. உறுப்பினர் பலர் தொகுதியில்

எந்தக் கட்சியும் 51 சதவிகித வாக்குகளைப் பெறவில்லையெனில், கட்சிகள் தங்களுள் ஓர் ஐக்கியத்தை ஏற்படுத்திக்கொள்ளலாம். அப்போது ஐக்கியம் பெரும்பான்மை வாக்குகளைப் பெற்றால், எல்லா இடங்களையும் மற்றவர்களுக்குக் கொடாமல், தானே எடுத்துக் கொள்ளலாம். ஐக்கியத்தை அமைத்த கட்சிகள் இடங்களைத் தங்களுள் விகிதப்படி பகிர்ந்துகொள்ளும். எக்கட்சியும் அல்லது எந்த ஐக்கியமும் பெரும்பான்மையைப் பெறவில்லையென்றால், சாதாரண விகிதப் பிரதிநிதித்துவ முறைப்படி இடங்கள் பகிர்ந்துகொள்ளப் படும். பிரான்ஸில் ஐந்தாவது குடியரசில் ஒற்றை உறுப்பினர் தொகுதிகள் மீண்டும் நிறுவப்பட்டன.

விகிதப் பிரதிநிதித்துவம் எனப் பொதுவாக வழங்கப்படும் இம் முறை, ஒற்றை மாற்று வாக்கு (Single transferable vote) எனும் முறையைப் பயன்படுத்துகிறது. இதைப் பெரும்பாலும் 'ஹேர் முறை' (Hare System) என்கிறோம். ஏனெனில், தாமஸ் ஹேர் என்ற ஆங்கிலேயர் அதை முதன்முதலில் (1857) 'The Machinery of Representation' என்ற தமது சிறு நூலில் குறிப்பிட்டார். பிறகு வெளியான 'The Election of Representatives' (1859) என்ற கட்டுரையில் அதை அவர் விரிவாக விளக்கினார். ஜான் ஸ்டுவர்ட்டு மில் என்பவர் அதைத் தமது 'Representative Government' (1859) என்ற நூலில் ஆதரித்தார். பிறகு வந்த சீர் திருத்த வாதிகள் அதைச் சிறிது மாற்றினார்கள். உறுப்பினர் பலர் தொகுதி என்னும் கொள்கையை நன்றாகப் புரிந்துகொண்டால், இக் கருத்தை எளிதில் கண்டுகொள்ளலாம். நான்கு ஒற்றை உறுப்பினர் தொகுதிகளை ஒரே தொகுதியாகச் சேர்ப்பதாக வைத்துக்கொள் வோம். அப்போது வேட்பாளர் முழுமையான பெரும்பான்மை வாக்கு களைப் பெறத் தேவையில்லை. அதற்குப் பதிலாக வீதப்பங்கைப் பெறுவது போதும். வீதப் பங்கென்பது, வாக்குகளின் தொகையை நிரப்பவேண்டிய இடங்களின் எண்ணிக்கையால் வகுத்த ஈவு. வாக் காளர் தமது விருப்ப வரிசையை வாக்குச் சீட்டில் குறிப்பிடுகிறார். அவருக்கு ஒரு வாக்கு மட்டும் உண்டு. தாம் மிக விரும்பும் வேட் பாளரைத் தவிர, அவருக்கு அடுத்தபடியாகத் தாம் தெரிந்தெடுக்க விரும்புபவரைக் குறிக்க அவரது பெயருக்கு எதிரில் ஓர் எண்ணைக் குறிக்க வேண்டும். இவ்வாறு அத்தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப் படும் உறுப்பினர் அனைவரையும் வரிசைப்படி குறித்துக் காட்டலாம். வேட்பாளர் பதின்மரும் நான்கு இடங்களும் இருப்பதாக வைத்துக்கொள்வோம். வாக்காளர் நான்கு பெயர்களுக்கு எதிரில் 1, 2, 3, 4 என்ற எண்களைக் குறித்து, தமது விருப்ப வரிசையைக் காட்டலாம். போதுமான வேட்பாளர்கள் விதப் பங்கைப் பெறாத காரணத்தினால் எல்லா இடங்களும் நிரப்பப்படவில்லையென்றால்,

ஏற்கெனவே வெற்றி பெற்ற வேட்பாளர்களுக்கு வாக்களித்தவர்களின் இரண்டாவது விருப்ப வாக்குகளையும் கூட்டி இடங்களை நிரப்பலாம். ஏனெனில், வெற்றி பெற்றவர்களுக்கு அவ்வாக்குகள் தேவையில்லை. இவ்வாறு எல்லா இடங்களையும் நிரப்பும் வரையில் மூன்றாவது, நான்காவது என விருப்ப வரிசைகளைக் கூட்டிக்கொண்டே போவார்கள். ஆனால், வாக்குகளை வேறு வகையிலும் மாற்றலாம். வெற்றி பெற்ற வேட்பாளர் அல்லது வேட்பாளர்களின் மிகுதியான வாக்குகளை மாற்றிய பிறகும், போதுமான வேட்பாளர்கள் வீதப் பங்கைப் பெறவில்லையானால், மிகக் குறைந்த வாக்குகளைப் பெற்ற வேட்பாளர் (தேவையானால் ஒருவருக்கு மேற்பட்ட வேட்பாளர்) தள்ளப்படுவர். அவருடைய அல்லது அவர்களுடைய வாக்குகளை விருப்ப வரிசைப்படி மற்றவர்களுக்கு மாற்றுகின்றனர். ஆகவே, வாக்காளர் முதலில் விரும்புகிறவர் தோல்வியடைந்தாலும், இரண்டாவது, மூன்றாவது, நான்காவது வரிசையிலிருப்பவர்கள் வெற்றி பெற வாய்ப்பு இருக்கிறது.

அண்மையில், பல நாடுகள் விகிதப் பிரதிநிதித்துவ முறையை ஏதாவது ஒரு வகையில் பயன்படுத்தி வருகின்றன. தாமஸ் ஹேர், நாடு முழுவதையுமே ஒரு பெரிய தொகுதியாக மாற்றியிருப்பார். ஆனால், நடைமுறையில் இது பயன் தாராது எனக் கண்டதால், பல நாடுகள் இவ்வாறு செய்ய மறுத்தன. இத்தாலியில் முசோலினியின் தேர்தற்சட்டங்களில் இக்கொள்கை ஓரளவு பயன்பட்டது. அவற்றை ஏற்படுத்தியவர்கள் கட்சிகளுக்கு விகிதப் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டும் என்று எண்ணவில்லை. இம்முறையை ஏற்றுக்கொண்ட ஆங்கிலம் பேசும் நாடுகளில் நடைபெறும் தேர்தல்களில், பொதுவாக ஒற்றை மாற்று வாக்குப் பயன்படுகிறது. பல ஐரோப்பிய நாடுகளில் ஏதாவதொரு சீட்டு முறை வாக்கெடுப்பு நடைபெறுகிறது. இதில் வேட்பாளர்களின் பெயர்கள் பட்டியலில் தரப்படுகின்றன. பெரும்பான்மைத் தேர்தலைத் தடுக்கப் பல பாதுகாப்புகள் இருக்கின்றன. கிரேட் பிரிட்டனில் 1918இலிருந்து சில பல்கலைக் கழகங்களில் பாராளு மன்ற உறுப்பினரைத் தேர்ந்தெடுக்க ஒற்றை மாற்று வாக்கைப் பயன்படுத்தினர். 1948ஆம் ஆண்டின் மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் பல்கலைக் கழகத்தின் பிரதிநிதித்துவத்தை நீக்கும் வரை இது நடைபெற்று வந்தது. ஆங்கில மதச் சபையின் தேசீய அவைக்கும் வட அயர்லாந்தின் செனட்டிற்கும் நடைபெறும் தேர்தல்களில் இம்முறையைப் பயன்படுத்துகின்றனர். பிரிட்டிஷ் பொதுநலக் கூட்டு நாடுகளில், ஆஸ்திரேலியாவில் பொதுநலக்கூட்டின் செனட்டிற்கும், நியூஸௌத்வேல்ஸில் மேல் சபைக்கும், டாஸ்மேனியாவில் கீழ்ச்சபைக்கும், இந்தியக் குடியரசில் தேர்தல் குழுக்களில் (Electoral Colleges) நடைபெறும் பற்பல தேர்தல்களுக்கும்

ஒற்றை 'மாற்று வாக்கு முறை பயன்படுகின்றது. இம்முறை அயர்லாந்துக் குடியரசில் பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்கும் தென்னாப்பிரிக்காவில் செனட்டிற்கும் நடக்கும் தேர்தல்களில் பயன் படுகின்றது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் ஒரு சில நகரங்களில் மட்டும் விகிதப் பிரதிநிதித்துவ முறை பயன்படுவதைக் காணலாம். அவற்றில் பெரும்பாலும் இம்முறை சில ஆண்டுகளுக்குப் பிறகு கைவிடப்பட்டது. இதற்கு எடுத்துக்காட்டாக நியூயார்க்கு நகரைக் கூறலாம். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் ஐந்து நகரசபைகளின் தேர்தல்களுக்கு இன்னும் இம்முறை பயன்படுகின்றது.

ஐரோப்பாவின் மேற்கு,வடக்குப் பகுதிகளிலுள்ள அரசியலமைப் புக்குட்பட்ட அரசுகளில் பல, விகிதப் பிரதிநிதித்துவ முறையில் ஏதாவதொரு வகையைப் பயன்படுத்துகின்றன. அவற்றுள் சில, இம்முறையை 19ஆம் நூற்றுண்டிலே பின் பற்றத் தொடங்கின. முதல் உலகப் போருக்குப் பிறகு புதியனவாய்த் தோன்றிய அரசுகள் இதைத் தங்கள் அரசியலமைப்பில் இணைத்தன. இன்று இது பெல்ஜியத்தில் பிரதிநிதிகளின் சபைத் தேர்தலுக்கும் நேர்முகமாகத் தேர்ந்தெடுக்கப்படும் செனட்டுத் தேர்தலுக்கும் பயன்படுகிறது. டென்மார்க்கில் ஒரு சபையையுடைய பாராளுமன்றத்திற்கும் (Folke-ting),நார்வேயில் (தன் உறுப்பினர்களுள் காற்பகுதியினரைத் தேர்ந் தெடுத்து மேல் சபையை அமைக்கும்) கீழ்ச்சபைக்கும், ஸ்வீடனி லும் நெதர்லாந்திலும் இரு சபைகளுக்கும், பின்லாந்தில் ஒரு சபை யையுடைய பாராளுமன்றத்திற்கும் நடைபெறும் தேர்தல்களில் இம் முறையைப் பயன்படுத்துகின்றனர். இத்தாலியில் குடியரசு அரசியல் அமைப்பின்படி பிரதிநிதிகளின் சபைத் தேர்தலுக்கு இம்முறை பயன்படுகின்றது. கூட்டாட்சி அரசுகளில் சுவிட்ஸர்லாந்து, தேசிய அவைத் தேர்தலுக்கும் பல கோட்டங்களின் அவைத் தேர்தல் களுக்கும் ஒருவகை விகிதப் பிரதிநிதித்துவ முறையைக் கையாளு கின்றது. மேற்கு ஜெர்மனியில் 1949இன் அடிப்படைச் சட்டத்தின் படி கூட்டாட்சியில் கீழ்ச்சபையாகிய 'புந்தஸ்டாக்' அவைக்கும், மாநிலங்களில் சட்டமன்றங்களுக்கும் நடைபெறும் தேர்தல்களில் இம்முறை பயன்படுகின்றது.

இங்கு இதுபோன்ற இன்னொரு முறையையும் குறிப்பிடவேண்டும். அதாவது, இரண்டாவது வாக்கெடுப்பு. இது முழுமையான பெரும் பான்மையைப் பெற ஒரு வழியாகும். தேர்தல்களில் வேட்பாளர் பலர் போட்டியிடுவதால், அதில் போட்டியிடும் அரசியற்பிரிவுகள் பெருகுவதற்கு வழியேற்படுகிறது. இதனால், ஒற்றை உறுப்பினர் தொகுதியில் பழைய முறையான இருவர் போட்டிக்குப் பதிலாக மூவர், நால்வர், ஐவர், சிலவேளை அறுவர் வேட்பாளர் போட்டியிடு வதையும் காணலாம். இதன் விளைவாகச் சில அரசுகளில் ஒருவரும்

முழுமையான பெரும்பான்மை வாக்குகளைப் பெருவிட்டால், இரண்டாவது தேர்தல் நடைபெறுகிறது. பொதுவாக, இது முதல் வாக்கெடுப்பில் மிக அதிகமான வாக்குகளைப் பெற்ற இரு வேட்பாளர்களுக்கிடையே நடைபெறுகிறது. எடுத்துக்காட்டாக, பிரான்ஸ் ஒற்றை உறுப்பினர் தொகுதி முறையைப் பயன்படுத்திய போதெல்லாம், இரண்டாவது வாக்கெடுப்பு முறையையும் பயன்படுத்தியிருக்கின்றது. ஆனால், மாற்று வாக்கினல் பெற இயலாத எதையும் இரண்டாவது வாக்கினல் பெற இயலாது. உண்மையில், வசதிக் குறைவான இரண்டாவது வாக்கெடுப்பை நடத்தாமலே அதன் பயன்களைப் பெறும் தேர்தல் முறைகளும் இருக்கின்றன. இதைப் பொதுவாக விருப்ப வரிசை வாக்களிப்பு (Preferential voting) என்கிறோம். இம்முறையில் வாக்காளர் தமது இரண்டாவது விருப்பத்தையும் வாக்குச் சீட்டில் குறிப்பிடுகிறார். முதல் எண்ணிக்கையில் எந்த வேட்பாளரும் முழுமையான பெரும்பான்மை வாக்குகள் பெருமலும், வாக்காளரின் விருப்ப வரிசையில் முதலிடம் பெற்றவர் அதிக வாக்குகளைப் பெற்ற இருவருள் ஒருவராக இல்லாத போதும், வாக்காளரின் இரண்டாவது விருப்பம் பயன்படுகிறது. ஆஸ்திரேலியாவில் இம்முறையைப் பொது நலக் கூட்டுத் தேர்தல்களுக்கும் சில தனி மாநிலங்களின் தேர்தல்களுக்கும் பயன்படுத்துகின்றனர்.

கிரேட் பிரிட்டனில் விகிதப் பிரதிநிதித்துவ முறையை ஆதரித்தவர்களின் முயற்சிகளையெல்லாம் ஒருமுகப்படுத்த அரசாங்க ஆணைக் குழுக்களில் இரு பெருமுயற்சிகள் நடைபெற்றன. முதலில் 1909-10 இல் கூடிய அரச ஆணைக்குழு, தெளிவான ஒரு தனிப் பரிந்துரை கூறியது. அதன்படி வாக்குத் தாளில் மற்றொருவரின் பெயரையும் குறிப்பிட வேண்டும். மாற்று வாக்கினல் ஏற்படும் பயனைப் பெறுவது இதன் நோக்கமன்று; ஆனல், இரண்டாவது வாக்கெடுப்பின் பயனை—அதாவது முழுமையான பெரும்பான்மையைப்—பெறுவது இதன் நோக்கமாகும். இது எவ்வாறு ஆஸ்திரேலியாவில் நடைபெறுகிறதென்பதை ஏற்கெனவே பார்த்தோம். ஆனல், இம்முறையும் இறந்தே பிறந்தது. இரண்டாவது முயற்சியாகிய மக்கள் சபைத் தலைவரின் மாநாடு (1916-17) மாற்று வாக்குக் கொள்கையைப் பயன்படுத்துமாறு அறிவுரை கூறியது. இதை மக்கள் சபையின் மூன்றில் ஒரு பகுதி இடங்களுக்கு ஆய்வு முறைபோல ஓரளவு செய்து பார்க்குமாறு கூறியது. பாராளுமன்றம் இதையும் ஏற்க மறுத்தது, மேலே நாம் பார்த்தது போல, ஆங்கில மதச் சபையின் தேசீய அவை, வட அயர்லாந்து பாராளுமன்றம் இவற்றின் தேர்தல்களில் பயன்படும் மாற்று வாக்கு முறைதான் இங்கிலாந்தில் (1948ஆம் ஆண்டுச் சட்டம் பல்கலைக் கழகப் பிரதிநிதித்துவத்தை அழித்ததற்குப் பிறகு) இன்று நிலவும் விகிதப் பிரதிநிதித்துவ முறையின் ஒரே அடையாளமாகும்.

# 6. விகிதப் பிரதிநிதித்துவத்தின் கொள்கையும் நடைமுறையும்

விகிதப் பிரதிநிதித்துவ முறையில் நன்மைகளும் தீமைகளும் உள்ளன. கொள்கை முறைப்படி பார்த்தால், நன்மைகளே அதிகம்; ஆனால், நடைமுறையில் அவை குறைவு. உண்மையான விகிதப் பிரதிநிதித்துவ முறையினால் விளையக் கூடிய எல்லா நன்மைகளும் கொள்கையிலும் நடைமுறையிலும் நடைபெறுகின்றன என்று சொல்ல இயலாது. அது சிறு பான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் பெற்றுத் தருகிறதென்பதும், நாம் பார்த்தது போல, சாதாரணப் பெரும் பான்மைப் பிரதிநிதித்துவத்தின் குறைகளை நீக்குகிறதென்பதும் உண்மைதான். இது காரணமாகவே இம்முறையைப் பல அரசிய லமைப்புக்குட்பட்ட அரசுகள் அண்மையில் அதிகமாக ஆதரித்து வருகின்றன. ஆனால், இதை ஏற்றுக்கொண்ட அரசுகளுள் பல, பெரும்பாலும் இதற்கு வெறும்புகழுரை மட்டும் தருகின்றன, குறிப்பாக பிரான்ஸில் இதை ஆதரிப்பவர்களின் எதிர்ப்பைத் தடுப்பதற்காகவே இதை அடிக்கடி ஏற்றுக்கொண்டுள்ளனர். முதல் உலகப் போரின் இறுதியில் சில அரசுகள் இதை ஏற்றுக்கொண்டன. ஆனால், நாட்டினத்தைச் சேராத சிறுபான்மையினரின் உரிமைகளைக் காக்கும் உடன்படிக்கை விதிகளுக்கு இணங்குவதற்காக அவ்வாறு செய்தனர்.

இதில் நடைமுறையில் காணப்படும் குறைகள் பல. அவற்றுள் சில முக்கியமானவையல்ல; சில மிகவும் முக்கியமானவை. விகிதப் பிரதிநிதித்துவ முறையினால் சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் கிட்டிய போதிலும், அது, ஒருவர் சொன்னது போல, 'சிறுபான்மை எண்ணத்தையும்' மாறுபடும் தேர்தல் நாட்டத்தையும் ஆதரிக்கிறது. இவை சமூக நலத்திற்குக் கேடு விளைக்கும். எடுத்துக்காட்டாக, பந்தயம் கட்டுதல், சமூக நலனுக்குக் கேடான வட்டித்தொழில் போன்ற தீச்செயல்களில் ஈடுபடுவோர் தொகுதி விரிவடைவது காரணமாக, தம் சார்புடைய பல கட்சிகளுடன் ஒன்று சேர்ந்து அவை வாயிலாகப் பிரதிநிதித்துவம் பெறக்கூடும். தேர்தல் தொகுதியை விரிவாக்குவதே ஒரு தீங்காகும். ஏனெனில், முதலாவது, அது வேட்பாளருக்கும் (அல்லது உறுப்பினருக்கும்) தொகுதிக்கும் இடையேயுள்ள நெருங்கிய தொடர்பைத் தவிர்க்க முடியாதவாறு துண்டிக்கிறது. இரண்டாவது, அது வேட்பாளர்களின் எண்ணிக்கையை மிகுதிப்படுத்துகிறது. இதனால், வாக்காளருக்குத் தமது விருப்ப வரிசையை எவ்வாறு குறிப்பிடுவது என்ற மயக்கம் ஏற்படுகிறது. (எடுத்துக்காட்டாக, இரண்டாவது உலகப்

போருக்கு முன் பெல்ஜியத்தில் மிகப்பெரிய தொகுதியில் 22 உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.) மூன்ருவது, மாற்று வாக்கு முறை வாக்காளர்களைத் தடுமாற வைக்கலாம். வாக்குகளை எண்ணும் முறை அவ்வளவு சிக்கலானதென்ருல், வாக்காளர் வாக்குகளை எண்ணும் அதிகாரிகளையே முழுவதும் நம்ப வேண்டிய நிலை ஏற்படுகிறது. ஆனல், அரசியல் வளர்ச்சி பெற்ற நாடுகளில் இது ஒரு சாதாரணக் குறைபாடாகவே இருக்கிறது. ஏனெனில், வாக்காளர்கள் அதிகாரிகளை நம்பக்கூடுமானல், இக்குறை நீங்கிவிடுகிறது. இதற்கு ஈடு செய்யும் நன்மை என்னவென்ருல், ஒற்றை மாற்று வாக்களிப்பதால் மக்கள் அரசியல் அறிவு பெறுவதே. ஏனெனில், வாக்காளர் தம் விருப்பங்களை வரிசையாகக் குறிக்கும் போது, ஆழ்ந்து சிந்திக்க வேண்டியிருக்கிறது. ஆனல், இரு வேட்பாளர்களுள் ஒருவரைத் தேர்ந்தெடுக்கும் போது சிந்திக்க வேண்டிய தேவையில்லை எனலாம்.

விகிதப் பிரதிநிதித்துவம் கட்சியின் உட்குழுவை (Party Caucuses) அழித்துவிடும் என்பது, அம்முறையை ஆதரிப்பவர்கள் கூறும் பழைய கொள்கை முறையான வாதம். ஆனல், நடைமுறையில் இது நிகழ்வதில்லை என்பது தெரிகிறது. அம்முறையில் கட்சி நிறுவனங்கள் மிக்க வலிமை பெற்றுள்ளன. தொகுதி எவ்வளவு விரிவடைகின்றதோ, அதற்கேற்ப ஊழல்கள் மலிகின்றன. இத்தாலியில் முசோலினியின் தேர்தற்சட்டங்களில் இவ்வுண்மை தெளிவாகத் தெரிந்தது. விகிதப் பிரதிநிதித்துவம் காரணமாக அரசாங்கம் உறுதியை இழக்கின்றது என்பது அம்முறைக்கெதிராகக் கூறப்படும் பெருங்குறைபாடாகும். ஒன்றையொன்று எதிர்க்கும் இரு பெரிய கட்சிகளைச் சட்டமன்றத்திற்குக் கொண்டு வருவதற்குப் பதிலாக, பல சிறிய கூட்டங்களை அங்குக் கொண்டு வருவதனல் அரசாங்கம் உறுதி இழக்க நேரிடுகிறது. இதனல், வலுவற்ற கூட்டு அரசாங்கங்களை அமைக்க வேண்டிய தேவை ஏற்படுகிறது. ஒரு பகுதியினர் மறுபகுதியினரின் கருத்துகளை மதிக்கவில்லையெனில், அவை வீழ்ச்சியுறுகின்றன. எடுத்துக்காட்டாக, பெல்ஜியத்தில் இரு போர்களுக்கிடையே விகிதப் பிரதிநிதித்துவமுறை அதன் எல்லா நுட்பங்களுடனும் செயலாற்றப்பட்டது. அதன் விளைவாக அரசியல் வல்லுநர்கள் அமைச்சரவையை மிக வருந்தி அமைக்க வேண்டியிருந்தது. ஏனெனில்,சடட மன்றத்தில் பல பிரிவுகள் இருந்தன. ஆகவே, அவை ஒன்று சேர்ந்து செயலாற்றுவது அரிதாய் இருந்தது.

அதற்கு மாருக அமைச்சரவையை அமைக்கும் போது பற்பல பிரதிநிதித்துவக் கருத்துகளையும் கலந்தாய்வது கெடுதலன்று. மேலும், அத்தகைய கூட்டு அமைச்சரவைகளுள் சில, நீண்ட நாள்

வாழும் பேராற்றல் பெற்றிருந்தன. குறிப்பாக, ஸ்வீடனில் போர் களுக்கிடையில் ஓர் அமைச்சரவை இரண்டு அல்லது மூன்று ஆண்டுகள் வரையிற் பதவியிலிருந்தது. விகிதப் பிரதிநிதித்துவத்தின் இவ்விளைவு, மாற்றங்கள் நிறைந்த நிலையிலுள்ள நாடுகளுக்கு இம் முறை ஏற்றதெனக் காட்டுகிறது, ஆயினும், அதனால் வெய்மார் குடியரசில் ஜெர்மானிய அரசெனும் மரக்கலம் நிலை குலையாது சென்று, பாதுகாப்பெனும் துறை சேரும் என்று நம்பினர். ஆனால், இறுதியில் அந்நம்பிக்கை நிறைவேறவில்லை.

விகிதப் பிரதிநிதித்துவம் நிலவும் இடங்களில் தவிர்க்க இயலாத சில உடனிகழ்ச்சிகளும் நடைபெறுகின்றன. அவ்வாறு நடைபெறு வது நன்மையா அல்லது தீமையா என நாம் இங்குப் பார்ப்பதில்லை. இம்முறையினால் பாராளுமன்றத்தில் பெரிய கட்சிகளும், ஒரே கட்சி அமைச்சரவையும் இருப்பதற்குப் பதிலாக, பலபிரிவுகளும் அவற்றின் விளைவான கூட்டு அமைச்சரவையும் ஏற்படுகின்றன. கிரேட் பிரிட் டனில் இம்முறையைப் பின்பற்றாததன் காரணம் இதுதான் என்பதில் ஐயமில்லை. அங்குக் கட்சி முறை ஆழ வேரூன்றி இருக்கிறது. ஆகவே, அது டிஸ்ரேலி ஒருமுறை கூறியது போல, 'கூட்டு அமைச்ச ரவையை வெறுக்கிறது.' விகிதப் பிரதிநிதித்துவ முறையைப் பயன் படுத்தாத உலகின் இரு பெருநாடுகளாகிய ஐக்கிய அரசிலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் மட்டும் இரு பெரிய கட்சிகள் ஒன்றையொன்று எதிர்த்து நிற்கும் மரபு நிலைபெற்று நிற்கின்றதென்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. அம்முறையை ஏற்றுக்கொண்டவை பொதுவாகப் பல பிரிவுகளின் கூட்டமைப்புகளின் மூலம் பாராளு மன்ற முறை அரசாங்கத்தை நடத்துகின்றன.

ஒரு வேளை, விகிதப் பிரதிநிதித்துவத்தை முற்றிலும் ஏற்றுக் கொண்டால், தேர்தல் முறையில் மாறுதல் ஏற்படுவது மட்டுமன்றி, கட்சி மரபிலே பெரும்பிளவு ஏற்பட்டுவிடுமென்ற அச்சந்தான் கிரேட் பிரிட்டன் அமெரிக்க ஐக்கிய நாடுகள் இவற்றின் சட்ட மன்றங்களை இம்முறையைப் புகுத்துவதற்கு இவ்வளவு காலம் தயங்கச் செய்தது போலும்!

## 7. பிரதிநிதித்துவ முறையைச் சார்ந்த சிக்கல்கள்

பிரதிநிதித்துவக் கொள்கையின் வளர்ச்சியினால் எழுந்த சிக்கல் கள் பல. முதலாவது, நாட்டு மக்களின் விருப்பத்தை எதிரொலிக் கும் அளவு எண்ணிக்கையுள்ள குடிகளுக்கு வாக்குரிமை அளிக்க வேண்டும். ஆனால், அனைவருக்கும் கட்டுப்பாடின்றி வாக்குரிமை அளிக்கும் கொள்கையைப் பின்பற்றாததால், பிரதிநிதித்துவ அரசாங்

கம் உண்மையான அரசாங்கமன்று எனக் கூறவியலுமா? மக்கள் அரசாங்கம் என்பது ஆள்களை எண்ணுவதில் அடங்கவில்லை எனக் கல்வியறிவுடையவர் பலர் கருதி வந்திருக்கின்றனர்; இன்றும், கருதியும் வருகின்றனர். 'சம வாக்களிப்பு என்ற கொள்கை தவறானது......அது பயனற்றது; உள்ளத்தைப் புண்படுத்த வல்லது. ஏனெனில், நாட்டின் அரசியலமைப்பு, அறிவுடையோருக்கு வழங்கும் அதே அரசியல் அதிகாரத்தை அறிவிலாருக்கும் வழங்குகிறது,' என்று ஜான் ஸ்டுவர்ட்டு மில், 1861 இல் கூறினர். அவரது கருத்தின்படி வாக்காளர் ஒவ்வொருவருக்கும் எழுதப் படிக்கத் தெரிவதுமல்லாமல், மூவிதிக்கு[1] ஏற்பக் கணிதமும் தெரிய வேண்டும். அனைவரும் வாக்குரிமை பெறுமுன் கல்வியறிவு பெறவேண்டும் என அவர் வலியுறுத்தினர். மேலும், எல்லா வாக்காளரும்—சிறு தொகையினராயினும்—நேர்முக வரி செலுத்த வேண்டும். இறுதியாக, வாக்களிப்பு மறைவானதாக இருத்தல் கூடாது. ஏனெனில், மறைவு வாக்களிப்பு வாக்குரிமையின் நோக்கத்திற்கே முரணானது. அந்நோக்கத்தின்படி வாக்காளர் பொதுமக்களின் பொறுப்பாளராவார். ஆகவே, அவர் செயல்களும் வெளிப்படையாகவே இருக்க வேண்டும்.

நாம் இந்த இயலில் கூறியது போல, ஸ்டுவர்ட்டு மில்லின் காலத்திலிருந்து சீர்திருத்தங்கள் அவர் காட்டிய கட்டுப்பாடுகளின் வழியே செல்லவில்லை; அதற்கு மாறாக, எதிர் வழியில் சென்றன. அதாவது, வாக்குரிமையை எல்லோருக்கும் நேர்முகமாகவும், சமமாகவும் வழங்கின; சொத்துரிமைத் தகுதியைக் குறைத்தன; அல்லது நீக்கின; மறைவு வாக்கெடுப்பைக் கொண்டுவந்தன; பதிவு செய்தலை எளிதாக்கின. பிரிட்டன், பிரிட்டிஷ் குடியேற்ற உரிமை நாடுகள், அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஸ்காண்டிநேவிய நாடுகள் ஆகிய முற்போக்கான நாடுகள் மில் கூறிய கல்வி சார்ந்த நிபந்தனைகளை நிறைவேற்றின என்பது உண்மைதான். ஆனால், பல அரசுகளில் குறிப்பாக இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு உருவான அரசுகளில் ஏராளமான மக்களுக்கு எழுதப்படிக்கத் தெரியாதிருந்த போதிலும், அவை வயது வந்தோர்க்கு வாக்குரிமை வழங்கியிருக்கின்றன. ஜனநாயகம் என்பது அரசாங்க முறை மட்டுமன்று; ஒரு சமூக நிலையுங்கூட. ஜனநாயகம் இதை வலியுறுத்துகிறது. ஜனநாயகத்தை அரசாங்க முறையாக மட்டும் கருதுபவர்கள், அதற்குப் பிரதிநிதித்துவக் கொள்கை இன்றியமையாததெனக் கருதுகின்றனர்கள். அதன் அமைப்பைவிடக் கொள்கையையே முக்கியமாகக் கருதுபவர்கள், ஜனநாயகக் கருத்துகள் கட்டுப்பாடின்றிச் செயற்படுவதை

1. படித்தல், எழுதுதல், கணிதம் இம்மூன்றும் தெரியவேண்டும் என்பதை ஆங்கிலேயர் மூவிதி (Rule of Three) என்பர்.

அரசாங்க முறை தடுக்கவில்லையென்றால், அதை மிக முக்கியமான தாகக் கருதுவதில்லை. ஆனால், முழுப் பிரதிநிதித்துவ அரசாங்க அமைப்பின்றி அக்கருத்துகள் கட்டுப்பாடின்றிச் செயற்பட இயலுமா? நாம் மேலே குறிப்பிட்ட இக்கால அரசுகளுள் சிலவற்றில், அனைவருக்கும் சம வாக்குரிமை அளிக்கும் முறையை நிறுவுவதற்கு முன், பண்பாடு, உறுதி நிலை ஆகியவற்றிற்கு ஏற்ற சூழ்நிலை ஏற்படும் வரை மக்கள் காத்திருக்க வேண்டுமென்றால், ஒன்றின் தொடக்க நலன்களையும், மற்றொன்றின் இறுதிப் பயன்களையும் பெற இயலாது என்பதை அவர்கள் நன்றாகத் தெரிந்துகொள்வார்கள்.

வாக்குரிமை சார்ந்த மற்றொரு சிக்கல் என்னவென்றால், பிரதிநிதியின் பதவிக்குப்போட்டியிடத் திறமையும்நேர்மையுமுள்ளவேட்பாளர்களைத் தெரிந்தெடுத்தல். அவ்வேலைக்குத் தக்க திறமையுள்ளவர்களைத் தெரிந்தெடுக்கும் வழிகளைக் கண்டுபிடிக்கவில்லையெனில், எந்த வாக்குரிமை முறையும் பயன்படாது. அது பெரும்பாலும் கல்வியறிவில்லாத மக்களிடையே நிறுவப்பட்டதாயினும், அல்லது உயர்ந்த பண்பாடுள்ள நாட்டில் வளர்ச்சியுற்றதாயினும் ஒரு போதும் பயன் தாராது. பிரதிநிதித்துவ முறையில் பிரதிநிதி பொதுமக்களின் சேவைக்காகத் தன்னை அர்ப்பணிக்க வேண்டும். இதைச் சாதாரணக் குடியிடம் நாம் காண்பதில்லை. இதன்படி, பாராளுமன்ற வேட்பாளர் அதற்கென ஊதியம் பெற்றாலும், பெறுவிடினும், அரசியலையே தொழிலாகக் கொண்டிருக்க வேண்டும். ஆகவே, அவருக்கு ஊதியம் அளிப்பது நலம். அரசியல் முதன்மைக்குட்பட்ட இன்றைய அரசுகளுள் ஒவ்வொன்றும் சட்டமியற்றுவோருக்கு ஊதியம் வழங்கும் முறையை வகுத்துள்ளது. இதனால் சிறந்த பிரதிநிதிகளைத் தெரிந்தெடுக்கப் பரந்த வாய்ப்பு ஏற்படுகிறது. ஆயினும், அது கட்சியின் உட்குழுவின் தீய செல்வாக்கைக் குறைத்துவிட்டதெனக் கூற இயலாது. கட்சியின் செல்வாக்குக் காரணமாகச் சுயேச்சையான சிறந்த பிரதிநிதிகளைக் காண்பது அரிதாகின்றது. உண்மையில் அரசியல் ஜனநாயகம் வளரும் போது, அதனுடன் கட்சி நிறுவனங்களும் இணைந்து வளர்கின்றன.

நாட்டு மக்களின் கருத்தைப் பிரதிபலிப்பது மட்டுமல்லாமல், நல்ல அரசாங்கத்தை நிலை நாட்டுவதும் சட்ட மன்றத்தின் நோக்கம் என்பதை மறக்கக்கூடாது. ஆகவே, சிறந்த முறைச் சட்டமன்றத்தை உருவாக்க விரும்பும் தேர்தல் சீர்திருத்தத் திட்டங்கள் இலட்சிய வாக்காளர்களைப் பெறவேண்டும் என்ற கொள்கையை ஓரளவு விட்டுக் கொடுக்க வேண்டும். வாக்காளர்களின் கருத்துகள் சட்ட மன்றத்தில் எதிரொலிப்பது ஓரளவுதான் இயலும். அவ்வாறு நடைபெறுவதும் எப்போதும் விரும்பத்தக்கதன்று. தேர்வாளர்களுக்கும் தேர்ந்

தெடுக்கப்பட்ட நிறுவனத்திற்கும் தொடர்பை ஏற்படுத்துவதற்காகச் செய்யும் ஒருதலையான முயற்சியை எந்தத் தேர்தல் முறையிலும் காணலாம். அரசாங்கத்திற்கும் அது ஆளும் சமூகத்திற்கும் தொடர்பு இருக்க வேண்டும். அதிலுள்ள மக்களின் தனி இயல்பு களையும் மறக்கக்கூடாது. ஆயினும், சில அரசுகள் பிரதிநிதித்துவ முறை தன்னிலே போதுமானதா என ஐயுறுகின்றன. இந்த ஐயப் பாட்டின் விளைவாக அவை சில நேர்முக ஜனநாயகத் தடைகளால் அதன் செயல்களைக் கட்டுப்படுத்த முயல்கின்றன. குடியொப்பம் மக்கள் தொடக்கம், ஆகிய இத்தடைகளைப்பற்றிப் பத்தாவது இயலில் விரிவாக விளக்குவோம்.

## படிக்க வேண்டிய நூல்கள்:

1. பேஜ்ஹாட் (Bagehot) : English Constitution, கட்டுரை, 5.

2. பார்க்கர் (Barker) : Essay on Government, கட்டுரை, 3.

3. பாஸட் (Bassett) : Essentials of Parlimentary Democracy, பகுதி, 2.

4. பிரைஸ் (Bryce) : American Commonwealth, தொகுதி I, இயல், 8-17.

5. டெனிஸாவ் (Denisov) : Soviet State Law, இயல், 10-11.

6. டைஸி (Dicey) : Law and Public Opinion, விரிவுரை, 3.

7. எம்டன் (Emden) : The People and the Constitution, இயல், 5-6.

8. ஃபைனர் (Finer) : 1. Modern Government, இயல், 12-17 20, 21.
2. Major Governments of Modern Europe, இயல், 5, 6, 14, 25.

9. ஜென்னிங்ஸ் (Jennings) : 1. Parliament, இயல், 2,11,13.
2. British Constitution, இயல், 1, 3.

10. லாஸ்கி (Laski) : Grammar of Politics, இயல், 3, 4.

11. மக் ஐவர் (Mac Iver) : Web of Government, இயல், 8.

12. சேபைன் (Sabine) : History of Political Theory இயல், 31-2.

13. ஸிட்ஜ்விக் (Sidgwick) : Elements of Politics, இயல், 3, 20, 27, 29.

14. ஸிங்க் (Zink) : Government in United States, இயல், 18, 20-2

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள்:

1. டுவெர்ஜர் (Duverger) : Political Parties

2. ஜென்னிங்ஸ் (Jennings) : Party Politics—I, Appeal to People

3. லேக்மனும் லாம்பர்ட்டும் (Lakeman and Lambert) : Voting in Democracies

4. லாஸ்கி (Laski) : Rise of European Liberalism

5. மக்கென்ஸி (Mackenzie) : Free Elections

6. மில் (Mill) : Representative Government

7. பிக்கிள்ஸ் (Pickles) : France : The Fourth Republic; Fifth French Republic

8. தாம்ஸன் (Thomson) : Democracy in France

9. வேர் (Wheare) : Legislatures

## கட்டுரைக்கேற்ற பொருள்கள்:

1. இக்காலத்தில் அரசியல் ஜனநாயகம் வளர்ந்த வரலாற்றை வரைக.

2. 'அண்மைக் காலம் வரை ஆடவர் வாக்குரிமை இலத்தீன் ஐரோப்பாவின் பண்பாய் இருந்தது.'—ஆராய்க.

3. பிரிட்டனில் அரசியல் வாக்குரிமை வழங்கிய வரலாற்றைத் தீட்டுக. இப்போது அங்கு நிலவும் நிலை யாது?

4. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பின் 19ஆம் திருத்தம் எவ்வகையில் முக்கியமானது என்பதை விளக்குக.

5. 'தேர்தல் தொகுதி' என்னும் சொற்றொடரின் பொருளை வரையறுத்து, அது இக்கால அரசுகளில் எவ்வாறு வேறுபடுகிறது என்பதைக் காட்டுக.

6. விகிதப் பிரதிநிதித்துவக் கொள்கை எவ்வாறு தோன்றியது? அதன் முக்கிய இயல்புகளை விளக்குக.

7. விகிதப் பிரதநிதித்துவ முறையைப் பின் பற்றும் ஓர் ஐரோப்பிய அரசில் அது எவ்வாறு நடைபெறுகிறதென்பதை விளக்குக.

8. விகிதப் பிரதிநிதித்துவத்திற்குச் சார்பாகவும், எதிர்த்தும் காரணங்கள் காட்டுக.

9. 'சம வாக்குரிமை, கொள்கை முறைப்படி தவறாகும்,' என்று ஜான் ஸ்டுவர்ட்டு மில் கூறுவதை ஆராய்க.

10. பிரிட்டிஷ் தேர்தல் முறையைச் சீர்திருத்தக்கூடிய வழிகளைக் கூறுக.

# 9. சட்ட மன்றம்

## இரு மேல் சபைகள்

### 1. இரு சபைகளையுடைய அரசியலமைப்பு முறையைப் பற்றிய பொதுக்குறிப்புகள்

இக்கால அரசியல் முறைமைக்குட்பட்ட அரசுகளின் சட்ட மன்றங்களை ஆராயும்போது, மேல் சபையின் தன்மையை ஆயவில்லையெனில், அவ்வாராய்ச்சி முழுப் பயனைத் தாராது. லார்டு பிரைஸ் ஒருமுறை கூறியது போல, அரசியலமைப்பின் வரலாற்றிலிருந்து நாம் அறிந்துகொள்ளும் செய்திகளுள் மேல் சபையின் பயன்களைப் பற்றிய செய்திதான் நமது மனத்தில் ஆழமாய்ப் பதிந்துள்ளது. பெரிய அரசுகளின் வரலாற்றில் ஓர் அளவையுடைய அரசியலமைப்பு முறை அரிதாய்த் தோன்றுவதையும் தாற்காலிகமாகவே நிலவி வருவதையும் காண்கின்றோம். அதற்கு மாறாக, இரு சபைகளையுடைய அரசியலமைப்பு முறை இன்றுள்ள முக்கிய அரசுகளின் சிறப்பியல்பாய் இலங்குகிறது. நாம் முன்னர்க் குறிப்பிட்டது போல, நியூஜீலந்து, டென்மார்க்கு, பின்லாந்து ஆகிய முற்போக்குள்ள ஜனநாயக அரசுகள் ஓர் அளவையுடைய சட்ட மன்றம் போதுமெனக் கருதுவது உண்மைதான். ஆனால், இவை விதி விலக்குகள். 1923இல் கெமால் அட்டாட்டர்க்கு நிறுவிய துருக்கிக் குடியரசில் ஓர் அவையுள்ள சட்ட மன்றமே இருந்த போதிலும், 1961ஆம் ஆண்டின் புதிய அரசியலமைப்பின்படி அங்குத் தேசீய அவை, செனட்டு என்ற இரு சபைகளையுடைய சட்ட மன்றம் நிறுவப்பட்டுள்ளது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

புரட்சிக் காலங்களில் சீர்திருத்தங்கள் நடைபெறும் போது சில வேளை ஒரு சபை (uni-cameral) முறை புகுத்தப்பட்ட போதிலும், அதற்குப் பின் வரும் அடக்குமுறைக் காலத்தில் அல்லது புரட்சி ஆட்சி நிலவும் போதுங்கூட அம்முறை அழிந்து போய் மேல் சபை மீண்டும் தோன்றுவதைக் காணலாம். எடுத்துக்காட்டாக, இங்கி

லாந்தில் கிராம்வெல்லின் ஆட்சியில் இவ்வாறு நடைபெற்றது. பிரான்ஸில் 18ஆம் நூற்றுண்டின் இறுதியிலும் 19ஆம் நூற்றுண்டின் நடுவிலும் முதலாம், இரண்டாம் குடியரசுகள் ஒரு சபை முறைக் கொள்கையின் அடிப்படையில் அமைந்திருந்தன. ஆனால், முதல் குடியரசில் புரட்சியின் போக்குக் காரணமாகவே இக்கொள்கை நிலவியது. குருக்கள், பிரபுகள், பொது மக்கள், என்ற மூன்று வகுப்புகளின் (Three Estates) முறை பயனற்றது என்பதைப் புரட்சி விரைவில் காட்டியது. பிரெஞ்சுப் புரட்சி இரு சபை முறைக்கு எதிரான ஆதாரங்களைக் கொள்கை வடிவில் தரவில்லை எனக் கூறவியலாது. அக்காலத்தின் மிகச் சிறந்த அரசியல்மைப்பு வாதியான அபே ஸீயே (Abbe Sieyes) என்பார், முதற்புரட்சியின் போது ஏற்பட்ட அரசியலமைப்பு மாற்றங்களுக்கு முக்கிய காரணமாய் இருந்தார். அவர் கருத்துப்படி மேல் சபைக்கும் கீழ்ச் சபைக்கும் கருத்து ஒற்றுமை நிலவுமானல், மேல் சபை இருக்க வேண்டிய தேவையில்லை. அதற்கு மாருக, அவற்றினிடையே கருத்து வேற்றுமை இருக்குமானல், அதனுல் கேடு விளையும். இன்றும் இரு சபை முறையை எதிர்ப்பவர்கள் இதே காரணத்தைதான் காட்டுகின்ருர்கள் எனப் பொதுவாகக் கூறலாம். ஆயினும், அவ்வாறு எதிர்ப்பவர்களைப் பொறுப்புள்ள அரசியல் வல்லுநர்களின் நடுவில் காண இயலாது. ஸீயேயின் கூற்றுத் தவருனது என்று பிற்காலத்தில் மக்கள் கருதலானுர்கள். ஏனெனில், அவர் காலத்திற்குப் பிறகு வெளியான முக்கிய அரசியலமைப்புகள் நிறுவிய சட்டமன்றங்களில் எல்லாம் மேல் சபை இருந்தது. ஸீயேயின் திறனுய்வு, காலத்திற்கேற்ப மாற்றப்படாத பண்டைய நிறுவனங்களுக்கு மிகப் பொருத்தமாய் இருப்பதால், அதை ஒரு நல்ல திறனுய்வு எனக் கருதலாம். சட்டங்களைத் திருத்தும் மன்றமாக மேல் சபையை அமைப்பதற்கு அரசியல் சிற்பிக்கு அதிகாரம் இருக்க வேண்டும். ஆனல், அச்சபைக்குக் கீழ்ச்சபையுடன் சம அதிகாரம் வழங்க வேண்டும். ஆனல், மேல் சபையின் உறுப்பினர்களை ஜனநாயக முறைப்படி தெரிந்தெடுக்கவில்லையெனில், வாக்காளர்களின் வற்புறுத்தல் காரணமாக மேல் சபையின் அதிகாரம் குறையும்; சம அதிகாரமும் மறையும். மேல் சபையை அழிக்க வேண்டுமென அல்லது சீர்திருத்த வேண்டுமென மக்கள் விரும்புவார்கள். ஏனெனில், கால்டுவின் ஸ்மித்து (Goldwin Smith) கூறுவது போல, 'அதிகாரமுடையவர்கள் முக்கிய காரியங்களில் தம்மை முற்றிலுமே அதிகாரமில்லாதவர்கள் கட்டுப்படுத்துவதற்கு இணங்குவார்கள் என எண்ணுவது வீண்.'

ஆகையால், மேல் சபை இருக்க வேண்டுமெனக் கூறுபவர்கள் காட்டும் காரணங்களை மேல்சபை அமைக்கப்படும் முறையோடு ஒப்பு நோக்குதல் வேண்டும். அக்காரணங்கள் பின் வருமாறு: ஒரே

சபை மட்டும் இருந்தால், அது சட்டங்களை நன்கு ஆராயாமல், அவசரமாக நிறைவேற்றலாம். அவ்வாறு நடவாதவாறு மேல் சபை தடுக்கிறது. ஒரே சபை இருந்தால், அதன் அதிகாரம் வரையிறந்ததாய் இருக்கும். மேலும், தனக்கு அறிவுரை கூற வேறு நிறுவனங்கள் இல்லையென்பது அதற்குத் தெரியுமாதலால், அது தனது அதிகாரத்தைத் தவருன முறையில் பயன்படுத்திக் கொடுங்கோன்மையை நிறுவக்கூடும். அரசிலுள்ள மேம்பட்ட அதிகாரத்தைக் கட்டுப்படுத்துவதற்கு எப்போதும் ஓர் எதிர்ப்பாற்றல் இருக்க வேண்டும். அது பொது மக்களாகவோ அல்லது பெரும்பான்மை வாக்காளர்கள் ஆதரிக்கும் அரசியல் கட்சியாகவோ இருக்கலாம். மேல் சபை இருக்கவேண்டுமென்பதற்குக் கூட்டாட்சி அரசில் ஒரு தனிக்காரணம் உண்டு. ஏனெனில், அங்கு மேல் சபையின் அமைப்பிலே கூட்டாட்சிக் கொள்கை அடங்கியிருக்கிறது. மேலும், ஒவ்வொரு மாநிலத்திலுமுள்ள மக்களின் விருப்பமும் அதில் எதிரொலிக்கிறது. இவ்விருப்பம் முழுக்கூட்டாட்சியின் விருப்பத்தினின்று வேறுபட்டது.

இந்த இயலின் எஞ்சிய பகுதிகளில் பல திறப்பட்ட மேல் சபைகளை ஆராயும்போது அவற்றிற்குப் பல்வேறு பெயர்கள் உண்டென்பதைப் பார்ப்போம். பிரிட்டனில் பிரபுகள் சபையென்பதும், சுவிட்ஸர்லாந்தில் மாநிலங்களின் சபையென்பதும் (Standerat), ஜெர்மனிக் கூட்டாட்சிக் குடியரசில் கூட்டாட்சி அவை (Bundesrat) என்பதும், ஆஸ்திரேலியா, கனடா, அயர், பிரான்ஸ், இத்தாலி, தென்னுப்பிரிக்கா, அமெரிக்க ஐக்கிய நாடுகள் போன்ற பல அரசுகளில் செனட்டு என்பதும் அவற்றிற்குப் பெயர். ஆயினும், நாம் அவற்றைப் பெயருக்குத் தக்கபடி பகுப்பதில்லை; ஆனல், அவற்றின் தன்மைக்கேற்பப் பாகுபாடு செய்கிறேம். அவை தேர்ந்தெடுக்கப்படாதவையா (மரபு வழி வந்தவையா அல்லது நியமிக்கப்பட்டவையா) அல்லது தேர்ந்தெடுக்கப்பட்டவையா (முற்றிலும் தேர்ந்தெடுக்கப்பட்டவையா அல்லது ஓரளவு தேர்ந்தெடுக்கப்பட்டவையா) எனப் பார்க்க வேண்டும். ஆனல், இது பெரும்பயன் தாராது. ஆகவே, இன்னும் ஆழ்ந்து ஆராயவேண்டும். முதலாவது, மக்கள் தேர்ந்தெடாத மேல்சபை எவ்வளவு உண்மையான அதிகாரங்களைப் பெற்றிருக்கிறது என்றும்; இரண்டாவது, ஓரளவு தேர்ந்தெடுக்கப்பட்ட சபையில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் எவ்வளவு செல்வாக்கும் அதிகாரமும் செலுத்துகிருர்கள் என்றும்; மூன்ருவது, கீழ்ச்சபையின் செயல்களைத் தடுக்கும் அளவுக்கு மேல்சபை அதிகாரம் பெற்றிருக்குமானல், இரு சபைகளுக்கும் இடையே தோன்றும் பிணக்குகளை எவ்வாறு தீர்ப்பதென்றும்; நான்காவது, கீழ்ச்சபைக்கு இல்லாத பெருமதிப்புத் தேர்ந்தெடுக்கப்பட்ட மேல்சபைக்கு எவ்வாறு வழங்கப்பட்டுள்ளது என்றும் ஆராய வேண்டும். மேலே கூறியபடி

தேர்ந்தெடுக்கப்படாதவை தேர்ந்தெடுக்கப்பட்டவை என இரு வகைகளாகப் பிரிக்கும் பாகுபாட்டில் எல்லா வகைகளும் அடங்குவதில்லை. ஏனெனில், இவ்விரண்டு வகைகளையும் இன்னும் இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். ஆகவே, நாம் தெரிந்துகொண்ட மேல்சபைகளின் அமைப்பையும் அலுவல்களையும் கீழ்க்காணும் வரிசையில் பார்ப்போம் :

மரபு வழி வந்தவை, நியமிக்கப்பட்டவை, ஓரளவு தேர்ந்தெடுக்கப்பட்டவை, முற்றிலும் தேர்ந்தெடுக்கப்பட்டவை, இறுதியாகச் சுவிட்சர்லாந்து, ஜெர்மனி, ரஷ்யா, யூகோஸ்லாவியா ஆகியவற்றின் தனி இயல்புகளையுடைய மேல் சபைகள்.

## 2. பிரபுகள் சபை: கடந்த காலமும் நிகழ்காலமும்

மரபு வழி வந்த மேல் சபை இக்காலத்தைவிட முற்காலத்தில் அதிகமாகக் காணப்பட்டது. பல அரசுகளில் உள்ள மரபு வழி வந்த மேல் சபை இடைக்கால அரசாங்க முறையிலிருந்து பிறந்ததாகும். இடைக்காலத்தில் மத குருக்கள், பிரபுகள், பொது மக்கள் என்ற மூன்று வகுப்புகளின் அடிப்படையில் அரசாங்கத்தை நிறுவினர். சில இடங்களில் வணிகர் வகுப்பு என்ற நாலாவது வகுப்பும் சேர்க்கப்பட்டது. நாளடைவில் பல இடங்களில் இந்த வகுப்புகள் ஒன்று சேர்ந்து இரு சபைகள் தோன்றலாயின. மேல் சபையில் பிரபுகளும் உயர்மத குருக்களும் இருந்தார்கள். இவ்வாறு இரு சபைகளைப் பெற்ற சட்ட மன்றங்களையுடைய பல அரசுகளில் 19ஆம் நூற்றாண்டின் இறுதிக்குள் பல அரசியலமைப்புத் திருத்தங்கள் காரணமாக ஓரளவு மாற்றியமைக்கப்பட்ட மரபு வழி வந்த சபை தோன்றியது. எடுத்துக்காட்டாக, வாழ்நாள் முழுவதும் இதில் அமரும் உரிமை பெற்ற உறுப்பினர் சிலர் சேர்க்கப்பட்டனர். போர்த்துகலில் 1896 முதல் 1911 புரட்சி வரை இவ்வாறு நிகழ்ந்தது. (1911இல் அது முற்றிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட சபையாய் மாறியது.)[1]

இன்னும் சில அரசுகளில் முழுவதும் தேர்ந்தெடுக்கப்பட்ட மேல் சபை தோன்றியது. எடுத்துக்காட்டாக, நெதர்லாந்து குடியரசில் 1848இல் அரசியலமைப்பைத் திருத்தியபோது இவ்வாறு நிகழ்ந்தது. ஆஸ்திரிய ஹெரன்ஹாஸ் (Herrenhaus), ஹங்கேரியப் பெருமக்கள் சபை (Table of Magnates) போன்ற மரபு வழி வந்த மேல் சபைகள்

1. போர்த்துகலில் 1933இல் புதிய அரசியலமைப்பு ஒரு சபையுள்ள சட்ட மன்றத்தை (தேசீய அவையை) ஏற்படுத்தியது. ஆயினும், அதே நேரத்தில் அது கூட்டுக்கழக அவை என்னும் அறிவுரை கூறும் ஓர் அவையையும் நிறுவியது. (15ஆம் இயலைப் பார்க்க.)

இன்னும் இருந்தன. ஆனால், முதல் உலகப் போருக்குப் பிறகு இவை மறைந்து போயின.[1]

இப்போதுள்ள மரபுவழி வந்த மேல்சபைகளில் பிரிட்டிஷ் பிரபுகள் சபை மட்டும் முக்கியமானதாகும்.

தொடக்கத்தில் பிரபுகள் சபை, தலைமைப் பிரபுகளையும் மத சபையின் உயர் அதிகாரிகளையும் கொண்ட ஒரு நிறுவனமாய் இருந்தது. நார்மானிய அரசர்கள் இந்தச் சபையை ஆண்டுக்கு மூன்று முறை கலந்தாய்ந்தார்கள். இது பெரிய அவை அல்லது பொது அவை என வழங்கப்பட்டது. பிந்திய பெயரையே மகாசாசனத்தில் (Magna Carta) நாம் காண்கிறோம். 1925இல் கூடிய மாதிரிப் பாராளுமன்றத்தில் (Model Parliament) முதலாம் எட்வர்டு, ஒவ்வொரு ஷயரிலிருந்தும் (Shire) வீரர் இருவரையும், சில மாநகர்கள், நகர்கள், தன்னாட்சி உரிமை பெற்ற நகர்கள் (Boroughs) ஆகியவற்றிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளையும் இந்த அவையில் சேர்த்தார். சில காலமாக அவர் அனைவரும் ஒன்றாய் அமர்ந்து வந்தனர். ஆனால், அவர்கள் உண்மையில் இரு சபையினராகவே இருந்தார்கள். அவர்களுக்கிடையே சமூக, அலுவல் சார்ந்த வேறுபாடுகளைத் தவிர வேறொரு வேற்றுமையும் இருந்தது. அதுதான் அவர்களுக்கு அழைப்புக் கட்டளை அனுப்புவதில் இருந்த வேறுபாடு.

அரசர் பிரபுகளையும் மதசபை அதிகாரிகளையும் தனித்தனியாக (ஆவணங்கள் கூறுவது போல முத்திரை பொறித்து) வழங்கினர். ஆனால், அவர் மக்கள் சபை உறுப்பினர்களை ஷெரீப்புகள் (sheriffs) மூலமாகக் கூட்டினார். இதிலிருந்துதான் தேர்தல் அலுவலாளரின் (Returning Officer) பதவி தோன்றியது. மூன்றாம் எட்வர்டு காலத்தில் அவர்கள் தனித்தனி அவையாகக் கூடத் தொடங்கினார்கள். பிரபுகளும் உயர் குருக்களும் பிரபுகள்

1. 1929ஆம் ஆண்டின் அரசியலமைப்பின்படி ஆஸ்திரியா ஒரு கூட்டாட்சிக் குடியரசாய் மாறியது. அதில் மாநிலங்களின் பிரதிநிதிகளைக் கொண்ட தேர்ந்தெடுக்கப்பட்ட மேல்சபை இருந்தது. ஆனால், 1938இல் ஹிட்லர் ஆஸ்திரியாவை ஜெர்மனியுடன் சேர்த்த போது அது பல நிறுவனங்களுடன் மறைந்துவிட்டது. 1945இல் குடியரசு புத்துயிர் பெற்ற போது இரு சபைச் சட்ட மன்றம் மீண்டும் தோன்றியது. ஹங்கேரியில் 1926ஆம் ஆண்டின் அரசியலமைப் பின்படி ஓர் அவைச் சட்ட மன்றம் இருந்தது. 1926இல் அங்கு மேல் சபை தோன்றியது. அது அமைப்பில் பெருமக்கள் அவையை ஓரளவு ஒத்திருந்தது. ஆனால், போருக்குப் பிறகு ஹங்கேரியர்கள் அதை மீண்டும் நிறுவவில்லை. ஹங்கேரியின் நிறுவனங்கள் சோவியத்தின் பெருஞ்செல்வாக்கின்கீழ் இருக்கின்றன.

சபையில் அமர்ந்தார்கள். நாட்டுப்புறத்திலும் நகரங்களிலுமிருந்து சென்றவர்கள் மக்கள் சபையில் அமர்ந்தார்கள். முதலில் பொது அவையில் அமர்ந்திருந்த சாதாரண குருக்கள் பிறகு அங்குச் செல்வதை நிறுத்திவிட்டு, குருக்கள் கூட்டம் (Convocation) எனும் தங்கள் சபையின் அலுவலிலே ஈடுபடத் தொடங்கினார்கள்.

முதலாம் எட்வர்டின் ஆட்சிக் காலத்திலிருந்து இன்று வரை இங்கிலாந்தின் வரலாற்றில் ஒரேயொரு குறுகிய காலத்தில் மட்டும் மேல் சபையில்லாத சட்ட மன்றம் இருந்தது. 1649இல் முதலாம் சார்லஸ் மன்னர் தூக்கிலடப்பட்ட பிறகு தோன்றிய பொது நலக் கூட்டில் இது நிகழ்ந்தது. முடியரசு, பிரபுகள் சபை, சமயத் தலைமைப் பதவி (Episcopate) ஆகியவற்றை ஒரேயடியில் வீழ்த்திய புரட்சியின் கருத்திற்கு ஒரு சபை முறை மிகவும் ஒத்திருந்தது. ஆனால், கிராம்வெல் தமது காப்பாளராட்சி முடிவதற்கு முன்னரே் பிரபுகள் சபையை மீண்டும் நிறுவினார். அன்றிலிருந்து அது தொடர்ந்து நிலைபெற்று வருகின்றது.

சூழ்நிலைக்கேற்ப அதன் உறுப்பினர்களின் எண்ணிக்கையை அதிகரிக்கவும் குறைக்கவும் தேவை ஏற்பட்டதால், அதன் அமைப்பும் நாளுக்கு நாள் மாறி வந்தது. பிரபுகள் சபையில் அமரும் உரிமையைப் பிரபு முதலில் எவ்வாறு பெற்றார் என்ற சிக்கலான—பதிலளிக்க முடியாத—கேள்வியை மீண்டும் இங்குக் கேட்கத் தேவையில்லை. பிற்காலத்தில் ஒருவர் பிரபு பட்டம் பெற்றதும் மேல் சபையில் அமரும் உரிமையும் பெற்றார் என்று மட்டும் கூறுதல் போதும். இப்போதும் அவ்வாறே நடைபெற்று வருகிறது. பிரபுவின் குடும்பத்தில் ஒருவரே பிரபுகள் சபையில் அமர இயலும். அவர் மைந்தர்கள், பிரபு பட்டம் பெற்றிருந்த போதிலும், பிரபுகள் சபையில் அமர இயலாது. ஆனால், அவர்களுள் யாராவது தமது சொந்த உரிமையினால் பிரபுவாக நியமிக்கப்பட்டால், அவர் அச்சபையில் அமரலாம். அவர்கள் பிரபுகள் சபையில் அமர இயலாததால், மக்கள் சபைத் தேர்தலில் போட்டியிடலாம்.[1] 1707ஆம் ஆண்டின் ஐக்கியச் சட்டம் (Act of Union) நிறைவேறியதும் பதினாறு ஸ்காட்லாந்து பிரபுகள், பிரபுகள்

---

1. காலஞ்சென்ற ஸாலிஸ்பரி பிரபுவின் குடும்பம் இதற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். முதலில் பிரபு மட்டும் பிரபுகள் சபையின் உறுப்பினரானார். அவர்தம் இரு சகோதரர்களான ஹியூ ஸெஸில் பிரபுவும் ராபர்ட்டு ஸெஸில் பிரபுவும் மக்கள் சபையின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பிறகு அவ்விருவரும் நாட்டிற்குச் செய்த அருந்தொண்டுகளுக்காகப் பிரபுகளாக நியமிக்கப்படவே, பிரபுகள் சபையினுள் நுழைந்தனர். ராபர்ட்டுப் பிரபு, செல்வுட்டின் ஸெஸில் பிரபு (Lord Cecil of Chelwood) எனவும் ஹியூ பிரபு குயிக்ஸ்வுட் பிரபு (Lord Quickswood) எனவும் வழங்கப்பட்டனர்.

சபையில் சேர்ந்தார்கள். அந்தச் சட்டப்படி, ஒவ்வொரு முறையும் புதிய பாராளுமன்றம் கூடும்போது ஸ்காட்லாந்து பிரபுகள் எல்லோரும் ஒன்று கூடித் தங்களுள் பதினறுவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அவர்கள் அப்பாராளுமன்றக் காலம் வரை பதவியிலிருப்பார்கள். மேலும், இச்சட்டப்படி, அது முதற்கொண்டு ஸ்காட்லாந்தினர் எவரும் ஸ்காட்லாந்தின் பிரபுவாக நியமனம் பெறக்கூடாது; ஐக்கிய அரசின் பிரபுவாக நியமிக்கப்பட வேண்டும். அவ்வாறு நியமிக்கப்பட்டால், பிரபுகள் சபையில் அமரும் உரிமை தானே வந்து சேரும். ஸ்காட்லாந்து பிரபு ஒருவரை அவர்தம் பிரபு தோழர்கள், புதிய பாராளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கக் கூடுமாதலால், அவர் எந்தச் சந்தர்ப்பத்திலும் மக்கள் சபையின் உறுப்பினராகக் கூடாதெனவும் சட்டம் கூறியது. 1800ஆம் ஆண்டின் ஐக்கியச் சட்டத்தின்படி இருபத்தெழுவர் ஐரிஷ் இல்லறப் பிரபுகளும், நான்கு மேற்றிராணியார்களும் (Bishops) சேர்க்கப்பட்டார்கள். இல்லறப் பிரபுகளை அயர்லாந்துப் பிரபுகள் தேர்ந்தெடுக்க வேண்டும். ஆனால், அவர்கள் ஆயுள் முழுவதும் பதவியிலிருப்பார்கள். ஆகவே, பிரபுகள் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்படாத ஐரிஷ் பிரபு, ஸ்காட்லாந்துப் பிரபுவைப் போலல்லாமல், மக்கள் சபையின் உறுப்பினராகலாம். பாமர்ஸ்டன் பிரபு அவ்வாறே தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால், 1922இல் உரிமை நாடான அயர்லாந்து நிறுவப்பட்டதும் இந்த ஏற்பாடுகள் முடிவடைந்தன.[1]

மரபு வழி வந்த பிரபுகளையும் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரபுகளையும் தவிர, கான்டர்பரி, யார்க்கு நகர்களின் இரு அதி மேற்றிராணியார்களும் (Archbishops), இருபத்து நான்கு மேற்றிராணியார்களும் தங்கள் பதவி காரணமாகப் பிரபுகள் சபையில் அமர்கின்றார்கள். மேலும், ஒரு சில சட்டப் பிரபுகள் (Law Lords), அல்லது மேல் தீர்ப்புப் பிரபுகள் (Lords of Appeal Ordinary) அச்சபையில் இருக்கின்றனர். அவர்கள் ஆயுட்காலப் பிரபுகளே. ஆனால், அவர்கள் இப்பதவிக்கெனப் பிரபுகளாக நியமிக்கப்பட்டார்கள். அப்பட்டத்தை அவர்கள் மக்களும் மரபுரிமையாகப் பெற இயலும். மரபு வழிப் பிரபுகளின் எண்ணிக்கைக்கு வரம்பு இல்லை. பெயரளவில் அரசர் தம் விருப்பம் போல அவர்களை நியமிக்கலாம். ஆனால், உண்மையில் அமைச்சரவையே அவர்களை நியமிக்கின்றது. புதிய பிரபுகளை உண்டுபண்ணும்போது அவர்களின் பெயர்களைப் புகழ்ப்பட்டப் பட்டியலில் (Honours List) அறிவிப்பது வழக்கம். ஆனால், முக்கியமான சில

1. அன்றிலிருந்து அயர்லாந்தில் பிரபுகள் தேர்தலும் நடைபெறவில்லை. ஸ்காட்லாந்தில் பழைய ஏற்பாடுகள் அப்படியே இருக்கின்றன. ஆயினும், இப்போது முப்பதின்மருக்குக் குறைவான ஸ்காட்லாந்து பிரபுகள் உள்ளனர்.

சந்தர்ப்பங்களில் இவ்வழக்கத்துக்கு மாருகவும் அவர்களை நியமிக்க லாம். பிரிட்டனின் வரலாற்றில் ஒரு முக்கிய சந்தர்ப்பத்தில் பிரபுகள் சபையில் ஒரு சட்டத்தை நிறைவேற்றுவதற்காகவே புதிய பிரபுகள் நியமிக்கப்பட்டார்கள். பிரபுகள் சபை 1713இல் உட்ரெக்டு உடன்படிக்கையை ஏற்க மறுத்தபோது இது நடந்தது. மக்கள் சபையில் பெரும்பான்மையாய் இருந்த டோரிக் கட்சியினர் இதை நிறைவேற்றினர். ஆனல், அப்போது பிரபுகள் சபையில் விக்குக்கட்சி பெரும்பான்மைக் கட்சியாய் இருந்தது. சமநிலையைச் சரிப்படுத்த விரும்பிய டோரி அமைச்சரவை, பன்னிரண்டு புதிய பிரபுகளை உண்டுபண்ணுமாறு ஆன் அரசியாரைத் (Queen Anne) தூண்டியது. இவ்வாறு உடன்படிக்கை நிறைவேற்றப்பட்டது. இன்னும் இரண்டு நெருக்கடியான நிலைகளில் இவ்வாறு நிகழும் போலத் தோன்றியது. 1832ஆம் ஆண்டின் சீர்திருத்தச் சட்டத்தையும் 1911ஆம் ஆண்டின் பாராளுமன்ற மசோதாவையும் நிறைவேற்ற இம்முறையைப் பயன்படுத்துவதாக அரசர் அச்சுறுத்தினர். ஆனல், அவ்விரு தடவையும் அந்த அச்சமே போதுமானதாய் இருந்தது. ஏனெனில், அரசர் அக்கருவியைப் பயன்படுத்துவாரென்பதை உணர்ந்த பிரபுகள், அம் மசோதாக்களை எதிர்ப்பதில் பயனில்லை எனக் கண்டு, அவற்றை நிறைவேற்றினர்கள்.

பிரபுகள் சபை 1911-ஆம் ஆண்டு வரை கொள்கையளவில், மக்கள் சபை அதிகாரத்திற்கு இணையான அதிகாரத்தைச் செலுத்தி வந்தது. ஒரு காலத்தில் உண்மையிலே அது அவ்வாறு இருந்தது. எடுத்துக்காட்டாக, 1784இல் இளைய பிட்டுத் தலைமை அமைச்சராய் இருக்கும்போது அமைச்சரவையில் அவர் ஒருவரே மக்கள் சபையின் உறுப்பினராய் இருந்தார். ஆனல், அதற்கு முன்னர் அதிகாரம் பிரபுகள் சபையிலிருந்து மக்கள் சபையின் கைகளுக்கு மாறிக்கொண்டிருந்தது. 19ஆம் நூற்ருண்டில் அமைச்சர்களுள் பெரும்பாலார் கீழ்ச் சபையிலிருந்தே தெரிந்தெடுக்கப்பட்டனர். இதனல், பிரபுகள் சபை சட்டமியற்றுவதில் அதிகாரத்தை இழந்தது. ஆனல், கொள்கையளவில் அது பழைய அதிகாரத்தையே பெற்றிருந்தது. பண மசோதாவைத் (Money Bill) திருத்தவும் தள்ளவும் பிரபுகள் சபைக்கு அதிகாரம் இல்லை என்ற வழக்காறு 1909இல் கைவிடப்பட்டதை ஆருவது இயலில் பார்த்தோம். இதன் விளைவாகப் பிரபுகள் சபைக்குக் குறைவான அதிகாரமே உண்டென்பதை 1911ஆம் 1949ஆம் ஆண்டு பாராளுமன்றச் சட்டங்கள் சட்ட முறையில் ஏற்றுக்கொண்டன.

அத்தகைய சீர்திருத்தங்கள் எவ்வாறு நடைபெற வேண்டுமென்று கூறுவதற்கு இது இடமன்று. ஆனல், பிரபுகள் சபையின்

வரலாறு, அமைப்பு, அதிகாரங்கள் ஆகியவற்றைச் சுருக்கமாகக் கூறும்போது சில குறிப்புகளை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். முதலாவது, பாராளுமன்றச் சட்டங்கள் பிரபுகள் சபையின் அதிகாரங்கள் சிலவற்றை இன்னும் பிரபுகள் சபையினிடமே விட்டு வைத்திருக்கின்றன. அவை சில சந்தர்ப்பங்களில் உண்மையான அதிகாரங்களாக மாறலாம். பிரபுகள் சபை சாதாரண மசோதாக்களை ஓராண்டிற்கு [1] நிறைவேருது தடுத்து வைக்கலாம். இந்தத் தாற்காலிக மறுப்பாணை (Suspensive Veto) அம்மசோதாவை முற்றிலும் நிறைவேருதவாறு தடுத்துவிடவும் கூடும். ஏனெனில், அதற்கிடையில் மக்கள் சபையில் பல மாற்றங்கள் நிகழக்கூடும். ஒரு பொதுத் தேர்தல் மக்கள் சபையில் கட்சிகளின் சமநிலையை மாற்றிவிடக் கூடும். அதனால், மக்கள் சபை அம்மசோதாவை மீண்டும் பிரபுகள் சபையின் முன் சமர்ப்பிக்காமல் விட்டுவிடலாம். இரண்டாவது, இங்கிலாந்தில் பிரபுகள் சபை இறுதி மேல் தீர்ப்பு நீதி மன்றமாய் இருக்கிறது. ஆனல், உண்மையில் அம்மன்றம் எழுவர் அல்லது எண்மர் சட்ட வல்லுநரைக் கொண்ட சிறு குழு என்பதை மறத்தலாகாது. (அவர்கள் பொதுவாக வாழ்நாள் முழுவதும் பிரபுகளாய் இருப்பார்கள்). சாதாரணப் பிரபு ஒருவர் அம்மன்றத்தில் அமர்ந்தாலுங்கூட, அங்கு நிகழும் சிறந்த சட்ட அறிஞர்களின் சொற்பொழிவுகளின் கருத்தாழத்தைக் கண்டுபிடிக்க இயலாது. மேலும், வழக்குகளில் தீர்ப்பளிப்பதற்கு அவருக்கு அதிகாரம் இல்லை. பிரபுகள் சபையை அழித்துவிட்ட போதிலுங்கூட, இறுதி மேல் தீர்ப்பு நீதி மன்றம் ஒன்று தேவையாய் இருக்கும். மூன்ருவதாக, மரபு வழி வந்த பல பிரபுகளுக்குப் பொதுநல உணர்ச்சியும், சட்டமியற்றும் திறமையும் மிகக் குறைவாகவே இருந்தபோதிலும், மக்கள் சபையிலிருந்து பிரபுகளாகத் தெடுந்தெடுக்கிறவர்களைப்பற்றி இவ்வாறு குறை கூற இயலாது. ஏனெனில், அவர்கள் தங்கள் பொதுநலத் தொண்டிற்காகவே பிரபுகளாக நியமிக்கப்படுகின்ருர்கள். இதைப்பற்றி இரு குறிப்புகளை நினைவிலிறுத்த வேண்டும். முதலாவது, ஏதாவது ஒரு துறையில் சிறந்து விளங்குபவரையே பிரபுவாக நியமிப்பதால், அவர் சட்டமியற்றுவதிலும் தலைசிறந்தவராய் இருக்கின்ருர் என்று கருத இயலாது. இரண்டாவது, தந்தையாரின் திறமையும் பொதுநல உணர்ச்சியும் மகனுருக்கு இல்லாதிருக்கலாம். பாராளுமன்றச் சட்டங்கள் பிரபுகள் சபையின் உண்மையான அதிகாரத்தை நீக்கி அதன் அமைப்பை மட்டும் மாற்ருமல் விட்டுவிட்டன. அடிப்படை மாற்றங்களைச் செய்ய இது வரை இச்சீர்திருத்த முயற்சிகள் செய்யப்பட்டுள்ளன. ஆனல், அவை இரண்டும் வெற்றி பெறவில்லை.

---

1. 1911ஆம் ஆண்டின் சட்டப்படி இரண்டாண்டுகள் தடுத்து நிறுத்தலாம். 1949ஆம் ஆண்டு சட்டம் அதை ஓராண்டாகக் குறைத்தது.

1893இல் பிரபுகள் சபை கிளாட்ஸ்டனின் இரண்டாவது தன்னாட்சி மசோதாவை (Home Rule Bill) மறுத்ததிலிருந்து புரபுகள் சபையைச் சீர் திருத்துவது முற்போக்குக் கட்சியின் முக்கியக் கொள்கையாய் மாறியது. பிரபுகள் சபை பண மசோதாவை ஏற்றுக்கொள்ள மறுத்ததால், 1911இல் பாராளுமன்றச் சட்டத்தை நிறைவேற்றிய போதிலும், இச்சட்டத்தை ஒரு தாற்காலிக ஏற்பாடாகவே கருதினர். அதன் விளைவாக, 1917இல் லார்டு பிரைஸின் தலைமையில் ஒரு மாநாடு கூடியது. சீர்திருத்தப் பிரச்சினையை முற்றிலும் ஆராய்வது அதன் நோக்கமாய் இருந்தது. ஆனால், அது ஒரு முடிவுக்கும் வர இயலவில்லை. மீண்டும், 1948இல் இரண்டாவது பாராளுமன்ற மசோதா கொண்டுவரப்பட்டதும், ஒருங்கிணைந்த ஒரு சீர்திருத்தத் திட்டத்தை உருவாக்கக் கட்சிகள் முயன்றன. அம்முயற்சி தொடக்கத்தில் வெற்றி பெறுவது போலத் தோன்றிய போதிலும், இறுதியில் தோல்வியடைந்தது. ஆகவே, தாற்காலிக மறுப்பாணைக் காலத்தைக் குறைக்கும் திட்டத்தை மட்டும் சட்டமாக்கி, அடிப்படை மாற்றத்தைப் பற்றிய பிரச்சினையைத் தீர்க்காமல் அப்படியே விட்டுவிட்டார்கள்.

அதன் பிறகு 1958இல் இயற்றப்பட்ட ஆயுட்காலப் பிரபுகள் சட்டம் (Life Peerage Act) மரபுரிமைக் கொள்கையைப் (Heridi-tary Principle) பெரிதும் பாதித்தது. அச்சட்டத்தின்படி, (சட்டப் பிரபுகளைத் தவிர) பிரபுவாகிய பெருமகனும் (Baron) பெருமகளும் (Baroness) ஆயுட்காலத்திற்கு மட்டும் பிரபு பட்டம் பெறலாமென அனுமதித்தது. இவ்வாறு இச்சட்டம் ஒரு புதிய வகைப் பிரபு பட்டத்தை உண்டுபண்ணியதுமல்லாமல், பிரபுகள் சபையில் பெண்டிரையும் நுழையவிட்டது. பெண்டிர் உறுப்பினராவது பிரபுகள் சபையின் நீண்ட வரலாற்றில் அதுதான் முதன்முறையாகும். இச்சட்டப்படி 1961ஆம் ஆண்டின் இறுதியில் பிரபுகளுள் ஆடவர் 28 பேரும், பெண்டிர் 6 பேரும் நியமிக்கப்பட்டனர். இவ்வாறு மரபுரிமை ஓரளவு தளர்ந்ததும், 1960ஆம் ஆண்டில் நிகழ்ந்த நிகழ்ச்சி காரணமாகப் பொதுமக்களின் ஆர்வம் பொங்கி எழுந்தது. மக்கள் அந்நிகழ்ச்சியை 'விருப்பமில்லாத பிரபுவின் முயற்சி' (Case of the Reluctant Peer) என வழங்கினார்கள். அது மரபுரிமைப் பிரச்சினையை எழுப்பியது. அவ்வாண்டில் ஸ்டான்ஸ்கேட்டு இளங்கோமானர் (Viscount Stansgate) இறந்ததும் அவர் மைந்தரும் மரபுரிமையாளருமான அந்தோனி வெட்ஜ்வுட் பென் (Anthony Wedge-wood Benn) தம் தந்தையாரின் பட்டத்தையும் பிரபுகள் சபையில் அவருடைய இடத்தையும் பெற்றார். ஆனால், புதிய இளங்கோமானர் 1950 முதல் பிரிஸ்டல் ஈஸ்ட் (Bristol East) பகுதியின் பிரதிநிதியாய் மக்கள் சபையில் அமர்ந்து வந்தார். அவர் இளங்கோமானர் ஆன

தும் மக்கள் சபையிலுள்ள அவரது இடம் காலியாகிவிட்டதென்றும் இடைத்தேர்தல் நடைபெற வேண்டுமென்றும் கட்டளை பிறந்தது. வெட்ஜ்வுட் பென், கோமான் பட்டத்தையும் பிரபுகள் சபையில் தமது இடத்தையும் துறந்து, காலியான தொகுதித்தேர்தலில் வேட்பாளராய்ப் போட்டியிட்டு, முன்னைவிட அதிகப் பெரும்பான்மை வாக்குகளைப் பெற்று வெற்றி பெற்றார். உடனே, தோல்வியடைந்த வேட்பாளர், தேர்தல் நீதி மன்றத்திற்கு விண்ணப்பம் செய்தார். அதற்கு நீதிபதிகள், ஸ்டான்ஸ்கேட்டு பிரபுவின் தேர்தல் சரியானதன்றுஎன்றும், தோல்வியடைந்த வேட்பாளரையே வெற்றி பெற்றவராகக் கருத வேண்டுமென்றும் 1962ஆம் ஆண்டில் தீர்ப்பளித்தார்கள்.

பாராளுமன்றத்திலும் வெளியிலும் பலர் திரு. வெட்ஜ்வுட் பென்னைப் போற்றினர்; அவருக்காக வருந்தினர் (அவரைத் திருவாளர் என்றே வழங்கினர்); ஏனெனில், அவர் பொது மக்களுள் ஒருவராய் இருப்பதற்காகப் போராடினார். விரைவில் அரசாங்கம், 'பிரபுகள் சபையின் அமைப்பைச் சீர்படுத்தும் பற்பல சிக்கல்களை ஆராய்வதற்காக' இரு சபைகளின் கூட்டுக் குழுவொன்றை[1] அமைத்தது. இக்குழுவின் அறிக்கை தீவிரச் சீர்திருத்தத்திற்கு வழி வகுக்கும் எனப் பலர் நம்பினர்; ஏனெனில், இப்போதுள்ள நிலையை யாரும் விரும்புவதில்லை. சில சிறப்புக் கொண்டாட்டக் காலங்களைத் தவிர, பிற நாள்களில் பிரபுகள் சபையின் 900 உறுப்பினர்களில் பெரும்பான்மையோர் கூட்டங்களில் கலந்துகொள்வதில்லை. இந்நிலை விரைவில் மாற வேண்டுமென அரசியல் உண்மை அறிவுறுத்துகின்றது. இஃது இவ்வாறாயினும், பிரபுகள் சபையில் சொற்போர் நிகழும்போது அதில் கலந்துகொள்கின்றவர்கள் திறம்பட வாதிப்பதால், அதன் தரம் மிக உயர்ந்ததாய் இருக்கின்றது. ஆகவே, நாட்டின் அரசியல் வாழ்வின் வளத்தை வளர்க்கும் அத்தகைய ஆற்றல்கள் நாட்டு நிகழ்ச்சிகளைப் பாதிக்கக் கூடாது எனக் கூறுவது தவறு. நாட்டின் நலனுக்காக இந்த மேல் சபையை எவ்வாறு பலப்படுத்துவது? பிற மேல் சபைகளில் சிலவற்றை ஆராயும்போது ஒருவேளை இக்கேள்விக்குப் பதில் கிட்டலாம்.

## 3. கனடாவில் நியமிக்கப்படும் மேல் சபை

நியமிக்கப்பட்ட உறுப்பினர்களையுடைய மேல் சபையைப்பற்றி இப்போது ஆராய்வோம்: இதற்கும் மரபுவழி வரும் உறுப்பினர்களையுடைய மேல் சபைக்கும் உள்ள முக்கிய வேறுபாடு என்னவென்றால்,

1. 1962இன் இறுதியில் வெளியான அறிக்கை, ஒரு பிரபு அல்லது தந்தையார் இறந்த பிறகு மரபுரிமையாகப் பிரபுவாகும் ஒருவர் தமது பிரபு பட்டத்தைத் துறந்துவிடலாமெனவும் மக்கள் சபையின் உறுப்பினராகலாமெனவும் கூறியது.

மரபு வழி வரும் பிரபுவின் பதவி தந்தையாருக்குப் பிறகு மகனுருக்குச் செல்கிறது. யாரும் அப்பதவியைத் துறக்க இயலாது. ஆனல், நியமிக்கப்பட்ட செனட்டு உறுப்பினரின் பதவிக்காலம் அவர் இறந்ததும் முடிவடைகிறது; அல்லது, அவர் விரும்பினுல் பதவி துறக்கலாம். அரசியலமைப்பு அவரது பதவிக்காலத்திற்கு ஒரு வரம்பிடவும் இயலும். முழுவதும் நியமிக்கப்பட்ட மேல் சபைகளில் மிக முக்கியமானவற்றில் உறுப்பினர்கள் ஆயுட்காலம் முழுவதும் பதவியிலிருக்கிருர்கள். இத்தகைய மேல் சபைகளில் கனடாவின் மேல் சபை மிக்க கவர்ச்சிகரமானது.

கனடாவின் செனட்டை அரசியார் கவர்னர் ஜெனரலின் மூலமாக நியமிக்கிருர்; ஆனுல், நடைமுறையில் அமைச்சரவையின் அறிவுரையின்மேல் நியமிக்கிருர். அதில் குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள உறுப்பினரே இருக்கின்றனர். கனடா ஒருமுக அரசாய் இராமல் அரைக் கூட்டாட்சியாய் இருப்பதால், செனட்டின் உறுப்பினர்களை நியமிக்கும் போது மாநிலங்களுக்கேற்பக் குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள உறுப்பினர்களை நியமிக்கின்றனர். 1791ஆம் ஆண்டின் பிட்டு இந்தியச் சட்டம், 1840ஆம் ஆண்டின் கனடாச் சட்டம், இப்போது கனடா ஆட்சியின் அடிப்படையாய் விளங்கும் 1867ஆம் ஆண்டின் வட அமெரிக்கச் சட்டம் ஆகிய கனடாவைச் சார்ந்த அரசியலமைப்புச் சட்டங்கள் எல்லாம், நியமிக்கப்பட்ட செனட்டைச் சட்ட மன்றத்தின் கூருகக் குறிப்பிட்டுள்ளன. இம் மூன்று சட்டங்களில் இறுதிச் சட்டத்தின்படி எழுபத்திரண்டு உறுப்பினர்களையுடைய செனட்டு அமைக்கப்பட்டது. முதலிலிருந்த மூன்று மாநிலங்களுள் ஒவ்வொன்றிலிருந்தும் இருபத்து நான்குபேர் தெரிந்தெடுக்கப்பட்டனர். (இதற்கென இரு கடற்கரை மாநிலங்களையும் ஒன்ருகக் கருதினர்.) ஆனுல், குடியேற்ற உரிமைநாடு விரிவடைந்து புதிய மாநிலங்கள் சேர்ந்த பிறகு இத்தகைய சமப்பிரதிநிதித்துவம் வழங்க இயலவில்லை. பிரின்ஸ் எட்வர்டு தீவு கூட்டாட்சியில் சேரும் போது அது நான்கு பிரதிநிதிகளை அனுப்பவேண்டும் என்றும் மற்ற இரு கடற்கரை மாநிலங்களுள் ஒவ்வொன்றும் பத்துப்பேரை அனுப்ப வேண்டும் என்றும் சட்டம் கூறியது.

மேலும், 1871ஆம் ஆண்டின் சட்டப்படி, புதிதாக உருவாக்கப்பட்டுக் குடியேற்ற உரிமை நாட்டுடன் சேர்க்கப்படும் மாநிலங்களுக்குச் செனட்டில் பிரதிநிதித்துவம் வழங்கக் கனடாவின் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் உண்டு. இது தவிர, முதலிலிருந்த மாநிலங்கள் மூன்றிற்கும் சமமாக மூவர் முதல் அறுவர் வரை பிரதிநிதிகள் சேர்ப்பதற்குக் கவர்னர் ஜெனரலுக்கு (அதாவது அமைச்சரவைக்கு)த் தனி அதிகாரம் இருக்கிறது. அதாவது, அவர் உறுப்பினர் அறுவரை

அதிகமாக நியமிக்கலாம். ஆனால், அதற்கதிகமாக நியமிக்க இயலாது. பெரும்பாலும் அந்த எண்ணிக்கை வரையே நியமிப்பார். இதன் விளைவாக இன்று கனடாவின் செனட்டில் 102 உறுப்பினர் இருக்கின்றனர். ஆனால், ஒவ்வொரு மாநிலத்தின் சார்பாகவும் நால்வர் முதல் இருபத்து நால்வர் வரை பிரதிநிதிகள் நியமிக்கப்படுகின்றனர். செனட்டு உறுப்பினர் வாழ்நாள் முழுவதும் பதவியில் இருப்பார். ஆனால், இதற்குச் சில கட்டுப்பாடுகள் உண்டு. அவருக்குக் குறைந்தது முப்பது வயதாவது ஆகியிருக்கவேண்டும். அவரை எந்த மாநிலத்தின் பிரதிநிதியாக நியமிக்கின்றனரோ, அந்த மாநிலத்தில் அவர் குடியிருக்க வேண்டும். அவர் பிரிட்டிஷ் குடியாகவும் இருக்க வேண்டும். அவருக்கு 4000 டாலர் மதிப்புள்ள சொத்து இருக்க வேண்டும். அவர் விரும்பும் போது பதவி துறக்கலாம். தொடர்ச்சியாக இரு கூட்டங்களுக்கு (Sessions) வாராதவர், தமது பற்றுறுதியை மாற்றுபவர், பொருள் முற்றிலும் இழந்தவர், பெருங்குற்றத்தீர்ப்புப் பெற்றவர், உறுப்பினராக இருக்கும் தகுதியை இழப்பவர் ஆகியோர் தமது பதவியினின்று நீங்க வேண்டும்.

கனடாவின் செனட்டு முடியாததைச் செய்ய முயல்கின்றது. பிரபுகள் சபையைப் போலச் செனட்டையும் அமைப்பதற்கு அரசியலமைப்பு முயல்கிறது ; மரபு வழிக் கொள்கைக்குப் பதிலாக வாழ்நாள் முழுவதும் பதவி வகிக்கும் திட்டத்தை ஏற்றுக்கொண்டுள்ளது. ஆனால், அதே நேரத்தில் அது மத்திய அரசாங்கம் பிரதிநிதிகளைத் தெரிந்தெடுக்கும் முறையை ஏற்க விரும்பியது. அதாவது, கூட்டாட்சிக் கொள்கைக்கு ஒவ்வாததைச் செய்ய முயன்றது. கூட்டாட்சிக் கொள்கையின்படி கூட்டாட்சியின் உறுப்புகளாகிய மாநிலங்களுக்குச் சமப்பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டும். அவற்றுள் ஒவ்வொன்றும் செனட்டிலுள்ள பிரதிநிதிகளைத் தானே தெரிந்தெடுக்க வேண்டும். ஆனால், அரசியலமைப்பு ஒன்றேயொன்றைத் தான் நிறைவேற்றியுள்ளது. அதாவது, முதலிலிருந்த மூன்று மாநிலங்களும் இருபத்து நான்கு பிரதிநிதிகளை அனுப்பவேண்டும் ; இந்த எண்ணிக்கையைக் கூட்டவும் குறைக்கவும் இயலாது. ஆனால், முதலிலிருந்த மூன்றாவது மாநிலம் இப்போது நியூ பிரன்ஸ்விக்கு (New Brunswick), நோவா ஸ்கோஷியா (Nova Scotia), பிரின்ஸ் எட்வர்டு தீவு என்ற மூன்று மாநிலங்களாகப் பிரிந்திருக்கிறது. இவற்றுள் இரண்டு மாநிலங்களுள் ஒவ்வொன்றும் பத்துச் செனட்டுப் பிரதிநிதிகளையும், மூன்றாவது மாநிலம் நான்கு பிரதிநிதிகளையும் அனுப்புகின்றன். நியூ பௌண்ட்லாந்து உட்பட எஞ்சிய மாநிலங்களுள் ஒவ்வொன்றும் ஆறு பிரதிநிதிகளை அனுப்புகின்றன. அரசியலமைப்பு இத்தகைய முரணான நோக்கங்களை நிறைவேற்ற முற்படுவதால், செனட்டின் நன்மதிப்புப் பாதிக்கப்படுகிறது. அது தேர்ந்தெடுக்கப்

பட்ட மேல் சபையின் அதிகாரத்தையும் பெறவில்லை ; கூட்டாட்சிக் கொள்கை நிலவும் மேல் சபையின் பயனும் அதனுல் விளையவில்லை. அத்தகைய மேல் சபை எவ்வாறு இருக்கவேண்டுமென்பதைப் பிற் பகுதியில் பார்ப்போம்.

## 4. ஓரளவு தேர்ந்தெடுக்கப்பட்ட மேல் சபை

### (அ) தென்னுப்பிரிக்காவின் செனட்டு

தென்னுப்பிரிக்கச் செனட்டு, ஓரளவு தேர்ந்தெடுக்கப்பட்ட மேல் சபைக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். 1909ஆம் ஆண்டு சட்டம் 1910இல் இப்போதுள்ள அரசியலமைப்பை நிறுவியது. அதன்படி முதற்பத்தாண்டுகளுக்குத் தாற்காலிகமான ஏற்பாடுகள் செய்யப் பட்டன. அதன் பிறகு செனட்டில் நாற்பது உறுப்பினர் இருக்க வேண்டும். ஆனுல், தென்னுப்பிரிக்கப் பாராளுமன்றம் விரும்பினுல், அரசியலமைப்பை மாற்றச் சட்டம் இயற்றலாம். ஆலோசனைக் குழுவுடன் கூடிய கவர்னர் ஜெனரல் (Governor General in Council) எண்மர் உறுப்பினரை நியமிப்பார். ஒவ்வொரு மாநில அவையின் (Provincial Council) உறுப்பினர்களும் சட்டசபையில் (House of Assembly) அம்மாநிலத்தின் பிரதிநிதிகளாய் இருக்கும் உறுப்பினர் களும் ஒன்ருக் அமர்ந்து எண்மர் உறுப்பினரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். நியமிக்கப்பட்ட உறுப்பினர் இருவர், சுதேசி நலங்காக்கும் நான்கு பிரதிநிதிகள், தென்மேற்கு ஆப்பிரிக்காவிலிருந்து இரு பிரதிநிதிகள் ஆகியவர்கள் பற்பல சமயங்களில் சேர்ந்ததால் செனட்டு விரிவடைந்தது. இவ்வாறு 1950ஆம் ஆண்டுக்குள் 48 உறுப்பினர் இருந்தனர். அந்நாளிலிருந்து தென்னுப்பிரிக்காவின் இனப்பிரச்சினை அதன் அரசியலமைப்பை அதிகமாகப் பாதித்தது. 1955இல் இயற்றப்பட்ட செனட்டுச் சட்டம் செனட்டின் அமைப்பிலும் தேர்தல் முறையிலும் பெருமாற்றங்களைச் செய்தது. அதனுல், உறுப்பினரின் எண்ணிக்கை நாற்பத்தெட்டிலிருந்து எண்பத்தொன்பதாக உயர்ந்தது. அவர்களுள் பத்தொன்பது பேர் நியமிக்கப்பட்டவர். மாநிலங்களுக்குச் சமப்பிரதிநிதித்துவத்திற்குப் பதிலாக வாக்காளர் களின் எண்ணிக்கைக்கேற்பப் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டது. செனட்டு உறுப்பினர்களைப் பற்பல மாநில அவைகளிலுள்ள கட்சி நிலைமைக்கேற்பத் தேர்ந்தெடுக்காமல், பெரும்பான்மைக் கட்சியின் நேர் முக வாக்களிப்பினுல் தேர்ந்தெடுத்தனர். இச்சட்டத்தின் நோக்கத்தை அரசாங்க அறிக்கையொன்று விளக்குகிறது. அதன்படி, ' பாராளுமன்றத்தின் இறைமையை ஐயத்திற்கிடமின்றி நிலை நாட்டி, கறுப்பர்களுக்குத் (Coloured People) தனிப் பிரதிநிதித்துவம் வழங்குவதே ' இச்சட்டத்தின் நோக்கம்.

1961ஆம் ஆண்டின் சட்டம் குடியரசை நிறுவியது. அதன் 28ஆம் பகுதி முதல் 39ஆம் பகுதி வரைசெனட்டின் அமைப்பையும் அதிகாரங்களையும் விளக்குகின்றன. அச்சட்டம் செனட்டின் அமைப்பில் பல மாற்றங்களைப் புகுத்திய போதிலும், ஓரளவு நியமிக்கப்பட்டதும் ஓரளவு தேர்ந்தெடுக்கப்பட்டதுமான மேல் சபை தேவை என்பதை வலியுறுத்தியது. அது, நாட்டின் தலைவர் நான்கு மாநிலங்களுள் ஒவ்வொன்றிலிருந்தும் உறுப்பினர் இருவரை—மொத்தம் உறுப்பினர் எண்மரை-செனட்டிற்கு நியமிக்க வேண்டுமென்று கூறியது. அவர்களை நியமிக்கும்போது மாநிலச் செய்திகளை நன்கு அறிந்தவர்களைத் தலைவர் நியமிக்க வேண்டும். ஒவ்வொரு மாநிலத்திலிருத்தும் தெரிந்தெடுக்கப்படும் இரு பிரதிநிதிகளுள் ஒருவராவது கறுப்பர்களின் நலன்களைப் பற்றி நன்கு தெரிந்தவராய் இருக்க வேண்டும். தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களைப் பொறுத்தவரையில் மாநில அவையின் உறுப்பினர்களையும் சட்ட சபை உறுப்பினர்களையும் தேர்ந்தெடுப்பதற்காக மாநிலம் எத்தனை தேர்தல் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளதோ, அத்தனை உறுப்பினரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். ஆனால், ஒவ்வொரு மாநிலமும் குறைந்த பட்சம் எட்டுப் பிரதிநிதிகளையாவது தேர்ந்தெடுக்க வேண்டும். ‘ஒவ்வொரு மாநிலத்திலும் சட்ட சபையும் மாநில அவையும் ஒன்ருய் அமர்ந்து’ இந்த உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இத்தேர்தல் ‘விகிதப் பிரதிநிதித்துவக் கொள்கைப்படி நடைபெறவேண்டும். ஒவ்வொரு வாக்காளருக்கும் ஒவ்வொரு மாற்று வாக்கு (Transferable Vote) உண்டு.’ செனட்டின் நியமிக்கப்பட்ட உறுப்பினர்களும், தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களும் வெள்ளையர்களாய் இருக்க வேண்டும்.[1] அவர்கள் குறைந்த பட்சம் முப்பது வயதுள்ளவர்களாகவும் குடியரசு எல்லைக்குள் குறைந்த பட்சம் ஐந்தாண்டுகள் வாழ்ந்தவர்களாகவும் இருக்க வேண்டும். அவர்கள் ஐந்தாண்டு பதவியில் இருப்பார்கள். (ஆனல், அதற்கு முன் செனட்டுக் கலைக்கப்படலாம்.)

பண மசோதாவைக் கொண்டு வருவதற்கும் அதைத் திருத்துவதற்கும் செனட்டிற்கு அதிகாரமில்லை. சாதாரண மசோதாவைப் பொறுத்தவரையில், சட்ட சபை அனுப்பிய மசோதாவைச் செனட்டு ஏற்க மறுக்குமாஞல், அது குறிப்பிட்ட காலத்திற்குத் தாற்காலிக மறுப்பாணையைப் (Suspensive Veto) பயன்படுத்தலாம். இது ஏறக்குறைய பிரிட்டனில் முதல் பாராளுமன்றச் சட்டத்தின்படி (1911) பிரபுகள் சபை செலுத்திய அதிகாரத்தை ஒத்திருக்கிறது. ஆனல், இரு சபைகளுக்கும் இடையே முரண்பாடு தோன்றினல், அதை

1. தென்னப்பிரிக்காவில் 1930 முதல் பெண்டிர் வாக்குரிமை பெற்றுள்ளனர்.

நீக்கத் தலைவருக்கு அதிகாரமுண்டு. அதற்கென அவர் செனட்டை யும் சட்ட சபையையும் ஒரே காலத்தில் கலைக்கலாம் (அல்லது சட்ட சபையைக் கலைத்த பிறகு 120 நாள்களுக்குள் செனட்டைக் கலைக் கலாம்). அப்போது செனட்டின் நியமிக்கப்பட்ட உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களும் 'தங்கள் பதவியைத் துறக்க வேண்டும்.'

## (ஆ) அயரிலுள்ள செனட்டு

உரிமை நாடான அயர்லாந்தின் 1922ஆம் ஆண்டின் அரசிய லமைப்பும், அயரின் 1937ஆம் ஆண்டின் அரசியலமைப்பும் ஒரே அளவுள்ள செனட்டை அயர்லாந்தில் அமைத்தன. ஆனால், அதை அமைக்கும் முறையில் ஒரு முக்கிய வேறுபாடு இருக்கின்றது. அதாவது முந்திய செனட்டின் உறுப்பினர் எல்லாரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இப்போதுள்ள செனட்டில் ஒரு பகுதியினர் நியமிக்கப்படுகின்றனர். மேலும், அயரின் செனட்டு, தொழில் வகைப் பிரதிநிதித்துவத்திற்கு இடமளிக்கிறது. முந்திய அரசியலமைப்பில், நாட்டின் சமூக பொரு ளாதாரப் பிரிவுகளின் நலத்தைக் காப்பதற்கெனத் தனிப்பட்ட அவைகள் இருந்தன. இப்போது அத்திட்டத்தைக் கைவிட்டுவிட் டது போலத் தோன்றுகிறது.

உரிமை நாடான அயர்லாந்தின் செனட்டில் (Seanad Eireann) உறுப்பினர் அறுபதின்மர் இருந்தனர். அவர்கள் பன்னிரண்டு ஆண்டுகள் பதவியிலிருந்தார்கள். அவர்களுள் நான்கில் ஒரு பகுதி யினர் ஒவ்வொரு மூன்றுமாண்டின் இறுதியிலும் ஓய்வு பெறுவார். அவர்கள் விகிதப் பிரதிநிதித்துவ முறைப்படி நேராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார்கள். அதற்கு அரசு முழுவதும் ஒரு தேர்தல் தொகுதியாகக் கருதப்பட்டது. ஆனால், தேர்தலில் போட்டியிடுவ தற்குக் கண்டிப்பான சில கட்டுப்பாடுகள் இருந்தன. அரசியலமைப் பின்படி, வேட்பாளர்களுக்கு 35 வயது ஆகியிருக்கவேண்டும். அவர் கள் நாட்டின் நன்மதிப்பை வளர்க்கும் அருஞ்செயல்கள் ஆற்றி யிருக்க வேண்டும்; அல்லது நாட்டு வாழ்வின் முக்கியத் துறையொன் றில் சிறப்பான தகுதியோ அல்லது திறமையோ பெற்றிருக்க வேண் டும். ஒவ்வொரு தேர்தலுக்கும் முன் வேட்பாளர்களின் பட்டியல் ஒன்று தயாரிக்கப்படும், அதில் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப் படத் தகுதியுடையவர்களைப் போல மூன்று மடங்கு எண்ணிக்கை யுள்ளவர்களின் பெயர்கள் இருக்கும். அவர்களுள் மூன்றில் இரு பகுதியினரைப் பிரதிநிதிகளின் சபை (Dail Eireann) நியமிக்கும்; மூன்றில் ஒரு பகுதியினரைச் செனட்டு விகிதப் பிரதிநிதித்துவ முறைப் படி தேர்ந்தெடுக்கும். இப்பட்டியலில் முந்திய செனட்டின் உறுப்பி

னர்களின் பெயர்களும் ஓய்வு பெறும் உறுப்பினர்களின் பெயர்களும் சேர்க்கப்படும். ஆனால், அவர்கள் தாங்கள் தேர்தலில் போட்டியிட விரும்புவதைப் பிரதம அமைச்சருக்கு எழுத்து மூலம் அறிவிக்க வேண்டும்.

1922ஆம் ஆண்டின் அரசியலமைப்புப்படி நிறுவப்பட்ட செனட்டு, நடைமுறைக்கு ஒவ்வாதது போலத் தோன்றியது. அதற்கு மிகக் குறைந்த அதிகாரங்களே இருந்தன. பண மசோதாக்களை நிறை வேற்றுவதில் அதற்குப் பங்கு இல்லை. சாதாரண மசோதாக்களைப் பொறுத்த வரையில் அதற்குத் தாற்காலிக மறுப்பாணை மட்டும் இருந்தது. அது கிரேட் பிரிட்டனிலுள்ள பிரபுகள் சபையின் மறுப்பாணை அதிகாரத்தைப் போன்றது. புதிய அரசியலமைப்புச் செய்துள்ள நல்ல மாற்றங்களை இரு விதிகளில் காணலாம். 18ஆம் விதியின்படி செனட்டின் அறுபது உறுப்பினர்களுள் பதினொருவர் (பிரதம அமைச்சரால்) நியமிக்கப்படுகின்றனர்; 49 பேர் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். பிரதிநிதிகளின் சபைக்குத் (Dail Eireann) தேர்ந்தெடுக்கப் படத் தகுதியுடைய எந்தக் குடியும் செனட்டு உறுப்பினராகத் தேர்ந் தெடுக்கப்படலாம். அதாவது, 21 வயதான ஆடவரும் பெண்டிரும் உறுப்பினராகலாம். தேர்ந்தெடுக்கப்பட்ட 49 பேரில், அறுவரை இரு பல்கலைக் கழகங்கள் தேர்ந்தெடுக்கும். எஞ்சியிருக்கும் 43 பேர் சில விதிகளின்படி தொகுக்கப்பட்ட வேட்பாளர்கள் பட்டியலிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுவர். ஒவ்வொரு தேர்தலுக்கும் முன் ஐந்து பட்டியல்கள் தயாராகின்றன. பண்பாடு, இலக்கியம், கலை, கல்வி, பயிர்த் தொழில், அதைச் சார்ந்த தொழில்கள், தொழில், வாணிகம், கட்டடக்கலை, பொறியியல், பொதுத்துறை ஆட்சி, சமூகத் தொண்டு ஆகியவற்றில் திறமை பெற்றவர்களின் பெயர்கள் அப்பட்டியலில் இடம் பெறும். ஒவ்வொரு பட்டியலிலிருந்தும் பதினொருவருக்கு மிகாமலும், ஐவருக்குக் குறையாமலும் உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். 'டெய்ல்' (Dail) கலைக்கப்பட்ட 90 நாள்களுக்குள் செனட்டைத் தேர்ந்தெடுக்கப் பொதுத் தேர்தல் நடைபெற வேண்டும். பதவி துறந்தவர் தகுதியிழந்தவர் ஆகியோரைத் தவிர வேறு உறுப்பினர் அனைவரும், 'டெய்லி'ன் பொதுத் தேர்தலுக்கு முந்தின நாள் வரை பதவியிலிருக்க வேண்டும்.

தொழில் வகைப் பிரதிநிதித்துவம் (Functional Representation) வழங்குவதற்காக மேலே கூறிய தேர்தல் அடிப் படையை மாற்றியமைக்க 19ஆம் விதி அனுமதியளிக்கிறது. அவ் விதியின்படி, 'தொழில் வகைப் பிரிவு, சங்கம், சபை எதுவும் நேர் முகமாகத் தேர்தலில் பங்கு பெறச் சட்டம் வழி வகுக்கலாம். அவை சட்டம் குறிப்பிடும் எண்ணிக்கையுள்ள உறுப்பினர்களைத் தேர்ந்

தெடுக்கவேண்டும். ஆனால், அவ்வாறு தேர்ந்தெடுக்கும்போது அவை எத்தனை பேரைத் தேர்ந்தெடுக்கின்றனவோ, அத்தனை பேர், அரசியலமைப்பின் 18ஆம் விதியின்படி தொகுக்கப்பட்ட வேட்பாளரின் பட்டியலிலிருந்து தேர்ந்தெடுக்கப்படமாட்டார்கள்.'

## (இ) முந்திய ஸ்பானிய செனட்டு

பிராங்கோ (Franco) அழித்த 1932ஆம் ஆண்டின் ஸ்பானியக் குடியரசின் அரசியலமைப்பு ஒரு சபையுடைய சட்ட மன்றத்தைப் புகுத்தியது. 1876ஆம் ஆண்டின் அரசியலமைப்பின்படி இரு சபை முறை நிலவியது. அவற்றுள் மேல் சபைக்குச் செனட்டு என்பது பெயர். இப்போதுள்ள வல்லாட்சி எப்போதாவது முடிவடைந்து முடியரசு மீண்டும் வருமானால், செனட்டு மீண்டும் புதிப்பிக்கப்படலாம். அவ்வாறு நடைபெறலாம்; நடைபெறுமலும் இருக்கலாம். ஆனால், ஸ்பானிய செனட்டு முன்னால் எவ்வாறு இருந்ததென்பதைப் பற்றி ஆராய்வது பயன் தரும். ஏனெனில், அதன் அமைப்பு, பிரிட்டனிலுள்ள பிரபுகள் சபையைச் சீரமைப்பதற்கேற்ற எடுத்துக்காட்டாகவும் விளங்கலாம் எனச் சிலர் கூறுகின்றனர். முந்திய ஸ்பானிய செனட்டில் 360 பேர் உறுப்பினர் இருந்தனர். அவர்களுள் பாதிப் பேர் தமது சொந்த உரிமையினால் பதவி பெற்றவரும் (இளவரசர்கள், குறிப்பிட்ட வருவாயையுடைய பெருமக்கள் ஆகியோர்), தமது அலுவல் காரணமாக உறுப்பினராகின்றவரும் (அதி மேற்றிராணியார்கள், தலைமை நீதி மன்றத் தலைவர் ஆகியோர்), அரசரால் (அதாவது அமைச்சரவையால்) வாழ்நாள் முழுவதும் பதவி வகிக்க நியமிக்கப்பட்டவரும் ஆவர். இவர்களின் எண்ணிக்கை ஒருபோதும் 180க்கு மேல் போகக்கூடாது. நியமிக்கப்பட்ட உறுப்பினர்களும், தேர்ந்தெடுக்கப்பட்ட எஞ்சிய 180 பேரும் குறிப்பிட்ட சில பிரிவுகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டனர். தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுள், (1) ஒன்பது அதிமேற்றிராசனங்களுள் (Archbishopric) ஒவ்வொன்றிலுமுள்ள மதகுரு ஒருவரையும் (2) ஆறு அரச கலைக் கழகங்களுள் (Royal Academies) ஒவ்வொன்றும் ஒவ்வொருவரையும், (3) பத்துப் பல்கலைக் கழகங்களுள் ஒவ்வொன்றும் ஒவ்வொருவரையும், (4) சில பொருளாதாரச் சங்கங்கள் ஐவரையும் தேர்ந்தெடுத்தன. மீதி 150 பேரை ஸ்பெயினின் ஒவ்வொரு மாநிலத்திலுமுள்ள தேர்தல் குழுக்கள் (Election Colleges) தேர்ந்தெடுத்தன. இத் தேர்தல் குழுக்களில், நகராட்சி மன்ற உறுப்பினரின் பிரதிநிதிகளும், நகர், நகராட்சி மாவட்டங்கள் ஆகியவற்றில் வாழ்ந்த அதிக வரி செலுத்துவோரும் உறுப்பினராய் இருந்தனர். கீழ்ச்சபை கலைக்கப்பட்டதும் செனட்டின் தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதியும் கலைந்துவிடும். அதன் பதவிக்காலம் முடிந்தாலும் முடியா

விடினும், அது கலைய வேண்டும். அமைச்சர்கள் ஸ்பானிய சட்ட மன்றத்தின் இரு சபைகளிலும் பேசலாம். இதனால், சாதாரணக் காலங்களில் செனட்டிற்குத் தனிப்பெருமை ஏற்பட்டது.

## 5. இரண்டு ஒருமுக அரசுகளிலுள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட செனட்டு

இத்தலைப்பின்கீழ், தேர்ந்தெடுக்கப்பட்ட மேல் சபைகளுக்கு எடுத்துக்காட்டாக, பிரான்ஸ், இத்தாலி ஆகிய இருநாடுகளின் மேல் சபைகளை ஆராய்வோம். இத்தாலியின் மேல் சபை நேர்முகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது; பிரான்ஸ் மேல்சபை அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டதன்று.

### (அ) பிரான்ஸ்

1875ஆம் ஆண்டிற்குப் பிறகு நிறுவப்பட்ட மூன்று குடியரசுகளின் — அதாவது மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது குடியரசுகளின் — அரசியலமைப்புகளும் இரு சபைச் சட்டமன்றத்தை ஏற்படுத்தின. அவற்றின் கீழ்ச்சபையின் உறுப்பினர்களை மக்கள் நேராகத் தேர்ந்தெடுத்தார்கள். (மூன்றாவது குடியரசில் கீழ்ச்சபைக்குப் பிரதிநிதிகளின் சபையென்பதும் மற்றிரு குடியரசுகளிலும் அதற்குத் தேசீய அவை என்பதும் பெயர்) மேல்சபைக்கு நேர்முகத் தேர்தல் (Direct Election) நடைபெறவில்லை. (மூன்றாவது குடியரசிலும் ஐந்தாவது குடியரசிலும் மேல் சபைக்குச் செனட்டு என்பதும், நான்காவது குடியரசில் குடியரசு அவை என்பதும் பெயர்.) மூன்றாவது குடியரசில் செனட்டில் 300 பேர் உறுப்பினர் இருந்தனர். ஒவ்வொருவரும் ஒன்பது ஆண்டுகள் பதவியிலிருந்தனர். அவர்களுள் மூன்றில் ஒரு பகுதியினர் மூன்றாண்டுக்கொருமுறை ஓய்வு பெற்றனர். பல 'டிபார்ட்மென்டு'களிலும் குடியேற்ற நாடுகளிலும் அதற்கென அமைக்கப்பட்ட தேர்தல் குழுக்கள் அவர்களைத் தேர்ந்தெடுத்தன. குழுவில், 'டிபார்ட்மென்டின்' பிரதிநிதிகளும், பொது அவையின் (வட்டார அரசாங்கத்தின்) உறுப்பினர்களும், 'அராண்டீஸ்மான்'களின் அவை உறுப்பினர்களும், ஒவ்வொரு கம்யூனின் (Commune) அவையிலுமிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளும் இருந்தார்கள். 'டிபார்ட்மென்டு'களின் மக்கள் தொகைக்கேற்ப உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். பணம் சார்ந்த சட்டங்களைத் தவிர, மற்றவைகளில் எல்லாம் செனட்டின் அதிகாரங்கள் பிரதிநிதிகளின் சபை அதிகாரங்களுக்கு இணையாய் இருந்தன. செனட்டு, சட்ட ஆக்க அலுவலில் பெரும்பங்கெடுத்து வந்தது.

நான்காவது குடியரசின் அரசியலமைப்பு, நேர்முகமாகத் தேர்ந் தெடுக்கப்படாத மேல் சபை ஏற்றுக்கொண்ட போதிலும், குடியரசு அவையின் அளவு, பதவிக்காலம் ஆகியவற்றின் விவரங்களைத் தீர்மா னிக்கும் அதிகாரத்தைச் சாதாரணச் சட்ட ஆக்க முறைக்கு விட்டு விட்டது. வெவ்வேறு காலங்களில் வெளியான சட்டங்களின்படி முன்னுலிருந்தது போலக் குடியரசு அவையின் மூன்றில் ஒரு பகுதி யினர் ஓய்வு பெறுவதற்குப் பதிலாக, பாதிப்பேர் ஓய்வு பெறவேண் டும். மேலும், அதன் அளவு தேசீய அவையின் அளவில் மூன்றில் ஒரு பகுதிக்குக் குறையாமலும் பாதிக்கு மிகாமலும் இருக்கவேண்டும். அதன் அமைப்பும் முந்திய செனட்டின் அமைப்பிலிருந்து வேறு பட்டது. குடியரசு அவையில் உறுப்பினர் 32 பேர் இருந்தனர். பிரான்ஸிலுள்ள 'டிபார்ட்மென்டு'கள் உறுப்பினர் 200 பேரையும் தேசீய அவை 50 பேரையும், கடல் கடந்த பகுதிகளும் பிறநா களில் குடியேறியிருந்த பிரெஞ்சுக் குடிகளும் மீதிப்பேரையும் தேர்ந் தெடுத்தனர். அவையின் உறுப்பினர் 35 வயதுக்குக் குறையாதவரா யிருக்கவேண்டுமென்றும் சட்டம் நிறைவேறியது. அதிகாரங்களைப் பொறுத்த வரையில், அதற்குப் பண மசோதாக்களைத் தவிரப் பிற மசோதாக்களைக் கொண்டுவர உரிமை இருந்தது. கீழ்ச்சபை அனுப் பிய எந்த மசோதாவையும் ஆராய்வதற்குக் கீழ்ச்சபை எடுத்துக் கொண்ட அதே காலத்தை மேல் சபையும் எடுக்கலாம்; ஆனல், அதற்கு அதிகமாக எடுக்கக்கூடாது.

ஐந்தாவது குடியரசின் 1958ஆம் ஆண்டு அரசியலமைப்பு, செனட்டின் அமைப்பில் யாதோர் அடிப்படை மாற்றமும் செய்ய வில்லை. செனட்டின் நிறுவன அமைப்பின் விவரங்களை விளக்கிய அவசரச் சட்டம் முந்திய குடியரசு அவையின் மூன்று அடிப்படைக் கொள்கைகளைக் குறிப்பிட்டது. அவையாவன: நாட்டின் வெவ்வேறு நிலப் பிரிவுகளில் வாழ்ந்த சமுதாயங்களுக்குச் செனட்டில் பிரதி நிதித்துவம் வழங்குதல்; செனட்டைத் தேர்ந்தெடுக்க மறைமுகத் தேர்தல்கள் (Indirect elections) நடைபெறுதல்; பிற நாடுகளில் குடியேறியிருந்த பிரெஞ்சுக் குடிகளுக்குச் செனட்டில் பிரதிநிதித் துவம் அளித்தல். செனட்டின் உறுப்பினர் ஒவ்வொருவரும் ஒன்பது ஆண்டுகள் பதவியில் இருக்கலாம். நான்காவது குடியரசில் செனட் டில் பாதிப்பேர் ஓய்வு பெற்றனர்; ஆனல், புதிய அரசியலமைப்பின் படி மூன்றுவது குடியரசிலிருந்தது போல மூன்றில் ஒரு பகுதியினர் ஓய்வு பெறுகின்றனர்.

ஐந்தாவது குடியரசில் அமைக்கப்பட்ட செனட்டில் முந்திய குடியரசு அவையில் இருந்ததைவிடக் குறைந்த எண்ணிக்கையுள்ள உறுப்பினர் (320 பேருக்குப் பதிலாக 307 பேர்) இருக்க வேண்டும்.

இவர்களுள் 255 பேர் பிரான்ஸ் நாட்டின் 'டிபார்ட்மென்டு'களிலிருந்தும், அறுவர் வெளி நாட்டிலிருந்த பிரெஞ்சுக் குடிகளாலும், எஞ்சியவர்கள் குடியேற்ற நாடுகள், கடல் கடந்த நிலப் பகுதிகள் ஆகியவற்றிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். (இறுதியில் கூறியவர்களுள் 32 பேர் இப்போது சுதந்தரம் பெற்றுள்ள அல்ஜீரியாவிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்டனர்.) ஒவ்வொரு 'டிபார்ட்மென்டிலும்' செனட்டின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க மறைமுகத் தேர்தல் நடைபெறுகின்றது. இதற்கு மரபு வழக்கான முறையைப் பயன்படுத்துகின்றனர்; அதாவது, தேர்தல் குழுக்களைப் பயன்படுத்துகின்றனர். (இத்தேர்தல் குழுக்களில் 'டிபார்ட்மென்டின்' பிரதிநிதிகளும் அதாவது தேசீய அவை உறுப்பினர்களும்), நகரசபையின் பிரதிநிதிகளும், (டிபார்ட்மென்டின்) பொது அவையினரும் இருக்கின்றனர். ஒவ்வொரு 'டிபார்ட்மென்டு'க்கும் அதன் மக்கள் தொகைக் கேற்பப் பிரதிநிதித்துவம் வழங்கப்படுகின்றது. இவை வட்டாரத் தேர்தல்களாகவும் மறைமுகத் தேர்தல்களாகவும் இருந்தபோதிலும், மத்திய அரசாங்கத்தின் அரசியல் ஆற்றல்களைச் சமநிலைப்படுத்துவதில் ஓரளவு பங்கு பெறுகின்றன. ஏனெனில், தேர்தல் குழுக்களில் பெரும்பாலும் நகரசபையின் பிரதிநிதிகளே இருக்கின்றார்கள். ஆகவே, அவர்களுடைய வாக்குகள் நகரசபைகளின் பெரும்பான்மையோரின் அரசியற்கருத்துகளைப் பிரதிபலிக்கும் எனலாம். ஆயினும், உண்மையில் மூன்றாவது, நான்காவது குடியரசுகளின் பாராளுமன்ற முறையில் இருந்தது போல இப்போதுள்ள ஐந்தாவது குடியரசின் தலைவர் முறை ஆட்சியில் (Presidential regime) செனட்டிற்குத் தன்னிலே அதிக அதிகாரம் இல்லை. தேசீய அவையுடன் ஒப்பிட்டுப் பார்த்தாலும், செனட்டின் அதிகாரங்கள் குறைந்தவையாகவே இருக்கின்றன.

## (ஆ) இத்தாலி

இத்தாலியின் புதிய குடியரசிலுள்ள பாராளுமன்றத்தின் மேல் சபை முந்திய அரசியலமைப்பின்படி அமைக்கப்பட்ட மேல் சபையினின்று முற்றிலும் வேறுபட்டிருக்கிறது. ஏனெனில், இத்தாலிய உறுப்பினர் முன்பு நியமிக்கப்பட்டனர்; இப்போது தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். முடியாட்சியின் கீழ், செனட்டில் அரச மரபினைச் சேர்ந்த இளவரசர்களும் சில குறிப்பிட்ட வகுப்புகளிலிருந்து அரசர் தேர்ந்தெடுத்து நியமிக்கும் உறுப்பினர்களும் இருந்தார்கள். அவ்வுறுப்பினர்கள், வாழ்நாள் முழுவதும் பதவியிலிருந்தார்கள். மதச் சபை அதிகாரிகளும், கீழ்ச்சபையில் குறிப்பிட்ட காலத்திற்கு உறுப்பினர்களாய் இருந்த பிரதிநிதிகளும், அறிவியல், இலக்கியம் ஆகியவற்றில் தேர்ச்சி பெற்றவர்களும், அரசினுக்கு அருந்தொண்டாற்றிய

வர்களும் செனட்டில் இடம் பெற்றூர்கள். செனட்டு உறுப்பினரின் எண்ணிக்கைக்கு வரம்பு இல்லை. அமைச்சரவை அவர்களை நிய மித்து வந்ததால், அது அந்த அதிகாரத்தைப் பயன்படுத்திச் சில வேளை சட்டங்களை நிறைவேற்றுமாறு செனட்டை வற்புறுத்தியது. சான்ருக, 1890இல் ஒரே நேரத்தில் 75 உறுப்பினர்களை நியமித்தது. இதனுலேதான் முசோலினி கூட்டு அரசை அமைத்தபோது பிரதிநிதி களின் சபையை மாற்றியது போலச் செனட்டை முற்றிலும் மாற்றி யமைக்கவேண்டிய தேவையில்லாதிருந்தது. (ஃபைனர் (H.Finer) கூறுவது போல, 'அரசர் மனமுவந்து பாஸிஸ்டுக் கட்சியாரைச் செனட்டில் நிரப்பினர்.' இத்தாலிய முடியரசில் கொள்கை முறைப் படி செனட்டின் அதிகாரங்கள் பிரதிநிதிகளின் சபை அதிகாரங் களுக்கு இணையாய் இருந்த போதிலும், நடைமுறையில் செனட்டின் உறுப்பினர்களை நியமித்த முறையானது, கீழ்ச்சபை நிறைவேற்றிய மசோதாக்களை மேல் சபையின்மேல் திணிப்பதற்குத் துணை செய்தது. உண்மையில் பாஸிஸ்டு வல்லாட்சி தொடங்குவதற்கு முன்னே செனட்டு, பிரதிநிதிகளின் சபையுடன் தான் பெற்றிருந்த இணையதி காரத்தை இழந்துவிட்டது.

புதிய குடியரசின் அரசியலமைப்பு நிறுவிய பாராளுமன்றத்தில் பிரதிநிதிகளின் சபை (Chamber of Deputies), செனட்டு என இரு சபைகள் இருக்கின்றன. அவை இரண்டும் சில காரியங்களுக்காக ஒன்ருக அமரும். உதாரணமாக, (மண்டல அவைகளுடன் சேர்ந்து நாட்டின் தலைவரைத் தேர்ந்தெடுக்கும்போதும், தலைவர் பதவியேற்பு உறுதி மொழி (Oath of Office) அளிக்கும்போதும், தேவையானுல் அவரைக் குற்றம் சாட்டுவதற்கும் கூட்டமர்வு நடைபெறுவதுண்டு. நிலப்பிரிவின் அடிப்படையில் செனட்டு உறுப்பினர் தேர்ந்தெடுக்கப் படுகின்றனர்.[1] ஒவ்வொரு மண்டலத்திலும் 200,000 பேருக்கு (அல்லது 100,000 பேருக்குச் சிறிது அதிகமாய் இருந்தாலும்) ஓர் உறுப்பினர் வீதம் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். லா வாலே டி ஆவோஸ்டா என்ற மிகச் சிறிய மண்டலத்தைத் தவிர மற்ற மண்ட லங்கள் எல்லாம் உறுப்பினர் அறுவரையாவது அனுப்புகின்றன. 25 வயதான எல்லாக் குடிமக்களும் செனட்டின் உறுப்பினர்களை நேர்முகமாகத் தேர்ந்தெடுக்கின்ருர்கள்.

ஆயினும், இத்தாலியச் செனட்டின் அமைப்பில் தேர்தல் கொள் கைக்கு இரு விதி விலக்குகள் காணப்படுகின்றன. அரசியல் தொண்டிற் கும், நாட்டு வாழ்வின் பிற துறைகளில் பெற்ற சிறப்பிற்கும் மதிப் பளிக்க வேண்டும் என்ற நோக்குடனே இவ்வித விலக்குகள் ஏற்படுத்

---

1. இத்தாலியக் குடியரசின் மண்டல அமைப்பைப் பற்றி நான்காவது இயல் ஒன்பதாவது பிரிவில் பார்க்க.

தப்பட்டுள்ளன. இவற்றைப் பற்றிக் குறிப்பிடும்போது அரசியலமைப்பு, 'குடியரசின் முந்திய தலைவர்கள் செனட்டின் உறுப்பினர்களாக வாழ்நாள் முழுவதும் அமர்வதற்கு உரிமை பெற்றுள்ளார்கள் ஆனல், அவர்கள் இவ்வுரிமையைப் பெற மறுக்கலாம்,' என்றும், 'இத்தாலியக் குடியரசின் தலைவர் சமூக, அறிவியல், கலை, இலக்கியத்துறைகளிலே சிறப்புயர்வு பெற்ற ஐவரை அவர்கள் வாழ்நாள் முழுவதற்கும் செனட்டின் உறுப்பினர்களாக நியமிக்கலாம்,' என்றும் கூறுகின்றது.

செனட்டுப் பொதுவாக ஆறு ஆண்டுகள் பதவியிலிருக்கும். ஆனல், பிரதிநிதிகளின் சபையின் காலம் ஐந்து ஆண்டுகளே. சபையைப் போலவே செனட்டும் பதவிக்காலம் முடிவதற்கு முன்னே கலைக்கப்படலாம். எடுத்துக்காட்டாக, 1958இல் இரு சபைகளும் ஒரே காலத்தில் கலைக்கப்பட்டு, இரண்டிற்கும் பொதுத் தேர்தல் நடைபெற்றது. இரு சபைகளின் உறுப்பினர்களும் ஊதியம் பெறுகின்றனர்கள். அவர்களுக்கு எவ்வளவு ஊதியம் வழங்குவதென்பதை இடையிடையே சட்டம் நிருணயிக்கிறது. மசோதாக்களைத் தொடங்கி வைப்பதில் இரு சபைகளுக்கும் இணையான அதிகாரம் உண்டு, மக்களுக்கும் தொடங்க உரிமையுண்டு.[1] ஆனல், ஒரு மசோதா பிரதிநிதிகளின் சபைக்கு அல்லது செனட்டிற்கு வாதத்திற்கு வருமுன் அம்மசோதாவை ஓர் ஆணைக் குழுவின் (Commission) முன் ஆய்வுக்காகச் சமர்ப்பிக்க வேண்டும். அரசாங்கத்திற்கு எதிராகக் கண்டனவாக்கு (Vote of Cansure) அல்லது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வருவதற்குச் செனட்டிற்கு உரிமையுண்டு. இவ்வுரிமை பிரெஞ்சு செனட்டிற்கு வழங்கப்படவில்லை ஆதலால், பிரான்ஸில் ஐந்தாவது குடியரசில் இருப்பதைவிட இத்தாலியக் குடியரசில் இரு சபைகளுக்கும் சம அதிகாரம் இருக்கின்றதென்பது புலனகின்றது.

## 6. இரு கூட்டாட்சி அரசுகளில் காணப்படும் தேர்ந்தெடுக்கப்பட்ட செனட்டு

முழுவளர்ச்சியடைந்த இரு கூட்டாட்சிகளாகிய அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் ஆஸ்திரேலியாவிலும் உள்ள செனட்டில் மூன்று முக்கிய இயல்புகளைக் காண்கிறோம். முதலாவது, இரண்டிலும் கூட்டாட்சியின் உறுப்புகளாகிய எல்லா மாநிலங்களுக்கும் செனட்டில் சமப்பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டுள்ளது. இச்சமத்துவம் அவற்றின் இன்றியமையாத இயல்பாகும். ஏனெனில், உண்மையான கூட்டாட்சியில் மாநிலங்கள் தாங்கள் கைவிட்ட இறைமை அதிகாரத்தைத் தங்கள் கட்டுப்பாட்டிற்கு எட்டாத நிறுவனத்திடமோ அல்லது ஒரு மாநிலம் மட்டும் அதிக செல்வாக்கைப் பெற்றுள்ள நிறுவனத்திடமோ ஒப்படைத்தல் கூடாது. இரண்டாவது, இரு

1. 10ஆம் இயலைப் பார்க்க.

நாடுகளிலும், ஒவ்வொரு மாநில மக்களும் அம்மாநிலத்திலிருந்தே செனட்டின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கின்றனர்கள். இத்தேர்தலில் கூட்டாட்சி அரசாங்கம் தலையிடுவதில்லை. இம்முறை மக்கள் தேர்தலின் நன்மைகளையும் மாநிலத்தின் தனித்தன்மையையும் காக்கிறது. மூன்றுவதாக, செனட்டிற்கு நிலையான வாழ்வளிக்கும் வகையில் அதன் உறுப்பினரின் பதவிக் காலத்தை நிருணயித்துள்ளனர். அத்தகைய நிலையான தன்மையை அமெரிக்க செனட்டுப் பெற்றுள்ளது. ஆனால், ஆஸ்திரேலியாவில் அவ்வளவு முழுமையான நிலை நிலவவில்லை. அதன் காரணத்தை விரைவில் பார்ப்போம். இவ்வாறு செனட்டின் ஒரு பகுதியினர் மட்டும் ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஓய்வு பெறுவது அத்தகைய அரசுகளில் மேல் சபைக்கும் கீழ்ச்சபைக்கும் உள்ள வேறுபாட்டினை நன்கு எடுத்துக்காட்டுகிறது. மேலும், மேல் சபையுடன் பொதுமக்கள் தொடர்பு கொண்டு அதைக் கட்டுப்படுத்தி வந்த போதிலும், அது உயர்வும் நன்மதிப்பும் பெற்றுள்ளது.

## (அ) அமெரிக்க ஐக்கிய நாடுகள்

முன்பு நாம் குறிப்பிட்டது போல, அமெரிக்க செனட்டில் உறுப்பினர் நூறு பேர் இருக்கின்றனர். (50 மாநிலங்களுள் ஒவ்வொன்றும் உறுப்பினர் இருவரைத் தேர்ந்தெடுக்கின்றது.) செனட்டின் உறுப்பினர் ஆறு ஆண்டுகள் பதவியிலிருப்பர். இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை உறுப்பினர்களுள் மூன்றில் ஒரு பகுதியினர் ஓய்வு பெறுகின்றனர். இவ்வாறு ஒரு மாநிலத்தில் ஆறு ஆண்டுகளில் இரு செனட்டுக் தேர்தல்கள் நிகழ்கின்றன. அதாவது, ஒவ்வோர் இரண்டாண்டுக் காலத்தின் இறுதியிலும் தேர்தல் நிகழும் ; அதன் பிறகு ஒரு தேர்தல் நிகழாது. எடுத்துக்காட்டாக, நியூயார்க்கு மாநிலம் (1957ஆம் ஆண்டு காங்கிரஸ் தொடக்கத்திற்காக) 1956இல் ஓர் உறுப்பினரைத் தேர்ந்தெடுத்தால், அவர் 1963 வரையில் பதவியிலிருப்பார். ஆகவே, அதே மாநிலம் (1959இன் காங்கிரஸுக்காக) 1958இலும் உறுப்பினர் ஒருவரைத் தேர்ந்தெடுத்தால், அம்மாநிலத்தில் 1960இல் (1961 காங்கிரஸுக்காக) செனட்டுத் தேர்தல் நிகழாது. முதலில் எழுதப்பட்ட அரசியலமைப்பு முதற்செனட்டை வாக்குகளின் மூலம் மூன்று சமபகுதிகளாகப் பிரித்தது. அவற்றுள் முதற்பகுதியினர் இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகும் இரண்டாம் பகுதியினர் நான்கு ஆண்டுகளுக்குப் பிறகும் ஓய்வு பெற்றனர். இவ்வாறு 1789 முதல் அமெரிக்க செனட்டின் உறுப்பினர்களுள் மூன்றில் ஒரு பகுதியினருக்கு மேல் ஓய்வு பெறவில்லை. இது செனட்டிற்கு எப்போதும் ஒரு தனிப் பெருமையைத் தருகின்றது. இதே போல அண்மையிலிருந்து அதன் உறுப்பினர்களைப் பொதுமக்கள் தேர்ந்தெடுப்பது அதற்குப் பேராற்றலையும் வலிமையையும் வழங்குகிறது. முதலில்

ஒவ்வொரு மாநிலத்திலும் சட்ட மன்றம் செனட்டின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தது. ஆனால், நாம் முன்னர்க் கூறியது போல, 17ஆம் திருத்தத்தின்படி (1913) அவர்களை மக்கள் தேர்ந்தெடுக்கும் முறை நாடு முழுவதும் கொண்டுவரப்பட்டது. செனட்டு உறுப்பினர் தமது மாநில அரசாங்கத்தின் பிரதிநிதியாய் ஒரு போதும் இருந்ததில்லை. அதற்கு மாறாக, அவர் கூட்டுச் சமுதாயமாய் அமைந்த மாநில மக்களின் பிரதிநிதியாகவே இருந்தார். மேலும், செனட்டு உறுப்பினர் ஒவ்வொருவரும் தமது மாநிலத்தின் பிரதிநிதியாக மட்டுமே இருக்கிறார். உறுப்பினர் சிலர் ஒன்று சேர்ந்து தம் மாநிலங்களின் பொதுப் பிரதிநிதிகளாய் இருப்பதில்லை. ஒவ்வொரு பிரதிநிதியும் தமது சொந்தக் கருத்துக்கேற்ப வாக்களிக்க வேண்டும். இவ்வாறு இருக்க வேண்டும் என்பதற்குக் காரணம் என்னவென்றால், ஒரே மாநிலத்திலிருந்து வெவ்வேறு காலத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் எதிர்க்கட்சிகளின் உறுப்பினர்களாய் இருக்கலாம் என்பதே.

அமெரிக்க செனட்டின் உறுப்பினராவதற்கு ஒரு சில எளிய தகுதிகளே உண்டு. அவர் ஒன்பது ஆண்டுகளாவது அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியாய் இருந்திருக்க வேண்டும். அவர் முப்பது வயதுள்ளவராயும், தேர்தலின் போது எந்த மாநிலத்தின் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றாரோ அந்த மாநிலத்தில் உறைபவராயும் இருத்தல் வேண்டும்.

செனட்டின் அதிகாரங்கள் பற்பல. உலகிலுள்ள எந்த மேல் சபைக்கும் அத்தகைய உண்மையான நேர்முக அதிகாரங்கள் இல்லை. அது அயல் நாட்டுச் செய்திகள் போன்ற முக்கியமான தேசியக் காரியங்களில் மட்டுமன்றி, பணம் உட்பட எல்லாக் கூட்டாட்சிச் சட்ட ஆக்க அலுவல்களின் நுண்ணிய விவரங்களிலும் ஈடுபடுகிறது. செனட்டு எத்தகைய ஆற்றல் பெற்றுள்ளதென்றால், அதுதான் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஒரே உண்மையான கூட்டாட்சிச் சபை எனச் சிலர் கருதுகின்றனர். நிருவாகத்துறை அல்லது பிரதிநிதிகளின் சபை சட்ட முறையில் பெற்றுள்ள எந்த அதிகாரமும், செனட்டு அரசியலமைப்பு முறை வாயிலாகப்பெற்று அனுபவித்துவரும் உரிமைகளை மாற்றியமைக்க இயலாது. செனட்டு, பல நிலையான குழுக்களாகப் (Standing Committees) பிரிக்கப்பட்டிருப்பதால், அதன் முன் கொண்டுவரப்படும் பல வகையான செய்திகளை ஆய்வதற்கும், நிருவாகத் துறையுடன் நெருங்கிய தொடர்புகொள்வதற்கும் நல்ல வாய்ப்பு இருக்கிறது. நிருவாகத்துறை சட்டமன்றத்தினின்று பிரிந்து தனித்துச் செயற்படுகிறதென்பதைப் பற்றிப் பிறகு பார்ப்போம். செனட்டின் குழுக்களில் எல்லாம் மிக்க ஆற்றலுடையது அயல் நாட்டுச் செய்திகளின் குழுவாகும். ஏனெனில், இத்துறையில் செனட்டு, குடியரசுத் தலைவரின் செயல்களை முடிவாகக் கட்டுப்

படுத்துகிறது. உடன்படிக்கைகளை ஏற்பதற்கு முழுக் காங்கிரஸின் இசைவு தேவையில்லை; செனட்டு இணங்குதல் போதும்.[1] இதை நாம் முற்றிலும் சரியென்று ஏற்றுக்கொள்ளலாம். ஏனெனில், பிரதிநிதிகளின் சபையில் மாநிலங்களுக்கு வெவ்வேறு விகிதத்தில் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டுள்ளது. முதல் உலகப் போரின் இறுதியில் அமெரிக்க செனட்டின் தூதாண்மை ஆற்றல் மிகத் தெளிவாய் விளங்கியது. அப்போது தலைவர் வில்சன் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சார்பாக உடன்படிக்கைகளிலும், சர்வதேச சங்கத்தின் ஒப்பந்தத்திலும் கையொப்பமிட்டார். ஆனால், செனட்டு, தலைவர் செய்த எல்லாச் சமாதான ஏற்பாடுகளையும் ஏற்க மறுத்தது.

## (ஆ) ஆஸ்திரேலியா

அமெரிக்க செனட்டைப்போல, ஆஸ்திரேலிய செனட்டும் கூட்டாட்சிக் கொள்கையைப் பிரதிபலிக்கிறது. அதன் அரசியலமைப்பை வரையும்போது மேல்சபைக்கு, மாநிலங்களின் சபை (House of the States), மாநிலங்களின் பேரவை (States Assembly) என்ற பெயர்கள் வழங்குவது பற்றி ஆய்வு நடந்தது. இதிலிருந்து ஆஸ்திரேலிய செனட்டிலும் கூட்டாட்சிக் கொள்கை நிலவுகிறதென்பது தெரிகிறது. முக்கியமான மாநிலங்கள் எதிர்த்த போதிலும், இறுதியில் எல்லா மாநிலங்களுக்கும் சமப்பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டது. ஆஸ்திரேலிய செனட்டில் மொத்த உறுப்பினர் அறுபதின்மர் இருக்கின்றனர். பொதுநலக்கூட்டிலுள்ள ஆறு மாநிலங்களுள் ஒவ்வொன்றும் பப்பத்துப் பிரதிநிதிகளை அனுப்புகின்றன. ஒவ்வொரு மாநிலத்தின் பிரதிநிதிகளின் எண்ணிக்கையைக் கூட்டவும் குறைக்கவும் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் உண்டென அரசியலமைப்புக் கூறியபோதிலும், மாநிலங்களுக்குச் சமப்பிரதிநிதித்துவம் வழங்கும் முறையை அது அழிக்க இயலாது.[2] அந்த வாக்காளர்களே செனட்டிற்கும் பிரதிநிதிகளின் சபைக்கும் வாக்களிக்கின்றனர்கள். ஆனால், தொகுதிப் பிரிவில் வேறுபாடு இருக்கிறது. செனட்டுத் தேர்தல்களுக்கு மாநிலம் முழுவதும் ஒரே தொகுதியாகக் கருதப்படுகிறது. மேலும், அம்மாநிலம் எத்தனைப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கவேண்டுமோ, அத்தனை வாக்குகளை வாக்காளர் அளிக்கின்றனர். செனட்டு உறுப்பினர்கள் ஆறு ஆண்டுகள் பதவியில் இருக்கின்றனர்கள். செனட்டில் பாதிப்பேர் மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை ஓய்வு பெறுகின்றனர். இவ்வாறு ஒரு பகுதியினர் ஓய்வு பெறுவதனால் ஆஸ்திரேலியாவில், அமெரிக்காவில் நிகழ்வது போல, செனட்டு நிலையான வாழ்வு பெறுவதில்லை. ஏனெனில், அரசியலமைப்பில் இன்னொரு கட்டுப்பாடு இருக்கிறது.

1. போர் தொடங்கும்போது முழுக்காங்கிரஸின் இசைவுதேவை.

2. முதலில் ஒவ்வொரு மாநிலமும் ஆறு பிரதிநிதிகளை அனுப்பியது. 1948ஆம் ஆண்டின் சட்டம் அதைப் பத்தாக உயர்த்தியது.

அதாவது, இரு சபைகளுக்கிடையே முரண்பாடு ஏற்படும் போது, கவர்னர் ஜெனரல் இரு சபைகளையும் கலைத்துவிடலாம். அப்போது முற்றிலும் புதியதொரு செனட்டும், புதிய பிரதிநிதிகளின் சபையும் தேர்ந்தெடுக்கப்படும். ஆனால், ஆஸ்திரேலியப் பொதுநலக்கூட்டின் வரலாற்றிலே இது இரு முறைதான் நிகழ்ந்திருக்கிறது. 1914இலும் பிறகு 1951இலும் இரு சபைகளுக்கும் இடையே பெரும்பிணக்குகள் ஏற்பட்ட போதுதான் இவ்வாறு நடந்தது.

ஆஸ்திரேலிய செனட்டு, அமெரிக்க செனெட்டைப் போலல்லாமல், முற்றிலும் சட்ட ஆக்க அலுவல்களையே ஆற்றி வருகிறது. அதற்குச் 'சட்ட மன்றத்தின் முன் கொண்டுவரப்படும் எல்லாச் சட்டங்கள் பற்றியும் பிரதிநிதிகளின் சபைக்குள்ள அதே அதிகாரம் உண்டு.' ஆனால், பண மசோதாக்கள் இதற்கு விதி விலக்கு. அவற்றை முதலில் கீழ்ச்சபையிலேதான் கொண்டுவர வேண்டும். செனட்டுக்கு அவற்றைத் திருத்த இயலாது ; ஆனால், தள்ளிவிடலாம். அரசியலமைப்பைத் தீட்டியவர்கள் வேண்டுமென்றே செனட்டை 'மாநிலங்களின் சபை'யாக அமைத்தார்கள். ஆனால், நடைமுறையில், அது கீழ்ச்சபையைப்போல அரசியல் கொள்கைப்படி பிரிந்து, எல்லாப் பொருள்களையும் மாநிலங்களின் கண்கொண்டு பாராமல், கட்சி நோக்குடனே பார்த்து வருகின்றது. இதன் விளைவாகத் தொடர்ச்சியாக இரு பொதுத் தேர்தல்களில் வெற்றி பெறும் கட்சி செனட்டில் பெரும்பான்மையான பிரதிநிதிகளைக் கட்டுப்படுத்தி வருகிறது.

## 7. சுவிட்ஸர்லாந்திலும் ஜெர்மனியிலும் உள்ள மேல் சபைகள்

சுவிஸ் நாட்டுக் கூட்டத்திலுள்ள மாநிலங்களின் சபை (Standerat) அமெரிக்க, ஆஸ்திரேலிய செனட்டுகளிலிருந்து பெரிதும் வேறுபட்டிருக்கின்றது. கூட்டாட்சி அவையின் மேல் சபை என்ற முறையில் அதை நுணுகி ஆராய்தல் சாலச்சிறந்தது. அதே போல, ஜெர்மானிய அரசின் கூட்டாட்சிப் பண்பை ஹிட்லர் அழிக்கு முன் வெய்மார் குடியரசில் நிலவிய பேரரசு அவையின் (Reichsrat) அமைப்பையும் அலுவல்களையும் உன்னிப் பார்ப்பதும் நன்று. ஏனெனில், அதை பான் (Bonn) அரசியலமைப்பின்படி நிறுவப்பட்ட ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசின் கூட்டாட்சி அவைக்கு (Bundesrat) ஒரு மேற்காட்டாக ஓரளவு பயன்படுத்தினர். நாம் ஏற்கெனவே பார்த்ததுபோல, பான் அரசியலமைப்பு, 1949இல் ஜெர்மனியைக் கைப்பற்றிய மேற்கு நாடுகளின் ஆதரவில் நிலைநாட்டப்பட்டது.

## (அ) சுவிஸ் நாட்டுக் கூட்டம்

சுவிஸ் மாநிலங்களின் சபை ஒரு வகையில் அமெரிக்க, ஆஸ்திரேலிய செனட்டை ஒத்திருக்கின்றது. ஏனெனில், அதில் கோட்டங்களுக்கு (மாநிலங்களுக்கு)ச் சமப்பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டுள்ளது. அதில் 44 பேர் உறுப்பினர் இருக்கின்றனர். அதாவது, 19 கோட்டங்களுள் ஒவ்வொன்றும் இவ்விரண்டு உறுப்பினர்களை அனுப்புகின்றன. எஞ்சிய மூன்று கோட்டங்களும் ஆறு அரைக் கோட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இந்த அரைக் கோட்டங்களுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பிரதிநிதியை அனுப்புகின்றது. இதைத் தவிர வேறு வகைகளில் சுவிஸ் மேல் சபைக்கும் அமெரிக்க, ஆஸ்திரேலிய மேல் சபைக்கும் ஒற்றுமை இல்லை. தேர்தல், உறுப்பினரின் பதவிக்காலம் போன்ற விவரங்களையெல்லாம் அரசியலமைப்புக் கோட்டங்களுக்கே விட்டுவிட்டது. ஆகவே, சில கோட்டங்களிலிருந்து செல்லும் பிரதிநிதிகள் ஓராண்டிற்கும், வேறு சிலவற்றிலிருந்து செல்பவர்கள் இரண்டு ஆண்டுகளுக்கும், இன்னும் சிலர் மூன்று ஆண்டுகளுக்கும், மற்றும் சிலர் நான்கு ஆண்டுகளுக்கும் பதவியில் இருக்கின்றனர். பல கோட்டங்களில் பிரதிநிதிகளை மக்கள் தேர்ந்தெடுக்கின்றார்கள். ஆனால், ஏழு கோட்டங்களில், அவற்றின் சட்டமன்றங்கள் அவர்களைத் தேர்ந்தெடுக்கின்றன. ஆனால், உண்மையில் சுவிஸ் மாநிலங்களின் அவையைக் கூட்டாட்சிச் சபையென்றோ, அல்லது மேல் சபையென்றோ வழங்குவது பொருந்தாது. ஏனெனில், அது உண்மையிலே கூட்டாட்சிச் சபையாய் இருக்குமென்றால், மாநிலங்கள் தங்கள் இறைமையை எந்த அரசாங்கத்திடம் ஒப்படைத்திருக்கின்றனவோ, அதினின்று மாநிலங்கள் நலத்தை அது காக்க முற்படும். இவ்வாறு செய்வது அதன் அலுவலில் ஒரு பகுதியாக இருக்க வேண்டும். அது மேல் சபையாய் இருக்குமென்றால், மறுப்பாணை (Veto) போன்ற வரையறுக்கப்பட்ட சில சட்ட ஆக்க அலுவல்களைப் பெற்றிருக்கும்.

ஆயினும், உண்மையில் சுவிட்ஸர்லாந்தில் இரு சபைகளும் எல்லாவற்றிலும் இணைந்தே செயலாற்றுகின்றன. அவை இரண்டும் சட்டங்களைத் தொடங்குவதைத் தமக்குள் பகிர்ந்துகொள்கின்றன. பாராளுமன்றத்தின் ஒவ்வொரு கூட்டக் காலம் (Session) தொடங்கும் போதும் அவற்றின் தலைவர்கள் இதைப்பற்றிய ஏற்பாடுகளைச் செய்து கொள்கின்றார்கள். அமைச்சர்கள் ஒரு சபைக்கும் பொறுப்புள்ளவர்கள் அல்லர். அவர்கள் ஒரு சபையிலும் வாக்களிக்கவும் இயலாது. ஆனால், அங்குக் கேட்கப்படும் கேள்விகளுக்கு விடையளிக்க வேண்டும். வழக்கத்திற்கு முரணில்லாத சில காரியங்களைப் பற்றித் தீர்மானிக்கும் போது இரு சபைகளும் ஒன்றாய் அமர்ந்து ஒரே சபை

போன்று வாக்களிக்கும். ஆகவே, சுவிஸ் சட்ட மன்றம், சுவிஸ் நிருவாகத்துறையைப் போன்று தனித் தன்மையுடையது. மேல் சபைக்கும் கீழ்ச்சபைக்கும் அலுவல்களில் வேறுபாடில்லாத சட்ட மன்றம் உலகிலே அது ஒன்றுதான். கூட்டாட்சிச் சட்டமன்றம் செய்யக் கூடிய எல்லாவற்றிற்கும் இரு சபைகளின் இணக்கமும் தேவை. ஆனால், கூட்டாட்சி அரசாங்கத்தின் இரண்டு உறுப்புகளாகிய நிருவாகத் துறையும் சட்டமன்றமும் பொதுமக்களின் விருப்பத்திற்கு ஒரே விதமாகப் பணிகின்றன. இவ்விருப்பம் குடியொப்பம் வாயிலாக வெளிப்படுகிறது. இதைப்பற்றி அடுத்த இயலில் விரிவாகப் பார்ப்போம்.

## (ஆ) ஜெர்மானியக் குடியரசு

1919ஆம் ஆண்டு நிறுவப்பட்ட ஜெர்மானிய அரசியலமைப்பின் 60ஆம் விதி, 'ரைக்கின் (Reich) சட்ட ஆக்கத்திலும் ஆட்சியிலும் ஜெர்மானிய மாநிலங்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பதற்காக ரைக்ஸ்ராத் (Reichsrat) அமைக்கப்படுகிறது,' எனத் தெளிவாகக் கூறியது; மேலும், மாநில அரசாங்கங்களின் உறுப்பினர்கள் மூலமாக மாநிலங்களுக்குப் பிரதிநிதித்துவம் வழக்கப்பட்டுள்ளது என்றும் கூறியது. இது பழைய பேரரசில் நிலவிய முறையாகும். ஆனால், முன்பு 'புந்தஸ்ராத்' (Bundesrat) அல்லது 'புந்த்' அவை உண்மையான சட்ட ஆக்க மன்றமாய் இருந்தது. ஆனால், பிறகு நிலை முற்றிலும் மாறிவிட்டது: வெய்மார் குடியரசில் 'ரைக்ஸ்ராத்' தனது ஆற்றலை இழந்தது; அதற்குப் பதிலாக 'ரைக்ஸ்டாக்' (Reichstag) வலிமை பெற்றது. 'ரைக்ஸ்ராத்'துக்குச் சட்டத்தைத் தொடங்கும் உரிமை இல்லை. அந்த அதிகாரம் நிருவாகத்துறைக்கும் 'ரைக்ஸ்டாக்'குக்கும் மட்டுமே இருந்தது. மேலும், சட்டத்தை நிறைவேற்றுவதற்கு 'ரைக்ஸ்ராத்' தின் இணக்கம் தேவையில்லை. ஆனால், அரசாங்கம் ஒரு மசோதாவை 'ரைக்ஸ்டாக்'கில் கொண்டுவருவதற்கு 'ரைக்ஸ்ராத்'தின் இசைவு தேவை. 'ரைக்ஸ்ராத்' முக்கிய, நூதனமான ஒரு மறுப்பாணையைப் பயன்படுத்தியது. அது ரைக்ஸ்டாக் நிறைவேற்றிய ஒரு மசோதாவை ஏற்க மறுத்தால், அம்மசோதாவைக் கீழ்ச்சபை இறுதியாக நிறைவேற்றிய இரு வாரங்களுக்குள் அரசாங்கத்திடம் தனது எதிர்ப்பை அறிவிக்கவேண்டும். அதன் பிறகு இரு சபைகளுக்கும் இணக்கம் உண்டாகவில்லையாயின், தலைவர் அம்மசோதாவைக் குடியொப்பத்திற்கு விடலாம். அவர் அதை மூன்று மாதங்களுக்குள் செய்யாமலிருந்து, 'ரைக்ஸ்டாக்' அந்த மசோதாவை மீண்டும் (மொத்த உறுப்பினருள்) மூன்றில் இரண்டு பகுதி பெரும்பான்மை வாக்குகளினால் நிறைவேற்றினால், தலைவர் அச்சட்டத்தை அறிக்கையிடவேண்டும், அல்லது அதை மக்கள் முன் சமர்ப்பிக்க வேண்டும்.

இவ்வாறு, ஜெர்மானிய 'ரைக்ஸ்ராத்' தனி மாநிலங்களின் கருத்துகளை எதிரொலித்த போதிலும், அதில் தனி மாநிலங்களுக்கு முன்பிருந்தது போலச் செல்வாக்கு இல்லை. மேல் சபையில் மாநிலங்களுக்குச் சமப் பிரதிநிதித்துவம் வழங்கவேண்டும் என்ற கூட்டாட்சிக் கொள்கை அதில் இடம் பெறவில்லையெனினும், பெரிய மாநிலங்கள் தங்கள் செல்வாக்கினால் சிறிய மாநிலங்களுக்குத் தீங்கு செய்யாதவாறு அது தடுத்தது. மேலும், அது பொதுமக்கள் தேர்ந்தெடுத்த சபையைவிட அதிக ஆற்றல் உடையதாய் இருந்ததால், நாட்டிற்கும் தீங்கு விளையாதவாறு தடுத்தது. மேலும், அது ஒரு மசோதாவை எதிர்த்தால், வழக்கமாக வழங்காத பெரும்பான்மை வாக்குகளினால் அம்மசோதாவை ஆதரிக்குமாறு கீழ்ச்சபையை வற்புறுத்துகிறது. அல்லாவிடில், அம்மசோதாவைக் குடியொப்பத்திற்கு விடுமாறு கட்டாயப்படுத்துகிறது. இதனால், 'ரைக்ஸ்ராத்', மேல் சபைக்குரிய பெருமதிப்பைப் பெறுவதுடன், இறைமை அதிகாரமுடைய மக்கள் தங்கள் பிரதிநிதிகளைக் கட்டுப்படுத்துவதற்கும் வழி வகுக்கிறது.

1949ஆம் ஆண்டின் பான் அரசியலமைப்பின்படி கூட்டாட்சி அவையாகிய 'புந்தஸ்ராத்'தில், முந்திய மேல் சபைகளில் இருந்தது போல, கூட்டாட்சியை அமைத்துள்ள மாநிலங்களின் (Lander) அரசாங்கப் பிரதிநிதிகள் இருந்தார்கள். அதில், வெய்மார் குடியரசில் இருந்தது போல, மாநில மக்கள் தொகைக்கேற்பப் பிரதிநிதிகளின் எண்ணிக்கையும் வேறுபட்டது. அதன்படி, அறுபது இலட்சம் மக்களுக்கு அதிகமாக உள்ள மாநிலங்கள் ஐந்து பிரதிநிதிகளையும், அறுபது இலட்சத்துக்குக் குறைவாகவும் இருபது இலட்சத்திற்கு அதிகமாகவும் உள்ள மாநிலங்கள் நான்கு பிரதிநிதிகளையும், இருபது இலட்சத்திற்குக் குறைந்த மாநிலங்கள் மூன்று பிரதிநிதிகளையும் அனுப்புகின்றன. ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசில் 'புந்தஸ்ராத்' எவ்வளவு முக்கியப் பங்கு பெறப் போகின்றது என்பது வருங்கால அரசியல் நிகழ்ச்சிகளைப் பொறுத்தது. அவற்றின் போக்கைப்பற்றி இப்போது கூறுவது எளிதன்று.

## 8. ரஷ்யக் கூட்டாட்சியும் யூகோஸ்லாவியக் கூட்டாட்சி மக்கள் குடியரசும்

ரஷ்யக் கூட்டாட்சியும் யூகோஸ்லாவியக் கூட்டாட்சி மக்கள் குடியரசும் மேற்கு நாடுகளின் அமைப்பைப் பின்பற்றுவிடினும், கூட்டாட்சி அரசுகள் என்ற முறையில் ஓரளவு அவற்றைப் போலவே அமைக்கப்பட்டிருக்கின்றன. இவ்விரண்டு நாடுகளிலுமுள்ள கூட்டாட்சியின் மேல் சபையினது அமைப்பையும் அலுவல்களையும் அரசியல் முறைமைக்குட்பட்ட அரசுகள் எனப் பொதுவாக நாம் வழங்கும்

நாடுகளில் உள்ள மேல் சபையின் அமைப்புடனும் அலுவல்களுட னும் ஒப்பு நோக்குதல் முக்கியமானதாகும். அரசியலமைப்புக்குட் பட்ட அரசுகளின் மேல் சபைகளை ஏற்கெனவே ஆராய்ந்துவிட்டோம்.

ரஷ்யாவின் ஸ்டாலின் அரசியலமைப்பின் (1936) மூன்ருவது இயல், ஐக்கியத்திலுள்ள அரசாங்க அதிகாரத்தின் மேலான நிறு வனங்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. தலைமைச் சோவியத்து (Supreme Soviet) என்பது மிக முக்கியமான நிறுவனம். அது இருக்கும் இடத்தில் முன்னர் ஐக்கியத்தின் சோவியத்துக் காங்கிரஸ் (Congress of Soviets of the Union) இருந்தது. தலைமைச் சோவியத்தில் இரு சபைகள் உள்ளன. அவற்றிற்கு ஐக்கியத்தின் சோவியத்து (Soviet of the Union), நாட்டினங்களின் சோவியத்து (Soviet of Nationalities) என்பன பெயர். ஐக்கியத்தின் சோவியத்தை மக்கள் தேர்ந்தெடுக் கிருர்கள் ; 300,000 பேர்களுக்கு ஒரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுக் கின்ருர்கள். அச்சபையில் 600 பேர் உறுப்பினர் இருக்கின்றனர். இரண்டாவது சபையின் உறுப்பினர்களைக் கூட்டாச்சிக் குடியரசு களின் (Union Republics)[1] மக்கள் தேர்ந்தெடுக்கின்ருர்கள். பிரதி நிதிகளின் எண்ணிக்கை ஆட்சிப் பிரிவுகளுக்கேற்ப வேறுபட்டிருக்கி றது.[2] ஒவ்வொரு சபையும் நாலு ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப் படுகின்றது. இரண்டிற்கும் சமமான சட்ட ஆக்க அதிகாரம் உண்டு. ஒரு சட்டத்தை நிறைவேற்ற ஒவ்வொரு சபையிலும் சாதாரணப் பெரும்பான்மை வாக்குகள் போதும். தலைமைச் சோவியத்தின் பிரி ஸீடியம் (Presidium) சாதாரணமாக ஆண்டுக்கு இரு முறை பாராளு மன்றத்தைக் கூட்டும். சிறப்புச் செய்திகளுக்கெனத் தனிக் கூட்டங் களைக் கூட்டலாம்.

1946ஆம் ஆண்டின் யூகோஸ்லாவியக் கூட்டாட்சி மக்கள் குடி யரசின் அரசியலமைப்பில் ஏழாவது இயலில் 28 விதிகளைக்கொண்ட நீண்ட பகுதியொன்று அரசாங்க அதிகாரத்தின் மேலான கூட் டாட்சி நிறுவனங்களைப் பற்றிக் கூறுகிறது. கூட்டாட்சிப் பாராளு மன்றத்திற்குக் குடியரசின் மக்கள் அவை (People's Assembly of the Republic) என்பது பெயர். அதில் கூட்டாட்சி அவை (கீழ்ச்சபை) என்றும், நாட்டினங்களின் அவை (மேல் சபை) என்றும் இரண்டு அவைகள் உண்டு. 50,000 பேருக்கு ஒரு பிரதிநிதி என்ற அடிப்

1. ரஷ்யாவில் மாநிலங்களுக்குக் கூட்டாட்சிக் குடியரசுகள் என்பது பெயர்.

2. 1947இன் திருத்தப்படி ஒவ்வொரு கூட்டாட்சிக் குடியரசும் 25 பிரதிநிதிகளையும் தன்னுட்சி உரிமை பெற்ற குடியரசு (Autonomous Republic) ஒவ்வொன்றும் 11 பிரதிநிதிகளையும், தன்னுட்சி உரிமை பெற்ற பகுதி (Autonomous Region) ஒவ்வொன்றும் 5 பிரதி நிதிகளையும் தேர்ந்தெடுக்கின்றன.

படையில் கூட்டாட்சி அவையின் உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். நாட்டினங்களின் அவையின் உறுப்பினர்களை மக்கள் தேர்ந்தெடுக்கின்றனர்கள். ஒவ்வொரு குடியரசும் 30 பிரதிநிதிகளையும், ஒவ்வொரு தன்னாட்சி உரிமை பெற்ற மாநிலமும் (Autonomous Region) 20 பிரதிநிதிகளையும், ஒவ்வொரு தன்னாட்சி உரிமை பெற்ற பகுதியும் (Autonomous Region) 15 பிரதிநிதிகளையும் தேர்ந்தெடுக்கின்றன, இரு சபைகளும் நான்கு ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. அவை இரண்டிற்கும் சமமான அதிகாரங்கள் உண்டு. சாதாரணமாக, அவை இரண்டும் தனித்தனியாக அமரும்; ஆனால், அரசியலமைப்பில் குறிப்பிட்டுள்ள சில முக்கியச் செய்திகளைத் தீர்மானிக்க ஒன்றாகக் கூடும். எடுத்துக்காட்டாக, நிருவாகத்துறையைத் தேர்ந்தெடுக்கும் போதும், அரசியலமைப்புத் திருத்தத்தை அறிக்கையிடும் போதும் கூட்டமர்வு நடைபெறும். சோவியத்துப் பிரிஸிடியம் போன்ற அமைப்புதான் நிருவாகத்துறை. கூட்டமர்வில் பெரும்பான்மை வாக்குகளால் தீர்மானங்கள் நிறைவேற்றப்படும். ஆனால், ஒவ்வொரு சபையிலும் பெரும்பான்மையான உறுப்பினர்கள் அமர்ந்திருந்தால் மட்டுமே தீர்மானங்களை நிறைவேற்றலாம்; ஏதாவது ஒரு சபையில் மசோதாக்களைக் கொண்டுவரலாம். அங்கு அது நிறைவேறிய பிறகு மறு சபைக்கு அனுப்பப்படும். மறு சபை அதை நிறைவேற்றவில்லையெனில், அது ஓர் இணக்கக் குழுவிற்குச் (Coordinating Committee) செல்கிறது. அக்குழுவில் இரு சபைகளிலுமிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட சம எண்ணிக்கையுள்ள உறுப்பினர்கள் இருப்பார்கள். இணக்கக் குழுவின் அறிக்கைக்குப் பிறகும் இரு சபைகளுக்கும் இணக்கம் ஏற்படவில்லையென்றால், இரு சபைகளும் கலைக்கப்படுகின்றன. பிறகு புதிய தேர்தல்கள் நிகழும்.[1]

சோவியத்து ரஷ்யா, யூகோஸ்லாவியக் குடியரசு ஆகிய இரு கூட்டாட்சிகளும் நமது காலத்தில் தோன்றிய பெரும்புரட்சிகளின் விளைவாகப் பிறந்த போதிலும், அவற்றிலும் மேல் சபையை ஒரு முக்கிய அலுவலை ஆற்றும் நிறுவனமாகக் கருதுகின்றனர் என்பது இச்சுருக்கமான ஆய்விலிருந்து புலனாகும். அரசியலமைப்பில் காணப்படும் உயர்நோக்கங்கள் உண்மையில் நடைமுறையில் நிறைவேறாமல் இருக்கலாம். ஆயினும், நோக்கங்களாவது இருக்கின்றன என்பது வருங்காலத்தில் நல்ல பயனை விளைக்கலாம்.

---

1. யூகோஸ்லாவியாவிற்குப் புதிய அரசியலமைப்பொன்றை வரைவதற்கு முயற்சிகள் நடைபெற்ற போது, கூட்டாட்சிப்பேரவையின் அமைப்பைப் பற்றியும் 1962ஆம் ஆண்டில் வாதம் நிகழ்ந்தது. இம்முயற்சிகளைப் பற்றி 5ஆம் இயலில் 8ஆம் பகுதியில் குறிப்பிட்டோம்.

# 9. முடிவுரை

இப்பகுப்பாராய்ச்சி ஓரளவு விரிவானதாகவும் சில வேளை களைப் பூட்டுவதாகவும் இருந்த போதிலும், சுருக்கமானதெனவே கூறவேண்டும். ஏனெனில், சுவை தரும் பல விவரங்களை வேண்டுமென்றே விட்டுவிட்டோம். இங்கு ஆயத்தக்க மேல் சபைகளின் அரசியல் முறை அலுவல்களை வலியுறுத்தும் முக்கியச் செய்திகளை மட்டும் மாணவர்களுக்கு அறிவுறுத்த வேண்டும். இத்தகைய பகுப்பாராய்ச்சியிலிருந்து பின் காணும் முடிவுகளுக்கு வரலாம் : முதலாவது, இக்காலத்தில் எந்தப் பெரிய அரசும் ஒரு சபையுள்ள சட்ட மன்றத்தை விரும்புவதில்லை ; இரண்டாவது, மேல் சபையைத் தேர்ந்தெடுப்பதில் மக்கள் குறைந்த பங்கு பெறுவார்களானல், அதற்கேற்ப அதன் ஆசிரியர் தொடர்புகளும் துணிக்கப்படுகின்றன. இது காரணமாக அது தனது ஆற்றலை இழக்கின்றது. மூன்ருவதாக, மேல் சபை வழக்கொழிந்து போகாமல், சீரமைக்கப்பெற்று, புத்துயிர் பெற வேண்டுமென்ற எண்ணம் நிலவுகிறது. நான்காவதாக, கூட்டாட்சி முறை நன்கு நடைபெற உண்மையான அதிகாரமுடைய மேல் சபை இன்றியமையாதது. ஆயினும், பிற்காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் காரணமாக இதை முற்றிலும் ஏற்க இயலாது. குறிப்பாக ஆஸ்திரேலியக் கூட்டாட்சியைப் பொறுத்த வரையில் இது உண்மை. இச்செய்திகள் எல்லாம் ஒப்பீட்டு அரசியலைப் பயிலும் மாணவருக்கு மிகச் சுவையாக இருக்கும்; சிறப்பாக, பிரிட்டிஷ் குடிகளுக்கு அதிக விருப்பமாக இருக்கும். ஏனெனில், இவை பிரபுகள் சபையைச் சீரமைப்பதற்குப் பயன்படும்.

## படிக்க வேண்டிய நூல்கள் :

1. பேஜ்ஹாட் (Bagehot) : English Constitution, கட்டுரை 10.

2. பிரைஸ் (Bryce) : American Commonwealth, தொகுதி 1 ; இயல் 10-12, 18.

3. டெனிஸாவ் (Denisov) : Soviet State Law, இயல் 5.

4. ஃபைனர் (Finer) (i) Modern Government, இயல் 18.
(ii) Major Goverenments of Modern Europe ; 7, 14, 23, 32.

5. ஜென்னிங்ஸ் (Jennings) : (i) Parliament, இயல் 3.
(ii) British Constitution, இயல் 4.

6. லாஸ்கி (Laski): Grammar of Politics, பக்கம் 328-55.

7. ஸிட்ஜ்விக் (Sidgwick): Elements of Politics, இயல் 23.

8. ஸிங்க் (Zink): (i) Government of the United States, இயல் 19-22.
(ii) Modern Governments, பகுதி V, VI.

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள்:

1. கிரிண்ட்ராடு (Grindrod): Rebuilding of Italy

2. ஹிஸ்காக்ஸ் (Hiscocks): Democracy in Western Europe

3. பிக்கிள்ஸ் (Pickles): France; The Fourth Republic; Fifth French Republic

4. பாட்டர் (Potter): American Government

5. வேர் (Wheare): Legislatures

## கட்டுரைக்கேற்ற பொருள்கள்:

1. இக்கால உலகில் இரு சபைச் சட்டமன்ற முறையின் சிறப்பு யாது?

2. 'ஆற்றலானது முக்கிய காரியங்களில் தன்னை ஆற்றலின்மை கட்டுப்படுத்துமாறு அனுமதிக்கும் என எண்ணுவது வீண்,' என, கால்டுவின் ஸ்மித்துக் கூறுவது மேல் சபைகளின் இக்கால வரலாற்றிற்குப் பொருந்துமா?

3. பிரிட்டிஷ் பிரபுகள் சபையின் வரலாற்றை வரைந்து, இப்போது அது செலுத்தி வரும் அதிகாரங்களை விளக்குக.

4. கனடாவின் நியமிக்கப்பட்ட செனட்டின் அமைப்பை விளக்குக.

5. ஸ்பெயினில் 1876ஆம் ஆண்டின் அரசியலமைப்பின்படி நிறுவப்பட்ட செனட்டின் அமைப்பை ஆராய்வதனால் ஆங்கிலேயருக்கு ஏற்படும் பயன் யாது?

6. தென்னாப்பிரிக்காவின் செனட்டில் நியமிக்கப்பட்ட உறுப்பினர்கள் இருப்பதன் முக்கியத்துவம் என்ன ?

7. அமெரிக்க, ஐரோப்பிய நாடுகளின் செனட்டு உலகிலுள்ள மேல் சபைகளிலெல்லாம் அதிக ஆற்றலுடையது என்பது எவ்வாறு பொருந்தும் ?

8. ஆஸ்திரேலியா, அயர் இவற்றின் செனட்டுகளின் அமைப்புக்கும் ஆற்றல்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் எவை ?

9. பிரான்ஸில் மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது குடியரசுகளுக்கும், இத்தாலியில் முடியாட்சிக்கும் குடியரசுக்கும் மேல் சபையைப் பொறுத்த வரையில் என்ன வேறுபாடுகள் உள்ளன ?

10. ரஷ்யாவின் 1936இன் அரசியலமைப்பின்படியும், 1947இன் திருத்தத்தின்படியும் நாட்டினங்களின் சோவியத்து எவ்வாறு அமைக்கப்பட்டுள்ளது ? யூகோஸ்லாவியாவின் 1946இன் அரசியல் அமைப்பின்படி அங்கு நாட்டினங்களின் அவை எவ்வாறு அமைக்கப்பட்டுள்ளது ? அவற்றின் அமைப்பையும் அலுவல்களையும் சுவிட்ஸர்லாந்தின் மாநிலங்களின் அவை, ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசின் 'புந்தஸ்ராத்' ஆகியவற்றின் அமைப்புடனும் அலுவல்களுடனும் ஒப்பிடுக.

# 10. சட்ட மன்றம்:

## மூன்று நேர்முக ஜனநாயகத் தடைகள்

### 1. இக்கால வழக்கின் வரலாறு

நேர்முக ஜனநாயகத் தடைகள் எவ்வாறு சட்ட மன்றத்தின் செயல்களைப் பாதிக்கின்றன என்பதை இங்கு ஆராய்வோம். வேறு சொல் கிட்டாமையின், இவற்றை நேர்முக ஜனநாயகத் தடை வழங்குகின்றோம். இவ்வாராய்ச்சி, நாம் முந்திய இரண் களில் பார்த்த சட்ட மன்ற ஆராய்ச்சியினின்றே பிறக்கின் தத் தீவிர ஜனநாயக முறைகள், சட்ட ஆக்க அலுவ மன்றத்திற்கு வெளியேயுள்ள வாக்காளர்களுக்கு அளி இவ்வாறு சட்ட மன்றத்தின் அலுவலைக் குறைப்பதுடன் சி சட்ட மன்ற உறுப்பினர் பதவிக் காலத்தையும் குறைக் இத்தகைய முறைகளில் மூன்று இன்றைய அரசுகள் பலவற் கின்றன. இம்முறைகள் வாயிலாக மக்கள் சட்ட ஆக்க பங்கு பெறுகின்றார்கள். இவற்றிற்குக் குடியொப்பம் (Refe தொடக்க உரிமை (Initiative), மீட்புரிமை (Recall) என்ப கள். இவற்றுள் குடியொப்பமே அதிகமாகப் பயன்படுகின் அரசுகளில் அரசியலமைப்பைத் திருத்தும் வகையைப் பற்றி போது இதைப்பற்றிக் குறிப்பிட்டோம். ஆனால், இங்கு ரணச் சட்ட ஆக்க முறையில் எவ்வாறு பயன்படுகின்றதெ பார்ப்போம். தொடக்க உரிமை என்பது வாக்காளர்கள் சா சட்டங்களையோ, அரசியலமைப்புத் திருத்தங்களையோ, இரண்டையும் தொடங்கி வைப்பதற்கு அரசியலமைப்பு வ பெறும் உரிமை. மீட்புரிமை என்பது, வாக்காளர் தாம் பிரதிநிதியை இரு தேர்தல்களுக்கிடையில் நீக்கி அவருக்குட் மக்களின் ஆதரவு பெற்ற மற்றொருவரை நியமிப்பதற்குத் வகுக்கக்கூடிய உரிமை,

குடியொப்பத்திற்கு மக்கள் வாக்கெடுப்பு (Plebiscite) என்னும் மற்ருெரு பெயரும் உண்டு. அதன் வரலாறு மிக நீண்ட வரலாறு. ரோமானியக் குடியரசில் 'பிளெபிஸிட்டம்' என்ற சொல் 'கொமி ஷியா டிரிப்யூட்டா' (Comitia Tributa) என்ற அவை அல்லது பிளெபியர்களின் (Plebs) கூட்டம் நிறைவேற்றிய சட்டத்தைக் குறித்தது. ஆனல், 'பிளெபிஸைட்டு' (Plebiscite) என்ற பிரெஞ்சு மொழிச்சொல் இக்காலத்தில் நிகழும் மக்கள் வாக்கெடுப்பை நன்கு விளக்குகிறது. ஆனல், மக்கள் வாக்கெடுப்பு என்ற சொற்ருெடர் பயன்படுகின்றது. பிரெஞ்சுக்காரர்கள்கூட இப்போது இச்சொற் ருெடரை விரும்புகின்றனர். (ஐந்தாவது குடியரசின் அரசியலமைப்பில் பன்மையில் குறிப்பிடும்போது குடியொப்பம் என்ற சொற்ருெடரைப் பயன்படுத்தியிருக்கின்றனர்). முதலாம் நெப்போலியன் படிப்படியாக அதிகாரத்தைக் கைப்பற்றி அப்போதிருந்த அரசாங்கத்தை ஏமாற்று வதற்காக இதைப் பயன்படுத்திய போது 'பிளெபிஸைட்டு'—அதா வது மக்கள் வாக்கெடுப்பு — என்ற சொற்ருெடர்தான் வழக்கில் இருந்தது. அவருக்கு மருமகனுரான மூன்ரும் நெப்போலியனும் இம் முறையைப் பின்பற்றி மக்களின் வாக்குகளைப் பல முறை பெற்று வந்தார். 1848இல் இரண்டாவது குடியரசின் தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பட்ட போதும், 1851இல் பலவந்த முறையில் அக்குடி யரசை வீழ்த்திய போதும், மறு ஆண்டு இரண்டாவது பேரரசை நிறு விய போதும் அவர் இம்முறையைப் பயன்படுத்தினுர். 1870இல் எமில் ஆலிவியர் (Emile Olivier) என்பவரின் முயற்சியால் பேரரசு 'முற்போக்கு அடைந்த போதும்' இம்முறைதான் பயன்பட்டது.

நெப்போலியன்கள் இருவரும் எவ்வாறு மக்கள் வாக்கெடுப்பைத் தவருன வழிகளில் பயன்படுத்தினரோ, அவ்வாறே ஹிட்லரும் ஜெர் மனியில் அதைப் பயன்படுத்தி அதிகாரத்தைக் கவர்ந்தார். ஏற் கெனவே தாம் செய்துமுடித்துவிட்ட அரசியற்செயல்களுக்கு ஆதரவு பெறுவதற்காக ஹிட்லர் இம்முறையைப் பலமுறை பயன்படுத்தினர். முதலாவது, ஜெர்மனி சர்வதேச சங்கத்தையும் (League of Nations) படைக்கலக் குறைப்பு மாநாட்டையும் (Disarmament Conference) விட்டு விலகுவதற்கு மக்களின் இசைவு பெறுவதற்காக 1933ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் வாக்கெடுப்பு நடந்தது. இரண்டாவது, நாட்டின் தலைவர் ஹிண்டன்பர்கு (Hindenburg) இறந்ததும் தலைவரின் பதவியையும் தாமே ஏற்றுக்கொண்டதை மக்கள் ஆதரிக்கவேண்டு மென்பதற்காக 1934ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்களில் மக்கள் வாக்கெடுப்பை நடத்தினுர். இரு வாக்கெடுப்புகளிலும் 90 சதவிகிதத் திற்கு மேலான பெரும்பான்மை வாக்குகள் ஹிட்லருக்கு ஆதரவாகக் கிடைத்தன. இவ்வாறு மக்கள் வாக்குகளின் விளைவாக ஹிட்லர் பதவியேற்றதால், அவர் வல்லந்த முறையில் ஆட்சியைக் கவரவில்லை

யென்றும், சட்ட முறையாக மக்களின் இசைவுபெற்றே பதவியேற்ரு ரென்றும் நாஜிகள் கூறினர்கள். இது நாஜி கொடுங்கோலாட்சிக்குச் சட்ட முறையான தோற்றமளித்தது என்பதை மறுக்க இயலாது. நான்கு ஆண்டுகள் கழித்து 1938இல் ஜெர்மானியர்களும் ஆஸ்தி ரேலியர்களும் ஆஸ்திரிய ஆக்கிரமிப்பை 99 சதவிகிதத்திற்கு மேலான பெரும்பான்மை வாக்குகளால் ஆதரித்த போது அது இன்னும் உறுதியாயிற்று.

இத்தகைய ஒருமைப்பாட்டின் தொடக்கக் காலத்தில் மக்கள் வாக்கெடுப்பு நன்கு பயன்பட்டது. 1859இல் பார்மா, மௌடென்ன, டஸ்கனி ஆகிய கோமானுட்சிப் பகுதிகளில் (Duchies) வாழ்ந்த மக்கள் சார்டீனியக் குடியரசுடன் இணைவதற்குப் பெரும்பான்மையான வாக்குகளினுல் தங்கள் இணக்கத்தைத் தெரிவித்தார்கள். 1860இல் இரு சிஸிலிகளின் மக்களும் அவ்வாறே செய்தார்கள். 1905இல் ஸ்வீடனிலிருந்து நார்வேயைப் பிரிப்பதற்கும் இம்முறைதான் பயன் பட்டது. அப்போது நார்வேயின் பாராளுமன்றம் (Stortiug), நார்வேயும் ஸ்வீடனும் ஒரு பொது அரசின்கீழ் இணைந்திருந்த ஐக்கியம் கலைக்கப்பட வேண்டுமெனத் தீர்மானம் நிறைவேற்றியது. (இந்த ஐக்கியம் 1814 முதல் உறுதியிழந்த நிலையில் இருந்து வந்தது. நார்வேயில் நடைபெற்ற மக்கள் வாக்கெடுப்பு, பெரும்பான்மை வாக்குகளால் இத்தீர்மானத்தை ஆதரித்தது.

முதல் உலகப்போருக்குப் பிறகு பல நாடுகள் மக்கள் வாக்கெடுப்பு முறையைப் பயன்படுத்தின. போரினுல் விடுதலையடைந்த போதிலும், முற்றிலும் அரசியல் சுதந்தரத்தைப் பெற இயலாத சிறு கூட்டங்களின் எதிர்காலத்தை நிருணயிப்பதற்காக இம்முறை பயன் பட்டது. சிறு நாடுகள் தன்னுட்சி பெற விழைந்ததால், இந்நிலை ஏற்பட்டது. போருக்குப் பிறகு தலைவர் வில்சன் வெளியிட்ட சமாதானத் திட்டம் இதை வலியுறுத்தியது. அவர் கூறியது போல, ஆக்கிரமிப்புகளைத் தடுக்கவேண்டுமென்ருல், இறைமையதிகாரமுள்ள தனி அரசுகளாக நிலைபெற முடியாத மக்கள் எந்நாட்டுடன் சேருவதெனத் தாங்களே முடிவு செய்துகொள்ள வேண்டும். எடுத்துக் காட்டாக, ஷ்லெஸ்விக் (Schleswig) முன்பு பிரஷ்யாவின் ஆட்சியில் இருந்தது. இப்போது அது அவ்வாட்சியிலே இருப்பதா அல்லது டென்மார்க்கின் ஆட்சிக்கு மாறுவதா என முடிவு செய்ய வேண்டியிருந்தது. முன்பு ஜெர்மனி ஆட்சிக்குட்பட்டிருந்த அல்லென்ஸ்டீன் (Allenstein) கிழக்குப் பிரஷ்யா அல்லது போலந்துடன் இணைய வேண்டியிருந்தது, பிரஷ்யாவைச் சேர்ந்த தென்ஸைலீஷியா ஜெர்மனி அல்லது போலந்துடனும், கிலாகன்பர்ட்டு (Klagenfurt) ஆஸ்திரியா அல்லது யூகோஸ்லாவியாவுடனும் சேரவேண்டிய நிலை ஏற்

பட்டது. அங்கெல்லாம் மக்கள் வாக்கெடுப்பு நடைபெற்றது. வல்லரசுகள் அதன் முடிவுகளை ஏற்றன. ஆனால், தென்ஸைலிஷியாவில் மட்டும் அது நடைபெறவில்லை. அதற்குப் பதிலாக நடுவர் தீர்ப்பின் (arbitration) மூலமாக அது ஜெர்மனிக்கும் போலந்துக்கும் இடையே பங்கிடப்பட்டது.

உடனடியாக அரசியல் மேலுரிமையை ஏற்கும் பிரச்சினையை மக்கள் வாக்கெடுப்புத் தீர்த்தபோதிலும், ஐரோப்பாவில் புதியனவாக உருவான அரசுகள் அல்லது பெரியனவாக்கப்பட்ட அரசுகளில் வாழ்ந்த சிறுபான்மையினரின் பிரச்சினையைத் தீர்க்கவில்லை. முன்பு பிரான்ஸில் விளைந்த தீமைகளே இந்நாடுகளிலும் மக்கள் வாக்கெடுப்பினால் விளைந்தன. வாக்கெடுப்பு முடிந்ததும் அதன் முடிவை மக்கள் என்றுமே ஏற்றுக்கொள்ள வேண்டுமெனத் தோன்றியது. தூதாண்மை ஒருமுறை மக்களின் வாக்கெடுப்பிற்கான ஏற்பாடுகளைச் செய்யலாம் ; ஆனால், சிறுபான்மையினர், தாம் சேரும் அரசில் முதலில் வாழ்ந்த குடிகள் பெற்றுள்ள உரிமைகளை எப்போதும் அனுபவிப்பதற்கு அது என்ன செய்ய இயலும் ?

முதல் உலகப் போருக்குப் பிறகு ஐரோப்பாவில் தோன்றிய அரசியல் பிரச்சினைகளில் மிகச் சிக்கலானவற்றில் ஒன்று சிறுபான்மையினரின் பிரச்சினையாகும். அதைத் தீர்க்கத் தவறியது காரணமாக ஐரோப்பாவிற்கும் உலகிற்கும் பெருங்கேடு விளைந்தது. அப்போது மக்கள் வாக்கெடுப்பு, தன்னாட்சியை வளர்க்கும் சிறந்த சாதனமாகவும் உலகில் ஜனநாயகத்தைக் காக்கும் உறுதியான வழியாகவும் தோன்றியது. ஆனால், உண்மையில், கொடுங்கோலன் அவற்றின் பயனைப் பாழ்படுத்தினான். அவன் அம்முறைகள் வாயிலாகவே தனது கொடுங்கோலாட்சிக்கு வழி வகுத்தான்.

## 2. குடியொப்பத்தின் இன்றைய நிலை

இன்று சில புதிய அரசியமைப்புகள் குடியொப்பத்தை அனுமதிக்கின்றன. பழைய அரசியலமைப்புகளின் திருத்த விதிகளிலும் அதைக் காணலாம். நாம் முன்பு கூறியது போல, அரசியலமைப்புத் திருத்தத்தை ஏற்பதற்கும், சாதாரணச் சட்டங்களுக்கு மக்களின் ஆதரவைப் பயன்படுத்தலாம். சில அரசியலமைப்புகள் இவற்றுள் ஒன்று அல்லது இரண்டைக் கட்டாயமாகக் குடியொப்பத்திற்கு விடுகின்றன. ' சில அரசியலமைப்புகள் இதைக் கட்டாயமாகக் கருதுவதில்லை '. அல்லது அரசியமைப்புத் திருத்தம், சாதாரணச் சட்ட ஆக்கம் ஆகியவற்றில் சில செய்திகளுக்கு மட்டும் கட்டாயமாகவும், பிறவற்றிற்குக் கட்டாயமில்லாமலும் செய்யலாம்.

நாம் முன்பு பார்த்தது போல, ஆஸ்திரேலியா, டென்மார்க்கு, அயர், பிரான்ஸ், இத்தாலி, சுவிட்ஸர்லாந்து, நியூஜீலந்து, அமெரிக்க ஐக்கியத்திலுள்ள மாநிலங்கள் ஆகியவற்றில் எல்லாம் அரசியலமைப்பைத் திருத்துவதற்காகக் குடியொப்பத்தைப் பயன்படுத்துகின்றனர். ஜெர்மனியின் வெய்மார் குடியரசின் அரசியலமைப்பு அதை அனுமதித்தது. ஆனால், 1949இன் ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசின் அடிப்படைச் சட்டத்தில் 29ஆம் விதியில் மட்டும் குடியொப்பத்தைப் பற்றிய குறிப்பைக் காண்கிறோம். அவ்விதி, அடிப்படைச் சட்டம் அமைக்கப்படும்போது நிலை நாட்டப்பட்ட மாநில எல்லைகளை மாற்றுவதைப் பற்றிக் கூறுகின்றது. அவ்விதியின்படி, ஒரு மாநிலத்தினின்று மற்றொரு மாநிலத்திற்கு நிலப்பகுதியை மாற்றவேண்டுமெனில், குறிப்பிட்ட அம்மாநிலங்களிலும், கூட்டாட்சிக் குடியரசிலும் நடைபெற்ற குடியொப்பத்தில் பெரும்பான்மை வாக்குகள் பெறவேண்டும்.

இன்று இத்தாலி, பிரான்ஸ், சுவிட்ஸர்லாந்து, அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சில மாநிலங்கள் போன்ற பல அரசுகளில் சாதாரணச் சட்ட ஆக்கத்திற்கும் குடியொப்பத்தைப் பயன்படுத்துவது அரசியல் வழக்கமாய் இருக்கின்றது. அயர், ஆஸ்திரேலியா, நியூஜீலந்து ஆகிய நாடுகளின் அரசியலமைப்புகளும் இம்முறையை ஏற்றுக்கொண்டுள்ளன. ஆயினும், இறுதியாகக் கூறிய இரு அரசுகளிலும் இந்நூற்றாண்டில் இது அரிதாகவே நடைபெற்றுள்ளது.

இத்தாலியக் குடியரசில் 1947ஆம் ஆண்டு வெளியான அரசியலமைப்பின் 75ஆம் விதியின்படி, 500,000 வாக்காளர்கள் அல்லது ஐந்து மண்டல அவைகள் (Regional Councils) விரும்பிக்கேட்டால், (நிதி சார்ந்த சட்டங்களையும் உடன்படிக்கைகளையும் தவிர) சட்டத்தை முற்றிலும் அல்லது ஓரளவு நீக்குவதுபற்றித் தீர்மானிக்கக் குடியொப்பம் நடைபெறுகின்றது. பெரும்பான்மை வாக்குகள் திட்டத்தை ஆதரித்தால், அது நிறைவேறும். ஆனால், அதில் பங்கு பெறத்தக்க தகுதியுடைய வாக்காளர்களுள் பெரும்பான்மையோர் வாக்களிக்க வேண்டும். பிரான்ஸில் ஐந்தாவது குடியரசின் (1958) அரசியல் அமைப்பின்படி குடியொப்பம் வேறு சில கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டிருக்கின்றது. அவற்றைக் கூறும் 11ஆம் விதியை இங்கு முழுவதும் தருகின்றோம் :

‘பாராளுமன்றத்தின் கூட்டக் காலத்தில், அரசாங்கம் விரும்பினாலும் அல்லது இரண்டு அவைகளும் கூட்டு அறிக்கை விடுத்து அதை அரசாங்கக் குறிப்பேட்டில் (Journal Official) வெளியிட்டதும் குடியரசின் தலைவர் மசோதாவைக் குடியொப்பத்திற்கு விடலாம். அம்மசோதா அரசாங்க நிறுவனங்களின் அமைப்பைப்பற்றிய மசோதா

வாகவும் (பிரான்ஸ் நாடு, கடல் கடந்த நிலப்பகுதிகள் ஆகியவற்றின்) சமுதாயத்தின் இசைவைப் பெறவேண்டிய மசோதாவாகவும், அரசியலமைப்பிற்கு முரணாக இல்லாவிடினும் இப்போதுள்ள நிறுவனங்களின் அலுவல்களைப் பாதிக்கக் கூடிய உடன்படிக்கையை ஏற்கும் மசோதாவாகவும் இருக்கலாம்.'

சுவிட்ஸர்லாந்தில் கூட்டாட்சிச் சட்ட மன்றம் நிறைவேற்றிய எல்லாச்சட்டங்களும் தீர்மானங்களும், 30,000 குடிகள் அல்லது எட்டுக் கோட்டங்கள் (Cantons) விரும்பினால், குடியொப்பத்திற்குச் சமர்ப்பிக்கப்படவேண்டும். ஆனால், அந்தத் தீர்மானம் ' அவசரமானது ' எனக் கூட்டாட்சிச் சட்ட மன்றம் அறிவிக்குமானால், அதை மக்கள் முன் சமர்ப்பிக்கத் தேவையில்லை. குடியொப்பம் நடைபெற்று அதில் பெரும்பான்மையான மக்கள் அச்சட்டத்திற்கு எதிராக வாக்களிப்பார்களானால், அச்சட்டத்தை நீக்கிவிட வேண்டும். அதே போல, எட்டுக் கோட்டங்களில் எல்லாச் சட்டங்களும் அவ்வாறே மக்கள் முன் சமர்ப்பிக்கப்பட வேண்டும். இதைக் கட்டாயக் குடியொப்பம் (Obligatory Referendum) என்கிறோம். மற்ற ஏழு கோட்டங்களில், குறிப்பிட்ட ஓர் எண்ணிக்கையுள்ள குடிகள் குடியொப்பம் நடைபெற வேண்டுமென்று கேட்பார்களானால், அது நடைபெற வேண்டும். (இந்த எண்ணிக்கை கோட்டங்களுக்கேற்ப வேறுபடுகின்றது.) இதை விருப்பக் குடியொப்பம் (Optional Raferendum) என்கிறோம். இன்னும் மூன்று கோட்டங்களில் சில சட்டங்களை எப்போதும் மக்கள் முன் சமர்ப்பிக்க வேண்டும். மற்றச் சட்டங்களை, குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள குடிகள் விரும்பினால், சமர்ப்பிக்க வேண்டும். எஞ்சியுள்ள கோட்டங்களில் பெரும்பாலானவை மிகச் சிறியவை. ஆகவே, அங்கு நேர்முக மக்களாட்சி நிலவுகிறது. (அதாவது, சட்டமன்றத்தில் மக்கள் எல்லாரும் அமர்கின்றனர்.) அத்தகைய கோட்டங்களில் குடியொப்பம் தேவையில்லை.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கூட்டாட்சிச் செய்திகளுக்கெனக் குடியொப்பம் நடைபெறுவதில்லை. ஆனால், சில மாநிலங்களில் சட்ட ஆக்க முறையின் தீமைகள் எவ்வளவு பெருகிவிட்டன என்றால், அவற்றைத் தடுப்பதற்காக அங்கு அண்மையில் குடியொப்பம், மக்கள் தொடக்கம், மீட்புரிமை ஆகிய மூன்றும் புகுத்தப்பட்டுள்ளன. குடியொப்பம் அமெரிக்க மாநிலங்களுக்குப் புதுவதன்று. ஏனெனில், குடியரசின் தொடக்கக் காலத்தில் மக்கள் வாக்குகள் வாயிலாகவே மாநில அரசியலமைப்புகள் இயற்றப்பட்டன. அதிலிருந்து சட்ட மன்றம் அல்லது தனிக்குழு விரும்பும் திருத்தங்களை மக்கள் முன் சமர்ப்பிப்பது வழக்கமாகிவிட்டது. நாளடைவில் அது இன்னும் அதிகமாகப் பரவியது, பல மாநிலங்களில் இப்போது குறிப்பிட்ட ஓர் எண்ணிக்

கையுள்ள குடிகள் விரும்பினால், சட்ட மன்றம் இயற்றிய சட்டங்களை மக்கள் முன் சமர்ப்பிக்க வேண்டும். (அந்த எண்ணிக்கை வாக்காளர்களில் ஐந்து சதம் முதல் பத்துச் சதவிகிதம் வரை வேறுபடுகின்றது.) அதை மக்கள் ஏற்கலாம் அல்லது தள்ளிவிடலாம். இம்முறை ஆரகன் (Oregon), கொலராடோ (Colorado), காலிபோர்னியா (California) போன்ற மேற்கு மாநிலங்களில் பொதுவாக நிலவுகிறது. பழைய மாநிலமாகிய மசாகுஸட்ஸ் இதையும் மக்கள் தொடக்கத்தையும் ஏற்றுக்கொண்டுள்ளது. சுவிட்ஸர்லாந்தில் இருப்பது போலவே பல அமெரிக்க மாநிலங்களிலும் சட்டமன்றங்கள் அவசரமானவை எனக் கருதும் சட்டங்களுக்குக் குடியொப்பம் இல்லை. ஆனால், இம்முறை தவருகப் பயன்படுத்தப்படுகின்றது. ஒரு சட்டத்தை மக்கள் தள்ளி விடக்கூடும் என்ற காரணத்திற்காக அதை அவசரமானதெனக் கூறி விடுதலும் உண்டு.

## 3. தொடக்க உரிமையும் மீட்புரிமையும்

சட்டத்தைத் தொடங்கும் நேரான அதிகாரத்தை மக்களுக்கு வழங்குவதே தொடக்க உரிமையின் நோக்கமாகும். அவர்கள் தொடங்கிய சட்டத்தைச் சட்ட மன்றம் ஆராயவேண்டும். இது தீவிர ஜனநாயக முறையின் ஒரு வளர்ச்சியாய் இருந்த போதிலும், அரசியல் முறைமைக்கு உட்பட்டது. இது குடியொப்பத்தைவிட முற்போக்கானது. தொடக்க உரிமையைக் குடியொப்பத்தினின்று நீக்கி, தனியாகப் பார்ப்பது இன்றியமையாதது. ஏனெனில், அவை இரண்டின் கொள்கை முறையான அடிப்படைகளும் ஒன்ருக இருந்த போதிலும், அவை பயன்படும் நோக்கங்கள் வேறு வகையாய் இருக்கின்றன. ஏனெனில், அறிஞர் ஒருவர் கூறுவது போல, குடியொப்பம் சட்ட மன்றம் செய்த தவறுகளினின்று மக்களைக் காக்கின்றது. தொடக்க உரிமை சட்ட மன்றம் செய்யத் தவறிய பிழைகளினின்று அவர்களைக் காக்கிறது. சட்ட மன்றம் மக்களின் கருத்தைச் சரியாகப் பிரதிபலிப்பதில்லை என்றும், சட்ட மன்றம் இயற்றிய சட்டங்களையே குடியொப்பம் மக்கள்முன் சமர்ப்பிப்பதால் அதன் தீமைகளைத் தவிர்க்கக் குடியொப்பத்தில் இயலாதென்றும், தொடக்க உரிமையை ஆதரிப்பவர்கள் கூறுகின்றுர்கள். ஆனால், தொடக்க உரிமையும் குடியொப்பமும் ஒன்ருக இணைந்து செயற்படுவதைச் சில வேளைகளில் காண்கிறேம். இதன் விளைவாக மக்கள் தொடங்கிய சட்டங்கள், சட்ட மன்றம் வழியாகச் சென்று, மீண்டும் அவர்களின் இசைவு பெறுவதற்கு அவர்களிடமே வருகிறது. குடியொப்பமின்றித் தொடக்க உரிமை மட்டும் இருப்பதை உலகில் எந்நாட்டிலும் நாம் காண்பதில்லை.

முன்பு விளக்கியது போல, சுவிட்ஸர்லாந்தில் அரசியலமைப்புத் திருத்தம், சட்டங்கள், தீர்மானங்கள் ஆகியவற்றிற்குக் குடியொப்பம் பயன்படுகின்றது. கூட்டாட்சிச் செய்திகளுக்கும் கோட்டச் செய்திகளுக்கும் அதைப் பயன்படுத்துகின்றனர். தொடக்க உரிமையும் இரண்டிற்கும் பயன்படுகின்றது. ஆனால், அது கூட்டாட்சிச் செய்திகளைவிடக் கோட்டச் செய்திகளுக்கே அதிகமாகப் பயன்படுகின்றது. நான் முன்பு பார்த்தது போல, நாட்டுக் கூட்டத்திலுள்ள 50,000 குடிகள் கூட்டாட்சியின் அரசியலமைப்பைத் திருத்துவதற்கோ, அல்லது முற்றிலும் மாற்றியமைப்பதற்கோ தேவையான திட்டமொன்றைச் சமர்ப்பிக்கலாம். கோட்டங்களில் தொடக்க உரிமை இன்னும் அதிகமாகப் பயன்படுகிறது. அங்கு இதை அரசியலமைப்புத் திருத்தத்திற்கு மட்டுமல்லாமல், சாதாரணச் சட்டங்களுக்கும் தீர்மானங்களுக்கும் பயன்படுத்துகின்றனர். ஜெனிவாவைத் தவிர மற்ற எல்லாக் கோட்டங்களிலும், கோட்டங்களுக்கேற்ப வேறுபடும் எண்ணிக்கையுள்ள குடிகள் அரசியலமைப்பைப் பொதுவாகத் திருத்த வேண்டுமெனக் கேட்கலாம். அவர்கள் பொதுவான திருத்தத்தை அல்லது குறிப்பிட்ட திருத்தத் திட்டத்தைச் சமர்ப்பிக்கலாம். (ஜெனிவாவின் அரசியலமைப்பு, பதினைந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை தானகவே திருத்தியமைக்கப்படுகின்றது.) மேலும், மூன்றைத் தவிர வேறு எல்லாக் கோட்டங்களிலும், குறிப்பிட்ட ஓர் எண்ணிக்கையுள்ள குடிகள் முற்றிலும் தீட்டப்பட்ட மசோதாவை அல்லது தீர்மானத்தைக் கொண்டு வரலாம்; அல்லது புதிய சட்டம் அல்லது தீர்மானம் நிறைவேற வேண்டிய கொள்கையைக் குறிப்பிட்டு, அதைச் சட்டமாகத் தீட்டுமாறு கோட்ட அவையைக் கேட்கலாம். முற்றிலும் தீட்டப்பட்ட மசோதாவைக் கொண்டுவந்தால், அதை நேராக மக்கள் முன் சமர்ப்பிக்கவேண்டும். கொள்கை மட்டும் சமர்ப்பிக்கப்பட்டால், அம்மசோதாவைத் தீட்டவேண்டுமா என்பதை அவை மக்களைக் கேட்கும். அவர்கள் அதற்கு ஒப்புக்கொண்டால், அவை அதை வரைந்து மக்களின் இறுதி இசைவிற்காக அவர்களின் முன் சமர்ப்பிக்கும்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் குடியொப்பத்தைப் பயன்படுத்துவது போல, தொடக்க உரிமையை அதிக மாநிலங்கள் பயன்படுத்துவதில்லை. இப்போது, தொடக்க உரிமை சில மாநிலங்களில் அரசியலமைப்புத் திருத்தங்களுக்கும் பயன்படுகின்றது. மாநிலத்தின் மொத்த வாக்காளர்களுள் 5 சதம் முதல் 15 சதவிகிதம் வரை தொடக்க உரிமையின்படி திட்டங்களைச் சமர்ப்பிக்கலாம். சில மாநிலங்களில் குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ளவர்கள் அவற்றைச் சமர்ப்பிக்கலாம். அரசியலமைப்புத் திருத்தத்திற்கும் சாதாரணச் சட்டங்களுக்கும் தொடக்க உரிமையைப் பயன்படுத்தும் மாநிலங்

களில், அது நடைபெறும் முறையில் வேறுபாடில்லாததால், சாதாரணச் சட்டங்களையும் அரசியலமைப்புத் திருத்தங்களின் வடிவிலே தீட்டிவிடுகின்றனர். அவை நிறைவேறிவிட்டால், பிறகு சாதாரணச் சட்ட ஆக்க முறைப்படி அவற்றை நீக்க இயலாது.

ஜெர்மனியில் வெய்மார் குடியரசின் அரசியலமைப்பில் நல்லதோர் உட்பிரிவு (Clause) இருந்தது. அந்தப் பிரிவின்படி (73ஆம் பிரிவின் படி) தொடக்க உரிமை வழங்கப்பட்டது. வாக்குரிமை பெற்றவர்களுள் பத்தில் ஒரு பகுதியினர் (முற்றிலும் வரையப்பட்ட) ஒரு மசோதாவைக் கொண்டுவர விரும்பினால், அரசாங்கம் அதை 'ரைக்ஸ்டாக்' கின் முன் சமர்ப்பிக்க வேண்டும். 'ரைக்ஸ்டாக்' அதை நிறைவேற்றினால், சட்டம் வேறு நடவடிக்கைகளின்றி வெளியிடப்படும்; நிறைவேற்றாவிடில், அம்மசோதாவைக் குடியொப்பத்திற்கு விடவேண்டும். இத்தாலியின் புதிய குடியரசின் அரசியலமைப்பிலும் இவ்வகையான தொடக்க உரிமையைக் காணலாம். அந்த அரசியலமைப்பின் 71ஆம் விதியின்படி, ஐம்பதாயிரம் வாக்காளர்கள் ஒரு மசோதாவைச் சமர்ப்பிக்கலாம். ஆனால், அது ஒழுங்காக வரையப்பட்டிருக்க வேண்டும்.

பிரதிநிதிகளை அல்லது தேர்ந்தெடுக்கப்பட்ட மற்ற அலுவலர்களைப் பதவியினின்று நீக்கும் மீட்புரிமை, இக்கால அரசியல் மக்களுக்கு அண்மையில் வழங்கப்பட்ட அதிகாரமாகும். ஆயினும், அது முற்றிலும் புதிய முறையன்று. எடுத்துக்காட்டாக, பிரெஞ்சுப் புரட்சியின்போது ஒரு திட்டம் வெளியானது. ஆனால், அதன் பயன் எதுவும் ஏற்படவில்லை. அத்திட்டத்தின்படி ஒரு பிரதிநிதி ஒழுங்காகச் செயலாற்றவில்லையெனின், அவரைத் தேர்ந்தெடுத்தவர்கள் அவரைப் பதவியினின்று நீக்கலாம். ஆனால், அண்மையில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சில மாநிலங்களில் மட்டுமே இம்முறையைப் பின்பற்றுகின்றனர். எடுத்துக்காட்டாக, ஆரகான் மாநிலத்தில் சட்டப்படி தேர்ந்தெடுக்கப்பட்ட அலுவலர் ஒருவரை நீக்க வேண்டுமெனக் குறிப்பிட்ட ஓர் எண்ணிக்கையுள்ளவர்கள் மனு அனுப்பினால், அதற்கெனப் பொது மக்கள் வாக்களிப்பு நடைபெறும். அதில் பெரும்பான்மையோர் அலுவலருக்கு எதிராக வாக்களித்தால், அவரைப் பதவியிலிருந்து நீக்க வேண்டும். பிறகு அவரது பதவிக் காலத்தில் மீதியிருக்கும் காலத்திற்கு ஒருவரைப் பதவியில் அமர்த்துவதற்காகப் புதிய தேர்தல் நிகழும். இவ்வாறு சட்டத்துறையிலிருப்பவரையும், நிருவாகத்துறையிலிருப்பவரையும் பதவியிலிருந்து நீக்கலாம். இம்முறையைப் பிற அமெரிக்க மாநிலங்கள் பின்பற்றுகின்றன. இது பெரும்பாலும் வெற்றிகரமாகவே நடைபெற்று வருகின்றது. ஆனால், சட்ட மன்ற உறுப்பினரைப் பொறுத்த வரையில் இது அரிதாகவே நடை

பெறுகிறது. மற்ற அரசுகளில் இது இன்னும் பல வகைகளில் பயன் படுகின்றது. நீதிபதிகளைத் தேர்ந்தெடுக்கும் அரசுகளில் அவர்களைப் பதவியிலிருந்து நீக்குவதற்கும் இதைப் பயன்படுத்துகின்றனர். ஒரு மாநிலத்தில் (கொலராடோவில்) தேர்ந்தெடுக்கப்பட்ட நீதிபதிகளின் தீர்ப்புகளுக்கே இம்முறையைப் பயன்படுத்துகின்றனர். இறுதியில் குறிப்பிட்டவாறு பயன்படுத்துதல் அரசியலமைப்புக்கு முரணானதென் பது அறிவிக்கப்பட்டது. குடியொப்பத்தையும் தொடக்க உரிமையை யும் போல, மீட்புரிமையும் மேற்கு அமெரிக்க மாநிலங்களிலே காணப் படுகிறதெனப் பொதுவாகக் கூறலாம்.

உலகிலுள்ள வேறு எந்த அரசும் இத்தகைய மீட்புரிமையை ஏற்றுக்கொண்டதில்லை. ரஷ்யச் சோவியத்துக் குடியரசின் முதல் அரசி யலமைப்பில் இதற்கு இடமளித்திருந்தனர் என்பது உண்மைதான். ஆனால், ரஷ்யாவின் 1936ஆம் ஆண்டின் அரசியலமைப்பில் இதற்கு இடம் அளிக்கப்படவில்லை. சுவிட்ஸர்லாந்தில், மீட்புரிமை நடை முறையில் நடப்பது போன்ற ஒரு வகை முறை நிலவுகிறது. அங்கு ஏழு கோட்டங்களில், கோட்டச் சட்ட மன்றத்தின் பதவிக் காலம் முடிவுறுமுன் அதைக் கலைத்துப் புதுத்தேர்தல் நடத்தவேண்டுமெனக் குறிப்பிட்ட பெரும்பான்மையான ஓர் எண்ணிக்கையுள்ள மக்கள் கேட்கலாம்.

## 4. இம்முறைகளைப் பயன்படுத்துவதன் நன்மை தீமைகள்

குடியொப்பம், தொடக்க உரிமை, மீட்புரிமை ஆகியவற்றைப் பயன்படுத்தும் நாடுகளில் அவை எவ்வாறு நடைபெறுகின்றன? அவற்றைப் பெரிய நாடுகளில் பயன்படுத்த வேண்டுமானால், என்ன செய்யவேண்டும்? முதலாவது, குடியொப்பம் ஊழல் நிறைந்த அல்லது மக்களின் விருப்பத்திற்கெதிராக நடக்கும் சட்டமன்றங்களின் குற்றங் களைக் களைகின்றது. இரண்டாவது, அது தேர்வாளர்களுக்கும் தேர்ந் தெடுக்கப்பட்டவர்களுக்கும் இடையே நலமான, நற்பயன் தரும் தொடர்பை உண்டுபண்ணுகிறது. அடிக்கடி தேர்தல் நிகழாத நாடு களில் இத்தொடர்பு ஏற்படுவதில்லை. மூன்றாவது, மக்களின் விருப்பத் திற்கெதிராக எந்தச் சட்டமும் நிறைவேற்றப்படுவதில்லையென அது உறுதியளிக்கிறது. தொடக்க உரிமையை ஆதரிப்பதற்கும் இதே காரணங்களைக் கூறலாம். இதைப் பயன்படுத்த இன்னொரு காரண மும் உண்டு. அதாவது, குடியொப்பம் ஏற்கெனவே சட்ட மன்றங்கள் ஆய்ந்த பொருளைப் பற்றியே வாக்களிக்க மக்களுக்கு உரிமை அளிக்கிறது. அது, மக்கள் பிரதிநிதித்துவ நிறுவனத்தைச் சாராமல் தாமாகவே திட்டங்களைக் கொண்டுவருவதற்கு வழி வகுப்பதில்லை. இக்கருத்தின்படி, ஒரு மசோதாவை ஏற்கவோ, அல்லது மறுக்கவோ,

மக்களுக்கு அதிகாரமுண்டானால், தாமாகவே ஒன்றைக் கொண்டுவர அவர்களுக்கு ஏன் அதிகாரம் கொடுக்கக் கூடாது? இதே போல, மீட்புரிமையைப் பற்றியும் கூறலாம். பிரதிநிதியைத் தெரிந்தெடுக்கும் உரிமை மக்களுக்கு உண்டென்றால், அவர் தமது கடமையினின்று தவறுவதாக அவர்கள் கண்டால், அவரைப் பதவியிலிருந்து நீக்குவதற்கு அவர்களுக்கு உரிமை இருக்க வேண்டுமல்லவா? இவ்வுரிமைகள் இரண்டும் இணை பிரியா உரிமைகள் அல்லவா?

இதற்கு மாறாக, இம்முறைகளைப் பயன்படுத்துவதற்கு எதிராகப் பல காரணங்களைக் கூறலாம். பெரிய அரசு ஒன்றில் குடியொப்பத்தைப் பயன்படுத்தினால்; அது பெரும்பாலும் சட்டம் இயற்றுவதற்குத் தடங்கலாய் இருக்கும். இவ்வாறு காலந்தாழ்த்துவதால், அச்சட்டத்தினால் சமூகத்திற்கு விளையக்கூடிய நற்பயன்களும் தடைபடும்; அல்லது அது நீக்க விரும்பிய தீமைகள் நிலைபெறும். இன்னொரு காரணம் என்னவென்றால், மக்கள் நெருக்கம் மிகுந்த நமது சமுதாயத்தில், தொடர்ச்சியாகச் சமர்ப்பிக்கப்பட்ட மசோதாக்களைப் பற்றிப் பற்பல கருத்துகள் வெளியாவதால், அவை ஒன்றையொன்று அழித்துவிட வழியேற்படுகிறது. இதனால், எல்லா முற்போக்குச் சட்டங்களும் முற்றிலும் மறைந்துபோகலாம். மேலும், இக்காலச் சூழ்நிலையில், சட்டம் ஒரு தனிப்பொருள் பற்றிய நுண்ணிய விவரங்களைக் கூறுவதால், மக்கள் முன் சமர்ப்பிக்கப்பட்ட எல்லா மசோதாக்களின் விவரங்களையும் கற்றறிந்தார் கூட முற்றிலும் கண்டுபிடிக்க இயலாது. அச்சட்டத்தைச் சட்ட மன்றம் ஏற்கெனவே சீர்தூக்கிப் பார்த்து வாதம் நிகழ்த்தியிருந்த போதிலும், அதன் நுணுக்கங்களைக் கண்டறிதல் அரிது. இதன் விளைவாக அறியாமை அரியணையேறும்; அல்லது, மக்கள் இதைப்பற்றி அக்கறை இழப்பார்கள். இதனால், இம்முறை பயனற்றதாகின்றது. இவை தவிரத் தொடக்க உரிமையில் வேறு குறைபாடுகளும் உண்டு. நூலாசிரியர் ஒருவர் கூறுவது போல, 'அது பாராளுமன்ற ஆய்வுக்குட்படாத மசோதாக்களை மக்கள் முன் சமர்ப்பிக்கிறது. அவற்றைக் கவலையின்றி, அல்லது ஒழுங்கின்றி வரைந்திருந்தால், அவை இயற்றப்பட்ட பிறகு சட்டத்தைக் குழப்பி உறுதியற்ற நிலையை உண்டுபண்ணும். இதன் விளைவாக வழக்குகள் நடைபெறக் கூடும். மேலும், தொடக்க உரிமை தீவினைக்கஞ்சாத் தலைவர்களுக்கும் ஊழல்களை வளர்க்கும் கட்சிகளுக்கும் நாட்டை அரிப்பதற்கு வாய்ப்பளிக்கிறது. அவர்கள், கும்பலின் அறியாமையையும் பொறுப்பின்மையையும் பயன்படுத்தி நாட்டுக்குத் தீங்கிழைப்பார்கள்.

தொடக்க உரிமைக்கெதிரான இக்காரணங்களை அரசியமைப்புச் சட்டத்துடன் சேர்த்துப் பார்த்தால், அவற்றால் விளையும் தீமைகள் இன்னும் தெளிவாகத் தெரிகின்றன. முன்னர்க் கூறியபடி, அரசிய

லமைப்பென்பது அடிப்படையானது. ஆழ்ந்து ஆய்ந்த பிறகே அதை மாற்ற வேண்டும். பொதுமக்கள் வரைந்தும் வாக்களித்தும் நிறைவேற்றிய சட்டங்களை அதில் திணித்து அடைத்தால், அது தனது இன்றியமையாத இயல்பினை இழந்து, செயற்பட இயலாத விதிகளின் தொகுதியாக மாறுகிறது. இந்நிலை காரணமாக, முதலில் அரசியற்குழப்பமும் பிறகு வல்லாட்சியும் பிறக்கும். அப்போது மக்களின் தொடக்க உரிமை தன் பயனெல்லாம் இழந்துவிடும். தொடக்க உரிமையைவிடக் குடியொப்பமே அரசியலமைப்பைச் சார்ந்த செய்திகளுக்கு மிகச் சிறந்தது. குடியொப்பத்தினால் வேறு சில பயன்களும் உண்டு. எடுத்துக்காட்டாக, இரு சபைகளைக் கொண்ட சட்ட மன்றத்தையுடைய அரசுகளில் இரு சபைகளுக்குமிடையே ஏற்படக்கூடிய முரண்பாடுகளைத் தீர்த்து வைக்க அது உதவும். கிரேட் பிரிட்டனில் 1909ஆம் ஆண்டின் வரவு செலவுத் திட்டத்தை (Budget) நிறைவேற்றப் பிரபுகள் சபை மறுத்ததால் தோன்றிய முரண்பாட்டின் போது இதைப் பயன்படுத்த வேண்டுமெனச் சிலர் கூறினர். ஆயினும், இது நடைபெறவில்லை.

மீட்புரிமைக்கு எதிராகச் சில காரணங்களைக் கூறலாம். அமெரிக்காவில் இது பல முறை நன்றாக நடைபெற்றுள்ளது. அதனால், அரசுக்கு நன்மையும் விளைந்திருக்கின்றது. ஆனால், இது அலுவலர்களிடம் அச்சத்தையும் அடிமையுணர்ச்சியையும் வளர்க்கிறதென இதை எதிர்ப்பவர்கள் கூறுகின்றார்கள். சட்ட மன்ற உறுப்பினரை நீக்க இதைப் பயன்படுத்தினால், பிரதிநிதி வெறுந்தூதராக மாறுகின்றார். மேலும், எந்தச் சதிக்கும்பலும் அவரைத் தவறாகத் தாக்குவதற்கும் வழியேற்படுகிறது. இதனால், பொதுநலத் தொண்டர்கள் பொது வாழ்வில் ஈடுபட விரும்புவதில்லை. நிருவாகத்துறையைக் கட்டுப்படுத்த இதைப் பயன்படுத்தினால், அதன் அதிகாரம் வலுக்குறைவதோடு, திறமையுள்ளவர்கள் பொது அலுவலை ஏற்கவும் பின் வாங்குவார்கள். நீதிபதிகளை நீக்குவதற்கு இம்முறையைப் பயன்படுத்துவது ஒரு போதும் சரியன்று. ஏனெனில், அரசாங்கத்தின் பிற இரு துறைகளைவிட இத்துறையில் பணியாற்றுவதற்குச் சிறப்புத் தேர்ச்சி தேவை. மீட்புரிமையை நீதித்துறைக்குப் பயன்படுத்தினால், நீதிபதிகள் பொதுமக்களின் விருப்பத்திற்கேற்ப நடக்கவேண்டியிருக்கும். அதனால், அவர்களது பதவிக்காலப் பாதுகாப்பும் நீங்கிவிடுகின்றது. ஆனால், இப்பாதுகாப்பு அரசின் நலத்திற்கு இன்றியமையாததென்பதை ஏற்கெனவே பார்த்தோம்.

இவ்வாராய்ச்சியின் முடிவாக, இன்றைய நாகரிக நிலையில் அரசியல் முறைமைக்குட்பட்ட இப்போது ஏற்கத்தக்க பொறுப்புகளைவிட இன்னும் பளுவான பொறுப்புகளையும் எளிதில் ஏற்க இயலும் எனக்

கூறலாம். 'நிறுவனங்களை மாற்றுவதைவிடப் பொதுநல உணர்வின் தரத்தை உயர்த்துவதுதான் மிகவும் கடினமான நீண்டகால வேலை,' என லார்டு பிரைஸ் கூறுவது முற்றிலும் உண்மை. அரசியல் நிறுவனங்களின் பயனும் உறுதித் தன்மையும் அவை பயன்படும் சமுதாயத்தின் நிலையைப் பொறுத்திருக்கின்றன. முக்கியமாக அவற்றை இயக்க மக்களுக்கு எவ்வளவு ஆற்றல் இருக்கின்றதோ, அதற்கு மிஞ்சியதாக அவை இருக்கக் கூடாது.

## படிக்க வேண்டிய நூல்கள்:

1. பிரைஸ் (Bryce) : American Commonwealth, தொகுதி I, இயல், 39.

2. எம்டன் (Emden) : The People and the Constitution, இயல், 12.

3. ஃபைனர் (Finer) : Modern Government, இயல், 22.

4. ஸிங்க் (Zink) : Government in United States, இயல், 43, 45.

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள்:

1. ஜென்னிங்ஸ் (Jennings) : Party Politics—I : Appeal to the People.

2, பிக்கிள்ஸ் (Pickles) : Fifth French Republic

3. ரப்பார்டு (Rappard) : Government of Switzerland

4. வேர் (Wheare) : Modern Constitutions

## கட்டுரைக்கேற்ற பொருள்கள்:

1. கடந்த காலத்தில் மக்கள் வாக்கெடுப்பு (அல்லது குடியொப்பம்) எவ்வாறு பிரான்ஸின் உள்நாட்டு அரசியலில் பயன்படுத்தப்பட்டது? இன்று அதைப் பிற அரசுகளில் பயன்படுத்தினால் ஏற்படும் பயன்களை ஆராய்க.

2. முதல் உலகப் போருக்குப் பிறகு மக்கள் வாக்கெடுப்பை எதற்காகப் பயன்படுத்தினார்கள்? அதன் விளைவு யாது?

3. ஹிட்லர் 1930இல் மக்கள் வாக்கெடுப்பை ஜனநாயகத்தை அழித்துக் கொடுங்கோன்மையை நிறுவ எவ்வாறு பயன்படுத்தினர் ?

4. சுவிட்ஸர்லாந்தில் குடியொப்பம் எவ்வாறு நடைபெறுகிறது?

5. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் குடியொப்பத்தை எவற்றிற் கெல்லாம் பயன்படுத்துகின்றனர் ?

6. தன்னுட்சி பெற்ற சில குடியேற்ற உரிமை நாடுகளில் குடியொப்பம் நடைபெறுவதிலிருந்து அது எவ்வாறு பிரிட்டனுக்குப் பயன் படலாம் என்பதை ஆராய்க.

7. தொடக்க உரிமையின் நோக்கம் என்ன ? அதைப் பயன் படுத்தும் நாடுகளில் அதன் நோக்கம் எவ்வாறு நிறைவேறுகின்றது ?

8. மீட்புரிமையை இக்கால ஜனநாயக அரசுகளில் அரசாங் கத்தின் மூன்று துறைகளுக்கும் பயன்படுத்தும் போது விளையும் நன் மைகள் யாவை ?

9. சாதாரணச் சட்டங்களுக்கும், அரசியலமைப்புத் திருத்தங் களுக்கும் குடியொப்பத்தையும் தொடக்க உரிமையையும் பயன்படுத் துவதால் ஏற்படும் நற்பயன்களை ஒப்பிடுக.

10. நேர்முக ஜனநாயக முறைகளினால் ஏற்படும் நன்மைகள் வெளித் தோற்றத்திற்கு மட்டும் அவ்வாறு தோன்றுகின்றனவே தவிர, உண்மையான நன்மைகள் அல்ல என்பது உண்மையா ?

# 11. பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத் துறை

## 1. நிருவாகத்துறை : உண்மையானதும் புறத்தோற்றமுடையதும்

இக்கால அரசியலில் சட்ட ஆக்க அலுவல் மிக முக்கியமான இடம் பெற்றிருந்த போதிலும், நிருவாகத்துறை அதன் சிறப்பை மறைத்து விடுகிறது. ஏனெனில், முதலாவது, இக்கால நிருவாகத்துறை சட்டங்களைச் செயற்படுத்துவது மட்டுமல்லாமல், பெரும்பாலும் சட்டமன்றத்தின் முன் சமர்ப்பிக்கப்படும் கொள்கையையும் தொடங்கிவைக்கிறது. இரண்டாவது, நாம் மேலே கூறிய கூட்டுடைமைச் (Collectivist) சட்டங்கள் எவ்வளவு மிகுதியாக நிறைவேற்றப்படுகின்றனவென்றால், சட்ட மன்றம் சட்ட ஆக்கத்தைக் கட்டுப்படுத்திய போதிலும், அவற்றைச் செயற்படுத்துகின்றவர்களிடம் மிகுந்த தன் முடிவான அதிகாரத்தை (Discretionary power) விட்டுவிட வேண்டிய தேவை ஏற்படுகிறது. இவ்வாறு ஜனநாயக வளர்ச்சி அரசியல் முறைக்குட்பட்ட இக்கால அரசுகளில் ஒரு முரண்பாட்டை உண்டுபண்ணி விட்டது. அதாவது, மக்கள் தேர்ந்தெடுத்த சட்ட மன்றம் அவர்களின் தேவைகளுக்கேற்ப ஏராளமான சட்டங்களை இயற்றுவதால், அச்சட்டங்களைச் செயற்படுத்தும்போது நிருவாகத்துறை வரையிறந்த அதிகாரங்களை மிகுதியாகப் பெறுகின்றது.

ஆகவே, அரசியல் முறைக்குட்பட்ட இக்கால அரசுகளில் நிருவாகத்துறை பல வகைகளில் மிகவும் முக்கியமான துறையாய்த் திகழ்கிறது. ஆனால், அரசியல் முறைமைக்குட்படுகை அரசாங்கத்தின் அதிகாரத்தைக் குறைத்து, குடிகளின் உரிமைகளைப் பாதுகாக்கும் நோக்கத்துடன் நிருவாகத்துறையை வரையறுத்துக் கட்டுப்படுத்துகிறது. அதற்கு மாறாக, ஜனநாயக வளர்ச்சியின் விளைவாக நிருவாகத்துறை அலுவல்கள் பெருகியதுடன், அலுவலர்களின் எண்

ணிக்கையும், அலுவல் துறைகளின் எண்ணிக்கையும் மல்கின. அரசியல் அமைப்புக்குட்பட்ட இன்றைய சாதாரண அரசுகளிலுள்ள நிருவாகத்துறையின் அதிகாரங்களைக் கீழ்க்காணுமாறு சுருக்கமாகக் கூறலாம்:

(i) அயல் நாட்டுச் செய்திகளை நடத்தும் தூதாண்மை அதிகாரம்.

(ii) சட்டங்களைச் செயற்படுத்தி, அரசாங்கத்தின் ஆட்சி முறையை நடத்தும் ஆட்சித்துறை அதிகாரம்.

(iii) படைகளை அமைத்துப் போர் நடத்தும் படைத்துறை அதிகாரம்.

(iv) குற்றத் தீர்ப்புப் பெற்றவர்களுக்கு மன்னிப்பளித்தல், தண்டனை குறைத்தல் போன்ற நீதித்துறை அதிகாரம்.

(v) மசோதாக்களைத் தீட்டி அவற்றைச் சட்டங்களாக்குவதற்கு வழி வகுக்கும் சட்ட ஆக்க அதிகாரங்கள்.

முன்னர்க் கூறியபடி, நிருவாகத்துறை என்பது இரு பொருள்களில் பயன்படுகிறது. முதலாவது, அது பரந்த பொருளில் முழு அமைச்சரவை, பொதுத்துறை அலுவல் (Civil Service), காவல் துறை, போர்ப்படை ஆகிய எல்லாவற்றையும் குறிக்கிறது. இரண்டாவது, குறுகிய பொருளில் அது நிருவாகத்துறையின் மேலான தலைவரைக் குறிக்கிறது. இந்த இரண்டாவது பொருளிலேதான் நிருவாகத்துறை என்ற சொற்றொடரை இந்த இயலிலும் அடுத்த இயலிலும் பயன்படுத்துகிறோம். சாதாரணச்சொல் வழக்குகள் தவறான பொருள் தரக் கூடுமாதலால் நாம் நன்கு கவனிக்க வேண்டும். அவை நிருவாகத் துறையை மரபுரிமையாக வருவது, தேர்ந்தெடுக்கப்படுவது என்று சில வகைகளாகப் பிரிக்கின்றன. இப்பாகுபாட்டின் அடிப்படையில் அரசுகளை முடியரசு, குடியரசு என்று பிரிக்கின்றனர். ஆனால், நாம் மூன்றாவது இயலில் கூறியதுபோல அதனால் யாதொரு பயனும் இல்லை. அதற்கு மாறாக, மரபுரிமையாய் வரும் நிருவாகத் துறையும், தேர்ந்தெடுக்கப்படும் நிருவாகத்துறையும், உண்மையானவையா அல்லது பெயரளவில் உள்ளவையா எனக் கேட்க வேண்டும். முதல் உலகப் போருக்கு முன் சில ஐரோப்பிய அரசுகளில் மரபுரிமையாய் வந்த உண்மையான நிருவாகத் துறைகள் இருந்தன. அவற்றின் வரம்பின்மை அரசுகளுக்கேற்ப வேறுபட்டிருந்தது. ஜெர்மனி, ஆஸ்திரியா-ஹங்கேரி, ரஷ்யா ஆகிய நாடுகளை அவற்றிற்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். ஆனால், போரின் விளைவாக மரபுரிமையாய்

வந்த இந்நிருவாகத்துறை எல்லாம் அழிந்து போயின. இன்றைய மேற்கு நாடுகளில் மரபுரிமையாக வரும் நிருவாகத்துறை பெயரளவில் காணப்பட்ட போதிலும், மரபுரிமையாய் வரும் உண்மையான நிருவாகத்துறையை அங்குக் காண இயலாது.

இன்னென்றும் இங்குக் குறிப்பிட வேண்டும். அதாவது, தேர்ந்தெடுக்கப்பட்ட நிருவாகத் துறைகளிலுங்கூட அவற்றின் உண்மை இயல்புகள் வெளித்தோற்றத்திற்குள் மறைந்துகொண்டிருப்பதைக் காணலாம். மேல் நாட்டு முடியரசுகளிலெல்லாம் அரசர் உண்மையான நிருவாகத் துறையாய் இல்லாதது போல, சில குடியரசுகளிலும் தலைவர் உண்மையான நிருவாகத்துறையாய் இல்லாமல், பெயரளவில் மட்டும் இருக்கின்றார். நிருவாகத்துறை எனும் சொற்றொடரை நிருவாகத் துறையின் மேலான தலைவரைக் குறிப்பிடும் குறுகிய பொருளில் பயன்படுத்துவோமானால், இப்போதுள்ள அரசியல் முறைமைக்குட்பட்ட அரசுகளில் இரு வகை அரசுகளில் இரு வகை நிருவாகத் துறைகளையே காண இயலும். ஒன்று, பாராளுமன்றம் கட்டுப்படுத்தும் நிருவாகத்துறை; அதாவது, பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத் துறை. மற்றென்று, பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டிற்குப் புறம்பானது; அதாவது, பாராளுமன்றச் சார்பற்ற அல்லது உறுதியுள்ள நிருவாகத்துறை. அரசின் மரபு அல்லது பெயர் காரணமாக, நிருவாகத்துறையின் அமைப்பை மட்டும் பார்த்துவிட்டு அதைப் பற்றித் தவறான முடிவுக்கு மாணவர் வரக்கூடாது. நிருவாகத்துறை உண்மையில் இவை இரண்டில் எதைச் சேர்ந்தது என்பதை அறிய அது எவ்வாறு அலுவலாற்றுகிறதென்பதை ஆழ்ந்து பார்க்க வேண்டும்.

## 2. அதிகாரப் பிரிவினைக் கொள்கை

ஒவ்வொரு துறையும் ஒவ்வொரு தனிப்பட்ட அலுவலைச் செய்து வருவது காரணமாகவே அரசாங்கத்தில் சட்ட மன்றம், நிருவாகத் துறை, நீதித்துறை என்னும் மூன்று துறைகள் இருக்கின்றன. நாகரிகம் வளர வளர, இவ்வாறு ஓர் அலுவலில் சிறப்புத் தேர்ச்சி (Specialisation) பெறுவதை அறிவு, ஆக்கம் ஆகியவற்றின் எல்லாத் துறைகளிலும் காண்கிறோம். அரசாங்கத்தில் இது நிலைபெறுவதற்குக் காரணம், அதன் அலுவல்கள் பெருகிவிட்டதுமல்லாமல், நிறுவன அமைப்புகளிலும் சிக்கல்கள் மலிந்து காணப்படுவதே. முன்பு அரசரே சட்டமியற்றுபவராயும், அதைச் செயற்படுத்துபவராயும், நீதிபதியாயும் இலங்கினர். ஆனால், நாளடைவில் அரசர் தம் அதிகாரங்களைப் பிறருக்கு வழங்கவேண்டிய தேவை ஏற்பட்டது. இதன் விளைவாக, முப்பிரிவு தோன்றின. இப்போக்கினால் இறைமை அதிகாரத்

தில் பிரிவு ஏற்படவில்லை. அது அரசின் மிகுதியான அலுவல்களைச் சமாளிக்க வல்ல ஒரு வசதியான வழியாய் இருந்தது. சிறப்புத் தேர்ச்சி ஒரு சாதாரணத் தேவையாய் இருந்ததால், அதன் விளைவாகத் தோன்றிய அதிகார ஒப்படைப்பும் (Delegation of Power) சாதாரணச் செயலாகவே இருந்தது. ஆனால், அரசரின் அதிகாரம் குறைக்கப்பட்டு, அரசியல் முறைமைக்குட்படுகை சிறப்பிடம் பெறத் தொடங்கியதும் இந்தச் சாதாரணச் செயற்கொள்கை வடிவத்தைப் பெற்றது. இக்கொள்கையின்படி சுதந்தரத்தின் அடிப்படையானது, இந்த அலுவல்களில் சிறப்புத் தேர்ச்சி பெறுவதில் மட்டுமன்றி, இவற்றுள் ஒவ்வொன்றும் தனித்தனி நிறுவனங்களிடம் முழுவதும் ஒப்படைக்கப்படுவதிலும் அமைந்திருந்தது. அரசாங்க உரு மலர்ச்சியில் ஏற்பட்ட இந்த எதிர் பாரா நிகழ்ச்சி, ஒரு கொள்கையாய் மாறிச் சுதந்தரத்தை வலியுறுத்தியது காரணமாகவே, சில அரசியலமைப்புகளில் நூதனமான மாற்றங்கள் ஏற்பட்டதுமல்லாமல், பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத் துறைக்கும், பாராளுமன்றச் சார்பற்ற நிருவாகத் துறைக்கும் இக்காலத்தில் காணப்படும் வேறுபாடுகளும் தோன்றின.

இந்த அதிகாரப் பிரிவினைக் கொள்கையின் பிறப்பில் நாம் காணும் புதுமை என்னவென்றால், பிரிட்டிஷ் அரசியலமைப்பின் உறுதிக்கு இது தான் காரணமென முதலில் கருதினது. ஆனால், இது உண்மையன்று. ஏனெனில், பிரிட்டிஷ் அரசியலமைப்பு இதைச் சிறிதும் பயன்படுத்துவதில்லை. இது முதலில் 1748இல் வெளியான 'The Spirit of Laws' என்ற நூலில் காணப்பட்டது. இதன் ஆசிரியரான மான்டெஸ்க்யூ (Montesquieu) தமது நூலில் பிரிட்டிஷ் அரசியலமைப்பின் உட்கருத்தின் பிழிவைத் தர முயன்றார் எனக் கூறலாம். அவரது முடிவின்படி 'சட்ட ஆக்க அதிகாரமும் நிருவாகத்துறை அதிகாரமும் ஒரே ஆளிடம் அல்லது குழுவிடம் சேர்ந்திருக்குமானால், அங்குச் சுதந்தரம் நிலைபெற்றிருக்க இயலாது. ஏனெனில், அவ்வரசர் அல்லது சபை கொடுமையான சட்டங்களை இயற்றி அவற்றைக் கொடுமையான முறையிற்செயற்படுத்தலாம்.' ஆங்கில அரசியலமைப்பைப் பற்றி இவ்வாறு நூதனமாகக் கருதியவர்களுள் இந்தப் பிரெஞ்சு நூலாசிரியரைப் போன்ற வேறு சிலரும் இருந்தனர். ஏறக்குறைய இருபது ஆண்டுகள் கழித்து ஆங்கிலச் சட்ட வல்லுநரான பிளேக்ஸ்டோன் (Blackstone) என்பார், 'Commentaries on the Laws of England' (1765) என்ற தமது நூலில் அதே கருத்தைத் தெரிவித்தார். அவரது கூற்றின்படி 'எங்குச் சட்டத்தை இயற்றும் அதிகாரமும் அதைச் செயற்படுத்தும் அதிகாரமும் ஒரே ஆளிடம் அல்லது குழுவிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளனவோ, அங்கு மக்கள் சுதந்தரத்துடன் வாழ இயலாது.'

இக்கருத்து 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய அரசியல் தத்துவத்தின் முக்கியக் கோட்பாடாய் விளங்கியதுமல்லாமல், புரட்சி ஊழியில் வரையப்பட்ட பிரெஞ்சு அரசியலமைப்புகளில் எல்லாம் சேர்க்கப்பட்டது. அமெரிக்க அரசியலமைப்பைத் தீட்டியவர்களும் மான்டெஸ்க்யூ, பிளேக்ஸ்டோன் என்பவர்களின் கொள்கையை ஏற்றுக்கொண்டு, அதை அரசியலமைப்பில் இணைத்தார்கள். ஏனெனில், அப்போது அவர்களே பிரிட்டிஷ் அரசியலமைப்பிலுள்ள சிறந்த ஓர் இயல்பைப் பின்பற்றுவதாக எண்ணினார்கள். அப்போது இங்கிலாந்திலிருந்த நிருவாகத்துறை முதிர்ச்சியுற்ற முறையாய் இல்லை. அதன் உண்மையான ஆற்றலுக்கு அதிகாரப் பிரிவினைதான் காரணம் என்று சொல்லக் கூடிய நிலையை இப்போது அது கடந்துவிட்டது. அப்போதுகூட அதன் உரு மலர்ச்சிக்குத் துணைசெய்த ஆற்றல் அதுவன்று ஆயினும், அக்கொள்கை 1867 வரை நிலவி வந்தது. அந்த ஆண்டில் வால்டர் பேஜ்ஹாட் (Walter Bagehot) என்பவரின் சிறந்த நூலாகிய 'The English Constitution' என்பது வெளியானதும், அக்கருத்து மறைந்து போயிற்று.

அரசியல் முறைமைக்குட்பட்ட எந்த அரசிலும் இப்போது சட்ட ஆக்க அதிகாரமும் நிருவாகத்துறை அதிகாரமும் ஒரே நிறுவனத்திடம் இருப்பதில்லை என்பது திண்ணம். ஏனெனில், சட்ட மன்றத்தை விட நிருவாகத்துறை சிறியதாய் இருக்கவேண்டும். ஆனால், அதிகாரப் பிரிவினைக்கொள்கை இவ்வேறுபாட்டைக் குறிப்பிடுவதில்லை. இக்கொள்கையின்படி, நிருவாகத்துறையும் சட்ட மன்றமும் ஒரே நிறுவனமாய் இருத்தல் கூடாது என்பது மட்டுமல்லாமல், இவ்விரண்டு நிறுவனங்களும் முற்றிலும் பிரிந்து நிற்கவும் வேண்டும். ஏனெனில், ஒன்று மற்றொன்றைக் கட்டுப்படுத்தக் கூடாது. எந்த அரசாவது இக்கொள்கையை ஏற்று நடைமுறையில் முற்றும் பயன்படுத்தி வந்தால், அங்கு நிருவாகத்துறை சட்ட மன்றத்தின் கட்டுப்பாட்டிலிருந்து முற்றிலும் விடுபட்டிருக்கும். அத்தகைய நிருவாகத்துறையைப் பாராளுமன்றச் சார்பற்ற அல்லது உறுதியுள்ள நிருவாகத்துறை என வழங்குகிறோம். இவ்வகை நிருவாகத்துறை அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இன்னும் இருக்கிறது. இதைப் பொறுத்த வரையில் இதன் அரசியலமைப்பின் தொடக்கத்திலிருந்து யாதொரு மாற்றமும் ஏற்படவில்லை. நாம் ஏற்கெனவே கூறியதுபோல, பிரான்ஸில் புரட்சியின் பயனாகப் பிறந்த அரசியலமைப்புகளில் இக்கொள்கை புகுத்தப்பட்டது. பிறகு பிரான்ஸ் பிரிட்டிஷ் நிருவாகத்துறையின் முறையைப் பின் பற்றியது. இந்த இயல்பை அதன் மூன்றாவது குடியரசின் அரசியலமைப்பிலும், நான்காவது குடியரசின் அரசியலமைப்பிலும் காணலாம். ஐந்தாவது குடியரசிலும் இதைச் சில மாற்றங்களுடன் காணலாம். இம்முறைப்படி, சட்ட மன்றத்தின் ஒரு பகுதியாகிய அமைச்சரவை, சட்ட-

மன்றத்தைச் சார்ந்திருக்கிறது. ஏனெனில், நிருவாகத்துறையின் உறுப்பினர்கள் சட்ட மன்றத்தின் உறுப்பினர்களாயும் இருக்கின்றுர்கள்.

இம்முறையைப் பொதுவாக அமைச்சரவை முறை என வழங்குகிரேம், அதன் முக்கிய இயல்புகளைப் பல ஐரோப்பிய அரசுகளில் காணலாம். அவை முடியரசுகள் என்ருே, அல்லது குடியரசுகள் என்ருே வழங்கப்பட்ட போதிலும், இம்முறையைப் பின்பற்றுகின்றன. பிரிட்டிஷ் முடியரசின்கீழுள்ள தன்ஞட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடுகளும் இம்முறையை ஏற்றுக்கொண்டுள்ளன. பாராளுமன்றச் சார்பற்ற முறை அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கே இயல்பான தனி முறையாகும். இலத்தீன் அமெரிக்கக் குடியரசுகளும் தங்கள் அரசியலமைப்புகளைத் தங்கள் அண்டை நாடாகிய அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பைப்போல அமைத்துள்ளன. இந்த இயலிலும் அடுத்த இயலிலும் இக்கால உலகிலுள்ள தலை சிறந்த நாடுகளை, அவற்றின் நிருவாகத்துறை முறை எனும் கோணத்திலிருந்து ஆராய்வோம். குறிப்பிட்ட ஓர் அரசின் முறை பாராளுமன்றச் சார்புடையதா அல்லது சார்பற்றதா எனக் காண்பதே நமது நோக்கம். இதைத் தவிர, இவ்விரண்டிற்கும் இடைப்பட்ட ஒரு சில எடுத்துக்காட்டுகளையும் பார்ப்போம்.

## 3. பிரிட்டிஷ் அமைச்சரவை முறையின் வரலாறும் இக்கால அமைப்பும்

பிரிட்டிஷ் அமைச்சரவை முறை வளர்ந்த வரலாறு, அரசாங்க நூல் முழுவதிலும் மிக்க பயன் தரும் படிப்புகளில் ஒன்ருய்த்திகழ்கிறது. தன்ஞட்சி பெற்ற பிரிட்டிஷ் குடியேற்ற உரிமை நாடுகளும், ஐரோப்பாவின் முக்கிய அரசுகளும் இம்முறையைத் தங்கள் ஆவண அரசியலமைப்புகளில் இணைத்திருக்கின்றன. ஆனுல், 1937ஆம் ஆண்டு வரை ஆங்கிலச் சட்டம் இதை ஒப்புக்கொள்ளவே இல்லை. அதுவரை எந்தச் சட்ட ஆவணத்திலும் இதைப்பற்றிக் குறிப்பே இல்லை. ஆனுல், அந்த ஆண்டில் அரசரின் அமைச்சர்கள் சட்டம் (Ministers of the Crown Act) நிறைவேறியது. அது அமைச்சர்களின் ஊதியத்தை உயர்த்தி உறுதிப்படுத்தியது. மேலும், அது முதல் முறையாக அமைச்சரவை, அமைச்சர் என்ற பதங்களைச் சட்டப் புத்தகத்தில் எழுதியது மல்லாமல், தலைமை அமைச்சருக்கு அவருக்குரிய திட்டமுறையான தகுதி நிலையையும் அளித்தது. அச்சட்டம் தலைமையமைச்சருக்கு ஆண்டுக்கு 10,000 பவுன் ஊதியம் வழங்கியது. அதற்கு முன் தலைமை அமைச்சர் என்ற முறையில் அவருக்குத் தனி ஊதியம் இல்லை. அது வரை அவர் ஆண்டுக்கு 5000 பவுன் சம்பளம் பெற்று

வந்தார். ஆனுல், அவர் கருவூலத்தின் முதற்பிரபுவாகப் பணியாற்றிய தால், அல்லது வேறு பதவியில் அமர்ந்திருந்ததால், அச்சம்பளம் பெற்றுர். மேலும், அச்சட்டம் எதிர்க்கட்சித் தலைவரின் பதவியையும் உறுதிப்படுத்தி, அவருக்கு ஆண்டுக்கு 2000 பவுன் சம்பளம் வழங்கியது. அமைச்சர், தலைமை அமைச்சர் ஆகியோரின் அரசியலமைப்பு நிலை மூன்று நூற்றுண்டுகளாக உருமலர்ச்சி அடைந்த பிறகே சட்டம் அதை ஏற்றுக்கொண்டது என்ருல், வழக்கம் அல்லது வழக்காறுகள் பிரிட்டிஷ் அரசியலமைப்பில் எவ்வளவு ஆழமாய் வேரூன்றி இருந்தன என்பது தெளிவாகத் தெரிகிறது. இதைப்பற்றி ஏற்கெனவே நாம் கூறியிருக்கிருேம். ஒப்பீட்டு அரசியலைப் பயிலும் மாணவர், பல நாடுகளில் பரவியுள்ள இந்தச் சிறப்பான அரசியல் முறையின் வரலாற்றைப் பற்றி ஓரளவாவது படித்திருத்தல் இன்றிய மையாதது.

வால்போலின் (Walpole) காலத்தில் (1721—42) விக்குக் கட்சியினர் உயர்நிலை அடைந்த போது பிரிட்டிஷ் அமைச்சரவை வளர்ச்சியுற்றது எனப் பெதுவாகக் கூறுவர். அது அப்போது பெற்ற தனிச் சிறப்பியல்புகளே இன்று வரை சில மாற்றங்களுடன் நிலைபெற்றுள் ளன என்பது உண்மையாயினும், அதற்கு முற்பட்ட காலத்திலே அது தோன்றியதெனலாம். முந்திய பிரிவிலே நாம் குறிப்பிட்டபடி, பண்டைய அரசியற்சமூகத்தில் அரசர் சட்டமியற்றுபவராயும், அதைச் செயற்படுத்துபவராயும், நீதிபதியாயும் இருந்தார். அதாவது, சட்ட மன்றம், நிருவாகத்துறை, நீதித்துறை ஆகிய மூன்று துறைகளும் அவரது பதவியிலே இணைந்திருந்தன. இங்கிலாந்தில் முதலாம் வில்லியம் காலத்தில், இம்மூன்று அலுவல்களிலும் அரசருக்குத் துணை செய்யப் பெரிய அவை (The Great Council) அமைக்கப்பட்டது. இந்தப் பிரபுகளின் அவை இக்கால நிறுவனங்களின் அடிப்படையாய் இருந்தது. இதிலிருந்துதான் இன்றைய பிரிட்டிஷ் அரசாங்கத்தின் முக்கிய நிறுனங்களாகிய பாராளுமன்றம், அமைச்சரவை, நீதி மன்றங்கள் எல்லாம் தோன்றி, கண்ணுக்குப் புலனுகா வண்ணம் மாற்றங்களடைந்து வளர்ச்சியுற்றன. ஆனுல், பெரிய அவை ஆண்டுக்கு மூன்று முறை தான் கூடியது. அதிலிருந்து எப்போதும் அமர்ந்திருக்கும் தனிக்குழு உருவாகியது. அதில் கான்டர்பரி, யார்க்கு நகர அதிமேற்றிராணியார்கள் (Archbishops), முறைவர் (Justiciar), பொருளாளர், நிதித் தலைவர் (Chancellor) போன்ற உயர் அரச அலுவலர்கள் உறுப்பினர்களாய் இருந்தார்கள். இதை நிலையான அவை (Permanent Council) என வழங்கினுர்கள். ஆனுல், அரசரோடு மிக நெருங்கிய தொடர்பு கொள்வதற்கு இந்தப் பெரிய அவையால் இயலவில்லை. ஆகவே, அதற்குப் பதிலாக ஆரும் ஹென்றி காலத்தில் (1422—1461) இன்ஞெரு சிறிய அறிவுரைக்குழு அமைக்கப்பட்டது. இதற்கு உயர்

அவை அல்லது பிரிவி கவுன்சில் (Privy Council) என்பது பெயர். இது பிறகு நாட்டின் முக்கிய நிருவாகத்துறை நிறுவனமாய் மாறியது.

டியூடர்கள் காலத்தில் இந்த அவை திருத்தி அமைக்கப்பட்டது. அப்போது இது ஏராளமான எதேச்சாதிகாரங்களைப் பெற்றது. நாளடைவில் பிரிவி கவுன்சிலின் அளவு பெரிதாகவே, அதைவிடச் சிறிய மற்றொரு குழுவிற்கு அதன் உண்மையான அதிகாரங்கள் சென்றன. அது அவற்றை முன்னைவிட அதிகக் கடுமையாகச் செலுத்தியது. இந்தச் சிறப்பான அவையை மெக்காலே (Macaulay) 'உட்புற அவை' என வழங்கினர். இது அரசரைக் காண வழக்கமாகக் கூடும் அவையின் அறையில் இதற்கென ஒதுக்கப்பட்ட ஒரு சிறு தனி அறையில் (Cabinet) கூடியது. முதலாம் சார்லஸின் ஆட்சியில் (1625—1649) அது இந்நிலையை அடைந்திருந்தது. பாராளுமன்றம் இறுதியில் அரசரின் தனிச்சிறப்புரிமைகளைப் பெற்றதென இப்போது நாம் கூற இயலுமானல், இங்கிலாந்தில் நிருவாகத்துறையாய் மாறியதெனக் கூற இயலும். இம்மாபெருமாற்றம் மூன்று படிகளில் நடைபெற்றதெனப் பொதுவாகக் கூறலாம். முதலாம் சார்லஸின் ஆட்சியில் 1642இல் தோன்றிய பெரும்புரட்சி முதற்படியாகும். அமைச்சர்கள் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ளவர்களாய் இருக்க வேண்டுமென்பது இச்சண்டையின் முக்கியப் பிரச்சினைகளுள் ஒன்று. அதை எண்பிக்க அதற்கு முந்திய ஆண்டு அரசர் முன் சமர்ப்பிக்கப்பட்ட 'மிக்குயர் மறுப்புரை' (The Grand Remonstrance) என்ற ஆவணத்தின் ஒரு பகுதியை மேற்கோளாகக் குறிப்பிடலாம். போரைத் தடுப்பதற்காகச் செய்யப்பட்ட முயற்சிகளில் இந்த ஆவணமும் ஒன்று:

'பெரிய அரச காரியங்களைச் செய்வதற்கும், நம்பிக்கையான உமதருகில் இருப்பதற்கும் உமது பாராளுமன்றத்தின் நம்பிக்கைக்குரியவர்களையே அமர்த்த நீர் அருள் செய்க!' என அது வேண்டியது.

பாராளுமன்றம் வெற்றி பெற்று அரசரைத் தூக்கிலிட்ட போதிலும், அவர் மகனுரான இரண்டாம் சார்லஸின் காலத்தில் முடியரசு மீட்சி பெறவே, பழைய தீமைகள் மீண்டும் தலை தூக்கின. 1688ஆம் ஆண்டுப் புரட்சி தொடங்கியதும் நிருவாகத்துறை தனது வளர்ச்சியின் இரண்டாவது படியை அடைந்தது. பிறகு மூன்றும் வில்லியம் (1689—1702), ஆன் அரசியார் (1702—1714) ஆகியோரின் ஆட்சிக் காலங்களில், சட்டம் அமைச்சரவையை ஒப்புக்கொள்ளாவிடினும், அது 'அரசிலுள்ள ஒரே தலைமை அறிவுரை அவையாகவும் நிருவாகத்துறை அதிகாரியாகவும்' வளர்ந்துவிட்டது. ஆயினும், அரசரே அந்த அவையின் தலைவராய் இருந்

தார். அதை அரசரின் கட்டுப்பாட்டிலிருந்து முற்றிலும் அகற்றி அதன் தலைவராக ஓர் அமைச்சரை—தலைமை அமைச்சரை—ஏற்படுத்த இன்னொரு வாய்ப்புக் காத்திருந்தது. அதுவே ஆன் அரசியாரின் மறைவிற்குப் பிறகு ஹனோவேரிய மரபினர் அரியணையேறிய நிகழ்ச்சியாகும். ஆங்கில மக்கள் மதத்திற்காக நாட்டின் வளர்ச்சியைக் கைவிட்டார்கள். ஆங்கிலக் கத்தோலிக்கருக்கு (இரண்டாம் ஜேம்ஸின் மகனுருக்குப்) பதிலாக ஒரு ஜெர்மானிய மறுப்புச் சமயத்தவரைத் தெரிந்துகொண்டனர். முதலாம் ஜார்ஜுக்கும் இரண்டாம் ஜார்ஜுக்கும் ஆங்கிலம் பேசத் தெரியாது. ஆகவே, அவர்கள் அமைச்சரவைக் கூட்டங்களில் கலந்துகொள்ளும் பழக்கத்தைக் கைவிட்டார்கள். அதன் தலைமைப் பதவியைத் தலைமை அமைச்சர் பெற்றார்.

ஆகவே, அமைச்சரவையின் வளர்ச்சியை விளக்குவதும் தலைமை அமைச்சர் பதவியின் வளர்ச்சியை விளக்குவதும் ஒன்றல்ல. ஆயினும், வால்போலின் காலத்தில் இரண்டும் ஒன்றாய் இணைந்தன. இன்று அமைச்சரவையில் காணப்படும் சிறப்பியல்புகள் அவரது காலத்திலேதான் தெளிவாகத் தோன்றலாயின. 1742இல் அவர் வீழ்ச்சியுறவே, அதன் வளர்ச்சியில் தெளிவற்ற ஒரு நிலை ஏற்பட்டது. வால்போலின் வீழ்ச்சியின் விளைவாக விக்கு ஆட்சியில் தளர்ச்சி தோன்றியது. அதைப் பயன்படுத்திக்கொண்டு மூன்றும் ஜார்ஜ், அரசரின் தனிச் சிறப்புரிமைகளை மீண்டும் பெற முயன்றார். ஆனால், 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் அமைச்சரவை மீண்டும் தன் சிறப்பியல்களைப் பெற்றது. பிறகு அது அவற்றை இழக்கவே இல்லை. H. D. டிரெயில் (Traill) என்பார் அமைச்சரவையில் அமைந்துள்ள அரசியல் கருத்துகளையும் கூறுகளையும் கீழ்க்காணுமாறு சுருக்கமாகக் கூறுகிறார்:

(அ) சட்ட மன்ற உறுப்பினர்கள்

(ஆ) ஒரே அரசியல் கருத்துள்ள உறுப்பினர்கள்; அவர்கள் மக்கள் சபையின் பெரும்பான்மைக் கட்சியிலிருந்து தெரிந்தெடுக்கப்படுகின்றார்கள்.

(இ) அவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து தீர்மானித்த கொள்கையைப் பின் பற்றுகின்றார்கள்.

(ஈ) அவர்கள் கூட்டுப் பொறுப்புடையவர்கள். பாராளுமன்றம் கண்டனம் செய்தால், அனைவரும் பதவி துறப்பார்கள்.

(உ) தலைமை அமைச்சர் ஒருவருக்கு எல்லாரும் பணிகின்றனர்.

இச்சிறப்பியல்புகளை ஒரே தன்மை (Homogeneity), ஒற்றுமை, ஒரு தலைவரின்மேல் பற்றுறுதி என இன்னும் சுருக்கமாகக் கூறலாம்.

இந்நிருவாகத்துறை முறையின் விளைவாக, இறுதியில் அமைச்சரவை பாராளுமன்றத்தின் குழுவாக மாறுகிறதெனக் கூறலாம். மக்களாட்சி வளர்ச்சியடையவும், அது மக்கள் சபையின் குழுவாய் மாறுகிறது. பாராளுமன்றம் நிருவாகத்துறையைக் கட்டுப்படுத்திய வரலாற்றிற்கும், கட்சி முறையின் வளர்ச்சிக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஆனால், இவை இரண்டிற்கும் அரசியலமைப்புச் சட்டத்திற்கும் அண்மைக் காலம் வரை யாதொரு தொடர்பும் இருந்ததில்லை. மேலே கூறியது போல, 1937 வரை இந்நாட்டின் சட்டங்கள் அமைச்சரவையைப் பற்றிக் குறிப்பிடவேயில்லை. பிரிவி கவுன்சிலின் உறுப்பினராய் இராமல் அமைச்சரவையின் உறுப்பினராய் இருக்க முடியாதென்றும், பிரிவி கவுன்சிலிலிருந்தே அமைச்சரவை தோன்றியதென்றும் ஏற்கெனவே கூறினோம். அரசர் பிரிவி கவுன்சிலைத் தவருகப் பயன்படுத்தியதுதான், பாராளுமன்றத்திற்குப் பொறுப்பான அமைச்சரவை வளர்வதற்கு உண்மையான காரணமாய் இருந்தது. சட்ட ஆக்க அதிகாரத்தையும் நிருவாகத்துறை அதிகாரத்தையும் தனித் தனியாகப் பிரித்தால், சுதந்தரம் நிலைபெறும் என மான்டெஸ்க்யூவும், பிளேக்ஸ்டோனும் கருதினர். ஆனால், அவை இரண்டிற்கும் நெருங்கிய தொடர்பை உண்டாக்கினல் சுதந்தரம் வளரும் என பிரிட்டனின் வரலாறு சான்று பகர்கின்றது. வழக்கம் காரணமாக அரசியலமைப்பில் தோன்றிய இவ்வளர்ச்சியைத் தடைப்படுத்தப் பாராளுமன்றம் சிறிது காலம் சட்டங்களை இயற்றி வந்தது. அரசாங்கப் பதவியிலிருப்பவர் எவரும் மக்கள் சபையில் அமரக்கூடாது என்று 1701ஆம் ஆண்டின் அரசுரிமை நிருணயச் சட்டத்தின் (Act of Settlement) விதியொன்று கூறியது. ஆறு ஆண்டுகள் கழித்து இவ்விதி நீக்கப்பட்டது. இதைச் சட்டத்தில் சேர்க்கும் போதோ, அல்லது நீக்கும் போதோ, அரசியல் வல்லுநர்கள் இதனல் அரசாங்க அமைப்பில் எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய மாறுதல்களை எண்ணியிருக்க இயலாது. அரசரின் தனிச்சிறப்புரிமைகள் யாவும் அழிக்கப்படுவதற்கு முன், அமைச்சரவை தோன்றியது. நிருவாகத்துறையின் அலுவல் அதிக உறுப்பினர்களுடைய அவையாகிய பிரிவி கவுன்சிலுக்கு மீண்டும் வழங்குவதற்காகவே அரசுரிமை நிருணயச் சட்டத்தில் அவ்விதி சேர்க்கப்பட்டது. ஊழல் மலிந்த பாராளுமன்ற முறை வாயிலாக அரசர் சதியாலோசனை செய்து வந்தாரர்தலால், அதைத் தடுக்கக் கவுன்சிலின் உறுப்பினர்களை மக்கள் சபையிலிருந்து நீக்க வேண்டுமென்ற கருத்து நிலவியது.

அரசுரிமை நிருணயச் சட்டத்தின் விதியை நீக்கிய சட்டம், அதாவது 1707ஆம் ஆண்டின் பதவிச் சட்டம் (The Place Act), நடை

பெருத இந்த இடரிலிருந்து அரசியலமைப்பைக் காத்த போதிலும், அவ்விதியை இரு வகைகளில் இயங்குமாறு விட்டுவிட்டது. முதலாவது, அரசாங்கப் பதவியிலிருப்பவர் எவரும் அரசாங்கக் குத்தகைகளைப் (Contracts) பெறக்கூடாதென்று அவ்விதியின் எஞ்சியுள்ள பகுதி கூறியது. அதன்படி அத்தகைய குத்தகையில் ஈடுபடும் எந்த நிறுவனத்துடனும் அமைச்சர் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொள்ளக்கூடாது. இரண்டாவது, அவ்விதியின்படி, நிலையான பொதுத்துறை அலுவலர் எவரும் பாராளுமன்ற உறுப்பினராய் இருக்க இயலாது. சட்டம் பிரிவி கவுன்சிலை ஏற்றுக்கொண்ட போதிலும், அதற்கு எவ்விதமான அரசியல் ஆற்றலும் இப்போது இல்லை. நாம் மேலே கூறியது போல, அமைச்சரவையின் உறுப்பினராக ஒருவர் பதவியேற்கும்போது, பிரிவி கவுன்சிலின் உறுப்பினராக ஆணையேற்க வேண்டும். ஆனால், ஒரு முறை கவுன்சிலின் உறுப்பினராகிவிட்டால், அவர் எப்போதும் அதன் உறுப்பினராய் இருப்பார். ஆகவே, பிரிவி கவுன்சிலில் இப்போதுள்ள அமைச்சர்கள் மட்டுமன்றி, முன்னால் அமைச்சர்களாய் இருந்தவர் எல்லாரும் உறுப்பினராய் இருக்கின்றனர். ஆகவே, அது ஒரு பெரிய அவை. இப்போது அதில் ஆடவர்களுடன் பெண்டிர் சிலரும் உறுப்பினராய் இருக்கின்றனர். ஒவ்வொருவருக்கும் 'பெருமதிப்பிற்குரிய' (Right Honourable) என்ற பட்டம் உண்டு.

ஆகவே, அமைச்சரவை பாராளுமன்றத்தின் நல்லெண்ணத்தைச் சார்ந்திருக்கின்றது, இக்காலச் சூழ்நிலையில் அந்நல்லெண்ணம் மக்கள் சபையின் நம்பிக்கை எனப் பொருள்படும். இறுதியில் வாக்காளர்களின் கையிலே அதிகாரம் இருக்கிறதென்பதை இது குறிக்கின்றது. வால்டர் பேஜ்ஹாட் ஆழ்ந்த அறிவுடன் கூறியது போல, அமைச்சரவை ஒரு படைப்புயிர்; ஆனால், அது பிற படைப்புயிர்களைப் போலல்லாமல், தன்னைப் படைத்தவரையே அழிக்க வல்லது; அதாவது, மக்கள் சபையை அழிக்கும் அதிகாரமுடையது. ஏனெனில், மக்கள் சபையில் அமைச்சரவை தோற்கடிக்கப்பட்டுவிட்டால், பதவி துறப்பதற்குப் பதிலாக, தான் சார்ந்திருக்கும் அவையைக் கலைக்குமாறு அரசியாருக்கு அறிவுரை கூறலாம். பிறகு, தேர்தலை நாடும் அமைச்சரவையின் கட்சி பெரும்பான்மையுடன் வெற்றி பெறுவதா இல்லையா என்பதை வாக்காளர்கள் தீர்மானிப்பார்கள்.[1]

1. ஆனால், L. S அமெரியின் (Amery) 'Thoughts on the Constitution' என்ற நூலைப் பார்க்க. அதில் நூலாசிரியர், 'குடி மகன், அரசியல் அதிகாரத்தைச் சட்டமன்றம் வாயிலாக அச்சட்டத்தைச் சார்ந்திருக்கும் நிருவாகத்துறைக்கு ஒப்படைக்கிறான்,' என்பதை மறுக்கிறார்; நமது முறை 'முடியரசும் நாடும் சேர்ந்த ஐக்கியம்' எனக் கூறுகின்றார். முடியரசை அமைச்சரவையில் காணலாம், ஆள்வதும்,

இதிலிருந்து அமைச்சரவை உறுதியுடனிருப்பது கட்சி முறையைப் பொறுத்திருக்கிறதென்பது தெரிகிறது. நமது வரலாற்றில் அரசாங்கம் தனது கட்சியைத் தவிர மக்கள் சபையின் பிற பகுதிகளைச் சார்ந்திருக்க வேண்டிய தேவை ஏற்பட்ட போதெல்லாம், அதன் பதவிக் காலம் உறுதியற்றதாகவே இருந்திருக்கிறது. 1924இல் தொழிற் கட்சியின் நிலையையும் 1929–1931க்கு இடைப்பட்ட காலத்தையும்[1] இதற்குச் சான்றாக எடுத்துக்காட்டலாம்.

கட்சி முறை அமைச்சரவைக்கு ஒரே தன்மையைக் கொடுப்பது போல, தலைமை அமைச்சரின் பதவி அதற்கு உறுதி அளிக்கிறது. இங்கிலாந்தில் அமைச்சரவை ஆட்சி உண்மையில் குழுவாட்சியன்று. அதைத் தனி மனிதராட்சி எனலாம். தலைமை அமைச்சர் பாராளுமன்றத்தின் முன் பேசும் போது அமைச்சரவை முழுவதும் ஒன்றுபட்டு அவரை ஆதரிக்க வேண்டும். ஆனால், அந்த ஒருமைப்பாடு அவரைப் பொறுத்தது. அமைச்சர்கள் ஒன்றாகவே பதவியேற்கின்றார்கள் ; ஒன்றாகவே பதவி துறக்கின்றார்கள். அமைச்சரவையில் கருத்து வேறுபாடு ஏற்படுமானால், தலைமை அமைச்சர் தமக்கு இணங்காதவர்களைத் தனித்தனியாகப் பதவி துறக்குமாறு கட்டாயப்படுத்தலாம் ; அல்லது முழு அமைச்சரவையுடன் தாமே பதவி துறக்கலாம். இவ்வாறு இங்கிலாந்தில் கட்சி முறையும் அமைச்சரவை முறையும் பிரிக்க முடியாதவாறு பிணைந்து பின்னிக் கிடக்கின்றன. வலிமையான கட்சி முறை இல்லாமல் அமைச்சரவை முறையை ஏற்றுக்கொண்ட நாடுகளில் எல்லாம், அரசாங்கம் உறுதி குலைந்தே காணப்படுகிறது. ஏனெனில், கட்சி முறையிலிருந்தே அது ஆற்றலைப் பெறுகின்றது. அதாவது, தேர்ந்தெடுக்கப்பட்ட அவையில் அதை ஆதரிக்கத் திண்மையான பெரும்பான்மை வேண்டும். ஆகவேதான் அங்கெல்லாம் அமைச்சரவை நெருக்கடி இங்கிலாந்தில் நிகழ்வதைவிட அடிக்கடி நிகழ்கிறது.

பிரிட்டிஷ் நிருவாகத்துறை முறையின் சிறப்பியல்புகளைச் சுருக்கமாகக் கூறலாம். அது தேர்ந்தெடுக்கப்பட்ட அவையின் பெரும்பான்மை உறுப்பினர்களின் ஆதரவைச் சார்ந்து நிற்கிறது. அதன் உறுப்

சட்டங்களைத் தொடங்கி வைப்பதும் அதன் அலுவல். நாட்டின் பிரதிநிதியாகப் பாராளுமன்றம் இருக்கிறது. குற்றங்காணுதலும் இணங்குதலும் அதன் வேலை.

1. பிந்திய ஆண்டில், தலைமை அமைச்சரான ராம்ஸே மக்டனால்டு (Ramsay MacDonald) தம் கட்சியினர் பலரை நீக்கி, பெரும்பாலும் பழமைவாதிகளையே கொண்ட கூட்டு அமைச்சரவையை ஏற்படுத்தி, தேசிய அரசாங்கத்தை அமைத்தார். இவ்வாறு அவர் தமது பதவியைக் காப்பாற்றினர்.

பினர்கள் ஒரே கட்சியைச் சேர்ந்தவர்கள் (நாட்டின் நெருக்கடிக் காலங்களில் இவ்வாறு நிகழ்வதில்லை.) தலைமை அமைச்சரின் பதவி அதற்கு உறுதியளிக்கிறது. 1937ஆம் ஆண்டில் அரசரின் அமைச்சர்கள் சட்டம் (Ministers of the Crown Act) நிறைவேறிய வரையில் சட்டம் அமைச்சரவையையும் தலைமை அமைச்சரின் பதவியையும் ஒப்புக்கொள்ளவில்லை. சட்டம் எப்போதும் ஏற்றுக்கொண்டுள்ள பிரிவி கவுன்சிலில் முன்பு அமைச்சர்களாயிருந்தவர்களும், இப்போது இருக்கின்றவர்களும் உறுப்பினர்களாய் இருக்கின்றார்கள். ஆனால், இப்போது அதற்கு யாதோர் அரசியல் சிறப்பும் இல்லை. அதன் வளர்ச்சியின் விளைவாக அரசரின் தனிச்சிறப்புரிமைகள் எல்லாம் அழிந்து போயின. அவை அனைத்தும், எல்லா நிருவாகத்துறை அதிகாரத்துடனும் சட்ட மன்றத்திடம் ஒப்படைக்கப்பட்டுவிட்டன.

## 4. குடியேற்ற உரிமை நாட்டு நிலையும் அமைச்சரவை அரசாங்கமும்

நாளடைவில் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள் (Colonies) சில குடியேற்ற உரிமை நாட்டு நிலையை (Dominion Status) அடைந்ததும் பிரிட்டனில் வளர்ச்சியுற்ற பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை முறையைத் தாமும் பெற்றன. அவை பொறுப்புள்ள அரசாங்கத்தைப் பெற்றமையால், இது நிகழ்ந்தது. பொறுப்புள்ள அரசாங்கம் என்பது, குடியேற்ற நாடுகளில் நடைமுறையில் அமைச்சரவை முறையைப் பயன்படுத்துவதுதான். அந்நாடுகளின் நிருவாகத்துறை அதிகாரம் முன்பு பேரரசின் அரசாங்கத்தினிடம் இருந்தது. பொறுப்புள்ள அரசாங்கம் என்பதன் பொருள் என்னவென்றால், அதைச் செயற்படுத்தும் குடியேற்ற உரிமை நாடு தனது சொந்த நலன்களைப் பொறுத்த வரையில் சட்டங்கள் இயற்றும் உரிமை பெற்றிருப்பதுடன், மக்கள் தெரிந்தெடுத்த பிரதிநிதிகள் அதன் நிருவாகத்துறையை நேராக முற்றிலும் கட்டுப்படுத்துகின்றார்கள். ஆகவே, பிரிட்டனில் என்ன நிகழ்ந்ததோ, அதுதான் தன்னாட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடுகளிலும் நிகழ்ந்தது. ஆனால், அவற்றில் அது பிரிட்டனில் நடந்ததைவிடக் குறுகிய காலத்தில் நடந்துள்ளது. பழைய ஆட்சி முறைப்படி, கவர்னர் ஜெனரல் அரசரின் பிரதிநிதியாக, அதாவது தாய் நாட்டின் பிரதிநிதியாகப் பணியாற்றினார். இம்முறையைப் பழைய குடியேற்ற நாட்டு முறை என்பர். பிரிட்டனில் எவ்வாறு அமைச்சரவையின் வளர்ச்சி அரசரின் அரசியல் அதிகாரத்தை முதலில் கட்டுப்படுத்திப் பிறகு அழித்துவிட்டதோ, அவ்வாறே குடியேற்ற நாடுகளிலும் கவர்னர் ஜெனரல் தமது அறிவுரைக் குழுவைத் தேர்ந்தெடுக்கப்பட்ட அவையின் பெரும்பான்மைக் கட்சியிலிருந்தே தெரிந்தெடுக்கும் நிலை

ஏற்பட்டது. இது நடைபெற்றதும், நிருவாகத்துறை அதிகாரம் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கையிலிருந்து குடியேற்ற உரிமை நாட்டிற்கு மாறியது.

பிரிட்டனுக்கும் குடியேற்ற நாடுகளுக்கும் இடையே ஏற்பட்ட நீண்ட காலத் தொடர்பினால் எழுந்த சிக்கலைத் தீர்ப்பதற்கு இவ்வழியைப் பின் பற்றினர். ஆனால், இதைப் பயன்படுத்த விரும்பியவர்கள் எண்ணியதைவிட, இதனால் அதிகமான பயன்கள் ஏற்பட்டன. 1837இல் கனடாவில் புரட்சி தொடங்கவே, இம்முறையிலும் ஒரு தொடக்கம் தோன்றியது. அதன் பிறகு லார்டு டர்ஹாம் கவர்னர் ஜெனரலாய் அனுப்பப்பட்டார். நாட்டின் நிலைமை பற்றி அறிவிப்பதும் அதன் எதிர்கால அரசாங்கத்தைப் பற்றித் திட்டம் தீட்டுவதும் அவருக்கு அளிக்கப்பட்ட அலுவல்கள். 1839ஆம் ஆண்டில் அவர் வெளியிட்ட அறிக்கையை பிரிட்டிஷ் பேரரசின் வரலாற்றிலே ஒரு திருப்பம் எனலாம். ஏனெனில், அது கனடா பொறுப்புள்ள அரசாங்கத்தைப் பெறுவதற்கு அடி கோலியது, ஆனால், டர்ஹாம் நிருவாகத் துறையின் அலுவல்களைப் பொறுத்த வரையில் உள் நாட்டுச் செய்திகளையும் பேரரசு செய்திகளையும் வேறுபடுத்த முயன்றார்; மேலும், சில காரியங்களை வெஸ்ட்மின்ஸ்டரிலுள்ள அரசாங்கத்திற்கு எப்போதும் ஒதுக்கி வைக்க வேண்டும் என்றும் குறிப்பிட்டார். இவ்வாறு அதிகாரங்களைப் பிரித்து வைப்பது நடைமுறையில் நடக்கக் கூடுமா என அப்போது இங்கிலாந்திலிருந்த பெரியார் பலர் ஐயமுற்றனர். மேலும், எல்லா அதிகாரங்களும் ஒரு நாள் குடியேற்ற உரிமை நாட்டிற்கே வழங்கப்பட வேண்டும் என்றும் அவர்கள் நம்பினார்கள். இதைப் பிற்கால வரலாறு எண்பித்துவிட்டது. ஆனால், அப்பெரியார்கள் எண்ணியபடி, டர்ஹாமின் அறிக்கையை மறுப்பதற்கு அது ஒருகாரணமாய் இராமல், அதை முற்றிலும் ஏற்கவேண்டுமென எண்பித்தது. ஏனெனில், பொறுப்புள்ள அரசாங்கத்தை நடைமுறை அரசியலில் ஏற்றுக்கொண்டதும், குடியேற்ற உரிமை நாடுகளின் அதிகாரங்கள் தடையின்றி வளரத்தொடங்கின. இதனாலேதான் பொது நலக் கூட்டு உயிர் வாழ முடிந்தது.

1840ஆம் ஆண்டின் கனடாச்சட்டம், கனடாவில் அமைச்சரவை முறையை நிறுவவில்லை. ஆனால், டர்ஹாமுக்குப் பிறகு கவர்னர் ஜெனரலாகப் பதவியேற்றவர்கள்—சிறப்பாக ஸைடன்ஹாம் பிரபுவும் எல்ஜின் பிரபுவும்—தங்கள் அரசியல் திறமையினால் அமைச்சரவை முறையை வளர்ப்பதற்கு அச்சட்டம் துணை செய்தது. நாளடைவில் கீழ்ச்சபையின் பெரும்பான்மைக் கட்சியிலிருந்தே தமது நிருவாகச் சபையின் உறுப்பினர்களைத் தெரிந்தெடுப்பது கவர்னர் ஜெனரலுக்கு வழக்கமாயிற்று. இக்கொள்கை எவ்வளவு வெற்றி பெற்றுவிட்ட

தென்றல், தாய் நாட்டு அரசாங்கம் இதைத் தடுப்பதற்காகப் பிற்போக்கு வாதிகளான கவர்னர் ஜெனரல்களை நியமித்தபோதிலும், தோல்வியே அடைந்தது. 1849இல் பிரிட்டிஷ் தலைமை அமைச்சராய் இருந்த ஜான் ரஸ்ஸல் பிரபு மக்கள் சபையில் கூறியதிலிருந்து இதை அறியலாம். அவர் பின் வருமாறு கூறினார் :

'கனடாவின் அமைச்சரவையை மக்களும் பேரவையும் ஆதரித்தால், அது பதவியிலிருக்கும். அதற்கு மாறாக, மாநில மக்கள் அதை எதிர்ப்பார்களாயின், கவர்னர் ஜெனரல் வேறு அமைச்சர்களை நியமித்து, இங்கு நிறைவேற்றப்பட்ட கட்டளையின்படியே செயலாற்றுவார்.'

மக்கள் சபையும் பிரபுகள் சபையும் இப்போக்கைப் பெரும்பான்மை வாக்குகளால் ஆதரித்தன, அதிலிருந்து கனடாத் தனது சட்டமன்றத்தினால் நிருவாகத்துறையைக் கட்டுப்படுத்தும் உரிமையை எவரும் எதிர்த்ததே இல்லை. கனடாக் குடியேற்ற உரிமை நாட்டை ஏற்படுத்திய 1867ஆம் ஆண்டுச் சட்டம் அமைச்சரவை முறையை ஏற்றுக்கொண்டது. அதன் 11ஆம் விதியின்படி 'கனடா அரசாங்கத்திற்குத் துணை செய்து அறிவுரை கூற ஓர் அவை உண்டு. அதற்குக் கனடா அரசியாரின் பிரிவி கவுன்சில் என்பது பெயர்.' அதுதான் நடைமுறையில் அமைச்சரவையாய்ப் பணியாற்றுகிறது.

இதற்கிடையில்—1850ஆம் ஆண்டில்—நியூஜீலர்துக்கும் ஆஸ்திரேலியாவின் தனிக்குடியேற்ற நாடுகளுக்கும் பொறுப்புள்ள அரசாங்கம் வழங்கப்பட்டது. ஆகவே, ஆஸ்திரேலியா, பொதுநலக் கூட்டை நிறுவும் காலம் வந்ததும், அதன் தனிப்பகுதிகளில் அமைச்சரவை முறை நிலவி வந்ததால், புதிய சட்டமும் அதை ஏற்றுக்கொண்டு நிருவாகத்துறையின் இன்றியமையாத பகுதியாய் இணைந்தது. பொதுநலக்கூட்டின் 64ஆம் விதியின்படி, 'முதல் பொதுத் தேர்தலுக்குப்பின் அரசின் எந்த அமைச்சரும் தாம் பதவியேற்கும் போது செனட்டின் அல்லது பிரதிநிதிகளின் சபையின் உறுப்பினராய் இல்லையெனில், அல்லது பதவியேற்ற பிறகு உறுப்பினர் ஆகவில்லையெனில், மூன்று திங்களுக்கு மேல் பதவியில் இருக்கக்கூடாது.'

இதிலிருந்து ஆஸ்திரேலியாவில் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை இருக்கின்றதென்பது தெளிவாகத் தெரிகின்றது. தென்னாப்பிரிக்காவிலும் 1910ஆம் ஆண்டில் ஐக்கியம் அமைக்கப்பட்ட போது அவ்வாறே நடந்தது. 1909இன் தென்னாப்பிரிக்கச் சட்டத்தின் 14ஆம் விதி மேலே கூறிய பொதுநலக் கூட்டுச் சட்டத்தின் 62ஆம் விதியை ஏறக்குறைய அதே சொற்களால் திருப்பிக்

கூறுகின்றது. 1960இல் தென்னுப்பிரிக்காக் குடியரசாகி பிரிட்டிஷ் பொதுநலக்கூட்டிலிருந்து விலகியபோதும் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறையின் முறையைக் கைவிடவில்லை. குடியரசை அமைத்த 1961ஆம் ஆண்டுச் சட்டம் 'நிருவாக அவையின் (அதாவது அமைச்சரவையின்) அறிவுரைக்கேற்பச் செயலாற்றும் தலைவர் அரசாங்கத்தின் நிருவாகத்துறை ஆவார்,' எனத் தெளிவாகக் கூறுகின்றது. மேலும், அது அமைச்சராகப் பதவி ஏற்பவர் பாராளுமன்றத்தின் ஏதாவது ஓர் அவையில் உறுப்பினராய் இருக்கவேண்டும் என்றும், இல்லையெனில் மூன்று மாதங்களுக்குள் உறுப்பினராக வேண்டும் என்றும், அல்லாவிடில் அவர் பதவி துறக்க வேண்டும் என்றும் கூறுகிறது.

தென்னயர்லாந்து தன்னுட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடான போதும் அதே பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறைக் கொள்கைதான் வலியுறுத்தப்பட்டது. இப்போது அயர் குடியரசாகிப் பொதுநலக்கூட்டிலிருந்து வெளியேறிவிட்ட போதிலும், உரிமை நாடான அயர்லாந்தின் அரசியலமைப்புச் சட்டத்தின் 51ஆம் விதி அமைச்சரவை அரசாங்கத்தின் பொருளை நன்கு விளக்குகின்றது. அதை முழுவதும் கீழே தருகிறோம் :

'உரிமை நாடான அயர்லாந்தின் நிருவாகத்துறை அதிகாரம் அரசரிடம் இருக்கிறதென இது அறிவிக்கின்றது. கனடாக் குடியேற்ற உரிமை நாட்டில் நிருவாகத்துறை அதிகாரத்தைச் செலுத்தப் பயன்படும் சட்டம், பழக்கம், அரசியலமைப்பைச் சார்ந்த வழக்கம் ஆகியவற்றிற்கேற்ப அயர்லாந்திலும் அந்த அதிகாரத்தை அரசரின் பிரதிநிதி செலுத்துவார். உரிமை நாடான அயர்லாந்தின் அரசாங்கத்திற்குத் துணை செய்து அறிவுரை வழங்க ஓர் அவை உண்டு. அதற்கு 'நிருவாக சபை' என்பது பெயர். நிருவாக சபை, பிரதிநிதிகளின் சபைக்குப் பொறுப்புள்ளது. அதில் எழுவருக்கு மிகாமலும் ஐவருக்குக் குறையாமலும் இருக்க வேண்டும். நிருவாக சபையின் தலைவர் அவர்களின் பெயர்களைக் குறிப்பிட்டதும், அரசரின் பிரதிநிதி அவர்களைப் பதவியில் அமர்த்துவார்.'

தென்னுப்பிரிக்கக் குடியரசைப் போலவே அயர்லாந்து குடியரசும் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை முறையைப் பேணி வருகிறது. அயர்லாந்தின் அரசியலமைப்பு என வழங்கப்படும் 1937ஆம் ஆண்டின் அரசியலமைப்பில் இக்கொள்கையைப் பல விதிகளிற்காணலாம். பிரதிநிதிகளின் தலைமை அமைச்சரின் பெயரைக் குறிப்பிட்டதும் நாட்டின் தலைவர் அவரைப் பதவியில் அமர்த்த வேண்டும் என்றும், தலைமை அமைச்சர் அரசாங்கத்தின் மற்ற உறுப்

பினர்களின் பெயர்களைக் குறிப்பிட்டதும் தலைவர் அவர்களை நியமிக்க வேண்டும் என்றும் அரசியலமைப்புக் கூறுகின்றது. மேலும், அது 'அரசாங்கப் பிரதிநிதிகளின் சபைக்குப் பொறுப்புள்ளது,' என்றும், 'அரசாங்க உறுப்பினர்களின் கீழிருக்கும் துறைகளின் அலுவல்களைப் பொறுத்த வரையில் அவர் அனைவரும் கூட்டுப் பொறுப்புடையவர்,' என்றும் குறிப்பிடுகின்றது. வெள்ளையர் வாழும் மூன்று குடியேற்ற உரிமை நாடுகளாகிய கனடா, ஆஸ்திரேலியா, நியூஜீலந்து ஆகியவற்றில் 1926இல் நடைபெற்ற பேரரசு மாநாட்டின் விளைவாகவும், 1931ஆம் ஆண்டின் வெஸ்ட்மின்ஸ்டர் கூட்டத்தின் பயனாகவும் பொறுப்புள்ள அரசாங்கம் வளர்ச்சியுற்றது. வெஸ்ட்மின்ஸ்டர் சட்டம் அந்நாடுகளின் முழுச் சுதந்தரத்தையும் ஒப்புக்கொண்டது. குடியேற்ற நாடுகளில் வேறு வகையான நிருவாகத்துறை முறை வளர்ந்திருக்குமென்றால், பிரிட்டிஷ் பொதுநலக்கூட்டு நாடுகள் விரைவாக மாறிக்கொண்டு வரும் இவ்வுலகில் இன்றிருப்பது போலச் சுதந்தர நாடுகளின் ஒரு தனிச்சமூகமாக நிலைபெற்றிருக்க இயலாதெனக் கூறலாம்.

## 5. பிரெஞ்சுக் குடியரசில் அமைச்சரவை

ஸர் ஹென்றி மெயின் கூறுவது போல, 'பிரான்ஸ் நாட்டின் தலைவரைப்போல இரங்கத்தக்க நிலையில் வேறு எந்த அதிகாரியும் இல்லை. பிரான்ஸின் பழைய மன்னர்கள், அரசாண்டதுடன் துரைத்தனமும் செய்தார்கள். தியர்ஸ் கருத்தின்படி, அரசியலமைப்புக்குட்பட்ட மன்னர் அரசாண்ட போதிலும் துரைத்தனம் செய்வதில்லை. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைவர் துரைத்தனம் செய்கிறார்; ஆனால், அரசாள்வதில்லை. பிரெஞ்சுக் குடியரசின் தலைவர் அரசாள்வதுமில்லை; துரைத்தனம் செய்வதுமில்லை.' மூன்றும் குடியரசின் தொடக்கக் காலத்தில் ஸர் ஹென்றி மெயின் இவ்வாறு கூறினார். இக்கூற்றில் மிகைபடக் கூறல் ஓரளவு காணப்படினும், இது மூன்றும் குடியரசில் தலைவர் பெற்றிருந்த நிலையைப் பொதுவாக விளக்குகிறது. அவரது நிலை மூன்றும் குடியரசின் தொடக்கக் காலத்திலிருந்தது போலவே அதன் முடிவு வரையும் இருந்தது. நான்காவது குடியரசு (1946) அரசியலமைப்பும் தலைவரின் உண்மையான அதிகாரங்களைப் பெரிதும் மாற்றவில்லை. அவர் பிரான்ஸின் உண்மையான நிருவாகத்துறையாய் இராமல், பெயரளவில் மட்டும் இருந்தார். அப்போது அமைச்சரவைதான் (le Conseil des Ministres) அங்கு உண்மையான நிருவாகத்துறையாய் இருந்தது. தலைமை அமைச்சர் (le President du Conseil des Ministres) அதன் தலைவர். அது பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையது. தலைவர் 'பெயரளவில் நிருவாகத்துறையாய் இருந்தார். பெயரளவில் அவருக்கு அதிக

அதிகாரங்கள் வழங்கப்பட்டிருந்தன. ஆனால், உண்மையில் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ள அமைச்சரவை அவருடைய அதிகாரங்களைக் கட்டுப்படுத்தி வந்தது.' பிரெஞ்சு திறனாய்வாளர் பலர் அம்முறையில் தலைவர் 'அமைச்சரவை, பாராளுமன்றம் ஆகிய வற்றின் கைதியாய் இருந்தார்,' எனக் குறை கூறினர்.

மூன்றாவது நான்காவது குடியரசுகளில் பிரெஞ்சு தலைமை அமைச்சரின் நிலை பிரிட்டிஷ் தலைமை அமைச்சரின் நிலையினின்று ஓரளவு வேறுபட்டிருந்தது. அமைச்சர்களை நியமிக்கவும் விலக்கவும் அவரால் இயலும். ஆனால், உண்மையில் பிரான்ஸின் நூதனமான கட்சி முறை காரணமாக, அவர் மிகவும் கவனமாகவே செயலாற்ற வேண்டியிருந்தது. சபைகளில் பெரும்பான்மை பெறக்கூடிய வலிமை பெற்ற கட்சி பிரான்ஸில் இல்லை. ஆகவே, பாராளுமன்றப் பிரிவு கள் சேர்ந்து அமைக்கும் கூட்டு அமைச்சரவையின் ஆதரவை நம்பி அரசாங்கம் வாழ்ந்தது. எப்பிரிவின் கருத்துகளையும் அவமதிக்காத வரையில் அவர்கள் தலைமை அமைச்சரை ஆதரித்து வந்தார்கள். தமது அதிகாரத்திற்கு வரம்பிடும் இவ்வரை கோட்டை விட்டு வெளியே போகாவண்ணம் அவர் எப்போதும் அஞ்சி நடுங்கிவந்தார். பிரிட்டனில் நடந்ததைவிட, பிரான்ஸில் அடிக்கடி அமைச்சரவை மாறுவதற்கு இதுதான் காரணம்.

அமைச்சரவை நெருக்கடிகள் பற்றி இன்னும் விளக்கமாகக் கூற வேண்டும். பிரிட்டனில் பொதுவாக அமைச்சரவை நெருக் கடிக்கும், பாராளுமன்றக் கலைவுக்கும் தொடர்பு உண்டு. ஏனெனில், மக்கள் சபையில் தோற்கடிக்கப்பட்ட அமைச்சரவை பதவி துறக் கிறது; அல்லது மக்கள் சபையைக் கலைக்குமாறு அரசியாருக்கு அறிவுரை கூறுகிறது. அது பதவி துறக்குமானால், புதிய அமைச் சரவை பொதுவாக மக்கள் சபையில் போதுமான ஆதரவைப் பெறுவ தில்லை. ஆகவே, மக்கள் சபையைக் கலைக்கவேண்டிய நிலை ஏற்படு கிறது. பிறகு என்ன நிகழுமென்பதை வாக்காளர்கள் தீர்மானிக் கின்றார்கள். பிரிட்டனில் சாதாரணமாகப் பாராளுமன்றம் சட்டம் குறித்துள்ள கால அளவைக் கடந்து நீடித்து நிற்பதில்லை. ஏனெனில், நாளடைவில் ஆட்சியின் பிடி தளர்கின்றது; இடைத் தேர்தல்களில் (Bye-elections) அது தோல்வியுறுகின்றது; நிலைமை இன்னும் மோச மாகுமுன் அது பாராளுமன்றத்தைக் கலைக்கின்றது. பிரான்ஸில் எல்லாம் வேறு விதமாக நடைபெற்றன. அங்கு மூன்றாவது குடியர சில் சட்ட முறைப்படி பாராளுமன்றம் நான்கு ஆண்டுகள் நீடிக்க லாம். செனட்டின் இசைவு பெற்று அதற்கு முன்னால் அதைக் கலைப் பதற்கு அரசியலமைப்புத் தலைவருக்கு அதிகாரம் அளித்தது. ஆனால், மூன்றாவது குடியரசின் வரலாற்றில் ஒரேயொரு முறைதான் பாராளு

மன்றம் குறிப்பிட்ட காலத்திற்கு முன் கலைக்கப்பட்டது. அது 1877ஆம் ஆண்டில் தலைவர் மெக்மெஹான் (Mc Mehon) காலத்தில் நிகழ்ந்தது. இதைக் குடியரசுக்கு எதிரான சூழ்ச்சியெனவும், பாராளுமன்றத்தைக் கவிழ்க்கத் தலைவரும் செனட்டும் செய்த சதி எனவும் மக்கள் கருதினார்கள்; அதாவது, அவர் இரண்டாண்டுகளுக்கு முன் அமைக்கப்பட்ட குடியரசை அழித்து, மக்கள் வாக்கெடுப்பு முறையை நிறுவ விரும்பினர் என்று கருதினார்கள். குடியரசு வாதிகள் இம்முறையை எவ்வளவு இழிவாகக் கருதினார்கள் என்றால், மூன்றும் குடியரசின் காலத்தில் இதை மறுபடியும் யாரும் பயன்படுத்தவில்லை.

பிரான்ஸில் மூன்றுவது குடியரசில் ஓர் அமைச்சரவை பதவி துறந்ததும், சபையில் பெரும்பான்மை பெறுவதற்காகப் புதிய கூட்டு உருவாகும். பதவி துறந்த அமைச்சரவையில் ஒரு பதவி வகித்த ஓர் அரசியல் வாதி புதிய அமைச்சரவையில் வேறொரு பதவியைப் பெறுவார். அமைச்சரவையிலுள்ள ஒரு கட்சியினர் விலகினாலும் அமைச்சரவை வீழ்ச்சியுறும். அவ்வாறு அமைச்சரவை வீழ்ச்சியுறும்போதெல்லாம் பிரான்ஸில் பொதுத்தேர்தல் நிகழ வேண்டுமாயின், அங்கு மக்களாட்சி இது வரையில் அநேகமாக இறந்திருக்கும். பிரான்ஸில் வலுக்குறைந்த கூட்ட முறையானது அமைச்சரவை அரசாங்கத்தின் அடிப்படையாய் இருந்தது. ஆனால், பல தீங்குகள் விளைந்தன. அதனால், பிரான்ஸின் பாராளுமன்றச் சார்புடைய நிருவாகத்துறைக்கு வேறு எதையும்விட அதிகமாக இழுக்கு ஏற்பட்டது. அமைச்சரவையின் தாயகமாகிய இங்கிலாந்தில் அது உண்மையான கட்சி முறையில் ஆழ வேரூன்றியிருந்தது. ஆனால், பிரான்ஸில் அரசாங்க உதவிகளை அள்ளி வழங்குவதன் மூலமாக அமைச்சரவையை அமைத்துக் காத்து வந்தனர். நண்பர்களைத் தேடுவதே தலைமை அமைச்சரின் இடையருத வேலையாய் இருந்தது. ஏனெனில், அவர் தம்மை நெருக்கடியிலிருந்து காக்க வேண்டியிருந்தது. அந்நெருக்கடி கவிஞர் வெர்ஜில் என்பார் தீட்டும் கீழுலகில் காணப்படும் கற்பாறை போல அவரை அச்சுறுத்திக்கொண்டே வந்தது. பிரெஞ்சு அமைச்சரவை முறையின் பெருங்குறை என்னவென்றால், மூன்றுவது குடியரசில் அமைச்சரவை சராசரிப் பத்து மாதங்களே பதவியிலிருந்தது.

நான்காவது குடியரசின் அரசியலமைப்பை வரைந்தவர்கள் அடிக்கடி நிகழும் அமைச்சரவை நெருக்கடிகளினால் பிரான்ஸின் பாராளுமன்ற நிறுவனங்களுக்கு ஏற்படக் கூடிய இடர்களை உணர்ந்தார்கள்; அதைத் தடுப்பதற்கான முயற்சிகளும் செய்தார்கள். அமைச்சரவைக்கெதிராகக் கொண்டுவரப்படும் நம்பிக்கைத் தீர்

மானத்தின் அல்லது கண்டனத் தீர்மானத்தின் முறைகளையும் விளைவு களையும் அரசியலமைப்பின் நான்கு விதிகள் விரித்துரைக்கின்றன. அத்தகைய தீர்மானங்களைப் பற்றித் தேசீய அவைதான் வாதம் செய்ய இயலும். அமைச்சரவை அல்லது தேசீய அவையின் பதவிக் காலத் தைச் சார்ந்த செய்திகளை வாதிக்க, பழைய செனட்டிற்கு இருந்தது போன்ற அதிகாரம் குடியரசு சபைக்கு இல்லை. அரசியலமைப்பில் குறிப்பிட்டுள்ள விதிகளின்படி, பாராளுமன்றத்தின் பதவிக் காலத்தில் முதல் பதினெட்டு மாதங்களுக்குப் பிறகு; ஏதாவது ஒரு பதினெட்டு மாதக் காலத்தில் இரண்டு அமைச்சரவை நெருக்கடிகள் ஏற்பட்டால், அமைச்சரவை தேசீய அவையின் தலைவரைக் கலந்து, அவையைக் கலைக்க முடிவு செய்யலாம். அவ்வாறு முடிவு செய்தால், குடியரசுத் தலைவர் கலைப்புக் கட்டளையை வெளியிட்டு, பொதுத்தேர்தல் நடத்து மாறு ஆணையிடுவார். அவை கலைந்து ஒரு மாதத்திற்குள் தேர்தல் நடைபெற வேண்டும். இவ்வளவு முன்னேற்பாடுகளைச் செய்திருந்தும், நான்காம் குடியரசின் முதல் பத்தாண்டுகளில் அமைச்சரவைகள் சராசரி ஆறு மாதங்களே பதவியிலிருந்தன.

நான்காம் குடியரசின் தொடக்கக் காலத்தில் அவையிலிருந்த மூன்று முக்கியப் பிரிவுகளாகிய சமதர்ம வாதிகள் (Socialists), பொது வுடைமை வாதிகள் (Communists), கிறிஸ்தவ ஜனநாயக வாதிகள் (Christian Democrats)[1] என்ற கட்சிகள் ஒன்று சேர்ந்து கூட்டு அமைச்சரவையை அமைத்தன. ஆனால், விரைவில் வேறு பிரிவுகள் பதவிக்கு வந்தன. பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை எவ்வளவு அகலமான அடிப்படையில் அமைக்கப்பட்டிருந்த போதி லும், அதனால் பயன் ஏற்படுமா என்று ரெஞ்சுக்காரர் பலர் ஐயுறு கின்றனர். பாராளுமன்றம் தேர்ந்தெடுக்கும் தலைவர் பெயரளவில் மட்டும் சில அலுவல்களைச் செய்து வருவதை அவர்கள் கொள்கை முறையில் எதிர்க்கின்றனர்கள். ஏனெனில், அம்முறையின் விளைவாக உள் நாட்டில் அரசாங்கத்தின் வலிமையும், வெளி நாடுகளில் அதன் மதிப்பும் குறைகின்றன எனக் கருதுகின்றனர். அவர்கள் அமெரிக்க முறையை விரும்புவதாகத் தெரிகிறது. அம்முறையில் மக்கள் தலை வரைத் தேர்த்தெடுக்கின்றனர்கள். தலைவர் சட்ட மன்றம் கட்டுப் படுத்தாத உண்மையான அதிகாரங்களைச் செலுத்துகிறார். பாராளு மன்றச் சார்பற்ற அல்லது மக்கள் வாக்கெடுப்பைச்சார்ந்த நிருவாகத் துறையின்மேல் பிரெஞ்சு மக்களுக்கு நீண்ட காலப் பற்றுதல் உண்டு. இது நெப்போலியனது மரபிலிருந்து வந்தது. இதன் விளைவாக 1848இல் லூயி நெப்போலியன் இரண்டாவது குடியரசின் தலைவ

1. M. R. P. Mouvement Republicain Populaire,

2. இம்முறையை அடுத்த இயலில் விளக்குவோம்.

ராகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கும், 1851இல் அவர் புரட்சியை நடத்துவதற்கும், 1852இல் இரண்டாவது பேரரசை வெற்றிகரமாக நிறுவுவதற்கும் வழியேற்பட்டது. அதே அரசியல் உணர்ச்சிதான் தளபதி புலாங்கரின் (General Boulanger) இயக்கத்தை இயக்கியது. அவர் மக்கள் வாக்கெடுப்பைச் சார்ந்த நிருவாகத்துறையை மீண்டும் நிறுவ முயன்றதன் விளைவாக 1866இல் ஒரு பெருநெருக்கடி ஏற்பட்டது. குடியரசின் போர்ப்படைகள் புலாங்கரின் சதியை முற்றிலும் நசுக்கிவிட்டது. ஆயினும், 'மக்கள் தேர்ந்தெடுக்கும் நிருவாகத் துறையை நிறுவவேண்டும்! அதைப் பாராளுமன்றத்தின் தளைகளிலிருந்து விடுவிக்கவேண்டும்,' என்ற நம்பிக்கை பிரெஞ்சு மக்களின் உள்ளங்களிலே உயிருடன் இருந்து வந்தது. 1947இல் தளபதி டி கால் (General de Gaulle) 'பிரெஞ்சு மக்களின் அணி வகுப்பு' என்ற இயக்கத்தைத் தொடங்கியதும் அவருக்கு மக்கள் நல்கிய ஆதரவிலிருந்து இது நன்கு புலனாகின்றது.

அவர் புதிய பாராளுமன்றக் கட்சியை உண்டுபண்ண வேண்டுமென்ற நோக்குடன் அதைத் தொடங்கவில்லை. அது வாயிலாக நாட்டு மக்களின் கருத்தை வலுப்படுத்தி அதனால் நான்காவது குடியரசின் குறைகளைக் களைய வல்ல ஓர் அரசாங்கத்தை அமைக்க விரும்பினார். ஆயினும், மக்களிடையே வன்மையான கருத்தை வளர்க்க முடியாததால், அவர் அரசியலிலிருந்து விலகிக்கொண்டார். பிறகு 1958ஆம் ஆண்டில் அல்ஜீரியாவில் தோன்றிய நெருக்கடி காரணமாக, பிரான்ஸில் உள் நாட்டுக் குழப்பம் கிளம்பும் போலத் தெரிந்ததும், தலைவர் கோட்டி (President Coty) தளபதியை அமைச்சராகுமாறு வேண்டினார். அவையில் டி காலுக்குப் பெரும்பான்மை வாக்குகள் கிட்டின. ஆறு மாதங்கள் ஆட்சி செய்யுமாறு அவை அவருக்கு அதிகாரம் அளித்தது. இதற்கிடையில் புதிய அரசியலமைப்பொன்றைத் தயாரித்து மக்கள் முன் சமர்ப்பிக்குமாறு அவை அவரை வேண்டியது. அதற்கேற்ற அரசாங்கம் ஓர் அரசியலமைப்பைத் தீட்டியது. பாராளுமன்ற அனுபவமுள்ள பலரைக் கொண்ட ஒரு தனிக்குழு அதை ஆராய்ந்தது. 1958ஆம் ஆண்டு செப்டெம்பர்த் திங்களில் நடந்த குடியொப்பத்தில் மிகப் பெரும்பான்மையான மக்கள் அதை ஆதரித்தார்கள். அவ்வாண்டின் இறுதிக்குள் புதிய அரசியலமைப்பின்படி டி கால் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். முந்திய குடியரசுகளில் நிகழ்ந்தது போலப் பாராளுமன்றத்தின் இரு சபைகள் தங்கள் கூட்டங்களில் அவரைத் தேர்ந்தெடுப்பதற்குப் பதிலாக, இப்போது ஒரு தேர்தல் குழு அவரைத் தேர்ந்தெடுத்தது. அக்குழுவில் பாராளுமன்ற உறுப்பினர்களும் பிரான்ஸிலும் வெளிநாட்டுப்பகுதிகளிலுமுள்ள அவைகளின் பிரதிநிதிகளும் நகராண்மைக் கழகத் தலைவர்களும் உறுப்பினர்களாய் அமர்ந்தார்கள். அதில் மொத்தம் 76,000 பேர்கள் உறுப்பினர்கள் இருந்தார்கள்.

ஐந்தாவது குடியரசின் அரசியலமைப்பு (1958), நாட்டின் தலைவர் தலைமை அமைச்சரவை நியமிக்க வேண்டுமென்றும், அவரது அறிவுரையின் பேரில் மற்ற அரசாங்க அமைச்சர்களை ஏற்படுத்த வேண்டுமென்றும் (8ஆம் விதி), அரசாங்கம் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையது என்றும் (10ஆம் விதி) தெளிவாகக் கூறியது. அதைப் பொறுத்த வரையில் பிரான்ஸின் ஐந்தாவது குடியரசில் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை நிறுவப்பட்டது. ஆனால், பழைய நிருவாகத் துறையில் பல மாற்றங்கள் செய்யப்பட்டிருந்தன. முதலாவது, நாம் மேலே கூறியது போல, பாராளுமன்றம் தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்குப் பதிலாகப் பாராளுமன்ற உறுப்பினர்களைவிட அதிக எண்ணிக்கையான உறுப்பினர்களையுடைய தேர்தல் குழு அவரைத் தேர்ந்தெடுத்தது. இரண்டாவது, அமைச்சரவை பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ளதாய் இருந்த போதிலும், அமைச்சர்கள் பாராளுமன்றச் சபைகளில் உறுப்பினர்களாய் இருக்க இயலாது. ஆகவே, அவர்களைக் 'கட்சிகளும் வாக்காளர்களும் கட்டுப்படுத்துவதில்லை.' மூன்றாவது, நாட்டின் தலைவர் உண்மையிலே நிருவாகத் துறையின் தலைவராய் இருக்க வேண்டும். சட்ட மன்றத்தைக் கட்டுப்படுத்துவதற்கென அரசியலமைப்பு அவருக்கு அதிக அதிகாரங்களை வழங்கியது. பாராளுமன்றத்தின் கூட்டக்காலம் பொதுவாக ஐந்தரை மாதங்கள் நீடிக்கும், நாட்டின் தலைவர் பாராளுமன்றத்தை ஓராண்டுக்கு ஒரு முறை கலைக்கும் உரிமை பெற்றார். அதாவது, பாராளுமன்றம் அரசாங்கத்திற்கு எதிராகக் கண்டன வாக்கை நிறைவேற்றுமானால், தலைவர் அவையைக் கலைத்து, புதுத்தேர்தல்களை நடத்தலாம். இறுதியாக, 'குடியரசின் நிறுவனங்களுக்கும், நாட்டின் சுதந்தரத்திற்கும் நிலப்பகுதிகளுக்கும், பன்னாட்டு உடன்படிக்கைகளை நிறைவேற்றுவதற்கும்' இடர் ஏற்படுங்கால் கடுமையான அவசர நடவடிக்கைகள் எடுக்க அரசியலமைப்புத் தலைவருக்கு அதிகாரம் வழங்கியது. இவற்றின்படி நாம் புதிய அரசாங்க அமைப்பை ஓரளவு அதிகாரப் பிரிவினையின் அடிப்படையில் எழுந்த அரைகுறையான தலைவர் முறை அரசாங்கமெனலாம்.

டி கால் தலைவராகப் பதவியேற்ற பிறகு முதல் நான்கு ஆண்டுகளில், தலைவரின் அதிகாரத்தைப் பற்றி அரசியலமைப்புக்கூறும் வாசகங்களுக்கும் அவற்றிற்கு அவர் தந்த விளக்கங்களுக்கும் பெரிதும் முரண்பாடு இருந்தது. டி காலுக்கு வயதாகிவிட்டதாலும் அவரைக் கொல்லப் பல முயற்சிகள் நடைபெற்றதாலும் தாம் பதவியில் இல்லாத போது எதிர்காலத்தில் என்ன நடக்கவேண்டுமென அவர் சிந்திக்கத் தொடங்கினார். 1962ஆம் ஆண்டு அக்டோபர்த்திங்களில் ஒரு நெருக்கடி தோன்றியது. அப்போது இலையுதிர்காலத்தில் தேசீய அவை கூடுவதற்கு முன் தலைவர் தாம் அரசியலமைப்பைத்

திருத்த விரும்புவதாகவும் அத்திருத்தத்தின்படி வருங்காலத்தில் தலைவர்கள் 6ஆம் விதி கூறியபடி தேர்தல் குழுவினால் தேர்ந்தெடுக்கப்படுவதற்குப் பதிலாக வயது வந்தோர் வாக்குரிமை முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்றும் அறிவித்தார். அம்மாற்றத்திற்குப் பொதுமக்களின் ஆதரவைப் பெறும் நோக்குடன் (குடியொப்பத்தை விளக்கும் 11ஆம் விதியின்படி) அதைக் குடியொப்பத்திற்கு விடத் திட்டமிட்டார், ஆனால், (அரசியலமைப்புத் திருத்தத் திட்டத்தை விளக்கும் 89ஆம் விதி கூறியபடி) அதை முதலில் பாராளுமன்றத்தின் முன் சமர்ப்பிக்க மறுத்தார். பாராளுமன்றத்திற்கு ஏற்பட்ட இந்த அவமதிப்புக் காரணமாகப் பெரிய அரசியற்கிளர்ச்சி எழுந்தது. அதன் விளைவாகத் தேசிய அவையில் அரசாங்கத்திற்கு எதிராகக் கண்டன வாக்கு நிறைவேறியது. ஆகவே, அரசாங்கம் பணி துறந்தது. அதன் பிறகு பாராளுமன்றம் கலைக்கப்பட்டுப் பொதுத் தேர்தல் நடைபெற்றது.

இதற்கிடையில் அக்டோபரில் குடியொப்பம் நிகழ்ந்தது. அதில் 61 சதவிகிதம் பெரும்பான்மை வாக்குகள் தலைவரின் திட்டத்தை ஆதரித்தன. அதற்கேற்பத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் கொள்கையையும் முறையையும் விளக்கும் 1958ஆம் ஆண்டு அரசியலமைப்பின் ஆறுவது, ஏழாவது விதிகளைத் திருத்துவதற்காக அரசாங்கம் ஒரு மசோதாவைத் தீட்டியது. இவ்வாறு சார்லஸ் டிகால் ஒரு காலத்தில் பாராளுமன்றச் சார்புள்ளதாய் இருந்த நிருவாகத்துறையை மக்கள் வாக்கெடுப்பைச் சார்ந்த நிருவாகத்துறையாக (Plebiscitary Presidency) மாற்றும் முயற்சியில் வெற்றி கண்டார். நவம்பரில் நடந்த பொதுத்தேர்தலின் பயனாகத் தலைவரின் அதிகாரங்கள் அதிகமாயின. அத்தேர்தலில் அவரை ஆதரித்தவர்கள், மற்ற எல்லாக் கட்சியினரின் மொத்த எண்ணிக்கையைவிட அதிக முழுமையான பெரும்பான்மையைப் (absolute majority) பாராளுமன்றத்தில் பெற்றார்கள்.

## 6. புதிய இத்தாலியக் குடியரசில் அமைச்சரவை முறை

புதிய இத்தாலியக் குடியரசின் அரசியலமைப்பில் ‘அமைச்சரவைப் பொறுப்பு’ என்னும் கொள்கை புத்துயிர் பெற்றது. அக்கொள்கை 1848இல் சார்டீனிய அரசியலமைப்பில் காணப்பட்டது. பிறகு இத்தாலியக் குடியரசில் தொடர்பாக ஆட்சி செய்த அரசாங்கங்கள் அதை நன்கு வளர்த்து வந்தன. இறுதியில் பாஸிஸ வல்லாட்சி அக்கொள்கையை அமுக்கி அழுத்திவிட்டது. முதலில் எழுதப்பட்ட அரசியலமைப்பின் 65ஆம் விதியின்படி அமைச்சர்களை நியமிக்கவும் விலக்கவும் அரசருக்கு அதிகாரம் இருந்தது. ஆனால், 67ஆம் விதி,

அமைச்சர்கள் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ளவர்கள் என்றும் அமைச்சர் கையொப்பமின்றி எந்தச் சட்டமும் அரசாங்க விதியும் செயற்படமுடியாதென்றும் கூறியது. 66ஆம் விதியின்படி அமைச்சர்கள் பிரதிநிதிகளின் சபையிலாவது அல்லது செனட்டிலாவது உறுப்பினர்களாய் இல்லையெனில், அவற்றில் வாக்களிக்க இயலாது. ஆனால், அவர்கள் இரு சபைகளுக்கும் சென்று தங்கள் கருத்தை வெளியிடலாம். இவ்விதிக்கு ஒரு விளக்கம் தரப்பட்டது. அதாவது, பாராளுமன்ற உறுப்பினராய் இல்லாத அமைச்சரைத் தலைமை அமைச்சர் செனட்டின் உறுப்பினராக நியமிக்கலாம். அல்லது பிரதிநிதிகளின் சபையில் ஓர் இடம் காலியானதும் அதற்கு அவரைப் போட்டியிடுமாறு செய்யலாம். பிரிட்டனில் இருப்பது போன்ற அரசியல் முறைமைக்குட்பட்ட முடியரசில் அமைச்சரவை முறை எவ்வாறு செயலாற்றும் என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டாகும்.

பாஸிஸக்கொள்கை தோன்றுவதற்கு முன் இத்தாலியர்கள் ஐம்பதாண்டுகளுக்கு மேலாக அத்தகைய அரசியல் முறையைப் பின்பற்றி வந்தார்கள். ஆகவே, அவர்கள் வல்லாட்சியையும் அதன் தீய விளைவுகளையும் எதிர்த்துச் செயலாற்றிய போது பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறையை மீண்டும் நிறுவ விரும்பியதில் வியப்பொன்றுமில்லை. புதிய குடியரசில் பாராளுமன்றம் (இரு சபைகளின் கூட்டமர்வில்) தலைவரை ஏழு ஆண்டுக் காலத்திற்குத் தேர்ந்தெடுக்கிறது. இத்தேர்தலின் போது சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் வழங்குவதற்காக ஒவ்வொரு மண்டல அவையிலிருந்தும் (Regional Council) தேர்ந்தெடுக்கப்பட்ட மூன்று பிரதிநிதிகள் தேர்தலில் கலந்துகொள்வார்கள். தலைவருக்கு நேரடியான அரசியல் அதிகாரங்கள் இல்லை. தலைமை அமைச்சர் அல்லது பொருத்தமான அமைச்சர் ஒருவரின் கையொப்பமின்றித் தலைவரின் கட்டளைகள் செயற்பட இயலாது என அரசியலமைப்பின் இரு விதிகள் (89, 90) கூறுகின்றன. அவற்றிற்கு அந்த அமைச்சரே பொறுப்புள்ளவர். அரசத் துரோகம், அரசியலமைப்பை மீறுதல் ஆகிய இவ்விரண்டைப் பொறுத்த வரையிலேதான் தலைவருக்குப் பொறுப்புண்டு. அதற்காக அவரைப் பாராளுமன்றம் குற்றம் சாட்டலாம்.

புதிய குடியரசின் அரசியலமைப்புத் தனது மூன்றாவது இயலின் ஐந்து விதிகளில் அமைச்சரவையின் நிலை, அமைப்பு, அலுவல்கள் ஆகியவற்றை விளக்குகிறது. அவற்றின்படி தலைவர் தலைமை அமைச்சரை நியமிக்கிறார். பிரதமர் மற்ற அமைச்சர்களைத் தெரிந்தெடுக்கிறார். அமைச்சரவை இவ்வாறு அமைக்கப்பட்டதும் பத்து நாள்களுக்குள் அது பிரதிநிதிகளின் சபை, செனட்டு அவ்விரண்டின் நம்பிக்கையைப் பெற வேண்டும். அரசாங்கத்தை எதிர்த்து நம்

பிக்கையில்லாத் தீர்மானமோ, அல்லது கண்டனத் தீர்மானமோ கொண்டுவர இரு சபைகளுக்கும் சம அதிகாரமுண்டு. ஆனால், எதிர் வாக்குக் காரணமாக அமைச்சரவை பதவி துறக்கத் தேவையில்லை. அரசாங்கம் உறுதியுடனிருக்கவேண்டும் என்பதற்காகவே இப்பாதுகாப்பு அளிக்கப்பட்டது. அமைச்சரவையின் செயல்களைப் பொறுத்த வரையில் எல்லா அமைச்சர்களுக்கும் கூட்டுப் பொறுப்பு உண்டு. ஒவ்வோர் அமைச்சரின் துறையிலும் நிகழும் செய்ல்களுக்கு அவரே பொறுப்புடையவர். ஆகவே, புதிய இத்தாலியக் குடியரசின் தலைவர் பெயரளவில் மட்டும் நிருவாகத்துறையாய் இருக்கின்றார். பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ள தலைமை அமைச்சரும் அமைச்சரவையும் உண்மையான நிருவாகத் துறையாய் விளங்குகின்றனர். அதாவது, இத்தாலியக் குடியரசில் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத் துறை இருக்கின்றது. இதைப் பொறுத்த வரையில், அதன் அரசியலமைப்புப் பழைய இத்தாலியக் குடியரசின் அரசியலமைப்பையும், கிரேட் பிரிட்டனின் அரசியலமைப்பையும் ஒத்திருக்கின்றது.

## 7. இரு உலகப் போர்களினால் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறையில் ஏற்பட்ட விளைவுகள்

முதல் உலகப்போர் தொடங்கும் போது ஐரோப்பாவின் மேற்கு வடக்குப் பகுதிகளிலுள்ள அரசுகளில் பொதுவாகப் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை நிலவியது. போர் முடிந்த பிறகு உருவான அல்லது சீரமைக்கப்பட்ட அரசுகளும் இம்முறையைப் பின் பற்றின. ஜெர்மனி, ஆஸ்திரியா, செக்கோஸ்லாவாக்கியா, போலந்து, பின்லாந்து, பால்டிக்கு அரசுகளான எஸ்டோனியா, லாட்வியா, லித்துவேனியா ஆகிய அரசுகளில் போருக்குப் பிறகு தீட்டப்பெற்ற அரசியலமைப்புகள் அமைச்சரவை அரசாங்கக் கொள்கையை வெளிப்படையாக ஏற்றுக்கொண்டன எனலாம். யூகோஸ்லாவியா, போருக்கு முன் செர்பியாவிலிருந்த அரசியலமைப்பைப் பின் பற்றியது. தனது பரந்த எல்லைக்கேற்பப் பழைய அரசியலமைப்பை மாற்றி அமைத்துக்கொண்டது. ஆனால், போருக்குப் பிறகு ஹங்கேரியில் நிலவிய அரசியலமைப்பு நிலை மிகவும் தெளிவற்றதாய் இருந்தது.

போருக்குப் பிறகு அரும்பிய நம்பிக்கை மனப்பான்மை காரணமாக இந்த ஏற்பாடுகள் தோன்றின. ஆனால், பிறகு, குறிப்பாக ஹிட்லர் ஜெர்மனியில் தமது தனியாதிக்கத்தை நிறுவிய பிறகு தோன்றிய சமூக, அரசியல் குழப்பங்களின் விளைவாக இவ்வேற்பாடுகள் நலிந்துபோயின. எடுத்துக்காட்டாக, போலந்தில் இவ்வாறு நிகழ்ந்

தது. அங்கு 1921ஆம் ஆண்டின் அரசியலமைப்பின்படி, செனட்டும், டயட்டும் ஒன்ருய் அமர்ந்து நாட்டின் தலைவரைத் தேர்ந்தெடுத்தன. அவர் ஏழாண்டுகள் பதவியிலிருந்தார். அவர் கீழ்ச்சபைக்குப் பொறுப்புள்ள அமைச்சர்கள் வாயிலாகத் தமது நிருவாகத்துறை அதிகாரத்தைச் செலுத்தி வந்தார். இந்த முற்போக்கான அரசியலமைப்பு 1935இல் முடிவடைந்தது. ஆனால், அதற்கு முன் ஏற்கெனவே சிறிது காலமாக அது தள்ளிவைக்கப்பட்டிருந்தது. 1935இல் நிறுவப்பட்ட புதிய அரசியலமைப்பு நாட்டின் தலைவருக்கு வரம்பற்ற பல அதிகாரங்களை வழங்கியது. அவர் செனட்டின் உறுப்பினர்களுள் மூன்றில் ஒரு பகுதியினரை நியமிக்கும் அதிகாரத்தைக்கூடப் பெற்ருர். புதியதொரு தேர்தல் சட்டம் அரசாங்கத்திற்கு எதிரான கட்சிகளின் தேர்தல் உரிமைகளைப் பறித்தது. இவ்வாறு 1939இல் ஹிட்லர் போலந்தைத் தாக்கத் தொடங்கிய போது, அதன் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை மறைந்துபோய்விட்டது எனலாம்.

செக்கோஸ்லாவாக்கியாவில் 1920ஆம் ஆண்டின் அரசியமைப்பின்படி, பாராளுமன்றச்சார்புள்ள நிருவாகத்துறை போலந்தில் இருந்ததைவிட நெடுநாள் நீடித்திருந்தது. அங்குப் பிரதிநிதிகளின் சபையும் செனட்டும் ஒருங்கே அமர்ந்து நாட்டின் தலைவரைத் தேர்ந்தெடுத்தன. அவர் ஏழாண்டுகள் பதவியில் இருந்தார். தலைமை அமைச்சரும் மற்ற அமைச்சர்களும் பிரதிநிதிகளின் சபைக்குப் பொறுப்புள்ளவர்களாய் இருந்தார்கள். ஆனால், செயற்கையாக அமைக்கப்பட்ட இந்த அரசில் பலதிறப்பட்ட நாட்டினர்களும் அரசியற்பிரிவுகளும் இருந்தமையால், பாராளுமன்றச் சார்புள்ள முறை மிக உறுதியுடன் நிலைபெற இயலவில்லை. 1938ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் மியூனிக்கு நகரில் நிறைவேறிய முடிவின்படி செக்கோஸ்லாவாக்கியா சுடட்டன்லாந்தை ஜெர்மனிக்குக் கொடுத்ததும் இம்முறை தனது வலு முழுவதையும் இழந்தது. அடுத்த மார்ச்சுத் திங்களில் ஹிட்லர் பொஹீமியா, மொரேவியா ஆகிய இரு மாநிலங்களைக் கவர்ந்ததும் அது முற்றிலும் கவிழ்ந்தது.

இந்த இரண்டு அரசுகளும், நாம் மேலே குறிப்பிட்ட பிற அரசுகளும் இரண்டாம் உலகப்போரின் போது அந்நிய ஆதிக்கத்தின்கீழ் உழன்றன. போர் முடிந்ததும் அவற்றில் பலவற்றின் அரசியல் நிறுவனங்கள் பொதுவுடைமை வடிவைப் பலவந்தமாகப் பெற்றன. அப்போது அவை பெற்ற நிருவாகத்துறை முறை, முதல் உலகப்போருக்குப் பிறகு அவை மேற்கு நாடுகளிடமிருந்து பெற்ற முறையைவிட முற்றிலும் மாறுபட்டிருந்தது. எடுத்துக்காட்டாக, போலந்தில் 1952இல் நிறுவப்பட்ட அரசியலமைப்பு 1936ஆம் ஆண்டு ஸ்டாலின் அரசியலமைப்பை ஒத்திருந்தது. அது போலந்து அரசின்

பெயரையே போலந்து மக்கள் குடியரசு (Polish People's Republic) என மாற்றி நடைமுறையில் நிருவாகத்துறை அதிகாரத்தைப் பொதுவுடைமைக் கட்சித் தலைவர்களிடம் ஒப்படைத்தது. 1959இல் புதிய அரசியலமைப்பு நிறுவப்பட்டது. சொல் முறையில் அதில் பொதுவுடைமை அரசியலமைப்பின் அடையாளங்கள் இல்லை எனலாம். எடுத்துக்காட்டாக, 15ஆம் விதியின்படி பாராளுமன்றமே (Sejm) 'அரச அதிகாரத்தின் மேலான நிறுவனம்' ஆகும். 30ஆம் விதியின்படி 'அமைச்சரவையே அரசாங்கத்தின் மேலான நிருவாகத்துறை, ஆட்சித்துறை நிறுவனம் ஆகும்.' ஆயினும், மேல் நாடுகளின் அரசியல் முறைமைக்குட்படுகையினின்று முற்றிலும் வேறுபட்ட இரு நிறுவனங்கள் அங்கு உள்ளன. அவை மாநில அவையும், மேலான கட்டுப்பாட்டுக் குழுவும் (Supreme Board of Control) ஆகும். மாநில அவை சட்ட ஆக்கத்தில் தொடக்க உரிமை பெற்றுள்ளது. மேலான கட்டுப்பாட்டுக்குழு, பொருளாதாரத் திட்டத்தை இயக்குகிறது. அரசியல் முறைப்படியும் கொள்கை முறைப்படியும் போலந்து, 'மாஸ்கோவின் பற்றுறுதியும் அறிவாற்றலுமுள்ள நண்பர்' ஆன போதிலும், மேல் நாட்டுப் பண்பாட்டுடன் போலந்து மக்கள் கொண்டிருந்த தொடர்பு இன்னும் பெரும்பாலும் நிலைநிற்கின்றதென்பதும்; அவர்கள் வேறு எந்தப் பொதுவுடைமை அரசிலும் இருப்பதைவிட அதிக சமூக உரிமைகளைப் பெற்றுள்ளார்களென்பதும் புலனாகின்றன.

நாம் குறிப்பிட்ட அரசுகளில் மூன்று மட்டும் பொதுவுடைமையின் வலையிலிருந்து தப்பிப் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறையை மீண்டும் நிறுவின. இவை ஜெர்மனி, ஆஸ்திரியா, பின்லாந்து. (ஜெர்மனியின் ஒரு பகுதியிலேதான் இவ்வாறு நடைபெற்றது.) 1949இல் ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசின் அடிப்படைச் சட்டத்தைத் தீட்டும் போது ஜெர்மானிய அரசியலமைப்புச் சட்ட வல்லுநர்கள் ஹிட்லர் அழித்துவிட்ட 1919ஆம் ஆண்டின், வெய்மார் அரசியலமைப்பைச் சிறந்த ஏடுத்துக்காட்டாகக் கொண்டார்கள். அவர்கள் அதன் கருத்துகளையாவது புதிய அரசியலமைப்பில் புகுத்தினார்கள். வெய்மார் அரசியலமைப்பின்படி மக்கள் நாட்டின் தலைவரைத் தேர்ந்தெடுத்தார்கள். அவர் ஏழாண்டுகள் பதவியிலிருந்தார். இருபது வயதுக்கு மேற்பட்ட எல்லா ஆடவர்களும் பெண்டிரும் வாக்குரிமை பெற்றிருந்தார்கள். இந்த அரசியலமைப்பு மூன்றுவது பிரெஞ்சுக் குடியரசின் அரசியலமைப்பைப்போலத் தலைவருக்கு ஏராளமான அதிகாரங்களை வழங்கியது. நடைமுறையில் கூட்டாட்சித் தலைமை அமைச்சரும் அவர்தம் அமைச்சரவையும் அவற்றைச் செலுத்தின. அரசாங்கத்தை நடத்திவந்த தலைமை அமைச்சரும் மற்ற அமைச்சர்களும் 'ரைக்ஸ்டாக்'குக்குப்

பொறுப்புள்ளவர்களாய் இருந்தார்கள். இந்த அரசியலமைப்பு ஜெர்மனியின் வரலாற்றில் முதல் முறையாகப் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறையை ஏற்படுத்தியது.

1949ஆம் ஆண்டு மேற்கு ஜெர்மனியில் அடிப்படைச்சட்டம் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறையை மீண்டும்நிலைநாட்டியது. இந்த அரசியலமைப்பின்படி நாட்டின் தலைவர் முன்போல மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவதற்குப் பதிலாக, கீழ்ச்சபையின் (Bundestag) உறுப்பினர்களையும் மாநிலப் பிரதிநிதிகளின் சபைகள் தேர்ந்தெடுத்த அதே எண்ணிக்கையுள்ள உறுப்பினர்களையும்கொண்ட கூட்டாட்சி மன்றம் என்ற ஒரு தனி மன்றத்தால் விகிதப் பிரதிநிதித்துவ முறைப்படி தேர்ந்தெடுக்கப்படுகின்றார். அவர் முன் போல ஏழாண்டுகள் பதவியிலிருப்பதற்குப் பதிலாக இப்போது ஐந்தாண்டுகளே பதவி வகிக்கின்றார். ஆனால், தலைமை அமைச்சரும் மற்றக் கூட்டாட்சி அமைச்சர்களும் அரசாங்கத்தை நடத்தி வருகின்றார்கள். அடிப்படைச் சட்டத்தின் 62ஆம் விதி முதல் 69ஆம் விதி வரை தலைமை அமைச்சரும் ஏனைய அமைச்சர்களும் 'புந்தஸ்டாக்' கிற்குப் பொறுப்புடையவர்கள் என்றும் அந்நிறுவன உறுப்பினர்களுள் பெரும்பான்மையோரின் நம்பிக்கையைப் பெற்றிருக்கும் வரையில் அவர்கள் பதவியிலிருக்கலாம் என்றும் தெளிவாகக் கூறுகின்றன.

ஏறக்குறைய ஜெர்மனியில் வெய்மார் குடியரசு தோன்றிய அதே காலத்தில் ஆஸ்திரியக் கூட்டாட்சிக் குடியரசும் நிறுவப்பட்டது. ஆனால், இந்த ஆஸ்திரிய அரசு முதல் உலகப்போரின் விளைவாகச் சிதைந்த ஆஸ்திரிய ஹங்கேரிப் பேரரசின் ஒரு சிறு பகுதியாகும். 1920ஆம் ஆண்டு இதன் அரசியலமைப்பு அறிக்கையிடப்பட்டது. அதன்படி இரு சபைகளும் (Nationalrat, Bundesrat) ஒன்றாக அமர்ந்து நாட்டின் தலைவரைத் தேர்ந்தெடுத்தன. அவர் நான்கு ஆண்டுகள் பதவியில் இருந்தார். அவர் உண்மையில் நிருவாகத் துறை அதிகாரங்கள் சிலவற்றைச் செலுத்தி வந்தார். ஆனால், 'புந்தஸ்ராத்'துக்குப் பொறுப்புள்ள கூட்டாட்சி அமைச்சரவை பல அதிகாரங்களைச் செலுத்தியது. 1929இல் அரசியலமைப்பில் சில திருத்தங்கள் செய்யப்பட்டன. ஆனால், விரைவில் நாஜி தாக்குதலை எதிர்ப்பதற்காக நிகழ்ந்த முயற்சிகள் அரசியலமைப்பு முறைகளை நாளடைவில் அரித்துவிட்டன. இறுதியாக 1938இல் ஜெர்மானிய ஆக்கிரமிப்பினால் அரசியலமைப்பு முற்றிலும் அழிந்துவிட்டது.

போருக்குப் பிறகு 1920ஆம் ஆண்டின் அரசியலமைப்பு, 1929இல் திருத்தப்பட்டவாறு, புத்துயிர் பெற்றது. புதிய சூழ்நிலைகளுக்கேற்ப அதில் சில மாற்றங்கள் தோன்றின. 1955இல் ஆஸ்

திரியா தனது இறைமை உரிமையை மீண்டும் பெற்றதிலிருந்து அவ்வரசியலமைப்பு முற்றிலும் செயலாற்றி வருகின்றது. அதன்படி இப்போது நாட்டின் தலைவர் சமமான மறைவான வாக்கெடுப்பினால் ஆறு ஆண்டுகளுக்கு ஒருமுறை தேர்ந்தெடுக்கப்படுகின்றார். கூட்டாட்சித் தலைவரும் கூட்டாட்சி அரசாங்கமும் சேர்ந்தது நிருவாகத்துறையாகும். (கூட்டாட்சி அரசாங்கம் என்பது, கூட்டாட்சித் தலைமை அமைச்சரையும் அவருடைய அமைச்சர்களையும் குறிக்கும்.) நாட்டின் தலைவர் தலைமை அமைச்சரை நியமிக்கிறார். அவர் தலைமை அமைச்சரின் கருத்துப்படி மற்ற அமைச்சர்களை நியமிக்கிறார். அரசியலமைப்பின் வாசகத்தின்படி தலைவர் தமக்கு விருப்பமான அமைச்சர்களை நியமிக்கலாம். ஆனால், 'நேஷனல்ராத்'தின் பெரும்பான்மை உறுப்பினர்களுடைய நம்பிக்கையைப் பெறவில்லையெனில், கூட்டாட்சித் தலைமை அமைச்சரும் தனி அமைச்சர்களும் தங்கள் அதிகாரங்களைச் செலுத்த இயலாதாகையால், தலைவர் பாராளுமன்ற உறுப்பினர்களுள் பெரும்பான்மையோரின் நம்பிக்கைக்குரிய அமைச்சர்களையே நியமிக்க வேண்டும்.' அமைச்சர்கள், தங்கள் அலுவல்களையும் தங்களுக்குக் கீழுள்ள அதிகாரிகளின் அலுவல்களையும் பொறுத்தவரையில் 'நேஷனல்ராத்'திற்குப் பொறுப்புள்ளவர்கள் ஆவார்கள். அரசியலமைப்பின்படி, 'அமைச்சர் ஒருவருக்கு எதிராக நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றப்படுமானால், அவர் பதவி துறக்கவேண்டும்.'[1] ஆகவே, ஆஸ்திரியக் கூட்டாட்சிக் குடியரசில் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை இருக்கிறதென்பது தெளிவாகத் தெரிகின்றது.

1919-ஆம் ஆண்டு பின்லாந்து குடியரசு இறைமை உரிமையுள்ள சுதந்தர அரசாய் மலர்ந்தது. அப்போதுதான் இன்றுள்ள அரசியலமைப்பு அறிக்கையிடப்பட்டது. 1906இல் பின்லாந்து இன்னும் ரஷ்யாவின் ஆட்சியின்கீழ் இருக்கும்போது நாட்டின் சில செய்திகளைக் கவனிக்க ஒரு சபையுள்ள பாராளுமன்றம் (Diet) நிறுவப்பட்டது. 1928இல் நிறைவேறிய பாராளுமன்றச் சட்டம் 1906ஆம் ஆண்டின் 'டயட்' சட்டத்தைத் திருத்தியமைத்தது. அச்சட்டம், இன்று பின்லாந்தின் ஒரு சபையுள்ள பாராளுமன்றம் தேர்ந்தெடுக்கப்படும் முறையையும் அது ஆற்றிவரும் அலுவல்களைப் பற்றிய விதிகளையும் வகுத்தது. ஆகவே, பின்லாந்தின் அரசியலமைப்பு ஓர் ஆவண முறை அரசியலமைப்பாகும். ஆனால், அதன் ஒரு பகுதி மட்டும் எழுதப்பட்டுள்ளது. அதன்படி நாட்டின் தலைவரைத் தேர்ந்தெடுக்க ஒரு புதிய முறையான மறைமுகத் தேர்தல் நடைபெறுகின்றது.

---

1. ஆஸ்திரிய அரசாங்கத்தின் செய்தித்துறை அலுவலின் வெளியீடாகிய 'Austria : Facts and Figures' (4ஆம் பதிப்பு, 1961) என்ற நூலிலிருந்து இம்மேற்கோள் எடுக்கப்பட்டுள்ளது.

பின்லாந்தின் அரசியலமைப்பு 23ஆம் விதியின்படி மக்கள், தலைவரைத் தேர்ந்தெடுக்கும் 300 தேர்வாளர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இவர்களைத் தேர்ந்தெடுக்கப் பிரதிநிதிகளின் சபையைத் தேர்ந்தெடுக்கப் பயன்படும் அதே வாக்குரிமையைப் பயன்படுத்தினர். அதாவது, வயது வந்த அனைவருக்கும் வழங்கப்படும் வாக்குரிமையையும் விகிதப் பிரதிநிதித்துவ முறையையும் பயன்படுத்தினர். முந்நூறு பேர் வாக்கெடுப்பு இரசியமாக நடைபெற்றது. அதில் தலைவர் பதவியை நாடும் எந்த வேட்பாளரும் அளிக்கப் பெற்ற வாக்குகளில் பாதிக்குமேல் பெறவில்லையென்றால், இரண்டாவது வாக்கெடுப்பு நடைபெற வேண்டும். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவருக்குச் சில உண்மையான அதிகாரங்கள் இருந்தன. ஆனால், அவர் செய்கைகளில் பல, ஓர் அமைச்சரின் எதிர்க் கையொப்பம் பெற்றால்தான் சட்ட முறைப்படி ஏற்றுக்கொள்ளப்படும். அவ்வமைச்சர் அரசு அவை (Council of State) அல்லது அமைச்சரவையின் உறுப்பினராகவும், தேர்ந்தெடுக்கப்பட்ட சபையின் நம்பிக்கைக்குரியவராகவும் இருக்க வேண்டும் (36, 43ஆம் விதிகள்). தலைவருக்கும் அரசு அவைக்கும் முரண்பாடு ஏற்படுமானால், அரசியலமைப்பின் விதிகளுக்குட்பட்டுச் செயலாற்றும் வரை, அரசு அவையே இறுதித் தீர்ப்பளிக்கும். தலைமை நீதி மன்றம் அரசியலமைப்புக்கு முடிவில் உரை விளக்கம் தரும். 1930ஆம் ஆண்டு பிறந்த பிறகு சில காலமாக நாட்டில் பாஸிஸக் குழப்பங்கள் தோன்றின. ஆனால், 1932இல் அவை மறைந்தன. அவை அமைச்சரவை முறையை அதிகமாகப் பாதிக்கவில்லை. பின்லாந்து ஜெர்மனியுடன் பெருங்கேட்டை விளைக்கும் ஓர் ஒப்பந்தத்தைச் செய்துகொண்ட போதிலும், நாஜிகள் அவர்களது அரசாங்க முறையில் மாற்றங்களைச் செய்ய முடியவில்லை. 1944க்குப் பிறகு ரஷ்யர்கள் நெருக்கியதன் விளைவாகச் சில அதிகாரத்துவ (authoritarian) இயல்புகள் தோன்றின ஆனால், 1947இல் இவையெல்லாம் நீங்கின. பின்லாந்து மக்கள் தங்கள் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத் துறையைக் காப்பதில் வெற்றி பெற்றார்கள்.

இங்கு ஜப்பானைப்பற்றி ஒரு சில சொற்கள் கூறுவது மிகப் பொருந்தும். அங்கு அமெரிக்கப் பாதுகாப்பின்கீழ் 1947ஆம் ஆண்டு ஒரு புதிய அரசியலமைப்பு நிறுவப்பட்டது. அது பெரும்பாலும் மேல் நாட்டு முறையையொத்த பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத் துறையை நிறுவியது. முறைப்படி 1889ஆம் ஆண்டின் பேரரசு அரசியலமைப்பைத் திருத்தும் வகையில்தான் புதிய அரசியலமைப்பு அமைந்தது. ஆனால், உண்மையில் அது பழைய அரசியலமைப்பை முற்றிலும் மாற்றி அமைத்தது. பேரரசர் ‘ அரசின் அடையாளமாகவும் மக்களின் ஒற்றுமையின் சின்னமாகவுமே ’ திகழ்கின்றார். பாராளுமன்றம் (Diet) இரு சபைகளையுடையது. ஒன்று, பிரதிநிதிகள் சபை;

மற்றொன்று, (முந்திய பிரபுகள் சபைக்குப் பதிலாக நிறுவப்பட்ட) மன்றத்தார் சபை (House of Councillors). இரு சபைகளையும் தேர்ந்தெடுக்க வயது வந்தோர் அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கப்பட்டுள்ளது. ஆனால், இரண்டிற்கும் இரு வேறு முறைகள் பயன்படுகின்றன. பாராளுமன்றம் தன் உறுப்பினர்களுள் ஒருவரைத் தலைமை அமைச்சராகத் தேர்ந்தெடுக்கின்றது. அமைச்சரவையில் தலைமை அமைச்சரும் அவர் நியமிக்கும் அமைச்சர்களும் இருக்கின்றார்கள். அதில் பதினொருவர் முதல் பதினறுவர் வரை அமைச்சர்கள் இருப்பார்கள். அமைச்சரவை உறுப்பினர்களுள் குறைந்தது பாதிப் பகுதியினராவது பாராளுமன்றத்திலிருந்து தெரிந்தெடுக்கப்படவேண்டும். அமைச்சர்கள் பாராளுமன்றத்திற்குக் கூட்டுப் பொறுப்புடையவர்கள்.

இவ்வாறு, கிழக்கு ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் பொதுவுடைமை பரவிய போதிலும், பல முக்கிய ஐரோப்பிய அரசுகளில் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை நிலைபெற்றுள்ளது. மேலும், அது இரு முக்கிய ஆசிய அரசுகளாகிய ஜப்பானிலும் இந்தியாவிலும் நிறுவப்பட்டுள்ளது. கனடா, ஆஸ்திரேலியா, நியூஜீலந்து ஆகிய நாடுகளிலும் அது தொடர்ந்து செயலாற்றி வருகின்றது. ஆப்பிரிக்காவில் புதியனவாகத் தோன்றியுள்ள சில சுதந்தர அரசுகளிலும் அது பாராளுமன்ற அரசாங்கம் நிலை பெறும் அடிப்படையாக அமையலாம்.

## படிக்க வேண்டிய நூல்கள்:

1. அலெக்ஸாண்டர் (Alexander): World Political Patterns, இயல், 9.

2. பேஜ்ஹாட் (Bagehot): English Constitution, கட்டுரை 1, 6-9.

3. பார்க்கர் (Barker): Essays on Government, கட்டுரை 3.

4. டைஸி (Dicey): Law of Constitution, இயல், 11

5. எம்டன் (Emden): The People and the Constitution, இயல், 7-8.

6. ஃபைனர் (Finer): (1) Modern Government, இயல், 23-5
(2) Major Governments of Modern Europe, இயல், 8,15,19, 26

7. ஜென்னிங்ஸ் (Jennings) : (1) Cabinet Government, இயல், 2-4, 8,9, 15

(2) Law and Constitution, இயல் 1, பிரிவு 2,3

(3) British Constitution, இயல், 2,6,7

8. லாஸ்கி (Laski) : Government of Politics, பக்கம் 295-303, 356-410

9. ஸிட்ஜ்விக்கு (Sidgwick) : Element of Politics, இயல் 21-2

10. ஸிங்க் (Zink) : Modern Governments, பிரிவு I-III, VII.

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள் :

1. ஆன்சென் (Anson) : Law and Custom

2. கிரிஸ்ப் (Crisp) : Government of Australia

3. கிரிண்ட்ராட் (Grindrod) : Rebuilding of Italy

4. ஹிஸ்காக்ஸ் (Hiscocks) : Democrat in Western Germany

5. ஜாக்ஸன் (Jackson) : Finland

6. ஜென்னிங்ஸ் (Jennings) : Party Politics, II Growth of Parties

7. மெக்கன்ஸி (McKenzie) : British Political Parties

8. நிக்கொலாஸ் (Nicholas) : Australian Constitution

9. பிக்கிள்ஸ் (Pickles) : France ; Fourth Republic ; Fifth Republic.

10. ரோஸ்மேரின் (Rozmaryn) : Poland

11. வேர் (Wheare) : Constitutional Structure of Commonwealth

## கட்டுரைக்கேற்ற பொருள்கள் :

1. ‘சட்ட மன்றம் உரிமை பெற்ற ஒவ்வொரு சமுதாயத்திலுமுள்ள மேலாண்மையுடைய ஆற்றல்.’ இவ்விளக்கத்திற்கேற்ப இக்கால அரசிலுள்ள சட்ட மன்றத்தையும் நிருவாகத்துறையையும் ஆராய்க.

2, மரபு வழி வந்த அல்லது தேர்ந்தெடுக்கப்பட்ட நிருவாகத் துறையில் உண்மையான நிருவாகத்துறைக்கும் பெயரளவு நிருவாகத் துறைக்கும் உள்ள வேறுபாடு யாது?

3. ‘அதிகாரப் பிரிவினை’க் கொள்கையை விளக்கி, அது எவ்வாறு இக்கால அரசுகளில் நிருவாகத்துறை வரையில் துணை செய்ததென்பதைக் காட்டுக.

4. பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறையின் இன்றியமையாத இயல்புகள் யாவை?

5. கிரேட்பிரிட்டனின் அமைச்சரவை முறை வளர்ந்த வரலாற்றை வரைக.

6. இன்று பிரிட்டனில் நடைபெறும் அமைச்சரவை அரசாங்கத்தின் முக்கியப் பண்புகளைச் சுருக்கமாகக் கூறுக.

7. பிரிட்டிஷ் குடியேற்ற உரிமை நாடுகளில் அமைச்சரவை அரசாங்கக் கொள்கை எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது?

8. ஐந்தாவது பிரெஞ்சுக் குடியரசின் நிருவாகத்துறை முறையில் அமைச்சரவை எத்தகைய பங்கு கொள்கிறது என்பதை விளக்குக. அதை நான்காவது குடியரசு முறையுடன் ஒப்பிடுக.

9. முசோலினியின் வல்லாட்சிக்கு முன்னிருந்த அமைச்சரவை முறையைப் புதிய இத்தாலியக் குடியரசு எவ்வாறு புதுப்பித்தது?

10. முதல் உலகப் போருக்குப் பிறகு அமைச்சரவை முறையைப் புகுத்திய அரசுகளுக்கு உதாரணந்தருக. இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு அவற்றில் இதைப் பொறுத்த வரையில் என்ன மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன?

# 12. பாராளுமன்றச் சார்பற்ற நிருவாகத்துறை

## 1. பொதுக்குறிப்புகள்

பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை, பாராளுமன்றச் சார்பற்ற நிருவாகத்துறை என்னும் சொற்றொடர்களுக்குள்ள வேறுபாட்டை விளக்குவதற்காக நாம் அடிக்கடி அமைச்சரவை அரசாங்கம், தலைவர் முறை அரசாங்கம் (Presidential Government) என்ற சொற்றொடர்களைப் பயன்படுத்துகிறோம். ஆயினும், இவற்றைத் தெளிவாக விளக்கினாலன்றி, இவற்றின் உண்மைப் பொருள் காண்பதரிது. நாம் ஏற்கெனவே விளக்கியது போல, தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர் உண்மையான நிருவாகத்துறையாய் இல்லாமலிருக்கலாம். அப்போது உண்மையில் அமைச்சரவைதான் நிருவாகத்துறை அதிகாரத்தைச் செலுத்தும். தலைமை அமைச்சர் அதன் தலைவராகப் பணியாற்றுவார். அமைச்சரவை பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ளதாய் இருக்கும். இதிலிருந்து அமைச்சரவை அரசாங்கமென்பதற்கு, ஒருவரின் ஆட்சிக்குப் பதிலாக நடைபெறும் ஒரு குழுவின் ஆட்சி எனப் பொருள் கொள்ள வேண்டுவதில்லை. எடுத்துக்காட்டாக, பிரிட்டனில் தலைமை அமைச்சரே, மற்ற அமைச்சர்களை நியமிக்கின்றார். எல்லா அமைச்சர்களும் பாராளுமன்றத்தின் இரண்டு அவைகளுள் ஒன்றின் உறுப்பினர்களாய் இருக்கவேண்டும் என்றும் அவர்கள் பொதுவாக அவருடைய கட்சியின் உறுப்பினர்களாய் இருப்பார்கள் என்றும் இரு வரையறைகளைத் தவிர, அவர் தமக்கு விருப்பமானவர்களைத் தேர்ந்தெடுப்பதைத் தடுக்கக்கூடிய வேறு எவ்விதக் கட்டுப்பாடும் இல்லை. இதற்கு மாறாக, தலைவர் முறை அரசாங்கத்தில் தலைவர் தாம் விரும்பிய அமைச்சரவை அலுவலர்களை நியமிக்கும் வரையிறந்த உரிமை பெறுவதில்லை. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அமைச்சர்களை அமைச்சரவை அலுவலர்கள் (Cabinet Officers) என வழங்குவது வழக்கம். அமெரிக்காவில் தலைவர் முக்கிய நிருவாகத்

துறை அதிகாரிகளையும் நீதிபதிகளையும் நியமிக்கும் போது, அரசியலமைப்பின்படி செனட்டு உறுப்பினர்களுள் பெரும்பான்மையினரின் இசைவைப் பெறவேண்டும். நிருவாகத்துறை அதிகாரத்தை ஒரு குழுவின் உறுப்பினர்களுக்குப் பகிர்ந்தளிப்பது கடினந்தான். அதிகாரத்தை ஒருமுகப்படுத்துவதே நிருவாகத்துறை அதிகாரத்தின் போக்காய் இருக்கிறது. தேர்ந்தெடுக்கும் முறையினால் மட்டும் அதிகாரத்தைப் பகிர்ந்தளிக்க இயலுமா என உறுதி கூற இயலாது. எடுத்துக்காட்டாக, பிரிட்டனின் அமைச்சரவையின் உறுப்பினர்களுள் பெரும்பான்மையோர் மக்கள் சபையின் உறுப்பினர்களாய் இருக்கவேண்டுமென்ற பழக்கம் இருக்கின்றபடியால், அமைச்சரவையில் பெரும்பாலும் மக்களின் பிரதிநிதிகள் உறுப்பினர்களாய் இருக்கின்றார்கள். ஆனால், மக்கள் அவர்களைத் தேர்ந்தெடுக்கும் போது வருங்கால அமைச்சர்களாகத் தேர்ந்தெடுப்பதில்லை. இதைப் பொறுத்தவரையில், அமைச்சர் முறை அரசாங்கமும் தலைவர் முறை அரசாங்கமும், அல்லது பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறையும் பாராளுமன்றச் சார்பற்ற நிருவாகத்துறையும் ஒன்று போல இருக்கலாம். சுவிட்சர்லாந்து போன்ற குடியரசுகளில் உண்மையில் சட்ட மன்றம் நிருவாகத்துறையைத் தேர்ந்தெடுக்கிறது. ஆனால், அத்தகைய தேர்தல் பாராளுமன்றச் சார்புள்ள அல்லது பாராளுமன்றச் சார்பற்ற நிருவாகத்துறையின் இன்றியமையாத இயல்பன்று.

பாராளுமன்றச் சார்பற்ற நிருவாகத்துறையைச் சில வேளை உறுதியுள்ள நிருவாகத்துறை எனவும் வழங்குவதுண்டு. சட்டமன்ற நடவடிக்கையினால் அதை நீக்க இயலாதாகையால், அதை உறுதியுள்ள நிருவாகத்துறை என வழங்குவது பொருந்தும். மரபு வழி வரும் நிருவாகத்துறை உண்மையில் நிருவாகத்துறை அதிகாரத்தைச் செலுத்தி வரும் அரசில் அத்தகைய உறுதியுள்ள நிருவாகத்துறையைக் காணலாம். 1871 முதல் 1918 வரை நிலவிய முந்திய ஜெர்மானியப் பேரரசில் அது போன்ற நிருவாகத்துறை இருந்தது. ஆனால், இன்றைய மேல் நாடுகளில் அத்தகைய அரசைக் காண இயலாது. நம் காலத்தில் பொதுவுடைமை அரசில் வேறொரு வகையான நிருவாகத்துறையைப் பாராளுமன்றச் சார்பற்றது என உறுதியாகக் கூற இயலாது. ஏனெனில், அவ்வாறு கூறுவது உண்மையில் தவறாகும். ஆனால், அது பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை அன்று என உறுதியாகக் கூறலாம். (1947இல் திருத்தப்பட்ட) 1937ஆம் ஆண்டின் ஸ்டாலின் அரசியலமைப்பின்படி[1] 'ரஷ்யாவில் அரசின் அதி

---

1, 1962இல், ரஷ்ய அமைச்சரவையின் தலைவரும் பொதுவுடைமைக் கட்சியின் மத்தியக் குழுவின் முதற்செயலாளருமாகிய நிக்கிட்டா குருஷ்சாவ் புதிய அரசியலமைப்பைத் தீட்டுவதற்காக ஒரு குழுவை அமைத்தார்.

காரத்தைச் செலுத்தும் மேலான நிறுவனம் ரஷ்யத் தலைமைச் சோவியத்து (Supreme Soviet) ஆகும்' (30ஆம் விதி). தலைமைச் சோவியத்துக் கூடாத இடைக் காலங்களில் அதற்குப் பதிலாகத் தலைமைச் சோவியத்தின் பிரிஸீடியம் (Presidium) அவசரச் சட்டங்கள் வாயிலாகச் சட்டமியற்றலாம். ஸ்டாலின் அரசியலமைப்பின் 64ஆம் விதியின்படி 'அரச அதிகாரத்தைச் செலுத்தும் தலைமை நிறுவனம் ரஷ்ய அமைச்சரவை ஆகும்.' (1946ஆம் ஆண்டு வரை அமைச்சரவை மக்களின் பிரதிநிதிகளின் அவை (Council of Peoples Commissars) என வழங்கப்பட்டது.) தலைமைச் சோவியத்து, அதன் உறுப்பினர்களை நியமிக்கிறது. கொள்கையளவில், அமைச்சரவை தலைமைச் சோவியத்துக்குப் பொறுப்புள்ளதாகும். தலைமைச் சோவியத்துக் கூடாத இடைக்காலத்தில் அது பிரிஸீடியத்துக்குப் பொறுப்புள்ளதாய் இருக்கின்றது. ஆனால், உண்மையில் அமைச்சரவை நிருவாகத்துறை அதிகாரங்களைச் செலுத்துவது மட்டுமன்றி, கட்டளைகளின் மூலமாகச் சட்டமியற்றும் அதிகாரமும் பெற்றுள்ளது. ஆயினும், பிரிஸீடியம், அமைச்சரவை ஆகிய இரு நிறுவனங்களும் பொதுவுடைமைக் கட்சியின் மத்தியக் குழுவுடன் ஒருங்கியைந்தே செயலாற்ற வேண்டும். ஏனெனில், ஸ்டாலினே கூறியது போல, 'தொழிலாளர் வல்லாட்சி (Dictatorship of the Proletariat) என்பது உண்மையில் தொழிலாளரை வழி நடத்தும் ஆற்றலாகிய பொதுவுடைமைக் கட்சியின் வல்லாட்சிதான்.'[1] ஆகவே, நாம் இதை அரசியலமைப்புக்குட்பட்ட நிருவாகத்துறை எனக் கூற இயலாது. எனவே, மக்களாட்சியை வளர்க்கும் பாராளுமன்றச் சார்பற்ற நிருவாகத்துறையைக் காண வேண்டுமென்றால், வேறு அரசுகளைப் பார்க்க வேண்டும்.

பாராளுமன்றச் சார்பற்ற நிருவாகத்துறையில் மக்களாட்சியின் சிறப்பு இருப்பதாகக் கருதுகின்றனர். அதைப் பழைய கோட்பாடாகிய அதிகாரப் பிரிவினையில் காணலாம். அதன்படி மக்கள் நிருவாகத்துறை அலுவல்களை ஆற்றுவதற்காகத் தலைவர் ஒருவரைத் தேர்ந்தெடுப்பார்களென்றால், வேறொரு காரியத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நிறுவனம் அவருடைய நிருவாகத்துறை அதிகாரத்தைக் கட்டுப்படுத்தக் கூடாதென வாதிக்கின்றனர். ஆனால், அவ்வாறு அலுவல்களை முழுவதும் பிரிப்பது கொள்கை வடிவிலேதான் முடியும். ஏனெனில், சட்ட மன்றத்தின் கட்டளைகளைச் செயற்படுத்துவது நிருவாகத்துறையின் அலுவலில் ஒரு பகுதியாய் இருக்கிறது. ஆனால், நிருவாகத்துறை பாராளுமன்றச் சார்பற்றதாய் இருக்கும் போது, நிருவாகத்துறையைச் சேர்ந்தவையென அரசியலமைப்புக் கூறும் அதிகாரங்கள் அவற்றைச் செலுத்துவதற்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட

1. ஸ்டாலின் எழுதிய 'Leninism' (1940) என்ற நூலைப் பார்க்க.

ஆளுக்கே உரியனவாகும். நிருவாகத்துறை பாராளுமன்றச் சார்புள்ளதாய் இருக்கும்போது, நிருவாகத்துறையைச் சேர்ந்தவையென அரசியலமைப்புக் கூறும் அதிகாரங்கள் அவற்றைச் செலுத்துவதற்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்ட அல்லது மரபு வழி வந்த ஆளுக்கு உண்மையில் உரியன அல்ல.

இக்கோணத்திலிருந்து நாம் இப்போது ஆராயப்போகும் அரசியலமைப்புகளுள் பல வேறுபாடுகளைக் காணலாம். முதலாவது ஆராயும் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் பாராளுமன்றச் சார்பற்ற நிருவாகத்துறை இருக்கிறது. இரண்டாவது பார்க்கும் சுவிட்ஸர்லாந்தில் உலகின் பிற அரசியலமைப்புகளுள்காணாத ஒரு தனிச்சிறப்பியல்பைக் காண்கிறோம். அங்குள்ள நிருவாகத்துறை வெளித்தோற்றத்திற்குப் பாராளுமன்றச் சார்புள்ளது போல இருந்தாலும், உண்மையில் அதில் அதிகாரப் பிரிவைக் காணலாம். மூன்றாவது, துருக்கிக் குடியரசை ஆராய்வோம். அதில் இரு வகைகளின் இயல்புகளும் கலந்திருப்பது போலத் தோன்றுகிறது.

## 2. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இக்கொள்கை செயற்படுதல்

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் நிருவாகத்துறை பாராளுமன்றச் சார்பற்ற அல்லது உறுதியுள்ள நிருவாகத்துறைக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். அமெரிக்க அரசியலமைப்பை வரைந்தவர்கள், நிருவாகத்துறை சட்டமன்றத்தைச் சாராமல் இயங்க வேண்டுமென்ற கொள்கையை நடைமுறையில் எவ்வளவு அதிகமாகச் செயற்படுத்த இயலுமோ, அவ்வளவு செயற்படுத்தியிருக்கின்றனர். ஆனால், ஒரேயொரு காரியத்தில் மட்டும் அவர்கள் முதலில் அமைத்த முறை, வழக்கம், பழக்கம் ஆகியவை காரணமாகப் பெரிதும் மாறியிருக்கிறது. ஆயினும், அதிகாரப் பிரிவினைக் கொள்கை மட்டும் மாறவில்லை. அரசியலமைப்பின்படி, 'நிருவாகத்துறை அதிகாரம் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைவருக்கு வழங்கப்படும். அவர் நான்கு ஆண்டுகளுக்குப் பதவியில் இருப்பார்......அவருடன் பதவியிலிருக்கும் துணைத் தலைவரும் அதே காலத்திற்குப் பதவி வகிப்பார்.' இந்த இரண்டு அதிகாரிகளையும் தேர்ந்தெடுப்பதற்கு முதலில் ஏற்படுத்திய முறைகளை அரசியலமைப்பின் முதற்பிரிவிலுள்ள 2ஆம் விதி விளக்குகிறது. ஆனால், 1804இல் 12ஆம் திருத்தம் அம்முறைகளை மாற்றியது. முந்திய முறைப்படி தலைவருக்கு அடுத்தபடியாக மிக அதிகமான வாக்குகள் பெற்றவரைத் துணைத்தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். ஆனால், திருத்தத்தின்படி இரு பதவிகளுக்கும் தனித்தனி வாக்கெடுப்புகள் நடைபெறுகின்றன.

முன்னர் விளக்கியது போல, முந்திய விதியும் பிந்திய திருந்தமும் விளக்கும் விரிவான ஏற்பாடுகள் இப்போது நடைபெறுவதில்லை. அரசியலமைப்பை நிறுவியவர்கள், அத்தேர்தலில் பொதுமக்கள் நேரடியாகக் கலந்துகொள்ளாதவாறு தடுக்க விரும்பினார்கள். ஆனால், அவர்களுடைய உயர்நோக்கங்கள் தோல்வியுற்றன. அரசியல் அமைப்பின்படி, ஒவ்வொரு மாநிலத்திலிருந்தும் பிரதிநிதிகளின் சபைக்கும் (House of Representatives) செனட்டிற்கும் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கைக்குச் சமமான எண்ணிக்கையுள்ள தேர்வாளர்களை ஒவ்வொரு மாநிலமும் தேர்ந்தெடுக்கும். அதாவது, காங்கிரசில் ஒரு மாநிலத்திற்கு எத்தனை பிரதிநிதிகள் இருக்கின்றார்களோ, அத்தனை தேர்வாளர்களை அது தெரிந்தெடுக்கும். இந்தத் தேர்வாளர்கள் ஒவ்வொரு மாநிலத்திலும் கூடி, தலைவர் துணைத்தலைவர் பதவிகளுக்குப் போட்டியிடும் வேட்பாளர்களின் பெயர்களைக் குறித்துப் பிறகு வாக்கெடுப்பார்கள். அவர்கள் இவ்வாறு தெரிந்தெடுத்தவர்களின் பெயர்களையும் அவர்களுள் ஒவ்வொருவரும் பெற்ற வாக்குகளையும் செனட்டின் தலைவருக்கு அனுப்புவார்கள். அவர் காங்கிரஸின் இரு சபைகளின் முன் அவற்றை எண்ணுவார்.

நடைமுறையில் இது நிகழ்வதே இல்லை. வாஷிங்டனை (முதல் தலைவரை) முதல் இருமுறை தேர்ந்தெடுக்கும் போதுதான் இம்முறையைப் பின் பற்றினர். அதன் பிறகு வளர்ந்த கட்சி வழக்காறுகளின் விளைவாகத் தலைவரைத் தேர்ந்தெடுப்பதில் பொது மக்கள் நேரடியாகப் பங்கு பெறுகின்றார்கள். உண்மையில் நிகழ்வது என்னவென்றால், தேர்தலுக்கெனக் குறிக்கப்பட்டுள்ள நாளுக்கு முன்பு ஒவ்வொரு கட்சியும் கூடி ஒவ்வொரு பதவிக்கும் ஒரு வேட்பாளரைத் தெரிந்தெடுக்கிறது. ஆகவே, ஒவ்வொரு மாநிலத்திலுமுள்ள மக்கள் தேர்வாளர்களைத் தேர்ந்தெடுக்கும்போது, அவர்கள் தலைவர் பதவிக்கும் துணைத்தலைவர் பதவிக்கும் எந்த வேட்பாளர்களுக்கு வாக்களிக்கிறார்களென்பது அவர்களுக்குத் தெரியும். பிறகு தேர்வாளர்கள் முறைப்படி கூடுவார்கள். ஒரு மாநிலத்தில் ஒவ்வொரு பதவிக்கும் பெரும்பான்மை வாக்குகளைப் பெறுகின்றவர் அம்மாநிலத்தின் வேட்பாளர். பெரும்பான்மை சிறியதாயினும், பெரியதாயினும், காங்கிரஸில் அம்மாநிலத்தின் பிரதிநிதிகள் எத்தனை பேர் இருக்கின்றனரோ, அத்தனை வாக்குகளை அவ்வேட்பாளர் பெறுகின்றார். ஏனெனில், தேர்வாளர்களைத் தேர்ந்தெடுக்கும் முறைப்படி, ஒரு மாநிலத்திலுள்ள வாக்காளர்களுக்கு, அம்மாநிலத்தில் தேர்ந்தெடுக்கப்படவேண்டிய தேர்வாளர்களின் எண்ணிக்கைக்குச் சமமான வாக்குகள் உண்டு. ஆகவே, மாநிலம் முழுவதும் ஒரு தொகுதியாகின்றது. தேர்வாளர்கள் எந்த

வேட்பாளருக்கு வாக்களிப்பதாக வாக்குறுதி அளிக்கின்றார்களோ, அதற்கேற்ப மக்கள் அவர்களை மொத்தமாகத் தேர்ந்தெடுக்கின்றார் கள்.

இத்திட்டம் எவ்வாறு நடைபெறுகிறது என்பதை விளக்க இரண்டு எடுத்துக்காட்டுகள் கூறுவோம். மக்கள் தொகை மிகுந்த நியூயார்க்கையும், அது குறைந்த மெயினையும் (Maine) எடுத்துக் கொள்வோம். தலைவர் பதவிக்கு A, B என்ற வேட்பாளர்களும், துணைத்தலைவர் பதவிக்கு X, Y என்ற வேட்பாளர்களும் போட்டியிடு கின்றார்களென வைத்துக்கொள்வோம். 1960 ஆம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்கின்படி நியூயார்க்கு மாநிலத்தில் ஏறக் குறைய ஒரு கோடியே எழுபது இலட்சம் மக்கள் இருக்கின்றார்கள். அவர்கள் 1961 இல் தேர்தல் பகிர்வு திருத்தத்தின்படி பிரதிநிதிகளின் சபைக்கு 41 உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கின்றார்கள். ஆகவே, அவர்கள் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் 43 தேர்வாளர்களைத் தேர்ந் தெடுக்கவேண்டும். (ஒவ்வொரு மாநிலத்திற்கும் செனட்டில் இருவர் உறுப்பினர் இருக்கின்றனராதலின், அந்த இரண்டு எண்களையும்கூட்ட வேண்டும்.) மெயின் மாநிலத்தில் பத்து இலட்சம் மக்கள் வாழ்கின்றார் கள். அவர்கள் பிரதிநிதிகளின் சபைக்கு உறுப்பினர் இருவரைத் தேர்ந்தெடுக்கின்றார்கள். ஆகவே, மெயின் தலைவரைத் தேர்ந்தெடுக் கும் நான்கு (செனட்டு உறுப்பினர் இருவரின் எண்ணிக்கையையும் சேர்த்து நான்கு) தேர்வாளர்களைத் தேர்ந்தெடுக்கிறது. நியூயார்க் கிலுள்ள ஒருகோடியே எழுபது இலட்சம் மக்களுள் வாக்குரிமை பெற்றவர்களுள் பெரும்பான்மையோர் Aஐத் தலைவராகவும், Xஐத் துணைத்தலைவராகவும் சேர்ந்தெடுப்பார்கள் என்றால், Aயும் Xஉம் முறையே தலைவர், துணைத்தலைவர் பதவிகளின் வேட்பாளர்கள் என்ற முறையில் நியூயார்க்கின் 43 வாக்குகள் எல்லாவற்றையும் பெறுகின் றனர். அதே போல; மெயினில் பத்து இலட்சம் மக்களில் வாக்குரிமை பெற்றவருள் பெரும்பான்மையோர் Bஐத் தலைவராகவும், Yஐத் துணைத்தலைவராகவும் தேர்ந்தெடுப்பார்கள் என்றால், Bயும் Yயும் முறையே தலைவர் துணைத்தலைவர் பதவிகளின் வேட்பாளர் என்ற முறையில் மெயின் மாநிலத்தின் நான்கு வாக்குகளைப் பெறுகின்றனர். இதிலிருந்து தலைவர் பதவிக்குப் போட்டியிடும் வேட்பாளர்கள் சிறிய மாநிலங்களைவிடப் பெரிய மாநிலங்களின் ஆதரவையே பெறுவது முக்கியமென்பது எளிதில் விளங்குகின்றது. ஒரு வேட்பாளர், ஐக் கியத்திலுள்ள மிகச்சிறிய மாநிலங்களின் முழு ஆதரவையும் பெற்ற போதிலும், நியூயார்க்கின் ஆதரவைப் பெறும் வேட்பாளர் அவரைத் தோற்கடிக்க இயலும்.

இந்த ஏற்பாடு காரணமாக, முதலில் மக்கள் அளித்த மொத்த வாக்குகளுக்கும் தேர்தலின் இறுதி முடிவுக்கும் முரண்பாடு தோன்று

கிறது. எடுத்துக்காட்டாக, 1860இல் ஆபிரஹாம்லிங்கன் தேர்தலில் போட்டியிடும்போது நால்வர் போட்டியிட்டனர். அப்போது லிங்கன் 180 தேர்வாளர்களின் வாக்குகளைப் பெற்று வெற்றியடைந்தார். அவரை எதிர்த்த மூவரும் 123 வாக்குகளே பெற்றனர். அவரை ஆதரித்த தேர்வாளர்களுக்கு வாக்களித்தவர்கள், 1,860,000; அவரை எதிர்த்தவர்களுக்கு வாக்களித்தவர்கள் 2,810,000. அதாவது, நாட்டிலுள்ள வாக்காளர்களுள் 40 சதவிகிதமே அவரை ஆதரித்தனர். 1912இல் உட்ரோ வில்சன் போட்டியிட்ட தேர்தல் அதைவிடச் சிக்கலானது. அதில் நான்கு பேர் போட்டியிட்டனர். தலைவர் வில்சனுக்கு 435 தேர்வாளர்களின் வாக்குகள் கிடைத்தன. அவரை எதிர்த்த மூன்று பேரும் சேர்ந்து 96 வாக்குகள் பெற்றனர். ஆனால், மக்கள் அவருக்கு அளித்த வாக்குகள் 6,298,859; அவரை எதிர்த்தவர்களுக்கு அளித்தவை 8,511,312. 1928ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தல் அதைவிட முக்கியமானது, ஏனெனில், அதில் வேட்பாளர் இருவர் நேரடியாகப் போட்டியிட்டனர். அதில் ஹெர்பட்டு ஹுவரை ஆதரித்துத் தேர்வாளர்கள் அளித்த வாக்குகள் 440 (40 மாநிலங்கள்); கவர்னர் ஸ்மித்தை ஆதரித்து அளித்தவை 87 (7 மாநிலங்கள்). ஹுவருக்குக் கிட்டிய மக்களின் வாக்குகள் 21,000,000; ஸ்மித்துக்கு 16,000,000. திரு. ஹுவர் அமெரிக்காவின் வரலாற்றிலே அது வரை எந்தக் கட்சியும் பெற்றிராத அவ்வளவு அதிகமான தேர்வாளர்களின் வாக்குகளைப் பெற்றார். அதேபோல, கவர்னர் ஸ்மித்து அதுவரை ஜனநாயகக் கட்சி பெற்றிராத அவ்வளவு அதிகமான மக்களின் வாக்குகளைப் பெற்றார். அண்மையில் நடந்த தேர்தல்களும் அத்தகைய முரண்பாடுகளையே காட்டுகின்றன. 1932இல் நடைபெற்ற தலைவர் தேர்தலில், ஹுவருக்கு 16,000,000 வாக்குகளும், ரூஸ்வெல்டுக்கு 23,000,000 வாக்குகளும் கிட்டிய போதிலும், ஹுவர் 59 தேர்வாளர்களின் வாக்குகளையும் ரூஸ்வெல்டு 472 வாக்குகளையும் பெற்றனர். மேலும், 1936இல் லாண்டன் (Landan) ரூஸ்வெல்ட்டு என்பவர் பெற்றதில் பாதிக்கு மேலான வாக்குகளைப் பெற்ற போதிலும், இரு மாநிலங்களைத்தவிர மற்றெல்லா மாநிலங்களும் ரூஸ்வெல்ட்டை ஆதரித்தன. 523 தேர்வாளர்கள் ரூஸ்வெல்ட்டையும் 8 தேர்வாளர்கள் அவரை எதிர்த்தவர்களையும் ஆதரித்தார்கள். 1940இல் மொத்தம் 49,000,000 மக்கள் வாக்களித்தார்கள். அதில் ரூஸ்வெல்ட்டு, வெண்டல் வில்கியைவிட 5,000,000 வாக்குகள் அதிகமாகப் பெற்றார். ஆயினும், தேர்வாளர்கள் அவருக்களித்த வாக்குகள் 449; வெண்டல் வில்கிக்கு 82. 1944இல் ரூஸ்வெல்ட்டு 3,500,000 வாக்குகள் அதிகமாகப் பெற்றார்; தேர்வாளர்கள் அவரை எதிர்த்தவருக்கு 99 வாக்குகளும் அவருக்கு 432 வாக்குகளும் அளித்தார்கள். 1948இல் டுருமனுக்கு 2,100,000 மக்களின் வாக்கு

கள் அதிகமாகக் கிடைத்தன. தேர்வாளர்கள் அவருக்கு 304 வாக்குகளும் அவரை எதிர்த்தவர்களுக்கு 189 வாக்குகளும் வழங்கினார்கள். 1952இல் ஐஸன்ஹவருக்குக் கிடைத்த மக்களின் பெரும்பான்மை வாக்குகள் 6,600,000; அவரை ஆதரித்த தேர்வாளர் 442 பேர்; அவரை எதிர்த்தவரை ஆதரித்தவர் 89 பேர்; 1956இல் அதற்கிணையான எண்ணிக்கைகள் 9,500,000; 457உம்74உம். 1960இல் ஜான் கென்னடி தம்மை எதிர்த்த குடியரசுக்கட்சியினராகிய ரிச்சர்டு நிக்ஸனை 84 தேர்வாளரின் வாக்குகளால் தோற்கடித்தார். ஆயினும், மக்கள் அளித்த 68,000,000 மொத்த வாக்குகளில் கென்னடி 112,881 பெரும்பான்மை வாக்குகள் மட்டும் பெற்றார். உண்மையில் 1884ஆம் ஆண்டுக்குப் பிறகு அமெரிக்கத் தலைவர் பெற்ற மிகக் குறைந்த பெரும்பான்மை வாக்கு அதுதான். 1884இல் குரோவர் கிளீவ்லாண்டு (Grover Cleveland) தம்மை எதிர்த்த ஜேம்ஸ் ஜி. பிளெய்னைவிட (James G. Blaine) 29,209 வாக்குகள் அதிகம் பெற்றார்.

ஆயினும், இப்போது மக்கள் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைவரைத் தேர்ந்தெடுக்கின்றார்கள் என்பது உண்மை. (அதாவது அரசியலமைப்பைத் தீட்டியவர்கள் விரும்பியவாறு, மறைமுகமாகத் தேர்ந்தெடுக்காமல், நேராகத் தேர்ந்தெடுக்கின்றார்கள்.) மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் தலைவர் உண்மையான நிருவாகத்துறையாய் இருக்கும் தலைசிறந்த நாடுகளில் மட்டும் இவ்வாறு நடைபெறுகிறது. இவ்விரண்டு உண்மைகளும் நிருவாகத்துறையைப் பாராளுமன்றச் சார்பற்றதாகச் செய்கின்றன. ஏனெனில், காங்கிரஸ் தன் விருப்பம் போலத் தலைவரைப் பதவியிலிருந்து நீக்கக்கூடுமானால், (அவரைக் குற்றச் சாட்டு வாயிலாகவே நீக்க இயலும்) தேர்தல் முறை முற்றிலும் பயனற்றதாகிவிடும். அம்முறை அரசியலமைப்பில் முதலில் விளக்கிய முறையாய் இருந்தாலும், அல்லது நடைமுறையில் இருக்கும் முறையாய் இருந்தாலும், அதனால் பயன் ஏற்படாது.

தலைவருக்கு உண்மையான அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன. ஆயினும், அவற்றைச் செலுத்துவது அவரது ஆளுமையைப் பொறுத்திருக்கிறது. நெருக்கடிக் காலங்களில் அவர் மிகுதியான அதிகாரங்களைப் பெறக்கூடும். காங்கிரஸ் இயற்றிய சட்டங்களைச் செயற்படுத்த வேண்டுவது அவரது கடமை எனினும், காங்கிரஸ் சட்டங்களை ஆக்கும்போது தலைவர் தமது செல்வாக்கைப் பயன்படுத்தக்கூடும்; பயன்படுத்தியும் வருகிறார். முதலில் ஆண்டுதோறும் காங்கிரஸுக்குத் தமது செய்தியை அனுப்புகிறார். அவர் அதை நேரிலும் வழங்கலாம் அல்லது ஒரு பிரதிநிதியின் மூலமாகவும் அனுப்பலாம். இடர்க்காலங்களில் அவர் செய்தி வழங்குவதற்காகக் காங்கிரஸை அழைக்கலாம்.

இவ்வுரிமையின் விளைவாக அவருக்குக் காங்கிரஸின் சட்ட ஆக்க அலுவலில் பெருஞ்செல்வாக்கு ஏற்படுகிறது. அதிலும் அவர் சொல் வன்மையுடையவராய் இருப்பாராஞல், காங்கிரஸில் நேரில் பேசும் போது அவருடைய செல்வாக்கு வளர்கின்றது. உட்ரோ வில்சனும், பிராங்கிளின் ரூஸ்வெல்ட்டும் இவ்வாறே செய்தனர். இரண்டாவது தலைவர் காங்கிரஸ் உறுப்பினர் ஒருவரின் துணை கொண்டு மசோதா வின் பொருளைத் தமது விருப்பத்திற்கேற்ப மாற்ற இயலும். ஆனுல், தலைவரும் அவருடைய அமைச்சரவை அதிகாரிகளும் செனட்டு, பிரதிநிதிகளின் சபை ஆகிய இரண்டு அவைகளின் நடவடிக்கைகளி லும் பங்கு பெற இயலாது. ஆகவே, இரு சபைகளிலும் உள்ள கட்சியின் நிலைமையைப் பொறுத்தே தலைவர் காங்கிரஸில் தமது செல் வாக்கைப் பயன்படுத்த இயலும். தலைவரின் தேர்தல் நான்கு ஆண்டு களுக்கு ஒரு முறை நடைபெற்ற போதிலும், பிரதிநிதிகளின் சபைக் கும், செனட்டில் மூன்றில் ஒரு பகுதிக்கும் இரண்டு ஆண்டு களுக்கு ஒரு' முறை தேர்தல் நடக்கின்றது. இதனுல் குறிப்பிட்ட தலைவர் ஒருவரைத் தேர்ந்தெடுத்த மக்கள், அதே கட்சியை ஆதரித்து அவருக்கு இரு சபைகளிலும் பெரும்பான்மை பெற்றுத் தரலாம். அல்லது அடுத்த காங்கிரஸ் தேர்தலில், இன்னும் இரண்டு ஆண்டுகள் பதவியிலிருக்கும் தலைவர் இப்பெரும்பான்மையை இழந்து விடவும் கூடும்.

ஆனுல், சட்ட ஆக்க முறையின் இறுதியில் தலைவர் செலுத்தும் அதிகாரம் மிகவும் முக்கியமானது. இரு சபைகளிலும் அவரது கட்சி சிறுபான்மையாய் இருந்த போதிலும், அதனுல் ஏற்படும் இந்த அதி காரம் கட்டுப்படுத்துகிறது. இரு சபைகளும் ஒரு மசோதாவை நிறை வேற்றிய பிறகு, தலைவர் அதில் தமது கையொப்பமிடவில்லையெனில், அது சட்டமாக இயலாது. அவர் கையொப்பமிட மறுக்கலாம். (ஆனுல், மறுப்பதாகப் பத்து நாள்களுக்குள் அறிவிக்க வேண்டும்.) அவ்வாறு மறுத்தால், மசோதாவை மீண்டும் காங்கிரஸுக்கு அனுப்ப வேண்டும். காங்கிரஸ் அம்மசோதாவை இரு சபைகளிலும் மூன்றில் இரண்டு பெரும்பான்மை வாக்குகளினுல் நிறைவேற்ற வேண்டும். தலைவரின் கட்சியினர் காங்கிரஸில் மிகக் குறைவாய் இருந்தாலன்றி, அத்தகைய பெரும்பான்மை வாக்குகள் பெறுவது அரிது. நடை முறையில் தலைவர் மறுத்துவிட்ட மசோதாவிற்கு அவ்வளவு பெரும் பான்மை கிட்டுவதில்லை. ஆகவே, தலைவரின் மறுப்பாணை (Veto) அதிகாரம் உண்மையிலே ஆற்றல் மிக்க அதிகாரமாய் இருக்கிறது.

இதைத் தவிர, தலைவர் போர்ப்படை, கடற்படை இவற்றின் தலைமைத் தளபதியாயும் விளங்குகிருர். கூட்டாட்சி அரசாங்கத்தின் முக்கியப் பதவிகளுக்கு ஆள்களை அவரே நியமிக்கிருர். அயல் நாட்டுச் செய்திகள் அனைத்தையும் அவர் கவனித்து வருகின்ருர்.

ஆனால், சில பதவிகளில் அவர் ஆள்களை அமர்த்தும் போது செனட்டு அதற்கு இணங்க மறுக்கலாம். தலைவர் ஓர் உடன்படிக்கை செய்வாரானால், அதற்குச் செனட்டு உறுப்பினருள் மூன்றில் இரண்டு பகுதியினரின் இசைவு தேவை. இறுதியாக, போர் தொடுப்பது காங்கிரஸின் அதிகாரமாய்ப் பிற நாட்டுத் தொடர்பு முறிந்து நெருக்கடி ஏற்படுமானால், காங்கிரஸ் போர் தொடுக்கவேண்டிய நிலை ஏற்படும்.

இவ்வாறு, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நிருவாகத் துறைக்கும் சட்டமன்றத்திற்கும் தொடர்புகள் இருந்தபோதிலும், அவை இரண்டிற்கும் தனித்தனி அதிகாரங்கள் உள்ளன. அவற்றிற்கிடையேயுள்ள நெருங்கிய தொர்புகள் கட்சி நிலைமையையும், தலைவரின் ஆளுமையையும் பொறுத்தவை. இன்றைய உலகிலுள்ள அரசியலமைப்புக்குட்பட்ட எந்த அரசிலும் அமெரிக்க ஐக்கியத்தின் தலைவரைப் போன்று மிகுதியான அதிகாரங்களையுடைய ஓர் அதிகாரியைக் காண இயலாதென உறுதியாகக் கூறலாம். அவர் மீண்டும் பதவிக்கு வர விரும்பினால்,[1] நாள் நெருங்கியதும் அமெரிக்க அரசியலை இயக்கிவரும் கட்சியின் உட்குழுக்களின் துணையை நாடவேண்டும். ஆனால், நாட்டிலுள்ள எல்லா அரசியல் வாதிகளும் அவ்வாறே செய்ய வேண்டும். உண்மையில் அவரது நான்கு ஆண்டு பதவிக் காலத்தில் அரசியல் அமைப்புக்கு முரணாய் அவர் நடந்துகொள்ளவில்லை என்றால், நாம் மேலே கூறிய முறைகளைத் தவிர, வேறு வகையில் அவரது அதிகாரத்தைக் கட்டுப்படுத்த இயலாது. மேலும், பொதுமக்கள் கருத்து அவருக்கு ஆதரவாய் இருக்குமானால், அவர் சில வேளை தம்மை எதிர்க்கும் காங்கிரஸின் எதிர்ப்பையும் வெல்ல இயலும்.

## 3. சுவிஸ் நாட்டுக் கூட்டத்தின் புதுமையான நிருவாகத்துறை

சுவிட்ஸர்லாந்தின் நிருவாகத்துறையைப்போல நமது மனத்தைக் கவரும் நிருவாகத்துறை உலகில் வேறெங்கும் இல்லை எனலாம். அரசியல் வல்லுநர் பலர்—சிறப்பாகப் பிரெஞ்சு அறிஞர்கள்—பாராளுமன்றச் சார்புள்ள, பாராளுமன்றச் சார்பற்ற இரு வகை நிருவாகத்துறை முறைகளின் குறைகளைத் தவிர்த்து நற்பயன்களை மட்டும் இணைத்துள்ள புதிய முறையொன்றை அமைக்க முயன்றனர். ஆனால், 1848, 1874ஆம் ஆண்டுகளில் சுவிட்ஸர்லாந்தின் அரசியலமைப்புகளை நிறுவியவர்கள், தங்கள் முயற்சியினால் தங்களுக்கு முன்பிருந்த அரசியல் வல்லுநர்களின் திறமையெல்லாம் திகைக்கச் செய்துவிட்டார்கள். சுவிஸ் நிருவாகத் துறைக்குக் கூட்டாட்சி அவை

---

1. 1951ஆம் ஆண்டின் 22ஆம் திருத்தப்படி அவர் இரு முறைதான் பதவியில் இருக்கலாம்.

(Federal Council) என்பது பெயர். அது ஓர் அமைச்சரவையாகும். கூட்டாட்சிப் பேரவை அதைத் தேர்ந்தெடுக்கிறது ; ஆனால், அதைப் பதவியிலிருந்து நீக்க இயலாது. இவ்வாறு சுவிஸ் நிருவாகத்துறை, பிரான்ஸின் மூன்றாவது, நான்காவது குடியரசுகளிலிருந்த உண்மையான நிருவாகத்துறையையும், பெயரளவிலுள்ள நிருவாகத்துறையையும் ஒத்திருக்கிறது. ஏனெனில், பிரெஞ்சுத் தலைவரைப் போல, சுவிஸ் கூட்டாட்சி அவையையும் சட்ட மன்றம் தேர்ந்தெடுக்கிறது. மேலும், பிரெஞ்சு அமைச்சரவையைப் போல அது உண்மையான நிருவாகத்துறையாய் இருக்கிறது. ஆனால், பேரவை அதைத் தேர்ந்தெடுத்த பிறகு குறிப்பிட்ட காலத்திற்கு அதைப் பதவியினின்று நீக்க இயலாதாகையால், அது அமெரிக்கத் தலைவரின் பதவியை ஒத்திருக்கின்றது.

அப்படியானால், சுவிஸ் குடியரசின் தலைவர் யார்? அத்தகைய பதவி இல்லாததால் அத்தகைய அதிகாரியும் இலர் எனப் பதில் கூறலாம். சுவிஸ் கூட்டாட்சி அவை அமைச்சர் எழுவரைக் கொண்ட ஒரு நிறுவனம். சட்ட மன்றத்தின் இரு சபைகளும் அவர்களைத் தேர்ந்தெடுக்கின்றன. அவ்வாறு தேர்ந்தெடுக்கும் போது தேசீய அவை, மாநிலங்களின் அவை என்ற இரண்டு அவைகளும் கூட்டாட்சிப் பேரவை என்ற பெயரில் ஒன்றாய் அமர்கின்றன. ஒவ்வொரு புதிய தேசீய அவை கூடும்போதும் அவர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றார்கள். அந்த அவையைப்போல அவர்களும் மூன்று ஆண்டுகள் பதவியில் இருக்கின்றார்கள். ஒருவரிடத்து எல்லா நிருவாகத்துறை அதிகாரங்களும் குவிந்திருப்பதற்குப் பதிலாக அதைப் பலரிடம் பகிர்ந்து வழங்குவதற்காகவே இம்முறையைப் பின் பற்றுகின்றனர். இம் முயற்சியில் அவர்கள் வெற்றி பெற்றிருப்பதும் புலனாகின்றது. ஏனெனில், உண்மையில் அந்த எழுவரும் இணையான அதிகாரம் செலுத்துகின்றனர். ஆனால், அயல் நாட்டு அதிகாரிகள், அமைச்சர்கள் ஆகியவர்களை வரவேற்றல் போன்ற சில அலுவல்களை எழுவரும் ஒரே காலத்தில் செய்ய இயலாதாகையால், தேசீயப் பேரவை அவ்வெழுவருள் ஒருவரை அவையின் தலைவராகத் தேர்ந்தெடுக்கின்றது. அவர் ஒரே ஆண்டுதான் பதவியிலிருப்பார். சுவிஸ் மக்களாட்சி சுழற்சி முறையை (Principle of rotation) வலியுறுத்துவதால், ஒருவர் இரண்டு ஆண்டுகள் தொடர்ச்சியாகத் தலைவர் பதவியிலிருக்க இயலாது. தலைவர் தமது பதவிக் காலத்தில் மற்ற அறுவரையும்விடச் சிறிது அதிகமாக ஊதியம் பெறுகின்றார். கூட்டாட்சி அமைச்சரவையின் தலைவரைப் பொதுவாகக் குடியரசுத் தலைவர் என வழங்குகின்றனர். ஆனால், மற்றவர்களைவிட அவருக்கு வழங்கப்பட்டுள்ள உயர்ந்த நிலை 'ஒழுங்கு முறையான உயர்வுதான்; அவரை நிருவாகத்துறையின் தலைவரெனக் கருத இயலாது.'

ஆகவே, சுவிஸ் அமைச்சரவை உண்மையான பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறையாய் இருப்பது போலத் தோன்றுகிறது. ஆனால், அது அலுவலாற்றும் முறையை உன்னிப் பார்த்தால், நடைமுறையில் அது உறுதியுள்ள நிருவாகத்துறையாய் இருப்பது விளங்கும். சட்டமன்றம் தேர்ந்தெடுக்கும் எழுவரும் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு முன் ஏதாவதொரு சபையின் உறுப்பினராய் இருக்கத் தேவையில்லை. ஆயினும், பொதுவாக அவர்கள் உறுப்பினர்களாய் இருக்கின்றனர்கள். ஆனால், உறுப்பினர்களாய் இருந்தால், அமைச்சரவைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டதும், சட்ட சபையின் உறுப்பினர் பதவியைத் துறக்க வேண்டும். அதாவது, நிருவாகத்துறையில் இடம் பெற்றால், சட்ட ஆக்க அலுவலை ஆற்றக் கூடாது. அமைச்சரவை உறுப்பினர்களின் மூன்றாண்டு பதவிக்காலம் முடிந்ததும் அவர்கள் பெரும்பாலும் மீண்டும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்கள். அவர்களுள் சிலர், தொடர்ச்சியாக நான்கு அல்லது ஐந்து முறை பதவியிலிருந்திருக்கின்றனர்.

நிருவாகத்துறைக்கும் சட்ட மன்றத்திற்கும் இடையேயுள்ள தொடர்பைப் பொறுத்த வரையில், சுவிஸ் முறைக்கும் அமெரிக்க முறைக்கும் மாபெரு வேறுபாடு உண்டு. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தலைவரின் செய்திகள் வாயிலாக மட்டும் நிருவாகத் துறைக்கும் சட்ட மன்றத்திற்கும் தொடர்பு ஏற்படுகிறது. மேலும், அவர் அமைச்சர்கள் சட்ட மன்றத்தின் இரு சபைகளின் நடவடிக்கைகளிலும் கலந்து கொள்ள இயலாது. ஆனால், சுவிட்ஸர்லாந்தில், அமைச்சர்கள் துறைத்தலைவர்கள் என்ற முறையில் அவைகளுக்கும் சென்று அவற்றில் நிகழும் வாதங்களில் பங்கு பெறலாம். உண்மையில் சட்ட ஆக்க அலுவலில் பாராளுமன்றம் அவர்களின் அறிவுரையை நாடுகிறது. ஆயினும், அமைச்சர்கள் சட்ட மன்றத்தின் தலைவர்களல்லர் ; அவற்றின் பணியாளரே. அமைச்சரவை கட்சிச்சார்பற்றது; கட்சிக்குப் புறம்பானது. அது கட்சியின் வேலைகளைச் செய்வதில்லை. சட்ட மன்றத்திலுள்ள பல கட்சிகளின் கொள்கையை உருவாக்குவதுமில்லை. அதன் அலுவல் முற்றிலும் ஆட்சித்துறையைச் சார்ந்தது. அது நாட்டில் வரி திரட்டுதல், இருப்புப்பாதை போன்ற தேசீயக்காரியங்களை நடத்துதல் முதலிய கூட்டாட்சி அலுவல்களையே முக்கியமாகக் கவனிக்கிறது.

சுவிஸ் நிருவாகத்துறையின் தனிச்சிறப்பியல்பு அதன் உறுதி நிலையாகும். மேலே கூறியபடி, சட்ட மன்றம் அமைச்சர்களைத் தேர்ந்தெடுத்த போதிலும், கீழ்ச்சபையின் காலத்திற்குள் அவர்களைப் பதவியிலிருந்து நீக்க இயலாது. மேலும், அவர்கள் விரும்பினால், மீண்டும் அவர்களைத் தேர்ந்தெடுப்பது வழக்கமாய் இருக்கிறது. தேசீய சபை அதன் சாதாரணக் காலமாகிய மூன்றாண்டுகளுக்கு முன் கலைக்கப்பட்டால், புதிய சபையும் மாநிலங்களின் அவையும் முதலில் அமைச்சர்

அவையைத் தேர்ந்தெடுக்கும். ஆனால், பொதுவாக முந்திய அமைச்சரவையில் இருந்தவர்களையே மீண்டும் தேர்ந்தெடுப்பது வழக்கம். இவ்வாறு கூட்டாட்சி அவை, பெல்ஜியத்திலும், முன்பு பிரான்ஸிலும்உள்ள அமைச்சரவை அரசாங்கத்தைப் போலல்லாமல், அமெரிக்க ஐக்கிய நாடுகளின் உறுதியுள்ள நிருவாகத்துறையைப்போல நிலையானதாயும் உறுதியுள்ளதாயும் இருக்கிறது. ஆயினும், பாராளுமன்றம் அதைத் தேர்ந்தெடுத்த போதிலும், அது அமெரிக்க ஐக்கிய நாடுகளின் நிருவாகத்துறையைவிட அதிக உறுதியுள்ளதாய் இருக்கிறது. டைஸி (Dicey) என்பார், சுவிஸ் கூட்டாட்சி அவையைக் கூட்டுப்பங்கு சங்கத்தின் (Joint Stock Company) இயக்குநர் குழுவிற்கு ஒப்பிடுகிறார். எவ்வாறு குழுவின் உறுப்பினர்கள் பொது நலத்திற்காகத் திறமையுடன் உழைக்கும் வரை அவர்களை மாற்ற வேண்டிய தேவையில்லையோ, அவ்வாறே அமைச்சரவையின் அமைப்பையும் மாற்ற வேண்டிய தேவையில்லையென அவர் கூறுகின்றார்.

சுவிட்ஸர்லாந்தின் நிருவாகத்துறையைச் சீரமைக்க ஒரே வழிதான் கூறப்படுகிறது. அதாவது, கூட்டாட்சிப் பேரவை அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பதற்குப் பதிலாக மக்களே தேர்ந்தெடுக்கவேண்டுமெனக் கூறுகின்றனர். இது நடைபெறுமானால், நாம் இப்போது சுவிஸ் நிருவாகத்துறையைப் பாராளுமன்றச் சார்புள்ளதெனக் கூறுவதற்குரிய ஒரே காரணமும் மறைந்துவிடும். ஏனெனில், அப்போது அது அமெரிக்க நிருவாகத்துறையைப்போல உறுதியுள்ள நிருவாகத்துறையாய் மாறிவிடும். ஆனால், அப்போதும் இரண்டிற்கும் ஒரு வேறுபாடு உண்டு. அதாவது, ஆடம்பரமற்ற சுவிஸ் குடியரசு முறையில் நிருவாகத்துறை அதிகாரம் பகிர்ந்தளிக்கப்படுவதுமல்லாமல், அமைச்சரவையை அமைக்கும் அதிகாரமுள்ள ஒரு தனி மனிதரைத் தேர்ந்தெடுப்பதற்குப் பதிலாக மக்கள் ஒரு குழுவைத் தேர்ந்தெடுப்பார்கள், ஆகவே, சுவிஸ் அரசியலமைப்பு நிறுவியுள்ள பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத் துறையை உற்று நோக்கினால், அது நடைமுறையில் ஐரோப்பாவிலுள்ள வேறு எந்த நிருவாகத் துறையையும்விட அதிக உறுதியுள்ளதாயும், பாராளுமன்றச் சார்பற்றதாயும் இருக்கிறதெனக் காணலாம்.

## 4. துருக்கியின் நூதனமான முறை

துருக்கி முதல் உலகப் போருக்கு முன் இருந்ததைவிட இப்போது மிகவும் மாறிவிட்டது. அப்போரின் விளைவாகத் துருக்கிப் பேரரசு சிதைந்துவிட்டது. அதன் பழைய ஆட்சிப் பகுதிகள் சிறு சிறு அரசுகளாய்ச் சிதறின. ஒவ்வொன்றும் வேறு அரசுகளின் பாதுகாப்பில் வைக்கப்பட்டது. வெற்றி பெற்ற சில நேச நாடுகளின் கட்டுப்பாட்டிற்

குட்பட்ட ஆட்சியுரிமைப் பரப்புகளாக (Mandatory areas) மாறின, துருக்கி இப்போது நெருங்கி இணைந்திருக்கும் ஓர் அரசாய் விளங்கு கிறது. அதை ஏறக்குறையத் தேசீய அரசெனலாம். பெரும்பாலும் அது தனது முந்திய தாயகமாகிய அண்மைக் கிழக்குப் (Near East) பகுதியான அனட்டோலியாவின் (Anatolia) எல்லைப்பகுதிக்குள் அடங்கியிருந்தது. அதன் புதிய தலைநகர் அங்கோரா (Angora). எல்லாவற்றிற்கும் மேலாக அங்குச் சுல்தானின் பண்டைய வல்லாட்சி மறைந்து குடியரசு அரசாங்கம் தோன்றியது. சுல்தான் மகமதிய மதத்தின் பண்டைக்காலத் தலைமை அதிகாரமாகிய காலிபு பதவியை (Caliphate) வகித்து வந்தார். இப்போது அந்த அதிகாரமும் அவரது உலகியல் அதிகாரத்துடன் மறைந்தது. துருக்கியின் பழைய ஆட்சி எப்போதும் வரம்பில்லா முடியாட்சியாகவே கருதப் பட்ட போதிலும், அதை அரசியல் முறைமைக்குட் படுத்தப் பல முயற்சிகள் செய்யப்பட்டன. 1876இல் இரண் டாம் அப்துல் ஹமீது வல்லரசுகளின் வற்புறுத்தலின்மேல் ஓர் அரசியலமைப்பை அறிக்கையிட்டார். ஆனால், 1908இல் எழுந்த இளந்துருக்கியர் (Young Turks)புரட்சியின் விளைவாக அப்துல் ஹமீது வீழ்ச்சியடையும் வரை அது பயன்படாமலே இருந்தது. பிறகுதான் அது நடைமுறைச்கு வந்தது. ஆயினும், அதன் பிறகு பாராளுமன்றம் கூடிய போதிலும், அரசாங்கம் உண்மையில் ஒரு தன்னரசாகவே இருந்தது. பிரதிநிதிகளின் சபைக்கு உண்மையான அதிகாரங்கள் இல்லை. முதல் உலகப் போரில் துருக்கியர் தவறான கட்சியை ஆதரித் ததனால் ஏமாற்றமடைந்தனர். பிறகு சமாதானப் பேச்சுகளின் போது சுல்தான் தமக்கேற்பட்ட இகழ்ச்சிகளை எதிர்க்க ஆற்றலின்றி இருந் தாரென்று எண்ணி, அவர்கள் வெறுப்படைந்தார்கள். இவ்வுணர்ச்சி களினால் உந்தப்பட்ட துருக்கியர் செயலில் இறங்கினர் 1919ஆம் ஆண்டு கான்ஸ்டான்டிநோப்பிளில் சுல்தான் செவ்ரஸ் உடன்படிக்கை யில் கையெழுத்திட்டதும், துருக்கியர் அதைஏற்க மறுத்தனர்; புதிய தலைமையிடமாகிய அங்கோராவிலிருந்து எதிர்ப்பு இயக்கத்தைத் தொடங்கினர். எதிர்ப்பு எவ்வளவு கடுமையாய் இருந்ததென்றால், 1922-23இல் லங்சானில் நடந்த இரு மாநாடுகளுக்குப் பிறகு புதிய உடன்படிக்கை செய்துகொள்ள நேச நாடுகள் இணங்கின. இந்தப் பிந்தியஉடன்படிக்கையின் விளைவாகத் துருக்கியர்களுக்குக் கான்ஸ்டான்டிநோப்பிளும் திரேசும் கிடைத்தன.

இதற்கிடையில்; 1908இல் புதுப்பிக்கப்பட்ட அரசியலமைப்பின் ஏற்பாட்டின்படி, பாராளுமன்றம் அங்கோராவில் கூடியது. அது அர சியலமைப்பை மாற்றும் அதிகாரத்தைத் தானே மேற்கொண்டது. ஆனால், உண்மையில் அவ்வாறு செய்ய அதற்கு உரிமை இல்லை. அது இக்காலத் துருக்கியில் தோன்றிய பெரியார் ஒரு சிலருள் ஒரு

வரான முஸ்தபா கெமால் என்பாரின் தலைமையில் நடந்தது, (இவரைப் பிறகு கெமால் அட்டாடர்க்கு என வழங்கினர். இது துருக்கியில் வழங் கக் கூடிய மிக்குயர் புகழ்ப்பட்டம்.) அவர் போர் வீரராய் இருந்த துடன் அரசியல் வல்லுநராயும் துலங்கினர். அவருடைய கருத்துகள் பெரும்பாலும் மேல் நாட்டுக் கருத்துகளை ஒத்திருந்தன. இந்த அவை பழைய அரசியலமைப்பை எவ்வளவு திருத்தியமைத்ததென்றால், உண் மையில் அதை அழித்துவிட்டுப் புதியதொன்றை உருவாக்கிய தெனலாம். 1923ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்கள், 29ஆம் நாளன்று பாதி உறுப்பினர்கள் மட்டும் இருக்கும்போது அந்த அவை கெமாலைத் துருக்கிக் குடியரசின் தலைவராக ஒரே மனமாகத் தேர்ந்தெடுத்தது.

அந்த அரசியலமைப்பின்படி பெருந்தேசீய அவை என வழங்கப் பட்ட சட்ட மன்றம் நாட்டின் தலைவரைத் தேர்ந்தெடுத்தது. சட்ட மன் றத்தில் ஒரு சபைதான் இருந்தது. அதன் பதவிக் காலமாகிய நான்கு ஆண்டுகளுக்குத் தலைவரும் பதவியில் இருந்தார். ஆனால், சட்ட மன்றம் மறு முறை அவரைத் தேர்ந்தெடுக்கலாம். அவர் தலைமை அமைச்சர் வாயிலாகச் செயலாற்றி வந்தார். அமைச்சரவை தேசீய அவைக்குப் பொறுப்புடையது. குடியரசுத் தலைவர் அமெரிக்க நாட் டின் தலைவரைப் போலிச் சட்ட மன்றம் நிறைவேற்றிய சட்டத்தை எதிர்த்துத் தமது மறுப்பாணையைப் பயன்படுத்தலாம். ஆயினும், தேசீய அவையில் மக்களின் குடியரசுக் கட்சி என்ற ஒரே கட்சிதான் இருந்தது. அதன் தலைவர் கெமால் அட்டாடர்க்காய் இருந்ததால், அது தேசீய அவையில் பெருஞ்செல்வாக்குப் பெற்றிருந்தது. அட்டா டர்க்கின் கீழ் அரசியலமைப்புச் செயலாற்றிய விதத்தைப் பார்த்தால், அவர் உண்மையில் நான்கு வகையான தலைமைப் பதவியை வகித்தார் எனக் கூறலாம். அதாவது, குடியரசுக்கும், அமைச்சரவைக்கும், தேசீய அவைக்கும், சட்ட மன்றத்திலிருந்த ஒரே கட்சிக்கும் அவர் தலைவராய் விளங்கினர். அரசியல் முறைமைக்குட்பட்ட இக்கால அரசின் வரலாற்றில் அத்தகைய நிலை இதற்கு முன் தோன்றியதில்லை.

கெமால் அட்டாடர்க்கு 1938இல் இறந்தார். அவர் துருக்கிக் குடியரசில் புதுநோக்கம்கொண்ட வல்லாட்சியை நிறுவினர். அவருக் குப் பின் ஆட்சியேற்ற தளபதி இஸ்மெட் இனேனு காலத்திலும் இந் நிலை மாறவில்லை. ஆயினும், அவர் அட்டாடர்க்கைப் போன்று சிறப்பெய்தவில்லை. துருக்கியில் நெடுங்காலமாய் ஒரே கட்சி அரசாங் கம் நிலவியது. காலப்போக்கில் சர்வாதிகார முறைக்கு ஆதரவு கிட்டியது. இதன் விளைவாக வாக்காளர்கள் தங்கள் ஆர்வமெல்லாம் இழந்தார்கள். ஆகவே, 1940க்குச் சில ஆண்டுகளுக்கு முன் தேசீய அவையில் எதிர்க்கட்சி யொன்று சட்டமுறையாக அனுமதிக் கப்பட்டது. முதலில் எதிர்க்கட்சியினரின் எண்ணிக்கை வரையறுக்கப் பட்டது. ஆனால், பிறகு இக்கட்டுப்பாடு நீங்கியது. இத்தகைய புதிய

உரிமையினுல் துருக்கியரின் அரசியல் வாழ்வில் ஒரு புத்துணர்ச்சி பிறந்தது. 1950இல் நடந்த தேர்தல் இதை எண்பித்தது. அப்போது, அட்டாடர்க்கு நிறுவிய மக்கள் குடியரசுக் கட்சியை ஜனநாயகவாதிகள் தோற்கடித்து, மாபெரு வெற்றி கண்டார்கள். அதன் விளைவாக அவர்கள் அவையில் 434 இடங்களைப் பெற்ருர்கள். உடனே தலைவர் இனேனு ஜனநாயகக் கட்சியின் தலைவர் பதவியேற்பதற்காகத் தமது பதவியைத் துறந்தார். ஒரு வல்லாட்சி மக்களின் விருப்பத்திற்கு இணங்கித் தனது அதிகாரத்தைத் தானே கைவிட்டதற்குத் தற்கால வரலாற்றில் இதுவே முதல் எடுத்துக்காட்டாகும். இதை அரசியல் முறைமைக்குட்படுகையின் வெற்றி எனலாம்.

1954இலும் 1957இலும் ஜனநாயகவாதிகள் மீண்டும் தேர்தலில் வெற்றி பெற்ருர்கள். ஆனுல், 1960இல் படை வீரர்கள் அவர்களது ஆட்சியை வீழ்த்தி, தேசீய ஐக்கியக் குழு என்ற படை ஆட்சியை நிறுவினுர்கள். அவர்கள் ஜனநாயகக் கட்சியைக் கலைத்து, அதன் தலைவர்களைக் குற்ற விசாரணை செய்தார்கள். தலைவர்களுள் ஒரு சிலர் தூக்கிலிடப்பட்டனர். இதற்கிடையில் தேசீய ஐக்கியக்குழு, தெரிந்தெடுக்கப்பட்ட படைத்துறையைச் சாராத ஒரு சிலரைக் கொண்ட பிரதிநிதித்துவ சபையின் துணையுடன் செயலாற்றிவந்தது. 1960இல் அமைக்கப்பட்ட அரசியற்புனை சபை புதியதொரு குடியரசு அரசியலமைப்பை வரைந்தது. அது 1924இல் கெமால் அட்டாடர்க்கு எழுதிய அரசியலமைப்பை நீக்கியது. புதிய அரசியலமைப்பு, முன்பிருந்தது போன்று ஒரு சபைக்குப் பதிலாக, இரு சபைகளையுடைய பெருந்தேசீய அவையை நிறுவியது. அந்த அவையில் (ஆருண்டுக் காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட 150 உறுப்பினர்களையும், நாட்டின் தலைவரால் நியமிக்கப்பட்ட 15 உறுப்பினர்களையுமுடைய) 'செனட்டும்' (நேர்முகப் பொது வாக்கினுல் தேர்ந்தெடுக்கப்பட்ட 450 உறுப்பினர்களையுடைய) தேசீய அவையும் இருக்கவேண்டும். நாட்டின் தலைவர் ஏழாண்டுகள் பதவியில் இருப்பார். (அவர் மீண்டும் பதவியில் அமர இயலாது.) பெருந்தேசீய அவையிலுள்ள 45 வயதுக்கு மேற்பட்டவர்களுள் மூன்றில் இரண்டு பகுதிப் பெரும்பான்மையினர் அவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அரசியலமைப்பின் 98ஆம் விதியின்படி 'குடியரசுத் தலைவர் தம் அலுவல்கள் சார்ந்த செயல்களுக்குப் பொறுப்புள்ளவர் அல்லர்.' இப்பொறுப்பு அமைச்சர் அவையைச் சார்ந்தது, தலைமையமைச்சர், அமைச்சரவையின் தலைவர். அமைச்சரவை பெருந்தேசீய அவைக்குப் பொறுப்புடையது.

புதிய அரசியலமைப்புக் குடியொப்பத்திற்கு விடப்பட்ட போது பெரும்பான்மையான வாக்காளர் அதை ஆதரித்தனர். ஆகவே,

அது 1961ஆம் ஆண்டு நடைமுறைக்கு வந்தது. பிறகு நடந்த தேர்தலில் (அவமதிப்படைந்த ஜனநாயகக் கட்சியைத் தவிர) நான்கு கட்சிகள் கலந்துகொண்டன. அவற்றுள் குடியரசு மக்கள் கட்சி மற்ற எந்தக் கட்சியையும்விட அதிக இடங்களைப் பெற்றது. ஆயினும், பிற கட்சிகள் எல்லாம் சேர்ந்து பெற்றதைவிட அதிக இடங்களைப் பெறவில்லை. புதிய பெருந்தேசீய அவை படை ஆட்சிக் காலத்தில் தாற்காலிகமாக அரசின் தலைவராய் இருந்த தளபதி கர்ஸல் (General Gursel) என்பவரை நாட்டின் தலைவராகத் தேர்ந்தெடுத்தது. அவர் முன்பு தலைவராய் இருந்த இஸ்மெட் இனோனு என்பவரைத் தலைமை அமைச்சராக நியமித்தார். அவர் ஒரு கூட்டு அமைச்சரவையை அமைத்தார். எனவே, இறுதியில் துருக்கி உண்மையில் பாராளுமன்றச் சார்புள்ள ஒரு நிருவாகத்துறையை நிறுவியுள்ளது எனலாம்.

## 5. பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை, உறுதியுள்ள நிருவாகத்துறை ஆகிய இரண்டின் நற்பயன்களுக்கும் ஒப்புமை

இக்கால உலகிற்காணப்படும் அடிப்படை வேறுபாடுகளையுடைய இரு வகை நிருவாகத்துறை முறைகளையும் ஆயும் போது, ஒரு சில குறிப்புகளை வலியுறுத்த வேண்டும். முதலாவது, பாராளுமன்றச்சார் புள்ள நிருவாகத்துறை எங்கெல்லாம் இருக்கிறதோ, அங்கெல்லாம் அது வளர்வதற்கு பிரிட்டன் ஊக்கமளித்திருக்கின்றது. ஏனெனில், பிரிட்டிஷ் முறையே அவற்றிற்கு மாதிரியாய் அமைந்திருக்கின்றது. ஆகவே, இங்கிலாந்தில் முதலில் நிருவாகத்துறை பாராளுமன்றச் சார்பற்றதாய் இருந்ததென்பதையும், இன்றும் பெயரளவில் அவ் வாறே இருக்கின்றதென்பதையும் நோக்கும்போது வியப்பாய் இருக் கின்றது. அமைச்சர் ஒவ்வொருவரும் அரசரின் பணியாளராய் இருக் கின்றார். பெயரளவில் அரசர் அமைச்சரை நியமிக்கவும் நீக்கவும் கூடும். ஆனால், முன்னர்க் கூறியது போல, இக்கால ஜனநாயக முறைப்படி வாக்காளர்கள் தலைமை அமைச்சரையும் மக்கள் சபையை யும் தேர்ந்தெடுக்கின்றார்கள். தலைமை அமைச்சராக வரவேண்டுபவ ரைத் தலைமை அமைச்சர் என்ற முறையில் தேர்ந்தெடாவிடினும், பாராளுமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கின்றனர். ஆனால், அரசியலமைப்பின் வழக்காற்று முறைப்படி பெரும்பான்மைக் கட்சித் தலைவரே அரசாங்கத்தின் தலைவராகப் பதவியேற்கின்றார்.

இவ்விரு வகை நிருவாகத் துறைகளில் எது மக்களாட்சியின் நலனையும் நோக்கத்தையும் நிறைவேற்றுகிறதெனப் பார்ப்பது பயன் தரும். உண்மையான பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை கட்சி முறையெனும் அடிப்படையில் நிறுவப்பட்டிருப்பதால், அதை

உருவாக்கும் சட்ட மன்றத்தின் அடிமையாக அது மாறக் கூடும். இம் முறையில் சட்டமன்றத்திற்கும் நிருவாகத்துறைக்கும் பெருமுரண்பாடு ஏற்படாதெனினும், நிருவாகத்துறை சட்ட மன்றத்தின் நிலையான விருப்பத்தை மட்டுமல்லாமல், அதன் நிலையற்ற மனப்போக்குகளையும் மனவெழுச்சிகளையும் பிரதிபலிக்கலாம். அதைவிட அடிக்கடி மாறும் இயல்புள்ள வாக்காளர்களின் உணர்ச்சிகளையும் அது எதிரொலிக்கக் கூடும். உறுதியுள்ள நிருவாகத்துறை இக்குறையை நீக்குகிறது. ஏனெனில், முதலில் அரசின் நலன் பெருக வேண்டுமானால், நிருவாகத் துறையின் செயல்களைக் குறிப்பிட்ட ஒரு காலத்திற்காவது கட்டுப்படுத் தக் கூடாது. இரண்டாவது, அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைவரைப்போன்று அத்தகைய உண்மையான தலைவராய்த் திகழ்வதுடன், மக்களாட்சியை அதன் பேரிடரினின்று காக்கவும் இயலும். அதாவது, அவர் மக்களாட்சியிலுள்ள மிகச் சாதாரண மனிதரின் நிலைக்குத் தாழ்ந்து போகாதவாறு தடுக்க இயலும்.[1]

ஆனால், அமெரிக்காவிலிருப்பதுபோல மக்கள் தேர்ந்தெடுக்கும் உறுதியுள்ள நிருவாகத்துறை சட்டமன்றத்தைச் சார்ந்திருக்கும் நிருவாகத்துறையைவிடப் பொதுமக்களின் உணர்ச்சிகளினால் அதிகமாகப் பாதிக்கப்படுகின்றது. ஆனால், அதன் பெரிய நன்மை என்னவென்றால், ஒரு முறை தேர்ந்தெடுக்கப்பட்டுவிட்டால், கட்சி உணர்ச்சிகளும் இடைத்தேர்தல்களின் மாறும் அறிகுறிகளும் அதை ஒன்றும் செய்ய இயலாது. ஏற்கெனவே கூறியது போல, பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை நிலையாக இருக்க வேண்டுமென்றால், நன்கு வரையறுக்கப்பட்ட உறுதியான கட்சி முறை தேவை. பிரிட்டனிலிருப்பது போல இம்முறை இருக்குமிடங்களில் எல்லாம் அது வெற்றிகரமாக நடைபெறுகிறது. முன்பு பிரான்ஸில் நிகழ்ந்தது போன்று இம்முறை நன்றாக நடைபெறாத இடங்களில் நிருவாகத்துறையின் அமைப்பிலும் கொள்கையிலும் பல மாறுதல்கள் ஏற்படக்கூடும். இது அரசாங்கத்திற்கு ஊறு விளைவிக்கும் ஒரு கூறாகும். ஓர் அமைச்சரவையின் தொடக்கக் காலத்தில் நம்பிக்கையில்லாத் தீர்மானத்தினால் அதை வீழ்த்தாதவாறு தடுப்பதற்கு நான்காவது பிரெஞ்சுக் குடியரசின் அரசியலமைப்பில் சில பாதுகாப்புகள் இருந்தன என்பது உண்மைதான். ஆயினும், அடிக்கடி பாராளுமன்றப் பிரிவுகள் சில ஒன்று சேர்ந்து ஒப்பற்ற முறையில் அத்தகைய தீர்மானத்தைக் கொண்டு வந்தன. அவை அரசாங்கத்தைப் பதவி துறக்கவைக்க வேண்டுமென்ற ஒரே நோக்கத்துடன் தாற்காலிகமாக ஒன்று சேர்ந்தன. ஆகவே, அரசியலமைப்பில் காணப்பட்ட பாதுகாப்புகள், எளிதில் முறிவடையக்கூடிய அம் முறையினால் விளைந்த தீங்கைத் தவிர்க்க

1. எடுத்துக்காட்டாக எமில் ஃபாக்வே (Emile Faguet) எழுதிய ' The Cult of Incompetence ' என்ற நூலைப் பார்க்க.

இயலவில்லை. அதுதான் நான்காவது குடியரசில், மூன்றாவது குடியரசில் நிகழ்ந்தது போலவே, பிரெஞ்சு அரசாங்கம் உறுதியிழந்து காணப்பட்டதற்கு முக்கியமான காரணமாகும். இதன் விளைவாகவே ஐந்தாவது குடியரசென்னும் புதியதோர் அரசியலமைப்பு முயற்சி தோன்றியது.

பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை நெருக்கடிக் காலங்களில் ஏற்படும் இடர்களைத் தாங்க இயலாது துவளுமென்றால், வல்லாட்சியாளர்கள் அதைத் தங்கள் ஆட்சியை நிறுவும் படிக்கல்லாகப் பயன்படுத்தக் கூடுமென்பது, இரு போர்களுக்கும் இடைப்பட்ட காலத்தின் ஐரோப்பிய அரசியல் வரலாற்றிலிருந்து நன்கு தெரிகின்றது. முசோலினி அரசியல் முறைமைக்குட்பட்ட பதவியாகிய தலைமை அமைச்சரின் பதவியை ஏற்று அரசியல் அதிகாரத்தைப் பெற்ற பிறகு பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ள அமைச்சரவையை நீக்கி அதற்குப் பதிலாகத் தமக்கு மட்டும் பொறுப்புள்ள பெரும் பாஸிஸ அவையை நிறுவினார். இவ்வாறு அவர் பிரதிநிதிகளின் சபை அதிகாரத்தை அழித்தார். பிறகு அவர் பிரதிநிதிகளின் சபையையே அழித்து, அடிபணியும் பாஸிஸ்டுகளின் சபையாகிய மக்களாட்சிக்கு முரணான ஒரு நிறுவனத்தை நிறுவினார். அதே போல, ஜெர்மனியில் ஹிட்லர் வெய்மார் குடியரசின் அரசியலமைப்பிற்கேற்பத் தலைமை அமைச்சரின் பதவியை ஏற்றார். ஆனால், அவருக்கடியிலிருந்த அமைச்சரவை, அரசியலமைப்பின்படி ரைக்ஸ்டாக்குக்குப் பொறுப்புள்ளதாய் இருப்பதற்குப் பதிலாக, தலைவருக்கு (Fuhrer) மட்டுமே பொறுப்புள்ள ஒரு நிறுவனமாய்ச் சீர் கெட்டது. கோட்பாட்டு வெறிகொண்ட நாஜிகள் இருந்த அந்நிறுவனம் 'தலைவர்கள் அவை' (Fuhrerrat) என வழங்கப்பட்டது. ரைக்ஸ்டாக்கில் ஒரு கட்சியினரே ஆதிக்கம் செலுத்தத் தலைப்பட்டனர். அது சில வேளைகளில் மட்டும் கூடியது. அப்போது அது தலைவரின் உணர்ச்சி மிக்க பேச்சுகளை எதிர்ப்பின்றிக் கேட்டுக்கொண்டிருக்கும் நிறுவனமாய் மாறியது. இது போலவே சில அரசுகளில் தலைவர் முறை அரசாங்கத்தின்கீழ், அரசியலமைப்புக்குட்பட்ட நிருவாகத்துறை இத்தகைய சீர் கேடான மாற்றத்தைப் பெற்றுள்ளது. இலத்தீன் அமெரிக்கக் குடியரசுகளின் கொந்தளிப்பு மிக்க வரலாற்றை ஆராய்ந்தால் இது புலனாகும்.

இந்த எடுத்துக்காட்டுகளிலிருந்து குடிகள் எப்போதும் விழிப்பாய் இருந்து நிருவாகத்துறையைக் கண்காணித்து வரவேண்டுமென்பது நன்கு விளங்குகின்றது. ஏனெனில், நிலையான விழிப்பே சுதந்தரத்தின் விலையாகும். அவர்கள் அவ்வாறு விழிப்பாய் இல்லையானால் அரசியலமைப்புத் தங்களுக்கு நல்கும் உரிமைகளை விரைவில் இழந்து

விடுவார்கள். கல்வியறிவுடைய வாக்காளர்கள் வாழும் அரசிய லமைப்புக்குட்பட்ட நிலையான அரசுகளிலே அவ்வாறு நிகழக்கூடு மானால், கல்வியறிவும் அரசியல் அனுபவமும் முற்றிலும் இல்லாத மக்கள் வாழும் புதிய அரசுகளுக்கு என்ன எதிர்கால வாய்ப்புகள் இருக்க இயலும்? இத்தகைய புதிய அரசுகளே இப்போது ஒவ் வொரு கண்டத்திலும் முளைத்தெழுகின்றன. மிக உறுதியான அர சாங்கத்தை நிறுவுவது இப்புதிய அரசுகளின் இடர்ப்பாடாய் இருக் கின்றது. இவை அரசியல் அனுபவம் பெறுகின்ற காலத்தில், மக் களின் உரிமை வளர்ச்சிக்கேற்ப உறுதியான அரசாங்கத்தை நிறுவ வேண்டும். அத்தகைய அரசுகளின் தொடக்கக் காலத்தில் அவற் றிற்கு உறுதியளிக்கவல்லது பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத் துறையா, அல்லது பாராளுமன்றச் சார்பற்ற நிருவாகத்துறையா என்பது அவற்றுள் ஒவ்வொன்றின் வரலாற்றையும் வாய்ப்புகளையும் பொறுத்தது. ஆனால், ஒன்று மட்டும் நாம் உறுதியாகக் கூற இயலும். அதாவது, இது இன்றைய பிரச்சினைகளில் தலையாயது, ஏனெனில். இது புதியனவாக மலரும் சமூகங்களின் நலனைச் சார்ந்தது மட்டுமல் லாமல், எதிர்கால உலகின் அமைதியையும் பாதுகாப்பையுமே பாதிக்க வல்லது.

## படிக்க வேண்டிய நூல்கள்:

1. பேஜ்ஹாட் (Bagehot): English Constitution, முகவுரை.

2. பாஸட் (Bassett): Essentials of Parliamentary Democracy, பக்கம், 240-52

3. பிரைஸ் (Bryce): American Commonwealth, தொகுதி 1, இயல் 5-9, 20-1, 25

4. ஃபைனர் (Finer): Modern Government, இயல் 26

5. ஷ்வார்ட்ஸ் (Schwartz): American Constitutional law, இயல், 4

6. ஸிங்க் (Zink): Government of the United States, இயல் 14-17

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள்:

1. பாட்டர் (Potter): American Government

2. ரப்பார்டு (Rappard): Government of Switzerland

3. சிலோன் (Silone): School for Dictators

## கட்டுரைக்கேற்ற பொருள்கள் :

1. உறுதியுள்ள நிருவாகத்துறையில் எவ்வாறு ஜனநாயக அல்லது வல்லாட்சிக் கூறுகள் காணப்படலாம் என்பதை விளக்குக.

2. அமெரிக்கத் தலைவரின் தேர்தல் முறையைப் பொறுத்தவரையில் முதலில் எழுதப்பட்ட அரசியலமைப்பில் வழக்கம் காரணமாக என்ன மாறுதல்கள் நிகழ்ந்துள்ளன ?

3. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் தலைவரின் அதிகாரங்களை விளக்குக. அவர் உண்மையான நிருவாகத்துறையாய் இருக்கிறார் என்பது எவ்வாறு பொருந்தும் ?

4. 'அமெரிக்கத் தலைவர் விரும்பினால், காங்கிரஸின் கருத்துக்கு எதிராக நடக்கலாம்.'—விளக்குக.

5. பரவலாக அளிக்கப்படும் நிருவாகத்துறை என்பது என்ன ? இது எவ்வாறு வேறு எந்த இக்கால அரசிலும் இருப்பதைவிடச் சுவிஸ் குடியரசில் அதிகமாய் இருக்கிறதென்பதைக் காட்டுக.

6. இக்கால அரசுகளிலுள்ள நிருவாகத்துறையில் சுவிஸ் நிருவாகத்துறை ஒரு தனித்தன்மையுடையது என்பதை விளக்குக.

7. 1923ஆம் ஆண்டில் அட்டாடர்க்கு நிறுவிய அரசியலமைப்பிலும், 1961ஆம் ஆண்டின் அரசியலமைப்பிலும் உள்ள துருக்கிக் குடியரசுத் தலைவரின் அதிகாரங்களை ஆராய்க.

8. ஐக்கிய அரசின் அமைச்சரவை அரசாங்கத்திற்கும் அமெரிக்காவின் தலைவர் முறை அரசாங்கத்திற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் கூறுக.

9. பாஸிஸ, நாஜி வல்லாட்சிகளில் உறுதியுள்ள நிருவாகத்துறை நிறுவப்பட்டதெனக் கூறுவது எவ்வாறு பொருந்தும் ?

10. பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை, பாராளுமன்றச் சார்பற்ற நிருவாகத்துறை ஆகிய இரண்டில் எது மக்கள் இறைமைக்கு ஏற்றதாய் இருக்கிறது ?

# 13. நீதித்துறை

## 1. நீதித்துறையின் சுதந்தரம்

சட்ட நீதிக்கும் ஆட்சித்துறைச் சட்டத்திற்கும் உள்ள வேறு பாட்டின் அடிப்படையில் நீதித்துறை முறைகளைப் பாகுபாடு செய்தோம். நிருவாகத்துறை முறைகளை ஆராயும் போது நீதித்துறை முறைகளையும் ஆராயத் தேவை ஏற்படுகிறது. ஏனெனில், நீதித் துறைக்கும் நிருவாகத்துறைக்குமுள்ள வேறுபாடு காரணமாகவே இப் பாகுபாடு தோன்றுகிறது. பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடுகள் போன்ற சில அரசுகளைப் பொது நீதி அரசுகள் எனக் கூறினோம். அவை சட்ட நீதியை வளர்த்துள்ளன. ஆட்சித்துறை (அல்லது நிருவாகத்துறை) நீதித்துறையில் முற்றிலும் தலையிடாமலிருப்பது அவற்றின் அடையாளமாகும். தனிச்சிறப்புரிமை அரசுகள் (Prerogative States) என நாம் வழங்கும் நாடுகளில் நிருவாகத்துறை சட்டத்தின் ஒரு பகுதியாகிய ஆட்சித்துறைச் சட்டத்தைக் கட்டுப்படுத்துகின்றது. இவ்வேறுபாட்டையே இந்த இயலில் அதிகமாக விளக்குவோம். ஆனால், இவ்விளக்கத்தைத் தொடங்குமுன் நீதித்துறையின் பொது இயல்புகளை ஆய்வது நலம். அரசாங்கத்தின் நீதித்துறை பற்றிய ஆராய்ச்சி ஒரு தனித்துறை பற்றிய ஆராய்ச்சியாகும். அது அரசியலை விடச் சட்டவியலையே சார்ந்தது எனலாம். ஆயினும், ஒப்பீட்டு அரசியலை அறிமுகப்படுத்தும் போது நீதித்துறையைப்பற்றி ஓரளவு பார்க்கவில்லையெனில், அப்படிப்பு அரைகுறையானதென்று சொல்லலாம். மேலும், நீதித்துறை எங்கும் அரசாங்கத்தின் முப்பேருறுப்புகளுள் ஒன்றாய் விளங்குகிறது. பிற இரண்டு உறுப்புகளின் அதிகாரங்களுடனும், குடிகளின் உரிமைகள் கடமைகள் இவற்றுடனும் அதற்கு நெருங்கிய உறவு உண்டு.

நாம் அதிகாரப் பிரிவினைக்கொள்கையை ஆயும் போது, மூன்று துறைகளும் முற்றிலும் தனித்து நிற்கவேண்டுமென்பது இக்கொள்கையின் தீவிரமான பொருள் என்றும், மூன்று அதிகாரங்களும் தனித்தனி

நிறுவனங்களிடம் இருக்க வேண்டுமென்பதுதான் அதன் பரந்த பொருள் என்றும் குறிப்பிட்டது நினைவிருக்கலாம். இக்காலச் சூழ் நிலையில் தீவிரக் கருத்தை நடைமுறையில் செயற்படுத்த இயலாது. ஏனெனில், அரசியல் முறைமைக்குட்பட்ட அரசாங்கத்தின் அலுவல் கள் எவ்வளவு சிக்கலாய் இருக்கின்றன என்ருல், ஒவ்வொரு துறை யின் அதிகார எல்லையையும் வரையறுத்து, அவ்வெல்லைக்குள் அதற் குச் சுதந்தரமும் மேலாண்மையும் வழங்குவது இயலாது. H.J. லாஸ்கி கூறியது போல, 'அதிகாரப் பிரிவினை' என்பது, 'அதிகாரங்களின் சமநிலை' என்று பொருள்படாது. உண்மையில் அரசியல் முறைமைக் குட்பட்ட அரசில், நிருவாகத்துறை பாராளுமன்றச் சார்பற்றதாய் இருந்த போதிலும், நிருவாகத்துறையின் செயல்கள் தனது விருப் பத்தை நிறைவேற்றுமாறு சட்டமன்றம் கவனித்துக்கொள்ளவேண்டும்; அவ்வாறேஅது கவனித்துக்கொள்கின்றது. அதிகாரப் பிரிவினைக் கொள்கை பிரான்ஸின் முதல் அரசியலமைப்பின் அடிப்படை யாய் இருந்தது. அங்கு அக்கொள்கையை எவ்வளவு மாற்றியமைத்து விட்டனரென்ருல், மூன்ரும் நான்காம் குடியரசுகளின் அரசிய லமைப்புகளில் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறை முறையில் புகுத்தினர். அதன் விளைவாக நிருவாகத்துறை சட்ட மன்றத்தின் ஒரு பகுதியாக—உண்மையில் ஒரு குழுவாக—மாறிவிட்டது. மேலும், நல்ல அரசாங்க முறையில், நீதித்துறையின் கடுமையான தீர்ப்புகளைக் குறைக்க அல்லது நீக்க நிருவாகத்துறையிடம் மன்னிப்பு அதிகாரம் அல்லது தண்டனையைக் குறைக்கும் அதிகாரம் இருக்க வேண்டும். மேலும், நீதித்துறையின் போக்கு நல்ல கொள்கைக்கு முரணாய் இருக்குமானல், சட்ட மன்றம் அதைச் சட்டத்தினல் மாற்று வதற்கு அதிகாரமுண்டு. அவ்வாறு செய்யும் போது சட்ட மன்றம் தனது அதிகார எல்லையை மீறக்கூடாது. இவ்வாறு மூன்று துறை களும் ஒன்றையொன்று கட்டுப்படுத்துவதைக் காணலாம்.

மூன்று அதிகாரங்களும் தனித்தனி நிறுவனங்களிடம் இருக்க வேண்டும் என்ற பரந்த பொருளின்படி அரசியல் முறைமைக்குட்பட்ட இக்கால அரசுகள் எல்லாம் அதிகாரப்பிரிவினை எனும் குறிக்கோளை ஓரளவு பின் பற்ற வேண்டும் எனக் கூறலாம். ஏனெனில், இக்கால அரசு எதிலும் ஓர் அலுவலைச் செய்யும் நிறுவனம் பிற இரண்டு அலு வல்களையும் ஆற்றும் நிறுவனங்களைப்போல இருப்பதில்லை. சட்ட மன்றத்தையும் நிருவாகத்துறையையும் பொறுத்த வரையில், பாராளு மன்றச் சார்பற்ற நிருவாகத்துறையையுடைய அரசில் இப்பிரிவினை யைத் தெளிவாகக் காணலாம். பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத் துறையையுடைய அரசிலும் இப்பிரிவு ஓரளவு இருக்கிறது. ஏனெ னில், நிருவாகத்துறை சட்ட மன்றத்தின் ஒரு பகுதியேயன்றி, முழுச் சட்ட மன்றமாகாது. திருவாகத்துறையையும் நீதித்துறையையும்

பொறுத்த வரையில், ஒரு சில விதி விலக்குகள் உள்ளன. ஆனால், இவை அவ்விரண்டும் தனித்தனி நிறுவனங்கள் என்ற உண்மையை மாற்றுவதில்லை. எடுத்துக்காட்டாக, பிரிட்டனில் நாட்டின் உயர்நிலை நீதித்துறை அதிகாரியாகிய சான்ஸலர் பிரபு, அமைச்சரவையின் உறுப்பினராயும், அப்பதவியிலிருப்பதால் பிரபுகள் சபையின் தலைவராயும் பணியாற்றுகிறார். ஆகவே, சான்ஸலர் பிரபுவின் பதவியும் அரசாங்கம் மாறும்போது மாறுகின்றது. மேல் தீர்ப்புப் பிரபுகளும் (Lords of Appeal) பிரபுகள் சபையின் உறுப்பினர்களாய் இருக்கின்றார்கள். ஆனால், பிரபுகள் சபை இன்னும் இறுதி மேல் வழக்கு நீதி மன்றமாய் இருப்பதால், இவ்வாறு நடைபெறுகிறது. இந்த நீதித்துறை நிறுவனத்தின் நடவடிக்கைகளில் சாதாரணப் பிரபுகள் கலந்து கொள்வதில்லை. அதேபோல மேல் தீர்ப்புப் பிரபுகளும் பிரபுகள் சபையின் அரசியல் அலுவல்களில் சாதாரணமாகக் கலந்துகொள்வதில்லை. பல ஐரோப்பிய நாடுகளின் அமைச்சரவைகளில் நீதி அமைச்சர் என ஒருவர் இருப்பதைக் காணலாம். ஆனால், அவர் எப்போதும் நீதிபதியாய் இருப்பதில்லை. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் மட்டும் நீதித்துறையின் பிரதிநிதி நிருவாகத்துறையிலும், நிருவாகத்துறையின் உறுப்பினர் நீதித்துறையிலும் இருப்பதில்லை. ஆனால், இவ்விதி விலக்குகள் சட்டத்தை நிரூபிக்கின்றன. நீதித்துறை தனது துறையிலே கட்டுப்பாடின்றி இருக்கவேண்டுமென்பது இன்னும் அரசியல் முறைமைக்குட்படுகையின் மேற்கோளாய் இருந்து வருகிறது. இப்போது, அந்தத் துறையின் வரையறைகள் என்ன என்னும் கேள்வி எழுகின்றது.

இந்தச் சுதந்தரக் கொள்கையைப் பின்பற்றுவதால் அரசியலமைப்புக்குட்பட்ட பல அரசுகளில் நீதிபதிகளின் பதவிக்காலம் நிலையானதாய் இருக்கிறது. அவர்கள், 'நன்னடத்தை உடையவர்களாய்' இருக்கும் வரை பதவியில் இருக்கின்றார்கள். அதாவது, அவர்கள் சட்டத்திற்கு முரணான எக்குற்றத்தையும் செய்யாதவரையில் பதவியிலிருக்கலாம். ஆகவே, அவர்களுடைய பதவிக்காலம், அரசாங்கத்தின் மற்ற இரு பகுதிகளைப்போலத் தேர்தல் முறைகளுக்கேற்ப மாறுவதில்லை. சுவிட்சர்லாந்தும் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலுள்ள சில தனி மாநிலங்களும் இதற்கு இரு பெரு விதி விலக்குகளாய் உள்ளன. சுவிட்சர்லாந்தில் கூட்டாட்சி அவை இரண்டும் ஒன்றாய் அமர்ந்து நீதிபதிகளைத் தேர்ந்தெடுக்கின்றன. அவர்களது பதவிக்காலம் ஆறு ஆண்டுகள். (ஆனால், இங்கும் நீதிபதிகளைத் திரும்பத் திரும்பத் தேர்ந்தெடுப்பதால், பலருடைய பதவிக்காலம் நீடிப்பதாய் இருக்கிறது.) அமெரிக்க மாநிலங்கள் சிலவற்றில் நீதிபதிகளை மக்கள் தேர்ந்தெடுக்கின்றார்கள். அவர்கள் குறிப்பிட்ட காலத்திற்கு (சில மாநிலங்களில் இரண்டு ஆண்டுகளே) பதவியிலிருக்கிறார்கள். இம்

முறையினால் பல தீமைகளும் ஊழல்களும் விளைகின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இம்முறையைக் கூட்டாட்சி நீதி மன்றத்திற்குப் பயன்படுத்துவதில்லை. நாட்டின் தலைவர் செனட்டின் அறிவுரையையும் இசைவையும் பெற்று அதன் நீதிபதிகளை நியமிப்பார். அவர்கள் ஆயுட்காலம் முழுவதும் பதவியிலிருக்கலாம்.

பிரான்ஸில் நீதித்துறையின் உயர்அவையின் (High Council of the Judiciary) அறிவுரையின்மேல் நீதிபதிகள் நியமிக்கப்படுகின்றனர்கள். அந்த அவை 'நீதிபதிகளைத் தண்டிக்கும் அவை'யாகவும் செயலாற்றுகின்றது. கிரேட் பிரிட்டனில் கொள்கையளவில் அரசியாரே எல்லா நீதிபதிகளையும் நியமிக்கிறார், நடைமுறையில் சான்ஸலர் பிரபு நியமிக்கிறார். அவர்கள் நன்னடத்தை உடையவர்களாய் இருக்கும் வரையில் பதவியில் இருக்கலாம் என்பதை அரசுரிமை நிருணயச் சட்டம் (Act of Settlement-1701) தெளிவாக நிலைநாட்டியது. அவர்களைப் பதவியிலிருந்து நீக்கவேண்டுமென்று பாராளுமன்றத்தின் இரு சபைகளும் வேண்டினால் மட்டும் அவர்களை நீக்க இயலும். ஆயினும், அச்சட்டம் நிறைவேறியதிலிருந்து அத்தகைய வேண்டுகோள் வெளி வாராமையினால், அவர்களது பதவிக்காலம் நிலையானது என்பது தெளிவாகத் தெரிகின்றது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தலைமை நீதிமன்ற நீதிபதிகளைக் காங்கிரஸின் முன்னிலையில் குற்றஞ்சாட்டி அதன் பிறகே நீக்க இயலும்.[1]

இவ்வாறு, பெரும்பாலும் நிருவாகத்துறை அல்லது அதில் ஒரு பகுதி நீதிபதிகளை நியமித்தபோதிலும், பொதுவாக அவர்களை நீக்கும் அதிகாரம் சட்ட மன்றத்திடம் இருக்கின்றது; அப்படி இல்லாவிட்டாலும் எப்படியாகிலும் நிருவாகத்துறையின் கட்டுப்பாட்டிற்கு முற்றிலும் புறம்பாய் இருக்கிறது. இவ்வாறு அரசியலமைப்புக்குட்பட்ட பல அரசுகளில் குடிகளின் உரிமைகள் இரு வகைகளில் காக்கப்படுகின்றன. பெரும்பாலும் நீதிபதிகளே அவ்வுரிமைகளை இறுதியில் காக்கின்றார்கள். ஆகவே, அவர்களை நியமிப்பதற்கு மாறும் தன்மையுடைய ஜனநாயக முறைகளைப் பயன்படுத்துவதில்லை. மேலும், அவர்களுக்குப் பதிவிக்காலப் பாதுகாப்பு அளிக்கப்படுவதால், அவர்கள் அரசியல் சூழ்நிலைக்கேற்ப மாறுவதில்லை. நீதித்துறை எவ்வகையில் மற்றிரு துறைகளின் கட்டுப்பாட்டிற்கு உட்படாதிருக்கின்றதென்பதை ஏற்கெனவே விளக்கிவிட்டோம். நீதித்துறை (i) சட்ட மன்றத்தின் மேலும், (ii) நிருவாகத்துறையின்மேலும் தனது செல்வாக்கை எவ்வாறு பயன்படுத்துகிறதென்பதை இப்போது ஆராய்வோம்.

---

1. 1937இல் தலைவர் ரூஸ்வெல்ட்டு நீதிபதிகள் 70ஆம் வயதில் ஓய்வு பெற வேண்டுமெனச் செய்த முயற்சியில் தோல்வியடைந்தார். (5ஆம் இயல், 3ஆம் பிரிவைப் பார்க்க.)

# 2. நீதித்துறையும் சட்ட மன்றமும்

சட்டத்தை இயற்றுவது சட்ட மன்றத்தின் அலுவலென்றும், ஏற்கெனவே இருக்கும் சட்டத்தைத் தனித்தனி நிகழ்ச்சிகளில் பயன்படுத்துவது பற்றித் தீர்மானிப்பது, அதாவது சட்டத்தை மீறியவர்களைத் தண்டிப்பது, நீதித்துறையின் அலுவல் என்றும் கூறினோம். ஆனால், பல அரசுகளில் நீதிபதிகள் தங்கள் தீர்ப்புகளினால் சட்டத்தையே உண்டுபண்ணுகிறார்கள் என்பதையும் பார்த்தோம். தீர்ப்புச்சட்டம் அல்லது நீதிபதி ஆக்கிய சட்டத்தை, கிரேட் பிரிட்டன் போன்ற பொது நீதி அரசுகளில் காணலாம். அதைப் பிரான்ஸ் போன்ற தனிச்சிறப்புரிமை அரசுகளில் அதிகமாகக் காண இயலாது. (ஆனால், பிரான்ஸில் நீதித்துறை மன்றங்களினின்று வேறுபட்ட ஆட்சித்துறை மன்றங்கள் அம்முறையைப் பயன்படுத்துகின்றன என்பது புதுமையாகத் தோன்றலாம்.)

நீதிபதி ஆக்கிய சட்டம் என்ற கொள்கை, முன் நிகழ்ச்சி (precedent) என்ற ஆற்றலின் அடிப்படையில் நிறுவப்பெற்றுள்ளது. அதாவது, நீதிபதிகள் வழக்குகளை விசாரிக்கும்போது, அவை போன்ற வழக்குகளில் முன்னால் நீதிபதிகள் என்ன தீர்ப்பளித்தார்களோ, அது போன்ற தீர்ப்பையே பொதுவாக அளிக்க வேண்டும். ஆனால், காலப் போக்கில் இத்தீர்ப்புகளில் மாறுபாடுகள் தோன்றலாம். அப்போது முந்திய தீர்ப்புகள் வழி காட்டியாய் மட்டும் உதவுகின்றன. இவ்வாறு ஆங்கிலோ-சாக்ஸானிய நாடுகளில், சட்ட மன்றத்தின் செயலுக்குப் புறம்பாக, புதிய சட்டம் பழைய சட்டத்துடன் இணைக்கப்படுகின்றது. நீதிபதி பழைய தீர்ப்பின் அடிப்படையில் தீர்ப்பளித்தாலும், அல்லது புதியதொரு தீர்ப்பு வழங்கினாலும், அப்போது அவர் சட்டத்தை உருவாக்குகிறார் எனக் கூறலாம். ஆகவே, சிறந்த ஆங்கில வல்லுநராகிய காலஞ்சென்ற பேராசிரியர் டைஸி, ' நீதிபதிகளின் இன்றியமையாத சட்ட ஆக்க அதிகாரத்தைப் ' பற்றிக் குறிப்பிடுகிறார். சிறந்த அமெரிக்க நீதிபதியாகிய காலஞ்சென்ற திரு. ஜஸ்டிஸ் ஹோம்ஸ், ' நீதிபதிகள் சட்டம் இயற்றுகின்றார்கள் ; இயற்ற வேண்டும், ' எனக் கூறுகிறார்.

இந்தத் தீர்ப்பு வழிச் சட்டம் பொதுநீதி அரசுகளின் சிறப்பியல்பைக் குறிப்பிட்டுக் காட்டுகிறது. இது அத்தகைய அரசுகளில் சட்டங்கள் தொகுக்கப்படுவதில்லை என்பதைக் காட்டுகிறது. அதாவது, அங்கு வறையறுக்கப்பட்ட சட்ட அமைப்பு முறை இல்லை. முக்கியமான சந்தர்ப்பங்களைத் தவிர, மற்ற வேளைகளில் நீதிபதிகள் அச்சட்ட வரம்பிற்குட்பட்டே செயலாற்ற வேண்டும் என்ற கட்டாயமும் இல்லை. பல ஐரோப்பிய அரசுகளைப் போன்று நெடுங்காலத்திற்கு

முன்னே சட்டங்கள் தொகுக்கப்பட்ட அரசுகளில் நீதிபதிகள் சட்டங்களை உருவாக்குவது நடைபெற இயலாது. எடுத்துக்காட்டாக, பிரான்ஸில் நெப்போலியன் காலத்திலிருந்தே சட்டம் தொகுக்கப்பட்டிருப்பதால் அங்கு நீதிபதிகள் தீர்ப்புவழிச் சட்டத்தை உருவாக்காதவாறு தடுக்கப்பட்டுள்ளார்கள். அவர்களுக்கு வழி காட்டச் சட்டத் தொகுப்பு இருக்கின்றது. நீதி மன்றத்தின் முன் கொண்டுவரப்பட்ட குறிப்பிட்ட வழக்கில் சட்டத் தொகுப்புத் துணைசெய்யவில்லையென்றால், நீதிபதி ஏதாவதொரு தீர்ப்பளிக்கலாம். ஆனால், வருங்கால வழக்குகளைக் கட்டுப்படுத்தாது. பொது நீதி முறையில், அத்தகைய தீர்ப்பு வருங்காலத்துக்குப் பயன்படும் சட்டமாகக் கருதப்படும். இரு முறைகளிலும் நன்மைகளும் தீமைகளும் உள்ளன. பொதுநீதி அரசுகளில் முன் நிகழ்ந்தது போன்ற வழக்குகளில் எவ்வித மான தீர்ப்பு வழங்கப்படும் என்பது வழக்கறிஞர்களுக்கு நன்கு தெரியும். அவர்கள் நீதிபதியின் மனப்போக்கையோ, அல்லது சட்டத் தொகுப்பின் தெளிவற்ற சொற்றொடர்களையோ நம்பியிருக்கவேண்டுவதில்லை. அதற்கு மாறாக, ஏராளமான முன் தீர்ப்புகள் எவ்வளவு சிக்கலாகி மயக்கத்தையும் முரண்பாட்டையும் உண்டுபண்ணுகின்றனவென்றால், உண்மைச் சட்டம் எதுவெனக் கண்டுபிடிப்பது வழக்கறிஞர்களுக்கே கடினமாய் இருக்கிறது. சட்டத் தொகுப்பையுடைய அரசுகளில் அது இல்லாத அரசுகளைவிட நீதிபதிகள் அதிக சுதந்தரத்துடன் இருக்கின்றார்கள். ஏனென்றால், அங்கு முன் தீர்ப்புகள் அவர்களைக் கட்டுப்படுத்துவதில்லை. மேலும், அவர்கள் சட்டத் தொகுப்புக்குப் புறம்பான வழக்கை விசாரிக்கும் போது, அது போன்ற வழக்கொன்றில் முன்னால் அறிவுரை சான்ற நீதிபதி என்ன தீர்ப்பளித்தார் என்று கருதாமல், நீதி வழங்குவதையே நோக்கமாகக் கொண்டு தீர்ப்பளிக்க இயலும். அதே சமயத்தில் அத்தகைய அரசுகளில் நீதிபதிகளின் அதிகாரங்கள் அதிகமாகக் குறைக்கப்பட்டுள்ளன. ஏனெனில், அங்குச் சட்டத்தை மாற்றுவதற்குச் சட்ட மன்றத்திற்கு மட்டும் அதிகாரமுண்டு. புதிய சட்டங்களை இயற்றுவதாலும், புதிய சட்டத் தொகுப்பை வரைவதாலும் சட்டமன்றம் சட்டங்களை மாற்ற இயலும். ஆனால், பொதுநீதி அரசுகளில், நீதிபதிகள் தங்கள் பகுத்தறிவாராய்ச்சியினால் புதிய சட்டத்தை உருவாக்கலாம். ஆனால், அவர்களுடைய தீர்ப்புகள் பாராளுமன்றச் சட்டங்களுக்கு முரணாய் இருக்கக்கூடாது. இவையெல்லாம் சட்ட மன்றத்தின் அதிகாரத்தைக் குறைப்பதாகக் கருதக்கூடாது. ஏனெனில், நீதிபதிகள் எவ்வளவு நன்மதிப்பிற்குரியவர்களும் புகழ்பெற்றவர்களுமாய் இருந்தபோதிலும், அவர்கள் முன்னால் வழங்கிய தீர்ப்புகளை மாற்றுவதற்கும், அல்லது சட்டத் தொகுப்பை மாற்றியமைப்பதற்கும் சட்ட மன்றத்திற்கு அதிகாரமுண்டு. ஆனால், அரசியலமைப்பு வழங்கும் அதிகாரத்துக்கு உட்பட்டே சட்ட மன்றம் செயலாற்ற வேண்டும். நீதித்துறைக்கும்

சட்ட மன்றத்திற்குமுள்ள தொடர்பை நாம் ஏற்கெனவே பார்த்த பொருள்களாகிய ஒருமுக அரசு, கூட்டாட்சி அரசு, நெகிழும், நெகிழா அரசியலமைப்புகள் ஆகியவற்றுடன் சேர்த்து ஆராய்வோமானல், அவ்வாராய்ச்சி மிக்க பயன் தரும்.

ஒருமுக அரசில் மத்திய அரசாங்கத்தின் சட்ட மன்றத்திற்குத் தலையாய அதிகாரம் உண்டென்பதைப் பார்த்தோம். அரசியலமைப்பு விதிக்கும் அதிகாரங்கள் மட்டும் அதன் அதிகாரத்தைக் கட்டுப் படுத்த இயலும். கூட்டாட்சி அரசில், அது தன் அதிகாரங்களை மாநிலங்களுடன் பகிர்ந்துகொள்வதாலும் அரசியலமைப்பு நெகிழாததாய் இருப்பதனுலும் கூட்டாட்டிச் சட்ட மன்றத்தின் அதிகாரம் வரையறுக்கப்பட்டுள்ளது. அரசியலமைப்பைப் பொறுத்த வரையில், அது நெகிழும் தன்மையுடையதாய் இருக்கும்போது சட்டமன்றத்திற்குத் தலையாய அதிகாரம் உண்டென்றும், நெகிழாத்தன்மையுடையதாய் இருக்கும் போது அதன் மேலான அதிகாரம் குறைக்கப்பட்டிருக்கிறதென்றும் விளக்கினேம். அவ்வாறு குறைக்கப்படும் போது, அரசியலமைப்புச் சட்டத்தை இயற்றுவதில் அதன் அதிகாரம் எவ்வளவு வரையறுக்கப்பட்டிருக்கிறதோ, அவ்வளவிற்கேற்ப அதன் மேலான அதிகாரமும் குறைக்கப்படுகின்றது. இந்நிபந்தனைகளை நிறைவேற்ற நீதித்துறை என்ன செய்கின்றது? ஒருமுக அரசுகளை ஆராயும் போது. ஐக்கிய அரசில் பாராளுமன்றம் இயற்றிய சட்டங்களை நீதி மன்றங்கள் மறுப்பின்றி நிறைவேற்றி வைக்கவேண்டுமென்பதைப்பார்த்தோம். குறிப்பிட்ட ஒரு வழக்கில் பாராளுமன்றச் சட்டத்திற்கும் பொது நீதிக்கும் முரண்பாடு ஏற்படுமானல், அப்போது பொது நீதி பயன்படாது. ஆயினும், எந்தச் சட்டத்திற்கும் உரை விளக்கம் தர நீதிபதிகளுக்கு ஓரளவு அதிகாரமுண்டு. ஏனெனில், ''பாராளுமன்றச் சட்டம் வழங்கும் அல்லது இணக்கம் அளிக்கும் எவ்வளவு பெரிய அதிகாரங்களுக்கும் உண்மையில் வரையறை உண்டு. ஏனெனில், சட்டத்தின் சொற்களே அவற்றிற்கு வரம்பிடுகின்றன.' ஆனல், நீதிபதிகள் அச்சொற்களின் பொருளை மீறக் கூடாது. அச்சொற்கள் பாராளுமன்றத்தின் நோக்கங்களைத் தெளிவாக அறிவிக்கவில்லையெனில், அதை இயற்றியவர்களின் கருத்துக்கு மாருன விதமாக அச்சட்டம் செயற்படக்கூடும். மேலும், ஒருமுக அரசில் மத்தியப் பாராளுமன்றத்திற்கும் அரசிலுள்ள வேறு நிறுவனங்களுக்குமிடையே நிகழும் மாறுபாடுகளை நீதிபதிகள் தீர்த்துவைப்பதில்லை. ஏனெனில், அந்த நிறுவனங்களுக்கு மத்தியச் சட்ட மன்றம் வழங்கிய அதிகாரங்களைத் தவிர வேறு அதிகாரங்கள் இல்லை.

ஆனல், கூட்டாட்சி அரசுகளில் நிலைமை வேறுவிதமாய் இருக்கிறது. இவை பலவற்றில் நீதித்துறையின் அதிகாரங்கள், சட்ட

மன்றத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, ஒருமுக அரசுகளில் இருப்பதைவிட மிகுதியாய் இருக்கின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் சட்ட மன்றத்திற்குத் தலையாய அதிகாரம் இல்லை, அங்கு அரசியலமைப்புதான் எல்லாவற்றிற்கும் மேலானது. இவ்வாறு நீதித்துறை பெற்றுள்ள அதிகாரம் அதைச்சட்டமன்றத்திற்கும் நிருவாகத்துறைக்கும் இணையான நிறுவனமாக்குகின்றது. அரசியலமைப்பைக் காப்பது கூட்டாட்சி நீதிபதிகளின் தலையாய கடமை. மாநில நீதிபதிகளும் இப்பணியை ஆற்றி வருகின்றனர்கள். அரசியலமைப்புக்கு முரணான சட்டத்தைக் காங்கிரஸாவது அல்லது மாநிலச் சட்ட மன்றமாவது இயற்றினால், அவர்கள் அதை செல்லாததெனத் தள்ளுகின்றனர்கள். அத்தகைய சட்டத்தை நீக்க அவர்களால் இயலாத போதிலும், அச்சட்டம் சார்ந்த வழக்குகள் நீதி மன்றத்தின் முன் வரும்போது அதைச் செல்லாததெனத் தள்ள வேண்டும். இவ்வாறு ஐக்கிய அரசிலுள்ள நீதித்துறையின் அதிகாரத்தைவிட அமெரிக்க ஐக்கிய நாடுகளிலுள்ள நீதித்துறையின் அதிகாரம் மேலானதாய் இருக்கின்றது.

பல்வேறு கூட்டாட்சிகளில் நீதித்துறையின் அதிகாரம் பலவகையாக வேறுபடுகிறது. எடுத்துக்காட்டாக, ஆஸ்திரேலிய நீதித்துறை அமெரிக்க நீதித்துறையைப் பெரிதும் ஒத்திருக்கின்றது. ஆஸ்திரேலியாவில் பல அதிகாரங்கள் பொதுநலக்கூட்டிற்கும் மாநிலங்களுக்கும் பொதுவான அதிகாரங்களாய் இருக்கின்றன. ஆகவே, பெரும்பாலும் கூட்டாட்சி அதிகாரங்களையும், மாநில அதிகாரங்களையும் வரையறுக்கும் அரசியலமைப்பைச் சார்ந்த வழக்குகளே உயர்நீதி மன்றத்தின் (High Court) முன் கொண்டுவரப்படுகின்றன. உண்மையில் இதில் ஆஸ்திரேலியாவுக்கும் அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கும் உள்ள முக்கிய வேறுபாடு என்னவென்றால், ஆஸ்திரேலிய உயர்நீதி மன்றம் மாநிலச்சட்டம் சார்ந்த மேல் வழக்குகளை (appeals) விசாரிக்கலாம்; ஆனால், அமெரிக்கத் தலைமை நீதி மன்றம் அவ்வாறு செய்ய இயலாது. ஜெர்மனியின் வெய்மார் குடியரசில் அரசியலமைப்புக்கு உரை விளக்கம் தருவதற்குக் கூட்டாட்சி நீதிபதிகள் பெற்றிருந்த அதிகாரம் அமெரிக்காவிலும் ஆஸ்திரேலியாவிலும் இருப்பது போல அவ்வளவு அதிகமன்று. ஏனென்னில், அங்கு மாநிலச் சட்டத்தைவிடக் கூட்டாட்சித் திட்டம் மேலானது. ஆனால், ஒரு குறிப்பிட்ட மாநிலச் சட்டம் கூட்டாட்சிச் சட்டத்திற்கு முரணானதா என்ற சிக்கல் எழும்போது கூட்டாட்சி நீதிமன்றத்தின் முன் மேல்வழக்குத் தொடரலாம்.

ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசின் அடிப்படைச்சட்டம் (1949) கூட்டாட்சிச் சட்டத்தின் இந்த மேலான அதிகாரத்தை நீக்கியது. ஆனால், நாம் முன் கூறியது போல, அது அரசியலமைப்

புக்கு உரை விளக்கம் தருவதற்கும், 'கூட்டாட்சி, மாநிலம் ஆகியவற்றின் உரிமைகளையும் கடமைகளையும் பற்றிய கருத்து வேற்றுமைகளைத் தீர்ப்பதற்கும்' ஒரு கூட்டாட்சி அரசியலமைப்பு நீதிமன்றத்தை நிறுவியது. சுவிட்ஸர்லாந்தில் அரசியமலமைப்பிற்கு உரை விளக்கம் தரும் அதிகாரம் நீதி மன்றத்திற்கு இல்லை. கூட்டாட்சி அரசுகளில் சுவிட்ஸர்லாந்தில் மட்டும் நீதி மன்றம் இந்த அதிகாரத்தை இழந்து நிற்கின்றது.

நெகிழும் அரசியலமைப்புகளுள் நீதித்துறைக்குச் சட்டமன்றத்தைவிட அதிக அதிகாரம் இல்லையென்பதைப் பார்த்தோம். கிரேட் பிரிட்டன், நியூஜீலந்து போன்ற அரசுகளில் பாராளுமன்றம் இயற்றும் எந்தச்சட்டமும் அரசியலமைப்புக்கு முரணானதாய் இருக்க இயலாது. நெகிழா அரசியலமைப்பையுடைய ஒருமுக அரசுகளில் சட்டவன்றங்கள் இயற்றிய சட்டங்கள் அரசியலமைப்புக்கு முரணானவையா எனத் தீர்மானிக்கவல்ல நீதிமன்றம் இருக்குமென எதிர்பார்க்கலாம். அச் சட்டங்கள் அரசியலமைப்பின் நிபந்தனைகளுக்கு மாறாய் இருந்தாலும், பாராளுமன்றம் தனக்கு அரசியலமைப்பு வழங்கும் அதிகாரத்தை மீறினாலும், நீதி மன்றம், அந்தச் சட்டங்களை அரசியலமைப்பிற்கு முரணானவை எனக் கூறலாம். ஆனால், எப்போதும் இவ்வாறு நடைபெறுவதில்லை. எடுத்துக்காட்டாக, இத்தாலியிலுள்ள அரசியலமைப்பு நீதிமன்றம், குடியரசின் அரசியலமைப்பின் 134ஆம் விதியின்படி 'சட்டங்களும் சட்டங்களின் ஆற்றலையுடைய செயல்களும் முறையானவையா என்பதைத் தீர்மானிக்கின்றது.' அதற்கு மாறாக, பிரான்ஸில் அரசியலமைப்பு நீதி மன்றம் இல்லை. ஆயினும், ஐந்தாவது குடியரசில் ஓர் அரசியலமைப்பு அவை உள்ளது. அது தேர்தல்களையும் குடியொப்பங்களையும் மேற்பார்வையிடுவதுடன், சட்ட ஆக்கம் சார்ந்த செய்திகளில் அறிவுரை கூறவும் அதிகாரம் பெற்றுள்ளது. 1958ஆம் ஆண்டு வெளியான அரசியலமைப்பின் 61ஆம் விதியின் முதற்பிரிவுகளில் கீழ்க்காணும் பகுதிகளைக் காணலாம்.

'அரசியலமைப்புச் சட்டங்களை அறிக்கையிடுவதற்கு முன்னும், பாராளுமன்றச் சபைகளை ஒழுங்குபடுத்துவதற்கு முன்னும், அவற்றை அரசியலமைப்பு அவையின் முன் சமர்ப்பிக்க வேண்டும், அச் சட்டங்கள் அரசியலமைப்புக்கு முரணானவையா அல்லவா என அந்த அவை தீர்மானிக்கும்.

'அதே நோக்கத்துடன், சட்டங்கள் அறிக்கையிடப்படுவதற்கு முன் குடியரசுத் தலைவர் அல்லது தலைமை அமைச்சர், அல்லது பாராளுமன்ற அவைகளுள் ஒன்றின் தலைவர் அவற்றை அரசியலமைப்பு அவையின்முன் சமர்ப்பிக்கலாம்'. ஆனால், அந்த அவை

தனது தீர்ப்பை அளித்த பின், நிலையைச் சரிப்படுத்தும் பொறுப்பை அரசாங்கத்திற்கு அல்லது பாராளுமன்றத்திற்கு விட்டுவிடுகிறது.

மேலே கூறியவற்றிலிருந்து நாம் சில முடிவுகளுக்கு வரலாம். அரசியல் முறைமைக்குட்பட்ட எல்லா அரசுகளிலும் பிற நிறுவனங்கள் தங்கள் விருப்பம் போல நீதித்துறையில் தலையிடுவதில்லை. மேலும், அங்கு நீதிபதிகளுக்குப் பதவிக் காலப்பாதுகாப்பு அளிக்கப் படுகின்றது. ஆகவே, நீதித்துறை தனது மனச்சான்றுக்கு எதிராகச் செயலாற்றத் தேவையில்லை. பெரும்பாலும், கூட்டாட்சி அரசுகளைத் தவிரப் பிற அரசுகளில் சட்ட மன்றம் இயற்றும் சட்டங்களை நீதித் துறை நிறைவேற்ற வேண்டும். பல கூட்டாட்சி அரசுகளில் கூட்டாட்சிச் சட்ட மன்றம் இயற்றிய எந்தச் சட்டமும், அரசியலமைப்பினுல் அம்மன்றத்திற்கு வழங்கப்பட்ட அதிகாரத்திற்குப் புறம்பானதாக இருக்கிறதென நீதிமன்றம் நினைக்குமானுல், அதை நிறைவேற்ற நீதி மன்றம் மறுக்கலாம். கூட்டாட்சிச் சட்ட மன்றத்திற்கும் மாநிலச் சட்டமன்றத்திற்கும் முரண்பாடு ஏற்படுமானுல், அவ்வழக்குகளையும் நீதி மன்றம் விசாரித்துத் தீர்ப்பளிக்கலாம். நீதித்துறைக்கும் நிருவாகத்துறைக்கும் இடையேயுள்ள தொடர்புகளை இவ்வளவு எளிதில் கூறிவிட இயலாது என்பதை இப்போது விளக்குவோம்.

## 3. சட்ட நீதி

ஐக்கிய அரசு, தன்னுட்சி பெற்ற பிரிட்டிஷ் குடியேற்ற உரிமை நாடுகள், அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஆகியவற்றை ஆங்கிலோ-சாக்ஸானிய நாடுகள் என வழங்கலாம். இந்நாட்டு மக்கள் அனுபவித்து வரும் அடிப்படையான சட்டமுறைப் பாதுகாப்பைச் சுருக்கமாகச் சட்டநீதி என்கிறேம். இதன் பொருளை விளக்கும் போது பேரறிஞர் டைஸி, 'எந்த மனிதனும் சட்டத்திற்கு அப்பாற்பட்டவனல்லன். ஆனுல், ஒவ்வொருவனும், எந்த நிலையில் இருந்த போதிலும், எப்பதவியை வகித்தாலும், நாட்டின் சாதாரணச் சட்டத்திற்கு உட்பட்டவனுகவே இருக்கவேண்டும். எல்லாரும் சாதாரண நீதி மன்றங்களின் அதிகாரத்திற்கு உட்பட்டவர்களே,' எனக்கூறுகிருர். இவ்வுரிமையை இப்போது அரசியல் முறைமைக்குட்பட்ட எல்லா அரசுகளின்குடிமக்களும் அனுபவித்து வருகின்றுர்கள். இதை இப்பகுதியிலும் அடுத்த பகுதியிலும் காட்டுவோம். இவ்வுரிமையை வழங்கும் அரசுகளைப் பிற அரசுகளிலிருந்து வேறு படுத்தும்போது முந்தியவற்றைப் பொது நீதி அரசுகளென்றும், இரண்டாவது வகையைத் தனிச்சிறப்புரிமை அரசுகளென்றும் வழங்குகிறேம். இவ்விரு வகைகளையும் ஆராயும் போது ஒன்றிற்குப் பிரிட்டனையும் மற்றென்றிற்குப் பிரான்ஸையும் எடுத்துக்காட்டாகக் கூறுவோம்.

சட்ட நீதி என்ற இந்த அடிப்படையில் பிரிட்டிஷ் அரசியலமைப்பு அமைந்துள்ளது. இவ்வாறு அமைவதற்கு (பெரும்பாலும் ஆவணங்கள் உரிமைகளை வழங்குவதுபோல்) அரசியலமைப்பு இதை வழங்குவதாக உறுதியளிப்பது காரணமன்று; ஆனால், இதை எப்போதும் ஏற்றுக்கொண்டதன் விளைவாக அரசியலமைப்புப் படிப்படியாக வளர்ச்சியுற்றதுதான் காரணம். டைஸி கூறுவது போல, 'அயல் நாடுகளில் அரசியலமைப்புத் தொகுப்பின் இயற்கையான பகுதியாக அமைந்திருக்கும் விதிகள் தனி மனிதரின் உரிமைகளின் பிறப்பிடமாயிராமல் அவற்றின் விளைவாகத் தோன்றுகின்றன. இவ்வுரிமைகளை நீதி மன்றங்கள் வரையறுத்து நிறைவேற்றுகின்றன. இச்சட்டம் நீதித்துறையை நிருவாகத்துறையின் தலையீட்டிலிருந்து காப்பதுடன், அதன் உறுப்பினர் ஒவ்வொருவரையும் பொறுத்தவரையில் நிருவாகத் துறையைவிட மேலான நிலைக்கு நீதித்துறையை உயர்த்துகிறது. ஏனெனில், 'தலைமை அமைச்சரிலிருந்து காவலர் அல்லது வரி வசூலிப்போர் வரை யார் என்ன குற்றம் செய்தாலும், அவருக்கு ஒரே வகையான தண்டனை அளிக்கப்படும்.' கிரேட் பிரிட்டனில் அலுவலர்கள் பலமுறை நீதி மன்றங்களின் முன்னால் நிறுத்தப்படுகின்றார்கள். அவர்கள் தங்கள் சட்ட முறையான அதிகாரத்தை மீறிச் செய்யும் குற்றங்களுக்குத் தண்டனை பெறுகின்றார்கள்; அல்லது, இழப்பீடு செய்கின்றார்கள். பண்டை நாளிலிருந்தே ஆங்கிலேயர் இவ்வுரிமையை அனுபவித்து வருகின்றனர். இதை மகா சாசனத்திலும் (1215) இன்னம் தெளிவாக உரிமை விண்ணப்பத்திலும் (Petition of Right—1628), ஆளுரிமைக் காப்புச் சட்டத்திலும் (Habeas Corpus Act—1679) காணலாம்.

இதைத் திரும்பத்திரும்ப நிறைவேற்றுவதற்குக் காரணம் என்னவென்றால், முன்னாளில் அரசர் பொது நீதிக்கு முரணான தனிச் சிறப்புரிமையைத் தமக்குரியதாக்க முயன்று வந்ததே. அதாவது, அவர் நீதிபதிகளின் தீர்ப்புக்கு எதிராக நடக்கத் தலைப்பட்டதே. மேலும், அவர் நீதிபதிகளைப் பதவியிலிருந்து நீக்கும் அதிகாரம் தம்மிடத்திலேயே இருக்கவேண்டுமெனக் கருதினர். டியூடர் அரசர்கள் தாங்கள் பெறவேண்டுமென விரும்பிய தனிச்சிறப்புரிமையைப் பெற்று அனுபவித்து வந்தார்கள். ஆனால், ஸ்டூவர்ட்டு மன்னர்கள் இவ்வுரிமைகளைத் தவறாகப் பயன்படுத்தவே, பாராளுமன்றம் தனது மரபுரிமைகளைக் காக்க முற்பட்டது. மூன்றும் ஜார்ஜ் மன்னர் அரசரின் தனிச் சிறப்புரிமையைத் திரும்ப நிலைநாட்ட இறுதி முறையாக முயன்றபோது சட்டநீதி உறுதியாக நிலைநாட்டப்பட்டது. ஜான் வில்க்ஸ் (John Wilkes) என்பார், தமது '**நார்த் பிரிட்டன்**' (The North Briton) என்ற பத்திரிகையில் அரசருடைய சொற்பொழிவைத் தாக்கி எழுதினார். அதற்காக உள் நாட்டுச் செயலாளர் (Home Secretary) பொது

ஆணை (General Warrant) பிறப்பித்து, அவரைக் கைது செய்தார். ஆனால், நீதி மன்றம் அது தவறெனத் தீர்ப்புக்கூறி, உள் நாட்டுச் செயலாளரை வில்க்ஸுக்கு 1,000 பவுன்கள் இழப்பீடு அளிக்குமாறு செய்தது. இவ்வாறு நீதி மன்றம் ஒரு சாதாரணக் குடியை அரசாங்க அலுவலரின் யதேச்சாதிகாரத்தினின்று காத்தது. மேலும், அந்த அரசாங்க அலுவலர் தமது அதிகார முறையில் அல்லது நாட்டின் நலனுக்காக அதைச் செய்ததாகக் கருதக் கூடுமாயினும், அவரைப் பொது நீதி முறையினின்று யாரும் காக்க இயலவில்லை.

ஆகவே, சட்ட நீதி நிலவும் அரசுகளில் பொது நீதி, பாராளு மன்றச் சட்டம், (நெகிழா அரசியலமைப்புகளில் தனிப்பிரிவாகக் கருதப்படும்) அரசியலமைப்புச் சட்டம் ஆகியவற்றைச் சார்ந்த வழக்குகளில் எல்லாம் நீதிபதிகளே தனிமனிதரின் உரிமைகளை இறுதியில் காக்கும் காவலர்களாய் விளங்குகிறார்கள். அரசாங்க அலுவலர்கள் சட்டத்தை மீறினால், நிருவாகத்துறை நீதிபதிகளின் தீர்ப்பை மாற்றுவதற்குத் தாங்களே ஒன்றும் செய்ய இயலாது. ஆனால், இதுவரை நிலவிவரும் சில உரிமைகளைப் பாராளுமன்றச் சட்டம் எந்நேரமும் நீக்கிவிட இயலும், (நிருவாகத்துறையின் தூண்டுதலினால் பாராளுமன்றம் இதைச் செய்யலாம்; பெரும்பாலும் செய்தும் வருகிறது.) அப்போது நீதிபதிகள் அச்சட்டத்தை நிறைவேற்றவேண்டும். சில வேளை அத்தகைய சட்டம் நிருவாகத்துறையின் சில செயல்களைக் கட்டுப்படுத்துவதற்காகவே நீதிபதிகள் பெற்றிருக்கும் அதிகாரத்தை நீக்கவும் கூடும். ஆயினும், அத்தகைய சட்டம் இயற்றப்படும் வரையிலும், அச்சட்டத்தில் குறிக்கப்பட்டுள்ள செயல்களைப் பொறுத்த வரையிலுமே நீதித்துறையின் சுதந்தரம் பாதிக்கப்படும். சட்ட நீதியின் அத்தகைய மாறுதல்களை இந்த இயலின் இறுதிப் பகுதியில் ஆராய்வோம்.

நாம் ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல, பிரிட்டனில் நிலவும் சட்ட நீதி வேறு சில நாடுகளிலும் நிலவுகிறது. தன்னாட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடுகளிலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் இருப்பது போல, பெல்ஜியத்திலும் இம்முறை பின் பற்றப்படுகிறது. இலத்தீன் அமெரிக்க நாடுகள் பலவற்றிலும் இம்முறை வெறுந்தாளிலாவது காணப்படுகிறது. இந்த அரசுகளில் எல்லாம் பல வேறுபாடுகள் இருந்தபோதிலும், இவற்றின் அரசியலமைப்புகள் சட்ட நீதியின் அடிப்படையிலே உருவாயின. அவற்றுள் சில, ஒருமுக அரசுகள்; சில, கூட்டாட்சி அரசுகள். எல்லாவற்றிலும் நெகிழா அரசியலமைப்புகள் இல்லை. சிலவற்றில் பாராளுமன்றச் சார்புள்ள நிருவாகத்துறையும் இருக்கின்றன. ஆங்கிலோ - சாக்ஸானிய அரசுகளில் சட்ட நீதி நிலவுவதற்குக் காரணம், அவையெல்லாம் ஆங்கில நாட்டினரின்

வழி வந்தோர்களால் உண்டாக்கப்பட்டதேயாகும். ஐரோப்பாக் கண்டத்தில் பெல்ஜிய நாட்டில் மட்டுமே இம்முறையைக்காண்கிறோம். ஏனெனில், 1839இல் சுதந்தரம் பெற்ற பெல்ஜியம், அதற்கு முன் தன்னுட்சியை நிறுவிக்கொண்டிருந்த நெருக்கடியான காலத்தில் பிரிட்டனுடன் தொடர்பு கொண்டிருந்தது. இலத்தீன் அமெரிக்க அரசுகள், தாங்கள் தோன்றிய இலத்தீன் அரசுகளின் மரபைப் பின் பற்றுமல், அமெரிக்க ஐக்கிய நாடுகளைப் பின் பற்றின. மற்ற நாடுகளில் சட்ட நீதி நிலவுவதன் காரணம் தெளிவாகத்தெரிகிறது. உலகின் பல பகுதிகளிலும் முதலிற்குடியேறிய ஆங்கிலேயர், தம்முடன் ஆங்கிலப் பொது நீதியின் மரபினையும் கொண்டு சென்றனர். அவர்கள் தங்கள் அரசியலமைப்புகளை வரைவதற்கு நெடுங்காலத்திற்கு முன்னரே அது சமூக அமைப்பின் ஒரு பகுதியாய் விளங்கியது. சட்ட நீதியை அறியாத ஐரோப்பிய நாடுகள், தனி மனிதரின் உரிமைகளை அரசியலமைப்பு வாயிலாகக் காக்கின்றன. ஆனால், பிரிட்டிஷ் குடியேற்ற உரிமை நாடுகளில் அவற்றைக் காக்க வேண்டிய தேவையில்லை. இந்தப் பிந்திய அரசுகளின் அரசியலமைப்புகள் சட்ட நீதியைப் பாதிக்கவில்லை ; அதற்கு மாறுக, அதைப் பலப்படுத்தின. எடுத்துக் காட்டாக, 'அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பின்படி சட்டம் நீதி இவற்றைச் சார்ந்த எல்லா வழக்குகளிலும் நீதி மன்றங்களின் அதிகாரம் செலுத்தப்படும்,' எனத் தெளிவாகக் கூறுகிறது.

சட்டநீதி நிலவாத அரசுகளைத் தனிச்சிறப்புரிமை அரசுகளென வழங்கினேம். அவற்றில் தனி வகையான ஒரு சட்டம் எவ்வாறு அரசாங்க அலுவலர்களை அலுவலாற்றும் போது காக்கிறதென்பதை இப்போது ஆராய்வோம்.

## 4. ஆட்சித் துறைச் சட்டம்

பிரெஞ்சுச் சொற்றொடராகிய 'Droit Adminitratif' என்பதை நாம் 'ஆட்சித்துறைச் சட்டம்' என்று மொழி பெயர்க்கிறோம். இதை ஆங்கிலத்தில் சரியாக மொழி பெயர்க்க இயலுவதில்லை. டைஸி கூறுவது போல, தக்க ஆங்கிலப் பதம் இல்லாததற்குக் காரணம், அம்முறையையே ஆங்கிலேயர் அறியாததுதான். பிரெஞ்சு அறிஞர்கள் அம்முறையை விளக்கும்போது ஆங்கிலேயருக்குத் தெரியாத ஒன்றை விரித்துரைக்கின்றனர்கள். ஒருவர் விளக்குவது போல, ஆட்சித்துறைச் சட்டம் என்பது, குடிகளுக்கும் ஆட்சித்துறை அதிகாரிகளுக்கும் இடையேயுள்ள தொடர்புகளை ஒழுங்குபடுத்தும் விதிகளின் தொகுதியாகும். அது அரசாங்க அலுவலருடைய நிலையைத் தீர்மானிக்கிறது. மேலும், அது அரசாங்கப் பிரதிநிதிகளாகச் செயலாற்றும் இந்த அலுவலர்களுக்கும் குடிகளுக்கும் ஏற்படும் தொடர்புகளில் குடிகளின் உரிமைகளும் பொறுப்புகளும் என்னவென்பதையும் தீர்மானிக்கிறது ;

இவ்வுரிமைகளையும் பொறுப்புகளையும் நிறைவேற்றும் முறைகளைப் பற்றியும் முடிவு செய்கிறது. சுருங்கச் சொல்ல வேண்டுமானால், பிரான்ஸில் பொதுச் சட்டத்திற்கும் தனிச்சட்டத்திற்கும் வேறுபாடு இருக்கிறது என்று சொல்லலாம். இச்சட்டப் பிரிவினால் நீதித்துறையில் ஏற்படும் விளைவு என்னவென்றால், அரசாங்கத்தின் நிருவாகத்துறை (அல்லது ஆட்சித் துறை)யின் செயல்களைச் சார்ந்த வழக்குகளை விசாரிக்கச் சாதாரண நீதி மன்றங்களுக்கு அதிகாரம் இல்லை. இவ்வழக்குகள் அரசாங்க அலுவலர்களின் உரிமைகளையும் பொறுப்புகளையும் பற்றியனவாய் இருந்தாலும், அல்லது அவர்களுடன் தொடர்பு கொள்ளும் குடியின் உரிமைகளையும் பொறுப்புகளையும் பற்றியனவாய் இருந்தாலும், அவற்றை விசாரிக்கச் சாதாரண நீதி மன்றங்களுக்கு உரிமை இல்லை.

இம்முறையின் விளைவாக 'ஆட்சித்துறை, தனது நடத்தையைப் பற்றித் தானே தீர்ப்பளிக்கும் எதேச்சாதிகார நீதிபதியாக' மாறுகின்றது. இம்முறை பிரெஞ்சு வரலாற்றிலே புதைந்து கிடக்கின்றது. 18ஆம் நூற்றாண்டில் அரசாங்கத்திற்கும் நீதி மன்றங்களுக்கும் இடையே அடிக்கடி பூசல்கள் தோன்றின. அவற்றின் விளைவாகப் புரட்சியின்போது நீதி மன்றங்கள் அரசாங்கத்தில் தலையிட்டு, அதன் வளர்ச்சியைத் தடுத்து வருவதாக மக்கள் ஐயுறத் தொடங்கினார்கள். அக்காலத்தில் அதிகாரப் பிரிவினைக்கொள்கை பரவலாய் நிலவி வந்ததால், புரட்சிக் காலத்தில் முளைத்த பல அரசியலமைப்புகள் நிருவாகத்துறை அலுவல்களையும் நீதித்துறை அலுவல்களையும் தனித்தனியாகப் பிரித்து வைத்தன. மேலும், அவை நீதி மன்றங்கள் நிருவாகத்துறையின் உரிமைகளைப் பறிக்கும் எத்தகைய முயற்சிகளிலும் ஈடுபடக்கூடாதெனவும் தடுத்தன. நெப்போலியனும் இம்முறையைப் பின் பற்றினார். இம்முறை சில மாற்றங்களுடன் இன்று வரை நிலவி வருகின்றது.

இவ்வாறு பிரான்ஸில் சாதாரண நீதி மன்றங்கள், ஆட்சித்துறை என இரு வகை நீதி மன்றங்கள் வளரலாயின. முதல் வகை நீதி மன்றங்கள், குற்ற வழக்குகளையும், தனிப்பட்ட குடிகளுக்கிடையே ஏற்படும் வழக்குகளையும் விசாரித்தன. இரண்டாம் வகை நீதி மன்றங்கள், அரசாங்கத்திற்கும் அதன் அலுவலர்களுக்குமிடையே ஏற்படும் வழக்குகளையும் அல்லது தனிப்பட்ட குடிகளுக்கும் அரசாங்க அலுவலர்களுக்குமிடையே தோன்றும் வழக்குகளையும் விசாரித்தன. இம்முறை, அரசாங்க அலுவலர்களிடமிருந்து தனிக்குடிகளைக் காப்பாற்றுவது போலத் தோன்றியது. ஆனால், பிரான்ஸில் பழைய முறையில் சில மாற்றங்கள் ஏற்பட்டிருப்பதால், இதைப்பற்றி லவல் (Lowell) என்பார் கூறுவதை முற்றிலும் ஏற்க இயலாது. அவரது கூற்றின்படி, 'அரசாங்கம் எப்போதும் தனது விருப்பம் போல நடக்கலாம். விரும்

பினல் சட்டத்தை மீற இயலும். அவ்வாறு செய்யும்போது சாதாரண நீதி மன்றங்களுக்கு அஞ்ச வேண்டுவதில்லை'. இது முற்றிலும் உண்மையன்று. ஏனெனில், 1872இல் பிரான்ஸில் ஒரு முரண் நீதி மன்றம் (Conflict Court) அமைக்கப்பட்டது. அது ஒரு வழக்குச் சாதாரண நீதி மன்றத்தின் முன் செல்ல வேண்டுமா அல்லது ஆட்சித் துறை நீதி மன்றத்தின் முன் செல்லவேண்டுமா என்பதைத் தீர்மானித்தது. சாதாரண நீதி மன்றம் தனது சொந்த அதிகாரத்தினல் ஆட்சித் துறையில் தலையிடுவதையும், ஆட்சித்துறை நீதிமன்றங்கள் சாதாரண நீதி மன்றங்களைக் கட்டுப்படுத்துவதையும் தடுப்பதற்காகவே இந்த ஏற்பாடு செய்யப்பட்டது. இந்த முரண் நீதி மன்றம் நடுவு நிலையான நிறுவனமாய் இருக்க வேண்டும் என்பதற்காக, மேலான நீதி மன்றம் (Court of Cassation) தேர்ந்தெடுக்கும் மூவரும், மேலான ஆட்சித் துறை நீதிமன்றம் (Council of State) தேர்ந்தெடுக்கும் மூவரும் ஆகிய இந்த அறுவரும் தெரிந்தெடுக்கும் இருவரும், ஒன்பதாம் உறுப்பினராக (அமைச்சரவை உறுப்பினரான) நீதி மன்ற அமைச்சரும் அதில் உறுப்பினராய் இருந்தார்கள். நீதி அமைச்சர் அதன் தலைவராய்ப் பணியாற்றினர்.

ஏற்கெனவே கூறியது போல, ஆட்சித்துறைச் சட்டமுறை பல ஐரோப்பிய நாடுகளில் பரவியிருக்கிறது. ஆனல், அங்கெல்லாம் அம் முறை பலதிறப்பட்ட வேறுபாடுகளுடன் காணப்படுகின்றது. எடுத்துக் காட்டாக, ஜெர்மனியில், பேரரசின் உறுப்புகளாகிய ஒவ்வொரு தனி அரசிலும் அரசாங்க அலுவலரைக் காக்க ஆட்சித்துறைச் சட்டம் ஏற்கெனவே நிலவி வந்தது. 1871ஆம் ஆண்டின் பேரரசு அரசியலமைப்பின்படி, 'புந்தஸ்ராத்' (மேல் சபை) பேரரசின் முக்கிய ஆட்சித்துறை அவையாக அமைக்கப்பட்டது. வெய்மார் குடியரசின் அரசியலமைப்பிலும் ஆட்சித்துறை நீதி மன்றங்களுக்கும் சாதாரண நீதி மன்றங்களுக்கும் இடையே வேறுபாடு காணப்பட்டது. சுவிட்ஸர்லாந்திலும் இவ்வேறுபாட்டைக் காணலாம். ஆனல், இங்கு நீதித்துறை முற்றிலும் சட்ட மன்றத்திற்கும் நிருவாகத்துறைக்கும் பணிந்திருக்கிறது. ஆட்சித்துறை அதிகாரம் கூட்டாட்சி அவை (நிருவாகத்துறை)யிடம் இருக்கிறது. ஆனல், கூட்டாட்சிப் பேரவைக்கு (சட்டமன்றத்திற்கு) முறையீடு செய்யலாம். இத்தாலியில் ஆட்சித்துறை நீதி மன்றங்களுக்கும் சாதாரண நீதிமன்றங்களுக்கும் வேறுபாடு உண்டு. ஆனல், பிரான்ஸில் இருப்பது போன்ற வேறுபாடுகள் இல்லை.

## 5. இருமுறை நீதித்துறைகளுக்கும் ஓர் ஒப்புமை

இந்த இரு சட்ட முறைகளும் முன்பு இருந்த நிலையையும் இப்போது இருக்கும் நிலையையும் ஆழ்ந்து ஆராய்ந்து பார்க்கும் போது,

இவற்றிற்குள்ள உண்மையான ஒற்றுமைகளும், மேலெழுந்தவாருன வேற்றுமைகளும் நம்மை வியப்படையச் செய்கின்றன. காலப் போக்கிலுைம், அரசியல் அமைப்புத் தடைகளின் வளர்ச்சியினுலும் ஐரோப்பிய நாடுகளின் ஆட்சித்துறை நீதி மன்றங்கள்—சிறப்பாக பிரான்ஸிலுள்ளவை—தங்கள் முந்திய வரையிறந்த நிலையை இழந்து விட்டன. எடுத்துக்காட்டாக, நெப்போலியன் காலத்தில் அரசு அவை (Council of State) ஆட்சித்துறை வழக்குகளைத் தீர்ப்பதில் யதேச்சாதிகாரம் செலுத்தி வந்தது. 1830இலும் 1848இலும் அங்கு ஜனநாயகப் போக்குள்ள புரட்சிகள் நடைபெற்ற போதிலும், சாதாரணச் சட்ட முறை நிருவாகத்துறையைக் கட்டுப்படுத்த இயலாமல் இருந்தது. ஆனல், இரண்டாவது பேரரசு (1852—1871) வீழ்ச்சியடைந்த பிறகும் மூன்ருவது குடியரசின் காலத்திலும் பல மாற்றங்கள் நிகழ்ந்தன. நாம் மேலே விளக்கியவாறு, முரண் நீதி மன்றத்தில் ஒரே எண்ணிக்கையுள்ள சாதாரண நீதி மன்றத்தின் பிரதிநிதிகளும் அமர்ந்திருந்தார்கள். ஆயினும், அதன் தலைவர் அரசாங்கத்தின் உறுப்பினராய் இருந்ததால், நிருவாகத்துறையின் நலன்கள் காக்கப் படுமென்பது நன்கு தெரிந்தது.

மேலும், நாம் ஆங்கில முறையை வரலாற்றுக் கண்கொண்டு பார்ப்போமானல், 16, 17ஆம் நூற்ருண்டுகளில் நிலவிய கருத்துகள் ஆட்சித்துறைச் சட்ட முறை போன்ற ஒன்றை நிறுவுவதற்கு முற்றிலும் எதிராய் இருந்தன என்று கருத இயலாது. ஆட்சித்துறைக்கு முடியுரிமையுள்ள அதிகாரம் (Discretionary Power) உண்டென்றும் அதைக் கட்டுப்படுத்த எந்த நீதிமன்றத்திலுைம் இயலாதென்றும் வற்புறுத்திக் கூறியவர்கள் டியூடர்களையும் ஸ்டூவர்ட்டுகளையும் ஆதரித்தார்கள். எடுத்துக்காட்டாக, விண்மீன் மன்றம், (Star Chamber), வடநீதி மன்றம் (Council of the North), உயர் ஆணைச் சமய நீதி மன்றம் (Court of High Commission) ஆகியவை முற்றிலும் நிருவாகத்துறையின் அதிகாரத்தில் இருந்தன. அக்காலத்தில் அரசரே நிருவாகத்துறையாய் இருந்தார். ஸர் பிரான்ஸிஸ் பேக்கன் (Sir Francis Bacon) போன்ற வழக்கறிஞர்களுக்கு முழு அதிகாரம் வழங்கியிருந்தால், அவர்கள் பொதுச் சட்டத்திலிருந்து மாறுபட்ட ஆட்சித்துறைச் சட்ட முறையை இங்கிலாந்திலும் நிறுவியிருப்பார்கள். ஆனல், உள் நாட்டுப் போரில் ஸ்டூவர்ட்டுகள் தோல்வியடைந்ததாலும், 'சட்டத்தின் முன் எல்லாரும் சமம்,' என்ற கொள்கையை மக்கள் மரபாக மதித்து வந்தமையாலும், அவர்களின் நோக்கம் நிறைவேறவில்லை. 1688ஆம் ஆண்டுப் புரட்சியின் விளைவாகத் தோன்றிய சட்ட முறை ஏற்பாடுகள் இக்கொள்கையைப் பலப்படுத்தின.

பொது நலத்திற்கான சட்டங்களை இயற்ற வேண்டுமென்ற கொள்கை வளர்ச்சியடையவே, பிரிட்டனில் நிருவாகத்துறை அதிக

அதிகாரங்களைப் பெறத்தொடங்கியதென்பதை முன்பு பார்த்தோம். தேசீய ஈட்டுறுதி (National Insurance) போன்ற சமூக நலப் பணிகளை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். இக்கால ஜனநாயக முறையில் இது தவிர்க்க இயலாத போக்காய் இருக்கின்றது. தொழில் வளம் பெருகிய பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடுகள் போன்ற சமுதாயங்களில் சட்டமன்றங்களின் பளு நாளுக்குநாள் அதிகரித்துக்கொண்டே செல்கின்றது. ஏனெனில், அவை சமூக நலனுக்கான சட்டங்கள் பல இயற்றி வருகின்றன. அச்சட்டங்கள் செயற்படும்போது ஏற்படக்கூடிய எதிர்பாரா நிகழ்ச்சிகளைப் பற்றிய விவரங்களையெல்லாம் சட்டங்களில் கொடுக்க இயலாது. இதன் விளைவாக 'ஆட்சித் துறை நிறுவனங்கள் நீதி வழங்குவதுமல்லாமல், நீதி மன்றங்கள் அவற்றின் செயல்களை ஆராயாதவாறு தடுக்கும் வகையில் அலுவலாற்றுகின்றன.' எடுத்துக்காட்டாக, பிரிட்டனில் சட்டத்தில் குறிப்பிட்ட ஒரு முறை விவரமாகக் கூறப்படவில்லையென்றால், அதைச் செயற்படுத்தும் அரசாங்கத்துறை, தான் சிறந்ததெனக் கருதும் முறையைப் பயன்படுத்தலாம்; அப்போது நீதி மன்றங்கள் அதில் தலையிட இயலாது. அல்லது சட்டத்தில் ஒரு முறை சுருக்கமாகக் கூறப்பட்டிருந்தாலும், அப்போதும் பெரும்பாலும் நிருவாகத்துறை நீதித்துறையின் தலையீடின்றித் தனித்தே இயங்குகிறது. எடுத்துக்காட்டாக, 1911 ஆம் ஆண்டு நிறைவேறிய தேசீய ஈட்டுறுதிச் சட்டம் கருவூலத்தார் நியமித்த ஈட்டுறுதி ஆணையாளர்களின் குழுவொன்றை நிறுவியது. இந்த ஆணையாளர்கள் ஒழுங்கு முறை விதிகளை இயற்றும் அதிகாரமும் நீதித்துறை அதிகாரமும் பெற்றிருந்தார்கள். இச்சட்டத்தின்படி ஆணையாளர்களே பிணக்குகளைத் தீர்த்துவைக்கவேண்டும். அதற்கு மேல் அறிவுரையாளர் மன்றத்திற்கு (Court of Referees) முறையீடு செய்யலாம். அதற்கும் மேலாக, நடுவரிடம் (Umpire) இறுதி முறையீடு செய்யலாம். இவ்வாறு சாதாரண நீதி மன்றங்களில் மேல் வழக்குத் தொடர இயலுவதில்லை. மேலும், ஆணையாளர், அறிவுரையாளர், நடுவர் ஆகிய இருவர்களுள் எவரும் நீதிபதியாய் இருந்ததுமில்லை. இதே போல, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் 'எல்லாக் குடி புகுதல் (Immigration) வழக்குகளிலும் தொழில் துறைச் செயலாளரின் தீர்மானங்களே முடிவானவை,' எனத் தலைமை நீதி மன்றம் தீர்ப்பளித்துள்ளது.

இவை நிகழ்வதற்குக் காரணம், இத்தகைய சட்டங்களை ஆயத் திறமையுள்ள ஆட்சித்துறை அறிவு தேவையாயிருப்பதே. இத்தகைய அறிவைச் சாதாரண நீதிபதிகளிடம் காண்பதரிது. மேலும், அரசாங்கத்தின் அலுவல்கள் பெருகி வருவதால், ஆட்சித்துறை அவற்றை ஆற்ற வேண்டியிருக்கிறது. ஆகவே, அத்துறைக்கு அதிகாரங்கள் வழங்கவேண்டிய தேவை ஏற்படுகிறது. அது ஏராளமான

அலுவல்களை ஆற்ற வேண்டியிருப்பதால், அவற்றை விரிவுபடுத்துவதற்கும், அவற்றைப்பற்றி விரைவாக முடிவு செய்வதற்கும் இந்த அதிகாரங்கள் தேவைப்படுகின்றன. சட்ட நீதியின் பெருங்குறைபாட்டை நாம் நெருக்கடிக்காலங்களில் காண்கிறோம். எடுத்துக்காட்டாக, இரு உலகப் போர்களின்போது, பிரிட்டனில் பாதுகாப்பு விதிகளின்படி, நீதித்துறைக்குப் புறம்பாகப் பல புதிய தனி நீதி மன்றங்கள் நிறுவப்பட்டன. 'இவ்வாறு விரிந்துகொண்டே செல்லும் நிருவாகத்துறை வரம்பு கடந்து செல்வது' தீங்கு விளைவிக்கும். அதைக் கவனமாகப் பார்த்துவரவில்லையென்றால், அது உரிமைகளை அழித்து விடக்கூடும். புகழ் பெற்ற ஆங்கில நீதிபதியான காலஞ்சென்ற ஸாங்கே பிரபு (Lord Sankey) கூறியது போல, 'அரசரின் தனிச் சிறப்புரிமையிலிருந்து தப்பிய நாம் அமைச்சர்களின் ஒழுங்குமுறை விதிகளுக்கு உட்படுவோமென்றால் அது வியப்பையே தருகின்றது.'

அதற்கு மாறாக, ஆட்சித் துறைச் சட்டத்திற்கும் சாதாரணச் சட்டத்திற்கும் வேறுபாடு இருக்கும் நாடுகளில் அரசாங்க அலுவலர்க்கு மட்டுமன்றித் தனிக்குடிகளுக்கும் பாதுகாப்பு அளிக்கப்படுகின்றது. குடிகளுக்கும் அலுவலர்களுக்கும் இடையேயுள்ள தொடர்பும் தெளிவாகத் தெரிகின்றது. பிரான்ஸில் இரண்டாவது உலகப் போர் தொடங்கும் வரையில் ஆட்சித்துறை நீதிமன்றங்களில் வழக்கிற்காக மக்கள் அதிகப் பணம் செலவழிக்கவேண்டிய தேவை இல்லாதிருந்தது; குறைந்த காலத்தில் வழக்குகள் முடிந்தன; அவற்றின் நடைமுறையும் (Procedure) எளிதாய் இருந்தது. படை மன்ற வழக்கில் (Court-martial) தீர்ப்புச் சான்றோர் குழு விசாரணையின் (Trial by Jury) நற்பயன்களைப் பெற இயலாவிட்டாலும், அம்முறையில் வழக்குகள் நேராகவும் விரைவாகவும் விசாரிக்கப்படுவதால்,போர் வீரர்கள் அதையே விரும்புவது போல, பிரெஞ்சு மக்களும் ஆட்சித் துறை நீதி மன்ற வழக்குகளை விரும்பினர்கள். இக்காலச்சூழ்நிலையில் ஆட்சித்துறைச் சட்டம் நிலவும் நாட்டில் குடிகளுக்குப் போதிய பாதுகாப்பு அளிக்க இயலுவதில்லை எனக் கூறினல், அது மிகைபடக் கூறுவதாகும். பிரான்ஸில் அலுவலரின் தவற்றைப் 'பணித்துறைத் தவறு'(Fault of Service)என்றும்,'தனிப்பட்டவரின் தவறு' (Personal fault) என்றும் வேறுபடுத்துகின்றனர். இதன் பயனுகக் குடிகள் அலுவலரின் அளவு கடந்த ஆர்வத்தினுல் விளையும் தீமைகளிலிருந்து காப்பாற்றப்படுவதுடன், அலுவலரும் அச்சமின்றித் திறமையுடன் செயலாற்ற வழி ஏற்படுகின்றது.

ஆகவே, இக்காலத்தில் பொதுநலத்திற்கான சட்டங்களை இயற்ற வேண்டிய தேவை ஏற்படுவதால், பொது நீதி அரசுகளில் சட்ட நீதியைத் தளர்த்துகின்றனர். துறைத் தலைவர்களுக்கு நீதி வழங்கும் அதிகாரத்தை அளிப்பதால் ஆட்சித்துறைச் சட்டத்தின் சில குறை

பாடுகள் தோன்றுகின்றன. மேலும், மக்கள் ஆட்சித்துறைச் சட்டத்திற்கும் சாதாரணச் சட்டத்திற்குமுள்ள வேறுபாட்டின் நற்பயன்களையும் பெறுவதில்லை. பிரிட்டனில் ஆட்சித்துறைப் போக்கை எதிர்த்தவர்கள் இருவகைச் சீர்திருத்தங்களை இம்முறையில் புகுத்த வேண்டுமெனக் கூறுகின்றார்கள். முதலாவது, ஆட்சித்துறைத் தனி நீதிமன்றங்கள் அமைக்கப்படவேண்டுமானால், அவற்றில் நீதி வழங்குபவர்கள் நீதி மன்றப்பயிற்சி பெற்றவர்களாய் இருக்க வேண்டும். மேலும், அவர்கள் நிருவாகத் துறையின் அதிகாரத்திற்கு உட்பட்டவர்களாய் இருக்கக் கூடாது. அதாவது, அதற்கென நிறுவப்படும் மன்றங்களில் அனுபவ முதிர்ச்சி பெற்ற நீதிபதிகள் நீதி வழங்க வேண்டும். இரண்டாவது, ஆட்சித்துறை நீதி மன்றத்திலிருந்து அல்லது அமைச்சரின் தீர்ப்பிலிருந்து சாதாரண நீதி மன்றத்திற்கு மேல் வழக்குத் தொடர உரிமை இருக்க வேண்டும். இவ்வாறு தனி மனிதனின் உரிமைகளைக் கவரும் தீங்குகளைக் குறைக்க வேண்டும். சட்ட நீதியைத் தளர்த்தும்போது இத்தீங்குகள் தோன்றுவது இயல்பு.

இவ்வாறு சட்டநோக்கிலும் வரலாற்றுப் போக்கிலும் வேறுபாடுகள் இருந்த போதிலும், நீதித்துறை வாயிலாகக் குடிகளின் உரிமைகளைக் காப்பதில் அரசியல் முறைமைக்கு உட்பட்ட இக்கால அரசுகளுக்கிடையே அதிக வேறுபாடுகள் இல்லையெனக் கூறலாம். நீதிபதி நடுவுநிலை தவறாது இருப்பதற்காக அவை அவரைக் கட்சி உணர்ச்சிகளின் மாற்றங்களுக்கு அப்பாற்பட்டவராக அமர்த்துகின்றன; மேலும், அவருக்குப் பதவிக்காலப் பாதுகாப்பும் அளிக்கின்றன. ஆனால், குற்றத்திற்காகவும் ஊழலுக்காகவும் அவரைப் பதவியினின்று நீக்கலாம். பொது நீதியின் அடிப்படையில் அமைக்கப்படும் சட்ட முறைகளையுடைய அரசுகளில், சட்டநீதி நிருவாகத்துறையைப் பிற நிறுவனங்களுடன் சமமாகக் கருதுகிறது. அங்கு நிருவாகத் துறை தன் செயல்களுக்குப் பொறுப்புள்ளதாய் இருக்கிறது. ஆனால், அதன் செயல்களுக்கு அதிகார பூர்வமான காரணங்கள் காட்டினால், சட்டநீதி அவற்றை ஏற்றுக்கொள்வதில்லை. ஆட்சித்துறைச் சட்டம் நிலவும் தனிச்சிறப்புரிமை நாடுகளில், நிருவாகத்துறை சாதாரண நீதி மன்றங்களின் அதிகாரத்திற்குச் சில வகைகளில் கட்டுப்படாதிருக்கிறது. அங்கு அலுவலர் ஆட்சித்துறை நீதி மன்றத்திற்குப் பொறுப்புள்ளவராய் இருக்கிறார். இக்கால அரசுகளில் பொது நலம் பேணும் சட்டங்கள் இயற்றப்படுவதால், சட்டநீதி பாதிக்கப்படுகின்றது. அவை காரணமாக, அலுவலர்களுக்கு வரையிறந்த அதிகாரங்கள் அளிக்க வேண்டிய தேவை ஏற்படுகின்றது. இதனால், நடைமுறையில் சாதாரணச்சட்டம் துறைத்தலைவர்களைக் கட்டுப்படுத்த இயலாமல் போகிறது. ஆனால், குறிப்பிட்ட பாராளுமன்றச் சட்டத்தைப் பொறுத்த வரையிலேதான் இவ்வாறு நடைபெறுகிறது. தனிச்

சிறப்புரிமை அரசுகளில் அலுவலர்களைக் காக்கத் தனி முறை இருந்த போதிலும், அதில் பல கட்டுப்பாடுகள் இருப்பதால், அது சாதாரணக் குடிகளின் உரிமைகளைப் பெரிதும் பாதிப்பதில்லை.

தொகுக்கப்பட்ட சட்டத்தையும் ஆட்சித்துறைச் சட்டத்தையும் உடைய நாடுகளைவிட, பொது நீதி அரசுகளில் சிறந்த சட்டமுறை நிலவுகிறதெனப் பொதுவாகக் கூறலாம். இதற்குக் காரணம் என்ன வென்றால், பொதுநீதி அரசுகளில் நீதிபதிகள் சட்ட ஆக்க அலுவலை ஆற்ற இயலுவதே. ஆனால், ஆட்சித்துறைச் சட்டம் நிலவும் நாடுகளில் இதைச் செய்யாதவாறு சட்டத் தொகுப்பு, நீதிபதிகளைக் கட்டுப்படுத்துகிறதுமல்லாமல், ஆட்சித்துறை நீதி மன்றங்களுக்குப் பல வழக்குகளைத்தீர்க்கும் அதிகாரத்தையும் வழங்குகிறது. உண்மையில் இந்நீதி மன்றங்கள் நிருவாகத்துறையின் கட்டளையின்மேல் சட்டங்களை ஆக்குகின்றன. இதன் விளைவாகத் தனிச் சிறப்புரிமை அரசுகளில் ஒரு விதத்தில் நீதி மன்றங்கள் சட்டங்களை இயற்றுகின்றன எனலாம். இதனால், சட்டங்களைத் தொகுப்பது நடைபெறுகின்றது. வேறு விதமாகச் சொல்ல வேண்டுமானால், சட்டவியல் (முன்நிகழ்ச்சியின் அடிப்படையில் அமைக்கப்பட்ட சட்டம்) பொது நீதி அரசுகளின் தனிப்பண்பாய் இருக்கிறதென்றும், தனிச்சிறப்புரிமை நாடுகளில் (நீதித் தீர்ப்பினின்று வேறுபட்ட) அரசியல் தீர்மானங்கள் முக்கிய இடம் பெறுகின்றன என்றும் கூறலாம். 'ஜனநாயக உரிமைகளைக் காப்பதில் நீதிபுதிகள் சிறந்தவர்களா, அல்லது அரசியல் வாதிகள் சிறந்தவர்களா?' என்னும் கேள்விக்கு எளிதில் விடையளிக்க இயலாது. ஆயினும், ஜனநாயக உரிமைகள் இறுதியில் மக்களிடமே இருக்கவேண்டுமென்றும், அந்த உரிமைகளைப் பாதுகாக்கும் அலுவலில் மக்களுக்குத் துணை செய்வதற்கு அரசியலமைப்புக்குட்பட்ட இக்கால அரசியல் நீதிபதிகளும் அரசியல் வாதிகளும் தேவைப்படுகின்றார்கள் என்றும் திட்டமாகக் கூறலாம்.

## படிக்க வேண்டிய நூல்கள் :

1. பிரைஸ் (Bryce) : American Commonwealth : தொகுதி I, இயல், 22–4.

2. டைஸி (Dicey) : (1) Law of Constitution, இயல், 4–7, 12-13, முகவுரை (4); பின் இணைப்பு, 1, 2

3. ஃபைனர் (Finer) : (1) Modern Government, இயல், 35-6

(2) Major Governments of Modern Europe, இயல், 4, 18

4. ஜென்னிங்ஸ் (Jennings) : (1) Law and Constitution இயல், 6, 7

(2) Parliament, இயல், 14

5. லாஸ்கி (Laski) : Government of Politics, இயல், 10

6. ஷ்வார்ட்ஸ் (Schwartz) : American Constitutional Law, இயல், 8, 11

7. ஸிட்ஜ்விக் (Sidgwick) : Elements of Politics, இயல், 24

8. ஸிங்க் (Zink) : Government in United States, இயல், 23-4

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள்:

1. ஆலன் (Allen) : Law and Order

2. கெஸ்ட் (Guest) : Jurisprudence

3. ஹெவார்ட்டு (Hewart) : The New Despotism

4. பாட்டர் (Potter) : American Government

5. ரிட்ஜஸ் (Ridges) : Constitutional Law of England

## கட்டுரைக்கேற்ற பொருள்கள் :

1. 'அதிகாரப் பிரிவினை என்பது அதிகாரச் சமநிலை அன்று,' என்ற விளக்கத்தை நீதித்துறையோடு அரசாங்கத்தின் மற்றிரு துறைகளையும் ஒப்பிட்டு ஆராய்க.

2. 'நன்னடத்தையுடன் இருக்கும் வரை நீதிபதிகள் பதவியில் இருக்கவேண்டும்,' என்பது நல்லதொரு விதி என ஏன் கூறுகிறோம் ?

3. 'நீதிபதிகள் சட்டம் இயற்றுகின்றனர்; இயற்றவேண்டும் : இது ஆங்கிலோ - ஸாக்ஸானிய அரசுகளில் எவ்வாறு நடைபெறுகின்றது ?

4. சாதாரண ஒருமுக அரசிலும், சாதாரணக் கூட்டாட்சி அரசிலும் நீதித்துறையின் அதிகாரங்களை ஒப்பிடுக.

5. 'சட்டநீதி' என்பது என்ன? அது பிரிட்டன், தன்னாட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடுகள், அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஆகியவற்றில் எவ்வாறு நடைபெறுகின்றது?

6. 'இந்த அரசியலமைப்பின்படி சட்டம், நீதி சார்ந்த எல்லா வழக்குகளிலும் நீதித்துறைக்கு அதிகாரம் உண்டு.' அமெரிக்க ஐக்கிய நாடுகளில் காணப்படும் இச்சொற்களின் முக்கியத்துவம் என்ன?

7. 'ஆட்சித்துறைச் சட்டம்' என்பது என்ன? அது செயற்படும் விதத்தை விளக்குக.

8. இங்கிலாந்தில் பல்வேறு காலங்களில் ஆட்சித்துறைச் சட்டத்தை நிறுவச் செய்த முயற்சிகளெல்லாம் தோல்வியுற, பிரான்ஸில் மட்டும் இன்னம் அது நிலவக் காரணம் என்ன?

9. இக்காலத்தில் சமூக நலன் சார்ந்த சட்டங்கள் காரணமாகச் சட்ட நீதியின் தன்மை சிறிது சிறிதாக ஆங்கிலோ - ஸாக்ஸானிய நீதி முறையினுள் நுழைவதற்குக் காரணம் என்ன?

10. 'சட்ட நீதி', 'ஆட்சித்துறைச் சட்டம்' ஆகிய இவற்றின் நன்மை தீமைகளை ஒப்பிடுக.

## மூன்றும் பகுதி

# நாட்டுணர்ச்சியும் பன்னாட்டு ஒற்றுமை உணர்ச்சியும்

# 14. பொங்கி எழும் நாட்டுணர்ச்சி

## 1. முன்னுரை

இதுவரை நாம் அரசுகளின் உட்புற அமைப்பையும் நிறுவனங்களையும் பார்த்தோம். ஆனால், பன்னாட்டுத் தொடர்புகளையும் அவற்றின் சிக்கல்களையும் நாம் ஆயவில்லையெனில், அரசியலமைப்பைச் சார்ந்த அரசியலின் ஒப்பீட்டு ஆராய்ச்சி முழுமை பெறாது எனலாம். உண்மையில் நாம் அரசுகளின் வெளிப்புறத் தொடர்புகளை ஆராயும்போது நமது கால அரசியல் நிறுவனத்தின் முக்கிய இயல்பினை ஆராய்கின்றோம். இக்காலச் சூழ்நிலையில் எந்த நாடும் பிற நாடுகளின் தொடர்பின்றித் தனது நலத்தை வளர்க்க இயலாது. ஏனெனில், இன்று பொருளாதாரத் துறையில் நாடுகள் ஒன்றையொன்று சார்ந்திருப்பதுமல்லாமல், அவற்றிற்கிடையே பிணக்கம் ஏற்படும்போது அவற்றின் உட்புற அரசியல் நிறுவனங்கள் சிதைந்துவிடவுங்கூடும்.

ஆகவே, பன்னாட்டுத் தொடர்புகளில் ஏற்படும் சிக்கல்களைத் தீர்ப்பதில்தான் ஒவ்வொரு நாட்டின் வருங்கால நல்வாழ்வும் அடங்கியிருக்கின்றது. எனவே, அரசுகளின் உட்புற அரசியலமைப்புகளை ஆயும்போது அவற்றின் வெளித்தொடர்புகளை ஒழுங்குபடுத்தும் முறைகளையும் ஆயவேண்டிய தேவை இயற்கையாகவே எழுகின்றது.

இருபதாம் நூற்றாண்டில் அறிவியல் துறையிலும் தொழில் நுட்பத் துறையிலும் ஏற்பட்டுள்ள மாபெருமாற்றங்கள் நாடுகளுக்கிடையேயுள்ள தொலைவினை அழித்து, அவற்றிடையே நெருங்கிய தொடர்பை

ஏற்படுத்தி வருகின்றன. ஆயினும், நெருங்கிய இத்தொடர்பு காரணமாக நாடுகளிடையே மிகுந்த ஒற்றுமையுணர்ச்சி தோன்றி வருகிற தெனக் கூற இயலாது. உண்மையில் தொழில் துறை வளர்ச்சி காரணமாக உலகின் ஒரு மூலையில் நிகழும் பூசல், உடனே பல நாடுகளுக்கிடையே நெருக்கடியை உண்டு பண்ணி, மனித நாகரிகத்தையே அழித்துவிடுவது போல அச்சுறுத்தி வருகின்றது. சுருங்கக் கூற வேண்டுமெனில், தொழில் துறை வளர்ச்சிக்கேற்ப உலக அரசியல் நிறுவனம் வளர்ச்சி பெறவில்லை. அறிவியல் வளர்ச்சி காரணமாக ஒற்றுமையுணர்ச்சி வளர வேண்டுமென்றாலும், உலக நாடுகள் காலத்திற்குப் பொருந்தாத தேசீயக் கொள்கையைப் பின்பற்றுவதால் அவ்வுணர்ச்சி தடைபடுகின்றது.

பெரும்பாலும் உலகப் போர்கள் இரண்டின் விளைவாகவே இந்தக் குழப்ப நிலை ஏற்பட்டுள்ளது. ஏனெனில், அவை அறிவியல், தொழில் நுட்பம் ஆகியவற்றின் வளர்ச்சியைத் துரிதப்படுத்தியதுடன், பெரும் பேரரசுகளை அழித்து, அயல் ஆட்சியிலிருந்த நாடுகளை விடுவித்து, முந்திய பேரரசுகளின் அரசியல், பொருளாதார நிலையைச் சீர்குலைத்தன. குறிப்பாக, இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு, முந்திய உலக நிலையில் ஏற்பட்ட இந்தச் சீர்குலைவுகள் காரணமாக மாபெரு விளைவுகள் ஏற்பட்டன. ஒரு புறம், அடிமைத்தனம் நீங்கி உரிமை பெறும் புதிய அரசுகள் புதியதொரு தேசீய உணர்ச்சியினால் உந்தப்படுகின்றன. மறு புறம், குடியேற்ற நாடுகளை இழந்த மேற்கு ஐரோப்பிய அரசுகள் பொருளாதார ஐக்கியம் வாயிலாக அரசியல் ஐக்கியமென்னும் திசை நோக்கிச் செல்கின்றன. இப்போக்குப் பழைய தேசீயக் கொள்கைக்கு முரணாய் இருக்கின்றது. உலகக் கட்டுப்பாட்டிற்கேற்ற நல்லதொரு முறையைக் காண வேண்டுமெனில், நாடுகள் இந்தத் தெசீய, பொருளாதாரச் சிக்கல்களைத் தீர்க்க வேண்டும். ஆகவே, ஐக்கிய நாடுகளின் சங்கத்தைப் பற்றிப் பார்ப்பதற்கு முன், முதலில் அவற்றை நுணுகிப் பார்த்தல் பயன் தரும். அவை ஐக்கிய நாடுகளின் சங்கத்தைப் பெரிதும் பாதித்து வருகின்றன.

## 2. மத்தியக்கிழக்கில் நாட்டுணர்ச்சி

முதல் உலகப் போர் எவ்வாறு ஆஸ்திரிய – ஹங்கேரியப் பேரரசைச் சிதைத்து ஐரோப்பாவில் பல புதிய அரசுகளை உருவாக்கியதென்பதைப் பார்த்தோம். ஆட்டோமன் பேரரசு அழிந்ததனால் மத்தியக்கிழக்கிலும் சிதைவு ஏற்பட்டது. புதிய துருக்கியிலும், அராபிய நாடுகளிலும் தேசீய உணர்ச்சி பொங்கி எழுந்தது. துருக்கி குடியரசாய் மாறியதென்பது நினைவிலிருக்கலாம். அது இஸ்டான்

புல்லையும் அதைச் சுற்றியுள்ள நிலப்பகுதியையும் தவிர, ஆசியா மைனருக்குள்ளே அடைபட்டுக் கிடந்தது. முன்பு ஆட்டோமன் பேரரசிலிருந்த அராபிய நாடுகள் துருக்கியின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றன. அவை தாற்காலிகமாகச் சர்வதேச சங்கத்தின் ஆட்சியுரிமையின்கீழ் வைக்கப்பட்ட போதிலும், உலக நாடுகள் அவை தனி நாடுகளென ஏற்றுக்கொண்டன. ஈராக்கு (மெசபொட்டேமியா), (பிறகு ஜார்டன் என வழங்கப்பட்ட) டிரான்ஸ் ஜார்டன், பாலஸ்தீன் ஆகிய நாடுகளின் ஆட்சியுரிமையை (Mandate) பிரிட்டனும், ஸிரியா, ஹெஜாஸ் (Hejaz) ஆகியவற்றின் ஆட்சியுரிமையைப் பிரான்ஸும் பெற்றன. தேசீய உணர்ச்சியின் வளர்ச்சி காரணமாக ஆட்சியுரிமை பெற்ற நாடுகள் தமக்குக் கீழிருந்த அந்நாடுகளைக் கட்டுப்படுத்துவது கடினமாய் இருந்தது. 1935இல் பிரிட்டன் ஈராக்கிலிருந்து இறுதியாக வெளியேறியது. ஆனால், அது ஜார்டனில் இன்னம் சில காலம் ஆட்சியுரிமை செலுத்தி வந்தது. 1946ஆம் ஆண்டு வரை ஜார்டன் முழு விடுதலை பெறவில்லை. அரேபியாவின் நடுவிடமாய்த் துலங்கிய ஹெஜாஸில் முகமதியரின் திருத்தலங்களாகிய மெக்கா, மெதினா ஆகிய நகரங்கள் இருந்தன. பிறகு அது 'நெஜ்ட்' (Nejd) என்ற பகுதியுடன் இணைந்து, 'ஸாதி அரேபியா' எனும் முடியரசாய் மலர்ந்தது. 1932இல் ஸாதி அரேபியா இறைமை உரிமை பெற்றது. பிரான்ஸ் 1943இலேதான் ஸிரியாவுக்குச் சுதந்தரம் அளித்தது.

பிரிட்டிஷ் ஆட்சியுரிமையின்கீழிருந்த பாலஸ்தீன் ஒரு பெரும் பிரச்சினையாய் இருந்தது. ஏனெனில், இங்கு நாட்டுணர்ச்சி கொதித்துக் கொந்தளித்துக்கொண்டிருந்தது. 1917 - 18இல் அராபிய, யூதப் படைகளின் துணைகொண்டு பிரிட்டன் பாலஸ்தீனத்தைத் துருக்கியரிடமிருந்து கைப்பற்றியது. 1917ஆம் ஆண்டு நவம்பர்த்திங்களில் பிரிட்டன் பால்போர் அறிக்கையை (Balfour Declaration) வெளியிட்டது. அதன்படி பிரிட்டன் 'பாலஸ்தீனில் யூதர்களின் தேசீயத் தாயகத்தை நிறுவுவதற்கு வழி வகுப்பதாக' வாக்களித்தது. ஆனால், அங்கு யூதர்களைவிட, மிக அதிக எண்ணிக்கையுள்ள அராபியர்கள் வாழ்ந்து வந்ததால், இத்திட்டத்தை நிறைவேற்றத் தொடங்கியதும் இரு வகுப்பாரிடையே நீண்ட கடும்பூசல் பிறந்தது. இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு நிலை மிகவும் மோசமானது. அப்போது பல நாடுகளிலிருந்து வெளியேறிய யூதர்கள் பாலஸ்தீனில் புகலடைந்தார்கள். அங்கு ஆட்சியுரிமை செலுத்தி வந்த பிரிட்டன், இருபத்தைந்து ஆண்டுகளாக அமைதியை நிலை நாட்ட முயன்று, தன்னாட்சிக்கான அடிப்படையை நிறுவியது. ஆயினும், 1948இல் பிரிட்டன் ஆட்சியுரிமையைத் துறந்து, பாலஸ்தீனை விட்டு வெளியேறியது. உடனே யூதர்கள் டெல் அவிவ் (Tel Aviv) எனுமிடத்தில் கூடிச் சுதந்தர

இஸ்ராயேல் அரசை அறிக்கையிட்டார்கள். யூதர்கள் முன்னேற்ற மடைந்திருந்ததுடன் படைக்கலங்களும் நிரம்பப் பெற்றிருந்தார்கள், மேலும், உலகின் பல பகுதிகளிலுமுள்ள யூத நிறுவனங்கள் அவர் களுக்குத் துணை செய்தன. அப்போது, (1945இல்) அராபிய நாட்டுக் குழுவை (Arab League) ஏற்படுத்தியிருந்த அராபியர்கள் ஒன்று சேர்ந்து இஸ்ராயேலின்மீது கடுந்தாக்குதலைத் தொடங்கினர்கள். 1949 ஜனவரி வரை போர் நடைபெற்றது. 1949இல் ஐக்கிய நாடுகளின் சங்க முயற்சியினல் போர் நிறுத்தப்பட்டு, பல உடன் படிக்கைகள் செய்யப்பட்டன.

'பழைய நக'ராகிய ஜெருசலம் உட்படப் பாலஸ்தீனின் கிழக்குப் பகுதி அராபிய அரசாகிய ஜார்டனின் படைகளிடமும், தென்மேற்கி லுள்ள 'காஸாப்பகுதி' (Gaza Strip) எகிப்துப் படைகளிடமும் விடப்பட்டன. இதனல், பாலஸ்தீனின் பெரும்பகுதி இஸ்ராயேல் குடியரசிடம் இருந்தது. அதன் பரப்பளவு ஏறக்குறைய 8,000 சதுர மைல் இருந்தது. அப்போது நிறுவப்பட்ட அக்குடியரசில் தேர்ந்தெடுக் கப்பட்ட தலைவரும், தேர்ந்தெடுக்கப்பட்ட அவைக்குப் (Knesset Israel) பொறுப்புள்ள தலைமை அமைச்சரும் இருந்தனர். பிறகு (1960இல்) தலைநகர் டெல் அவிவிலிருந்து 'புதிய நக'ராகிய ஜெரு சலத்திற்கு மாற்றப்பட்டது. 1950இல் அவை இயற்றிய சட்டம் 'இஸ்ராயேலில் குடி புக விரும்பும் எல்லா யூதர்களுக்கும் கடவுச் சீட்டு (Visa) வழங்கவேண்டும்,' எனக் கூறியது. அதன் விளைவாக நாற்பது திக்குகளிலிருந்து ஆயிரக்கணக்கான யூதர்கள் வந்து இஸ்ரா யேலில் குடி புகுந்தார்கள். 1960ஆம் ஆண்டிற்குள் இஸ்ராயேலின் மொத்த மக்கள்தொகை இருபது இலட்சத்துக்கும் அதிகமாகிவிட்டது. அதில் 90 சத விகிதம் யூதர்கள். ஆகவே, சமாதான உடன்படிக் கைகள் செய்யப்பட்டிருந்த போதிலும், இஸ்ராயேலுக்கு எதிரான பகைமை மனப்பான்மை அராபியரிடம் வளர்ந்துகொண்டே சென்றது. ஐக்கிய நாடுகளின் சங்கம் தொடர்ச்சியாக முயற்சி செய்து வந்த போதிலும், 1962ஆம் ஆண்டின் இறுதி வரை யூதர்களின் அரசாகிய இஸ்ராயேலுக்கும் அதன் அண்டை நாடுகளாகிய அராபிய நாடுகளுக் கும் யாதொரு நிலையான சமாதான உடன்படிக்கையும் நிகழவில்லை.

முன்பு எகிப்தும் பழைய ஆட்டோமன் பேரரசின் ஒரு பகுதியாய் இருந்தது. அது கிழக்கிலுள்ள அராபிய நாடுகளைப் போல உலகப் போர்கள் இரண்டின் விளைவாகப் படிப்படியாகச் சுதந்தரம் அடைந் தது. ஆனல், எகிப்தில் நிகழ்ந்த இப்போக்குகளின் வரலாறு அதன் கிழக்கிலுள்ள நாடுகளில் நிகழ்ந்ததைவிட வேறு விதமாய் இருந்தது. 1882இல் பிரிட்டன் எகிப்தை ஆக்கிரமித்து, தனது பாதுகாப்பாட் சியை (Protectorate) மறைமுகமாக அங்கு நிறுவியது. ஆயினும்,

அப்போதும் பிரிட்டன் துருக்கியின் மேலாண்மையை ஏற்றுக்கொண்டது. 1883இல் பிரிட்டன் ஓர் எகிப்தியப் பிரதிநிதித்துவ அவையை நிறுவியது. 1913இல் அந்த அவையின் அதிகாரங்கள் பெருகின. ஆயினும், 1914இல் போர் தொடங்கவே, பிரிட்டன் எகிப்தில் தனது பாதுகாப்பாட்சியை வெளிப்படையாக அறிவித்துத் துருக்கியின் மேலாண்மையை மறுத்து, பிரதிநிதித்துவ அவையையும் தாற்காலிகமாகத் தள்ளிவைத்தது. முதல் உலகப்போருக்குப் பிறகு எகிப்திய தேசீய வாதிகளின் (The Wafd) எதிர்ப்பார்வம் கொழுந்து விட்டெரியத் தொடங்கியது. 1922இல் பிரிட்டனின் பாதுகாப்பாட்சி முடிவடைந்து, அரசியலமைப்புக்குட்பட்ட முடியரசு நிறுவப்பட்டது. 'கெதீவ் புவாட்' (Khedive Fuad) என்ற சுல்தான் அரசரானார். புதிய அரசியலமைப்பின்படி அரசர் அமைச்சரவை வாயிலாகச் செயலாற்றினார். தலைமை அமைச்சரும் மற்ற அமைச்சர்களும் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ளவர்கள். பாராளுமன்றத்தில் செனட்டு, பிரதிநிதிகளின் சபை என்ற இரு சபைகள் இருந்தன. செனட்டில் ஒரு பகுதி, தேர்ந்தெடுக்கப்பட்டது; மற்றொன்று, நியமிக்கப்பட்டது. பிரதிநிதிகளின் சபை முற்றிலும் தேர்ந்தெடுக்கப்பட்டது.

1936இல் நிறைவேறிய ஆங்கிலோ – எகிப்திய உடன்படிக்கையின்படி பிரிட்டிஷ் ஆக்கிரமிப்பு முடிவடைந்தது. ஆனால், பிரிட்டன் சூடானுக்கும் சூயஸ் கால்வாய்க்கும் படைப்பாதுகாப்பு அளித்து வந்தது. இரண்டாம் உலகப்போர் தொடங்கியதும் எகிப்து, போர்த்துறைக்கு ஒரு முக்கியப் பகுதியாய் மாறியதால், பிரிட்டிஷ் படைகள் மீண்டும் அங்கு நுழைந்தன. போருக்குப் பிறகு, சூடானிலும் கால்வாய்ப் பகுதியிலும் இருந்த பிரிட்டிஷ் படைகளுக்கு எதிராகவும், முடியரசுக்கு எதிராகவும் எகிப்திய தேசீய உணர்ச்சி சினந்து எழுந்தது. 1952-53இல் படை திடீரெனப் புரட்சி செய்து, முடியரசை வீழ்த்தி, குடியரசை நிறுவியது. 1953இல் சூடான் பிரச்சினை தீர்க்கப்பட்டது. (சூடான் தனது எதிர்காலத்தை வகுக்கும் உரிமை பெற்றது. அது 1956இல் சுதந்தரம் பெற்ற குடியரசாய் மலர்ந்தது.) 1954இல் நிறைவேறிய சூயஸ் கால்வாய் ஒப்பந்தப்படி, பிரிட்டன் தன் படைகளைக் கால்வாய்ப் பகுதியிலிருந்து இருபது திங்கள்களில் வெளியேற்றுவதாக வாக்களித்தது. 1956இல் பிரிட்டிஷ் வெளியேற்றம் முற்றுப் பெறவே, மக்கள் வாக்கெடுப்பில் ஒரே வேட்பாளராகப் போட்டியிட்டு நாட்டின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட **நாஸர்,** சூயஸ் கால்வாயை நாட்டுடைமையாக்கினார். இதனால் ஒரு பெரிய உலக நெருக்கடி தோன்றியது. அந்நெருக்கடிக்குப் பிறகு அவர் தம்மை அராபிய நாடுகளின் தலைவரென அறிவித்துக்கொண்டார்.

நாம் எகிப்தை முற்றிலும் அராபிய நாடு எனக் கூற இயலாது. ஏனெனில், அங்கு வாழும் மக்களின் கலப்பினத்தில் அராபியர்

இரண்டாவது பெரும்பிரிவினராகவே இருக்கின்றனர். ஆயினும், எகிப்துத் தன்னை ஓர் அராபிய நாடாகவே கருதுகின்றது. அது மத்தியக் கிழக்குப் பகுதியின் அரசியற்குழப்பத்தில் பெரும்பங்கெடுத்து வருகிறது. உண்மையில் இரு வகை அராபிய நாட்டுணர்ச்சிகள், ஒன்றுக்கொன்று முரணுக வளர்ந்து வருகின்றன ; மற்றென்று, அராபிய நாட்டுக்குழு (Arab League) பரப்பி வரும் பரந்த தேசீய உணர்ச்சி. இப்பரந்த தேசீய உணர்ச்சியையே நாஸர் பயன்படுத்திக்கொள்ள முயன்றார். இதில் அவர் ஓரளவு வெற்றியும் பெற்றார். 1958இல் அவர் ஸிரியாவும் எகிப்தும் சேர்ந்து ஐக்கிய அராபியக் குடியரசை நிறுவவேண்டுமென ஸிரியாவைத் தூண்டினார். ஆயினும், இத்திட்டம் வெற்றி பெறவில்லை. 1961இல் ஐக்கியம் சீர் குலைந்தது; நாஸரின் புகழும் குறைந்தது. அராபிய நாட்டுக்குழு, அரசுகளின் ஒரு நெகிழ்ந்த குழுவாக இருப்பதைத் தவிர உயர்ந்த நிலையை அடைய இயலாது என்பது நன்கு தெரிந்தது. 1953 முதல் 1958 வரை அதில் லிபியா, சூடான், மொராக்கோ, டியூனிஷியா ஆகிய நாடுகள் சேர்க்கப்பட்டதும் இது நன்கு புலனாயிற்று. அது என்னவாயினும், பொதுவுடைமைக் கீழ்நாடுகளின் செல்வாக்கிற்கும் ஜனநாயக மேல் நாடுகளின் செல்வாக்கிற்கும் இடையே அமைதி இழந்து அல்லலுறும் அராபிய அரசுகள் இன்றைய உலகின் அமைதியைக் கலைக்க வல்ல ஆற்றலாய் இருக்கின்றன. அவற்றிடையே பன்னாட்டு அமைப்பு ஒன்றை ஏற்படுத்துவதற்கு முன் அவற்றின் சிக்கல்களை ஆய்ந்து அவற்றிற்கு முடிவு காண வேண்டும்.

## 3. ஆசியாவிலிருந்து வெளியேற்றம்

போருக்குப் பிறகு எகிப்திலும் மத்தியக் கிழக்கிலும் நிகழ்ந்த அரசியல் மாற்றங்களைவிட, ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலுமுள்ள மற்றப் பகுதிகளில் நடைபெற்று வரும் மாற்றங்கள் மிகவும் முக்கியமானவை. ஒரு புதிய வகை நாட்டுணர்ச்சி அவற்றை உந்தி வருகின்றது. பன்னாட்டு நோக்குடன் பார்த்தால், அவை குறிப்பிடத்தக்கவை. ஆப்பிரிக்க ஆசிய நாடுகளில் பொங்கி எழும் தேசீய உணர்ச்சி, அயலார் ஆட்சியிலிருந்த இந்நாடுகளை அரசியல் விடுதலை பெறத் ண்டியது. ஏனெனில், இவை தமது பொருளாதார வளத்தைப் பெருக்கவும், வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும், பண்பாட்டைப் பரப்பவும், அரசியல் விடுதலை பெறுதல் இன்றியமையாதென்பதைக் கண்டன. இரு போர்களின் விளைவாக மேற்கு ஐரோப்பியப் பேரரசுகள் ஆற்றலிழந்து தங்கள் குடியேற்ற நாடுகளைக் கட்டுப்படுத்த இயலாமல் போகவே, அவை விடுதலை பெறுவது எளிதாய் இருந்தது. வல்லரசு ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலுமிருந்து வெளியேறியதால் தொடர்ச்சியாக ஏற்பட்ட மாறுதல்களைக் குடியேற்ற நாட்டுப் புரட்சி எனக் கூறலாம்.

இப்புரட்சியில் ஐரோப்பிய வல்லரசுகளாகிய பிரிட்டனும் பிரான்ஸும் ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும், நெதர்லாந்து ஆசியாவிலும், பெல்ஜியம் ஆப்பிரிக்காவிலும், சம்பந்தப்பட்டிருந்தன. வெர்ஸேவ் உடன்படிக்கையின் விளைவாக ஜெர்மனி ஏற்கெனவே, தன் குடியேற்ற நாடுகளை இழந்துவிட்டது. இரண்டாவது உலகப்போரின் போது இத்தாலி தனது ஆப்பிரிக்கக் குடியேற்ற நாடுகளை இழந்தது. இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு போர்த்துகல் தன் குடியேற்ற நாடுகளைக் கைவிட இணங்கவில்லை. ஆனால், அவற்றில் குறிப்பாக ஆப்பிரிக்கக் குடியேற்ற நாடுகளில் வாழும் மக்களின் கிளர்ச்சிகளை அடக்க முயல்வது இறுதியில் வீணான முயற்சியாகவே முடியும்.

## (அ) பிரிட்டனும் இந்தியாவும்

போருக்குப் பிறகு உலக ஆதிக்கச் சமநிலையில் ஏற்பட்ட இம்மாற்றத்தின் தன்மையையும் ஆற்றலையும் முதன்முதலில் கண்டுகொண்டது பிரிட்டன்தான். ஏனெனில், அதுதான் போரில் மிக அதிகமாக ஈடுபட்டது. அந்நெருக்கடியைத் தீர்க்க பிரிட்டன் முனைந்த போது, அதன் குடியேற்ற நாடுகளில் முதன்முதலாக இந்தியா பாதிக்கப்பட்டது. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் வரலாற்றுத் தொடக்கத்தில் கிழக்கு இந்தியக் கம்பெனி அரசியல் பொறுப்பேற்றது. பிறகு அது அப்பொறுப்பை பிரிட்டிஷ் முடியரசுக்கு மாற்றியது. 1600இல் அரசர் அளித்த சாசனத்தினால் வாணிக முயற்சியாகத் தொடங்கப்பட்ட கிழக்கு இந்தியக் கம்பெனி, முகலாயப் பேரரசின் சீர்குலைவினாலும் பிரெஞ்சுக்காரர்களின் போட்டியினாலும் மிகப் பெரிய அரசியல் இன்னல்களிற்சிக்கிக்கொண்டது. ஏழாண்டுப் போரில் (Seven Years War, 1756—63) பிரெஞ்சு அதிகாரம் வீழ்ச்சியுறவே, தாய் நாட்டு அரசாங்கம் தலையிட்டு இரு சட்டங்களை இயற்ற வேண்டியிருந்தது. நார்த்தின் ஒழுங்கு முறைச் சட்டம் (North Regulating Act, 1773), பிட்டின் இந்தியச் சட்டம் (Pitt's India Act, 1784) என்ற இரு சட்டங்களும் ஒன்றுக்குப் பின் ஒன்றாக இயற்றப்பட்டன. இவை, அன்று வரை இந்தியாவில் பிரிட்டிஷ் அதிகாரங்களின்கீழ் வந்துள்ள பகுதிகளின் அரசாங்க முறையைக் கட்டுப்படுத்தி, கம்பெனியின் அலுவலாளராய் இருந்த கவர்னர் ஜெனரலைப் பேரரசின் அதிகாரியாக உயர்த்தியது. பிட்டு இந்தியச் சட்டம் இலண்டனில் மேற்பார்வைக் குழு (Board of Control) ஒன்றை நிறுவியது. இதுவே இந்திய அலுவலகத்தின் (India Office) தொடக்கம்.

இச்சட்டம் எழுபது ஆண்டுகளுக்கு மேலாக நீடித்திருந்தது. பிறகு இந்திய சிப்பாய் கலகம் (Indian Mutiny, 1857) காரணமாக இது நீக்கப்பட்டு, அடுத்த ஆண்டு புதிய சட்டம் இயற்றப்பட்டது.

அச்சட்டம் கிழக்கு இந்தியக் கம்பெனியை அழித்து, விக்டோரியா அரசியாரை இந்தியாவின் அரசியாரென அறிக்கையிட்டது. (1877இலேதான் விக்டோரியா அரசியார், 'பேரரசியார்' என்ற பட்டம் சூடினர்.) மேலும், அது இந்தியாவின் அரசாங்கச் செயலாளர் (Secretary of State for India) பதவியைத் தனிப்பதவியாக்கி, இலண்டனிலுள்ள இந்திய அரசியல் அலுவலகத்தின் குழுவில் இந்தியர் ஒருவர் அமரவேண்டுமென்று ஏற்பாடு செய்தது. பிறகு, மற்ருேர் இந்தியரையும் அக்குழுவில் சேர்த்தனர். அச்சட்டத்தின் முக்கிய இயல்புகளே பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்தின் அடிப்படையாய் நீண்ட காலம் இருந்தன. ஆனல், இடையிடையே இயற்றப்பட்ட புதிய சட்டங்கள் அதை மாற்றி வந்தன. ஓரளவு வரம்புள்ள அரசாங்கத்தை உருவாக்குவதற்காகவே இச்சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. பிரிட்டிஷ் இந்தியாவின் கவர்னர் ஜெனரலுக்கும், அதன் பிரிவுகளாகிய மாநிலங்களின் கவர்னர்களுக்கும் சட்ட ஆக்கத்திலும், ஆட்சித்துறையிலுங்கூடத் துணைசெய்வதற்கு ஒரு நிறுவனம் அமைக்கப்பட்டது. அதன் உறுப்பினர்கள் இந்திய சமூகத்தின் பல பகுதிகளிலிருந்தும் சேர்க்கப்பட்டார்கள். தொடர்ச்சியாக இந்தியச் சட்டசபைச் சட்டங்கள் (Indian Council Acts) 1861, 1892, 1909இலும் முதல் உலகப் போரின் போதும் நிறைவேற்றப்பட்டன. அவற்றின் விளைவாக இந்தியர்கள் தங்கள் நாட்டு அரசாங்கத்தில் பங்கு பெறும் வழக்கம் வளர்ந்தது. வைஸ்ராயின் சபையிலும் (Viceroy's Council), மாநிலக் கவர்னர்களின் சபையிலும் இந்தியர்கள் இடம் பெற்ருர்கள். இவை ஓரளவுக்குப் பிரதிநிதித்துவச் சபைகளாய் இருந்தன. இம் முயற்சிகள் இறுதியில், வைஸ்ராயாய் இருந்த செம்ஸ்போர்டு பிரபு (Lord Chelmsford), அரசாங்கத்தின் செயலாளரான எட்வின் மான்டேகு (Edwin Montagu) என்பவர்களின் ஆதரவில் 1919ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டமாய்க் கனிந்தன. இச்சட்டத்தின் முன்னுரை, ஆட்சித்துறையில் இந்தியர்கள் அதிகமாகப் பங்கு பெற வேண்டுமென்றும், பேரரசின் பகுதியாகிய பிரிட்டிஷ் இந்தியாவில் தன்னுட்சி நிறுவனங்கள் படிப்படியாக வளர வேண்டுமென்றும், இந்திய அரசாங்கத்தின் பொறுப்புகளுக்கேற்ப, இந்திய மாநிலங்கள் அரசாங்கத்தைச் சாராமல் செயலாற்றும் உரிமையை அவற்றிற்கு வழங்க வேண்டும் என்றும் பிரிட்டன் விரும்புவதாகக் கூறியது. இச்சட்டம் மத்திய அரசாங்கத்தில் மாநிலச்சபை (Council of State) என்ற மேல்சபையை நிறுவியது. அதில் அறுபது பேர் உறுப்பினர் இருந்தனர். அவர்களுள் ஒரு பகுதியினர் தேர்ந்தெடுக்கப்பட்டவர் ; மற்றவர் நியமிக்கப்பட்டவர். (நியமிக்கப்பட்டவர்களுள் அரசாங்க அலுவலர் இருபதின்மருக்கு அதிகமாய் இருக்கக்கூடாது.) சட்டசபையில் (Legislative Assembly) 140 பேர் உறுப்பினர் உண்டு. அவர்களுள் நூறு பேர் தேர்ந்தெடுக்கப்பட்டவர் ; மீதிப்பேர் நியமிக்

கப்பட்டவர். (நியமிக்கப்பட்டவருள் அரசாங்க அலுவலர் 26 பேருக்கு அதிகமாக இருக்கக்கூடாது.) மாநிலச் சபையின் காலம் ஐந்து ஆண்டுகள். சட்ட சபையின் காலம் மூன்று ஆண்டுகள். ஆனால், வைஸ்ராய் அதற்கு முன்னால் அதைக் கலைத்துவிடலாம். அவற்றிற்கு முதலில் உண்மையான அதிகாரங்கள் வழங்கப்பட வில்லை. கவர்னர் ஜெனரலுக்குத் துணை செய்துவந்த நிருவாக சபை தான் (Executive Council) உண்மையான அதிகாரம் பெற்றிருந்தது. அது இரு சபைகளுக்கும் பொறுப்புடையதாய் இல்லை. ஆனால், அதன் உறுப்பினர் ஒவ்வொருவரும் மாநிலச் சபையிலாவது சட்ட சபையிலாவது உறுப்பினராய் இருக்கவேண்டும். பண மசோதாக்கள் சில உட்பட, சாதாரணச் சட்டங்களை இரண்டு அவைகளும் நிறை வேற்றின. ஆனால், அவை நிறைவேற்ற மறுக்கும் எதையும் வைஸ் ராய் சட்டமாக இயற்றலாம். அதே போல, அவர் அவை இயற்றிய எதையும் ஏற்க மறுக்கலாம்.

எட்டு முக்கிய மாநிலங்களின் கவர்னர்கள், கவர்னர் ஜெனரலின் அதிகாரத்திற்குட்படாத செய்திகளில் அதிகாரம் செலுத்திவந்தார் கள். 1919ஆம் ஆண்டுச் சட்டப்படி இம்மாநிலங்களில் உண்மை யான தன்னாட்சி முறை தொடங்கப்பட்டது. ஒவ்வொரு மாநிலத்தி லும் ஓரளவு பொறுப்புள்ள அரசாங்க முறை ஏற்படுத்தப்பட்டது. இம்முறையைப்பற்றிக் குடியேற்ற உரிமை நாடுகளின் அரசியலமைப் பைப்பற்றிப் படிக்கும்போது பார்த்தோம். ஒவ்வொரு மாநிலத்திலும் ஒவ்வொரு கவர்னர் இருந்தார். அங்கு ஒவ்வொரு நிருவாக சபை யும், சட்டசபையும் ஏற்படுத்தப்பட்டன. ஒவ்வொரு சபையிலும் 70 சத விகிதம் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். (இந்த எண்ணிக்கை வங்காளத்தில் 125இலிருந்து அஸ்ஸாமில் 53 வரை வேறுபட்டிருந்தது. மீதிப்பேர் நியமிக்கப்பட வேண்டும். சபையின் காலம் மூன்று ஆண்டுகள். ஆனால், அதற்கு முன் அது கலைக்கப்படலாம். மாநிலக் காரியங்கள் ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள் (Reserved Subjects) என்றும், மாற்றப்பட்ட அதிகாரங்கள் (Transferred Subjects) என்றும் பிரிக்கப்பட்டிருந்தன. முந்திய அதி காரங்களைக் கவர்னரும் நிருவாக சபையும் செலுத்தினர். இரண் டாவது கூறிய அதிகாரங்களைக் கவர்னர் தம் அமைச்சர்களின் அறி வுரைக்கேற்பச் செலுத்தினர். இந்த அமைச்சர்கள் சபையின் தேர்ந் தெடுக்கப்பட்ட உறுப்பினர்களிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்டார்கள். இவர்கள் சபைக்குப் பொறுப்புள்ளவர்களாய் இருந்தார்கள். இந்தச் சட்டம் பத்து ஆண்டுகள் நிலவவேண்டும் என்றும், பிறகு இதன் பயனைத் திரும்ப ஆராய்ந்து பார்த்து இதை எவ்வாறு முற்போக்கான முறையில் மாற்றியமைக்கலாம் என்றும் முடிவு செய்வார்கள்.

பிரிட்டனிலிருந்த முற்போக்குள்ள மக்களுள் பலர் 1919ஆம் ஆண்டின் சட்டம் செழித்துத் தழைத்து ஒரு நாள் பொறுப்புள்ள கூட்டாட்சி அரசாங்கம் என்னும் எழில் மலராக மலரும் எனக் கருதினர். கவர்னர் ஜெனரல் மிகுதியான அதிகாரங்கள் செலுத்திவந்தார் என்பது உண்மைதான். ஆயினும், அப்போதிருந்த சூழ்நிலையில், தன்னுட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடுகளிலிருந்ததைப்போன்று, முற்றிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட மன்றத்திற்குக் கவர்னரை முற்றிலும் பொறுப்புள்ளவர் ஆக்கியிருந்தால், அதனால் தீங்கு விளைந்திருக்கும். இந்தியாவுக்கும் பிற குடியேற்ற உரிமை நாடுகளுக்கும் வேறுபாடுகள் இருந்தன; இப்போதும் இருக்கின்றன. அதை நாடு என்று கூறுவதைவிடக் கண்டம் என வழங்குவதே பொருந்தும். அங்கு 40 கோடி மக்கள் வாழ்ந்து வருகின்றனர்கள். அவர்களிடையே சமூக, சமய, அரசியல் முரண்பாடுகள் மலிந்து காணப்படுகின்றன. அவர்களுள் பெரும்பாலார் கல்வி அறிவில்லாதவர். சிலர், தீண்டப்படாதவர். அண்மைக் காலம் வரை [1] அவர்கள் சாதிப்பிரிவின்படி மனிதர்களாகவே கருதப்படவில்லை. ஆகவே, இந்தியாவில் ஒரு தேசீய அரசில் காணப்படவேண்டிய இன்றியமையாத இயல்புகள் இருந்ததில்லை.

ஆயினும், 1919ஆம் ஆண்டுச் சட்டம் நிறைவேறிய பத்தாண்டுகளுக்குப் பிறகு நிலையை மீண்டும் ஆராய்வதாக அளித்த வாக்குறுதியை பிரிட்டன் நிறைவேற்றத் தயாராய் இருந்தது. அதைச் செய்வதற்காக பிரிட்டன் 1928இல் சைமன் ஆணைக்குழுவொன்றை இந்தியாவிற்கு அனுப்பியது. அக்குழு, தனது அறிக்கையை வெளியிட்டதும், அதைப்பற்றிய வாதம் தொடங்கியது. அதிலிருந்து பெருந்திரளான மக்களுக்குத் தன்னுட்சி வழங்கும் துணிகரமான முயற்சி தொடங்கியது. அப்போது அது உலக வரலாற்றிலே மிகவும் துணிச்சலான ஆய்வு முறை போன்று தோன்றியது. பிரிட்டனிலும் இந்தியாவிலும் அதைப்பற்றி ஏழாண்டுகள் கலந்தாய்ந்ததன் பிறகு, 1935ஆம் ஆண்டில் இந்திய அரசாங்கச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. அது புகழ் பெற்ற ஓர் ஆவணம். அதில் நெருக்கமான அச்செழுத்தில் ஏறக்குறைய நூறு பக்கங்கள் உள்ளன. ஒரு வகையில் அச்சட்டம் ஒரு புதிய முறையைப் புகுத்தியது. அதாவது, அது இந்தியா முழுவதையும் கூட்டாட்சியாக மாற்றியது. மாநிலங்களைப் பொறுத்த வரையில், 1919ஆம் ஆண்டுச் சட்டம் அவற்றிற்கு ஏற்கெனவே அளித்திருந்த அரசியல் உரிமைகளும் அதிகாரங்களும் இப்போது பெருகின. அச்சட்டத்தின்படி 1937ஆம் ஆண்டு ஏப்ரல்

1. 1950ஆம் ஆண்டின் இந்திய ஐக்கியத்தின் அரசியலமைப்பு, தீண்டாமையை அழித்துவிட்டது. தீண்டாமையைப் பின்பற்றுபவர்கள் சட்டமுறைப்படி தண்டிக்கப்படுவார்கள்.

திங்களில் மாநிலங்களில் தன்னுட்சி தொடங்கியது. தன்னுட்சி பெற்ற மாநிலங்களுக்குக் 'கவர்னரின் மாநிலங்கள்' என்பது பெயர். (அத்தகைய மாநிலங்கள் அப்போது பதினேன்று இருந்தன.) அவை இரு வகையாகப் பிரிக்கப்பட்டிருந்தன. முதல் வகையில் சென்னை, பம்பாய், வங்காளம், ஐக்கிய மாகாணம், பீகார், அஸ்ஸாம் ஆகிய மாநிலங்களும், இரண்டாம் வகையில் எஞ்சிய ஐந்து மாநிலங்களும் இருந்தன. முதல் ஆறு மாநிலங்களிலும் மேல் சட்டசபை (Legislative Council) என்றும், சட்டசபை (Legislative Assembly) என்றும் இரு சபைகளையுடைய சட்ட மன்றம் இருந்தது. மீதி மாநிலங்களில் சட்டசபை என்ற ஒரே சபைதான் இருந்தது. இவற்றுள் ஒவ்வொன்றிலும் கவர்னர் அரசரின் பிரதிநிதியாய்ப் பணியாற்றினுர். அவருக்கு அறிவுரை கூறித் துணைசெய்ய அமைச்சரவை ஒன்று இருந்தது. அது சட்ட மன்றத்திற்குப் பொறுப்புள்ளது. சட்ட மன்றம் யாரை ஆதரிக்குமெனக் கவர்னர் நினைக்கின்ருரோ, அவரை அவர் அமைச்சராக நியமிக்கலாம். மாநிலம் சார்ந்த காரியங்களில் எல்லாம் கவர்னர் தம் அமைச்சர்களின் அறிவுரைப்படி நடப்பார். ஆனுல், மாநிலங்களின் பாதுகாப்பு, அமைச்சர்களின் கருத்துகளுக்கு முரணுன கவர்னர் ஜெனரலின் கட்டளைகள் போன்ற காரியங்களுக்குக் கவர்னர் நேராகப் பொறுப்புடையவர்.

மாநிலச் சபைகளை எவ்வாறு அமைக்கவேண்டும் என்றும், வாக்குரிமை பெறத் தகுதியுடையவர் யாவர் என்றும் அச்சட்டம் தெளிவாகக் கூறியது. சொத்துரிமை அடிப்படையில் சில தகுதிகளையுடைய 21 வயதுக்கு மேற்பட்ட ஆடவர் பெண்டிர் ஆகிய இரு பாலாருக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டது. ஒவ்வொரு மாநிலத்திலும் உள்ள பல திறப்பட்ட இனங்கள், சமுதாயங்கள், வேறு தனிப்பிரிவுகள் இவற்றிற்கெல்லாம் பிரதிநிதித்துவம் வழங்குவதற்கேற்பத் தொகுதிகள் அமைக்கப்பட்டன. நாற்பது இலட்சம் பெண்கள் உட்பட மூன்று கோடி சுதேச மக்களுக்கு வாக்குரிமை வழங்கப்பட்டது. அச்சட்டத்தின்படி 1937இல் முதற்பொதுத் தேர்தல் நடந்தது. வாக்காளர்களுள் பெரும்பான்மையினருக்கு எழுதப் படிக்கத் தெரியாவிடினும், அவர்கள் தேர்தலில் மிகுந்த ஆர்வம் காட்டினுர்கள் ; 50 சதவிகிதத்திற்கு மேல் வாக்களித்தார்கள். ஐரோப்பிய நாடுகளில் நடைபெறும் சில தேர்தல்களைவிட அதிகம் பேர் வாக்களித்தனர்.

1919ஆம் ஆண்டு சட்டத்தின் திட்டத்தைவிட இத்திட்டம் அதிக முற்போக்கானது. இது ஏறக்குறைய, குடியேற்ற உரிமை நாடுகளில் நிறுவப்பட்ட பொறுப்புள்ள அரசாங்கத்தை ஒத்திருந்தது. ஆனுல், 1919ஆம் ஆண்டின் சட்டம் அதிகாரங்களை ஒதுக்கப்பட்டவை என்றும் மாற்றப்பட்டவை என்றும் பிரித்தது.

பிந்திய அதிகாரங்களையே பொறுப்புள்ள அமைச்சர்கள் செலுத்த இயலும். 1935ஆம் ஆண்டின் சட்டப்படி அதிக அதிகாரங்களை அவர்களுக்கு வழங்கியது. கவர்னரின் முடிவுக்கென ஒதுக்கப் பட்ட காரியங்களைத் தவிர மற்றெல்லாவற்றிலும் அவர்களுக்கு அதிகாரம் இருந்தது. இதை அமைச்சரவை அரசாங்கத் தின் தொடக்கம் எனலாம். கனடாவில் டர்ஹாமின் அறிக் கையின்[1] விளைவாக, 1840க்குப் பிறகு நிலவிய முறையை இதற்கு ஒப்பிடலாம். அதில் பொறுப்புள்ள அரசாங்கம் படிப்படியாக வளர்ச்சியடையும். அதற்கு நல்லுணர்வுள்ள கவர்னர்கள் துணை செய்து வழி காட்டுவார்கள். சட்ட மன்றத்திலுள்ள கட்சிகளும் தெரி யாததைக் கற்றுக்கொள்ளவும் ஒத்துழைக்கவும் முன் வரவேண்டும்.

இந்தியக் கூட்டாட்சி என்பது முற்றிலும் புதியதொரு கருத்தாய் இருந்தது. அச்சட்டத்தின்படி, இந்தியக் கூட்டாட்சியில் கவர்னர் களின் மாநிலங்களும், ஆணையாளர்களின் மாநிலங்களும் (Commissioners' Provinces) கூட்டாட்சியில் சேரவிரும்பும் சுதேச அரசுகளும் (Native States) உறுப்புகளாய் இருந்தன. (மேலே குறிப்பிட்ட 11 மாநிலங்கள் தவிர, பிரிட்டிஷ் இந்தியாவின் பிற பகுதிகளுக்கு 'ஆணை யாளர்களின் மாநிலங்கள்' என்பது பெயர்.) அரசரின் அறிக்கை அறிவிக்கும் நாளில் கூட்டாட்சி தொடங்க வேண்டும். குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள சுதேச அரசர்கள் கூட்டாட்சியில் சேர விரும்பிய வுடன் பிரிட்டன் கூட்டாட்சியைத் தொடங்க எண்ணியது போலத் தோன்றியது. அந்த எண்ணிக்கை இரண்டைப் பொறுத்தது. முதா வது, எல்லாச் சுதேச அரசுகளின் மொத்த மக்கள் தொகையில் பாதிக்குக் குறையாத மக்கள் தொகையையுடைய அரசுகளின் தலை வர்கள் இணங்க வேண்டும். இரண்டாவது, கூட்டாட்சிச் சட்டமன் றத்தின் மொத்த இடங்களில் (Seats) பாதிக்குக் குறையாத இடங் களைப் பெறத் தகுதியுடைய சுதேச அரசர்கள் இசைய வேண்டும்.

அச்சட்டத்தின்படி கூட்டாட்சி அரசாங்கத்தில் கவர்னர் ஜெனர லும், இரு சபைகளையுடைய சட்டமன்றமும் இருக்க வேண்டும். இரு சபைகளுக்கும் மாநிலச்சபை, சட்டசபை என்பன பெயர்கள். மேல் சபையில் பிரிட்டிஷ் இந்தியாவின் 156 பேர்கள் பிரதிநிதிகள் இருப் பார்கள். அவர்களுள் பெரும்பாலாரை இலட்சம் வாக்காளர்கள் தேர்ந்தெடுப்பார்கள். சுதேச அரசுகளின் பிரதிநிதிகளைச் சுதேச அரசர்கள் நியமிப்பார்கள். அப்பிரதிநிதிகளின் எண்ணிக்கை 104க்கு மிகாமல் இருக்க வேண்டும். சட்ட சபையில் பிரிட்டிஷ் இந்தியாவின் பிரதிநிதிகள் 250 பேர்கள் இருப்பார்கள். அவர்களை

---

1. இயல் 11, பகுதி 4ஐப்பார்க்க.

மாநிலச் சட்ட மன்றங்கள் தெரிந்தெடுக்கும். அவர்களுள் சுதேச அரசுகளின் பிரதிநிதிகள் 125 பேருக்கு மிகாமல் இருக்கவேண்டும். ஒவ்வோர் அரசுக்கும் அல்லது அரசுகளின் தொகுதிக்கும் அவற்றின் மக்கள் தொகைக்கேற்பப் பிரதிநிதித்துவம் வழங்கப்படும். பிரிட்டிஷ் இந்தியாவின் பிரதிநிதிகளைப் பொறுத்த வரையில், கீழ்ச்சபைத் தேர்தலுக்குரிய வாக்குரிமை மாநிலச்சட்ட மன்றங்களுக்குரிய வாக்குரிமை போன்றிருந்தது. ஆனால், வாக்காளர்களுக்குக் கல்வியறிவில் மட்டும் சற்று அதிகமான தகுதி வேண்டும். இவ்வாறு இலட்சக் கணக்கான ஆடவரும் பெண்டிரும் வாக்குரிமை பெற்றனர்.

கவர்னர் ஜெனரல், பேரரசரின் பிரதிநிதி என்ற முறையில், கூட்டாட்சியின் நிருவாகத்துறை அதிகாரத்தைச் செலுத்தி வந்தார். சட்டமன்றத்திற்குப் பொறுப்புள்ள அமைச்சரவை அவருக்கு அறிவுரை கூறித் துணை செய்து வந்தது. ஆனால், பாதுகாப்பு, வெளிநாட்டுச் செய்திகள், மதச்சபை ஆட்சிமுறை ஆகிய சில துறைகளைக் கவர்னர் ஜெனரல் தாமே கவனித்துக் கட்டுப்படுத்தி வந்தார். மேலும், உள் நாட்டு அமைதி, உறுதியான நிதி நிலை; சிறுபான்மையாளரின் நலங்கள், இந்திய அரசுகளின் உரிமைகளைக் காத்தல், வாணிக வேறுபாட்டைத் தவிர்த்தல் போன்ற காரியங்களுக்குக் கவர்னர் ஜெனரல் 'தனிப் பொறுப்பு' (Special Responsibility) உடையவராய் இருந்தார். ஆனால், அவர் அக்காரியங்களிற்கூட அமைச்சர்களின் அறிவுரையை நாடுவார். ஆனால், அவ்வறிவுரை அவர் பொது நலத்திற்கு எதிரானதெனத் தெரிந்தால் மட்டும் அதை ஏற்க மறுப்பார். மற்ற விதத்தில் 1935ஆம் ஆண்டின் சட்டத்தின்படி அமைச்சரவை அரசாங்கம் இந்தியக் கூட்டாட்சி அரசில் சாதாரணமாக நடைபெறும்.

நாம் முன்பு பார்த்த கூட்டாட்சிகளின் அடிப்படைகளுக்கும் இந்தக் கூட்டாட்சி முறையின் அடிப்படைக்கும் வேறுபாடுகள் உண்டு. கூட்டாட்சியில் சேரும் அரசுகள் தங்கள் வரலாற்றிலும் அமைப்பிலும் மட்டுமன்றி, பேரரசின் அரசாங்கத்துடன் கொண்டிருந்த தொடர்புகளிலும் முற்றிலும் வேறுபட்டிருந்தன. பிரிட்டிஷ் இந்தியாவின் மாநிலங்கள், தங்களுக்கு வழங்கப்பட்ட அதிகாரங்களையும் அலுவல்களையும் தவிர வேறு அதிகாரங்களைச் செலுத்தவில்லை. ஆனால், அரசுகளில் பேரரசின் அதிகாரம் வெளிநாட்டுச் செய்திகளை மட்டும் கட்டுப்படுத்தியது. உண்மையில் இந்தியக் கூட்டாட்சியை ஒரு கண்டத்தின் கூட்டாட்சியெனக் கூறலாம். அதில் ஐரோப்பாக் கண்டத்தில் இருப்பதைவிட இனம், வரலாறு, மொழி, பண்பாடு, மதம் ஆகியவற்றில் அதிகமான வேறுபாடுகள் இருந்தன.

பிரிட்டிஷ் இந்தியாவைத் தன்னுட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடாக்கி, 1935ஆம் ஆண்டின் சட்டப்படி இந்தியக் கூட்டாட்சியை நிறுவ வேண்டுமெனத் தீட்டிய திட்டம் ஒரு போதும் நிறைவேற வில்லை, போரின் பிறகு அது வழக்கொழிந்து போனது. அதைவிட முற்போக்கான சீர்திருத்தங்களை மக்கள் விரும்பினுர்கள். உண்மை யில் அவர்கள் முழுச் சுதந்தரத்தையே கேட்டார்கள். இந்தியாவின் தீவிரத் தேசீயவாதிகளும் அதையே எப்போதும் விரும்பினுர்கள். தொடக்கத்திலிருந்தே அவர்கள் 1935ஆம் ஆண்டு சட்டப்படி நிறு வப்பட்ட மாநிலச் சபைகளை எதிர்த்து வந்தார்கள். இரண்டாவது உலகப்போர் அவர்களது இயக்கத்தை வளர்த்தது. ஏனெனில், அப் போது ஆசியா முழுவதும் தேசிய உணர்ச்சி பொங்கி எழுந்தது.

1935இன் திட்டம் தோல்வியுற்றதைக்கண்ட பிரிட்டிஷ் அரசாங் கம், 1946இல் அமைச்சரவைத் தூதுக்குழு (Cabinet Mission) ஒன்றை இந்தியாவிற்கு அனுப்பியது. அது இந்தியாவின் எல்லாக் கட்சித் தலைவர்களையும் மூன்று திங்கள் வரையிற்கலந்தாய்ந்து ஒரு முடிவுக்கு வந்தது. அதன்படி இந்தியாவின் எதிர்கால அரசிய லமைப்பை அரசியற்புனைசபை ஒன்று தீர்மானிக்க வேண்டும். அதில் பிரிட்டிஷ் இந்தியாவிலும், சுதேச அரசுகளிலும் உள்ள சமுதாயங்கள் பிரிவுகள் எல்லாவற்றின் பிரதிநிதிகளும் உறுப்பினர்களாக அமர வேண்டும். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் இப்புதிய போக்கின் விளைவாக மத்திய அரசாங்கத்தில் இடைக்கால அரசாங்கம் ஒன்று அமைக்கப் பட்டது. அதில் பெரிய சமுதாயங்களின் அரசியல் தலைவர்கள் இடம் பெற்றுர்கள். அவர்கள் அப்போதிருந்த அரசியலமைப்பின்படி அதிக அதிகாரங்களைச் செலுத்தினுர்கள். எல்லா மாநிலங்களிலும், சட்ட மன்றங்களுக்குப் பொறுப்புள்ள இந்திய அரசாங்கங்களுடன் ஒத்து ழைக்க இந்தியர்கள் முதலில் முன் வந்தார்கள். ஆனுல், விரைவில் இரு பெரிய இந்தியக் கட்சிகளாகிய இந்துக்களுக்கும் (காங்கிரஸ் கட்சிக்கும்), முஸ்லிம்களுக்கும் (முஸ்லிம் லீகுக்கும்) அடிப்படை யான வேறுபாடு தோன்றியது. முஸ்லிம்லீக் இடைக்கால அரசிலிருந்து விலகி, நாட்டுப் பிரிவினையையும் தனி முஸ்லிம் அர்சு (பாக்கிஸ்தான்) அமைப்பதையும் தவிர வேறெதையும் ஏற்க இயலாதென அறிவித்தது. தனி அரசு அமைப்பதால் முஸ்லிம்கள் பெரும்பான்மையாய் இருக்கும் இடங்களில் அவர்களின் உரிமைகளைப் பாதுகாக்க விரும்புவதாக அது கூறியது. 1947ஆம் ஆண்டு பிப்பிரவரித் திங்களில் பிரிட்டிஷ் தலைமை அமைச்சர், '1948 ஜூன் மாதத்திற்குள் பொறுப்புள்ள இந்தியரிடம் ஆட்சி அரகாரத்தை ஒப்படைப்பதற்கான முயற்சிகள் எடுப்பதாக' மக்கள் சபையில் அறிவித்தார்.

இந்த அறிவிப்புக்காரணமாக இந்தியத் தலைவர்கள் தங்களுக்குள்ள வேறுபாடுகளைத் துரிதமாகத் தீர்த்துக்கொள்ள முற்பட்டார்கள். அதன் விளைவாக அவர்கள் முழுச்சுதந்தரம் வேண்டுமென்று கேட்டதை எதிர் பாராதவிதமாகக் கைவிட்டு, நாட்டைத் தன்னுட்சி பெற்ற (இந்தியா, பாக்கிஸ்தான்) இரு குடியேற்ற நாடுகளாகப் பிரித்து, பிரிட்டிஷ் குடியரசின்கீழ் இருக்க இசைந்தார்கள். உடனே பிரிட்டிஷ் பாராளுமன்றம் அதற்கேற்பச் சட்டம் இயற்றியது. அதன் பயனாக 1947ஆம் ஆண்டு, ஆகஸ்டு திங்களில் இரு குடியேற்ற உரிமை நாடுகளும் பிறந்தன. அரசியலமைப்புகளின்றித் திடீரெனத் தோன்றிய இந்த அரசுகளில் எவ்வாறு அரசியலமைப்பு முறைகளைப் புகுத்துவது என்பது பெரும்பிரச்சினையாய் இருந்தது. அப்போது இருந்தவை அரசியற்புனைசபை இரண்டே. ஒன்று, 1946இல் அமைச்சரவைத் தூதுக்குழுவின் திட்டத்திற்கேற்ப இந்தியாவில் நிறுவப்பட்டசபை; மற்றொன்று, ஐக்கிய இந்தியாவை உண்டுபண்ணுவதில் இந்துக்களுடன் ஒத்துழைக்க மறுத்த முஸ்லிம்கள் அமைத்த சபை. அரசியலமைப்பு இல்லையென்ற முறையை நீக்கப் புதிய இரு குடியேற்ற உரிமைநாடுகளும் 1935ஆம் ஆண்டின் இந்தியச் சட்டத்தைச் சில மாற்றங்களுடன் தாற்காலிகமாக ஏற்றுக்கொண்டு, அரசியற்புனை சபைகள் இரண்டையும் பாராளுமன்ற நிலைக்கு உயர்த்தின.

இந்திய அரசியற்புனைசபை இந்தியக் குடியேற்ற உரிமை நாட்டின் தாற்காலிகப் பாராளுமன்றமாக மாறியதும், புதிய அரசியலமைப்பு ஒன்றை உடனே எழுதத் தொடங்கியது. அதன் வரைவு (Draft) 1948ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் சபைமுன் சமர்ப்பிக்கப்பட்டது. 1949இல் இலையுதிர் காலத்தில் இந்தியா ஒரு குடியரசாக மாற விரும்புவதாக அறிவித்தது. ஆனால், அதே நேரத்தில் அது பிரிட்டிஷ் பொதுநலக் கூட்டில் உறுப்பாய் இருக்கவும் விரும்பியது. பிரிட்டிஷ் பாராளுமன்றம் இதற்கு இசைந்தது. 1949ஆம் ஆண்டு, நவம்பர்த் திங்களில் இந்தியா புதிய அரசியலமைப்பை ஏற்றுக்கொண்டது. 1950 ஜனவரியில் அது செயலாற்றத் தொடங்கியது. அப்போது இந்தியா அரசரின் பிரதிநிதியாகிய கவர்னர் ஜெனரலின் கீழ்த் தன்னுட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடாய் இல்லை. அதற்கு மாறாக, அது தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவரையுடைய சுதந்தரக் குடியரசாய்த் திகழ்ந்தது. அரசியற்புனைசபையின் தலைவர் குடியரசின் முதல் தலைவராக ஒரே மனமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். கவர்னர் ஜெனரலின் பதவியும் அழிக்கப்பட்டது. அன்றிலிருந்து பிரிட்டிஷ் பொது நலக்கூட்டின் வடிவமும் மாறத் தொடங்கியது. ஏனெனில், அதில் இந்தியா ஓர் உறுப்பாய் இருந்ததால், முதல் முறையாகப் பொதுநலக்கூட்டில் ஒரு குடியரசு இடம் பெற்றது.

இந்திய ஐக்கியத்தில் 14 மாநிலங்களும் ஆறு ஐக்கியப் பகுதிகளும் (Union Territories) இருக்கின்றன. ஒவ்வொரு மாநிலத்திலும் ஒவ்வொரு கவர்னர் இருக்கின்றார். அவரைக் குடியரசின் தலைவர் நியமிக்கின்றார். மாநிலத்தில் ஒரு சபை, அல்லது இரு சபைகளையுடைய சட்ட மன்றம் இருக்கின்றது. அரசியலமைப்பு அதன் அதிகாரங்களை வரையறுத்துள்ளது. கூட்டாட்சிச் சட்ட மன்றத்தில் இராச்சிய சபை என்ற மேல் சபையும், மக்கள் சபை என்ற கீழ்ச்சபையும் இருக்கின்றன. இராச்சிய சபையில் உறுப்பினர் 250 பேர் உள்ளனர். அவர்களுள் 12 பேர் நியமிக்கப்படுகின்றனர். எஞ்சியவர்களை மாநிலச் சட்ட மன்றங்கள் தக்க விகிதத்தில் தேர்ந்தெடுக்கின்றன. இரு சபைகளையுடைய மாநிலங்களில் கீழ்ச்சபை அவர்களைத் தேர்ந்தெடுக்கின்றது. இராச்சிய சபை கலைக்கப்படாத நிலையான சபையாகும். அமெரிக்கச் செனட்டில் நிகழ்வது போல, இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை அதன் உறுப்பினர்களுள் மூன்றில் ஒரு பகுதியினர் ஓய்வு பெறுகின்றனர். மக்கள் சபையில் 520 பேர் உறுப்பினர்க்கு மிகாமல் இருக்கின்றனர். 21 வயதுள்ளவர்களும் அதற்கு மேற்பட்டவர்களும் ஆடவர் பெண்டிர் ஆகிய இரு பாலாரும் அதன் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கின்றனர். மொத்த வாக்காளர்கள் ஏறக்குறைய 18 கோடி பேர் இருக்கின்றனர். அதாவது, நாட்டு மக்களுள் பாதிப் பேர் வாக்குரிமை பெற்றுள்ளனர். மக்கள் சபையின் காலம் 5 ஆண்டுகள்.

குடியரசின் தலைவரும், துணைத்தலைவரும் பெயரளவில் நிருவாகத் துறையின் தலைவராய் இருக்கின்றனர். (துணைத்தலைவர் இராச்சிய சபையின் தலைவராயும் பணியாற்றுகிறார்.) தேர்தற்குழுவொன்று தலைவரைத் தேர்ந்தெடுக்கின்றது. அது கூட்டாட்சி, மாநிலச்சட்ட மன்றங்களின் உறுப்பினர் எல்லோரையும் கொண்ட குழுவாகும். தலைவரின் பதவிக்காலம் ஐந்தாண்டுகள். அது முடிந்த பிறகு அவர் மீண்டும் பதவிக்குப் போட்டியிடலாம். அவர், தலைமை அமைச்சர் மற்ற அமைச்சர்கள் ஆகியோர் வாயிலாகச் செயலாற்றுகின்றார். அமைச்சர் அனைவரும் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட மன்றத்திற்குப் பொறுப்புள்ளவராவர். 1952இல் கூட்டாட்சிப் பாராளுமன்றத்தின் முதல் தேர்தல் நடைபெற்றது. 18 கோடி மொத்த வாக்காளர்களுள் 10 கோடியே 70 இலட்சம் பேர் வாக்களித்தனர். 1957இல் நடைபெற்ற இரண்டாவது தேர்தலில் அதைவிட அதிகம் பேர் வாக்களித்தனர்.

மத்திய அரசாங்கத்திற்கும் மாநில அரசாங்கங்களுக்குமிடையே அதிகாரங்கள் பங்கிடப்பட்டிருப்பதிலிருந்து இந்திய ஐக்கியத்தின் கூட்டாட்சித் தன்மை நன்கு தெரிகின்றது. அரசியலமைப்பின்

ஏழாவது அட்டவணை இந்த அதிகாரங்கள் அனைத்தையும் மூன்று பட்டியல்களில் தருகின்றது. அவை (1) கூட்டாட்சிப் பட்டியல் (Union List), (2) மாநிலப் பட்டியல் (State List), (3) பொதுப் பட்டியல் (Concurrent List) எனப்படும். இந்தியா முழுவதற்கும் பொதுவான முக்கிய காரியங்களில் கூட்டாட்சி அரசாங்கத்திற்குத் தனி அதிகாரங்கள் உள்ளன (பட்டியலில் 97 கொடுக்கப்பட்டுள்ளன.) அவற்றுள் பாதுகாப்பு, அயல் நாட்டுச் செய்திகள், செய்திப் போக்கு வரவு, இருப்புப் பாதை, நாணயம், பொருளகத் தொழில், ஈட்டுறுதி, சுங்கம் ஆகியவை அடங்கியுள்ளன. மாநிலப் பட்டியலில், அறுபத்தாறு வகை அதிகாரங்கள் உள்ளன. அவற்றிற்கு எடுத்துக் காட்டாகக் காவல் துறை (Police), பொதுப் பாதுகாப்பு, (மாநிலத்தில்) நீதி வழங்குதல், வட்டார அரசாங்கம், பொதுச் சுகாதாரம், கல்வி, பயிர்த்தொழில், மின்சாரம் ஆகியவற்றைக் குறிப்பிடலாம். பொதுப் பட்டியல் கூட்டாட்சியும், மாநிலங்களும் ஈடுபடக்கூடிய பொதுவான காரியங்களைக் (47) குறிக்கின்றது. மத்திய அரசாங்கத்திற்கும் மாநிலங்களுக்கும் இடையே நிகழக் கூடிய பிணக்குகளைத் தீர்ப்பதற்கு அரசியலமைப்பு ஒரு தலைமை நீதி மன்றத்தையும் நிறுவியுள்ளது.

1956ஆம் ஆண்டிலேதான் பாக்கிஸ்தான் அரசியற்புனைசபை ஓர் அரசியலமைப்பை எழுதி முடித்தது. அதன்படி குடியேற்ற உரிமை நாடாய் இருந்த பாக்கிஸ்தான் சுதந்தரக் கூட்டாட்சிக் குடியரசாய் மாறியது. ஆயினும், அது இந்தியாவைப் போல, பிரிட்டிஷ் பொது நலக் கூட்டின் ஓர் உறுப்பாய் இருந்தது.

பாக்கிஸ்தானின் கூட்டாட்சி இயல்புகள் இந்தியாவிலிருப்பது போலத் தெளிவாக வரையறுக்கப்படவில்லை. அதற்கு முக்கியமான காரணம் அதன் நிலப்பகுதி, மேற்குப் பாக்கிஸ்தான், கிழக்குப் பாக்கிஸ்தான் என இரு பகுதிகளாய்ப் பிரிந்துள்ளதே. ஆயிரம் மைல் அகன்று பரவிக் கிடக்கும் வடவிந்திய அரசுகள் அவ்விரு பகுதிகளை யும் பிரித்து வைத்திருக்கின்றன. 1956ஆம் ஆண்டின் அரசியலமைப் பின்படி பாக்கிஸ்தான் குடியரசு மேற்குப் பாக்கிஸ்தான், கிழக்குப் பாக்கிஸ்தான் என்ற இரு மாநிலங்களாய்ப் பிரிக்கப்பட்டது. அரசிய லமைப்பின்படி நாடு முழுவதற்கும் ஒரு சபையுள்ள மத்தியச் சட்ட மன்றம் இருக்க வேண்டும். அதற்குத் தேசீய அவை என்பது பெயர். அதன் உறுப்பினர்களாகிய 156 பேர்களுள் பாதிப்பேர் ஒவ்வொரு மாநிலத்திலும் மக்களாட்சி முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். மாநிலங்களுள் ஒவ்வொன்றிலும் மாநில அவை என்ற ஒரு சபையுள்ள சட்டமன்றம் இருக்கும். அதற்கு மக்களாட்சி முறைப்படி தேர்தல்கள் நடைபெற வேண்டும். தேசீய, மாநில அவைகளின் உறுப்பினர்கள் குடியரசின் தலைவரைத் தேர்ந்தெடுப்பார்கள். தலைவரின் பதவிக்

காலம் ஐந்தாண்டுகள். அரசியலமைப்பின் மூன்ருவது அட்டவணை தேசீய அவைமட்டும் அதிகாரம் செலுத்தக் கூடிய செய்திகளை நீண்ட தொரு பட்டியலில் தருகின்றது. எஞ்சியவை மாநில அரசாங்கங்களைச் சேர்ந்தவை. அரசியலமைப்பு ஒரு தலைமை நீதி மன்றத்தையும் நிறுவியது. 'ஓர் அரசாங்கத்திற்கும், மற்ருேர் அரசாங்கம் அல்லது இரண்டு அரசாங்களுக்கும்' இடையே ஏற்படும் பிணக்குகளைத் தீர்ப்பது தலைமை நீதி மன்றத்தின் அலுவல்.

இந்த அரசியலமைப்பு நடைமுறையில் செயலாற்றவில்லை. 1958ஆம் ஆண்டு இது அழிக்கப்பட்டு, நாட்டில் படையாட்சிச் சட்டம் (martial law) நிறுவப்பட்டது. ஆயினும், குடியரசின் நிலைக் கேற்பப் புதியதோர் அரசாங்க அமைப்பை நிறுவ முயற்சி நடை பெற்றது. 1960இல் 'மாறும் சூழ்நிலைகளுக்கும் இஸ்லாமியக் கொள்கைகளாகிய நீதி, சமத்துவம், சமயப் பொறை ஆகியவற்றிற்கும் ஏற்ற வகையில் மக்களாட்சியை அமைத்து, நாட்டின் ஒற்றுமையை உறுதிப்படுத்தி, உறுதியான, நிலையான அரசாங்கத்தை நிறுவுவதைப் பற்றி அறிவுரை கூறுவதற்காக, அரசியலமைப்பு ஆணைக்குழு ஒன்று நியமிக்கப்பட்டது. அது 1961 இல் தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது. மத்திய, மாநிலச் சட்ட மன்றங்களை வைத்துக்கொள்ள வேண்டுமென் றும், அதிகாரப் பங்கீட்டின்படி 'ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள்' மாநிலங் களிடம் இருக்க வேண்டுமென்றும், 'இஸ்லாமியக் கொள்கைகளை விளக்கும் அறிவுரை அவை' தலைமை நீதிமன்றத்திற்குத் துணை செய்ய வேண்டுமென்றும் அவ்வறிக்கை கூறியது. அது பாராளுமன்றச் சார்பற்ற நிருவாகத்துறையை நிறுவவேண்டுமென்றும், அமெரிக்கத் தலைவரைப் போன்று தேர்ந்தெடுக்கப்படும் தலைவர் இருக்க வேண்டு மென்றும் கூறியது. மேலும், அது படி முறையான புதிய தேர்தல் முறையைப் புகுத்த விரும்பியது. அதன்படி நாட்டின் தலைவரும் பாராளுமன்ற உறுப்பினர்களும் 'தேர்தல் குழு ஒன்றினல் தேர்ந் தெடுக்கப்படுவார்கள். அக்குழுவில் அடிப்படை மக்களாட்சிகளின் (Basic Democracies) தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் இருப் பார்கள். அவ்வுறுப்பினர்களை வயது வந்தோர் அனைவரும் தேர்ந் தெடுப்பர்.' முந்திய அரசியலமைப்புத் தோல்வியடைந்திருக்க, இக்கொள்கைகளுக்கேற்பத் தீட்டப்பட்ட புதிய அரசியலமைப்பு மட்டும் வெற்றி பெறுமா என்பது காலப்போக்கிலேதான் தெரியும்.

இந்தியாவைப் பற்றிய இப்பகுதியை முடிக்குமுன், 1948இல் இலங்கை, இன்றிருப்பது போல, தன்னுட்சி பெற்ற பிரிட்டிஷ் குடி யேற்ற உரிமை நாடாய் மாறியது என்பதையும், அதே ஆண்டில் பிரிட்டன் பர்மாவிலிருந்து வெளியேறியதால் பர்மா சுதந்தரக் குடியரசாய் மாறியது என்பதையும் இங்குக் குறிப்பிட வேண்டும்.

பொதுநலக்கூட்டில் இலங்கை இயல்பாகவே இருந்துவிட்டது ; இந்தியாவும் பாக்கிஸ்தானும் அதில் இருக்க இணங்கின. ஆனல், பர்மா அதை விட்டு வெளியேறிவிட்டது.

## (ஆ) பிரிட்டனும் மலேயாவும்

தென்கிழக்கு ஆசியாவில் பிரிட்டிஷ் பேரரசு அதிகமாக ஈடுபட்டிருந்த மற்ருெரு பகுதி மலேயா. மலேயாத் தீபகற்பத்தில் பினங்கு, மலாக்கா ஆகிய பிரிட்டிஷ் குடியேற்றப் பகுதிகள் இரண்டும், சிங்கப்பூர்க் குடியேற்ற நாடும், பிரிட்டிஷ் பாதுகாப்பின்கீழ் ஒன்பது மலேய அரசுகளும் இருந்தன. அத்தீபகற்பத்திற்குக் கிழக்கில் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளாகிய ஸரவக், வடபோர்னியோ ஆகிய இரண்டும் பிரிட்டிஷ் பாதுகாப்பிலிருந்த புரூணே (Brunei) அரசும் இருந்தன. இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு, ஜப்பானியர்கள் இப்பகுதிகளிலிருந்து வெளியேறியதும் தோன்றிய குழப்பத்தின் விளைவாக ஒன்பது மலேய அரசுகளைப் பினங்கு, மலாக்கா ஆகியவற்றுடன் சேர்க்க முயற்சிகள் தோன்றலாயின. 1948இல் அவை ஒன்று சேர்ந்து மலேயாக்கூட்டாட்சியை அமைத்தன. 1957இல் பிரிட்டன் அக்கூட்டாட்சியின்மேல் தான் செலுத்தி வந்த எல்லா அதிகாரங்களையும் ஆட்சியையும் துறந்ததும், அது பிரிட்டிஷ் பொதுநலக் கூட்டினுள் ஒரு சுதந்தர அரசாய் மாறியது. சுதத்தர நாளன்று செயல் முறைக்கு வந்த அரசியலமைப்பு வலிமையான ஒரு கூட்டாட்சி அரசாங்கத்தை நிறுவியபோதிலும், கூட்டாட்சியை அமைத்த பதினேர் உறுப்புகளுக்கும் ஓரளவு தன்னுட்சியையும் நல்கியது, மலேய அரசர்களுள் ஒருவரே கூட்டாட்சியின் மேலான தலைவர். ஒன்பது அரசர்களும், பினங்கு, மலாக்கா ஆகிய இரண்டின் கவர்னர்களும் ஒன்று கூடி அவரைத் தேர்ந்தெடுப்பார்கள். அவரது பதவிக்காலம் ஐந்தாண்டுகள். அவர் பெரும்பாலும், சட்டமன்றத்திற்குப் பொறுப்புள்ள தலைமை அமைச்சர், மற்ற அமைச்சர்கள் ஆகியோரின் அறிவுரையின்படி செயலாற்றுகிருர். சட்டமன்றத்தில் செனட்டு, பிரதிநிதிகளின் சபை என இரு சபைகள் இருக்கின்றன. கூட்டாட்சித் தலைநகராகிய குவாலா லம்பூரிலுள்ள பிரிட்டிஷ் உயர் ஆணையாளரின் (ஹை கமிஷனர்) மூலமாகக் கூட்டாட்சி பிரிட்டனுடன் தொடர்பு கொண்டுள்ளது.

1962இல் சிங்கப்பூர், ஸரவக், வடபோர்னியோ, புரூணே ஆகிய பகுதிகளை மலேயாக் கூட்டாட்சியுடன் இணைக்கக் கொள்கையளவில் ஒப்பந்தம் நிறைவேறியது. சிங்கப்பூரில் நடைபெற்ற குடியொப்பத்தில் 70 சதவிகிதத்திற்கு மேற்பட்ட பெரும்பான்மை வாக்காளர் அத்திட்டத்தை ஆதரித்தனர். மற்றிரு பகுதிகளிலும் அதைப் பற்றி வாதம் நிகழ்ந்து வந்தது. திட்டப்படி கூட்டாட்சி விரிவடையுமானுல், அதற்கு மலேசியாக் கூட்டாட்சி எனப் பெயர் வழங்கப்படும்.

## (இ) பிரான்ஸும் இந்தோ - சீனவும்

ஆசியாவில் பிரான்ஸ் அதிகமாக ஈடுபட்டிருந்த குடியேற்ற நாடு இந்தோ–சீன. 19ஆம் நூற்ருண்டின் நடுப்பகுதியில் மூன்ரும் நெப்போலியன் கொச்சின்-சீனவைக் கைப்பற்றியதும் இக்குடியேற்றம் தோன்றியது. 1880ஆம் ஆண்டிற்குள் பிரெஞ்சு ஆதிக்கம் இப்போது நாம் கம்போடியா, வியட்நாம், லாவோஸ் என வழங்கும் பகுதிகள் வழியாகச் சீன எல்லை வரை வடக்கு நோக்கிப் பரவிவிட்டது. இரண்டாம் உலகப் போரின்போது ஜப்பானியர்கள் இப்பகுதிகளைக் கைப்பற்றியதும் இங்கெல்லாம் பிரெஞ்சு அதிகாரம் மறைந்தது. போருக்குப் பிறகு பிரான்ஸ் இந்தோ-சீனவில் தனது அதிகாரத்தை மீண்டும் நிறுவ முயன்றது. ஆனல், அங்கு, குறிப்பாக வியட்நாமில், பொதுவுடைமை வாதிகள் குழப்பம் காரணமாகப் பிரான்ஸ் தனது ஆட்சியை நிலைநிறுத்த இயலவில்லை. பொதுவுடைமை வாதிகளுடன் நடத்திய நீண்ட போராட்டத்தின் பிறகு பிரான்ஸ் வெளியேறியது. அப்போது வியட்நாம், கொரியாவைப் போல. வடக்கில் பொது வுடைமைக் குடியரசாகவும் தெற்கில் ஜனநாயகக் குடியரசாகவும் பிளவுபட்டு நின்றது. அண்மையிலுள்ள அரசுகளாகிய லாவோஸ், கம்போடியா ஆகிய இரு முடியரசுகளின் சுதந்தரம் உறுதியற்ற நிலையில் இருந்தது. பொதுவுடைமை வாதிகள் புகுந்து பரவி எந் நேரமும் அதைக் கவிழ்த்துவிடக் காத்திருந்தார்கள்.

## (ஈ) நெதர்லாந்தும் இந்தோனீசியாவும்

17ஆம் நூற்ருண்டிலிருந்தே கிழக்கிந்தியத் தீவுகளில் டச்சு ஆதிக்கம் நிலவி வந்தது. அப்போது அத்தீவுகளில் குடியேறிய டச்சுக்காரர் போர்த்துகீஸியரைப் படிப்படியாக வெளியேற்றித் தமது ஆதிக்கத்தை நிலைநாட்டினர். அவர்கள் அங்கு எழுப்பிய வணிகப் பேரரசை நெதர்லாந்து இந்தியா என வழங்கினர். நாம் இப்போது இப்பகுதியைத்தான் இந்தோனீசியா என வழங்குகின்ருேம். அப் பெயர் அந்தத் தீவுக்குழுவிலுள்ள எல்லாத் தீவுகளையும் குறிக்கின்றது. டச்சுக் கிழக்கிந்தியத் தீவுகளில் வாழும் ‘எல்லாச் சுதேசக் குடிகளின் ஒற்றுமையையும் குறிப்பிடவேண்டும்’ என்பதற்காகவே அங்குத் தோன்றிய தேசீய இயக்கம் அப்பெயரைத் தெரிந்தெடுத்தது. இரண் டாம் உலகப் போரின்போது ஜப்பானியர் அப்பகுதி முழுவதையும் கைப்பற்றினர். அவர்கள் தங்கள் நலனுக்காகத் தேசீயவாதிகளை ஆதரித்து, 1945இல் இந்தோனீசியக் குடியரசை நிறுவினர்கள். போருக்குப் பிறகு டச்சுக்காரர் அக்குடியரசை ஏற்க மறுத்து, அதற் கெதிராகத் தம் படைகளைச் செலுத்தினர். ஆயினும், 1948இல் ஐக்கிய நாடுகளின் சங்கம் தலையிட்டு, இந்தோனீசியக் குடியரசை

இறைமை உரிமையுள்ள சுதந்தரக் குடியரசாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும், அதில் நியூகினியின் டச்சுப் பகுதியைத் தவிர, டச்சுக் கிழக்கிந்தியப் பேரரசு முழுவதையும் சேர்க்கவேண்டுமென்றும் நெதர்லாந்தைத் தூண்டியது. நெதர்லாந்தும் அதற்கிணங்கி, தனது இறைமை அதிகாரத்தைக் கைவிட்டது. 1950இல் புதிய குடியரசு அரசியலமைப்பு அறிக்கையிடப்பட்டது. அது தேர்ந்தெடுக்கப்படும் தலைவர் ஒருவரையும், இரு சபைகளையுடைய சட்டமன்றத்தையும் ஏற்படுத்தியது.

### (உ) அமெரிக்க ஐக்கிய நாடுகளும் பிலிப்பைன் தீவுகளும்

தென்கிழக்கு ஆசியாவைப் பார்க்கும்போது நாம் பிலிப்பைன் தீவுகளையும் கவனிக்கவேண்டும். ஏனெனில், அவை கிழக்கிந்தியத் தீவுக்குழுவின் வடபகுதியின் விரிவாய் அமைந்துள்ளன. அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஸ்பெயினுடன் செய்த போரில் அடைந்த வெற்றி காரணமாக, 1898இல் பிலிப்பைன் தீவுகளைப் பெற்றன. அங்கு எழுந்த பிலிப்பினோக்களின் புரட்சியை அடக்கிய பிறகு, அமெரிக்கா அவர்களுக்கான முற்போக்குத் திடங்களைப் படிப்படியாக வகுத்து வந்தது. 1907இல் அது அத்தீவுகளுக்கு ஓரளவு வட்டாரச் சுய ஆட்சியை வழங்கி, 1916இல் அதை விரிவுபடுத்தியது. 1935இல் தீவுகள் 'பொதுநலக் கூட்டு நிலை' என்னும் நிலையின்கீழ் ஓர் அரசியலமைப்பைப் பெற்றன. அதன்படி தலைவர் ஒருவரும், தேசீய அவையும் இருக்க வேண்டும். மேலும், அமெரிக்கக் கடற்படைத் தளங்களுக்கும் பாதுகாப்பு அளிக்க வேண்டும். 1946இல் முழுச் சுதந்தரம் அளிப்பதாக அமெரிக்கர் வாக்களித்தனர். இரண்டாம் உலகப் போரின் போது ஜப்பானியர் பிலிப்பைன் தீவுகளைக் கைப்பற்றினர். போருக்குப் பிறகு அமெரிக்கர் தமது வாக்கை நிறைவேற்றினர். இப்போது பிலிப்பைன் தீவுகள் முழுச் சுதந்தரம் பெற்ற குடியரசாய்த் திகழ்கின்றன. அவற்றின் அரசியலமைப்பு அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியலமைப்பை ஒத்திருக்கின்றது.

## 4. ஆப்பிரிக்கக் குடியேற்ற நாடுகளிற்புரட்சி

இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு, ஆப்பிரிக்காவில் நடைபெற்று வரும் மாறுதல்கள் இக்கால வரலாற்றிலே மிக விரைவாய் நிகழ்ந்து வரும் மாறுதல்கள் எனலாம். கீழ்க்காணும் உண்மைகளை நாம் எண்ணிப் பார்க்கும்போது அவை எவ்வளவு விரைவாய் நிகழ்ந்துள்ளன என்பதைக் கண்டுணரலாம். 19ஆம் நூற்றாண்டு வரை ஐரோப்பியர் ஆப்பிரிக்காவின் உட்பகுதிகளில் குடியேறவேயில்லை. 1885ஆம் ஆண்டுக்குள் அவர்களின் நிலவேட்டை எத்தகைய

'சச்சரவை' ஏற்படுத்திவிட்டதென்ருல், அவர்கள் தங்களுக்குள் கண்டத்தைத் துண்டு போட்டுக்கொண்டு, தங்கள் செல்வாக்குப் பரவிய பகுதிகளின் எல்லைகளையும் வரையறுத்து, ஓர் ஒப்பந்தத்தைச் செய்துகொண்டார்கள். 1939ஆம் ஆண்டிற்கூட ஆப்பிரிக்காவில் லைபீரியாக் குடியரசு, தென்னுப்பிரிக்க ஐக்கியம், எகிப்து முடியரசு என்ற மூன்று சுதந்தர அரசுகளே இருந்தன. போருக்குப் பிறகு குடியேற்ற நாடுகளில் புரட்சி தோன்றுவதற்குப் பல காரணங்களைக் கூறலாம். மேல் நாட்டுக் கருத்துகள், நடைமுறை ஆகியவற்றின் விளைவுகள், ஆப்பிரிக்கர்களிடையே நாட்டுணர்ச்சியின் எழுச்சி, அவர்களின் சுதந்தர தாகத்தைத் தணிக்கச் சில பேரரசுகள் மேற்கொண்ட முயற்சி ஆகியவை முக்கியமான காரணங்களாகும். அப்பேரரசுகளில் குறிப்பிடத்தக்கது பிரிட்டன். ஏனெனில், ஆப்பிரிக்காவின் அரசியல் வாழ்வை மாற்றிய அந்த இயக்கங்களில் பிரிட்டன் மேற்கொண்ட பங்கு சிறப்பானது; வியப்புக்குரியது. ஆகவே, பிரான்ஸும் பெல்ஜியமும் எவ்வாறு மாறும் நிலைகளுக்கேற்பச் செயலாற்றின என்பதைப் பார்க்குமுன் பிரிட்டிஷ் கொள்கையின் இயல்பையும் விளைவையும் காண்போம்.

## (அ) பிரிட்டிஷ் ஆப்பிரிக்காவில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள்

ஆப்பிரிக்காவில் பிரிட்டன் ஈடுபட்டுள்ள பகுதிகள் அக்கண்டம் முழுவதும் பரவிக்கிடக்கின்றன. அவை கிழக்கு, மேற்கு, தெற்குப் பகுதிகளில் உள்ளன. பிரிட்டன் வெவ்வேறு காலங்களில் பல்வேறு சந்தர்ப்பங்களில் கைப்பற்றிய இப்பகுதிகள் பொருளாதார வளங்கள், அரசியல் வாய்ப்புகள், இனப் பிரிவுகள் ஆகியவற்றில் பெரிதும் வேறுபட்டிருக்கின்றன. ஆயினும், தமக்கென்று ஓர் அரசை அமைத்து அதை நன்கு நடத்த இயலுமென்ற உறுதியான நம்பிக்கை இப்பகுதிகளில் பொதுவாக நிலவி வருகின்றது. பிரிட்டன் இந்நம்பிக்கையைப் பெரிதும் மதித்து வருகிறது. ஆப்பிரிக்கர்களிடையே அரசியல் அனுபவத்தை வளர்ப்பதற்காகப் பிரிட்டன் செய்துவந்துள்ள செயல் முறைகளிலிருந்து இது தெளிவாய்த் தெரிகின்றது. பல ஆப்பிரிக்கப் பகுதிகளில் அது சட்டசபைகளை நிறுவியுள்ளது. சில பகுதிகளில் 19ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியிலே அவற்றை நிறுவியது. அங்குக் குடியேறிய வெள்ளையர்கள் வெஸ்ட்மின்ஸ்டர் அரசாங்கத்தைச் சாராமல், தங்கள் நீதி, சட்ட ஆக்கத்துறை, ஆட்சித்துறை அலுவல்களை ஆற்றுவதற்காகவே முதலில் இச்சபைகள் நிறுவப்பட்டன. ஆனல், படிப்படியாகச் சட்டசபைகளில் ஆப்பிரிக்கப் பிரதிநிதிகள் இடம் பெற்ருர்கள். இறுதியில் அவர்கள் அங்குப் பெரும்பான்மையினர் ஆயினர். இவ்வாறு ஆப்பிரிக்கச் சமூகங்கள் பிரிட்டிஷ்

பொதுநலக் கூட்டினுள் தேசிய சுதந்தரம் பெற பிரிட்டன் வழி வகுத்தது. அவற்றுள் பெரும்பாலானவை இப்போது சுதந்தரம் பெற்றுவிட்டன.

மேற்கு ஆப்பிரிக்காவிலிருந்த மூன்று முக்கியப் பகுதிகள், கோல்டு கோஸ்ட், நைஜீரியா, ஸியரா லியோன் என்பவை. இரு போர்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் மூன்று பகுதிகளும் ஓரளவு அரசியல் முன்னேற்றம் அடைந்தன. அவற்றின் சட்டசபைகளில் ஆப்பிரிக்கர்கள் அதிக பிரதிநிதித்துவம் பெற்றுர்கள். இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு அவை மிக விரைவாக முன்னேறின. 1946இல் கோல்டு கோஸ்ட் புதிய அரசியலமைப்பைப் பெற்றது, அதன் விளைவாக, கோல்டு கோஸ்ட் சட்டசபையில் ஆப்பிரிக்கர்களைப் பெரும்பான்மையினராகக் கொண்ட முதற்குடியேற்ற நாடாய் மாறியது. 1957இல் அது தன்னுட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடாய் முழுச் சுதந்தரம் அடைந்தது. அப்போது அது தனது பெயரை கானு (Gbana) என மாற்றிக்கொண்டது. 1960இல் அது ஒரு குடியரசு அரசியலமைப்பை உருவாக்கியது. அவ்வரசியலமைப்பு, தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர் ஒருவரையும், ஒரு சபையுள்ள சட்டமன்றத்தையும் ஏற்படுத்தியது. அம்மன்றத்திற்குத் 'தேசீய அவை' என்பது பெயர். அதில், பெண்டிர் பதின்மர் உட்பட 114 பேர் உறுப்பினர் உள்ளனர். கானு குடியரசான போதிலும், பிரிட்டிஷ் பொதுநலக் கூட்டின் ஓர் உறுப்பாகவே இருக்க இசைந்தது.

நைஜீரியாவில் அரசியல் நிலைமை சிக்கலானதாய் இருந்தது. ஏனெனில், அதன் வளர்ச்சியின் வெவ்வேறு காலங்களில் அது மேற்கு, கிழக்கு, வடக்குப் பகுதிகள் என்ற மூன்று பகுதிகளாய்ப் பிரிந்திருந்தது. ஆயினும், கூட்டாட்சி முறை வாயிலாக இந்த இடையூறு தவிர்க்கப்பட்டது. 1945ஆம் ஆண்டு நாடு முழுவதற்கும் ஒரு புதிய சட்டசபை நிறுவப்பட்டது. அதில் அரசாங்க அலுவலில் இல்லாதவர் பெரும்பான்மையினராய் இருந்தனர். ஒவ்வொரு பகுதிக்கும் ஒவ்வொரு சபை இருந்தது. 1954இல் மூன்று பகுதிகளும் நைஜீரியக் கூட்டாட்சியை அமைப்பதற்காக ஒன்று சேர்ந்தன. 1957க்கும் 1959க்கும் இடையே ஒவ்வொரு பகுதியும் தன்னுட்சி அதிகாரங்களைப் பெற்றது. 1960இல் அக்கூட்டாட்சி, பிரிட்டிஷ் பொதுநலக் கூட்டினுள் தன்னுட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடாய் முழுச் சுதந்தரம் அடைந்தது. அதன் அரசியலமைப்பின்படி, கூட்டாட்சிப் பாராளுமன்றத்தில் செனட்டு, பிரதிநிதிகளின் சபை என்ற இரண்டு அவைகள் இருக்கின்றன. அமைச்சரவை பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ளது. பாராளுமன்றம் அயல் நாட்டுச் செய்திகள்,

பாதுகாப்பு, காவல் துறை, போக்கு வரவு உட்பட ஏராளமான அதிகாரங்களைச் செலுத்தி வருகின்றது. ஒவ்வொரு பகுதியிலும் சட்ட சபைக்குப் பொறுப்புள்ள நிருவாக சபையும், அப்பகுதியைச் சார்ந்த காரியங்களில் சட்டமியற்றி ஆட்சி நடத்த முதல்வர்களின் சபை (House of chiefs) ஒன்றும் இருக்கின்றன.

பிரிட்டிஷ் ஆதிக்கத்தில் நெடுங்காலமாய் இருந்த ஸியரா லியோன், இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு விரைவாக அரசியல் முன்னேற்றம் அடைந்தது. 1948இல் அங்கு ஒரு புதிய அரசிய லமைப்பு மிகப் பெரும்பான்மையான ஆப்பிரிக்க உறுப்பினர்களுடைய சட்டசபையை நிறுவியது. 1958இல் நியுமிக்கப்பட்ட உறுப்பினர் இருவரைத் தவிர, சபையின் ஏனைய உறுப்பினர் அனைவரும் தேர்ந் தெடுக்கப்பட்டனர். சட்டசபைக்குப் பொறுப்புள்ள தலைமை அமைச்சரும் அமைச்சரவையும் கவர்னர் ஜெனரலுக்கு அறிவுரை கூறுகின்றனர். 1961இல் ஸியரா லியோன் பிரிட்டிஷ் பொதுநலக் கூட்டினுள் தன்னாட்சி பெற்ற குடியேற்ற உரிமை நாடாய் முழுச் சுதந்தரம் அடைந்தது.

கிழக்கு ஆப்பிரிக்காவிலுள்ள குறிப்பிடத்தக்க மூன்று பகுதிகள், டாங்கனிய்க்கா, உகாண்டா, கென்யா என்பவை. டாங்கனிய்க்கா என்பது, பழைய ஜெர்மானியக் கிழக்கு ஆப்பிரிக்கா. முதல் உலகப் போர்க்குப் பின் பிரிட்டன் அதைச் சர்வதேச சங்கம் நிறுவிய ஆட்சி யுரிமை முறைப்படி ஆண்டு வந்தது ; பிறகு 1946 முதல் அதை ஐக்கிய நாடுகளின் சங்க விருப்பப்படி பொறுப்பாண்மைப் பகுதியாக ஆண்டு வந்தது. உகாண்டா 1890 முதல் பிரிட்டிஷ் பாதுகாப்பாட்சியில் இருந்தது, அங்குள்ள 65 இலட்சம் மக்களுள் 11,000 பேரே ஐரோப் பியர். 1895இல் பிரிட்டிஷ் ஆட்சியின்கீழ் வந்த கென்யா, 1920இல் குடியேற்ற நாடாய் வெளியரங்கமாய்ச் சேர்க்கப்பட்டது. அங்கும் இரு நிறத்தவரும் கலந்தே வாழ்கின்றனர். கிழக்கு ஆப்பிரிக்காவிலுள்ள பிரிட்டிஷ் பகுதிகளிலெல்லாம் இருப்பதைவிட, அங்கேதான் ஐரோப் பியரின் விகிதம் அதிகமாய் இருக்கின்றது. (65 இலட்சம் மக்களுள் ஐரோப்பியர் ஏறக்குறைய 68,000 பேர்.) இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு இப்பகுதிகளில் வாழ்ந்த மக்களுக்குச் சட்ட சபையில் அதிகப் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டது. இப்பகுதிகளின் சுதந்தரத்தைப் பற்றிப் பேச்சுகள் நடைபெற்ற போது, இம்மூன்று பகுதிகளையும் ஒன்றாக இணைத்து ஒரு கூட்டாட்சியை அமைக்கலா மென்ற கருத்து நிலவியது. ஆயினும், இத்திட்டம் நிறைவேறவில்லை. ஏனெனில், அவற்றிடையே இனவேறுபாடுகள் இருந்தன. அதிக ஐரோப்பியர்கள் வாழ்ந்த கென்யாவுடன் இணைந்தால் என்ன விளை

யுமோ என்ற அச்சம் தோன்றியது. குறிப்பாக, உகாண்டாவில் இந்த அச்சம் நிலவியது.

1961ஆம் ஆண்டு மேத்திங்களில் டாங்கனீய்க்கா ஓரளவு தன்னுட்சி பெற்றது. 1962இன் இறுதியில் அது பொதுநலக் கூட்டினுள் முழுச்சுதந்தரம் பெற்ற குடியரசாய் மாறியது. புதிய அரசியலமைப்பின்படி அதன் சட்ட சபைக்குத் 'தேசீய அவை' என்னும் பெயர் வழங்கப்பட்டது. தலைமை அமைச்சரும் மற்ற அமைச்சர்களும் அந்த அளவுக்குப் பொறுப்புள்ளவர்களாய் இருக்கவேண்டும். அதே போல, உகாண்டாவும் 1962இல் முழுச்சுதந்தரம் பெற்றது. ஆயினும், கென்யா மற்றிரண்டு அண்டைப் பகுதிகளையும்விட மிக மெதுவாகவே அரசியல் முன்னேற்றம் அடைந்துள்ளது. ஏனெனில், அங்கு இனப்பகைமை பெருஞ்சமூகப் பிரச்சினையாய் இருந்ததுமல்லாமல், ஆப்பிரிக்கா நாட்டுணர்ச்சியும் வன்முறை இயக்கமாய் மாறியது. ஆயினும், கென்யாவின் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு 1960இல் பெரு முயற்சி செய்யப்பட்டது. ஆலோசனைக் குழுவின் அரசியலமைப்பு ஆணை (Constitution Order in Council), அம்முயற்சியை மேற்கொண்டது. அன்று முதல் கென்யா முழுச்சுதந்தரம் என்னும் குறிக்கோளை நோக்கிப் போவது போலத் தோன்றியது.

இறுதியாக, மத்திய ஆப்பிரிக்காவில் தென்ரொடீஷியா, வடரொடீஷியா, நியாஸாலாந்து என்னும் மூன்று பகுதிகள் ஒற்றற்கொன்று அண்மையில் இருக்கின்றன. அவற்றின் அரசியற்சிறப்பு என்னவென்றால், அவற்றிடையே பல வேறுபாடுகள் காணப்பட்டபோதிலும், இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு அவை ஒரு கூட்டாட்சி ஐக்கியத்தில் ஒன்றாய் இணைக்கப்பட்டுள்ளதே. தென்ரொடீஷியா வடக்கிலுள்ள மற்றிரு பகுதிகளையும்விட அதிக அரசியல் முன்னேற்றம் அடைந்துள்ளது. செஸில் ரோட்ஸ் (Cecil Rhodes) தொடங்கி வைத்த குடியேற்றங்களின் தென்பகுதிகளில் அந்நாடு இருப்பதால், அங்கு ஐரோப்பியர் பலர் குடியேறினர்; இப்போது அங்குள்ள மக்களுள் பதின்மூன்றில் ஒரு பகுதியினராய் இருக்கின்றனர். 1923இல் அது தன்னுட்சி பெற்ற குடியேற்ற நாடாய் மாறியது. அதில் 30 பேர் உறுப்பினரையுடைய பாராளுமன்றமும் ஆறு பேர் உறுப்பினரையுடைய அமைச்சரவையும் நிறுவப்பட்டன. வெஸ்ட்மின்ஸ்டரிலிருந்த அரசாங்கத்திற்கென ஒதுக்கப்பட்ட அதிகாரங்களைத் தவிர ஏனைய உள் நாட்டுக் காரியங்களை எல்லாம் குடியேற்ற நாட்டு அரசாங்கம் கவனித்து வந்தது. வடரொடீஷியாவும் நியாஸாலாந்தும் பாதுகாப்பாட்சிப் பகுதிகள். அங்குத் தென்ரொடீஷியாவிலிருப்பதைவிட மிகக் குறைந்த எண்ணிக்கையுள்ள ஐரோப்பியர் வாழ்கின்றனர். இவ்விரு பாதுகாப்பாட்சிப் பகுதிகளும் ஓரளவு

அரசியல் முன்னேற்றம் அடைந்துள்ளன. இவற்றுள் ஒவ்வொன்றி லும் ஒவ்வொரு நிருவாக சபை உண்டு. வடரொடீஷிய நிருவாக சபை யில் உறுப்பினர் பதின்மரும், நியாஸாலாந்தின் நிருவாக சபையில் உறுப்பினர் ஒன்பதின்மரும் இருக்கின்றனர், ஒவ்வொரு சபையிலும் ஆப்பிரிக்கர் இருவர் இருக்கின்றனர். ஒவ்வொரு பகுதியிலும் ஓரளவு தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட சபை இருக்கின்றது. வடரொடீஷியாவின் சபையிலுள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் பதின்மூவருள் எழுவர் ஆப்பிரிக்கர்.

இம்மூன்று பகுதிகளிடையே இத்தகைய அரசியல் வேறுபாடுகள் இருந்த போதிலும், அவற்றின் பொருள் வளங்களை ஒன்ருகப் பயன் படுத்த வேண்டுமென்றும், அதனால் விளையும் பொருளாதார நலனைப் பெறுவதற்குச் சிறந்தவழி அவற்றைக்கூட்டாட்சியாக இணைப்பதுதான் என்றும் வல்லுநர் கருதினர். ஆகவே, நீண்ட வாதத்திற்குப் பிறகு 1953ஆம் ஆண்டில் ரொடீஷியா நியாஸாலாந்துக் கூட்டாட்சி நிறுவப் பட்டது. கவர்னர் ஜெனரல் கூட்டாட்சி அமைச்சரவையின் துணை யுடன் செயலாற்றவேண்டுமென்றும், அமைச்சரவை ஒரு சபையுள்ள கூட்டாட்சி அவைக்குப் பொறுப்புள்ளது என்றும், அவையில் மூன்று பகுதிகளுக்கும் அவற்றில் வாழும் பல்வேறு இனங்களுக்கும் விகிதப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டுமென்றும் அரசியலமைப்புக் கூறியது. ஆயினும், ஆப்பிரிக்க மக்களின் மனக் குறைபாடு காரண மாக, அம்முறை செயற்பட இயலவில்லை, அச்சிக்கலை அங்குப்போய் ஆராய 1960இல் சிறப்பு ஆணைக்குழு ஒன்று இலண்டனிலிருந்து சென்றது. அது கூட்டாட்சி முறையைப் பெரிதும் மாற்றியமைக்க வேண்டுமெனக் கூறியது. அதன்படி அனைவரும் ஏற்கத்தக்க ஒரு திருத்தத் திட்டத்தை உருவாக்கப் பல முயற்சிகள் செய்யப்பட்ட போதிலும், 1962இன் இறுதி வரை ஒன்றும் உருவாகவில்லை. அதற் குள் கூட்டாட்சி சிதைந்துகொண்டு வருகிறதென்பதும், கூட்டாட்சி யின் அழிவுக்குப் பிறகு பொருளாதார ஐக்கியத்தைத் தவிர வேறென் றும் மிஞ்சாது என்பதும் தெரிந்தன. ரொடீஷியா, நியாஸாலாந்து ஆகியவற்றின் சிக்கலைத் தீர்ப்பது 'குடியேற்ற நாட்டு முறை மறைந்து வரும் இந்நாளில் பிரிட்டன் செய்ய வேண்டிய இக்கட்டான அலு வலாய் இருக்கின்றது,' என நூலாசிரியர் ஒருவர் கூறுகின்றார்.

## (ஆ) பிரான்ஸும் அல்ஜீரியாவும்

பத்தொன்பதாம் நூற்றுண்டில் பிரான்ஸ் ஆப்பிரிக்காவின் வடக்கு, மத்திய, மேற்குப் பகுதிகளில் பெரும்பகுதிகளிலும் தென்கிழக்குக் கரைக்கு அப்பாலுள்ள மடகாஸ்கர் தீவிலும் தனது ஆதிக்கத்தை நிலை நாட்டியது. அல்ஜீரியாவைத் தவிர, மற்றப் பிரெஞ்சுக் குடி

யேற்ற நாடுகள் எல்லாம் வெப்ப மண்டலத்தில் இருந்தன. இவை செனகால், சாட் (Chad), காங்கோ, சௌடான் (இப்போது மாலி), நைஜர், காபூன் என்பவை. இப்பகுதிகளில் பிரெஞ்சுக்காரர் படிப் படியாக வட்டாரச் சுயாட்சி முறையை நிறுவினர். நான்காவது குடியரசின் காலத்தில் அவற்றிற்கு அதிக அளவு தன்னுட்சி வழங்கப் பட்டது. அவை தம் சட்ட சபைகளின் மூலம் அந்த அதிகாரங்களைச் செலுத்தின. அவை ஐந்தாவது குடியரசின் அரசியலமைப்பிற்காக நடைபெற்ற குடியொப்பத்தில் கலந்து, அதனுல் பிரெஞ்சு சமுதாயத்தின் உறுப்புகளாய் இருக்க இணங்குமானுல், சுதந்தரம் பெற்றதும் சமுதாயத்தை விட்டு வெளியேற உரிமைபெறும் எனத் தளபதி டிகால் 1958இல் அறிவித்தார். இந்த ஒப்பந்தப்படி அவைகளெல்லாம் சமுதாயத்தில் இணைய இணங்கி, 1960இல் சுதந்தரக் குடியரசுகளாயின. பிறகு அவற்றுள் மாலி, நைஜர் ஆகிய இரண்டின் அரசாங்கங்களும் சமுதாயத்திலிந்து வெளியேறத் தீர்மானித்தன. 1890 முதல் பிரெஞ்சுப் பாது காப்பாட்சிப் பகுதியாய் இருந்த மடகாஸ்கர், 1960இல் சுதந்தரக் குடியரசானது; ஆனுல், தனிப் பாதுகாப்பு ஒப்பந்தப்படி பிரெஞ்சு சமுதாயத்தில் உறுப்பாய் இருக்க இசைந்தது.

அல்ஜீரியாவின் வரலாறும் நிலையும் பிரெஞ்சு ஆப்பிரிக்கப் பேரரசின் பிற பகுதிகளின் வரலாறு நிலைகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டிருந்தன. 1848இல் பிரான்ஸ் அதைத் தனது ஆட்சிப் பகுதியென அறிக்கையிட்டது. படிப்படியாகப் பிரெஞ்சுக்காரர் பலர் அங்குச் சென்று குடியேறினர். 1939இல் இரண்டாவது உலகப்போர் தொடங்கும்போது ஏறக்குறையப் பத்துஇலட்சம்பேர் பிரெஞ்சுக்காரர் அங்கு இருந்தனர். அவர்கள் அல்ஜீரியாவைப் பிரான்ஸின் ஒரு பகுதியாகவே கருதினுர்கள்; மேலும், அதை அவ்வாறே வைத்துக் கொள்ள வேண்டுமென்றும் பேராவலுடன் இருந்தார்கள். போருக்குப் பிறகு அங்கு முஸ்லிம் தேசிய இயக்கம் வன்முறையைப் பயன் படுத்தத் தொடங்கியது. அங்குக் குடியேறியிருந்த பிரெஞ்சுக்காரர்களின் அரசியல் குறிக்கோள்களும் முஸ்லிம் தேசீயவாதிகளின் அரசியற்கொள்கைகளும் ஒன்றற்கொன்று முரணுய் இருந்தமையால், குழப்பமும் கொலையும் யாங்கணும் நடைபெற்றன. அதனுல், 1958ஆம் ஆண்டில் நான்காவது குடிரசு வீழ்ச்சியடைந்து தளபதி டி கால் பதவியேற்ருர். அதன் பிறகு ஐந்தாம் குடியரசு நிறுவப்பட்டது. ஆயினும், அல்ஜீரியப் பிரச்சினை தீரவில்லை. இறுதியில் அல்ஜீரியாத் தனது எதிர் காலத்தைத் தீர்மானிக்கும் உரிமை பெற வேண்டுமெனத் தளபதி டி கால் முடிவு செய்தார். அதாவது, பிரான்ஸுடன் ஒத்துழைப்பதன் மூலம் அல்ஜீரியாச் சுதந்தரம் பெற வேண்டும். அதைப் பற்றி நடைபெற்ற குடியொப்பத்தில் பிரெஞ்சு வாக்காளர்களுள் 91 சதவிகிதம் பேர் அத்தீர்மானத்தை ஆதரித்தனர். அதற்கேற்ப

அல்ஜீரியத் தாற்காலிக நிருவாகத்துறை ஒன்று நிறுவப்பட்டது. 1962ஆம் ஆண்டு ஜூலைத் திங்களில் தலைவர் அல்ஜீரியாவின் சுதந்தரத்தை அறிக்கையிட்டார். அப்போது அல்ஜீரியத் தாற்காலிக நிருவாகத்துறை இறைமை அதிகாரம் பெற்றது. அதன் பிறகுதான் அல்ஜீரிய அரசியலமைப்பின் சோதனைக்காலம் பிறந்தது. ஏனெனில், வல்லுநர் ஒருவர் கூறியது போல, கொள்கை காரணமாகத் தோன்றிய ஒரு கிளர்ச்சியினால் அல்ஜீரியாச் சுதந்தரம் அடைந்தது. ஆனால், அக்கொள்கை இன்னும் நடைமுறை அரசியலாய்க் கனியவில்லை.

## (இ) பெல்ஜியமும் காங்கோவும்

பெல்ஜியத்தின் கவனம் காங்கோவைச் சூழ்ந்திருந்தது. காங்கோ ஆப்பிரிக்காவின் பூமத்திய ரேகைப் பகுதியின் நடுவிலுள்ள பரந்த ஒரு நிலப்பகுதி. இப்போது அதன் மக்கள் தொகை ஒரு கோடியே நாற்பது இலட்சம். 1880இல் அப்பகுதி கைப்பற்றப்பட்ட பிறகு இரண்டாம் லியோபால்டு மன்னரின் நேர் ஆளுகையின்கீழ் இருந்தது. அப்போது அதற்குக் காங்கோ அரசு என்பது பெயர். 1908இல் லியோபால்டு தமது யதேச்சதிகாரத்தைக் கைவிட்டதும் காங்கோ, பெல்ஜியக் குடியேற்ற நாடானது. அதன் பிறகு பெல்ஜியர்கள் திரளாக அங்குக் குடியேறினார்கள். ஆயினும், ஒரு போதும் அங்குக் குடியேறிய ஐரோப்பியரின் தொகை ஒரு சதவிகிதத்திற்கு அதிகமானதில்லை.

உலகப் போர் இரண்டும் இடையில் காங்கோவில் தொழில்துறை முன்னேற்றமும், ஒரு சில சமூக சீர்திருத்தங்களும் நடைபெற்றன. ஆரம்பக் கல்வி ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. ஆயினும், பெல்ஜியம் அரசியல் உரிமைகளை மிகக் குறைந்த அளவில் சிறிது சிறிதாகவே வழங்கிவந்தது. காங்கோ சுதந்தரம் பெறும் வரையில் தேர்ந்தெடுக்கப் பட்ட ஒரு சில நகரசபைகளே அரசியல் உரிமைகளைப் பெற்றிருந்தன. காங்கோ மக்கள், தங்களுக்கு அரசியல், சமூக உரிமைகள் இல்லாமையையும், பிரிட்டிஷ், பிரெஞ்சு ஆட்சியிலிருந்த அண்டை நாடுகளில் வாழ்ந்த ஆப்பிரிக்கர்கள் அவ்வுரிமைகளைப் பெற்று வந்ததையும் கண்டார்கள். எனவே, காங்கோவில் அரசியற்கட்சிகள் தோன்றிச் சீர்திருத்தங்களும், அதிக அதிகாரங்களும், இறுதியில் சுதந்தரமும் வேண்டுமெனக் கிளர்ச்சி செய்தன. 1959ஆம் ஆண்டின் தொடக்கத்தில் அவர்களுடைய உணர்ச்சிகள் கொந்தளித்துப் பெருங் குழப்பங்களை உண்டுபண்ணின. அப்போது பெல்ஜிய அரசாங்கம் சீர்திருத்தத் திட்டம் ஒன்றைத் தீட்டி, அதற்கேற்பக் காங்கோ மக்களுக்குச் சுதந்தரப் பயிற்சி அளிப்பதாக அறிவித்தது. இச்

சீர்திருத்தங்களைச் செய்வதற்கான முயற்சிகள் நடைபெற்று வரும் போது 1960ஆம் ஆண்டு பிப்பிரவரித் திங்களில், நான்கு திங்கள் கழித்துக் காங்கோவுக்கு முழுச்சுதந்தரம் வழங்கப்படுமெனத் திடீரென பெல்ஜிய அரசாங்கம் அறிவித்தது.

அதன்படி 1960, ஜூனில் பெல்ஜியம் தான் திடீரெனச் செய்த தீர்மானத்தை நிறைவேற்றி, விரைவில் காங்கோவிலிருந்து வெளியேறியது. காங்கோ மக்கள் ஐக்கிய நாடுகளின் சங்கப் படைகளின் துணையின்றி அப்போது தம் நாட்டில் ஏற்பட்ட நெருக்கடியைத் தீர்க்க இயலவில்லை. அங்கு அரசியல் பிரிவுகளுக்கிடையே மூண்ட போராட்டம், 1961 வரை நீடித்தது. அவ்வாண்டில் தாற்காலிக அரசாங்கம் ஒன்று நிறுவப்பட்டது. காங்கோக் குடியரசு ஒரு நாட்டுக் கூட்டமாக அமைய வேண்டுமென்ற கொள்கையும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. 1962இல் கூட்டாட்சி அரசியலமைப்பு ஒன்று வரையப்பட்டது. தலைமை அமைச்சர் அதை 21 மாநிலங்களின் பிரதிநிதிகளின் முன் சமர்ப்பித்தார். குடியரசை 21 மாநிலங்களாகப் பிரிக்க வேண்டுமென்பது அத்திட்டம். அதன் விளைவு எவ்வாறு இருக்கும் என்பது அப்போது உறுதியாகச் சொல்ல இயலாதபடி இருந்தது.

## 5. கரிபியன் பகுதியில் கூட்டாட்சி முறைச் செயலாய்வுகள்

பொங்கியெழும் தேசீய உணர்ச்சியும், மங்கி வரும் குடியேற்ற நாட்டு முறையும் பெருமாறுதல்களைச் செய்துள்ள மற்றொரு பகுதி, கரிபியன் பகுதியாகும். அமெரிக்க ஐக்கிய நாடுகளைத் தவிர, பிரான்ஸும், நெதர்லாந்தும் அப்பகுதியில் அதிகமாக ஈடுபட்டிருந்தன. ஆயினும், அரசியமைப்பின் வரலாற்றைப் பொறுத்த வரையில், பிரிட்டனுக்கும் அப்பகுதிக்கும் இடையே ஏற்பட்ட தொடர்பு மிகவும் முக்கியமானது. 17ஆம் நூற்றுண்டிலிருந்து பிரிட்டன் பல்வேறு காலங்களில் பலப்பல மேற்கிந்தியத் தீவுகளைக் கைப்பற்றியது. அவற்றுள் பார்படாஸ், ஜமெய்க்கா, லீவர்டு விண்ட்வர்டு தீவுகள், டிரினிடாட், டொபாக்கோ ஆகியவற்றைக் குறிப்பிடலாம். அவற்றுள் ஒவ்வொன்றிலும் பிரிட்டன் நிருவாக சபை ஒன்றையும் சட்டசபை ஒன்றையும் நிறுவியது; பிறகு படிப்படியாக மேற்கு இந்தியர்களுக்கு நிருவாகத்தில் பங்களித்தது. இரண்டாம் உலகப் போர் முடிவதற்குள் அவை —சிறப்பாக ஜமெய்க்காவும் பார்படாஸும்—அரசியல் முன்னேற்றம் அடைந்திருந்தன. அப்போது அவ்விரு குடியேற்ற நாடுகளிலும் இரு சபையுள்ள சட்டமன்றம் இருந்தது. மன்றத்தில் சட்டசபை என்ற

மேல்சபையும், முற்றிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட கீழ்ச்சபையும் இருந்தன. வலிமைபொருந்திய தொழிலாளரியக்கம் காரணமாகக் கீழ்ச்சபையில் மேற்கு இந்தியர் பெரும்பான்மையான இடங்களைப் பெற்றனர். பிரிட்டிஷ் மேற்கிந்தியத் தீவுகளை ஒரு கூட்டாட்சியாக இணைக்க வேண்டுமென்று ஒரு திட்டம் உருவாகியது. அது அவற்றின் அரசியல் வரலாற்றில் ஏற்பட்ட மற்ருெரு முன்னேற்றம்.

1947ஆம் ஆண்டு ஜமெய்க்காவில் கூடிய மாநாட்டில் அத்திட்டம் முதலில் வாதத்திற்கு வந்தது. ஆயினும், அப்போது அதனுல் யாதொரு பயனும் ஏற்படவில்லை. ஆனுல், 1956இல் இலண்டனில் கூடிய மாநாட்டில் கலந்துகொண்டவர்கள், அத்திட்டத்தைப் பற்றி வாதித்ததுமல்லாமல், உறுதியான முடிவிற்கும் வந்தார்கள். பிரிட்டிஷ் பாராளுமன்றம் அதற்கேற்ற சட்டத்தை நிறைவேற்றி, ஆலோசனைக் குழுவின் ஆணை (Order in Council) ஒன்றை இயற்றி, 1958இல் மேற்கிந்தியத் தீவுகளின் கூட்டாட்சியை நிறுவியது. பத்துக் குடியேற்ற நாடுகள் கூட்டாட்சியின் உறுப்புகளாய் அமைந்தன. அவை மேலே குறிப்பிட்ட தீவுகளும் தீவுக்கூட்டங்களுமாகும். அவற்றின் பரப்பு ஏறக்குறைய 8,000 சதுரமைல்; மொத்த மக்கள் தொகை 30 இலட்சத்திற்குச் சிறிது அதிகம். அரசியலமைப்பு, செனட்டு, பிரதிநிதிகளின் சபை என்ற இரு சபைகளையுடைய கூட்டாட்சிச் சட்டமன்றத்தை நிறுவியது. கவர்னர் ஜெனரல் செனட்டின் உறுப்பினர்களை நியமித்தார். கூட்டாட்சி உறுப்புகளின் மக்கள் தொகைக்குத் தக்க விகிதத்தில் பிரதிநிதிகளின் சபை உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பாதுகாப்பு, அயல் நாட்டுத் தொடர்புகள், நிதி நிலையை உறுதிப்படுத்துதல் போன்ற அதிகாரங்களை பிரிட்டிஷ் அரசாங்கம் வைத்துக்கொண்டது. அவற்றைப் பற்றிய சட்டங்களை இயற்றுவதற்காக அது ஆலோசனைக் குழுவின் ஆணைகளை நிறைவேற்றியது. மற்ற எல்லா அதிகாரங்களையும் செலுத்தும் உரிமை கூட்டாட்சி அரசாங்கத்திற்கு வழங்கப்பட்டது. (கூட்டாட்சி அரசாங்கம் அவற்றை மாநிலச் சட்டமன்றங்களுடன் பகிர்ந்துகொண்டது. அம்மன்றங்கள் வட்டாரச் செய்திகளில் அதிகாரம் செலுத்தி வந்தன.) இந்த அதிகாரங்களைச் செலுத்துவதில் தலைமை அமைச்சரும் மற்ற அமைச்சர்களும் கவர்னர் ஜெனரலுக்கு அறிவுரை கூறினர். அவர்கள் சட்டமன்றத்திற்கும் பொறுப்புள்ளவர்கள்.

துணிவான இக்கூட்டாட்சி முயற்சி வெற்றி பெறவில்லை. ஜமெய்க்கா, தான் கூட்டாட்சியில் பெற்றிருந்த பிரதிநிதித்துவத்தைப் பற்றியும், கூட்டாட்சி அரசாங்கத்திடம் தான் விட்டுக்கொடுத்த அதிகாரங்களைப் பற்றியும் குறை கூறியது. 1961இல் ஜமெய்க்காவில்

நடைபெற்ற குடியொப்பத்தில் பெரும்பான்மையினரை மக்கள் ஜமெய்க்காக் கூட்டாட்சியிலிருந்து விலகவேண்டுமென வாக்களித்தார்கள். விரைவில் டிரினிடாடிலும் டொபாக்கோவிலும் (இரண்டிலும் சேர்ந்து) நடைபெற்ற குடியொப்பத்திலும் மக்கள் அத்தகைய விருப்பத்தையே தெரிவித்தார்கள். 1962இல் அப்பகுதிகளுள் ஒவ்வொன்றும் பிரிட்டிஷ் பொதுநலக் கூட்டினுள் குடியேற்ற உரிமை நாடாய் மாறியது. அப்பகுதிகள் பிரிந்து சென்றமையால், கூட்டாட்சி வலுவிழந்து சிதைந்துவிடும் நிலையில் இருந்தது. அப்போது கூட்டாட்சியில் இருந்த அரசுகளுக்கு இரு வழிகளே இருந்தன. அவை ஒன்றுசேர்ந்து ஒருமுக அரசை அமைத்து முழுச் சுதந்தரம் பெறலாம்; அல்லது அவை ஜமெய்க்கா, டிரினிடாட், டொபாக்கோ ஆகியவை செய்தது போலக் கூட்டாட்சியிலிருந்து பிரிந்து, தனியாகச் சுதந்தரம் பெறலாம். இப்பகுதிகளில் கூட்டாட்சி முயற்சி தோல்வியடைந்ததனுல் ஓர் உண்மை தெளிவாகத் தெரிகின்றது. அதாவது, நாம் முன் கூறியதுபோல, கூட்டாட்சியை அமைக்கும் உறுப்புகள் ஐக்கியத்தை விரும்பினுலன்றி, கூட்டாட்சி முறை வெற்றி பெற இயலாது என்பது.

## 6. குடியேற்ற நாட்டு முறையும் பொறுப்பாண்மையும்

போருக்குப் பிறகு குடியேற்ற நாடுகளில் நடைபெற்ற புரட்சியின் விளைவாக, 1,000,000,000 பேர்—அதாவது உலகத்தின் மொத்த மக்கள் தொகையில் மூன்றில் ஒரு பகுதியினர்—பேரரசுகளின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றுள்ளனர். நாம் மேலே கூறியபடி, ஒரு புதிய தேசீய உணர்ச்சி இம்மாபேரியக்கத்தை உந்தித் தள்ளியது. பழைய ஐரோப்பிய தேசீய உணர்ச்சி மறைந்து வந்த அந்நாளில் இப்புத்துணர்ச்சி தோன்றியது. ஆப்பிரிக்காவில் இப்புதிய தேசீய உணர்ச்சி இரு வகையாய் வெளிப்பட்டது. முதலாவது, ஏற்கெனவே நிறுவப்பட்ட தேசீய அரசை (Nation State) உடனே பலப்படுத்த முயலும் குறுகிய உணர்ச்சி; இரண்டாவது, ஆப்பிரிக்காக் கண்டத்திலுள்ள அரசுகளை ஒன்று சேர்க்கக் கருதும் அகில ஆப்பிரிக்க இயக்கம். கானுக் குடியரசின் ஆவண அரசியலமைப்பு (1960) இக்குறிக்கோளைத் தெளிவாக எடுத்துரைக்கின்றது. 'ஆப்பிரிக்க ஐக்கியத்தை அடைதல்' என்னும் தலைப்பின்கீழ் அரசியலமைப்பின் இரண்டாவது விதி கீழ்க்காணுமாறு கூறுகிறது:

'ஆப்பிரிக்க அரசுகளும் நிலப்பகுதிகளும் சேர்ந்து அமைக்கும் ஓர் ஐக்கியத்தினிடம் விரைவில் இறைமை அதிகாரம் ஒப்படைக்கப்

படும் என்ற நம்பிக்கையுடன் மக்கள், கானுவின் இறைமை முழுவதையும்—அல்லது அதன் ஒரு பகுதியை—விட்டுக்கொடுக்கும் அதிகாரத்தைப் பாராளுமன்றத்திற்கு இப்போது வழங்குகிருர்கள்.

பழைய குடியேற்ற நாட்டு முறை முற்றிலும் மறைந்துவிடவில்லையெனினும், இப்போது அழிவுறும் நிலையில் இருக்கின்றது. ஆயினும், உலகில் முன்னேற்றமடைந்துள்ள நாடுகள் வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு உதவியளிப்பதில் வருங்காலத்தில் யாதொரு பங்கும் பெற இயலாது எனக் கருதுவது தவறு. சுதந்தரம் பெற்ற நாடுகளையும் வளர்ச்சி குறைந்த நாடுகளுடன் சேர்க்கவேண்டும். ஆப்பிரிக்கர்கள் அகில ஆப்பிரிக்க அரசை உருவாக்கலாமென எண்ணிக்கொண்டிருக்கலாம். ஆயினும், அதற்கு முன் அவர்கள் ஏற்கெனவே நிறுவியுள்ள அரசுகளில் அரசாங்கத்தை உறுதிப்படுத்தி, இயற்கை வளங்களைப் பெருக்கி, பிணி, வறுமை, அறியாமை ஆகியவற்றை நீக்க வேண்டியிருக்கிறது. பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டு வளர்ச்சிக் கழகம் (British Colonial Development Corporation), பன்னுட்டுக் கொழும்புத் திட்டம் (Colombo Plan), மற்றும் பல அமெரிக்க நிறுவனங்கள் போன்றவை வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு உதவியளித்து வருகின்றன. இவற்றைத் தவிர, ஐக்கிய நாடுகளின் பொருளாதார, சமூக அவையுடன் சேர்ந்து செயலாற்றும் ஐக்கிய நாடுகளின் தனிச்செயல்களில் ஈடுபட்டுள்ள நிலையங்களும் (Specialised Agencies) உள்ளன. (இவற்றைப்பற்றி மற்றோர் இயலில் பார்ப்போம்.) ஆயினும், புதிதாகச் சுதந்தரம் பெற்றுள்ள இந்நாடுகளில் அரசியலமைப்புகள் வழங்கும் உரிமைகளும் வாய்ப்புகளும் நிலைபெற வேண்டுமானுல், முன்னேற்றமடைந்த நாடுகள் இன்னும் பல வகைகளில் அவற்றிற்குத் துணை செய்ய வேண்டும்.

சுதந்தரம் பெற்றுள்ள நாடுகளுக்கே இவ்வளவு உதவி தேவையென்ருல், அந்நிலையை இன்னம் அடையாத சமூகங்களுக்கு எவ்வளவு உதவி தேவை என்பது கூறவேண்டுவதில்லை. அவற்றின் எதிர்காலப் பாதுகாப்பு அவற்றை ஆளும் அரசுகளின் கைகளில் இருக்கின்றது எனலாம். அங்கெல்லாம் பழங்காலக் குடியேற்ற நாட்டு முறை நீங்கிப் பொறுப்பாண்மை (Trusteeship) முறை வளரவேண்டும். ஆட்சியுரிமை முறையை (Mandate System) நிறுவிய சர்வதேச சங்க ஒப்பந்தம் இதை வலியுறுத்தியது. ஐக்கிய நாடுகளின் சங்க சாசனம் இதை மூன்று இயல்களில் விளக்குகிறது. அவற்றுள் முதல் இயல் தன்னுட்சி பெருத பகுதிகளைப் பற்றிய அறிக்கையுடன் தொடங்குகிறது. அதன்படி, முற்றிலும் தன்னுட்சி பெருத பகுதிகளை ஆளும் பொறுப்புடைய ஐக்கிய நாடுகளின் சங்க உறுப்பினர்கள் 'இப்பகுதிகளில் வாழும் மக்களின் நலன்கள் தலையாயவை' என்பதை

யும் 'அவர்களின் நலனை வளர்ப்பது தமது புனிதப் பொறுப்பு' என்பதையும் ஏற்றுக்கொள்ள வேண்டும். அவ்விதியின்படி, அத்தகைய உறுப்பினர்கள் அப்பகுதிகளில் 'தன்னாட்சியை வளர்ப்பதற்கும், அங்கு வாழும் மக்களின் அரசியல் விருப்பங்களை நன்கு அறிவதற்கும், அவர்களிடையே உரிமை பெற்ற அரசியல் நிறுவனங்கள் படிப்படியாக வளரத் துணை செய்வதற்கும்' முயற்சி செய்யவேண்டும். இதை 'ஒவ்வொரு பகுதியின் குறிப்பிட்ட சூழ்நிலைக்கும், அங்கு வாழும் மக்களின் சூழ்நிலைக்கும், அவர்கள் முன்னேற்றம் அடைந்து வரும் பற்பல நிலைகளுக்கும் ஏற்றவாறு' செய்ய வேண்டும்.

ஐக்கிய நாடுகளின் சங்க சாசனம் பொறுப்பாண்மைக் கொள்கையை விளக்கிக் கூறுகின்றது. அது முன்னேற்றமடைந்த நாடுகளுக்கும் வளர்ச்சி குன்றிய நாடுகளுக்குமிடையேயுள்ள தொடர்பைப் புதியதொரு நிலைக்கு உயர்த்துகிறது. அதை உலகின் பொதுச்சட்டம் எனலாம். இதற்காக ஐக்கிய நாடுகளின் சங்கம் பொறுப்பாண்மை அவை (Trusteeship Council) ஒன்றை நிறுவியுள்ளது. ஆயினும், கொள்கையைச் செயல் முறையில் நடத்த நிறுவனத்தை அமைத்து விடுவது மட்டும் போதாது. நாளடைவில் பொறுப்பாண்மைக் கொள்கையின் வெற்றியும் தோல்வியும் பன்னாட்டு நிறுவனம் ஒன்று இருப்பதை மட்டும் பொறுத்திரா. அது, வலிமையும் வளமும் மிகுந்த நாடுகள் அரசியல் வளர்ச்சி குறைந்த நாடுகளைத் தன்னாட்சி நோக்கி வழி நடத்தி முடிவில் முழுச்சுதந்தரம் பெறச்செய்வதைப் பொறுத்துள்ளது. பன்னாட்டு நிறுவனம், உலக அமைதிக்கும் மனித இனத்தின் நலத்திற்கும் இன்றியமையாத இப்பொருள் பற்றி மக்களின் கவனத்தை ஈர்த்து, அவர்களுக்கு ஊக்கம் அளிக்க இயலுமே தவிர, வேறொன்றும் செய்ய இயலாது.

## படிக்க வேண்டிய நூல்கள் :

1. அலெக்ஸாண்டர் (Alexander) : World Political Patterns, இயல் *11, 12, 15*

2. ஃப்ரீட்மன் (Friedmann) : Introduction to World Politics, இயல் *6, 8*

3. நிக்கொலாஸ் (Nicholas) : United Nations, இயல் 6

4. தாம்ஸன் (Thomson) : Europe since Napoleon, இயல் 31

5. வில்லியம்ஸன் (Williamson) : Short History of British Expansion, பக்கம் *574—615*

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள் :

1. காரிங்டன் (Carrington): British Overseas

2. கார்ட்டர் (Carter): Independence for Africa

3. கோஹன் (Cohen): British Policy in Africa

4. கிரௌலி (Crowley): Background ofCurrent Affairs

5. கார்டன் வாக்கர் (Gordon Walker): Commonwealth

6. ஜென்னிங்ஸ் (Jennings): Party Politics, III; Stuff of Politics; British Commonwealth of Nations

7. கீத் (Keith): Governments of the British Empire

8. மூஸா (Moussa): Underprivileged Nations

9. பெர்ஹாம் (Perham): Colonial Reckoning

10. பைலீ (Pylee): India's Constitution

11. ராவ் (Rau): India's Constitution in the Making

12. ஸிம்னெட் (Simnett): Emergent Nationalism

13. ஸ்லேட் (Slade): Belgian Congo

14. டூஸெய்ன்ட் (Toussaint): Trusteeship System

15. Constitutions of All Countries of British Empire (1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்திற்கு இதைப் பார்க்க.) World Survey and Whitaker (குடியேற்ற நாடுகளின் அரசியலமைப்புக்கு இதைப் பார்க்க.)

## கட்டுரைக்கேற்ற பொருள்கள் :

1. உலகப் போர்கள் இரண்டிலும் மத்தியக்கிழக்கு நாடுகளின் அரசியல் நிலையில் ஏற்பட்ட விளைவுகள் யாவை? மேற்கு நாடுகளின் அரசியலமைப்புக்குட்பட்ட அரசாங்க முறை அப்பகுதியிலுள்ள அரசுகளுக்கு இன்று எவ்வாறு பொருந்துமெனக் கூறுக.

2. எகிப்தில் நிலவிய முந்திய பிரிட்டிஷ் பாதுகாப்பாட்சியின் இயல்பை விளக்கி, பிரிட்டன் வெளியேறிய பிறகு அங்கு நிகழ்ந்த அரசியல் மாற்றங்களைக் கூறுக.

3. இஸ்ராயேல்குடியரசின்தோற்றத்தையும் அரசியலமைப்பையும் சுருக்கமாக வரைக. பின் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பார்த்தால், பாலஸ்தீனில் (1917இல்) 'யூதர்களின் தேசியத் தாயகம்' அமைப்பது பற்றிச் செய்த முடிவு நல்ல முடிவா என்பதை ஆராய்க.

4. ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும் தோன்றிய தேசீய உணர்ச்சியினாலும், அக்கண்டங்களிலிருந்து பேரரசுகள் வெளியேறியதனாலும் விளைந்த விளைவுகளைக் 'குடியேற்ற நாட்டுப் புரட்சி' என வழங்குவது எவ்வாறு பொருந்தும்?

5. *1919, 1935*ஆம் ஆண்டுகளின் சட்டங்கள் இந்தியாவுக்கு எத்தகைய தன்னாட்சி அதிகாரங்களை வழங்கின? இப்போது இந்தியா, பாக்கிஸ்தான் ஆகிய இரு குடியரசுகளையும் எதிர் நோக்கி நிற்கும் அரசியலமைப்புச் சிக்கல்கள் யாவை?

6. முன்பு மலேயாவில் பிரிட்டிஷ் பேரரசு செலுத்தி வந்த அதிகாரத்தைப் பிரெஞ்சுக்காரர்கள் இந்தோ-சீனாவிலும் டச்சுக்காரர்கள் இந்தோனீசியாவிலும் செலுத்திவந்த அதிகாரத்துடன் ஒப்பிடுக. ஒவ்வொரு பகுதியிலும் ஐரோப்பிய வெளியேற்றத்திற்குப் பிறகு என்ன அரசியல் விளைவுகள் ஏற்பட்டன?

7. இது வரை பிரிட்டன் ஆப்பிரிக்காவிலிருந்து வெளியேறிய விதத்தை வரைக. முன்பு பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளாய் இருந்து இப்போது சுதந்தரம் பெற்றுள்ள—அல்லது பெறப்போகும்—பகுதிகளின் அரசியல் நிலையை விளக்குக.

8. பிரெஞ்சுக்காரர் அல்ஜீரியாவிலும் பெல்ஜியர் காங்கோவிலும் பயன்படுத்திய குடியேற்ற நாட்டு முறைகளை ஒப்பு நோக்குக. ஒவ்வொன்றிலும் பேரரசுகள் தங்கள் பொறுப்பை விட நேர்ந்த காரணங்களையும் அவற்றின் விளைவுகளையும் விளக்குக.

9. மேற்கு இந்தியத் தீவுகளின் கூட்டாட்சியை அமைப்பதற்கு முன் நிகழ்ந்த அரசியலமைப்பு மாற்றங்களை விளக்கி, அது தோல்வியுற்றதன் காரணங்களைக் கூறுக.

10. அரசியல் வளர்ச்சி குறைந்த நாடுகளில் தன்னாட்சியை வளர்ப்பதற்குச் சர்வதேச சங்கம் நிறுவிய ஆட்சியுரிமை முறையை விட ஐக்கிய நாடுகள் சங்கம் தீட்டிய பொறுப்பாண்மைக் கொள்கை எவ்வகையில் சிறந்தது?

# 15. பொருளாதார அமைப்பு: தேசீய அமைப்பும் பன்னாட்டு அமைப்பும்

## 1. அரசியல், பொருளாதார ஜனநாயகம்

இது வரை அரசியல் முறைமைக்குட்பட்ட அரசின் அரசியல் நிறுவனங்களையே ஆராய்ந்தோம். இப்போது அதன் பொருளாதார அமைப்பைப் பற்றிக் கூறுவோம். ஏனெனில், அது நாட்டின் பொருளாதாரச் சிக்கல்களில் மட்டுமல்லாமல், பன்னாட்டுத் தொடர்புகளிலும் சிறப்பான இடம் பெற்றுள்ளது. இங்கு நாம் பொருளாதாரப் பிரச்சினைகளை விரிவாகப் பார்க்கப்போவதில்லை; ஆனால், ' அரசியல் முறைமைக்குட்பட்ட அரசில் உண்மையான பொருளாதார ஜனநாயகத்தை நிறுவுவதற்காக இதுவரை என்ன செயதிருக்கின்றனர்? இன்னும் என்ன செய்யலாம்?' என்பதை மட்டும் இங்குக் குறிப்பிடுவோம். அதாவது, 'அரசியல் ஜனநாயகம் வாயிலாக வாழ்க்கையின் பொருளாதார நிலைமையைக் கட்டுப்படுத்தச் செய்யும் முயற்சிகளைமட்டுமல்லாமல், ஏற்கெனவே இருக்கும் அரசியல் நிறுவனங்களைப் போன்று பொருளாதாரக் கட்டுப்பாட்டு நிறுவனங்களையும் எவ்வாறு அமைக்கலாம்?' என்பதையும் விளக்குவோம். அது அரசியலமைப்புக்குப் புறம்பான பொருளாய் இருப்பதால்—பல வகைகளில் அது தன் இயற்கையிலே புறம்பாய் இருக்கவேண்டுமாதலால்—அதைப் பற்றி விரிவாக ஆராய்வதற்கு இந்நூல் இடம் தாராது. ஆயினும், அது நடைமுறை அரசியலைச் சார்ந்திருப்பதால், அதை ஆராயும் அவசியம் ஏற்படுகிறது.

அக்கால அரசின் தொடக்கக் காலத்தில் அரசாங்கத்தின் பொருளாதார அலுவல்களுக்குச் சிறப்பிடம் கொடுக்கப்பட்டிருந்தது. நாட்டின் ஆற்றலை வளர்ப்பதற்காக அரசியல் வல்லுநர்கள் சமூகத்தின் பொருளாதார நடவடிக்கைகளைச் சட்டங்கள், ஒழுங்குத் திட்டங்களின் மூலமாகக் கட்டுப்படுத்தி வந்தார்கள். இதையே

வணிகக் கூட்டமுறை (Mercantile System) என வழங்கினர். செல்வம் என்பது பணம் அல்லது விலையுயர்ந்த உலோகம் என்றும், அவை நாட்டின் ஆற்றலை வளர்க்கின்றன என்றும் மக்கள் நம்பி வந்ததால், இம்முறை தோன்றியது. 17ஆம் நூற்றாண்டிலிருந்து இக் கொள்கை மேற்கு ஐரோப்பா முழுவதும் நிலவி வந்தது. இதுதான் அக்கால அரசியல் நடவடிக்கைகளை எல்லாம் இயக்கி வந்தது. 18ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்த ஐரோப்பியப் போர்களுக்கும் இதுவே காரணமாய் இருந்தது. உள் நாட்டிலும், அரசில் மலிந்து தோன்றிய வாணிகம், தொழில் இவற்றைக் கட்டுப்படுத்துவதற்கு இது வழி வகுத்தது. அந்நூற்றாண்டின் இறுதியில், ஆடம் ஸ்மித்து (Adam Smith) என்பவரின் 'Wealth of Nations' என்ற நூல் இக்கொள்கையைப் பெரிதும் தாக்கியது. தன் பொருளாதார நலன்கள் எவை என்பது தனி மனிதனுக்கு நன்கு தெரியும் என அவர் கூறினார். இதே கருத்து, 18ஆம் நூற்றாண்டின் பின்பகுதியிலும், 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் நிலவிய அரசியற்கோட்பாட்டில் எதிரொலித்தது. அமெரிக்க, பிரெஞ்சுப் புரட்சியின் கோட்பாட்டு அறிஞர்களும், தாமஸ் பெய்ன் (Thomas Paine), ஜெரமி பெந்தாம் (Jeremy Bentham), வில்லியம் வான் ஹம்போல்ட் (William von Humboldt) போன்ற நூலாசிரியர்களும் அரசாங்கம் என்பது தேவையான தீமை எனப் பல வகைகளில் கூறினார்கள். ஆகவே, அது தனி மனிதனின் செயல்களில் மிகக் குறைந்த அளவிலேதான் தலையிடவேண்டுமென்றும், தனி மனிதனை வல்லந்த முறைகளிலிருந்தும் ஏமாற்றங்களிலிருந்தும் காப்பதே அதன் தலையாய கடமை என்றும் அவர்கள் கூறினார்கள்; அரசாங்கம் நீதி வழங்கும் நிறுவனமாய் இருப்பதால், அது பொருளாதார நடவடிக்கைகளில் தலையிடுவது முற்றிலும் தவறு என்று கருதினார்கள்.

அக்காலத்து நிகழ்ச்சிகள் இக்கொள்கைகளை ஆதரிப்பவை போலத் தோன்றின. இங்கிலாந்தில் 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தொழிற்புரட்சியின் விளைவாகப் பல மாறுதல்கள் தோன்றின. அதனால், அரசாங்கத்தின் கட்டுப்பாடுகள் எல்லாம் வழக்கொழிந்தன. நெப்போலியன் போர்கள் காரணமாகவும் அவற்றின் விளைவுகளின் பயனாகவும் டோரிக் கட்சியினரின் பிற்போக்குக் கொள்கை நிலவி வந்தது. அதன் பிறகு சீர்திருத்தக் காலம் தொடங்கவே, எல்லாக் கட்டுப்பாடுகளும் அழிந்தொழிந்தன. சமூகத்தின் பொருளாதார நடவடிக்கைகளில் தலையிடாக் கொள்கை (Laissez - Faire) நிலவத் தொடங்கியது. இக்காலம் ஏறக்குறைய 1825 முதல் 1870 வரை நீடித்திருந்தது என்னலாம். இதை டைஸி 'பெந்தாமின் தனியாள் உரிமைக் கொள்கையின் (Benthamite Individualism) காலம்' என்று வழங்குகிறார். நாம் இந்நூலில் ஆய்ந்த அரசியல் முறைமைக்குட்

படுகையின் விரைவான வளர்ச்சிக்கு 19ஆம் நூற்றாண்டின் இந்தத் தனியாள் உரிமைக் கொள்கை பெரும்பாலும் ஊக்கமளித்து வந்தது. ஆனால், இக்காலத்தில் தலையிடாக் கொள்கையினால் பெருந்தீங்கு விளைந்தது. ஆகவே, அரசாங்கத்தின் பொருளாதார அலுவல்களைப் பற்றிப் புதியதொரு கருத்துத் தோன்றியது. அதன்படி சமூகத்தின் பொருளாதார நலன்களை ஒழுங்குபடுத்துவதில் அரசாங்கம் பெரும் பங்கெடுக்க வேண்டுமென்ற உறுதியான நம்பிக்கை பிறந்தது. ஏனெனில், அப்போது சமூகம் அந்நலன்களைக் காக்க இயலவில்லை. ஆகவே, இன்று நாம் கூட்டுடைமைக் கொள்கை (Collectivism) எனக் கூறும் கொள்கை அப்போது தோன்றியது. வெளித்தோற்றத்திற்கு இது பழைய அரசியற்பழக்கத்திற்கு எதிராய்க் கிளம்பியது போலத் தெரிகின்றது. சக்கரம் ஒருமுறை முற்றிலும் சுழன்றுவிட்டது போலத் தோன்றுகிறது, ஆனால், இது வெளித்தோற்றமேயன்றி, உண்மையன்று. ஏனெனில், மக்களுக்கு அன்புப் பணியாற்ற வேண்டுமென்ற ஆர்வம் இப்புதிய கொள்கையை ஊக்குவித்தது. இதற்கும் வணிகக் கூட்ட முறைக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. மேலும், இக்கொள்கை அரசைக் குலைக்க முயலும் ஆற்றல்களிடமிருந்து அரசைக் காப்பதற்காகப் பரவி வந்தது. (இந்த ஆற்றல்கள் முந்திய காலத்தில் இருந்ததில்லை.) அவை அரசியல் ஜனநாயகம் பயனற்றதென்றும், அதனால் பொதுமக்களின் பொருளாதார நலன்களைக் காக்க இயலாதென்றும் கருதின. ஏனெனில், பொருளாதாரக் கூட்டாச்சிகள் அரசியல் ஜனநாயகத்தை ஏற்கெனவே கட்டுப்படுத்தி விடுகின்றன. அவற்றைத் தேர்தல்கள் மூலமாக எதிர்க்க முயலுவது வீண்.

கூட்டுடைமைக் கொள்கையின்படி, அரசு சமுதாயத்தின் நலங் கருதிக் கட்டாய முறைகளைப் பின்பற்றுகிறது. இதன் விளைவாக அரசின் நிறுவனங்கள் பெருகிவிட்டன. எனவே, இன்றைய உலகில் காணப்படும் முற்போக்குள்ள அரசுகளில் எல்லாம் பிரிட்டனில் இருப்பது போன்ற விவசாயம், தொழில், சுகாதாரம், உணவு, எரி பொருளும் சத்தியும் போன்ற புதிய அரசாங்கத் துறைகள் நிறுவப்பட்டுள்ளன. எல்லா அரசியற்கட்சிகளும் இப்போது கூட்டுடைமைக் கொள்கையை நடைமுறையில் ஓரளவு ஏற்றுக்கொண்டுள்ளன. கூட்டுடைமை முறைமை எவ்வளவு தூரம் செயலாற்றலாம் என்பதைப் பற்றியே அரசியல் முறைமை வாதிகளுக்கிடையே கருத்து வேற்றுமை நிலவுகிறது. நாம் பழைய அரசியற்கட்சிகள் என்று வழங்கக் கூடியவை அரசாங்கக் கட்டுப்பாடுகள் தேவையென ஏற்றுக் கொண்ட போதிலும், தனியாள் உரிமைகளை விட்டுக்கொடுக்க மறுக்கின்றன. மேலும், அவை உற்பத்திச் சாதனங்கள் அரசாங்க உடைமையாக வேண்டுமென்ற கொள்கையை ஏற்பதில்லை. அதற்கு

மாறாக, சமதர்மவாதிகள் (Socialists) இக்கொள்கையை ஏற்றுக் கொள்வதுமல்லாமல், அரசியலமைப்பை முற்றிலும் மாற்றாமல் இதைச் செயலாற்ற இயலுமென்றும் நம்புகின்றார்கள். மேலும், அரசியல் முறைமைக்குட்பட்ட அரசு, நாளடைவில் வளர்ந்துகொண்டே வரும் பொருளாதாரத் தேவைகளை நிறைவேற்றவில்லையென்றால், அதற்குப் பதிலாக வேறொரு வல்லந்த முறையைப் பயன்படுத்தும் சமூக நிறுவனம் தோன்றிவிடும் என்றும் அவர்கள் கூறுகின்றார்கள்.

ரஷ்யாவின் பொதுவுடைமை ஆட்சியில் அரசின் பொருளாதார அமைப்பு உச்ச நிலையை அடைந்திருக்கிறது. இது போலவே ரஷ்யாவைச் சார்ந்துள்ள பொதுவுடைமை நாடுகளிலும், சிறப்பாகச் சீனப் பொதுவுடைமை ஆட்சியிலும் நடைபெற்று வருகிறது. லெனின் என்பவரின் பழைய சோவியத்து அரசியலமைப்பு, அரசை அரசியல் முறைப்படி அமைப்பதைவிட, பொருளாதார முறைப்படி அமைப்பதையே அதிகமாக வலியுறுத்துகிறது. ஆனால், அதுவும் கட்டாய முறைகளையே பயன்படுத்தியது. லெனின் கருத்துப்படி ரஷ்யப் புரட்சி சமதர்மத்தையோ அல்லது மக்களாட்சியையோ நிறுவவில்லை. ஆனால், அது தொழிலாளரின் வல்லாட்சியை (Dictatorship of the Proletariat) ஆதாரமாகக் கொண்ட ஓர் இடைக்கால அரசையே நிறுவியது. புரட்சியின் நோக்கங்கள் படிப்படியாக நிறைவேறியதும் அவ்வரசு குலைந்துவிடும்; இறுதியில் வகுப்புப் பிரிவற்ற சமூகம் உருவாகுமாதலால், அப்போது எத்தகைய அரசும் தேவையிராது என லெனின் கூறினார். ஆனால், அந்நிலை இன்னம் வரவில்லை. ஏனெனில், ரஷ்யாவில் இப்போது நிலவும் பொதுவுடைமைச் சர்வாதிகார ஆட்சி லெனின் காலத்து ஆட்சியைவிட ஆற்றல் குறைந்ததாய் இல்லை.

## 2. பொருளாதார அவைகளும் சோவியத்துகளும்

நாம் இதுவரை ஆராய்ந்த அரசியல் முறைமைக்குட்பட்ட மேல்நாட்டு அரசுகளில் எல்லாம் நிலப்பகுதி சார்ந்த தொகுதிதான் (Territorial Constituency) தேர்தல் முறையின் அடிப்படையாய் இருக்கிறது என்பதைக் காண்கிறோம். இதையே அரசியல் ஜனநாயகத்தின் தீமைகளுள் ஒன்றெனச் சீர்திருத்த வாதிகள் அடிக்கடி குறிப்பிடுகின்றார்கள். நிலப்பகுதி சார்ந்த தொகுதிகளை முற்றிலும் நீக்காவிடினும், அவற்றுடன் தொழில்வகைத் (functional) தொகுதிகளையும் சேர்த்துக்கொள்ளுதல் நலம் என அவர்களுள் பலர் கருதுகின்றனர். அம்முறையைப் பயன்படுத்தினால், வாக்காளர்கள் இப்போது செய்வதைப் போல, தாம் வாழும் மாவட்டத்தில் வாக்களிப்பதற்குப் பதிலாக, தமது தொழிலுக்குரிய தொகுதியில் வாக்களிப்பார்கள். இதனால், பொருளாதாரப் பிரிவுகள் பிரதிநிதித்துவம் பெறுகின்

றன. நிலப் பிரிவுகளுக்கேற்பத் தொகுதிகளைப் பிரிப்பதால், இதைப் பெற இயலாது. மேல் சபையைத் திருத்தி அமைப்பதால் இதைச் செய்ய இயலும். நாட்டின் தொழில்துறைகளுக்குப் பிரதிநிதித்துவம் வழங்குவதற்காகத் தொழில்வகைத் தொகுதிகளிலிருந்து மேற்சபையின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கலாம். கீழ்ச்சபைக்கு இப்போது இருப்பது போல நிலப்பகுதி சார்ந்த தொகுதியிலிருந்து உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கலாம். நாம் ஏற்கெனவே பார்த்தது போல, அயரின் 1937ஆம் ஆண்டு அரசியலமைப்பு இக்கருத்தை ஓரளவு ஏற்றுக்கொண்டுள்ளது. அது தொழில் வகைக் கூட்டங்கள் அல்லது சங்கங்கள் தங்கள் பிரதிநிதிகளைச் செனட்டின் உறுப்பினர்களாக நேராகத் தேர்ந்தெடுக்கலாம் எனக் கூறியது.

பொருளாதார அவைகள் மூலமாகவும் அந்தக் குறிக்கோளை அடைய இயலும். உரிமை நாடான அயர்லாந்தின் முந்திய அரசியலமைப்பிலும் (1922) வெய்மார் குடியரசிலும் (1919) இதை முயன்று பார்த்தனர். பிரான்ஸின் நான்காவது, ஐந்தாவது குடியரசுகளின் அரசியலமைப்பிலும் இம்முறை இடம் பெறுகின்றது.

உரிமை நாடான அயர்லாந்தின் அரசியலமைப்பின் 45ஆம் விதியின்படி, பாராளுமன்றம் ‘நாட்டின் சமூக, பொருளாதார பிரிவுகளுக்குப் பிரதிநிதித்துவம் வழங்குவதற்காகத் தொழில்வகை அவைகளை நிறுவலாம்.’ ஆனால், பிறகு இம்முறை கைவிடப்பட்டு, இதற்குப் பதிலாக அப்பிரிவுகளுக்குச் செனட்டில் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டது.

வெய்மார் குடியரசு இன்னம் அதிக சீர்திருத்தங்களைச் செய்தது. அதன் 164ஆம் விதி, தனி மனிதர்கள் நடத்தும் தொழில்துறையில் வேலை செய்யும் தொழிலாளர்கள் அவைகளிலும், பொருளாதார மாவட்டங்களுக்கேற்பப் பிரிக்கப்பட்டுள்ள மாவட்டத் தொழிலாளரின் அவைகளிலும், ரைக்(Reich)கின் தொழிலாளர் அவையிலும் தொழிலாளர்களுக்குப் பிரதிநிதித்துவம் வழங்கப்படவேண்டும் என்று கூறியது. மேலும், இந்த அவைகளும் முதலாளிகளின் பிரதிநிதிகளும் ஒன்று சேர்ந்து மாவட்டப் பொருளாதார அவைகளையும், ரைக்கின் பொருளாதார அவையையும் அமைக்கவேண்டும் என்றும் அவ்விதி கூறியது. சமூக, பொருளாதார நலன் சார்ந்த எல்லா மசோதாக்களையும் பாராளுமன்றத்திற்குமுன் கொண்டு வருவதற்கு முன்னால் பொருளாதார அவையின் முன் சமர்ப்பிக்க வேண்டும். அத்தகைய மசோதாவைப் பாராளுமன்றத்தின்முன் கொண்டு வருவதற்கும் அந்த அவைக்கு உரிமை இருந்தது. ஹிட்லர் அம்முறையையும் வெய்மார் அரசியலமைப்பின் பிற பகுதிகளையும் அழிப்பதற்கு முன் அது ஓரளவு

வெற்றிகரமாக நடைபெற்றது எனலாம். 1949ஆம் ஆண்டின் கூட்டாட்சிக் குடியரசின் அரசியலமைப்பு அம்முறையைப் புதுப்பிக்கவில்லை. ஆயினும், 1951இல் நிறைவேறிய சட்டம், 'ஒருங்கியைந்த நிருவாகம்' (Co-management) அல்லது 'ஒருங்கியைந்து முடிவு செய்தல்' (Co-determination) என்ற கொள்கையை வலியுறுத்தியது. இதன் விளைவாகப் பெருந்தொழில்களில் எல்லாம்—சிறப்பாக நிலக்கரி, இரும்பு, எஃகு உற்பத்தித் தொழில்களில்—தொழிலாளர்கள் நிருவாகத்தில் பங்கு பெற்றுள்ளார்கள். மேற்கு ஜெர்மனி போருக்குப் பிறகு அடைந்துள்ள பொருளாதார வளர்ச்சிக்கு இது ஒரு முக்கியமான காரணம் எனலாம்.

பிரான்ஸில் 1946ஆம் ஆண்டு நிறுவப்பட்ட அரசியலமைப்பு ஒரு பொருளாதார அவையை ஏற்படுத்தியது. தேசீய அவை பொருளாதாரத் துறையைச் சார்ந்த மசோதாக்களை வாதிப்பதற்குமுன் அவற்றைப் பொருளாதார அவையின் முன் சமர்ப்பித்தது. பொருளாதார அவை, அவற்றை ஆய்ந்து, அறிவுரை வழங்கியது. 1958ஆம் ஆண்டின் அரசியலமைப்பும் அத்தகைய நிறுவனமொன்றை நிறுவியது. அதற்குப் **'பொருளாதார சமூக அவை'** என்னும் புதிய பெயர் வழங்கப்பட்டது. 'அரசாங்கம் அதன் அறிவுரையை நாடிய போதெல்லாம்' அந்த அவை தன்முன் சமர்ப்பிக்கப்பட்ட மசோதாக்களைப் பற்றித் தனது கருத்தைத் தெரிவித்தது.

'அரசின் முறைமையை இவ்வாறு பிரிக்க இயலுமா?' எனும் கேள்வி இங்கு எழுகின்றது. ஒரு நூலாசிரியரின் கருத்துப்படி. ஆட்சி வழிச் சமதர்மத்திற்கும் (State Socialism) தொழிற்குழுவாட்சிக்கும் (Sindicalism) இடையே வேறு நடுவழி எதுவும் இல்லை. இறைமையைப் பிரிக்க இயலாதாகையால், அதன் விருப்பம், அரசியல் நிறுவனமாகிய பாராளுமன்றம் வழியாக நிறைவேற வேண்டும். பாராளுமன்றம் பொருளாதாரச் சங்கங்களை ஏற்றுக்கொண்ட போதிலும், தனது அலுவலில் அவை தலையிட இடங்கொடுப்பதில்லை. இறைமையின் விருப்பம் அரசியல் நிறுவனமாகிய பாராளுமற்றத்தின் மூலமாக நிறைவேறுவிடில், வரையிறந்த அதிகாரமுடைய தொழிற்பாராளுமன்றம் (Parliament of Industry) வாயிலாக நிறைவேற வேண்டும். இதுதான் சுருக்கமாகத் தொழிற்குழுவாட்சி என்பதன் பொருள். அரசியல் அவையொன்றும் பொருளாதார அவையொன்றுமாக இரண்டு அவைகள் இருக்கும் போதும் இதே சிக்கல் தோன்றுகிறது. அதாவது, அவை இரண்டும் இணையான நிறுவனங்களாய் இருக்க இயலுமா? ஆகவே, அரசியல் முறைமைக்குட்பட்ட அரசு தனக்கு இணையான ஓர் ஆற்றலுடன் தனது இறைமையைப் பகிர்ந்துகொள்ள இயலுமா என்பதும், வல்லந்த முறைகளுக்குப் பணிந்த பிறகும் அது உயிர்

வாழ்கின்றது எனக் கூற இயலுமா என்பதும் இங்கு எழும் கேள்விகள். வாணிகக் கழகச் சமதரும வாதிகள் (Guild Socialists) சாதாரண மாக அமைதியை விரும்பும் குடிகளாய் இருந்தபோதிலும் சில வேளை வல்லந்த முறைகளைப் பயன்படுத்தினார்கள். ஆனால், அவர்கள் அவற்றைத் தங்கள் திட்டங்களைச் செயலாற்றவே பயன்படுத்தினார் கள். அவர்கள் கருத்துப்படி ஒரு பொது வேலை நிறுத்தம் நடை பெறும் போது அரசாங்கம் உற்பத்திச் சாதனங்களைத் தனது உடைமையாக்கிக்கொள்ள வேண்டிய தேவை ஏற்படுகிறது. பிறகு அது அவற்றைப் பொருத்தமான தொழிற்குழுக்கள் அல்லது சங்கங் களுக்கு வாடகைக்கு விடும். அதன் பிறகு அக்குழுக்களும் சங்கங் களும் தங்கள் வாணிகம் சார்ந்த எல்லாப் பொருளாதார விஷயங்களை யும் (கூலி, விலை, தொழிலாளர் போன்ற நிலை போன்றவற்றை) கட்டுப்படுத்தும்.

வெய்மார் அரசியலமைப்பில் காணப்பட்ட திட்டம் இதினின்று ஓரளவு வேறுபட்டிருந்தது. அதில் வல்லந்த முறை இடம் பெற் றிருந்த போதிலும், முதல் உலகப்போரின் இறுதியில் தோன்றிய சூழ் நிலைகளுக்கேற்ப அது தற்செயலாகத் தோன்றியது என்னலாம். 1918ஆம் ஆண்டு நிகழ்ந்த ஜெர்மானியப் புரட்சியின்போது போர்வீரர் களது அவையும் தொழிலாளரது அவையும் நிறுவப்பபட்டன. ஆயினும், அப்போது நிகழ்ந்த அரசியற்புரட்சி அவற்றை வீழ்த்தி இறுதியில் வெற்றி பெற்றது.

அதற்கு மாறாக, ரஷ்யாவில் சிலகாலம் சம ஆட்சிகள் நிலவின. அவை மேலாண்மை பெற ஒன்றோடொன்று போட்டியிட்டு வந்தன. ஆனால், 1917இல் நிகழ்ந்த போல்ஷவிக் புரட்சியில் சோவியத்துகள் என வழங்கப்பட்ட தொழிலாளர் அவைகளின் தலைவர்கள் சாதாரண அரசியல் நிறுவனங்களை அடக்கிவிட்டார்கள். 1918ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் புதிய அரசியலமைப்பொன்றை வெளியிடுவதற் காக அரசியற்புனை சபை தேர்ந்தெடுக்கப்பட்டது. அதில், போல்ஷ விக்குகள் 'ரஷ்யா சோவியத்துகளின் குடியரசாக இருக்கவேண்டும்,' என்ற தீர்மானத்தைக் கொண்டுவந்தார்கள். இது பெரும்பான்மை வாக்குகளினால் தோகற்டிக்கப்பட்டதும், லெனின் வன்முறையைப் பயன்படுத்தி அவையைக் கலைத்தார். அதில் நடுத்தர வகுப்பாரின் (Bourgeois) செல்வாக்கு மிகுதியாய் இருந்ததெனக் குறை கூறி லெனின் அதைக் கலைத்தார். அன்று முதல் பொதுவுடைமைவாதி கள் ரஷ்யாவில் ஆட்சி செலுத்தி வருகின்றார்கள். அரசின் பொருளா தார அமைப்பைப் பற்றி அவர்கள் எண்ணிய கருத்துகளில் இதுவரை அடிப்படையான மாற்றம் எதுவும் ஏற்படவில்லை. நாம் முன்பு பார்த் தது போல, 1936ஆம் ஆண்டின் அரசியலமைப்பில் சில மேல் நாட்

டுக் கருத்துகள் காணப்படுகின்றன என்பது உண்மைதான். குறிப்பாக, கூட்டாட்சி அமைப்பைப்பற்றிக் கூறும் விதிகளில் அவற்றைக் காணலாம். ஆனால், ஸ்டாலின் அரசியலமைப்பின்படி, ரஷ்யக் கூட்டாட்சி 'தொழிலாளர், உழவர் ஆகியோரின் பொதுவுடைமை அரசாய்' (முதலாவது விதி) இருக்கின்றது என்பது உண்மை. மேலும், 'பாட்டாளிகளின் பிரதிநிதிகளடங்கிய சோவியத்துகள் அதன் அரசியல் அடிப்படையாய் அமைந்துள்ளன. அவை நிலக்கிழார்கள், முதலாளிகள் ஆகியோரின் அதிகார வீழ்ச்சியின் விளைவாகவும், தொழிலாளர் வல்லாட்சியின் (Dictatorship of the Proletariat) வெற்றி காரணமாகவும் வளர்ந்து வலிமை பெற்றுள்ளன (இரண்டாவது விதி). 'நகரிலும் நாட்டுப்புரத்திலுமுள்ள பாட்டாளிகள் தங்கள் பிரதிநிதிகளடங்கிய சோவியத்துகள் வழியாக எல்லா அதிகாரங்களையும் பெற்றுள்ளார்கள்' (மூன்றாவது விதி). ஸ்டாலின், முதலில் 'ஒரு நாட்டில் சமதருமத்தை நிலை நாட்ட வேண்டும்,' என்ற கொள்கையைப் பின்பற்றியதால், அதற்கேற்பப் பழைய கருத்துகளை மாற்றியமைத்தார்கள். லெனின் இறந்த பிறகு, டிராட்ஸ்கி (Trotsky)யின் கொள்கையைப் பின்பற்றியவர்கள் 'தொடர்ச்சியான புரட்சி' நிகழ வேண்டுமெனக் கூறினார்கள். ஆனால், அதை எதிர்த்த ஸ்டாலின், அது 'போல்ஷவிஸ்டு கொள்கைக்குப் பொருந்தாது,' என வெளிப்படையாக அறிவித்தார். ஆனால், அதற்குப் பிறகு, பொதுவுடைமை ரஷ்யா, தனக்கு அருகிலுள்ள நாடுகளின் அரசியல், பொருளாதார அமைப்புகளை மாற்றியமைக்கும் செல்வாக்கும் ஆற்றலும் பெற்றது. ரஷ்யாவில் பொதுவுடைமை அரசை நிறுவியவர்கள் இதை எதிர்பார்த்திருக்கவே மாட்டார்கள். இரண்டாம் உலகப் போரில் ரஷ்யா அடைந்த வெற்றி காரணமாக, அது இந்த ஆற்றலைப் பெற்றது. ரஷ்யா இவ்வெற்றியைப் பெறுவதற்குப் பல உயிர்களையும், சொத்துகளையும், வளப்பொருள்களையும் இழந்த போதிலும், இப்போது கிழக்கு ஐரோப்பிய அரசுகளில் தனது ஆதிக்கத்தைச் செலுத்திவருகிறது. அதனால் நன்மை விளைந்ததா அல்லது தீமை ஏற்பட்டதா என்பதை நாம் இங்கு வாதிக்கத் தேவையில்லை. அந்த அரசுகள் தங்கள் அரசியல் நிறுவனங்கள் வாயிலாகப் பொருளாதார நிலையைச் சீரமைக்கும் முயற்சியில் ஈடுபட்டிருப்பதால், மேல் நாட்டு அரசியல் அமைப்பு முறைக்கும் சோவியத்துச் சர்வாதிகார முறைக்கும் இடையே சிக்கித் தவித்துக்கொண்டிருக்கின்றன.

## 3. கூட்டுக் கழக அரசு (Corporate State)

நாம் மற்றொரு வகை அரசியற்பொருளாதார அமைப்பை ஆராய வேண்டும். அதுவே கூட்டுக் கழக அரசெனும் செயலாய்வு ஆகும். பாஸிஸ இத்தாலியில் முசோலினியும், போர்த்துகலில் அன்டோனியோ

டி ஸலஸாரும் இதை நிறுவ முயற்சி செய்தனர். ஆனால், முசோலினி வீழ்ச்சியடைந்ததும் அவருடைய திட்டமும் தோல்வியுற்றது. 1947இல் வெளியான இத்தாலியக் குடியரசின் அரசியலமைப்பில் அதன் கூறு எதுவும் புகுத்தப்படவில்லை. ஆயினும், அதில் குறிப்பிடத்தக்க சில இயல்புகள் இருந்தன. மக்களாட்சியை அழிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் முசோலினி அதை அமைத்த போதிலும், ஜனநாயக வாதிகள் அதை ஆராய்வதில் தவறு ஒன்றுமில்லை. தேசியத் தொழிலாளர் குழுவாட்சி (National Syndicalism) என முசோலினி வழங்கிய முறை கூட்டுக் கழகத்தின் அடிப்படையில் அமைந்தது. அவர் அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கு முன் தொழிலாளர் குழுவாட்சியுடன் தொடர்புகொண்டிருந்தமையால் அவருக்கு இக்கருத்துத் தோன்றியது. ஆனால், தொழிலாளர் குழுவாட்சி வாதிகள் விரும்பியவாறு அவர் தொழில் துறையில் சுய ஆட்சியை நிறுவ எண்ணவில்லை; அதற்கு மாருக, நாடு முழுவதிலும் தொழில் துறையைக் கட்டுப்படுத்த முனைந்தார்.

இத்திட்டம் உண்மையில் 1924இல் தொடங்கியதெனக் கூறலாம். இதை நிறுவ இயலுமா என ஆய்வதற்கு அப்போது ஒரு சிறப்பு ஆணைக் குழு அமைக்கப்பட்டது. அக்குழுதான் சமர்ப்பித்த அறிக்கையில் தொழில் பிரச்சினைகளைத் தீர்க்கப் பிற நாடுகள் பயன்படுத்திய முறைகளைக் குறிப்பிட்டிருந்தது. அது பிரிட்டனில் பயன்படும் தொழிற்சங்க முறை, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நிலவும் பொறுப்பு (Trust) முறை, ரஷ்யப் பொதுவுடைமையில் காணப்படும் மார்க்ஸியக் கொள்கை, வெய்மார் குடியரசின் அரசியலமைப்புப்படி ஜெர்மனியில் நிறுவப்பட்ட பொருளாதார அவைகள், முற்போக்கு ஜனநாயகம் (Liberal Democracy) ஆகியவற்றைக் குறிப்பிட்டது. அவ்வறிக்கையின்படி அவற்றில் பொதுவாகக் காணப்பட்ட குறை என்னவென்ருல், அவை அரசின் மேலாண்மையைக் குறைக்க முயன்றன. ஆனால், புதிய கூட்டுக் கழக அரசு அக்குறையை அகற்ற எல்லா வகையிலும் முயல வேண்டும் என்றும் பழைய இத்தாலியத் தொழிற்குழுவாட்சி வாதிகள் தொழிலாளரின் நலன்களைக் காத்து அவற்றை முன்னேற்றுவதை மட்டும் விரும்பினர்கள் என்றும் அவ்வறிக்கை கூறியது. மேலும், அதன் கருத்துப்படி, மூலதனம், உடலுழைப்பாளர், அறிவுழைப்பாளர் ஆகிய மூன்று பகுதிகளும் தம்மைத் தனித்தனியானவை என்றும், ஒன்றுக்கொன்று முரணானவை என்றும், அரசிற்கு அப்பாற்பட்டவை அல்லது மேலானவை என்றும், எப்போதும் கருதி வந்தன. தேசீய பாஸிஸத் தொழிற்குழுவாட்சி இம்மூன்று பகுதிகளையும் நாட்டின் நலத்திற்காகப் பயன்படுத்துவதன் மூலம் இவற்றினிடையே ஏற்படும் முரண்பாடுகளை நீக்கும். ஆனால், அரசு, உற்பத்தியை ஏற்று நடத்த

இயலுமென அறிக்கை கருதவில்லை. முதலாளித்துவமும், தனியார் முனைப்பும் (Private initiative) சமூகத்தின் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையாய் இருப்பதால், அவை இரண்டையும் அனுமதிக்க வேண்டும் என்றும், ஆனால் உரிமைகளும் சுதந்தரங்களும் அரசின் மேலாண்மைக்கு முரணாய் இருக்கக்கூடாது என்றும் அறிக்கை கூறியது.

அந்த அறிக்கையின் அடிப்படையில் தொழிற்குழு அல்லது தொழிற்சங்கச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. அது 1926ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்களில் செயல் முறைக்கு வந்தது. அதே ஆண்டு ஜூலைத் திங்களில் வெளியான கட்டளை புதிய சட்டத்தின் விவரங்களை விளக்கியது. இறுதியாக, 1927ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்களில் தொழிலாளர் சாசனம் ஒன்று வெளியானது. இவை சட்டத்தை மூன்று பகுதிகளாகப் பிரித்தன. முதற்பகுதி, முதலாளிகள், உடலுழைப்பாளர்கள், அறிவுழைப்பாளர்கள் ஆகியோரின் சங்கங்கள் அல்லது குழுக்களின் அமைப்பை விளக்கி அவற்றைக் கட்டுப்படுத்தும் வழிகளை வகுத்தது. சட்டத்தின் இரண்டாவது பகுதி, தனி நீதி மன்றங்களை நிறுவியது. அவற்றிற்குத் 'தொழில் நீதி மன்றங்கள்' என்பது பெயர். அவற்றின் முன் எல்லாத் தகராறுகளையும் சமர்ப்பிக்க வேண்டும். சட்டத்தின் மூன்றாவது பகுதி, வேலை நிறுத்தம், கதவடைப்பு ஆகியவற்றைத் தடை செய்தது. தடையை மீறியவர்களுக்குக் கடுந்தண்டனை வழங்கப்பட்டது.

1926ஆம் ஆண்டு ஜூலைத் திங்களில் வெளியான கட்டளையின் படி, 18 வயதுக்கு மேற்பட்ட எவரும் 'அறநெறியிலும் அரசியலிலும் நன்னடத்தை உடையவராய் இருந்தால்', தொழிற்குழுவில் சேரலாம். 1927ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்களில் வெளியான தொழிலாளர் சாசனம் பின் காணுமாறு கூறியது: 'தொழில் நிறுவனம் அல்லது தொழிற்குழு உரிமையுடன் திகழ்கின்றது ஆயினும், சட்ட முறையான தொழிற்குழு மட்டும், அரசாங்கக் கட்டுப்பாட்டிற்கடங்கி, முதலாளிகள், தொழிலாளிகள் ஆகியோரின் சார்பாகப் பிரதிநிதிகளை அனுப்புவதற்கு உரிமை பெற்றுள்ளது. மேலும், தனது வகையைச் சேர்ந்த எல்லாக் குழுக்களின் சார்பாகவும் கூட்டுத் தொழில் ஒப்பந்தங்களைச் செய்வதற்கும், அவற்றிடமிருந்து பணம் திரட்டுவதற்கும் அதற்கு மட்டும் உரிமையுண்டு.'

ஆகவே, 1927ஆம் ஆண்டிற்குள் புதிய பொருளாதார அமைப்பின் அடிப்படை உண்மையில் நன்றாக நிறுவப்பட்டுவிட்டது போலத் தோன்றியது. மேற்கட்டடம் மட்டும் எழுப்ப வேண்டியிருந்தது. இது மூன்று கட்டங்களில் நடைபெற்றது. முதலாவது, கூட்டுக்கழகங்கள்

(Corporations), 1926ஆம் ஆண்டு நிறுவப்பட்ட முதலாளிகளின் தொழிற்குழுக்களையும் தொழிலாளர்களின் தொழிற்குழுக்களையும் நாடு முழுவதிலும் இணைத்தன. நாடு முழுவதும் பரவியிருந்த 22 வகைப் பொருளாதாரத் தொழில்களின் சம எண்ணிக்கையுள்ள முதலாளிகளும் தொழிலாளரும் அக்கூட்டுக் கழகங்களில் உறுப்பினர்களாய் இருந்தார்கள். குறிப்பிட்ட ஒரு தொழிலில் உற்பத்தியின் எல்லாப் படிகளிலும் ஈடுபட்டுள்ள எல்லாரும் ஒவ்வொரு கூட்டுக்கழகத்திலும் இடம் பெற்றனர். முதலாளிகள், தொழிலாளிகள், மூலப்பொருள்களை உற்பத்தி செய்வோர், பக்குவப்படுத்தும் தொழிலின் பணி முதல்வர்கள், பணியாள்கள், உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை விற்கும் வணிகர்கள், தொழில் நுணுக்க அறிவியல் வல்லுநர்கள் ஆகியோர் கூட்டுக்கழகத்தில் இருந்தனர். 1934இல் முசோலினி 22 கூட்டுக்கழக அவைகளை நிறுவினர். கூட்டுக்கழகத்தை உருவாக்கும் முயற்சி 1939ஆம் ஆண்டில் இறுதிக் கட்டத்தை அடைந்தது. அப்போது பிரதிநிதிகளின் சபை கலைக்கப்பட்டு, அதற்குப் பதிலாகப் பாஸிஸக் கழகங்களும் கூட்டுக்கழகங்களும் சேர்ந்த சபையொன்று நிறுவப்பட்டது. அதில் 682 பேர் உறுப்பினர் இருந்தனர். அவர்களுள் மூன்றில் இரு பகுதியினர் கூட்டுக்கழகங்களின் பிரதிநிதிகள். பொதுவாக அவர்கள் தொழிற்குழுக்களின் முக்கிய அதிகாரிகளாய் இருந்தார்கள். எஞ்சிய உறுப்பினர்கள் பாஸிஸக் கட்சியின் அதிகாரிகள். சபையின் உறுப்பினர்களைத் தெரிந்தெடுக்க எவ்வகையான தேர்தலும் நடைபெறவில்லை. பெரும்பான்மையான உறுப்பினர்கள் தங்கள் பதவி காரணமாகச் சபையில் இடம் பெற்றார்கள். அவர்களின் நியமனத்திற்குத் தலைவரின் (Duce) இசைவு தேவை. ஆயினும், சபை, அறிவுரை கூறும் சபையாகவே அலுவலாற்றியது.

முசோலினி நிறுவிய கூட்டுக்கழக அரசு வெற்றி பெற்றதா அல்லது தோல்வியுற்றதா எனப் பார்க்க இயலாமல் போய்விட்டது. ஏனெனில், அது இறுதியாகத் தொடங்கிய அதே ஆண்டில் இத்தாலியும் பிற ஐரோப்பிய நாடுகளைப் போல ஹிட்லர் தொடங்கிய போரில் சிக்கித் தவித்தது. ஆயினும், கூட்டுக்கழக அரசினால் இத்தாலியைப் பெருந்தோல்வியினின்று காக்க இயலவில்லை எனத் திட்டமாகக் கூறலாம். கூட்டுக்கழக அரசு, வலிமை இழந்த மக்களாட்சியின் குறைகளைப் போக்கும் சஞ்சீவி என்றும் உலகிலுள்ள மக்களாட்சிகளின் நிறுவனங்களைச் சீரமைக்க உதவும் தூண்டுகோல் என்றும் மக்கள் புகழ்ந்தார்கள். இப்புகழுரைகள் எல்லாம் பொய்யாயின. ஆனால், அதன் திட்டத்தில் சில ஆக்கப் பண்புகள் இருந்தன. மேல் நாடுகளில் நிலவும் அரசியல் ஜனநாயகத்தில் நாம் காணும் குறை என்னவென்றால், அது சமூகத்தின் பொருளாதார அமைப்பைப் பற்றிய பொறுப்பை அதனுடைய திட்டங்களுக்கே விட்டுவிடுகிறது.

பெரிய அளவில் பொருளாதாரத் திட்டங்களை வகுக்கும்போது கூட, அது ஏற்கெனவே இருக்கும் அரசியல் நிறுவனங்களையே பயன்படுத்துகிறது. இதற்கு எடுத்துக்காட்டாக இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு பிரிட்டன் தீட்டிய பொருளாதாரத் திட்டத்தைக் கூறலாம். முசோலினி நிறுவிய முறை தேசீய அவையில் பொருளாதார வகுப்புகளுக்குப் பிரதிநிதித்துவம் அளித்தது. அது பாஸிஸக் கழகங்களும் கூட்டுக் கழகங்களும் சேர்ந்த சபைக்கு உண்மையான சட்ட ஆக்க அதிகாரம் வழங்கவில்லை என்பது உண்மைதான். ஆனால், நிலப் பகுதிக்கேற்பப் பிரிக்கப்பட்ட தொகுதிகளுக்குப் பதிலாகத் தொழிற் பிரிவுகளின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட சபைக்கு அத்தகைய அதிகாரம் வழங்கப்படவில்லை என்பது பெருங்குறையன்று. உண்மையான அதிகாரமுடைய அத்தகைய சபையிலேதான், பொருளாதாரத்தை மட்டும் வலியுறுத்தும் சோவியத்து அமைப்பிற்கும் பொருளாதாரப் பிரதிநிதித்துவத்தை முற்றிலும் புறக்கணிக்கும் பாராளுமன்ற முறைக்கும் இடைநிலையிலுள்ள சபையைக் காண இயலும்.

இத்தாலியில் கூட்டுக்கழக அரசு மறைந்துவிட்ட போதிலும், போர்த்துகலில் அது இன்றும் நிலவுகிறது. 1932இல் தலைமை அமைச்சரான அன்டோனியோ ஸலஸார் (Antonio Salazar) அங்கு அமைத்த ஒருவகை வல்லாட்சியுடன் சேர்ந்து அது இயங்குகிறது. 1959இல் திருத்தப்பட்ட 1933ஆம் ஆண்டின் அரசியலமைப்பின்படி, தேர்ந்தெடுக்கப்படும் தலைவர் ஏழாண்டுகள் பதவியில் இருக்கின்றார். தலைமை அமைச்சர் கொள்கையளவில் அவருக்குப் பொறுப்புள்ளவராய் இருக்கின்றார். (தேசீய அவை என்ற) ஒரு சபையுள்ள சட்டமன்றத்தில் 120 பேர் உறுப்பினர் உள்ளனர். சட்டமன்றத்தைத் தவிர ஒரு கூட்டுக்கழகச்சபையும் இருக்கின்றது. அதில் வட்டார அதிகார நிறுவனங்களின் பிரதிநிதிகளும், நல்லொழுக்கம், பண்பாடு, பொருளாதாரம் ஆகிய துறைகளின் பிரதிநிதிகளும் உறுப்பினர்களாய் இருக்கிறார்கள். அது உண்மையில் மேல்சபையன்று. ஏனெனில், அதற்குச் சட்ட ஆக்க அதிகாரம் இல்லை. ஆனால், அரசியலமைப்பின்படி, தேசீய அவை தனது இறுதி வாக்கை அளிக்குமுன் எல்லா மசோதாக்களையும் அதன் முன் சமர்ப்பிக்க வேண்டும்.

நடைமுறையில் பாராளுமன்றத் தேர்தலுக்குப் போட்டியிடும் வேட்பாளர்களை அரசாங்கக் கட்சி மட்டும் தெரிந்தெடுத்து நிறுத்துகிறது. மேலும் தேசீயச்சபையின் இரு கூட்டங்களுக்கிடையே நீண்ட ஓய்வு காலம் இருக்கும் போது அரசாங்கம் ஸலஸாரின் ஆணையின்மேல் கட்டளைகள் வாயிலாகச் சட்டம் இயற்றுகிறது. ஸலஸாரின் கூட்டுக் கழக அரசுக் கொள்கையை, மார்க்ஸியப் பொதுவுடைமைக்கும் முற்

போக்கு மக்களாட்சிக்கும் இடைப்பட்ட நடுவழியைக் காண முயலும் முயற்சி எனலாம். இதை அரசாங்கத்தின் பொது மேற்பார்வைக் குட்பட்ட தொழிற்கழகங்கள் வாயிலாக அடைய ஸலஸார் முயன்ருர். போர்த்துகலில் வேலை நிறுத்தங்களும் கதவடைப்புகளும் விலக்கப்பட்டுள்ளன. ஆனுல், போர்த்துகீஸியர் முன்பு பெருத தொழிற்சட்டங்களை இப்போது பெற்றுள்ளனர். அதாவது, அவர்கள் தொழிற்சங்க முறையும் கூட்டுப் பேரம் (Collective Bargain) செய்யும் உரிமையும் பெற்றுள்ளார்கள். ஆனுல், வல்லாட்சி இவற்றை அவர் களுக்கு வழங்குகிறது. அது எவ்வளவுதான் முற்போக்குடையதாய் இருந்த போதிலும், மேற்கு ஐரோப்பிய நாடுகளிலுள்ள தொழிலாளர் கள் அதை ஒரு போதும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்.

## 4. ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயம் (European Economic Community)

இன்றைய உலகில் நாடுகள் ஒன்றையொன்று அதிகமாகச் சார்ந்து வருகின்றன. இதைச் சிறப்பாகப் பொருளாதாரத் துறையில் காண்கிருேம். நாகரிகமடைந்த சமுதாயம் எதுவும் இன்று தன்னையே நம்பி வாழ இயலாது. மேலும், ஓர் அரசு தனது பொருளாதார முறையை எவ்வளவு சிறந்த முறையில் அமைத்துக் கட்டுப்படுத்தி வந்த போதிலும், அது உலகப் பொருளாதார ஆற்றல் விளைவுகளி லிருந்து முற்றிலும் விடுபட இயலாது. ஓர் அரசு எந்த அளவுக் குத் தன்னையே நம்பி வாழ இயலும் என்பது அதன் நிலப்பரப்பையும் இயற்கை வளங்களையும், அவ்வளங்களைப் பெருக்க அது பெற்றுள்ள தொழில் திறமையையும், கருவிகளையும், அதன் அரசியல் உறுதியை யும் பொறுத்திருக்கிறது. இக்கால உலகிலுள்ள அரசுகளில் தம் மையே நம்பி வாழ வல்ல அரசுகளுக்கு அமெரிக்க நாடுகளையும் ரஷ்யாவையும் எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம். ஏனெனில், அவை இரண்டும், பிற அரசுகள் எவற்றையும்விட மாபெரு வல்லரசு களாய்த் திகழ்கின்றன. அவற்றின் ஆற்றலுக்குச் சில அடிப்படை உண்மைகள் காரணமாய் இருக்கின்றன. அவை தாமிருக்கும் கண் டத்தில் விரிந்த பரப்பளவையும் பெற்றுள்ளன. அப்பரப்புகளில் பல திறப்பட்ட வளங்கள் மலிந்து காணப்படுகின்றன. அவ்வளங்களைப் பெருக்கும் ஆற்றலும் அவற்றிற்கு இருக்கின்றது. அவை இரண்டும், பொதுவான பொருளாதார அமைப்பையுடைய அரசியல் கூட்டாட்சி யாய் விளங்குகின்றன. அக்கூட்டாட்சியில் வாணிபத் தடைகள் இல்லை.

மேலே கூறிய குறிப்புகள், இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு ஐரோப்பியப் பொதுச்சந்தை (European Common Market) ஏன் தோன்றியது என்பதை அறியத் துணை செய்கின்றன. நாம் முன்னோர் இயலில் வலியுறுத்தியது போல, உலகப்போர் இரண்டின் விளைவாக உலக அதிகாரத்தின் மையம் மாற்றப்பட்டதுமல்லாமல், மேற்கு ஐரோப்பாத் தனது முந்திய அரசியல், பொருளாதார முதன்மையை இழந்துவிட்டது.

1948ஆம் ஆண்டு மேற்கு ஐரோப்பா இரண்டாம் உலகப் போரின் அழிவுகளிலிருந்து மீட்சி பெற்றுப் பொருளாதார முன்னேற்றம் அடையத் தொடங்கியது. அமெரிக்கா அளித்த ‘மார்ஷல் உதவி’ (Marshal Aid) இதற்குப் பெருந்துணை புரிந்தது. அதன் விளைவாகப் பல பொருளாதார, அரசியல், படைத்துறைப் பிரிவுகள் தோன்றலாயின. இவற்றுள் ஐரோப்பியப் பொருளாதார மீட்பு நிறுவனத்தைக் (Organisation for European Economic Recovery) குறிப்பிடலாம். இது மீட்புத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காகப் பதினாறு அரசுகள் சேர்ந்து அமைத்த ஒரு நிறுவனம். 1950இல் பிரெஞ்சு அயல் நாட்டு அமைச்சரான ராபர்ட்டு ஷுமன் ஒரு திட்டத்தைக் கொண்டு வந்தார். அதன்படி ‘ஒரு மேலான நிறுவனம் பிரான்ஸிலும் ஜெர்மனியிலும் நடைபெறும் நிலக்கரி எஃகு உற்பத்தியைக் கவனித்து வரும். இந்த நிறுவன அமைப்பில் பிற ஐரோப்பிய நாடுகளும் சேரலாம்.’ 1952இல் பெல்ஜியம், பிரான்ஸ், இத்தாலி, லக்ஸம்பர்கு, நெதர்லாந்து, மேற்கு ஜெர்மனி ஆகிய ஆறு அரசுகள் ஒன்று சேர்ந்து ஓர் உடன்படிக்கை செய்தன. அதன்படி அவை ஐரோப்பிய நிலக்கரி எஃகு சமுதாயத்தை (European Coal and Steel Community) நிறுவின. அதன் உறுப்பு நாடுகளிடையே நிலக்கரி எஃகு ஆகிய இரு பொருள்களின்மேல் விதிக்கப்பட்டிருந்த வாணிகத் தடைகளெல்லாம் படிப்படியாக நீங்க வேண்டுமென அவ்வுடன்படிக்கை கூறியது.

நிலக்கரி எஃகு சமுதாயம் வெற்றி பெறவே அதன் உறுப்பு நாடுகள் ஆறும் அதன் அலுவல்களைப் பெருக்க விரும்பின. ஆகவே, 1957இல் அவை ரோம் உடன்படிக்கை என்ற ஓர் ஒப்பந்தத்தைச் செய்தன. அவ்வுடன்படிக்கை ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயத்தை நிறுவியது. அதில் கையொப்பமிட்ட நாடுகள் தங்களுக்கிடையேயுள்ள பொருளாதாரத் தடைகளை எல்லாம் நீக்க இசைந்தன. அதற்காக அவை சுங்க வரிகளைப் படிப்படியாகக் குறைத்து, வாணிகக்கட்டுப்பாடுகளை நீக்கி, பொருளாதார சமூகத் திட்டங்களை ஒன்றுபடுத்தி, பொதுவான பயிர்த்தொழில் திட்டத்தை வகுக்க ஒப்புக்கொண்டன. அப்போது நிகழ்ந்த வாதங்களின் விளைவாக, அதே

ஆண்டில் மற்ருேர் உடன்படிக்கை உருவாகியது. அது ஐரோப்பிய அணுச்சத்திச் சமுதாயத்தை (European Atomic Energy Community) நிறுவியது. அணுச்சத்தியைப் பெருவாரியாக உற்பத்தி செய்வதற்குத் தேவையான தொழில் துறைச் சூழ்நிலைகளை உண்டுபண்ணுவதும் அணுச்சத்தி ஆராய்ச்சியை வளர்த்து ஒருமுகப்படுத்துவதும் அதன் நோக்கமாய் இருந்தன.

ரோம் உடன்படிக்கையில் கையொப்பமிட்ட ஆறு அரசுகளும் சமுதாயத்தில் தங்களைத் தவிர வேறு ஐரோப்பிய அரசுகளும் சேருமென்று நம்பின. 1959இல் வேறு ஏழு ஐரோப்பிய அரசுகள் ஒன்று சேர்ந்து ஐரோப்பியத் தடையில்லா வாணிகச் சங்கம் (European Free Trade Association) என்ற ஒரு பொருளாதாரக் கூட்டத்தை அமைத்தன. அதில் ஆஸ்திரியா, பிரிட்டன், டென்மார்க்கு, நார்வே, போர்த்துகல், ஸ்வீடன், ஸ்விட்ஸர்லாந்து ஆகிய அரசுகள் உறுப்புகளாய் இருந்தன. 'வெளி ஏழு அரசுகள்' ('Outer Seven') என வழங்கப்பட்ட போதிலும், அவை பொதுச்சபையின் ஆறு அரசுகளுக்கு எதிராய் இராமல், அவற்றிற்குத் துணையாய் நின்றன. அவற்றுள் ஏதாவதொன்று, அல்லது அவை எல்லாம், பொதுச் சந்தையில் சேருவதற்கு யாதொரு தடையும் இருந்ததில்லை. ஆயினும், அதில் நுழைவதற்குரிய விதிகள் ஓரளவு கடினமாய் இருந்தன. ஆகவேதான் பிரிட்டன் அதில் சேர இயலவில்லை. 1961இல் பிரிட்டன் அதில் சேர மனுச்செய்த போதிலும், 1963இல் அதைப்பற்றித் தான் ஆறு அரசுகளோடு நடத்தி வந்த பேச்சுகளை நிறுத்திக்கொண்டது.

ரோம் உடன்படிக்கை, அதில் கையொப்பமிட்ட அரசுகளிடையே ஒரு 'ஸால்வரீன்' (Zollverein) அல்லது சுங்க ஐக்கியத்தை உடனடியாக நிறுவ முனைந்தது. ஆனால், உடன்படிக்கையில் காணப்பட்ட சொற்கள் சில அரசியல் முறை மாறுதல்களையும் மறைமுகமாகக் குறிப்பிட்டன. 1950ஆம் ஆண்டு ராபர்ட்டு ஷுமன் தமது திட்டத்தைச் சுருக்கமாகக் கூறும்போது, 'நிலக்கரி எஃகு உற்பத்தியை ஒன்று சேர்ப்பதன் விளைவாகப் பொருளாதார வளர்ச்சிக்கான பொது அடிப்படைகள் தோன்றுகின்றன. இதுவே ஐரோப்பியக் கூட்டாட்சியை அமைப்பதற்குரிய முதல் வழியாகும்,' எனக் கூறினுர். ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயத்தின் உருமலர்ச்சியிலிருந்து அதன் இந்த இறுதி அரசியல் நோக்கம் நன்கு புலனுகின்றது. அது தன் பொருளாதார அலுவல்களைச் செவ்வனே செய்வதற்கு நிலையான நிறுவனங்களை அமைத்துள்ளது. அவை தேசீய அரசில் காணப்படும் துறைகளாகிய நிருவாகத்துறை, சட்டமன்றம், நீதித்துறை ஆகிய மூன்றையும் ஒத்திருக்கின்றன. முதலாவது, அமைச்சரவை ஒன்று இருக்கின்றது. அதில் ஒவ்வோர்

உறுப்பு நாட்டிலிருந்தும் ஒவ்வொரு பிரதிநிதி இருக்கின்றார். அப்பிரதிநிதிகள் சமுதாயத்தின் பொருளாதாரத் திட்டங்களையும் அதன் உறுப்பு நாடுகளின் திட்டங்களையும் ஒருமுகப்படுத்துகிறார்கள். இரண்டாவது, பாராளுமன்றப் பேரவை ஒன்று உள்ளது. உறுப்பு நாடுகளின் பாராளுமன்றங்கள் அதன் உறுப்பினர்களை வெவ்வேறு விகிதங்களில் தேர்ந்தெடுக்கின்றன. இப்பாராளுமன்றம் வாதத்திற்கும் கட்டுப்பாட்டிற்கும் பொது அரங்காகப் பணியாற்றுகின்றது. மூன்றாவது, ஒவ்வோர் உறுப்பு நாட்டிலிருந்தும் தெரிந்தெடுக்கப்பட்ட நீதிபதிகளையுடைய நீதி மன்றம் இருக்கின்றது. அது சமுதாயத்தின் உடன்படிக்கைகளை விளக்கிச் செயற்படுத்தும் போது சட்டத்தைப் பாதுகாக்கின்றது.

இந்த நிறுவனம் அரசியல் நோக்கங்களுக்கேற்ப மாறும் தன்மையுடையது, இதை 1961ஆம் ஆண்டு பிரெஞ்சு அரசாங்கம் தீட்டிய திட்டத்திலிருந்து காணலாம். அத்திட்டம், 'ஐரோப்பிய அரசுகளின் ஐக்கியம்' ஒன்றை அமைப்பதற்காக ஓர் உடன்படிக்கை செய்ய வேண்டுமெனக் கூறியது. இதுதான் பொதுச்சந்தையின் இறுதி நோக்கம். ஒரு பொருளாதார ஐக்கியம் கூட்டாட்சி அரசின் அடிப்படைக் கல்லை நாட்டுவது வரலாற்றில் இது முதல்முறையாய் இராது. ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயத்திலிருந்து உண்மையான-நிலைத்த-ஒரு கூட்டாட்சி தோன்றுமென்றால், அதனால் மேற்கு ஐரோப்பா தான் இழந்த மதிப்பைத் திரும்பப் பெறுவதுடன், உலக அமைதியைக்காப்பதில் மாபெரும்பங்கு பெறும் என்பதில் ஐயமில்லை.

## படிக்க வேண்டிய நூல்கள் :

1. டெனிஸாவ் (Denisov) : Soviet State Law, இயல், 3
2. டைசி (Dicey) : Law and Public Opinion, விரிவுரைகள், 4, 6-9; பின் குறிப்பு 1.
3. ஃபைனர் (Finer): (1) Modern Government, இயல், 22, 38 (2) Major Governments of Modern Europe, இயல், 10, 14, 31, 36
4. ஃபிரீட்மன் (Friedmann): Introduction to World Politics, இயல், 5
5. ஜென்னிங்ஸ் (Jennings): British Constitution, இயல், 8
6. லாஸ்கி (Laski): Grammar of Politics, இயல், 7, 9

7. மக் ஐவர் (Mac Iver) : Web of Government, இயல், 11

8. சேபைன் (Sabine): History of Political Theory, இயல் 33-35

9. ஸிட்ஜ்விக் (Sidgwick) : Elements of Politics, இயல், 4, 10, 28.

0. தாம்ஸன் (Thomson) : Europe Since Napoleon, இயல், 30

11. வேர் (Wheare) : Federal Government, இயல், 6-8

12. ஸிங்க் (Zink) : Modern Government, பிரிவு, V

13. The Annual Register, 1927, 1939 (முசோலினியின் கூட்டுக் கழக அரசிற்கு இந்நூலைப் பார்க்க.)

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள் :

1. கார் (Carr) : The New Society

2. கிரௌலி (Crowley) : Background of Current Affairs

3. ஃபாரன் (Farran) : Atlantic Democracy.

4. ஹாலிஸ் (Hallis) : Can Parliament Survive?

5. ஜென்னிங்ஸ் (Jennings) : Party Politics, III, Stuff of Politics

6. பிரைஸ் (Pryce) : European Community

7. டிட்மஸ் (Titmuss) : Welfare State

8. Constitution of Portugal, 1933 (1957இல் அரசாங்கம் வெளியிட்ட சிறு நூலில் காணப்படும் வாசகத்தின் ஆங்கில மொழி பெயர்ப்பு)

## கட்டுரைக்கேற்ற பொருள்கள் :

1. 'அரசியல் ஜனநாயகம் தன்னிலே பயனற்றது,' என்பதை விளக்குக.

2. இக்காலக் கூட்டுடைமைக் கொள்கையின் வளர்ச்சிக்குக் காரணம் கூறுக. அது தலையிடாக் கொள்கையை எவ்வாறு படிப்படியாக விலக்கியது என்பதை விளக்குக.

3. இக்கால மேற்சபைகளில் பொருளாதார வகுப்புகளுக்கு எவ்வாறு பிரதிநிதித்துவம் வழங்கலாம் என்பதைக் கூறுக.

4. பொருளாதார அவைகளை நிறுவ 1919ஆம் ஆண்டின் ஜெர்மானிய அரசியலமைப்பு வகுத்த திட்டங்களை விளக்குக. அவற்றை உரிமை நாடான அயர்லாந்தின் அரசியலமைப்பின் திட்டங்களுடனும், நான்காம் ஐந்தாம் பிரெஞ்சுக் குடியரசுகளின் அரசியலமைப்பின் திட்டங்களுடனும் ஒப்பிடுக.

5. ரஷ்யப் புரட்சி ஒரு பொருளாதார ஜனநாயகத்தை நிறுவியதென்பதை ஆராய்க.

6. 'ஆட்சிவழிச் சமதர்மத்திற்கும் தொழிற்குழுவாட்சிக்கும் இடையில் வேறொரு நடுவழி எதுவும் இல்லை,' என்பதை விளக்குக. இக்கூற்றை, அரசியல் பாராளுமன்றத்திற்கு இணையான அதிகாரங்களையுடைய பாராளுமன்றத்தை நிறுவ விரும்பும் வாணிகக் கழக சமதருமவாதிகளின் திட்டங்களுடன் பொருத்திக் காட்டுக.

7. முசோலினி வகுத்த கூட்டுக்கழக அரசின் திட்டத்தை ஆராய்ந்து, அதிலிருந்து ஜனநாயகவாதிகள் கற்கவேண்டிய பாடங்கள் எவை என்பதைக் கூறுக.

8. போர்த்துகலில் ஸலஸாரின் நிலையையும், அவர் நிறுவிய கூட்டுக்கழக முறையையும் விளக்குக.

9. அரசியல் முறைமைக்குட்பட்ட இக்கால அரசுகளில் காணப்படும் நிலம் சார்ந்த தொகுதிக்குப் பதிலாகத் தொழில் வகைத் தொகுதியை அமைக்க இயலுமா?

10. ஐரோப்பியப் பொருளாதாரச் சமுதாயம் அமைக்கப்பட்ட வரலாற்றை வரைக. அதன் அமைப்பை விளக்கி, அதிலிருந்து தோன்றக்கூடிய கூட்டாட்சியின் விளைவுகளை ஆராய்க.

# 16. ஐக்கிய நாடுகளின் சாசனம்

## 1. பன்னாட்டு ஒற்றுமைத் திட்டங்கள்

தலைவர் வில்சன் ரஷ்யாவின் தாற்காலிக அரசாங்கத்திற்கு 1917ஆம் ஆண்டு மேத்திங்களில் அனுப்பிய செய்தியில், அப்போது நிகழ்ந்துகொண்டிருந்த போரின் விளைவாக மனித இனத்தின் சகோதர உறவு என்பது வெறுமையான அழகிய சொற்றொடராய் இருக்கும் நிலை மாறி, உண்மையில் ஆற்றல் நிறைந்த ஒரு நிறுவன அமைப்பைப் பெறும் என்ற நம்பிக்கையைத் தெரிவித்தார். 1918ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் வில்சன் தமது 'பதினான்கு நோக்கங்களை' (Fourteen Points) வெளியிட்டார். பதினான்காவது நோக்கம் சர்வ தேச சங்கம் ஒன்றை நிறுவ விழைந்தது. அது பன்னாட்டு அமைதி என்ற உயர்குறிக்கோளை நிலையான நிறுவனங்கள் வாயிலாக நிலை நாட்டச் செய்த முயற்சியாகும். சுருங்கச் சொல்ல வேண்டுமானால், அது, அரசுகளுக்கிடையே நிலவும் தொடர்புகளை ஒழுங்குபடுத்து வதற்காக நிறுவப்பட்ட ஓர் அரசியலமைப்பு. அதை, ஒரு தனி அரசினுள் அரசாங்கத்திற்கும் குடிகளுக்கும் உள்ள தொடர்புகளை வரையறுக்கும் அரசியலமைப்புக்கு ஒப்பிடலாம். நாம் இத்தகைய அரசியலமைப்புகளை இந்நூலில் ஆராய்ந்தோம். சர்வதேச சங்கம் தோல்வியுறவே, இரண்டாம் உலகப் போர் தொடங்கியது. அதன் விளைவாக இன்னொரு பன்னாட்டு அரசியலமைப்பை நிறுவ முயற்சி பிறந்தது. இவ்வாறு ஐக்கிய நாடுகளின் சங்கம் தோன்றியது. ஆயினும், சர்வதேச சங்கத்தின் திட்டத்தைப்போல ஐக்கிய நாடு களின் திட்டமும், பன்னெடுங்காலமாக வளர்ந்து வரும் பன்னாட்டுக் கொள்கைத் திட்டங்களின் தோற்றம் எனலாம். உண்மை என்ன வென்றால், ஒற்றுமை, தோழமை ஆகிய இரண்டு உயர்குறிக்கோள் களும் மேல் நாட்டு நாகரிகத்தின் அடிப்படையான இரு மரபுகளி னின்று தோன்றுகின்றன. அவற்றுள் ஒன்று ரோமானியப் பேரரசின் ஒற்றுமை; மற்றொன்று, 'உலகிற்கு அமைதியும், மக்களுக்கு நல் லெண்ணமும்' என்ற கிறித்தவச் செய்தி. ஆகவே, இக்கால அரசு

முறை தோன்றியதிலிருந்து அநேகமாக ஒவ்வொரு பெரும்போரின் பிறகும் போரைத் தடுப்பதற்கான முயற்சிகள் தோன்றியதைக் காண்கிறோம். பெரும்பாலும் அம்முயற்சிகள் எல்லாம், தனி அரசில் வாழும் குடிகள் செய்வது போல, அரசுகளும் ஒழுங்கையும் அமைதியையும் நிலை நாட்டும் நிறுவனத்திற்குப் பணிய வேண்டுமென விரும்பின. முதலில் அத்தகைய உயர்குறிக்கோள்கள் சில, அறிஞர்கள் எழுதிய நூல்களில் மட்டும் இடம் பெற்றன. அவற்றை அடைவதற்கு நூலாசிரியர்பலர்தொடர்ச்சியாகத் திட்டங்களை வகுத்தனர். எடுத்துக்காட்டாக, 14ஆம் நூற்றூண்டிலே 'பியர் துபா' (Pierre Dubois) என்பவரும், 16ஆம் நூற்றூண்டில் எராஸ்மஸும் (Erasmus), 17ஆம் நூற்றூண்டில் நவார் ஹென்றியும் (Henry of Navarre), 18ஆம் நூற்றூண்டில் அபே டி செயின்ட் பியர் (Abbe de St. Pierre), ரூஸ்ஸோ, கான்ட் (Kant) என்பாரும் இத்தகைய திட்டங்களைத் தீட்டினர். நெப்போலியன் போர்களுக்குப் பிறகு பன்னாட்டுக் கொள்கை புது உருப்பெற்றது. இது வளர அது இலட்சியவாதிகளின் உயர்குறிக்கோளாய் இருந்தது. இப்போது அந்நிலை மாறி, வல்லரசுகளும் பேரரசர்களும் பன்னாட்டு நிறுவனங்களை அமைக்கும் திட்டங்களைத் தீட்டத் தொடங்கினர்கள்.

இவ்வாறு ஐரோப்பிய ஒருமைப்பாட்டுத் திட்டம் (Concert of Europe) ஏற்பட்டது. அது முதலில் புனிதக் கூட்டுறவு (Holy Alliance) என்ற பெயருடன் அரசர்களுக்கிடையே ஒரு கிறித்தவ சகோதர உறவாகத் தொடங்கியது. ரஷ்யப் பேரரசர் அதற்கு ஊக்கம் அளித்தார். ஆனல், ஆஸ்திரியா, ரஷ்யா, பிரஷ்யா ஆகிய மூன்று அரசுகள் மட்டும் அதைத் தமக்குள் அமைத்துக்கொண்டதால் அது சிறு ஐரோப்பிய அரசுகளில் தோன்றிய முற்போக்குக் கொள்கையை நசுக்கும் கருவியாக விரைவில் மாறியது. ஆனல், அப்போது பிரிட்டிஷ் அயல் நாட்டு அமைச்சராய் இருந்த காஸில்ரீக் (Castlereagh) விரும்பியது போல, ஐரோப்பிய ஒருமைப்பாட்டுத் திட்டம் அமைக்கப்பட்டிருக்குமானல், அது அமைதியை நிலை நாட்டும் சிறந்த சாதனமாக மாறியிருக்கும். வல்லரசுகள் அடிக்கடி கூடும் மாநாடுகள் வாயிலாக இக்குறிக்கோளை அடைந்திருக்கலாம். 1814 முதல் 1822 வரை நிலைத்திருந்த இத்திட்டத்திலிருந்து இறுதியில் பிரிட்டன் வெளியேற வேண்டிய நிலை ஏற்பட்டது. ஏனெனில், மெட்டர்நிக் (Metternich) என்பார் அதைத் தமது வல்லாட்சியைப் பலப்படுத்துவதற்காகப் பயன்படுத்த முனைந்தார். வெரோனு மாநாட்டிற்குப் (Congress of Verona, 1822) பிறகு, கானிங் (Canning) என்பார் அயல் நாட்டு அமைச்சரானதும் மாநாடுகள் கூடும் காலம் முடிவடைந்தது. அதோடு ஐரோப்பாவில் ஒரு வகையான நாட்டுக் கூட்டத்தை அமைக்கலாம் என்றிருந்த நம்பிக்கையும் மறைந்தது.

ஆயினும், இந்தத் தொடக்கக் காலத்திற்குப் பிறகும் ஐரோப்பாவின் ஒருமைப்பாட்டுத்திட்டம் வலிமையெல்லாம் இழந்துவிட்ட போதிலும், உயிருடன் இருந்தது. இடையிடையே எழுந்த கிழக்கு நாட்டுப் பிரச்சினை (Eastern Question) போன்ற சிக்கல்களில், குறிப்பாக 1878இல், அது புதிய ஆற்றலுடன் செயலாற்ற முயன்றது. ஆனால், அது எவ்வளவு சிதைவுற்றிருந்ததென்றால், அது செயலாற்ற வேண்டிய நெருக்கடியான வேளையில் புத்துயிர் பெற்று எழ முடியாதவாறு இருந்தது. 1914ஆம் ஆண்டில் போர் தொடங்குவதற்குமுன் ஏற்பட்ட பெரிய அரசியல் நெருக்கடியில் அது ஒன்றும் செய்ய இயலவில்லை.

இதற்கிடையில், ரஷ்ய ஜார் மன்னர் படைக்கலத்திற்குப் பதிலாகத் தூதாண்மைத் திறத்தைப் பயன்படுத்தி, அமைதியை நிலைநாட்டும் மற்றொரு முயற்சியில் ஈடுபட்டார். அவர் ஹேக் மாநாடுகள் (Hague Conferences) வாயிலாக இதை அடைய முயன்றார். 1899இல் 26 அரசுகளின் தூதர்கள் ஹேகில் கூடினார்கள். அவர்கள் படைக்கலக் குறைப்பு, போரின் போது கையாளவேண்டிய சில இரக்க விதிகள், நாடுகளுக்கிடையே ஏற்படும் தகராறுகளை நடுவர் தீர்ப்பு (arbitration) முறையினால் தீர்த்துவைத்தல் போன்ற செய்திகளைப் பற்றி வாதித்தார்கள். அதன் முடிவில் செய்யப்பட்ட மூன்று உடன்படிக்கைகளை எல்லா வல்லரசுகளும் ஏற்றுக்கொண்டன. 1907இல் இரண்டாவது ஹேக் மாநாடு கூடியது. அதில் 54 அரசுகளின் பிரதிநிதிகள் கலந்துகொண்டார்கள். அது முந்திய மாநாட்டின் சட்டங்களுக்கு (அவற்றைச் சட்டங்கள் என்று கூற இயலுமானால்) விளக்கம் கொடுத்தது. அதன் விளைவாக ஏராளமான குறிப்பாணைகளும் (Memoranda), ஒப்பந்தங்களும் அறிக்கையிடப்பட்டன. ஹேக் மாநாடுகள் வருங்கால இயக்கத்தைத் தொடங்கி வைத்தன என்பதில் ஐயமில்லை. ஆனால், அவற்றின் தீர்மானங்கள் செயற்படும் அளவிற்கு ஆற்றல் பெறவில்லை. அவற்றின் சட்டங்கள் படைகள் பொரும்போது பயன்படாது போயின. சுருங்கக் கூறவேண்டுமானால், ஹேக் மாநாடுகள் அரசியலமைப்புகளை உருவாக்கவில்லை. மேலும், அவை அமைதியெனும் அரண்மனையைக் கட்ட முயன்று கொண்டிருக்கும்போது, அரசியல் சூழ்ச்சி வல்லுநர்கள் செல்வாக்குச் சமநிலை (Balance of Power) எனும் இன்னொரு திட்டத்தில் ஈடுபட்டிருந்தார்கள். அத்திட்டத்தின் விளைவாக எதிர் உடன்படிக்கைகள் செய்யும் தீய முறை தோன்றியதால், இறுதியில் அது போரைத் தடுக்க இயலாமற்போயிற்று.

ஆயினும், முதல் உலகப் போரின் பயனாகப் பன்னாட்டு ஒற்றுமை முயற்சிகளில் மூன்றாவது கட்டம் பிறந்தது. முதற்படியில் இலட்சிய

வாதிகளுள் சிலர் மட்டும் அம்முயற்சியில் ஈடுபட்டனர். இரண்டாவது கட்டத்தில் புகழ்பெற்ற பெரியார் சிலர் கலந்துகொண்டனர். மூன்றாவது கட்டத்தில் போரின் விளைவாக, முன்னேற்றமடைந்த எல்லா அரசியல் சமுதாயங்களிலும் வாழ்ந்த மக்களுள் பெருந்திரளானவர்கள் உண்மையான உலக நிறுவனமொன்றை அமைக்க விரும்பினார்கள். போரின் பிற்பகுதியில், அமைதியை நிலைநாட்டுவதற்கான அரசியல் நிறுவனத்தை அமைக்கும் திட்டங்களைத் தீட்டும் உணர்ச்சி பிறந்தது. அது முன்பிருந்த எந்த நிறுவனத்தையும்விட நிலையானதாயும் ஆற்றல் மிகுந்ததாயும் இருக்கவேண்டுமென்ற ஆவல் தோன்றியது. ஆகவே, உலக அமைதியோடு தொடர்புடைய அத்தகைய நிறுவனத்தை அமைப்பதற்கு இப்போது வழியேற்பட்டது.

## 2. சர்வதேச சங்கம்

## (League of Nations)

சர்வதேச சங்கத்தின் ஒப்பந்தத்தில் 26 விதிகள் இருந்தன. போரில் வெற்றி பெற்ற நேசநாடுகளுக்கும் தோல்வியுற்ற ஜெர்மனி, அதன் நட்புகள் ஆகிய நாடுகளுக்குமிடையே வெர்ஸேல் (Versailles) உடன்படிக்கை செய்யப்பட்டது. அவ்வுடன்படிக்கைக்கும் பிற உடன்படிக்கைகளுக்கும் மேலாக அவற்றின் தலைப்பில் சர்வதேச சங்க உடன்படிக்கை எழுதப்பட்டது. ஆகவே, உடன்படிக்கையில் கையொப்பமிட்ட ஒவ்வோர் அரசும் சங்கத்தையும் ஆதரிக்க வேண்டிய தேவை ஏற்பட்டது 1920ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் ஒப்பந்தம் செயல் முறைக்கு வந்தது. முதலில் அதில் 27 பேர் கையொப்பமிட்டனர். 1921இல் 48 அரசுகள் சங்கத்தின் உறுப்புகளாய் இருந்தன. அது முதல் இரண்டாம் உலகப் போர் தொடங்கும் வரை உறுப்புகளாய் இருந்த அரசுகளின் எண்ணிக்கை மாறிக் கொண்டேயிருந்தது. ஏனெனில், புதிய அரசுகள் சேர்வதும் பழைய அரசுகள் வெளியேறுவதுமாய் இருந்தன. எடுத்துக்காட்டாக, 1926இல் ஜெர்மனியும் 1932இல் துருக்கியும், 1934இல் ரஷ்யாவும், 1937இல் எகிப்தும் சங்கத்தில் சேர்ந்தன; அதற்கு மாறாக, 1933இல் ஜெர்மனியும் ஜப்பானும், 1937இல் இத்தாலியும், 1939இல் (ரஷ்யப் பின்லாந்துப் போர் தொடங்கியதும்) ஹங்கேரியும் ரஷ்யாவும் சங்கத்தை விட்டு விலகின. வில்சன் சங்கத்தை ஆதரித்த போதிலும், அமெரிக்கா அதன் உறுப்பாகச் சேர மறுத்தது. இவ்வாறு அது உடன்படிக்கையையும் ஒப்பந்தத்தையும் மீறியது. அமெரிக்கா சேர மறுத்த போதிலும், சங்கம் ஏறக்குறைய ஐம்பது நாடுகளின் பன்னாட்டு நலனைப் பேணி வந்தது. அந்நாடுகளில் உல

கின் மொத்த மக்கள் தொகையில் 75 சதவிகிதம் மக்கள் வாழ்ந்து வந்தார்கள். அத்தொகையில் உலகின் நிலப்பகுதியில் 65 சத விகிதம் அடங்கியிருந்தது.

ஒப்பந்தத்தின் முதல் விதியில் உறுப்பினரைச் சார்ந்த ஒழுங்கு கள் கூறப்பட்டிருந்தன. குறிப்பிட்ட உறுதி மொழியை அளிக்கும் தன்னாட்சி பெற்ற எந்த நாட்டையும் அல்லது குடியேற்ற உரிமை நாட்டையும் பேரவை (Assembly) சேர்த்துக்கொள்ளலாம். 2 முதல் 7 வரையுள்ள விதிகளும், 14ஆம் விதியும் சங்க நிறுவனங்களைப் பற்றிக் கூறின. அவையெல்லாம் ஐக்கிய நாடுகளின் சங்க நிறுவனங் களுக்கு முன்னேடிகளாய் இருந்தமையால், அவற்றை விரிவாகப் பார்ப்பது பயன் தரும். பேரவை (Assembly), அவை (Council), செயலகம் (Secretariat), நிலையான சர்வதேச நீதி மன்றம் (Parliament International Court of Justice) ஆகிய இந்நான்கும் சங்கத்தின் முக்கிய நிறுவனங்கள் ஆகும். இந்த நிறுவனங்கள், அரசாங் கத்தின் இன்றியமையாத மூன்று துறைகளென நாம் விளக்கிய சட்ட மன்றம், நிருவாகத்துறை, நீதித்துறை என்பன்வற்றைப் பொதுவாக ஒத்திருந்தன. பேரவை சாதாரணமாக ஆண்டுக்கு ஒரு முறை குறுகிய காலத்திற்குக் கூடியபோதிலும், அதை ஒரு வகைப் பன்னாட்டுப் பாராளுமன்றம் எனக் கூறலாம். அவையை அமைச்ச ரவைக்கு அதிகமாக ஒப்பிட இயலாது. ஆயினும், அது சில நிருவா கத்துறை அதிகாரங்களைச் செலுத்தியது. அது ஆழ்ந்து ஆயும் ஒரு நிறுவனம். பேரவையைவிட அதை எளிதில் கூட்ட இயலும். செய லகம், ஒரு தனி அரசிலுள்ள பொதுத்துறை அலுவல் அமைப்பைப் (Civil Service) பெரும்பாலும் ஒத்திருந்தது. அதில் நிரந்தரமான அலுவலர்கள் பணியாற்றி வந்தார்கள். உண்மையான அல்லது உள்ளாற்றலுடைய பன்னாட்டுச் சட்டத்தைப் பொறுத்த வரையில், நிலையான நீதிமன்றம் தனி அரசிலுள்ள நீதித்துறையை ஒத்திருந்தது. சீரியல் சட்டத்தைப் (Civil law) பொறுத்த வரையிலாவது, அது அரசின் நீதித்துறையைப் போன்றிருந்தது.

பேரவையில் ஒவ்வோர் உறுப்பு நாட்டிலிருந்தும் மூவருக்கு மிகா மல் பிரதிநிதிகள் இருந்தார்கள். ஆனால், எப்பொருள் பற்றியும் வாக் கெடுப்பு நிகழும்போது தமது நாட்டின் சார்பாக ஒருவர் மட்டும் வாக் களிக்க இயலும். பேரவை ஆண்டுக்கு ஒரு முறையாவது கூடியது. (சூழ்நிலைக்குத் தக்கபடி அடிக்கடியும் கூடலாம்.) அதன் கூட்டக் காலம் ஏறக்குறைய மூன்று வாரங்கள் வரை நீடித்தது. சங்கத்தின் அதிகாரத்திற்குட்பட்ட, உலக அமைதி சார்ந்த எப்பொருளையும் அது வாதிக்கலாம். அவையில் ஐந்து நிரந்தரமான உறுப்பினர்களும் ஒன்பது நிரந்தரமில்லாத உறுப்பினர்களும் இருந்தார்கள். (சங்கத்

தின் உறுப்பினர்களின் தொகை மாறும் போது இந்த எண்களும் மாறின.) அவர்கள் முறையே வல்லரசுகளின் பிரதிநிதிகளாகவும் சிறு அரசுகளின் பிரதிநிதிகளாகவும் இருந்தார்கள். நிரந்தரமல்லாத உறுப்பினர்கள் மூன்று ஆண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். தேவையான போது அவை கூடும். நடைமுறையில் அது ஆண்டுக்கு நான்கு முறை கூடியது. அதன் அதிகாரங்கள் பேரவையின் அதிகாரங்களைப் போன்றிருந்தன. ஆனல், உண்மையில் அது அடிக்கடி கூடியதாலும், பேரவையைவிட எளிதில் கூட்டப்பட்டதாலும், வாதத்திற்குக் கொண்டுவரப்படும் பொருள்களை விரிவாக வாதித்துப் பிறகு அவற்றைப் பேரவையின் முன் சமர்ப்பித்தது.

செயலகம் முற்றிலும் அரசியல் சார்பற்ற ஒரு நிறுவனம். அதன் அலுவலர்கள் ஊதியம் பெற்ருர்கள். ஜெனீவாவில் சங்கத்தின் அதிகார நிலையத்தில் அவர்கள் நிரந்தரமாகப் பணியில் அமர்த்தப்பட்டிருந்தார்கள். பொதுச் செயலாளர் (Secretary-General) முதல் செயலகத்தின் எல்லா உறுப்பினர்களும் சங்கத்தின் பணியாளர்களே தவிர, தமது நாட்டின் பிரதிநிதிகள் அல்லர். செயலகம், ஆட்சி முறைக்கென, மூன்று முக்கியப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. முதலாவது, பொதுச் செயலகம். அதில் தனி அலுவல்களுக்கென அமர்த்தப்பட்ட துணைப் பொதுச் செயலாளர்களும் இருந்தார்கள். இரண்டாவது, தொழில் துறைப்பகுதி; அது செய்தி, போக்கு வரவு, செய்திப் போக்குவரத்துத் தொடர்பு போன்ற காரியங்களைக் கவனித்தது. மூன்ருவது, ஆட்சித் துறைப்பகுதி. நிதி, நூல் நிலையம், பதிவு செய்யுமிடம் ஆகியவை அதில் அடங்கியிருந்தன. நாகரிகமடைந்த எல்லா நாடுகளுக்கும் பொதுவான செய்திகளைப்பற்றி ஆராய்ச்சி செய்வதும், நிரந்தரமான பதிவேடுகளைச் சேகரிப்பதும், அவைக்கும் பேரவைக்கும் முன் சமர்ப்பிக்கப்படும் அறிக்கைகளைத் தயாரிப்பதும் செயலகத்தின் முக்கிய அலுவல்கள்.

நிலையான சர்வ தேச நீதி மன்றம் ஒப்பந்தத்தின் 14ஆம் விதியில் கூறப்பட்ட முறைப்படி அமைக்கப்பட்டிருந்தது. ஒப்பந்தத்தின் நீண்ட முதற்குறிப்பு அதன் அமைப்பை விளக்கியது. 1921ஆம் ஆண்டு அது நிறுவப்பட்டது. அதில் நீதிபதிகள் பதினெருவர் இருந்தனர். அவர்களுள் ஐவர் இலத்தீன் நாடுகளிலிருந்தும், மூவர் ஜெர்மானிய, ஸ்காண்டிநேவிய நாடுகளிலிருந்தும், இருவர் பொது நீதி நிலவும் நாடுகளிலிருந்தும் (பிரிட்டன், பிரிட்டிஷ் குடியேற்ற உரிமை நாடுகள், அமெரிக்க ஐக்கிய நாடுகள்—அமெரிக்கா சேர்ந்தால்), ஒருவர் ஆசியாவிலிருந்தும் தெரிந்தெடுக்கப்பட்டனர். ஒப்பந்தத்தின் 13ஆம் விதியின்படி நீதி மன்றம் தன் முன் சமர்ப்பிக்கப்பட்ட தகராறுகளை மட்டும் தீர்க்க இயலும். ஆயினும், கட்சிகளின் வேண்டுகோளின்

மேல் அது நடுத்தீர்ப்புச் செய்யலாம். சங்கத்தின் தலைமையிடமாகிய ஜெனீவாவிற்குப் பதிலாக ஹேக் எனும் இடம் நீதி மன்றத்தின் நிலையான தாயகமாய் விளங்கியது. அதுவே பழைய ஹேக் மாநாடு நிறுவிய நிலையான நீதி மன்றத்தின் மரபான இருப்பிடமாய் இருந்தது.

சங்க அமைப்பின் ஒரு பகுதியாய் நிலை நாட்டப்பட்ட மற்றொரு நிறுவனம் சர்வதேசத் தொழில் நிறுவனம் (I. L. O). அது சங்கத்தின் பிற நிறுவனங்களுடன் ஜெனீவாவில் பணியாற்றி வந்தது. அத்தகைய சர்வதேச நிறுவனத் திட்டத்திற்கு உரிமைகளின் தொழில் சாசனம் (Labour Charter of Rights) முன்னோடியாய் இருந்தது. சங்கத்தின் ஒப்பந்தத்தைப் போல, அதுவும் வெர்ஸேல் உடன்படிக்கையின் உட்பகுதியாய் இடம் பெற்றிருந்தது. வரலாற்றிலே முதல் முறையாகத் தேசீய அரசாங்கங்களின் தூதர்கள் ஒன்று கூடி, உலகமெங்கும் உள்ள தொழிலாளர்களின் உரிமைகளையும், நிலையான அமைதியில் அவர்கள் பெறும் பங்கையும் வலியுறுத்தினார்கள். சங்கத்தின் பேரவையைப் போல, சர்வதேசத் தொழில் மாநாடும் ஆண்டுக்கு ஒரு முறை கூடித் திட்டங்களை வகுத்தது; பிறகு சங்கத்தின் உறுப்பு நாடுகளின் இசைவைப் பெறுவதற்காக அவற்றை அந்நாடுகளின் முன் சமர்ப்பித்தது. பல நாடுகளில் நிலவிய தொழில், தொழிலாளர் சார்ந்த அன்றாடப் பிரச்சினைகளுடன் நெருங்கிய தொடர்பில்லாதது போலத் தோன்றிய போதிலும், சர்வதேசத் தொழில் நிறுவனம் பன்னாட்டுப் பொருளாதாரப் பிரச்சினைகளைப் பற்றிய செய்திகளை ஒப்பிட்டுப் பார்த்துப் பரப்பி நல்ல தொண்டாற்றி வந்தது. அது எவ்வளவு சுறுசுறுப்புடன் செயலாற்றி வந்ததென்றால், இரண்டாம் உலகப் போர் தொடங்கிய பிறகும் அது நிலைத்து நின்றது. *1940*ஆம் ஆண்டிலிருந்து சர்வதேசத் தொழில் மாநாடு அமெரிக்காவில் கூடி வந்தது. போருக்குப் பிறகு அது ஐக்கிய நாடுகளின் சங்கத்துடன் இணைந்து, தனது பழைய இருக்கையாகிய ஜெனீவாவில் பணியாற்றத் தொடங்கியது.

சர்வதேச சங்கத்தையும், ரோமானியப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பிறகு உலக அமைதியை நிலைநாட்டச் செய்யப்பட்ட நடைமுறைத் திட்டங்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால், சங்க நிறுவனங்கள் நிலையாக நிறுவப்பட்டிருந்தமையால் சங்கத்தின் அரசியலமைப்பு உலகுக்கு அமைதியை அளிக்க இயலுமென்ற நம்பிக்கை ஏற்பட்டது. ஏனெனில், அதை உருவாக்கியவர்கள் உலக அமைதி என்பது இரு பன்னாட்டுப் போர்களுக்கிடையில் நிலவும் போரற்ற நிலை அன்றென்றும், அது உலக நாடுகளிடையே உழைப்புக் காரணமாகப் படிப்படியாக ஏற்பட வேண்டிய உண்மை என்றும் உணர்ந்தார்கள். சங்கத்தின் அரசியலமைப்பு, நிறுவனங்களை வழங்கியது; அவற்றைச் செயற்படுத்த வேண்டுவது நாடுகளின் பொறுப்பாய் இருந்தது.

சர்வதேச சங்கம் முதற்பத்து ஆண்டுகளில் சிறத்த பணியாற்றிய துடன், பன்னாட்டுத் துறையில் இணக்கத்தை உண்டுபண்ணி உதவி யளித்து வந்த கருவியெனவும் பெருமதிப்புப் பெற்றது. 1923இல் அது இத்தாலிக்கும் கிரீஸுக்கும் இடையே தோன்றிய பூசலைத் தீர்த்து வைத்தது. அவ்வாறு செய்யவில்லையெனில், அதனால் போர் விளைந் திருக்கலாம். அதே ஆண்டில் சங்கம் ஆஸ்திரியா, ஹங்கேரி ஆகிய நாடுகளின் பண நிலையைச் சீர்படுத்துவதற்காகப் பணவுதவி செய்தது. உடன்படிக்கைகள் காரணமாக அவ்விரு நாடுகளும் பழைய 'சிதைந்த பேரரசி'னின்று (Ramsbackle Empire) மட்டுமல்லாமல், தமக்குள்ளும் பிரித்து நின்றன. மேலும், 1923இல் சங்கம், லௌ சான் உடன்படிக்கையின்படி (Treaty of Lausanne) ஆசியா மைனரி லிருந்து வந்த அகதிகளைக் கிரீஸில் குடியேற்றி வைக்கும் சிக்கலான அலுவலை மேற்பார்த்தது. 1925இல் அது கிரீஸுக்கும் பல்கேரியா வுக்கும் இடையே ஏற்பட்ட எல்லைத்தகராற்றைத் தீர்த்து வைத்தது. அதே காலத்தில் உடன்படிக்கைகளின் பிற நிபந்தனைகளையும் சங்கம் நிறைவேற்றியது எடுத்துக்காட்டாக, முன்னால் ஜெர்மானியக் குடி யேற்ற நாடுகளாய் இருந்த ஆட்சியுரிமைப் பகுதிகளைப் பங்கிட்டு மேற்பார்வை செய்வது, டான்ஸிக் உரிமை நகர் (Free City of Danzig) போன்ற பகுதிகளில் சர்வதேச ஆட்சியை நிறுவிப் பேணுவது போன்றவற்றைக் கூறலாம். இதற்கிடையில் தொழிலாளர், சுகாதா ரம் உலகமெங்கும் பரவியிருந்த தீமைகளாகிய வெள்ளையர் அடிமை வாணிகம், தீங்கு விளைவிக்கும் மருந்துகள் விற்பனை போன்றவற்றைத் தடுக்க அல்லது ஒழுங்குபடுத்த விதிகளை வகுத்தல் ஆகியவற்றின் பன்னாட்டுப் பிரச்சினைகளைப் பற்றிய செய்திகளைச் சேகரித்து ஒப்பு நோக்கும் வேலையைச் செயலகம் விரைவாகச் செய்து வந்தது. சுருங் கக் கூறவேண்டுமானால், சங்கம் உண்மையான பன்னாட்டுச் செய்தி கள் பற்றிய நிகழ்ச்சிக் குறிப்புகளின் களஞ்சியமாகவும், கருத்துகள் பரிமாறும் இடமாகவும் திகழ்ந்தது. சங்கத்தின் இச்செயல்களினால் ஐரோப்பாவிற்கும் உலகம் முழுவதற்குமே பெருநன்மை ஏற்படுமென நம்பிக்கை பிறந்தது.

16ஆம் விதி போரைத் தடுப்பதற்கான வழிகளைக் கூறியது. ஆனால், அவ்வழிகள் பல கருத்து வேறுபாடுகளைக் கிளறின. அவ் விதி எவ்வளவு முக்கியமானதென்றால், அதை முற்றிலும் இங்குக் கூறுவது நலம்.

''சங்கத்தின் எந்த உறுப்பினராவது அதன் 12, 13, அல்லது 15ஆம் விதிகளில் கூறப்பட்ட ஒப்பந்தங்களை மீறிப் போர் தொடுத் தால், சங்கத்தின் பிற உறுப்புகள் அனைத்தின் மேலும் அது போர் தொடுத்ததாகச் சங்கம் கருதும். உடனே அவை அந்நாட்டுடன் எல்

லா வாணிக, பணத் தொடர்புகளையும் துணித்து, அவற்றில் வாழும் மக்களுக்கும் ஒப்பந்தத்தை மீறிய நாட்டு மக்களுக்கும் உள்ள எல்லாத் தொடர்புகளையும் தடுத்து, ஒப்பந்தத்தை மீறும் நாட்டில் வாழும் மக்களுக்கும் சங்க உறுப்பினர் அல்லது உறுப்பினரல்லாத வேறு எந் நாட்டு மக்களுக்கும் இடையேயுள்ள பணம், வாணிகம் அல்லது ஆள் தொடர்புகளை எல்லாம் நிறுத்திவிடும்.

'ஒரு நாடு ஒப்பந்தத்தை மீறிவிட்டதா, இல்லையா என்பதை அவை (Council) தீர்மானிக்கும். இதைப் பற்றி அவையில் நிகழும் நடவடிக்கைகளில் போரைத் தொடங்கியதாகக் குற்றஞ்சாட்டப் பட்ட சங்க உறுப்பினர்களின் வாக்குகளையும், எந்த உறுப்புகளுக்கு எதிராகச் சங்கம் நடவடிக்கை எடுக்க முனைகிறதோ, அவற்றின் வாக்குகளையும் எண்ணுவதில்லை.

'இவ்விதியின்படி சங்கம் பொருளாதாரத் தடைகளைப் பயன் படுத்தக் குறிப்பிடும் நாளை எல்லா உறுப்பினர்களுக்கும் அறிவிக்கும்.

'ஆயினும், குறிப்பிட்ட உறுப்புகளைப் பொறுத்த வரையில் இந் நடவடிக்கைகளைக் குறிப்பிட்ட காலத்திற்கு நிறுத்தி வைக்கலாம். அவ்வாறு செய்வதால், மேலே கூறிய நடவடிக்கைகளின் நோக்கம் நிறைவேறுமானால், அல்லது அத்தகைய உறுப்புகளுக்கு ஏற்படும் இழப்பையும் வசதிக் குறைவையும் குறைக்க வேண்டுமானல், அந் நடவடிக்கைகளை நிறுத்தி வைக்கலாம்.'[1]

சங்கத்தின் ஓர் உறுப்பினர் இன்னோர் உறுப்பினரைத் தாக்கும் போது தாக்கப்பபட்ட உறுப்பினரைக் காக்கச் சங்கம் முற்படும் போது தான் அதன் உண்மையான நோக்கமும் அதிகாரமும் வெளிப் பட்டன. இத்தகைய இரு முக்கியக் கடுந்தேர்வுகளில் அது முற்றிலும் தோல்வியுற்றது. முதல் தோல்வி, 1931ஆம் ஆண்டு ஜப்பான் சீன மாநிலமாகிய மஞ்சூரியாவைக் கைப்பற்றிய போது நிகழ்ந்தது. சீனவும் ஜப்பானும் சங்கத்தின் உறுப்புகளாய் இருந்தன. ஜப்பானுக்கெதிராகச் சீன சங்கத்திடம் வீணுக முறையிட்டு உதவி கேட்டது. ஆனல், ஜப்பான் தான் கைப்பற்றிய பகுதிகளைத் திருப்பிக் கொடுக்கவில்லை. சங்கத்தின் இரண்டாவது தோல்வி, 1935இல் முசோலினி அபிஸீனியாவைத் தாக்கிய போது நிகழ்ந்தது. இரு நாடு களும் சங்கத்தின் உறுப்புகளாய் இருந்ததுமல்லாமல், அபிஸீனியா வின் வேண்டுகோளுக்கு இணங்கி இத்தாலியை ஆக்கிரமிப்பு நாடென அறிக்கையிட்டது. ஆனல், 16ஆம் விதியின்படி

1. 1922இல் அவையும் பேரவையும் திருத்திய பகுதியைத் தந்துள்ளோம்.

இத்தாலிக்கு எதிராகப் பொருளாதாரத் தடைகளை (Economic Sanctions) விதிப்பதில் முற்றிலும் அது தோல்வியுற்றது. இத்தாலி எத்தியோப்பியாவைத் தாக்கிய போது சங்கம் அதைத் தண்டிக்க இயலவில்லை. அதன் விளைவாகச் சங்கம் தான் இழந்த மதிப்பை ஒரு போதும் திரும்பப் பெறவில்லை. அதன் பிறகு, ஒப்பந்தத்தைத் திருத்தியமைக்க முயற்சிகள் செய்யப்பட்டன. ஆனால், இதைப் பற்றி நிறைவேறிய பெருந்தீர்மானங்கள் எல்லாம் வெற்று வாதத்துடன் நின்றன. அப்போது நாடுகளுக்கிடையே உருவாகிக்கொண்டிருந்த பயங்கரச் சூழ்நிலைகள் விரைவில் மோசமாகி, இறுதியில் 1939இல் பெரும்போரில் முடிவடைந்தன.

சங்கமும் அது வருந்தி அமைக்க முயன்ற கூட்டுப் பாதுகாப்பு (Collective Security) முறையும் சீர்குலைந்து மறைவதற்குரிய காரணங்களை எளிதில் காணலாம். அது நிறுவப்பட்ட நாளிலிருந்து அதில் தவிர்க்க முடியாத ஒரு குறை இருந்தது. அதாவது, அமெரிக்க ஐக்கிய நாடுகள் அதில் ஓர் உறுப்பாக இடம் பெறவில்லை. அதன் துணையின்றிச் சங்கம் ஒரு போதும் பயனுறுதியுடன் செயலாற்ற இயலவில்லை. இடையில் ரஷ்யா சங்கத்தில் சேர்ந்தபோதிலும், ஜப்பான், ஜெர்மனி, இத்தாலி ஆகிய மூன்று வல்லரசுகளும் சங்கத்தைக் கைவிட்டதால், அது தனது பழைய நிலையிலிருந்து மாறிச் சிதைந்து போயிற்று. உண்மையில் அது, போர் புரிய முனைந்து நின்ற நாடுகளின் கூட்டத்தைஎதிர்த்து அமைதியை நிலைநாட்ட விரும்பும்சங்கமாய் மாறியது. சங்கத்திற்குப் பணம் திரட்டும் அதிகாரம் இல்லை. அது உறுப்பு நாடுகள் கொடுக்கும் பணத்தையே நம்பி வாழ்ந்தது. அதனிடம் படைப்பலம் இல்லை. அப்பெரும்பொறுப்பை ஏற்று நடத்துவது அதன் உறுப்பினர்களின் விருப்பத்தைப் பொறுத்திருந்தது. ஆழ்ந்துபார்ப்போமானால், உறுப்பு நாடுகள் நேர்மை காரணமாகத்தான் அதன் சட்டங்களுக்குப் பணிய வேண்டியிருந்தது. பெரிய நாடுகள் அதன் அதிகாரத்தை எதிர்க்கத் துணிந்ததும், அத்திட்டம் தோல்வியடைந்தது. அதாவது, சங்கத்திற்கு இறைமை அதிகாரம் இல்லை. ஆனால், உறுப்பு நாடு ஒவ்வொன்றும் அவ்வதிகாரத்தை முற்றிலும் செலுத்தி வந்தது.

## 3. ஐக்கிய நாடுகளின் சங்க உறுப்புகள்

இரண்டாவது உலகப் போரின் போது போர் புரிந்து வந்த நாடுகளுக்குள் ஏற்பட்ட ஐக்கியம் பிறகு ஐக்கிய நாடுகளின் சங்கமாய்க் கனிந்தது. போரில் ஒன்றுபட்டிருந்த 26 நாடுகள் 1942ஆம் ஆண்டு ஜனவரித் திங்களில் வாஷிங்டனில் ஒரு பன்னாட்டு ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டன. அதற்கு 'ஐக்கிய நாடுகளின் கூட்டறிக்கை'

என்பது பெயர். அந்த அறிக்கையிலேதான் முதல் முதலில் 'ஐக்கிய நாடுகள்' என்ற சொற்றொடர் பயன்படுத்தப்பட்டது. வாஷிங்டன் அறிக்கையில் கையெழுத்திட்ட நாடுகள், அட்லான்டிக் சாசனத்தில் காணப்பட்ட கொள்கைகளையும் குறிக்கோள்களையும் பின்பற்றுவதாக ஒப்புக்கொண்டன. அதற்கு முந்திய ஆகஸ்டு திங்களில் அமெரிக்கத் தலைவரும் பிரிட்டிஷ் தலைமை அமைச்சரும் கடலில் கூடிய பிறகு அந்தச் சாசனத்தை வெளியிட்டார்கள். அட்லான்டிக் சாசனத்தில் எட்டுக் குறிப்புகள் இருந்தன. அமெரிக்காவும் பிரிட்டனும் பிற நாடுகளைக் கைப்பற்ற விரும்பவில்லையென்றும், மக்களின் கருத்துக்கு மாறாக அவர்கள் வாழும் பகுதிகளின் எல்லைகளை மாற்ற விரும்பவில்லையென்றும், எல்லா நாட்டவருக்கும் அவர்கள் விரும்பிய அரசாங்க முறைகளை அமைத்துக்கொள்ளும் உரிமைகளை வழங்க முயற்சி செய்வதாகவும், எல்லா நாட்டவரும் வாணிகத்திலும் மூலப்பொருள்களைப் பெறுவதிலும் சம உரிமை பெறுவதற்குத் தம்மாலான முயற்சிகள் எடுப்பதாகவும் அவ்வறிக்கை மூலம் உறுதியளித்தன. மேலும், அவ்விரு நாடுகளும் உலகமெங்கும் தொழிலாளர்களின் நிலையை உயர்த்த உழைப்பதாகவும், நாஜிக் கொடுங்கோன்மையை அழித்த பிறகு அமைதியை நிலைநாட்டி, அதனால் எல்லா நாடுகளும் அமைதியுடனும் பாதுகாப்புடனும் வாழ்வதற்குரிய நம்பிக்கையை உண்டாக்குவதாகவும், தடையின்றிக் கடல் கடக்கும் உரிமையை எல்லோருக்கும் பெற்றுக் கொடுப்பதாகவும் வாக்குறுதி அளித்தன. இறுதியாக அவை, பன்னாட்டுத் தகராறுகளைத் தீர்க்க வன்முறையையும் தாக்குதலையும் தவிர்ப்பதற்காகத் தம்மாலான முயற்சிகள் அனைத்தையும் எடுப்பதாகக் கூறின.

வாஷிங்டன் அறிக்கையைப் பின்தொடர்ந்து 1943ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்களில் மாஸ்கோ மாநகரில் மாநாடு ஒன்று கூடியது. அதில் ரஷ்யா, அமெரிக்க ஐக்கிய நாடுகள், பிரிட்டன், சீனா ஆகிய நாடுகள் மாஸ்கோ அறிக்கை என்ற ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டன. இவ்வறிக்கையின் நான்காவது விதியின்படி 'நான்கு வல்லரசுகளும், கூடுமானவரை விரைவில் பொதுவான ஒரு பன்னாட்டு நிறுவனத்தை நிறுவவேண்டுமென ஏற்றுக்கொள்கின்றன. அது, அமைதியை விரும்பும் எல்லா நாடுகளும் இறைமையுள்ள, இணையான நாடுகள் என்ற கொள்கையின் அடிப்படையில் எழவேண்டும். அத்தகைய நாடுகள் எல்லாம் அதில் உறுப்புகளாகும் வாய்ப்பு இருக்கவேண்டும். உலகில் அமைதியையும் பாதுகாப்பையும் நிலைநாட்ட வேண்டும்.' ஏறக்குறைய ஓராண்டுக்குப் பிறகு, 1944, நவம்பர்த் திங்களில் அதே நான்கு வல்லரசுகளின் பிரதிநிதிகள் அமெரிக்காவிலுள்ள டம்பார்ட்டன் ஓக்ஸ் (Dumbarton Oaks) என்னுமிடத்தில் கூடி அந்நிறுவனத்தின் அமைப்பைத் தீட்டுவது

பற்றித் திட்டமிட்டனர். அவர்கள் அத்திட்டங்களை ஓர் ஒப்பந்த வடிவில் எழுத வேண்டுமென்றும், அதைச் சாசனம் என்றும் அந் நிறுவனத்தை ஐக்கிய நாடுகள் என்றும் வழங்க வேண்டுமென்றும் தீர்மானித்தார்கள். 1945ஆம் ஆண்டு பிப்பிரவரித் திங்களில் கிரிமியாவிலுள்ள யால்ட்டா எனுமிடத்தில் ஸ்டாலின், ரூஸ்வெல்ட், சர்ச்சில் ஆகியோர் கூடிய போதும் டம்பார்ட்டன் ஓக்ஸ் மாநாட்டில் உருவான கொள்கைகளை ஏற்றுக்கொண்டனர். அதே ஆண்டில் ஏப்பிரல் முதல் ஜூன் வரை நிகழ்ந்த ஸான் பிரான்ஸிஸ்கோ மாநாட்டில் ஐம்பது நாடுகள் கூடி, அவற்றின் அடிப்படை அமைப்பை அதிக மாக மாற்றாமல் ஒரு சாசனமாக எழுதி அறிக்கையிட்டன.

1945ஆம் ஆண்டு, ஜூன் திங்கள், 27ஆம் நாள் வெளியான ஐக்கிய நாடுகளின் சங்க சாசனம் ஒரு நீண்ட ஆவணம். அதில் ஒரு முன்னுரையும், 111 விதிகளையுடைய 19 இயல்களும் உள்ளன. முன்னுரையை இங்குத் தருகிறோம்:

'ஐக்கிய நாடுகளின் மக்களாகிய நாம் வருங்காலத் தலைமுறைகளை, நமது வாழ்நாளில் மனித இனத்தை இருமுறை பெருந்துயருக்குள்ளாக்கிய போரின் கொடுமையினின்று காக்க உறுதி கூறுகிறோம்.

'மனிதனின் அடிப்படை உரிமைகளையும், மதிப்பையும், தகுதியையும் வலியுறுத்துவதுடன் பெரிய நாடுகளிலும் சிறிய நாடுகளிலும் உள்ள ஆடவர்க்கும் பெண்டிர்க்கும் சம உரிமை வழங்க வேண்டுமென்றும் வற்புறுத்துகிறோம்.

'உடன்படிக்கைகள், பன்னாட்டுச் சட்டத்தின் பிற பிறப்பிடங்கள் ஆகியவற்றின் நிபந்தனைகளை நீதியுடனும் மதிப்புடனும் நிறைவேற்றுவதற்கேற்ற சூழ்நிலையை உருவாக்கி, அதிக உரிமைகளை வழங்கிச் சமூக முன்னேற்றத்தையும் உயர்ந்த வாழ்க்கைத் தரத்தையும் வளர்ப்பதற்காகச் சகிப்புத் தன்மையைக் கடைப்பிடித்து, எல்லாரும் அமைதியாக அண்டை வீட்டார் போல வாழ்வோம்.

'நமது ஆற்றலெல்லாம் ஒன்று திரட்டி உலக அமைதியையும் பாதுகாப்பையும் பேணி வளர்ப்போம்.

'கொள்கைகளை ஏற்று, முறைகளை நிறுவி, பொது நன்மைக்கல்லாமல் வேறு எதற்கும் படைப்பலத்தைப் பயன்படுத்துவதைத் தடுப்போம்.

'எல்லா நாடுகளின் பொருளாதார, சமூக நலன்களை முன்னேற்றுவதற்காகப் பன்னாட்டு நிறுவனத்தைப் பயன்படுத்துவோம். இக்குறிக்கோள்களை எல்லாம் அடைவதற்கு நாம் ஒன்றுபட்டு உழைப்பதாக உறுதி கூறுகிறோம்.

'அதற்காக நம் அரசாங்கங்களின் பிரதிநிதிகள் ஸான் பிரான் ஸிஸ்கோ நகரில் கூடியுள்ளார்கள். அவர்கள் தங்கள் முழு அதிகாரங்களும் நல்ல பொருத்தமான முறையில் அமைந்திருப்பதைக் காட்டியுள்ளார்கள். நம் அரசாங்கங்கள் இப்போதுள்ள ஐக்கிய நாடுகளின் சாசனத்தை ஏற்றுக்கொண்டு ஐக்கிய நாடுகள் எனப்படும் ஒரு பன்னாட்டு நிறுவனத்தை அமைக்கின்றன.'

முதல் விதி நிறுவனத்தின் நான்கு நோக்கங்களையும் விளக்குகிறது. அவையாவன: கூட்டு முறைகளின் மூலமாக உலக அமைதியையும் பாதுகாப்பையும் பேணுதல்; நாடுகளுக்குச் சம உரிமைகளும் தன்னாட்சியும் வழங்குவது வாயிலாக நாடுகளிடையே நட்புறவுகளை வளர்த்தல்; பொருளாதாரம், சமூகம், பண்பாடு, அல்லது அன்புப் பணி (Humanitarian) ஆகியவை சார்ந்த பன்னாட்டுச் 'சிக்கல்களைத் தீர்க்கப் பல நாடுகளின் ஒத்துழைப்பைப் பெறுதல்; இந்தப் பொது நோக்கங்களை நிறைவேற்ற நாடுகளின் செயல்களை ஒருமுகப்படுத்தும் நடுவிடமாகத் திகழ்தல்.

இரண்டாவது விதியின்படி எல்லா உறுப்பு நாடுகளும் இறைமை அதிகாரமுள்ள சமமான நாடுகள் என்ற கொள்கையில் சங்கம் நிறுவப்பட்டுள்ளது. மேலும், எந்த அரசின் உள் நாட்டுச் செய்திகளிலும் ஐக்கிய நாடுகள் தலையிடுவதற்குச் சாசனம் இடம் தருவதில்லை. ஆனல், அமைதியை நிலை நாட்டுவதற்காக மட்டும் சில முறைகளைக் கையாளலாம். (இவற்றைச் சாசனத்தின் ஏழாவது இயல் விளக்குகிறது.) இந்நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக ஆறு முக்கிய நிறுவனங்களை நிறுவ வேண்டும். அவை:

(1) பொதுப் பேரவை (General Assembly)

(2) பாதுகாப்பு அவை (The Security Council)

(3) பொருளாதார சமூக அவை (The Economic and Social Council)

(4) பொறுப்பாண்மை அவை (The Trusteeship Council)

(5) சர்வதேச நீதி மன்றம் (The International Court of Justice)

(6) செயலகம் (The Secretariat) என்பவை.

இந்த அமைப்பு, சர்வதேச சங்க அமைப்பைப் போன்றது என்பது தெளிவாகத் தெரிகின்றது. ஏனெனில், நாம் ஏற்கெனவே பார்த்தது போல, சங்கத்தில் பேரவை, அவை, சர்வதேச நீதிமன்றம், செய

லகம் ஆகியவை இருந்தன. சர்வதேச சங்கத்தில் காணப்படாத பொருளாதார சமூக அவையும், பொறுப்பாண்மை அவையும் ஐக்கிய நாடுகளின் சங்கத்தில் இருக்கின்றன. ஆயினும், இவையும் ஒரு வகையில் சர்வதேச சங்கத்தில் இருந்தன எனலாம். ஏனெனில், சங்கம் ஆதரித்த அல்லது உருவாக்கிய சர்வதேசத் தொழில் நிறுவனம், ஆட்சியுரிமைப் பரப்புகள் (Mandates), சிறப்பு ஆணைக் குழு ஆகிய தனி நிறுவனங்களின் விரிந்த உருவத்தையே பொருளாதார சமூக அவையிலும் பொறுப்பாண்மை அவையிலும் காணலாம். (ஆயினும், இப்போதும் சர்வதேசத் தொழில் நிறுவனம் தனிச் செயல்களைச் செய்து வருகிறது. அதனுடன் இன்னும் அதிகமான அலுவல்களை ஆற்றும் புதிய அவையும் இருக்கிறது.)

(1) பொதுப் பேரவை: 9 முதல் 22ஆம் விதி வரை பொதுப் பேரவையின் அமைப்பையும் அலுவல்களையும் விரிவாக விளக்குகின்றன. அது அமைப்பில் இல்லாவிடினும், அதிகாரத்தைப் பொறுத்த வரையில் சர்வதேச சங்கத்தின் பேரவையை ஒத்திருக்கின்றது. எந்த உறுப்பு நாடும் ஐந்து பிரதிநிதிகள் வரை அனுப்பலாம்; ஆனால், அவருள் ஒருவர் மட்டும் வாக்களிக்கலாம். முக்கியமான தீர்மானங்களை நிறைவேற்றுவதற்குப் பொதுப்பேரவையில் அமர்ந்து வாக்களிக்கும் உறுப்பினர்களுள் மூன்றில் இரண்டு பகுதிப் பெரும்பான்மையோரின் வாக்குகள் தேவை. சாதாரணத் தீர்மானங்களை நிறைவேற்றச் சாதாரணப் பெரும்பான்மை (Simple Majority) வாக்குகள் போதும். பொதுப் பேரவை ஆண்டுதோறும் கூடும். பாதுகாப்பு அவை அல்லது பெரும்பான்மையான உறுப்பு நாடுகள் விரும்பினால், பேரவையின் சிறப்புக் கூட்டங்கள் கூட்டப்படலாம். சர்வதேச சங்கத்தின் பழைய பேரவையைப் போலப் பொதுப் பேரவையும், அதன் முன் கொண்டுவரப்படும் அமைதி அல்லது பாதுகாப்பைப் பற்றிய தீர்மானங்களை வாதிக்கும். அவை அல்லது ஏதாவது ஓர் அரசு அத்தகைய தீர்மானங்களைக் கொண்டு வரலாம். உறுப்பு அரசுகளும் உறுப்பல்லாத அரசுகளும் தீர்மானங்களைக் கொண்டுவர இயலும். பேரவை போர்க்கருவிகள், பன்னாட்டு ஒற்றுமை ஆகியவை பற்றிய எந்தப் பிரச்சினையையும் ஆராயலாம். அது பொருளாதார சமூக அவையையும் பொறுப்பாண்மை அவையையும் கட்டுப்படுத்துகிறது. பாதுகாப்பு அவை தனது ஆண்டு அறிக்கையை அதன் முன் சமர்ப்பிக்க வேண்டும். சங்கத்தின் வரவு செலவுத் திட்டத்தையும் ஏற்கும் அதிகாரம் பேரவைக்கு உண்டு.

(2) பாதுகாப்பு அவை: பாதுகாப்பு அவை, சர்வதேச சங்கத்தின் பழைய அவையைப் போல இருந்த போதிலும் (23—24விதிகள்), அதைவிட அதிக அதிகாரங்களைச் செலுத்திவருகிறது. அதில்

உறுப்பினர் பதினொருவர் இருக்கின்றனர். பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடுகள், ரஷ்யா, பிரான்ஸ், சீனா ஆகிய ஐந்து நாடுகளும் நிரந்தர உறுப்புகள். எஞ்சிய ஆறு உறுப்புகளையும் பொதுப் பேரவை தேர்ந்தெடுக்கிறது. உறுப்பினர் இரண்டு ஆண்டுகள் பதவியில் இருக்கின்றனர். ஒவ்வோர் ஆண்டும் மூவர் ஓய்வு பெறுவர். ஓய்வு பெற்றவர்களை உடனே திரும்பவும் தேர்ந்தெடுத்தல் கூடாது. ஒவ்வோர் உறுப்பு நாட்டிற்கும் ஒவ்வொரு பிரதிநிதியும் ஒவ்வொரு வாக்குமே உண்டு. பாதுகாப்பு அவை நடைமுறை சார்ந்த ஒரு தீர்மானத்தை நிறைவேற்ற வேண்டுமானால், உறுப்பினர் பதினொருவருள் ஏழு பேராவது அதை ஆதரிக்க வேண்டும். வேறு எல்லாத் தீர்மானங்களையும் நிறைவேற்ற அந்த ஏழு பேர்களில் ஐவர் நிரந்தர உறுப்பினராய் இருக்க வேண்டும். ஆயினும், ஒரு தகராற்றைப் பற்றித் தீர்மானிக்கும்போது அதில் சம்பந்தப்பட்ட நாடு வாக்கெடுப்பில் பங்கு பெறக் கூடாது. இக்கட்டுப்பாட்டு விதியின்படி, உலக அமைதியைக் குலைக்கக் கூடிய எந்தத் தகராறும் பாதுகாப்பு அவையின் முன் வரும்போது, நிரந்தர உறுப்பினர் ஒருவர் நடைமுறை பற்றிய வாதத்தைத் தமது மறுப்பாணையால் தடுக்க இயலாது. ஆனால், அதன் பிறகு நிகழும் வாதத்தில் மறுப்பாணையைப் பயன்படுத்தலாம்; அதாவது, தகராற்றை ஆராய்தல், தடைகளை விதிக்குமாறு அவை கூறுதல், வன்முறையைப் பயன்படுத்துதல் ஆகியவற்றைத் தடுக்கலாம்.

'உலக அமைதியையும் பாதுகாப்பையும் குலைக்கக் கூடிய' எந்தத் தகராற்றையும் தீர்க்கும் பொறுப்பைச் சாசனம் பாதுகாப்பு அவைக்கு வழங்குகிறது. உறுப்பு நாடுகள், சாசனத்திற்கேற்பப் பாதுகாப்பு அவை நிறைவேற்றும் தீர்மானங்களை ஏற்றுச் செயற்படுத்துவதாக உறுதியளிக்கின்றன. இதற்கென நடவடிக்கை எடுக்குமாறு பாதுகாப்பு அவை ஐக்கிய நாடுகளை வேண்டலாம். சங்கத்தின் உறுப்பினர்கள் தங்களுள் சில தனி ஒப்பந்தங்களைச் செய்துகொண்டு, பாதுகாப்பு அவையின் கருத்துகளை நிறைவேற்றுவதற்காக அதனிடம் எத்தகைய ஆற்றல்களைத் தாங்கள் ஒப்படைக்க இயலும் என்பதைக் குறிப்பிடுவார்கள்.

ஆகவே, இத்திட்டத்தை, 'ஒழுங்காக அமைக்கப்பட்ட பாதுகாப்பு' என்றும், 'ஒன்றுபட்ட செயல்' என்றும் சுருக்கமாகக் கூறலாம். இக்குறிக்கோளை அடையப் பயன்படுத்தப்படும் திட்டங்கள் சர்வதேச சங்கத்தின் பழைய திட்டத்திற்கும் ஐக்கிய நாடுகளின் புதிய திட்டத்திற்குமுள்ள அடிப்படை வேறுபாடுகளைக் காட்டுகின்றன. பாதுகாப்பு அவை இந்த இன்றியமையாத அலுவலைச் செய்வதற்கு ஒரு படைப் பணியாளர் குழு (Military Staffs Committee) அதற்கு உதவி செய்கிறது. இக்குழுவில் வல்லரசுகளின் தளபதிகள் உறுப்பி

னர்களாய் இருப்பார்கள். இந்நிறுவனம், ஒவ்வோர் உறுப்பு நாடும் சங்கத்திற்குத் தனது பங்காக வழங்கும் தரை, கடல், வானப் படைகளின் அளவு, தன்மை ஆகியவற்றின் நுணுக்கங்கள் பற்றி அறிவுரை கூறும். ஆனால், தனது கட்டுப்பாட்டை மீறும் நாடுகளை அடக்க எவ்வாறு போதிய படைப்பலம் பெறுவது என்பது மட்டுமன்றி, தீங்கு நிகழ்ந்ததும் அப்பலத்தை எவ்வாறு உடனே பயன் தரும் வகையில் கையாள வேண்டுமென்பதும் புதிய உலக நிறுவனத்தின் பிரச்சினையாய் இருக்கின்றது. இத்தகைய இரட்டைத் தேவையை நிறைவேற்றுவதற்காக, ஓர் உலக நிறுவனம் அமைக்கப்படுவதுடன், அதன் ஆதரவில் பல பகுதிகளுக்கெனத் தனித்தனி பாதுகாப்பு முறைகளும் ஏற்படுத்தப்படுகின்றன. இதற்காக உலகின் பல பகுதிகளிலும் சங்கத்தின் கட்டுப்பாட்டிற்குட்பட்ட பல படைத்தளங்கள் நிறுவப்பட வேண்டும்.

(3) **பொருளாதார சமூக அவை:** 61 முதல் 74ஆம் விதி வரை பொருளாதார சமூக அவையின் அமைப்பையும் அலுவல்களையும் விளக்குகின்றன. பொதுப் பேரவை அதன் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கின்றது. அதில் 18 உறுப்பு நாடுகள் இடம் பெறுகின்றன. ஒவ்வோர் உறுப்பு நாட்டிற்கும் ஒவ்வொரு வாக்கு மட்டும் உண்டு. ஒவ்வோர் ஆண்டும் உறுப்பினர் அறுவர் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அவர்களின் பதவிக்காலம் மூன்று ஆண்டுகள். ஓய்வு பெறும் உறுப்பினர்களை உடனே திரும்பவும் தேர்ந்தெடுக்கலாம். அவையின் தீர்மானங்களை நிறைவேற்ற அவையில் அமர்ந்து வாக்களிப்போரின் சாதாரணப் பெரும்பான்மை வாக்குகள் போதுமானவை. தேவையான போதெல்லாம் அவை கூடலாம்; அல்லது அதன் உறுப்பினர்களுள் பெரும்பான்மையோர் விரும்பினால் கூடலாம். அவை பலதிறப்பட்ட சிக்கலான அலுவல்களை ஆற்றி வருகிறது. அது உலகின் பல பகுதிகளிலும் காணப்படும் பொருளாதாரம், சமூகம், பண்பாடு, கல்வி, சுகாதாரம் ஆகிய ஐக்கிய நாடுகளுடன் தொடர்புடைய எல்லாச் சிக்கல்களையும் ஆய்ந்து, அவற்றைப் பற்றிய அறிக்கைகளைத் தயாரித்து, பொதுப் பேரவையின் முன் சமர்ப்பிக்க வேண்டும். பன்னாட்டு மாநாடுகளைக் கூட்டுவதற்கும் உறுப்பு நாடுகள் விரும்பும் தனி விசாரணைகளைப் பொதுப் பேரவையின் இசைவு பெற்று நடத்துவதற்கும் அதற்கு உரிமை உண்டு.

அரசியலுக்கும் படைக்கலன்களுக்கும் புறம்பான சில பன்னாட்டுச் செய்திகளில் பொருளாதார சமூக அவை நேராகவோ, அல்லது மறைமுகமாகவோ ஈடுபடுவதில்லை. இது எவ்வளவு உண்மையென்றால், பொருளாதார, சமூக காரியங்களுக்காக ஏற்கெனவே பல உடன்படிக்கைகளின் விளைவாக நிறுவப்பட்டு, ஐக்கிய நாடுகளின்

சங்கத்தின் செயல்களுடன் நெருங்கிய தொடர்பைப்பன்னுட்டு நிலையங் களுடன் ஒப்பந்தங்கள் செய்யும் அதிகாரத்தைச் சாசனம் அவைக்கு அளிக்கிறது. இவ்வாறு தனிச்செயல்களில் ஈடுபட்டுள்ள நிலையங் களில் (Spicialise Agencies) உலக சுகாதார நிறுவனம் (WHO), ஐக் கிய நாடுகளின் கல்வி, அறிவியல், பண்பாட்டு நிறுவனம் (UNESCO), சர்வதேசத் தொழில் நிறுவனம் (IO) போன்றவற்றைக் குறிப்பிடலாம். போருக்குப் பிறகு இத்துறையில் ஈடுபட்டுள்ள பல்வேறு நிலையங் களின் வேலைகளையெல்லாம் ஒன்ருக இணைப்பதே இந்த ஒப்பந்தங் களின் நோக்கம். இறுதியாக, பொருளாதார சமூக அவையின் அன்புப் பணி தடையின்றி நடைபெறுவதற்காக, அது ஐக்கிய நாடுகளின் எந்த உறுப்பு நாட்டின் பிரதிநிதிகளையும் அல்லது ஏற்கெனவே குறிப் பிட்ட தனிச்செயல்களில் ஈடுபட்டுள்ள நிலையங்களின் பிரதிநிதிகளை அதன் நடவடிக்கைகளில் கலந்துகொள்ள அனுமதிக்கலாம்; ஆனல், அவர்களுக்கு வாக்களிக்கும் அதிகாரம் இல்லை. அல்லது அது தனிச் செயல்களில் ஈடுபட்டுள்ள அந்த நிலையங்களின் நடவடிக்கைகளில் கலந்துகொள்ளப் பிரதிநிதிகளை நியமிக்கலாம்.

(4) **பொறுப்பாண்மை அவை :** பொறுப்பாண்மை அவை யில் (75—91ஆம் விதிகளின்படி) பாதுகாப்பு அவையின் ஐந்து நிரந் தர உறுப்பினர்களும், பொறுப்பாண்மைப் பகுதிகளை ஆட்சி செய்யும் உறுப்பு நாடுகளும், பொதுப் பேரவை மூன்ருண்டுகளுக்குத் தேர்ந் தெடுக்கும் உறுப்பு நாடுகளும் இடம் பெறுவதைக் காண்கிருேம். அவையின் மொத்த உறுப்பினர்களில் பொருப்பான்மைப் பகுதிகளை ஆட்சி செய்யும் ஐக்கிய நாடுகளின் உறுப்பினர்களும் பிற உறுப்பினர் களும் சமமாக இருப்பதற்கு எத்தனை உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டுமோ, அத்தனை உறுப்பினர்களையே பொதுப் பேரவை தேர்ந் தெடுக்கின்றது. ஒவ்வோர் உறுப்பு நாடும் தனித்தகுதி பெற்ற ஒரு வரைத் தனது பிரதிநிதியாக அவைக்கு அனுப்ப வேண்டும். அவை யின் உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வாக்கு மட்டும் உண்டு. தீர்மானங்களை நிறைவேற்ற அவையில் அமர்ந்து வாக்களிப் போரின் சாதாரணப் பெரும்பான்மை வாக்குகள் தேவை. தேவை யான போது அவை கூடும். அதன் உறுப்பினர்களுள் பெரும்பான்மை யோர் விரும்பினுல் அவை கூட வேண்டும்.

பொறுப்பாண்மை அவை தன்னுட்சி பெருத பகுதிகளைக் கவ னித்து வருகிறது. இவை முந்திய சர்வதேச சங்கத்தின் ஆட்சியுரி மையின்கீழ் விடப்பட்ட பகுதிகளாய் இருக்கலாம்; அல்லது இரண் டாவது உலகப் போரின் விளைவாகப் பகைவரிடமிருந்து பிரிக்கப்பட்ட பகுதிகளாகவோ, அல்லது அவற்றை ஆளும் பொறுப்புள்ள அரசுகள் தாமாகவே அவையின் பொறுப்பில் வைத்த பகுதிகளாகவோ இருக்க

லாம். நாம் ஏற்கெனவே பார்த்தது போல, அந்தப் பகுதிகளை ஆளும் பொறுப்புள்ள உறுப்பு அரசுகள் அவற்றில் வாழும் மக்களின் நலன்களை எல்லாவற்றிற்கும் மேலாகக் கருதுவதுடன், அவர்களின் வாழ்வை வளப்படுத்துவதற்காகத் தம்மாலான எல்லா முயற்சிகளையும் செய்வதாக உறுதி கூறவேண்டும். உலக அமைதியையும் பாதுகாப்பையும் பேணுதல், பொறுப்பாண்மைப் பகுதிகளில் வாழும் மக்களின் அரசியல், பொருளாதார, சமூக, கல்வி நலன்களை முன்னேற்றுதல், அவர்கள் தன்னாட்சி அல்லது சுதந்தரம் பெறத் துணை செய்தல், மனித உரிமைகளின்மீதும், இனம், பால், மொழி, மதம் ஆகிய வேறுபாடின்றி அனைவருக்கும் வழங்க வேண்டிய அடிப்படை உரிமைகளின்மீதும் மக்களுக்கு மதிப்பை வளர்த்தல், ஐக்கிய நாடுகளின் சங்க உறுப்பினர்களுக்கும் அவர்களது நாட்டினருக்கும் சமூக, பொருளாதார, வணிகக் காரியங்களில் சமத்துவம் வழங்குதல் ஆகியவை பொறுப்பாண்மை முறையின் அடிப்படை நோக்கங்களாகும். பொறுப்பாண்மைப் பகுதியை ஆளும் நாடு பொதுப் பேரவையின் முன் ஆண்டுதோறும் அறிக்கையைச் சமர்ப்பிக்க வேண்டும். பொறுப்பாண்மைப் பகுதிகளை இடையிடையே சென்று பார்ப்பதற்கு அல்லது அவற்றின் வேண்டுகோள்களைக் கேட்பதற்குத் தேவையான ஏற்பாடுகளைப் பொதுப் பேரவை பொறுப்பாண்மை அவை வாயிலாகச் செய்யலாம்.

(5) **சர்வதேச நீதி மன்றம்** : சர்வதேச நீதி மன்றம், (92—96ஆம் விதிகளின்படி) ஐக்கிய நாடுகளின் தலைமை நீதிமன்றமாகும். அது சட்டத்திற்கேற்ப அலுவலாற்றுகிறது. அச்சட்டம் சர்வதேச சங்கத்தின் நிலையான நீதிமன்றச் சட்டத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளது. அது ஐக்கிய நாடுகளின் சாசனத்தில் ஒரு பகுதியாய் இடம் பெறுகின்றது. ஆனால், உறுப்பல்லாத அரசுகளும் பொதுப் பேரவையின் இசைவின்பேரிலும் பாதுகாப்பு அவையின் பரிந்துரையின்பேரிலும் அச்சட்டத்திற்கு உட்படலாம். ஐக்கிய நாடுகளின் ஒவ்வோர் உறுப்பு அரசும் தான் சம்பந்தப்பட்ட வழக்குகளில் நீதி மன்றத்தின் தீர்ப்பின்படி நடப்பதாக ஒப்புக்கொள்கிறது. அவ்வாறு செய்யத் தவறினால், பாதுகாப்பு அவை அத்தீர்ப்பை நிறைவேற்றத் தக்க நடவடிக்கைகள் எடுக்கும். ஆனால், உறுப்பு நாடுகள் நீதி மன்றத்தைப் பயன்படுத்த வேண்டுமென்று சாசனம் கூறுவதில்லை. ஏற்கெனவே இருக்கும் அல்லது எதிர்காலத்தில் நிறுவப்படும் நீதி மன்றங்களின் முன் தம் வேறுபாடுகளைத் தீர்த்துக்கொள்வதையும் சாசனம் தடுப்பதில்லை. பொதுப் பேரவை, பாதுகாப்பு அவை, அல்லது ஐக்கிய நாடுகளின் பிற நிறுவனங்கள், அல்லது ஏதாவதொரு தனிச் செயலில் ஈடுபட்டுள்ள நிறுவனம் ஆகியவை தம் செயலுக்குட்பட்ட சட்ட முறையான எந்தச் சிக்கல் பற்றியும் அறிய நீதி மன்றத்தின் அறிவுரையை நாடலாம்.

(6) **செயலகம்:** *97—101*ஆம் சாசன விதிகள் செயலகத்தின் அமைப்பையும் கடமைகளையும் விளக்குகின்றன. சர்வதேச சங்கத்தில் இருந்தது போல, பொதுச் செயலாளர் ஐக்கிய நாடுகளின் சங்கத்தின் தலைமை ஆட்சித்துறை அதிகாரியாய்ப் பணியாற்றுகிறார். பாதுகாப்பு அவையின் பரிந்துரையின்பேரில் பொதுப்பேரவை அவரை நியமிக்கிறது. அவர் பொதுச்செயலாளர் என்ற முறையில் பொதுப்பேரவை, பாதுகாப்பு அவை, பொருளாதார சமூக அவை, பொறுப்பாண்மை அவை ஆகியவற்றின் கூட்டங்களில் செயலாற்றுகிறார். சங்கத்தின் எல்லா அலுவல்கள் பற்றியும் அவர் பொதுப் பேரவையின் முன் ஆண்டு அறிக்கை சமர்ப்பிக்க வேண்டும். அவர் உலக அமைதியையும் பாதுகாப்பையும் குலைப்பதாகக் கருதும் எப்பொருளையும் பாதுகாப்பு அவையின் முன் கொண்டு வரலாம். பொதுச் செயலாளரும் அவர் பணியாளர்களும் பன்னாட்டு அலுவலர்கள் ஆவார்கள். அவர்கள் சங்கத்திற்குப் பொறுப்புள்ளவர்கள். அதற்குப் புறம்பான எந்த நிறுவனத்தினிடமிருந்தும் கட்டளைகளைப் பெறவோ, அல்லது ஏற்கவோ தேவையில்லை. ஒவ்வோர் உறுப்பு நாடும் செயலகத்தின் பன்னாட்டுப் பண்பை மதிப்பதாக ஒப்புக்கொள்கிறது. பொதுச்செயலாளர் பொதுப்பேரவையின் ஒழுங்குத் திட்டங்களின்படி தம் பணியாளர்களை நியமிக்கிறார். திறமையும் நேர்மையும் உள்ளவர்களை நியமிக்க வேண்டுமென்பதும், கூடிய வரை உலகின் பல பகுதிகளிலிருந்தும் அவர்களை நியமிக்க வேண்டுமென்பதும் அத்திட்டங்களின் நோக்கங்கள்.

இவைகளே ஐக்கிய நாடுகளின் சாசனத்தின்படி அமைக்கப்பட்ட நிறுவனங்கள். தக்க முறைப்படி திருத்தினாலொழிய, இவற்றின் அமைப்பை மாற்ற இயலாது. சாசனத்தின் *108*, *109*ஆம் விதிகள் அவற்றைத் திருத்தும் விதங்களை விளக்குகின்றன. சாசனத் திருத்தங்கள் நிறைவேற்றப்பட வேண்டுமானால், பொதுப்பேரவையின் உறுப்பினர்களுள் மூன்றில் இரண்டு பகுதியினரின் வாக்குகளைப் பெறுவதுடன், பாதுகாப்பு அவையின் எல்லா நிரந்தர உறுப்பினர்களும் உட்பட, ஐக்கிய நாடுகளின் உறுப்பு அரசுகளில் மூன்றில் இரண்டு பகுதி தமது அரசியலமைப்பு முறைப்படி அவற்றை ஏற்க வேண்டும். சாசனத்தைத் திரும்ப ஆராய வேண்டுமானால், ஐக்கிய நாடுகளின் பொது மாநாடு கூட்டப்படலாம். அம்மாநாட்டின் நாளும் இடமும் பொதுப்பேரவையின் உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பகுதியினரின் வாக்குகளாலும் பின், பாதுகாப்பு அவையின் உறுப்பினர் எழுவர் வாக்குகளாலும் குறிக்கப்படும். அந்த மாநாட்டில் ஒவ்வோர் உறுப்பு நாட்டிற்கும் ஒவ்வொரு வாக்கு உண்டு. ஆயினும், சாசனம் சூழ்நிலைக்கேற்ப மாறாமல் இறுகிவிடாதபடி தடுக்கப் பின் காணும் வழியை வகுத்துள்ளனர்: அதாவது, சாசனம் செய்ற்படத்

தொடங்கியதிலிருந்து பொதுப்பேரவையின் பத்தாவது ஆண்டுக் கூட்டம் வரை அத்தகைய பொது மாநாடு கூடவில்லையெனில், பொதுப்பேரவையின் அக்கூட்டத்தில் அம்மாநாட்டைக் கூட்டும் திட்டத்தை வாதிக்க வேண்டும். பேரவையின் உறுப்பினர்களுள் பெரும்பான்மையோரும், பாதுகாப்பு அவையின் உறுப்பினர் எழுவரும் விரும்புவராயின், மாநாடு கூடவேண்டும்.

## 4. ஐக்கிய நாடுகளின் சங்கத்தின் அலுவல்கள்

1945இல் இரண்டாம் உலகப்போர் முடிந்ததும் சிக்கலான பன்னாட்டுப் பிரச்சினைகள் காரணமாக உலகில் தூதாண்மைத் துறையில் பல குழப்பங்கள் தோன்றிய போதிலும், ஐக்கிய நாடுகளின் சங்கம் அமைக்கப்பட்டதுடன் போர் முடிந்த சில தினங்களுக்குள் செயலாற்றவும் தொடங்கியது. 1946ஆம் ஆண்டு, ஜனவரி, பிப்பிரவரித் திங்கள்களில் பொதுப்பேரவை இலண்டன் மாநகரில் முதல் முறை கூடி, பல முன்னேற்பாடுகளைச் செய்தது. அது பாதுகாப்பு அவையின் நிரந்தரமல்லாத உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்ததுமல்லாமல், பொருளாதார சமூக அவையையும் அமைத்தது. மேலும், அது பொதுச் செயலாளரையும், சர்வதேச நீதி மன்றத்தையும் தேர்ந்தெடுப்பதில் பங்கு பெற்றது. இறுதியாகப் போருக்குப் பிறகு எழும்பிய அகதிகள், போர்க் குற்றவாளிகள் ஆகிய பிரச்சினைகளைத் தக்கவிதமாகத் தீர்ப்பது பற்றி அது முடிவிற்கு வந்தது. அது சங்கத்திற்கு நிலையான தாயகம் தேடும் முயற்சியில் ஈடுபட்டு, இறுதியில் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அது நிலைபெற வேண்டுமெனத் தீர்மானித்தது.

1946ஆம் ஆண்டு ஜனவரியில் இலண்டன் மாநகரில் பாதுகாப்பு அவை முதல் முறையாகக் கூடியது. அப்போது போரின் பயனாகத் தோன்றிய மாபெரும்பிரச்சினைகள் அதனை எதிர்த்து நின்றன. அவையின் நிரந்தர உறுப்பினர்கள் அதன் தீர்மானங்களில் முக்கியப் பங்கு பெற வேண்டுவது இயற்கைதான். ஆனால், ஒவ்வொரு முக்கியப் பிரச்சினையிலும் ரஷ்யா பிரிட்டனையும் அமெரிக்காவையும் வன்மையாக எதிர்த்து வந்திருக்கிறது. மேலும், அவை ஒரு தீர்மானத்தை நிறைவேற்றாதவாறு யாராவது நிரந்தர உறுப்பினர் ஒருவர் தமது மறுப்பாணையினால் தடுக்கக் கூடும். இது சங்கத்தின் வாழ்வையே எப்போதும் அச்சுறுத்தி வருகின்றது. ஆனால், இந்த மறுப்பாணை அதிகாரம் பாதுகாப்பு அவையிலேதான் காணப்படுகின்றது; பொதுப் பேரவையில் இல்லை. ஆகவே, பொதுப்பேரவையில் ரஷ்யாவுக்கும் அதன் கொள்கைகளுக்கும் ஆதரவு கிடைப்பதரிது. ஆனால், பாதுகாப்பு அவையில் இப்போராட்டம் நடைபெற்று வருகிறது. இத் தடையை நீக்குவதற்காக 1950இல் பேரவை ஒரு வீர முயற்சியில்

ஈடுபட்டது. அப்போது அது நிறைவேற்றிய தீர்மானத்தின்படி, 'பாதுகாப்பு அவை, அமைதி பாதுகாப்பு ஆகியவை பற்றி ஒரு முடிவுக்கு வர இயலாது போனால், பேரவையின் சிறப்புக் கூட்டமொன்று கூட்டப்படலாம். அது மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மை வாக்குகளால் தனது கருத்தை வெளியிடலாம்.'

சர்வதேச சங்கத்தைப் போலவே, ஐக்கிய நாடுகள் சங்கமும் அதன் உறுப்புகள் எல்லாம் சம இறைமையுடையன என்ற கொள்கையின் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளது. இதைப் பொறுத்த வரையில், ஒவ்வோர் உறுப்பு அரசின் இறைமையும் சிதைவுறாது பாதுகாக்கப்படுகின்றதெனக் கூறலாம். சர்வதேச சங்கத்தின் ஒவ்வோர் உறுப்பு நாடும் பேரவை அல்லது அவை எடுக்க விரும்பும் நடவடிக்கைகளைச் செயலாற்றுவதா இல்லையா என்பதைத் தானே தீர்மானிக்கலாம். ஆனால், ஐக்கிய நாடுகளின் சாசனத்தின்படி, ஒவ்வோர் உறுப்பு நாடும், பாதுகாப்பு அவை கேட்ட உடனே, தான் கொடுக்க இணங்கிய படையுதவியை அளிப்பதாகவும், பொருளாதாரத் தடைகளை விதிப்பதாகவும் உறுதியளிக்கின்றது. ஆக்கிரமிப்பைத் தடுத்து அமைதியை நிலை நாட்ட ஐக்கிய நாடுகளின் சங்கம் படைப்பலத்தால் முயன்ற போது பல முறை இந்தப் புதிய கூட்டுப் பாதுகாப்பு நிறுவனத்தின் திறமை சோதிக்கப்பட்டது. எடுத்துக்காட்டாக 1949இல் மத்தியக் கிழக்கிலும், 1950இல் கொரியாவிலும், 1956இல் எகிப்திலும், 1960இல் காங்கோவிலும் ஐக்கிய நாடுகளின் சங்கம் படைப்பலத்தைப் பயன்படுத்தத் தலையிட்ட போது இவ்வாறு நிகழ்ந்தது. அப்போதெல்லாம் ஐக்கிய நாடுகளின் சங்கம் தேசீய ஆக்கிரமிப்பை எதிர்த்துப் பன்னாட்டு ஒற்றுமைக் கொள்கையை ஆதரித்தது.

ஐக்கிய நாடுகளின் சாசனம் சர்வதேச சங்கத்தின் ஒப்பந்தத்தைவிட ஒரு வகையில் மேலானதெனக் கூறலாம். சாசனம் முழுவதிலும் அரசாங்கங்களைப் பற்றி மட்டுமல்லாமல், மக்கள் சமுதாயங்களைப் பற்றிய அக்கறையும் மறைமுகமாகக் காணப்படுகின்றது. சர்வதேச சங்கத்தின் ஒப்பந்தம் 'உடன்படிக்கை செய்யும் உயர்கட்சிகளைப்' பற்றிக் குறிப்பிட்டது. ஐக்கிய நாடுகளின் சாசனம் 'ஐக்கிய நாடுகளின் மக்களாகிய நாம்' எனத் தொடங்கும் அமெரிக்க அரசியலமைப்பிலிருந்து எடுக்கப்பட்டுள்ளதெனத் தெளிவாகத் தெரிகின்றது. சாசனத்தின் முகவுரை முழுவதிலும், குறிப்பாக 13ஆம் விதியிலும், மனிதனைப்பற்றிய இத்தகைய பரிவைக் காணலாம். 13ஆம் விதியின்படி 'பொருளாதாரம், சமூகம், பண்பாடு, கல்வி, சுகாதாரம் ஆகிய துறைகளில் பன்னாட்டு ஒற்றுமையை வளர்ப்பதற்காகவும், இனம், பால், மொழி அல்லது மதம் ஆகிய வேறுபாடின்றி எல்லோரும் அடிப்

படை உரிமைகளையும் மனித உரிமைகளையும் பெறத் துணைசெய்வதற்காகவும் பொதுப்பேரவை ஆராய்ச்சிகளைத் தொடங்கிப் பரிந்துரைகளை வழங்கவேண்டும்.' ஐக்கிய நாடுகளின் சங்க உறுப்புகளாகிய பொருளாதார சமூக அவை, பொறுப்பாண்மை அவை ஆகிய இரு முக்கிய நிறுவனங்களும் தனிச்செயல்களில் ஈடுபட்டுள்ள நிலையங்களாகிய சர்வதேசத் தொழில் நிறுவனம் (ILO), ஐக்கிய நாடுகளின் கல்வி, அறிவியல், பண்பாட்டு நிறுவனம் (UNESCO), உலக சுகாதார நிறுவனம் (WHO), உணவு, பயிர்த்தொழில் நிறுவனம் (FAO) ஆகிய நான்கு நிறுவனங்களும் இதே உணர்ச்சியினுல் உந்தப்பட்டு ஒருங்கிணைந்து செயலாற்றுகின்றன. மனித உரிமைகளின் அறிக்கை வரையப்படுவதற்கும் இதே நோக்கந்தான் காரணம். 1948இல் பொதுப்பேரவை இவ்வறிக்கையை ஒரே மனத்துடன் ஆதரித்தது.

ஐக்கிய நாடுகளின் இந்நிறுவனங்கள், சிறப்பாகப் பொருளாதார வளர்ச்சி குறைந்த நாடுகளில் வாழும் மக்களின் நலத்தைப் பேணுவதற்காக முயன்று வருகின்றன. இத்தகைய நாடுகளில் பல சுதந்தரம் பெற்று ஐக்கிய நாடுகளின் சங்க உறுப்புகளாகி அதன் நடவடிக்கைகளில் பங்கு பெறத் தொடங்கும்போது, சங்கத்தின் இந்நிறுவனங்களின் அலுவல்களும் பெருகும். 1945ஆம் ஆண்டு ஐக்கிய நாடுகளின் சங்கம் தொடங்கியதிலிருந்து இதற்குள்ளாக அதன் அமைப்பில் பெருமாறுதல் நிகழ்ந்துள்ளது என்பதை இங்கு மறந்துவிடக்கூடாது. உண்மையில் அதன் உறுப்புகளின் எண்ணிக்கை இரு மடங்கு ஆகிவிட்டது. 1945இல் அதன் உறுப்புகளின் எண்ணிக்கை 51; 1962இல் 110. புதியனவாகச் சேர்ந்த இந்த 59 உறுப்புகளுள் புதியனவாகச் சுதந்தரம் பெற்ற ஆப்பிரிக்க அரசுகள் 27; ஆசிய அரசுகள் 9. மேலும், இந்த 36 ஆப்பிரிக்க ஆசிய அரசுகளில் 27 அரசுகள் 1960க்கும் 1962க்கும் இடையே சங்கத்தில் சேர்ந்தன. அவை சேர்ந்ததன் விளைவாக ஐக்கிய நாடுகளின் சங்கத்தில் ஒரு புதிய சூழ்நிலை தோன்றியுள்ளது. அது சங்கம் நல்கும் அறிவுரைகளின் போக்கை மாற்றக்கூடும். சங்கம் இம்மாற்றத்தைத் தனது அறிவுரை கூறும் அலுவலில் ஒரு பகுதியாகக் கருத வேண்டும். ஏனெனில், ஐக்கிய நாடுகளின் சங்கத்தின் இறுதி வெற்றி அது அறிவுரை கூறும் அலுவலையே பெரும்பாலும் பொறுத்துள்ளது.

ஐக்கிய நாடுகளின் சங்கம் நிறுவப்பட்ட போது தோன்றிய பெருநம்பிக்கைகள் பல வகைகளில் நிறைவேறவில்லை என்பது உண்மைதான். ஆயினும், உலகம் இப்போதிருப்பது போலப் பிரிந்து நிற்குமென அப்போது யாரும் எதிர் பார்த்திருக்க இயலாது. இப்பிரிவு சங்கத்தின் அலுவல்களைத் தடுத்து வருவதுடன் அதன் மதிப்பையும் பெரிதும் குறைத்துவிட்டது. உலகின் பல்வேறு பகுதிகளிலுள்ள நிறுவ

னங்கள் உலகப் பாதுகாப்பைச் சார்ந்த சங்க அலுவல்களை எடுத்துக் கொண்டபோதிலும், அதன் மத்திய அமைப்பு இன்னும் சிதைவுருமல் இருக்கின்றது. ஐக்கிய நாடுகள் என்பது ஓர் உலக அரசு அன்று. அது 'இறைமை அதிகாரமுடைய சுதந்தர அரசுகள் விரும்பி ஒன்று சேர்ந்துள்ள ஒரு சங்கம்.' ஆகவே, அதை அமைத்துள்ள நாடுகள் அது வெற்றி பெற வேண்டுமென்ற உறுதியுடன் செயலாற்றினல்தான் அது வெற்றி பெற இயலும். ஆனல், இந்த அணு ஊழியில் நாடுகள் ஒரு பொது நிறுவனத்துடன் ஒத்துழைத்து உலக அமைதியை நிலை நாட்டுவதற்காகச் செயலாற்றவில்லையெனில், எந்த நாட்டின் அரசியல் அமைப்பும் நிலைபெற இயலாது என்பது திண்ணம்.

## படிக்க வேண்டிய நூல்கள் :

1. லாஸ்கி (Laski) : Grammar of Politics, இயல், 11
2. மக் ஐவர் (Mac Iver) : Web of Government, இயல், 12
3. நிக்கொலாஸ் (Nicholas) : United Nations
4. ஷ்வார்ட்ஸ் (Schwartz) : American Constitutional Law, இயல், 12
5. ஸிட்ஜ்விக் (Sidgwick) : Elements of Politics, இயல், 14-18
6. தாம்ஸன் (Thomson) : Europe Since Napoleon, இயல், 32

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள்:

1. பிரையர்லி (Brierly) : Law of Nations
2. கிளார்க்கும் ஸானும் (Clark and Sohn) : World Peace through World Law
3. கிரௌலி (Crowley) : Background of Current Affairs
4. ரஸ்ஸல் (Russel) : U. N. Charter: Role of United States
5. டூசெயின்ட் (Toussaint) : Trusteeship System
6. ஸிம்மரின் (Zimmerin) : League of Nations and Rule of Law

## கட்டுரைக்கேற்ற பொருள்கள் :

1. 1914ஆம் ஆண்டு போர் தொடங்கும் வரை பன்னாட்டுத் தொடர்புகளை ஒழுங்குபடுத்தச் செய்யப்பட்ட திட்டங்களின் வரலாற்றைக் கூறுக.

2. முதல் உலகப் போருக்குப் பிறகு நிறுவப்பட்ட சர்வதேச சங்கத்தின் அமைப்பையும் அலுவல்களையும் விளக்குக.

3. சங்கத்தின் முயற்சிகள் தோல்வியுற்றதற்குக் காரணங்கள் யாவை?

4. ஐக்கிய நாடுகளின் சங்க நிறுவனங்களின் அமைப்பையும் அலுவல்களையும் சுருக்கமாகக் கூறுக.

5. ஐக்கிய நாடுகளின் சாசனமும் சர்வதேச சங்க ஒப்பந்தமும் வரையப்பட்ட சூழ்நிலைகளுக்குள்ள ஒற்றுமை வேற்றுமைகளைக் கூறுக. சர்வதேச சங்கத்திற்கு இருந்ததைவிட ஐக்கிய நாடுகளின் சங்கத்திற்கு வெற்றி பெறும் வாய்ப்புகள் அதிகம் இருக்கின்றனவா என ஆராய்க.

6. ஐக்கிய நாடுகளின் சங்கம், அட்லான்டிக்குச் சாசனத்தின் கொள்கைகளை நிறைவேற்றுவதற்கேற்ப நிறுவனங்களை அமைத்திருக்கின்றது என்பது உண்மையா ?

7. ஐக்கிய நாடுகளின் சாசனம் சர்வதேச சங்கத்தின் ஒப்பந்தத்தைவிட மனித உரிமைகளை அதிகமாக மதிக்கின்றது என்பது எவ்வளவு தூரம் உண்மை?

8. ஐக்கிய நாடுகளின் பாதுகாப்பு அவை சர்வதேச சங்கத்தின் அவையைவிட எவ்விதத்தில் அதிக அதிகாரங்களைச் செலுத்தி வருகிறது?

9. சர்வதேச நீதி மன்றத்தின் சிறப்பு யாது? நிரந்தர அமைதியை நிலை நாட்டும் பணியில் அது எவ்வாறு பங்கு பெற இயலும்?

10. 'ஐக்கிய நாடுகளின் சங்கத்தின் அரசியல் நிறுவனங்களிலிருந்தும் அதன் படைப்பலத்தினின்றும் நாம் எவ்வாறு இறவாதிருக்கலாம் என முதலில் கற்றுக்கொள்வோமானால், ஐக்கிய நாடுகளின் கல்வி, அறிவியல், பண்பாட்டு நிறுவனத்தினிடமிருந்து எவ்வாறு வாழலாம் எனக் கற்றுக்கொள்ளலாம்?' என்பதை உலகக் குடிமையை வளர்க்கும் வாசகம் என்ற முறையில் ஆராய்க.

# 17. அரசியல் முறைமைக்கு உட்படுகையின் வருங்கால நிலை

முதல் உலகப் போர் முடிந்ததும் வருங்காலத்தில் அரசியல் முறைமைக்குட்படுகைசெழித்தோங்குவதுபோலத் தோன்றியது. ஏனெனில், அப்போது உலகில் நாகரிகமடைந்துள்ள நாடுகளில் எல்லாம் ஏதாவது ஒரு வகைத் தேசீய ஜனநாயக அரசியலமைப்பு நிலைபெற்றிருந்தது. ஆனால், பிறகு நிகழ்ந்த நிகழ்ச்சிகள் அந்த நம்பிக்கையைச் சிதைத்து விட்டன. ஏனெனில், மிகு விரைவில் ஐரோப்பாவின் பல பகுதிகளில் அரசியல் முறைமைக்குட்பட்ட அரசாங்கத்திற்கு எதிராகப் பல எதிர்ப்புகள் முளைத்தன. ரஷ்யாவில் புரட்சியின் விளைவாகத் தோன்றிய ஆட்சி, முற்போக்குக் கொள்கையுடைய தாற்காலிக அரசாங்கத்தைக் கவிழ்த்து எதிர்ப்புரட்சியை அடக்கியது. அதனால், அந்த ஆட்சி உறுதியாய் நிலைபெற்றது. அதன் பிறகு இத்தாலியில் பாஸிஸப் புரட்சியும், ஜெர்மனியில் நாஜிக் கிளர்ச்சியும் தழைத்தன. ஸ்பெயினில் பிராங்கோ வெற்றி பெற்றார். போலந்து, ருமேனியா, கிரீஸ் ஆகிய நாடுகளிலும் பிற கிழக்கு ஐரோப்பிய அரசுகளிலும் அரைகுறை வல்லாட்சிகள் தோன்றின. ஆயினும், பொதுவாக மேற்கு அரசுகளில் அரசியல் முறைமைக்குட்படுகை நிலவியது. பிரான்ஸிலும் பெல்ஜியத்திலும் மட்டும் அது ஓரளவு உறுதி குலைந்து காணப்பட்டது. இந்நிலை இரண்டாவது உலகப் போரில் ஜெர்மனியின் தாக்குதல் தொடங்கும் வரை நீடித்தது.

இரண்டாம் உலகப் போரின் பிறகு ஏற்பட்ட நிலைக்கும் முதல் உலகப் போருக்குப் பிறகு இருந்த நிலைக்கும் அதிக வேறுபாடு இருந்தது. பெல்ஜியம், ஹாலந்து, ஸ்காண்டிநேவிய அரசுகள் ஆகியவை ஜெர்மானிய ஆக்கிரமிப்பின் போது நிறுத்தி வைக்கப்பட்டிருந்த அரசியலமைப்புகளை மீண்டும் விரைவில் நிறுவின. பிரான்ஸ், மூன்றாவது குடியரசின் சிறப்பியல்புகளை நான்காவது குடியரசில் புதுப்பித்தது. ஆனால், பிறகு ஐந்தாவது குடியரசு தலைவர் முறை அரசாங்கத்தை

ஓரளவு ஏற்றுக்கொண்டது. இத்தாலி ஒரு குடியரசு அரசியலமைப்பை நிறுவி, பாஸிஸ முறையின் தீங்குகளை அழித்தது. போரில் நடுவு நிலைமை வகித்த சுவீடனும் சுவிட்ஸர்லாந்தும் தமது பழைய அரசியலமைப்புகளை அப்படியே வைத்திருந்தன. பின்லாந்து போரின் போது பல மாற்றங்களை அடைந்த போதிலும், இறுதியில் தனது முந்திய அரசியலமைப்பை மீண்டும் பெற்றது. மேற்கு ஜெர்மனியில் 1949இல் கூட்டாட்சிக் குடியரசு நிறுவப்பட்டதும் பாராளுமன்ற மக்களாட்சி புத்துயிர் பெற்றது. ஐரோப்பாக் கண்டத்தின் எஞ்சிய பகுதிகளில் அரசியல் முறைமைக்குட்படுகையின் எதிர்காலம் இருண்டு தோன்றியது. கிழக்குப் பகுதியில் பல அரசுகள் சோவியத்து ரஷ்யாவின் பாதுகாப்பின்கீழ்ப் பொதுவுடைமை ஆட்சியை உறுதியாக நிறுவின. தென் மேற்கில் ஸ்பெயினில் பிராங்கோவும் போர்த்துகலில் ஸலஸாரும் தமது வல்லாட்சியை நிறுவியிருந்தனர்.

இதே போல, உலகின் பிற பகுதிகளிலும் மக்களாட்சியும் அதிகாரத்துவ முறைகளும் நேருக்கு நேராகத் தோன்றின. இதற்கு எடுத்துக்காட்டாகத் தூரக் கிழக்கைக் கூறலாம். ஜப்பானில் 1947ஆம் ஆண்டின் அரசியலமைப்பின்படி திருத்தியமைக்கப்பட்ட பாராளுமன்ற முறை நடைபெற்று வருகின்றது. ஆனல், அதே காலத்தில் சீன, படைப் பலமுள்ள பொதுவுடைமை ஆட்சியை நிறுவியுள்ளது. கொரியா, பிளவுபட்டு நிற்கின்றது. வடபகுதியில் பொதுவுடைமையாட்சியும், தென்பகுதியில் ஒருவகையான பாராளுமன்ற முறை அரசாங்கமும் நிலவுகின்றன. ஆசியாவின் பிற பகுதிகளிலும் ஆப்பிரிக்காவிலும் பழைய ஐரோப்பியப் பேரரசுகள் அழிந்து, புதிய சுதந்தர அரசுகள் தோன்றி வருகின்றன. அங்கும் அரசியல் குழப்பங்களைக் காண்கிரேம். இவ்வரசுகளில் சில பாராளுமன்ற முறையையுடைய அரசியலமைப்புகளை நிறுவியுள்ளன. ஆயினும், இவற்றை நடைமுறையில் செயலாற்றும் போது முதலில் அது கடினமாகத் தோன்றுகிறது. இவற்றுள் சிலவற்றில் ஏற்கெனவே வல்லாட்சியின் போக்குத் தென்படுகின்றது. பின்னும் சிலவற்றில் பொதுவுடைமை மேலாண்மை பெற்றுவிட்டது. நடுவு நிலே வகிப்பதாகக் கூறும் சில அரசுகளில் பொதுவுடைமையின் வளர்ச்சி உறுதியான அரசாங்கத்தைக் கவிழ்த்துவிடும் போல அச்சுறுத்தி வருகின்றது.

உறுதி குலேந்த இந்நிலேயில் ஒன்று மட்டும் உறுதியாகத் தெரிகின்றது. அதாவது, தேசீய ஜன நாயக அரசியல் முறைமைக்குட்படுகை இன்னும் தேர்வு நிலேயிலேதான் இருக்கின்றது. அது பிழைக்க வேண்டுமெனில், காலத்திற்கும் சூழ்நிலேக்கும் ஏற்ற வண்ணம் மாற வேண்டும். நாம் ஏற்கெனவே பார்த்தது போல, அரசியல் முறைமைக்குட்படுகை ஒரு வகையில் மிகப்பழமையானது. ஆனல், மக்க

ளாட்சியின் கருவியென்ற முறையில், அதைப் புதுமையானதெனக் கூறலாம். அதன் பிறப்பிடமாகிய பிரிட்டனிற்கூடக் கடந்த நூறு ஆண்டுகளிலேதான் பழைய அரசியலமைப்பு மக்களாட்சியாய் மலர்ந்தது. அது மாற்றத்தின் இறுதி எல்லையை அடைந்துவிட்டதெனக் கூற இயலாது. ஆகவே, அது தன்னிடம் காணப்படும் உண்மையான குறைகளை எவ்வாறு நீக்க இயலும் என்பதையும், எதிர்காலத்தில் தான் செய்ய வேண்டிய அலுவல்களை எவ்வாறு செய்ய வேண்டும் என்பதையும் ஆராய்வது பயன் தரும். இக்காலப் பாராளுமன்ற முறையின் பெருங்குறை என்னவென்றால், நாம் ஏற்கெனவே குறிப்பிட்டது போல, நடு நிறுவனம் தான் செய்யக்கூடிய அலுவல்களைவிட அதிக அலுவல்களைச் செய்து வருகிறது. இப்புதிய அலுவல்கள் பெரும்பாலும் பொருளாதார அலுவல்களாகவே இருக்கின்றன என முன்பு கூறினோம். ஏனெனில், சமூகச் சீர்திருத்த வாதிகளுள் பலர் தம் திட்டங்களினால் அரசின் பொருளாதார நடவடிக்கைகளை விரிவு படுத்த விரும்புகின்றனர். இவ்விரண்டு குறிப்புகளுடன் மற்றொன்றையும் கருத வேண்டும். அதாவது, ஒவ்வொரு குடியையும் ஒருவனாகவே கருத வேண்டும்; அதற்கு அதிகமாகக் கருதக் கூடாது என்ற அரசியல் ஜனநாயகக் கொள்கை, சாதாரண அரசிலுள்ள தொழிலாளரின் நலத்துக்காகவே ஏற்பட்டதாகக் கருதப்பட்ட போதிலும், உண்மையில் அது ஒரு சாதாரண அரசில் அவர்களுக்குப் பெரும்பாலும் மன நிறைவு அளிப்பதில்லை.

இறுதியில் கூறியது மற்ற இரண்டையும் அதிகச் சிக்கலாக்குகின்றது. சமூகத்தில் முன்னேற்றமடையாத மக்களின் பொருளாதார நலத்தை வளர்ப்பதற்காக அரசின் நடு நிறுவனங்கள் இன்னும் அதிகப் பொறுப்புகளை ஏற்கின்றன. ஏற்கெனவே அவை தம்மால் ஆற்ற இயலாத அளவு அலுவல்களை ஏற்றுள்ளன. இஃது இவ்வாறிருக்க, இப்போதுள்ள வாக்குரிமை முறைப்படி கூட்டப்படும் பாராளுமன்றத்தில் தொழிலாளர்கள் பெரும்பான்மை இடங்களைப் பெறுவது அரிதாய் இருக்கின்றது. ஆகவே, அவர்கள் நம்பிக்கை இழந்து அரசியல் முறைமைக்கு முரணான வன்முறைகளில் இறங்கத் துணியலாம். அரசியல் முறைமைக்குட்பட்ட அரசில் இத்தகைய இக்கட்டு ஏற்படத்தான் செய்யும். ஏனெனில், தொழிலாளர்களின் கோரிக்கைகள் நிறைவேறுவிடில், அவர்கள் பெரும்பான்மையினராக இல்லாத போதிலும், அரசில் பிளவை ஏற்படுத்திச் சமுதாயத்தின் செயல்களைத் தடுக்க வல்ல ஆற்றலுடைய சிறுபான்மையினராய் இருக்கின்றனர். இந்தச் சிக்கலான பிரச்சினையைத் தீர்ப்பதற்கு அரசியல் முறைமைக்குட்படுகை என்ன செய்யக் கூடும் என்பதைப் பார்ப்போம்:

அரசின் இறைமை அத்தகைய ஆராய்ச்சிக்கு ஆதாரமாய் விளங்குகிறது. எந்த அரசியற்சமூகத்திலும் அரசியற்குழப்பங்கள் ஏற்படாதவாறு தடுக்க வேண்டுமானால், அது இறைமை அதிகாரத்தைத் தானே வைத்துக்கொள்ள வேண்டும். ஆனால், அதே நேரத்தில் மக்கள் அரசின் நலத்திற்கல்லாமல், தங்கள் நலத்திற்காகவே அதன் உறுப்பினர்களாய் இருக்கின்றார்கள் என்பதை மறந்துவிடக்கூடாது. அரசு பொது மக்களுக்கு மன நிறைவு அளிக்க வேண்டும்; அவர்களின் நலன்களைச் சிறந்த முறையில் காப்பதே அதன் நோக்கம். (அதைத் தவிர வேறு நோக்கம் அதற்கு இருக்க இயலாது.) அரசு தன் அலுவல்களை ஆற்றுவதற்குப் பயன்படுத்தும் அமைப்பு—அதாவது அரசியலமைப்பு—இந்நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு அமைக்கப்பட வேண்டும். இதற்காகவே இக்கால அரசியல் முறைமைக்குட்படுகை, இறைமை மக்களுக்குரியது என்ற அடிப்படையில் வளர்ச்சியடைந்து வந்துள்ளது. புரட்சிக்காரர் பலரது கருத்தும் இதுவே. இக்கால அரசின் நிறுவனங்களால் மக்களின் இறைமையை நிலை நாட்ட இயலாது என்று நம்புவதனாலேதான் அவர்கள் புரட்சியை ஆதரிக்கின்றார்கள். அதற்கு மாறாக, முசோலினியின் கருத்திற்கேற்பப் பாஸிஸக் கோட்பாடு மக்கள் இறைமை மக்களிடம் இல்லை எனக் கூறினார். 'அதற்கு மாறாக, நாங்கள் அரசின் இறைமைக் கொள்கையையே பறைசாற்றுகிறோம். அரசுதான் நாட்டின் சட்ட முறையான நிறுவனம்; அது நாட்டின் முக்கியத் தேவைகளை எடுத்துக்காட்டுகிறது,' என அவர் கூறினார்.

படித்தவர்கள் மிகுதியான சமுதாயத்தில் குடிகளுட்பெரும்பாலார் இறைமையதிகாரமுடைய அரசை ஏற்க வேண்டுமானால், அந்த அரசு அவர்கள் தாங்களே அரசியல் எதிர்காலத்தை இறுதியில் நிருணயிக்கின்றார்கள் என்னும் உறுதியான நம்பிக்கையை அவர்களிடம் உண்டுபண்ண வேண்டும்.[1]

---

1. ஆனால், சிக்கல்கள் மலிந்த இக்காலச் சமூகத்தில் இவ்வாறு செய்வது எளிதன்று. சிறப்பாக, பிரிட்டன், அமெரிக்க ஐக்கிய நாடுகள் போன்ற தொழில் முன்னேற்றமடைந்துள்ள அரசுகளில் இவ்வாறு செய்ய இயலாது. ஏனெனில், அங்குத் தொழிலதிபர்கள், முதலாளிகள், தொழில் வல்லுநர்கள் ஆகியோரின் அரசியற்சார்பற்ற சங்கங்கள் அரசியற்காரியங்களில் பெருஞ்செல்வாக்குப் பெற்றுள்ளன. இவை 'செல்வாக்குக் கூட்டங்கள்' (Pressure Groups) என வழங்கப்படுகின்றன. இவை, ஒருவர் கூறுவது போல, 'அதிகாரத் திண்ணைகள்' (Corridors of Power) வழியே செல்கின்றன. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அத்தகைய பெருஞ்செல்வாக்கைப் பெற்றுள்ள ஒரு சிலரைத் 'தெரிந்தெடுக்கப்பட்ட ஆற்றலுள்ளவர்கள்' (Power

இறைமையை எவ்வாறு கையாண்டு சம நிலையில் நிறுத்த வேண்டுமெனில், தனி மனிதர்களின் உரிமைகளை அது முறையின்றிக் கவரக் கூடாது. இந்த உரிமைகளைக் காப்பதற்காக அரசின் உறுப்புகளைத் தக்க முறையில் அமைக்க வேண்டும். பொது மக்கள் அவற்றை அறிவதோடல்லாமல், அவற்றின் அமைப்பிலும் வளர்ச்சியிலும் அதிக வளர்ச்சி பெற வேண்டும். சில வேளை அது இது வரை செய்துள்ளதை அழிக்க வேண்டும். சீரமைக்கப்பட்ட மேற்சபையில் புதிய பிரதிநிதித்துவ முறையைப் பயன்படுத்துதலும், குடியொப்பம், மக்கள் தொடக்க உரிமை, மீட்புரிமை போன்ற ஜனநாயகத் தடைகளைப் பரவலாகப் பயன்படுத்துதலும் சில அரசுகளில் மக்களிடம் பேரார்வத்தை உண்டு பண்ணலாம். ஆயினும், இம்முறைகள் இறைமையை அதிகமாகப் பாதிப்பதில்லை.

சட்ட முறைப்படி இறைமையைப் பிரிக்க இயலாது என்று நாம் கூறும் போது, அது உருமாறக் கூடும் என்பதை மறுப்பதாகக் கருதக் கூடாது. கூட்டாட்சி அரசுகள் இருப்பதிலிருந்தே இவ்வுண்மை நன்கு விளங்குகிறது. கூட்டாட்சி அமைப்புகளில் காணப்படும் அதிகாரப் பங்கீடு, சில ஒருமுக அரசுகளை எவ்வாறு சீர்திருத்த இயலும் என்பதைக் காட்டுகிறது. அரசின் மொத்தப் பரப்பளவு மிகப் பரந்திருப்பது காரணமாக அதிலுள்ள ஒரே சட்ட மன்றம் அதன் பல பகுதிகளிலிருந்து நெடுந்தொலைவில் இருக்குமானால், அல்லது மக்கள் தொகை மிகுந்த நாட்டிற்காகச் சட்டமியற்றுவதனால் சட்ட மன்றத்தின் அலுவல்கள் அளவுக்கு அதிகமாகிவிடுமானால், நாட்டின் பகுதிகள் தங்கள் பிரதிநிதிகளின் நடவடிக்கைகளில் ஆர்வம் கொள்ளா; சட்ட மன்றத்திற்கும் மக்களுக்கும் தொடர்பு அற்றுப் போகும்; பிரதிநிதித்துவ முறை உண்மை நிலையினின்று இழிந்து தனது மதிப்பெல்லாம் இழந்துவிடும்; அரசியல் முறைமைக்கு முரணான முறைகளைப் பயன்படுத்த வழியேற்படும். கிரேட் பிரிட்டனைப் போல மக்கள் தொகை மிகுந்த நிலப்பகுதிகளில் இத்தகைய இடையூறு விளையக் கூடும். பிரிட்டன் ஓர் ஒருமுக அரசென்பதை ஏற்கெனவே கூறினோம். அங்கு மக்களாட்சியின் முன்னேற்றம் காரணமாகச் சமூக நலச் சட்டங்கள் மிகுதியாய் இயற்றப்படுகின்றன. இதன் விளைவாக, மத்தியச் சட்ட

---

Elite) என வழங்குகின்றனர். நாம் இங்குக் குறிப்பிடும் இக்குறை ஓரளவு உண்மையெனினும், முற்றிலும் உண்மையன்று. ஏனெனில், கிளை விட்டுச் செல்லும் தொழில் வளம் நிறைந்த சமூகத்தில் புதிய வகைத் தலைவர்கள் தோன்றி அரசியல் வளர்ச்சியில் மாற்றங்களைச் செய்யக் கூடும். ஆயினும், இத்தகைய புதிய தலைவர்கள் தங்கள் ஆற்றலைத் தவறாகப் பயன்படுத்தும் போது, நலமான மக்களாட்சிகள் அதைத் தடுத்து அவர்கள் செயல்களைச் சமூக நலனுக்காகப் பயன்படுத்தும் திறமை பெற்றிருக்க வேண்டும்.

மன்றத்தின் அலுவல் எவ்வளவு அதிகமாகப் பெருகிவிட்டதென்றால், அரசாங்கம் கொண்டுவரும் காரியங்களை மட்டும் அது நன்கு கவனிக்க இயல்கிறது. அரசாங்கம் கொண்டு வரும் திட்டங்களை ஏற்பது அல்லது மறுப்பது மட்டும் பிரதிநிதிகளின் ஒரே அலுவலாய் இருக்குமானால், ஏராளமான பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்குப் பொது நிதியிலிருந்து ஊதியம் வழங்குவதனால் என்ன பயன் விளையும் என்ற கேள்வி எழுகின்றது.

கூட்டாட்சி முறை வாயிலாகத் தக்க சீர்திருத்தங்களைச் செய்யலாம் என இங்குக் குறிப்பிடலாம். கூட்டாட்சி அரசுகளுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாய் விளங்கும் அரசுகள் எல்லாம் முன்பு தனித் தனியாய் இருந்த பல சமுதாயங்களிலிருந்தே தோன்றின. ஒருமுக அரசும் பல அரசியல் சமுதாயங்களாய்ப்பிரிவதில் தவறு ஒன்றுமில்லை. அவ்வாறு பிரியும் போது பொது நலத்தைப் பேணுவதற்குத் தேவையான அதிகாரங்களை மட்டும் மத்திய அரசாங்கம் வைத்துக்கொள்ள வேண்டும். இத்திட்டத்திற்கு 'அதிகாரம் வழங்குதல்' (Devolution) என்பது பெயர். ஒரு காலத்தில் பிரிட்டனில் ஐரிஷ் சிக்கலைத் தீர்ப்பதற்கு இதை ஒரு வழியாகக் கூறினர்; இதற்கென 'எல்லாவற்றிலும் தன்னாட்சி' என்ற போர்க் குரலை எழுப்பினர். இங்கிலாந்து, வேல்ஸ், ஸ்காட்லாந்து, அயர்லாந்து யாவும் ஓரளவு தன்னாட்சி பெற வேண்டுமென்றும் அவற்றின் பொது நலஞ்சார்ந்த காரியங்களைப் பாராளுமன்றம் வெஸ்ட்மின்ஸ்டரில் அமர்ந்து செயலாற்றிவர வேண்டுமென்றும் கூறினர். அத்தகைய முறையில் பிரிவை ஏற்படுத்திய பிறகு கூட்டாட்சி அரசியலமைப்புகளைப் போன்ற ஓர் அரசியலமைப்புத் தீட்டிக் கொள்ள வழியேற்படுகின்றது. (மேலே குறிப்பிட்ட அவ்வகைப் பிரிவையே ஏற்படுத்த வேண்டுமென்ற தேவையில்லை.) அந்த அரசியலமைப்பின்படி உறுப்புகளுக்குச் சில அதிகாரங்களை வழங்கி, எஞ்சியவற்றை மத்தியப் பாராளுமன்றத்திற்கு விட்டுவிடலாம்; அல்லது மத்திய அரசாங்கத்தின் உரிமைகளைத் தெளிவாக எடுத்துரைத்து, 'ஒதுக்கப்பட்ட அதிகாரங்களை' உறுப்புகளுக்கு வழங்கலாம்.

ஆகவே, இது ஒருமுக அரசிலிருந்து கூட்டாட்சி அரசை உண்டு பண்ணுவதாகும். இதன் முதற்படி, அதிகாரம் வழங்குதல். இத்தகைய சீர்திருத்தத்தின் முதல் விளைவு என்னவென்றால், கிரேட் பிரிட்டனில் இருப்பது போன்ற மத்தியச் சட்ட மன்றத்தை அழுத்திக் கொண்டிருக்கும் தாங்கவியலாத பளுக் குறைகின்றது. இரண்டாவதாக, இதனால், நிருவாகத்துறையின் செயல்களைக் கட்டுப்படுத்தக் கூடுமாதலால், பணித்துறை ஆட்சியின் (Bureaucracy) தீங்குகள் குறையும். மூன்றாவதாக, இது அரசியலுக்கு உணர்ச்சியூட்டி, இப்போது நடைபெறாத வட்டாரச் சட்ட ஆக்கத்திற்கு வழி வகுத்து,

வாக்காளருக்கும் பிரதிநிதிகளுக்கும் இடையே உண்மையான, நிலை யான தொடர்பை உண்டுபண்ணுகிறது. இதுதான் எல்லாவற்றையும் விட அதிக முக்கியமானது. தன்னாட்சி பெற்ற அந்த உறுப்புகள் வட்டார அரசாங்க அமைப்புகளாக மட்டும் இராமல், மத்தியப் பாராளுமன்றத்துடன் இறைமையைப் பகிர்ந்துகொள்ளும் அரை இறைமை அமைப்புகளாயும் இருக்கின்றன. இத்திட்டத்தின்படி நெகிழா அரசியலமைப்பையே நிறுவ வேண்டும். அதைத் திருத்து வதற்குத் தனி முறையைப் பயன்படுத்த வேண்டும். தலைமை நீதி மன்றம் போன்ற நிறுவனம் இறுதியில் அதன் புனிதத்தன்மையைக் காக்கும்.

கூட்டாட்சி முறைப்படி இறைமை அரசியல் முறையில் பிரிக்க இயலுமானால், அதைத் தொழில் முறைப்படி பிரிக்கக்கூடுமா அல்லது பிரிப்பது நல்லதா என்னும் கேள்விகள் பிறக்கின்றன. இத்தகைய கூட்டாட்சித் திட்டம், சமூகத்தை மாநிலங்கள் அல்லது கோட்டங் கள் என்ற நிலப்பகுதிகளின் கூட்டாட்சியாகக் கருதாமல், பொரு ளாதாரம், மதம், சமூகம் போன்ற பல்வேறு நிறுவனங்களின் கூட் டாட்சியாகக் கருதுகின்றது. மக்கள், சாதாரண அரசியல் நிறுவனங் களைவிட இந்நிறுவனங்களிலேதான் தங்கள் கருத்துகளை முற்றிலும் வெளியிடுகின்றனர்கள். இத்தகைய கூட்டாட்சியில் அரை இறைமை யுடைய நிறுவனங்கள் நிறுவப்படுகின்றன. அவை செயற்படும் துறையில் அவற்றிற்குக் குறிப்பிட்ட தெளிவான உரிமைகள் வழங்கப் படுகின்றன. அவ்வுரிமைகள் இப்போது அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஆஸ்திரேலியப் பொதுநலக் கூட்டு ஆகிய கூட்டாட்சிகளின் மாநிலங் கள் பெற்றுள்ள உரிமைகளுக்கு இணையானவை. அவற்றிற்குள்ள வேறுபாடு என்னவென்றால், அவை அரசியல் அலுவல்களுக்குப் பதி லாக, பொருளாதாரம், மதம்-அல்லது சமூக அலுவல்களை ஆற்றும். இப்புதிய பகுதிகளை இணைத்து இவற்றிடையே ஒழுங்கை நிலைநாட்டு வதற்காக அரசு நிலை நிற்கும்; நிலை நிற்க வேண்டும். ஆனால், இம் முறையில் அரசு பல நலன்களைப் பிரதிபலிக்கும் சங்கமாய் மாறு கிறது. ஒவ்வொரு குடியும் இதை விரும்பிப் பாராட்டக் கூடும். அப்போது இறைமை ஒரு புதிய உருவைப் பெறுகிறது. அது நெகி ழாத ஒரு சட்டமுறைக் கொள்கையாய் இராமல், மக்களின் நலத்தை முன்னேற்ற வல்ல நெகிழும் கருவியாய் மாறுகிறது. இது ஒரு முறை நிகழத் தொடங்கிவிட்டால், உள் நாட்டுத் துறையிலும், பன்னாட்டுத் துறையிலும் அரசியலமைப்பு வளர்ச்சியடைவதைத் தடுக்க இயலாது எனலாம்.

இப்போதுள்ள அரசுகளில் இறைமையைத் திறமையுடன் மாற்ற இயலும் எனக் கூறினோம். அது பன்னாட்டு அமைப்புக்கும், அவ் வாறே அல்லது அதைவிட அதிகமாகப் பொருந்தும். ஐந்து நூற்

ருண்டுகளாக உருமலர்ச்சியடைந்து வந்துள்ள இறைமை அதிகார முடைய தேசீய அரசு, இக்காலத் தேவைகளுக்கும் சூழ்நிலைக்கும் ஏற்றதாய் இல்லை என்பது தெளிவாகத் தெரிகின்றது. பன்னெடுங் காலமாகப் பகையாய் இருந்த பிரான்ஸும் ஜெர்மனியும் அண்மையி லுள்ள நான்கு அரசுகளுடன் ஏற்கெனவே இணைந்து ஒரு சுங்க ஐக்கியத்தை ஏற்படுத்தியுள்ளன. இதை அரசியற்கூட்டாட்சியின் முதற்படி எனலாம். இந்த இயக்கம் நாளடைவில் மிகப் பரந்த ஓர் ஐரோப்பியக் கூட்டாட்சிச் சமுதாயம் வளரத் துணை செய்யும் என்பது திண்ணம். அமெரிக்க ஐக்கிய நாடுகள், கனடா, ஆஸ்திரேலியாப் போன்ற நாடுகளில் நடைபெறுவது போன்ற கூட்டாட்சி தனி ஐரோப் பிய அரசுகளின் தொகுதியில் நடைபெறக் கூடுமானல், உலகில் புதியனவாகத் தோன்றிவரும் அரசுகளிடையேயும் அது உறுதியுள்ள அரசாங்கத்தை நிறுவக் கூடும். தொலை நோக்குள்ள பல ஆப்பிரிக் கத் தலைவர்கள் இதைப்பற்றி ஏற்கெனவே சிந்தித்து வருகின்றனர்கள். 'ஆப்பிரிக்க நாடுகளில் காணப்படும் அரசியல் பொருளாதாரச் சிக்கல் களைத் தீர்ப்பதற்காக இதைப் பயன்படுத்த இயலுமா?' என அவர்கள் எண்ணி வருகின்றனர்கள். ஆகவே, கூட்டாட்சி முறை, குறிப்பிட்ட ஒரு நிலப்பகுதியைச் சிறந்த வகையில் அமைப்பதற்கு மட்டுமல்லா மல், அகிலம் புகழும் அனைத்துலக அரசாங்கத்தை இறுதியில் அமைப்பதற்கும் பயன்படும் என்பது தெரிகின்றது.

பன்னாட்டுக் குழப்பங்களைத் தவிர்க்க வேண்டுமெனில், அதிகார முடைய ஓர் உலக நிறுவனத்தை அமைப்பதுதான் ஒரே வழி என் பதை அறிவுடைய எவரும் மறுக்க இயலாது. ஏனெனில், இக்குழப்பங் களின் விளைவாக இரு மாபெரும்போர்கள் தோன்றி உலகைப் பாழ் படுத்தின. இவற்றை இனிமேல் தடுக்கவில்லையெனில், நமது நாக ரிகமே அழிந்து சிதைந்து போகும். ஆனால், இதைத் தடுக்க நிறுவப் படும் உலக நிறுவனத்தின் அமைப்பு எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைப் பற்றிக் கருத்து வேற்றுமைகள் நிலவுகின்றன. சிலர் ஓர் உலக அரசை நிறுவவேண்டுமென விரும்புகின்றனர். அதில் நாடு களின் தன்மையெல்லாம் மறைந்துவிடும். இதற்கென ஒரு சாச னத்தை வரைய இயலும் என்பது உண்மைதான். ஆனால், அந்த அரசியலமைப்பின் நோக்கம் உண்மையானதாயும், அதன் வடிவம் குறையற்றதாயும் இருந்த போதிலும், அது மக்களின் விருப்பத்திற்கு முரணானதாய் இருக்குமெனில், அதனால் யாதொரு பயனும் விளை யாது. இதற்கு வரலாறு பன்முறை சான்று பகர்ந்துள்ளது. ஆகவே, அத்தகைய உலக அரசு நிறுவும் அதிகாரக்குவிப்பு மிகுந்த பொது வான அரசாங்கங்கள் செயலாற்ற இயலாது. அது உலகப் போர் எழாதவாறு தடுத்த போதிலும், அதற்கு இணையான மிகப்பெரிய உள் நாட்டுப் போரைத் தோற்றுவிக்கும். மேலும், அமைதியையும்

பாதுகாப்பையும் நிலை நாட்ட அத்தகைய அதிகாரம் குவிந்த உலக அரசு தேவையில்லை.

உண்மையில், நிலப்பகுதிகளை முற்றிலும் ஒன்ருக இணைப்பதை விட, அலுவல்களை ஓரளவு ஒருமைப்படுத்துவதால் உலகக் கட்டுப் பாட்டை ஏற்படுத்த இயலும். கூட்டாட்சி முறையைப் பன்னுட்டுச் செயல்களில் பக்குவமாகப் பயன்படுத்துவதன் மூலம் இந்த ஒருமைப் பாட்டை முற்றிலும் அடையலாம். ஆனால், கூட்டாட்சி முறை என் பது முற்போக்கான அரசியல் நிறுவன முறை. வெற்று ஆர்வத்தினுல் அல்லது கொள்கையினுல் மட்டும் பன்னுட்டுச் செய்திகளில் அம்முறை யைப் பயன்படுத்திவிட இயலாது. ஆகவே, முன்னேற்றமடைந்துள்ள நாடுகள் அம்முறையைச் சூழ்நிலைக்கேற்ப மாற்றியமைத்து, பொறுமை யுடன் இயக்கி வர வேண்டும். அதனுல், அவை ஐக்கிய நாடுகளின் ஆற்றலின்மையையும் இறுதியில் நீக்கிவிடக்கூடும். நாம் ஏற்கெனவே பார்த்தது போல, சங்கத்தின் சாசனம் உறுப்பு நாடுகளின் இறைமை யைச் சிறப்பாக வலியுறுத்துவதால், சங்கம் ஆற்றலிழந்து காணப்படு கின்றது. ஆனுல், ஐக்கிய நாடுகளின் சங்கம் இன்னம் சிறிது காலம் வெற்றிகரமாகச் செயலாற்றி வருமானுல், நாடுகள் காலந்தாழ்த்தா மல் உலகக் குடிமை உணர்ச்சியை உருவாக்குவதற்கான நிலையான ஏற்பாடுகளைச் செய்யக்கூடும். உலகக் குடிமைதான் உண்மையான நிரந்தர அமைதிக்கு அடி கோலும் ஒரே வழி.

ஆகவே, பன்னுட்டு நிறுவனத்திற்குப் பதிலாக எல்லா நாடுகளுக் கும் மேலான நிறுவனமொன்றை அமைப்பதே இறுதி நோக்கமாகும். அதனிடம் நாடுகள் எல்லாம் தங்கள் வெளிப்புற இறைமையை ஒப் படைக்கும். தேசீய அரசின் இறைமை என்பது ஒரு கற்பனைக் கருவி. அது இல்லையெனில், பரந்த அரசியல் அனுபவத்தையும் இன்பத்தையும் பெற இயலும். உண்மையில், அண்டை நாடுகளுடன் தனது விருப் பம் போல நடந்துகொள்ளும் உரிமையாகிய வெளிப்புற இறைமை தேசீய அரசுக்குத் தேவையில்லை எனலாம். தனது உள் நாட்டுக் காரியங்களைக் கட்டுப்படுத்தும் உரிமையாகிய தன்னுட்சிதான் அதற்கு அதிகமாகத் தேவை. ஆகவே, இறுதியாக, தேசீய ஜன நாயக அரசியல் முறைமைக்குட்படுகை காப்பாற்றப்பட வேண்டு மானுல், மக்களாட்சி பல வடிவங்களைப் பெற இயலுமென்பதையும் அவற்றுள் தலை சிறந்த வடிவம் எதுவென்பதைக் கண்டுபிடிக்கப் பல பரிசோதனைகளைச் செய்ய வேண்டுமென்பதையும் ஏற்றுக்கொள்ளத் தயங்கக் கூடாது என உறுதியாகக் கூறலாம். மேலும், தேசீயத்தில் நல்லியல்புகளும் தீய இயல்புகளும் உண்டென்றும், உலகில் நிரந்தர அமைதியை நிலை நாட்டுவதற்காக அதன் தீய இயல்புகளை விட்டுக் கொடுக்கவேண்டுமென்றும் கூறலாம். அவ்வாறு விட்டுக் கொடுக்கும்

போது, வரையறைக்குட்பட்ட தேசீய அரசு வாயிலாக அது மனித இனத்திற்கு நன்மை பயக்கக்கூடிய ஆற்றலைக் குறைத்துவிடக் கூடாது.

## படிக்க வேண்டிய நூல்கள் :

1. அலெக்ஸாண்டர் (Alexander): World Political Patterns, இயல், 19

2. ஃபைனர் (Finer): Major Governments of Modern Europe, இயல், 1

3. ஃபிரீட்மென் (Friedmann): Introduction to World Politics, இயல், 9, 10

4. மக் ஐவர் (Mac Iver): Web of Government, இயல், 13

5. தாம்சன் (Thomson): Europe Since Napolion, இயல், 13

6. வேர் (Wheare): Federal Government, இயல், 9-10, 12

7. ஸிங்க் (Zink): Government in United States, இயல், 13

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள் :

1. பிரையர்லி (Brierly): Law of Nations

2. கிளார்க்கும் ஸானும் (Clark and Sohn): World Peace through World Law

3. மில்லர் (Miller): Nature of Politics

4. மில்ஸ் (Mills): Power Elite

5. ஓக்ஷாட் (Oakeshott): Rationalism in Politics

6. ஸாம்ப்ஸன் (Sampson): Anatomy of Britain

7. வாலஸ் (Wallas): Human Nature in Politics

